தேனுகன்பிலம்பன்காளியனென்னுந்தீப்பப்பூடுகளடங்கவுழக்கி
கானகம்படியுலாவியுலாவிக்கருஞ்சிறுக்கன்குழலூதினபோது
மேனகையொடுதிலோத்தமையரம்பையுருப்பசியரவர்வெள்கிமயங்கி
வானகம்படியில் வாய்திறப்பின்றியாடல்பாடலவைமாறினர்தாமே. ()

முன்னரசிங்கமதாகியவுணன்முக்கியத்தைமுடிப்பான்மூவுலகின்
மன்னரஞ்ச, மதுசூதனன்வாயிற்குழலினோசைசெவியைப்பற்றிவாங்க
நன்னரம்புடையதும்புருவொடுநாரதனுந்தந்தம்வீணைமறந்து
கின்னரமிதுனங்களுந்தந்தங்கின்னரந்தொடுகிலோமென்றனரே.(ரு)

செம்பெருந்தடங்கண்ணன்றிரடோளன்றேவகிசிறுவன்றேவர்கட்சிங்கம்
நம்பரமனிந்நாட்குழலூதக்கேட்டவர்களிடருற்றனகேளீர்
அம்பரந்திரியுங்காந்தப்பரெல்லாமமுதகீதவலையாற்சுருக்குண்டு
நம்பரமென்றென்றுநாணிமயங்கிநைந்துசோர்ந்துகைமறித்துநின்றனரே.

புவியுளான்கண்டதோரற்புதங்கேளீர்பூணிமேய்க்குமிளங்கோவலர்கூட்டத்
தவையுணாகத்தணையான்குழலூதவமரலோகத்தளவுஞ்சென்றிசைப்ப
அவியுணாமறந்துவானவரெல்லாமாயர்பாடிநிறையப்புகுந்தீண்டிச் [ரே.
செவியுணாவின்சுவைகொண்டுமகிழ்ந்துகோவிந்தனைத்தொடர்ந்தென்றும்விடா

சிறுவிரல்கடடவிப்பரிமாறச்செங்கண்கோடச்செய்யவாய்க்கொப்பளிப்பக்
குறுவெயர்ப்புருவங்கூடலிப்பக்கோவிந்தன்குழற்கொடூதினபோது
பறவையின்கணங்கள்கூடுதுறந்துவந்துசூழ்ந்துபடுகாடுகிடப்பக்
கறவையின்கணங்கள்கால்பரப்பிட்டுக்கவிழ்ந்திறங்கிச்செவியாட்டகில்லாவே.

திரண்டெழுதழைமழைமுகில்வண்ணன்செங்கமலமலர்சூழ்வண்டினம்போலே
சுருண்டிருண்டகுழற்றாழ்ந்தமுகத்தானூதுகின்றகுழலோசைவழியே
மருண்டுமான்கணங்கண்மேய்கைமறந்துமேய்ந்தபுல்லுங்கடைவாய்வழிசோர
இரண்டுபாடுந்துலுங்காப்புடைபெயராவெழுதுசித்திரங்கள்போலநின்றனவே

கருங்கண்டோகைமயிற்பீலியணிந்துகட்டிநன்குடுத்தபீதகவாடை
அருங்கலவுருவினாயர்பெருமானவனொருவன்குழலூதினபோது
மரங்களின்றுமதுதாரைகள்பாயுமலர்கள்வீழும்வளர்கொம்புகள்தாழும்
இரங்குங்கூம்புந்திருமால்நின்றநின்றபக்கநோக்கியவைசெய்யுங்குணமே.

※ குழலிருண்டுசுருண்டேறியகுஞ்சிக்கோவிந்தனுடையகோமளவாயில்
குழல்முழைஞ்சுகளினூடுகுமிழ்த்துக்கொழித்திழிந்தவமுதப்புனல்தன்னைக்
குழல்முழவம்விளம்புபுதுவையர்கோன்விட்டுசித்தன்விரித்ததமிழ்வல்லார்
குழலைவென்றகுளிர்வாயினராகிச்சாதுகோட்டியுட்கொள்ளப்படுவாரே.

பெரியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

நாவ லிட வான் தேன் முன் செம் புவி சிறு திரண்ட கருங் குழ லைய.

ஆ திருமொழி - ௬ - க்கு - பாசுரம் - ௬௩.

## எ - வது. ஐயபுழுதி.

மாலின்மேல் மகள்மாலுறுகின்றகோலந்தாயவள் கூறல்.

கலிநிலைத்துறை.

யமுனாகலியாணிராகம் - திரிபுடைதாளம்.

* ஐயபுழுதியுடம்பளைந்திவள்பேச்சுமலந்தலையாய்ச்
செய்யநூலின்சிற்றாடைசெப்பனுடுக்கவும்வல்லளல்லள்
கையினிற்சிறுதூதையோடிவள்முற்றில்பிரிந்துமிலள்
பையரவணைப்பள்ளியானொடுகைவைத்திவள்வருமே. (க)

வாயிற்பல்லுமெழுந்திலமயிருமுடிகூடிற்றில
சாயலிலாதகுழுந்தலைச்சிலபிள்ளைகளோடிணங்கித்
தீயிணக்கிணங்காடிவந்திவடன்னன்னசெம்மைசொல்லி
மாயன்மாமணிவண்ணன்மேலிவள்மாலுறுகின்றாளே. (உ)

பொங்குவெண்மணற்கொண்டுசிற்றிலுமுற்றத்திழைக்கலுறில்
சங்குசக்கரந்தண்டுவாள்வில்லுமல்லதிழைக்கலுறாள்
கொங்கையின்னங்குவிந்தெழுந்திலக்கோவிந்தனோடிவளைச்
சங்கையாகியென்னுள்ளநாடொறுந்தட்டுளுப்பாகின்றதே. (ங)

ஏழைபேதையோர்பாலகன்வந்தென்பெண்மகளையெள்கித்
தோழிமார்பலர்கொண்டுபோய்ச்செய்தகுட்சியையார்க்குரைக்கேன்
ஆழியானென்னுமாழமோழையிற்பாய்ச்சியகப்படுத்தி
மூழையுப்பறியாததென்னுமூதுரையுமிலளே. (ச)

நாடுமூருமறியவேபோய்நல்லதுழாயலங்கல்
சூடி, நாரணன்போமிடமெல்லாஞ்சோதித்துழிதருகின்றாள்
கேடுவேண்டுகின்றார்பலருளர்கேசவனோடிவளைப்
பாடுகாவலிடுமினென்றென்றுபார்தடுமாறினதே. (ரு)

பட்டங்கட்டிப்பொற்றோடுபெய்திவள்பாடகமுஞ்சிலம்பும்
இட்டமாகவளர்த்தெடுத்தேனுக்கென்னோடிருக்கலுறாள்
பொட்டப்போய்ப்புறப்பட்டுநின்றிவள்பூவைப்பூவண்ணாவென்னும்
வட்டவார்குழன்மங்கைமீரிவள்மாலுறுகின்றாளே. (சு)

பேசவுந்தெரியாதபெண்மையிற்பேதையேன்பேதையிவள்
கூசமின்றிநின்றார்கடம்மெதிர்கோல்கழிந்தான்மூழையாய்க்
கேசவாவென்னுங்கேடிலீயென்னுங்கிஞ்சுகவாய்மொழியாள்
வாசவார்குழன்மங்கைமீரிவள்மாலுறுகின்றாளே. (எ)

காறைபூணுங்கண்ணாடிகாணுந்தன்கையில்வளைகுலுக்கும்
கூறையுடுக்குமயர்க்குந்தன்கொவ்வைச்செவ்வாய்திருத்தும்
[illegible]த்தேறிநின்றுபிரம்பேர்த்தேவன்பிறம்பிதற்றும்
[illegible]மணிவண்ணன்மேலிவள்மாலுறுகின்றாளே. (அ)

கைத்தலத்துள்ளமாடழியக்கண்ணாலங்கள்செய், திவளை
வைத்துவைத்துக்கொண்டென்னவாணிபநம்மைவடுப்படுக்கும்
செய்த்தலையெழுநாற்றுப்போலவன்செய்வனசெய்துகொள்ள
மைத்தடமுகில்வண்ணன்பக்கல்வளரவிடுமின்களே. (கூ)

பெருப்பெருத்தகண்ணாலங்கள்செய்துபேணிநம்மில்லத்துள்ளே
இருத்துவானெண்ணிநாமிருக்கவிவளுமொன்றெண்ணுகின்றாள்
மருத்துவப்பதம்நீங்கினளென்னும்வார்த்தைபடுவதன்முன்
ஒருப்படுத்திடுமினிவளையுலகளந்தானிடைக்கே. (க0)

* ஞாலமுற்றுமுண்டாலிலைத்துயினாராயணனுக், கிவள்
மாலதாகிமகிழ்ந்தனளென்றுதாயுரைசெய்ததனைக்
கோலமார்பொழில்சூழ்புதுவையர்கோன்விட்டுசித்தன்சொன்ன
மாலைபத்தும்வல்லவர்கட்கில்லைவருதுயரே. (கக)

பெரியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஐயவாயில்பொங்கேழைநாடுபட்டம்பேசக்காறைகைத்தலம்பெருஞாலம்நல்ல.

ஆ திருமொழி - எ - க்கு - பாசுரம் - எச.

---

## அ - வது. நல்லதோர்தாமரை.

மாயவன்பின்சென்றமகளைத் தாயவளுன்னியதகுதல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆநந்தபைரவிராகம்-ஆதிதாளம்.

* நல்லதோர்தாமரைப்பொய்கைநாண்மலர்மேற்பனிசோர
அல்லியுந்தாதுமுதிர்ந்திட்டழகழிந்தாலொத்ததாலோ
இல்லம்வெறியோடிற்றாலோவென்மகளையெங்குங்காணேன்
மல்லரையட்டவன்பின்போய்மதுரைப்புறம்புக்காள்கொலோ. (க)

ஒன்றுமறிவொன்றில்லாதவுருவறைக்கோபாலர்தங்கள்
கன்றுகான்மாறுமாபோலேகன்னியிருந்தாளைக்கொண்டு
நன்றுங்கிறிசெய்துபோனுநாரயணன்செய்ததீமை
என்றுமெமர்கள்குடிக்கோரேச்சுக்கொலாயிடுங்கொலோ. (உ)

குமரிமணஞ்செய்துகொண்டுகோலஞ்செய்தில்லத்திருத்தித்
தமரும்பிறருமறியத்தாமோதரர்க்கென்றுசாற்றி
அமரர்பதியுடைத்தேவியரசாணியைவழிப்பட்டுத்
துமிலமெழப்பறைகொட்டித்தோரணநாட்டிடுங்கொலோ. (ங)

ஒருமகடன்னையுடையேனுலகநிறைந்தபுகழால்
திருமகள்போலவளர்த்தேன்செங்கண்மால்தான்கொண்டுபோனன்
பெருமகளாய்க்குடிவாழ்ந்துபெரும்பிள்ளைப்பெற்றவசோதை
மருமகளைக்கண்டுகந்துமணாட்டுப்புறஞ்செய்யுங்கொலோ. (ச)

தம்மாமனந்தகோபாலன்றழுவிக்கொண்டென்மகடன்னைச்
செம்மாந்திரேயென்றுசொல்லிச்செழுங்கயற்கண்ணுஞ்செவ்வாயும்
கொம்மைமுலையுமிடையுங்கொழும்பணைத்தோள்களுங்கண்டிட்டு
இம்மகளைப்பெற்றதாயரினித்தரியாரென்னுங்கொலோ. (௫)

வேடர்மறக்குலம்போலேவேண்டிற்றுச்செய்தென்மகளைக்
கூடியகூட்டமேயாகக்கொண்டுகுடிவாழுங்கொலோ
நாடுநகருமறியநல்லதோர்கண்ணாலஞ்செய்து
சாடிறப்பாய்ந்தபெருமான்றக்கவாகைப்பற்றுங்கொலோ. (௬)

அண்டத்தமரர்பெருமானுழியானின்றென்மகளைப்
பண்டைப்பழிப்புக்கள்சொல்லிப்பரிசறவாண்டிடுங்கொலோ
கொண்டுகுடிவாழ்க்கைவாழ்ந்துகோவலப்பட்டங்கவித்துப்
பண்டைமணாட்டிமார்முன்னேபாதுகாவல்வைக்குங்கொலோ. (௭)

குடியிற்பிறந்தவர்செய்யுங்குணமொன்றுஞ்செய்திலனந்தோ
நடையொன்றுஞ்செய்திலனங்காய்நந்தகோபன்மகன்கண்ணன்
இடையிருபாலும்வணங்கவிளைத்திளைத்தென்மகளேங்கி
கடைகயிறேபற்றிவாங்கிக்கைதழும்பேறிடுங்கொலோ. (௮)

வெண்ணிறத்தோய்தயிர்தன்னைவெள்வரைப்பின்முன்னெழுந்து
கண்ணுறங்காதேயிருந்துகடையவுந்தான்வல்லள்கொலோ
ஒண்ணிறத்தாமரைச்செங்கணுலகளந்தானென்மகளைப்
பண்ணறையாப்பணிகொண்டுபரிசறவாண்டிடுங்கொலோ. (௯)

* மாயவன்பின்வழிசென்றுவழியிடைமாற்றங்கள்கேட்டு
ஆயர்கள்சேரியிலும்புக்கங்குத்தைமாற்றமுமெல்லாம்
தாயவள்சொல்லியசொல்லைத்தண்புதுவைப்பட்டன்சொன்ன
தூயதமிழ்பத்தும்வல்லார்தூமணிவண்ணனுக்காளரே. (௧0)

பெரியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

நல்ல தொன்று குமரி யொரு தம்மாமன் வேடர் அண்டக் குடி வெண்ணிற மாயவ னென்னுதன்.

ஆ திருமொழி - ௮ - இ - பாசுரம் - ௮௬.

---

## ௯ - வது. என்னுதன்.

நந்தன்மதலையைக் காகுத்தனைநவின்று உந்திபறத்தல்.

கலித்தாழிசை.

செஞ்சுருட்டிராகம் - ரூபகதாளம்.

* என்னுதன்றேவிக்கன்றின்பப்பூவியாதாள்
தன்னுதன்காணவேதண்பூமரத்தினை
வன்னுதப்புள்ளால்வலியப்பறித்திட்ட
என்னுதன்வன்மையைப்பாடிப்பற வெம்பிரான்வன்மையைப்பாடிப்பற.

என்வில்வலிகண்டுபோவென்றெதிர்வந்தான்
தன்வில்லினோடுந்தவத்தையெதிர்வாங்கி
முன்வில்வலித்துமுதுபெண்ணுயிருண்டான்
தன்வில்லின்வன்மையைப்பாடிப்பற தாசரதிதன்மையைப்பாடிப்பற.

உருப்பிணிநங்கையைத்தேரேற்றிக்கொண்டு
விருப்புற்றங்கேகவிரைந்தெதிர்வந்து
செருக்குற்றான்வீரஞ்சிதையத், தலையைச்
சிரைத்திட்டான்வன்மையைப்பாடிப்பற தேவகிசிங்கத்தைப்பாடிப்பற.

மாற்றுத்தாய்சென்றுவனம்போகேயென்றிட
ஈற்றுத்தாய்பின்றொடர்ந்தெம்பிரானென்றழக்
கூற்றுத்தாய்சொல்லக்கொடியவனம்போன
சீற்றமிலாதானைப்பாடிப்பற சீதைமணாளனைப்பாடிப்பற. (ரு)

பஞ்சவர்தூதனாய்ப்பாரதங்கைசெய்து
நஞ்சுமிழ்நாகங்கிடந்தநற்பொய்கைபுக்
கஞ்சப்பணத்தின்மேற்பாய்ந்திட்டருள்செய்த
அஞ்சனவண்ணனைப்பாடிப்பற வசோதைதன்சிங்கத்தைப்பாடிப்பற.

முடியொன்றிமூவுலகங்களுமாண், டுன்
னடியேற்கருளென்றவன்பின்றொடர்ந்த
படியில்குணத்துப்பரதநம்பிக், கன்
றடிநிலைஈந்தானைப்பாடிப்பற வயோத்தியர்கோமானைப்பாடிப்பற. சு

காளியன்பொய்கைக்கலங்கப்பாய்ந்திட், டவன்
நீண்முடியைந்திலுநின்றுநடஞ்செய்து
மீளவவனுக்கருள்செய்தவித்தகன்
தோள்வலிவீரமேபாடிப்பற தூமணிவண்ணனைப்பாடிப்பற. (எ)

தார்க்கிளந்தம்பிக்கரசீந்து, தண்டக
நூற்றவள்சொற்கொண்டுபோகி, நுடங்கிடைச்
சூர்ப்பனகாவைச்செவியொடுமூக், கவள்
ஆர்க்கவரிந்தானைப்பாடிப்பற வயோத்திக்கரசனைப்பாடிப்பற. (அ)

மாயச்சகடமுதைத்துமருதிறுத்து
ஆயர்களோடுபோயாநிரைகாத், தணி
வேயின்குழலூதிவித்தகனாய்நின்ற
ஆயர்களேற்றினைப்பாடிப்பற வாநிரைமேய்த்தானைப்பாடிப்பற. (கூ)

காரார்கடலையடைத்திட்டிலங்கைபுக்கு
ஓராதான்பொன்முடியொன்பதோடொன்றையும்
நேராவவன்றம்பிக்கேநீளரசீந்த
ஆராவமுதனைப்பாடிப்பற வயோத்தியர்வேந்தனைப்பாடிப்பற. (கo)

* நந்தன்மதலையைக்காகுத்தனைநவின்று
உந்திபறந்தவொளியிழையார்கள்சொல்
செந்தமிழ்த்தென்புதுவைவிட்டுசித்தன்சொல்
ஐந்தினோடைந்தும்வல்லார்க்கல்லலில்லையே. (கக)

பெரியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

என்னாதன் என்வில் உருப்பிணி மாற்று பஞ்சவர் முடி காளியன் தாற்கி மாயக் காரார் நந்தன் நெறி.

ஆ திருமொழி - கூ - க்கு - பாசுரம் - கூரு.

## க0 - வது. நெறிந்தகருங்குழல்.

சிதைக்கனுமன்றெரிவித்தவடையாளம்.

கலிவிருத்தம்.

கலியாணிராகம் - ரூபகதாளம்.

* நெறிந்தகருங்குழன்மடவாய்நின்னடியேன்விண்ணப்பம்
செறிந்தமணிமுடிச்சனகன்சிலையிறுத்துநினைக்கொணர்ந்து
தறிந், தரசுகளைக்கட்டவருந்தவத்தோனிடைவிலங்கச்
செறிந்தசிலைகொடுதவத்தைச்சிதைத்ததுமோரடையாளம். (க)

அல்லியம்பூமலர்க்கோதாயடிபணிந்தேன்விண்ணப்பம்
சொல்லுகேன்கேட்டருளாய்துணைமலர்க்கண்மடமானே
எல்லியம்போதினிதிருத்தலிருந்ததோரிடவகையில்
மல்லிகைமாமாலைகொண்டங்கார்த்ததுமோரடையாளம். (உ)

கலக்கியமாமனத்தனளாய்க்கைகேசிவரம்வேண்ட
மலக்கியமாமனத்தனனாய்மன்னவனுமறாதொழியக்
குலக்குமராகாடுறையப்போவென்றுவிடைகொடுப்ப
இலக்குமணன்றன்னோடுமங்கேகியதோரடையாளம். (ங)

வாரணிந்தமுலைமடவாய்வைதேவீவிண்ணப்பம்
தேரணிந்தவயோத்தியர்கோன்பெருந்தேவீகேட்டருளாய்
கூரணிந்தவேல்வலவன்குகனோடுங்கங்கைதன்னில்
சீரணிந்ததோழமைக்கொண்டதுமோரடையாளம். (ச)

மானமருமென்னோக்கிவைதேகிவிண்ணப்பம்
கானமருங்கல்லதர்போய்க்காடுறைந்தகாலத்து
தேனமரும்பொழிற்சாரற்சித்திரகூடத்திருப்ப
பால்மொழியாய்பரதநம்பிபணிந்ததுமோரடையாளம். (ரு)

சித்திரகூடத்திருப்பச்சிறுகாக்கைமுலைதீண்ட
வத்திரமேகொண்டெறியவனைத்துலகுந்திரிந்தோடி
வித்தகனேயிராமாவோநின்னபயமென்றழைப்ப
அத்திரமேயதின்கண்ணையறுத்ததுமோரடையாளம். (சு)

மின்னொத்தநுண்ணிடையாய்மெய்யடியேன்விண்ணப்பம்
பொன்னொத்தமானொன்றுபுகுந்தினிதுவிளையாட
நின்னன்பின்வழிநின்றுசிலைபிடித்தெம்பிரானேகப்
பின்னேயங்கிலக்குமணன்பிரிந்ததுமோரடையாளம். (எ)

மைத்தகுமாமலர்க்குழலாய்வைதேவிவிண்ணப்பம்
ஒத்தபுகழ்வானரக்கோனுடனிருந்துநினைத்தேட
அத்தகுசீரயோத்தியர்கோனடையாளமிவைமொழிந்தான்
இத்தகையாலடையாளமீதவன்கைமோதிரமே. (அ)

திக்குநிறைபுகழாளன்றீவேள்விச்சென்றநாள்
மிக்கபெருஞ்சபைநடுவேவில்லிறுத்தான்மோதிரங்கண்
டொக்குமாலடையாளமனுமானென்றுச்சிமேல்வைத்
துக்கொண்டுகந்தனளால்மலர்க்குழலாள்சீதையுமே. (கூ)

* வாராருமுலைமடவாள்வைதேவிதனைக்கண்டு
சீராருந்திறலனுமன்றெரிந்துரைத்தவடையாளம்
பாராரும்புகழ்ப்புதுவைப்பட்டர்பிரான்பாடல்வல்லார்
ஏராரும்வைகுந்தத்திமையவரோடிருப்பாரே. (க0)

பெரியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

நெறியல்லிகலக்கியவாரணிமான்சித்திரமின்மைத்ததிக்குவாராருங்கதிர்.

ஆ திருமொழி - க0 - க்கு - பாசுரம் - க0ரு.

மூன்றும்பத்துமுற்றும்.

---

ஆ மூன்றும்பத்துவரையில் திருமொழி - ௩0 - க்கு - பாசுரம் - ௩உசு.

## நான்காம்பத்து.

### க - வது. கதிராயிரம்.

மாயனைக்கண்டசுவடுரைத்தல்.

கலிநிலைத்துறை.

தோடிராகம் - அடதாளம்.

*கதிராயிரமிரவிகலந்தெறித்தாலொத்தநீண்முடியன்
எதிரில்பெருமையிராமனையிருக்குமிடநாடுதிரேல்
அதிருங்கழற்பொருதோளிரணியனாகம்பிளந், தரியாய்
உதிரமளைந்தகையோடிருந்தானையுள்ளவாகண்டாருளர். (க)

நாந்தகஞ்சங்குதண்டுநாணொலிச்சார்ங்கந்திருச்சக்கரம்
ஏந்துபெருமையிராமனையிருக்குமிடநாடுதிரேல்
காந்தண்முகிழ்விரற்சீதைக்காகிக்கடுஞ்சிலைசென்றிறுக்க
வேந்தர்தலைவன்சனகராசன்றன்வேள்வியிற்கண்டாருளர். (௨)

கொலையானைக்கொம்புபறித்துக்கூடலர்சேனைபொருதழியச்
சிலையான்மராமரமெய்ததேவனைச்சிக்கெனநாடுதிரேல்
தலையாற்குரக்கினந்தாங்கிச்சென்றுதடவரைகொண்டடைப்ப
அலையார்கடற்கரைவீற்றிருந்தானையங்குற்றைக்கண்டாருளர். (௩)

தோயம்பரந்தநடுவுசூழலிற்றொல்லைவடிவுகொண்ட
மாயக்குழவியதனைநாடுறில்வம்மின்சுவடுரைக்கேன்
ஆயர்மடமகள்பின்னைக்காகியடல்விடையேழினையும்
வீயப்பொருதுவியர்த்துநின்றானைமெய்ம்மையேகண்டாருளர். (௪)

நீரேறுசெஞ்சடைநீலகண்டனுநான்முகனுமுறையால்
சீரேறுவாசகஞ்செய்யநின்றதிருமாலைநாடுதிரேல்
வாரேறுகொங்கையுருப்பிணியைவலியப்பிடித்துக்கொண்டு
தேரேற்றிச்சேனைநடுவுபோர்செய்யச்சிக்கெனக்கண்டாருளர். (௫)

பொல்லாவடிவுடைப்பேய்ச்சிதுஞ்சப்புணர்முலைவாய்மடுக்க
வல்லானை, மாமணிவண்ணனைமருவுமிடநாடுதிரேல்
பல்லாயிரம்பெருந்தேவிமாரொடுபௌவமெறிதுவரை
எல்லாருஞ்சூழச்சிங்காசனத்தேயிருந்தானைக்கண்டாருளர். (௬)

வெள்ளைவிளிசங்குவெஞ்சுடர்த்திருச்சக்கரமேந்துகையன்
உள்ளவிடம்வினவிலுமக்கிறைவம்மின்சுவடுரைக்கேன்
வெள்ளைப்புரவிகுரக்குவெல்கொடித்தேர்மிசைமுன்புநின்று
கள்ளப்படைத்துணையாகிப்பாரதங்கைசெய்யக்கண்டாருளர். (௭)

நாழிகைகூறிட்டுக்காத்துநின்றவரசர்கடம்முகப்பே
நாழிகைபோகப்படைபொருதவன்றேவகிதன்சிறுவன்
ஆழிகொண்டன்றிரவிமறைப்பச்சயத்திரதன்றலையைப்
பாழிலுருளப்படைபொருதவன்பக்கமேகண்டாருளர். (௮)

மண்ணுமலையுமறிகடல்களுமற்றுமியாவுமெல்லாம்
திண்ணம்விழுங்கியுமிழ்ந்ததேவனைச்சிக்கெனநாடுதிரேல்
எண்ணற்கரியதோரேனமாகியிருநிலம்புக்கிடந்து
வண்ணக்கருங்குழன்மாதரோடுமணந்தானைக்கண்டாருளர். (௯)

※ கரியமுகில்புரைமேனிமாயனைக்கண்டசுவடுரைத்துப்
புரவிமுகஞ்செய்துசெந்நெலோங்கிவிளைகழனிப்புதுவைத்
திருவிற்பொலிமறைவாணன்பட்டர்பிரான்சொன்னமாலைபத்தும்
பரவுமனமுடைப்பத்தருள்ளார்பரமனடிசேர்வர்களே. (௧0)

பெரியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

கதிர் நாந்தகம் கோலை தோயம் நீரோறு பொல்லா வெள்ளை நாழிகை மண் கரிய அலம்பா.

ஆ திருமொழி - க - இ - பாசுரம் - க0.

## உ - வது. அலம்பாவெருட்டா.

### திருமாலிருஞ்சோலைச்சிறப்பு.

கலிவிருத்தம்.

அட்டாணராகம் - ஜம்பைதாளம்.

※ அலம்பாவெருட்டாக்கொன்றுதிரியுமரக்கரைக்
குலம்பாழ்படுத்துக்குலவிளக்காய்நின்றகோன்மலை
சிலம்பார்க்கவந்துதெய்வமகளிர்களாடுஞ், சீர்ச்
சிலம்பாறுபாயுந்தென்திருமாலிருஞ்சோலையே. (க)

வல்லாளன்றோளும்வாளரக்கன்முடியுந், தங்கை
பொல்லாதமூக்கும்போக்குவித்தான்பொருந்துமலை
எல்லாவிடத்திலுமெங்கும்பரந்து, பல்லாண்டொலி
செல்லாநிற்குஞ்சீர்த்தென்திருமாலிருஞ்சோலையே. (உ)

தக்கார்மிக்கார்களைச்சஞ்சலஞ்செய்யுஞ்சலவரைத்
தெக்காநெறியேபோக்குவிக்குஞ்செல்வன்பொன்மலை
எக்காலமுஞ்சென்றுசேவித்திருக்குமடியரை
அக்காநெறியைமாற்றுந்தண்மாலிருஞ்சோலையே. (ங)

ஆனுயர்கூடியமைத்தவிழவை, யமரர்தம்
கோனார்க்கொழியக்கோவர்த்தனத்துச்செய்தான்மலை
வானாட்டினின்றுமாமலர்க்கற்பகத்தொத்திழி
தேனாறுபாயுந்தென்திருமாலிருஞ்சோலையே. (ச)

ஒருவாரணம்பணிகொண்டவன்பொய்கையில், கஞ்சன்றன்
ஒருவாரணமுயிருண்டவன்சென்றுறையுமலை
கருவாரணந்தன்பிடிதுறந்தோடக், கடல்வண்ணன்
திருவாணைகூறத்திரியுந்தண்மாலிருஞ்சோலையே. (ரு)

ஏவிற்றுச்செய்வானென்றெதிர்ந்துவந்தமல்லரைச்
சாவத்தகர்த்தசாந்தணிதோட்சதுரன்மலை
ஆவத்தனமென்றமரர்களுநன்முனிவரும்
சேவித்திருக்குந்தென்திருமாலிருஞ்சோலையே. (சா)

நாந்தகஞ்சங்குதண்டுநாணொலிச்சார்ங்கந்திருச்சக்கரம்
ஏந்துபெருமையிராமனையிருக்குமிடநாடுதிரேல்
காந்தண்முகிழ்விரற்சீதைக்காகிக்கடுஞ்சிலைசென்றிறுக்க
வேந்தர்தலைவன்சனகராசன்றன்வேள்வியிற்கண்டாருளர். (௨)

கொலையானைக்கொம்புபறித்துக்கூடலர்சேனைபொருதழியச்
சிலையான்மராமரமெய்ததேவனைச்சிக்கெனநாடுதிரேல்
தலையாற்குரக்கினந்தாங்கிச்சென்றுதடவரைகொண்டடைப்ப
அலையார்கடற்கரைவீற்றிருந்தானையங்குற்றைக்கண்டாருளர். (௩)

தோயம்பரந்தநடுவுசூழலிற்றொல்லைவடிவுகொண்ட
மாயக்குழவியதனைநாடுறில்வம்மின்சுவடுரைக்கேன்
ஆயர்மடமகள்பின்னைக்காகியடல்விடையேழினையும்
வீயப்பொருதுவியர்த்துநின்றானைமெய்ம்மையேகண்டாருளர். (௪)

நீரேறுசெஞ்சடைநீலகண்டனுநான்முகனுமுறையால்
சீரேறுவாசகஞ்செய்யநின்றதிருமாலைநாடுதிரேல்
வாரேறுகொங்கையுருப்பிணியைவலியப்பிடித்துக்கொண்டு
தேரேற்றிச்சேனைநடுவுபோர்செய்யச்சிக்கெனக்கண்டாருளர். (௫)

பொல்லாவடிவுடைப்பேய்ச்சிதுஞ்சப்புணர்முலைவாய்மடுக்க
வல்லானை, மாமணிவண்ணனைமருவுமிடநாடுதிரேல்
பல்லாயிரம்பெருந்தேவிமாரொடுபௌவமெறிதுவரை
எல்லாருஞ்சூழச்சிங்காசனத்தேயிருந்தானைக்கண்டாருளர். (௬)

வெள்ளைவிளிசங்குவெஞ்சுடர்த்திருச்சக்கரமேந்துகையன்
உள்ளவிடம்வினவிலுமக்கிறைவம்மின்சுவடுரைக்கேன்
வெள்ளைப்புரவிக்குரக்குவெல்கொடித்தேர்மிசைமுன்புநின்று
கள்ளப்படைத்துணையாகிப்பாரதங்கைசெய்யக்கண்டாருளர். (௭)

நாழிகைகூறிட்டுக்காத்துநின்றவரசர்கடம்முகப்பே
நாழிகைபோகப்படைபொருதவன்றேவகிதன்சிறுவன்
ஆழிகொண்டன்றிரவிமறைப்பச்சயத்திரதன்றலையைப்
பாழிலுருளப்படைபொருதவன்பக்கமேகண்டாருளர். (௮)

மண்ணுமலையுமறிகடல்களுமற்றுமியாவுமெல்லாம்
திண்ணம்விழுங்கியுமிழ்ந்ததேவனைச்சிக்கெனநாடுதிரேல்
எண்ணற்கரியதோரேனமாகியிருநிலம்புக்கிடந்து
வண்ணக்கருங்குழன்மாதரோடுமணந்தானைக்கண்டாருளர். (௯)

* கரியமுகில்புரைமேனிமாயனைக்கண்டசுவடுரைத்துப்
புரவிமுகஞ்செய்துசெந்நெலோங்கிவிளைகழனிப்புதுவைத்
திருவிற்பொலிமறைவாணன்பட்டர்பிரான்சொன்னமாலைபத்தும்
பரவுமனமுடைப்பத்தருள்ளார்பரமனடிசேர்வர்களே. (௧௦)

பெரியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

கதிர் நாந்தகம் கொலை தோயம் நீரேறு பொல்லா வெள்ளை நாழிகை மண் கரிய அலம்பா.

ஆ திருமொழி - ௧ - இ - பாசுரம் - ௧௦.

---

## ௨ - வது. அலம்பாவெருட்டா.

### திருமாலிருஞ்சோலைச்சிறப்பு.

கலிவிருத்தம்.

அட்டாணராகம் - ஜம்பைதாளம்.

* அலம்பாவெருட்டாக்கொன்றுதிரியுமரக்கரைக்
குலம்பாழ்படுத்துக்குலவிளக்காய்நின்றகோன்மலை
சிலம்பார்க்கவந்துதெய்வமகளிர்களாடுஞ், சீர்ச்
சிலம்பாறுபாயுந்தென்திருமாலிருஞ்சோலையே. (௧)

வல்லாளன்றோளும்வாளரக்கன்முடியுந், தங்கை
பொல்லாதமூக்கும்போக்குவித்தான்பொருந்துமலை
எல்லாவிடத்திலுமெங்கும்பரந்து, பல்லாண்டொலி
செல்லாநிற்குஞ்சீர்த்தென்திருமாலிருஞ்சோலையே. (௨)

தக்கார்மிக்கார்களைச்சஞ்சலஞ்செய்யுஞ்சலவரைத்
தெக்காநெறியேபோக்குவிக்குஞ்செல்வன்பொன்மலை
எக்காலமுஞ்சென்றுசேவித்திருக்குமடியரை
அக்காநெறியைமாற்றுந்தண்மாலிருஞ்சோலையே. (௩)

ஆனுயர்கூடியமைத்தவிழவை, யமரர்தம்
கோனார்க்கொழியக்கோவர்த்தனத்துச்செய்தான்மலை
வானாட்டினின்றுமாமலர்க்கற்பகத்தொத்திழி
தேனாறுபாயுந்தென்திருமாலிருஞ்சோலையே. (௪)

ஒருவாரணம்பணிகொண்டவன்பொய்கையில், கஞ்சன்றன்
ஒருவாரணமுயிருண்டவன்சென்றுறையுமலை
கருவார்ணந்தன்பிடிதுறந்தோடக், கடல்வண்ணன்
திருவாணைகூறத்திரியுந்தண்மாலிருஞ்சோலையே. (௫)

ஏவிற்றுச்செய்வானென்றெதிர்ந்துவந்தமல்லரைச்
சாவத்தகர்த்தசாந்தணிதோட்சதுரன்மலை
ஆவத்தனமென்றமரர்களுநன்முனிவரும்
சேவித்திருக்குந்தென்திருமாலிருஞ்சோலையே. (௬)

மன்னர்மறுகமைத்துனன்மார்க்கொருதேரின்மேல்
முன்னங்குநின்றுமோழையெழுவித்தவன்மலை
கொன்னவிற்கூர்வேற்கோனெடுமாறன்றென்கூடற்கோன்
தென்னன்கொண்டாடுந்தென்றிருமாலிருஞ்சோலையே. (எ)

குறுகாதமன்னரைக்கூடுகலக்கிவெங்கானிடைச்
சிறுகாநெறியேபோக்குவிக்குஞ்செல்வன்பொன்மலை
அறுகால்வரிவண்டுகளாயிரநாமஞ்சொல்லிச்
சிறுகாலைப்பாடுந்தென்றிருமாலிருஞ்சோலையே. (அ)

சிந்தப்புடைத்துச்செங்குருதிகொண்டு, பூதங்கள்
அந்திப்பலிகொடுத்தாவத்தனஞ்செய்யப்பன்மலை
இந்திரகோபங்களெம்பெருமான்கனிவாயொப்பான்
சிந்தும்புறவிற்றென்றிருமாலிருஞ்சோலையே. (கூ)

எட்டுத்திசையுமெண்ணிறந்தபெருந்தேவிமார்
விட்டுவிளங்கவீற்றிருந்தவிமலன்மலைப்
பட்டிப்பிடிகள்பகடுறிஞ்சிச்சென்று, மாலைவாய்த்
தெட்டித்திளைக்குந்தென்றிருமாலிருஞ்சோலையே. (க0)

* மருதப்பொழிலணிமாலிருஞ்சோலைமலைதன்னைக்
கருதியுறைகின்றகார்க்கடல்வண்ணனெம்மான்றன்னை
விரதங்கொண்டேத்தும்வில்லிபுத்தூர்மன்விட்டுசித்தன்சொல்
கருதியுரைப்பவர்கண்ணன்கழலிணைகாண்பரே. (கக)

பெரியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

அலம் வல்லாளன் தக்கா ரானயர் ஒரு ஏவுத்து மன்னர் குறுகாசிந்த எட்டுமெருத உருப்பிணி.

ஆ திருமொழி - உ - க்கு - பாசுரம் - உக.

---

## ந - வது. உருப்பிணிநங்கை.

### திருமாலிருஞ்சோலைமலையின்மாட்சி.

கலிநிலைத்துறை.

ஸஹானராகம் - ஜம்பைதாளம்.

* உருப்பிணிநங்கைதன்னைமீட்பான்றுடர்ந்தோடிச்சென்ற
உருப்பனையோட்டிக்கொண்டிட்டுறைத்திட்டவுறைப்பன்மலை
பொருப்பிடைக்கொன்றைநின்றுமுறியாழியுங்காசுங்கொண்டு
விருப்பொடுபொன்வழங்கும்வியன்மாலிருஞ்சோலையதே. (க)

கலிவிருத்தம்.

கஞ்சனுங்காளியனுங்களிறுமருதுமெருதும்
வஞ்சனையின்மடியவளர்ந்தமணிவண்ணன்மலை
நஞ்சுமிழ்நாகமெழுந்தணவிநளிர்மாமதியைச்
செஞ்சுடர்நாவளைக்குந்திருமாலிருஞ்சோலையதே. (௨)

மன்னுநரகந்தன்னைச்சூழ்போகிவளைத்தெறிந்து
கன்னிமகளிர்தம்மைக்கவர்ந்தகடல்வண்ணன்மலை
புன்னைசெருந்தியொடுபுன்வேங்கையுங்கோங்குநின்று
பொன்னரிமாலைகள்சூழ்பொழில்மாலிருஞ்சோலையதே. (௩)

மாவலிதன்னுடையமகன்வாணன்மகளிருந்த
காவலைக்கட்டழித்ததனிக்காளைகருதுமலை
கோவலர்கோவிந்தனைக்குறமாதர்கள்பண்குறிஞ்சிப்
பாவொலிபாடிநடம்பயின்மாலிருஞ்சோலையதே. (௪)

பலபலநாழஞ்சொல்லிப்பழித்தசிசுபாலன்றன்னை
அலவலமைதவிர்த்தவழகனலங்காரன்மலை
குலமலைகோலமலைகுளிர்மாமலைகொற்றமலை
நிலமலைநீண்டமலைதிருமாலிருஞ்சோலையதே. (௫)

பாண்டவர்தம்முடையபாஞ்சாலிமறுக்கமெல்லாம்
ஆண்டங்குநூற்றுவர்தம்பெண்டிர்மேல்வைத்தவப்பன்மலை
பாண்டகுவண்டினங்கள்பண்கள்பாடி.மதுப்பருகத்
தோண்டலுடையமலைதொல்லைமாலிருஞ்சோலையதே. (௬)

கனங்குழையாள்பொருட்டாக்கணைபாரித், தரக்கர்தங்கள்
இனங்கழுவேற்றுவித்தவெழிற்றோளெம்மிராமன்மலை
கனங்கொழிதெள்ளருவிவந்துசூழ்ந்தகன்ஞாலமெல்லாம்
இனங்குழுவாடுமலையெழின்மாலிருஞ்சோலையதே. (௭)

எரிசிதறுஞ்சரத்தாலிலங்கையினைத், தன்னுடைய
வரிசிலைவாயிற்பெய்துவாய்க்கோட்டந்தவிர்த்துகந்த
அரையனமருமலையமரரொடுகோனுஞ்சென்று
திரிசுடர்சூழுமலைதிருமாலிருஞ்சோலையதே. (௮)

கோட்டுமண்கொண்டிடந்துகுடங்கையில்மண்கொண்டளந்து
மீட்டுமதுண்டுமிழ்ந்துவிளையாடும்விமலன்மலை
ஈட்டியபல்பொருள்களெம்பிரானுக்கடியுறையென்று
ஓட்டருந்தண்சிலம்பாறுடைமாலிருஞ்சோலையதே. (௯)

ஆயிரந்தோள்பரப்பிமுடியாயிரமின்னிலக
ஆயிரம்பைந்தலையவனந்தசயனனாளுமலை
ஆயிரமாறுகளுஞ்சுனைகள்பலவாயிரமும்
ஆயிரம்பூம்பொழிலுமுடைமாலிருஞ்சோலையதே. (௧0)

* மாலிருஞ்சோலையென்னுமலையையுடையமலையை
நாலிருமூர்த்திதன்னைநால்வேதக்கடலமுதை
மேலிருங்கற்பகத்தைவேதாந்தவிழுப்பொருளின்
மேலிருந்தவிளக்கைவிட்டுசித்தன்விரித்தனனே. (கக)

பெரியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

உருப்பிணி கஞ்சன் மன்னு மாவலி பல பாண்ட கன மெரி கோட்டு ஆயிர மாலிருஞ்சோலை நாவ.

ஆ திருமொழி-ந-க்கு-பாசுரம்-நஉ.

---

## ச - வது. நாவகாரியம்.

### திருக்கோட்டியூர் திவ்யப்ரபாவம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நாததாமக்ரியைராகம் - அடதாளம்.

* நாவகாரியஞ்சொல்லிலாதவர்நாடொறும்விருந்தோம்புவார்
தேவகாரியஞ்செய்துவேதம்பயின்றுவாழ்திருக்கோட்டியூர்
மூவர்காரியமுந்திருத்துமுதல்வனைச்சிந்தியாத, வப்
பாவகாரிகளைப்படைத்தவனெங்ஙனம்படைத்தான்கொலோ. (க)

குற்றமின்றிக்குணம்பெருக்கிக்குருக்களுக்கனுகூலராய்ச்
செற்றமொன்றுமிலாதவண்கையினார்கள்வாழ்திருக்கோட்டியூர்
துற்றியேழுலகுண்டதூமணிவண்ணன்றன்னைத்தொழாதவர்
பெற்றதாயர்வயிற்றினைப்பெருநோய்செய்வான்பிறந்தார்களே. (உ)

வண்ணநன்மணியுமரதகமுமழுத்தி, நிழலெழும்
திண்ணைசூழ்திருக்கோட்டியூர்திருமாலவன்றிருநாமங்கள்
எண்ணக்கண்டவிரல்களாலிறைப்பொழுதுமெண்ணகிலாதுபோய்
உண்ணக்கண்டதம்மூத்தைவாய்க்குக்கவளமுந்துகின்றார்களே. (ந)

உரகமெல்லணையான்கையிலுறைசங்கம்போன்மடவன்னங்கள்
நிரைகணம்பரந்தேறுஞ்செங்கமலவயற்றிருக்கோட்டியூர்
நரகநாசனைநாவிற்கொண்டழையாதமானிடசாதியர்
பருகுநீருமுடுக்குங்கூறையும்பாவஞ்செய்தனதான்கொலோ. (ச)

ஆமையின்முதுகத்திடைக்குதிகொண்டுதூமலர்சாடிப்போய்த்
தீமைசெய்திளவாளைகள்விளையாடுநீர்த்திருக்கோட்டியூர்
நேமிசேர்தடங்கையினானைநினைப்பிலாவலிநெஞ்சுடைப்
பூமிபாரங்களுண்ணுஞ்சோற்றினைவாங்கிப்புல்லைத்திணிமினே. (ரு)

பூதமைந்தொடுவேள்வியைந்துபுலன்களைந்துபொறிகளால்
ஏதமொன்றுமிலாதவண்கையினார்கள்வாழ்திருக்கோட்டியூர்
நாதனைநரசிங்கனைநவின்றேத்துவார்களுழக்கிய
பாததூளிபடுதலாலிவ்வுலகம்பாக்கியஞ்செய்ததே. (சு)

குருந்தமொன்றொசித்தானொடுஞ்சென்றுகூடியாடிவிழாச்செய்து
திருந்துநான்மறையோரிராப்பகலேத்திவாழ்திருக்கோட்டியூர்
கருந்தடமுகில்வண்ணனைக்கடைக்கொண்டுகைதொழும்பத்தர்கள்
இருந்தவூரிலிருக்குமானிடரொத்தவங்கள்செய்தார்கொலோ. (எ)

நளிர்ந்தசீலனயாசலனபிமானதுங்கனை, நாடொறும்
தெளிந்தசெல்வனைச்சேவகங்கொண்டசெங்கண்மால்திருக்கோட்டியூர்
குளிர்ந்துறைகின்றகோவிந்தன்குணம்பாடுவாருள்ளநாட்டினுள்
விளைந்ததானியமுமிராக்கதர்மீதுகொள்ளகிலார்களே. (அ)

கொம்பினார்பொழில்வாய்க்குயிலினங்கோவிந்தன்குணம்பாடுசீர்ச்
செம்பொனார்மதில்சூழ்செழுங்கழனியுடைத்திருக்கோட்டியூர்
நம்பனைநரசிங்கனைநவின்றேத்துவார்களைக்கண்டக்கால்
எம்பிரான்றனசின்னங்களிவரிவரென்றாசைகள்தீர்வனே. (கூ)

காசின்வாய்க்கரம்விற்கிலுங்கரவாதுமாற்றிலிசோறிட்டுந்
தேசவார்த்தைபடைக்கும்வண்கையினார்கள்வாழ்திருக்கோட்டியூர்
கேசவாபுருடோத்தமாகிளர்சோதியாய்குறளாவென்று
பேசுவாரடியார்களெந்தம்மைவிற்கவும்பெறுவார்களே. (கO)

* சீதநீர்புடைசூழ்செழுங்கழனியுடைத்திருக்கோட்டியூர்
ஆதியானடியாரையுமடிமையின்றித்திரிவாரையும்
கோதில்பட்டர்பிரான்குளிர்புதுவைமன்விட்டுசித்தன்சொல்
ஏதமின்றியுரைப்பவரிருடீகேசனுக்காளரே. (கக)

பெரியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

நாவற்குற்றம்வண்ணஉரசஆமைபூ்மகுருந்நளிர்கொம்பின்காசிசீதநீர்ஆசை.

ஆ திருமொழி - ச - இ - பாசுரம் - சங.

## ரு - வது. ஆசைவாய்.

எல்லையில்மாயனையேத்தும்பேறு.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கண்டாராகம் - ஆதிதாளம்.

* ஆசைவாய்ச்சென்றசிந்தையராகியன்னையத்தனென்புத்திரர்பூமி
வாசவார்குழலாளென்றுமயங்கிமாளுமெல்லைக்கண்வாய்திறவாதே
கேசவாபுருடோத்தமாவென்றுங்கேழலாகியகேடிலீயென்றும்
பேசுவாரவரெய்தும்பெருமைபேசுவான்புகினம்பரமன்றே. (க)

சீயினார்செறிந்தேறியபுண்மேற்செற்றலேறிக்குழம்பிருந், தெங்கும்
ஈயினாலெரிப்புண்டுமயங்கியெல்லைவாய்ச்சென்றுசேர்வதன்முன்னம்
வாயினானமோநாரணாவென்றுமத்தகத்திடைக்கைகளைக்கூப்பிப்
போயினாற்பின்னையித்திசைக்கென்றும்பிணைக்கொடுக்கிலும்போகவொட்டாரே.

சோர்வினாற்பொருள்வைத்ததுண்டாகிற்சொல்லுசொல்லென்றுசுற்றமிருந்து
ஆர்வினவிலும்வாய்திறவாதேயந்தகாலமடைவதன்முன்னம்
மார்வமென்பதோர்கோயிலமைத்துமாதவனென்னுந்தெய்வத்தைநாட்டி
ஆர்வமென்பதோர்பூவிடவல்லார்க்கரவதண்டத்திலுய்யலுமாமே. ௩

மேலெழுந்ததோர்வாயுக்கிளர்ந்துமேன்மிடற்றினையுள்ளெழவாங்கிக்
காலுங்கையும்விதிர்விதிர்த்தேறிக்கண்ணுறக்கமதாவதன்முன்னம்
மூலமாகியவொற்றையெழுத்தைமூன்றுமாத்திரையுள்ளெழவாங்கி
வேலைவண்ணனைமேவுதிராகில்விண்ணகத்தினின்மேவலுமாமே. (௪)

மடிவழிவந்துநீர்புலன்சோரவாயிலட்டியகஞ்சியுமீண்டே
கடைவழிவாரக்கண்டமடைப்பக்கண்ணுறக்கமதாவதன்முன்னம்
தொடைவழியும்மைநாய்கள்கவராசூலத்தாலும்மைப்பாய்வதுஞ்செய்யார்
இடைவழியினீர்கூறையுமிழவீரிருடிகேசனென்றேத்தவல்லீரோ. (௫)

அங்கம்விட்டவையைந்துமகற்றியாவிமூக்கினிற்சோதித்தபின்னைச்
சங்கம்விட்டவர்கையைமறித்துப்பையவேதலைசாய்ப்பதன்முன்னம்
வங்கம்விட்டுலவுகடற்பள்ளிமாயனைமதுசூதனை, மார்பிற்
றங்கவிட்டுவைத்தாவதோர்கருமஞ்சாதிப்பார்க்கென்றுஞ்சாதிக்கலாமே.

தென்னவன்றமர்செப்பமிலாதார்சேவதக்குவார்போலப்புகுந்து
பின்னும்வன்கயிற்றாற்பிணித்தெற்றிப்பின்முன்னாகவிழுப்பதன்முன்னம்
இன்னவனினையானென்றுசொல்லியெண்ணியுள்ளத்திருளறநோக்கி
மன்னவன்மதுசூதனனென்பார்வானகத்துமன்றாடிகள்தாமே. (௭)

கூடிக்கூடியுற்றார்களிருந்துகுற்றநிற்கநற்றங்கள்பறைந்து
பாடிப்பாடியோர்பாடையிலிட்டுநரிப்படைக்கொருபாகுடம்போலே
கோடிமூடியெடுப்பதன்முன்னங்கௌத்துவமுடைக்கோவிந்தனோடு
கூடியாடியவுள்ளத்தரானாற்குறிப்பிடங்கடந்துய்யலுமாமே. (௮)

வாயொருபக்கம்வாங்கிவலிப்பவாந்தநீர்க்குழிக்கண்கள்மிழற்றத்
தாயொருபக்கந்தந்தையொருபக்கந்தாரமுமொருபக்கமலற்றத்
தீயொருபக்கஞ்சேர்வதன்முன்னஞ்செங்கண்மாலொடுஞ்சிக்கெனச்சுற்ற
மா, யொருபக்கநிற்கவல்லார்கட்கரவதண்டத்திலுய்யலுமாமே. (௯)

*செத்துப்போவதோர்போதுநினைந்துசெய்யுஞ்செய்கைகடேவபிரான்மேல்
பத்தராயிறந்தார்பெறும்பேற்றைப்பாழித்தோள்விட்டுசித்தன்புத்தூர்க்கோன்
சித்தநன்கொருங்கித்திருமாலைச்செய்தமாலையிவைபத்தும்வல்லார்
சித்தநன்கொருங்கித்திருமான்மேற்சென்றசிந்தைபெறுவர்தாமே. ()

பெரியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆசைசோர்வுமேல்மடியங்கம்தென்னவன்கூடிவாய்செத்துக்காசு.

ஆ. திருமொழி - ௫ - க்கு - பாசுரம் - ௫௩.

## சூ - வது. காசுங்கறையுடை.

நாரணனுமமநந்தநர்க்கிடுநலம்.

கலிவிருத்தம்.

மோஹநராகம் - ரூபகதாளம்.

* காசுங்கறையுடைக்கூறைக்குமங்கோர்கற்றைக்கும்
ஆசையினலங்கவத்தப்பேரிடுமாதர்காள்
கேசவன்பேரிட்டுநீங்கள்தேனித்திரிமினே
நாயகன்நாரணன்றம்மன்னைநரகம்புகாள். (க)

அங்கொருகூறையைக்குடுப்பதனுசையால்
மங்கியமானிடச்சாதியின்பேரிடுமாதர்காள்
செங்கணெடுமாற்சிரீதராவென்றழைத்தக்கால்
நங்கைகாள்நாரணன்றம்மன்னைநரகம்புகாள். (உ)

உச்சியிலெண்ணெயுஞ்சுட்டியும்வளையுமுகந்து
எச்சம்பொலிந்தீர்காளென்செய்வான்பிறர்பேரிட்டீர்
பிச்சைபுக்காகிலுமெம்பிரான்றிருநாமமே
நச்சுமின்நாரணன்றம்மன்னைநரகம்புகாள். (ந)

மானிடசாதியிற்றேன்றிற்றோர்மானிடசாதியை
மானிடசாதியின்பேரிட்டால்மறுமைக்கில்லை
வானுடைமாதவாகோவிந்தாவென்றழைத்தக்கால்
நானுடைநாரணன்றம்மன்னைநரகம்புகாள். (ச)

மலமுடையூத்தையிற்றேன்றிற்றோர்மலவூத்தையை
மலமுடையூத்தையின்பேரிட்டால்மறுமைக்கில்லைக்
குலமுடைக்கோவிந்தாகோவிந்தாவென்றழைத்தக்கால்
நலமுடைநாரணன்றம்மன்னைநரகம்புகாள். (ரு)

நாடுநகருமறியநாட்டுமானிடப்பேரிட்டுக்
கூடியழுங்கிக்குழியில்வீழ்ந்துவழுக்காதே
சாடிறப்பாய்ந்ததலைவாதாமோதராவென்று
நாடுமின்நாரணன்றம்மன்னைநரகம்புகாள். (சா)

மண்ணிற்பிறந்துமண்ணாகுமானிடப்பேரிட், டங்கு
எண்ணமொன்றின்றியிருக்குமேழைமனிதர்காள்
கண்ணுக்கினியகருமுகில்வண்ணனுமமே
நண்ணுமின்நாரணன்றம்மன்னைநரகம்புகாள். (எ)

நம்பிபிம்பியென்றுநாட்டுமானிடப்பேரிட்டால்
நம்பும்பிம்புமெல்லாநாலுநாளையிலழுங்கிப்போம்
செம்பெருந்தாமரைக்கண்ணன்பேரிட்டழைத்தக்கால்
நம்பிகாள்நாரணன்றம்மன்னைநரகம்புகாள். (அ)

ஊத்தைக்குழியிலமுதம்பாய்வதுபோ, லுங்கள்
மூத்திரப்பிள்ளையையெம்முகில்வண்ணன்பேரிட்டுக்
கோத்துக்குழைத்துக்குணலமாடித்திரிமினோ
நாத்தகுநாரணன்றம்மன்னைநரகம்புகாள். (கூ)

* சீரணிமால்திருநாமமேயிடத்தேற்றிய
வீரணிதொல்புகழ்விட்டுசித்தன்விரித்த
ஓரணியொண்டமிழொன்பதோடொன்றும்வல்லவர்
பேரணிவைகுந்தத்தென்றும்பேணியிருப்பரே. (க0)

பெரியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

காசங் குச்சி மானிட மல நாடு மண் ணம்பி ஊத்தை சீரணி தங்கை.

ஆ திருமொழி - கூ - க்கு - பாசுரம் - கூங.

---

## எ - வது. தங்கையைமூக்கும்.

கங்கைக்கரையின்கண்டமென்னுந்திருப்பதி.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அடாணாராகம் - திரிபுடைதாளம்.

* தங்கையைமூக்குந்தமையனைத்தலையுந்தடிந்தவென்றுசரதிபோய்
எங்குந்தன்புகழாயிருந்தரசாண்டவெம்புருடோத்தமனிருக்கை
கங்கைகங்கையென்றவாசகத்தாலேகடுவினைகளைந்திடகிற்கும்
கங்கையின்கரைமேற்கைதொழநின்றகண்டமென்னுங்கடிநகரே. (க)

சலம்பொதியுடம்பிற்றழலுமிழ்பேழ்வாய்ச்சந்திரன்வெங்கதிரஞ்ச
மலர்ந்தெழுந்தணவுமணிவண்ணவுருவின்மால்புருடோத்தமன்வாழ்வு
நலந்திகழ்சடையான்முடிக்கொன்றைமலரும்நாரணன்பாதத்துழாயும்
கலந்திழிபுனலாற்புகர்படுகங்கைக்கண்டமென்னுங்கடிநகரே. (உ)

அதிர்முகமுடையவலம்புரிகுமிழ்த்துயழலுமிழாழிகொண்டெறிந், தங்
கெதிர்முகவசுரர்தலைகளையிடறுமெம்புருடோத்தமனிருக்கை
சதுமுகன்கையிற்சதுப்புயன்றாளிற்சங்கரன்சடையினிற்றங்கிக்
கதிர்முகமணிகொண்டிழிபுனற்கங்கைக்கண்டமென்னுங்கடிநகரே. ங

இமையவரிறுமாந்திருந்தரசாளவேற்றுவந்தெதிர்பொருசேனை
நமபுரநணுகநாந்தகம்விசிறுநம்புருடோத்தமனகர்தான்
இமவந்தந்தொடங்கியிருங்கடலளவுமிருகரையுலகிரைத்தாடக்
கமையுடைப்பெருமைக்கங்கையின்கரைமேற்கண்டமென்னுங்கடிநகரே.

உழுவதோர்படையுமுலக்கையும்வில்லுமொண்சுடராழியுஞ்சங்கும்
மழுவொடுவாளும்படைக்கலமுடையமால்புருடோத்தமன்வாழ்வு
எழுமையுங்கூடிப்பீண்டியபாவமிறைப்பொழுதளவினிலெல்லாம்
கழுவிடும்பெருமைக்கங்கையின்கரைமேற்கண்டமென்னுங்கடிநகரே.

தலைப்பெய்துகுமுறிச்சலம்பொதிமேகஞ்சலசலப்பொழிந்திடக்கண்டு
மலைப்பெருங்குடையான்மறைத்தவன்மதுராமால்புருடோத்தமன்வாழ்வு
அலைப்புடைத்திரைவாயருந்தவமுனிவரவபிரதங்குடைந்தாடக்
கலப்பைகள்கொழிக்குங்கங்கையின்கரைமேற்கண்டமென்னுங்கடிநகரே.

விற்பிடித்திறுத்துவேழத்தைமுருக்கிமேலிருந்தவன்றலைசாடி
மற்பொருதெழப்பாய்ந்தரசனையுதைத்தமால்புருடோத்தமன்வாழ்வு
அற்புதமுடையவைராவதமதமுமவரிளம்படியரொண்சாந்தும்
கற்பகமலருங்கலந்திழிகங்கைக்கண்டமென்னுங்கடிநகரே. (௭)

திரைபொருகடல்சூழ்திண்மதிட்டுவரைவேந்துதன்மைத்துனன்மார்க்காய்
அரசனையவியவரசினையருளுமரிபுருடோத்தமனமர்வும்
நிரைநிரையாகநெடியனயூபநிரந்தரமொழுக்குவிட், டிரண்டு
கரைபுரைவேள்விப்புகைகமழ்கங்கைக்கண்டமென்னுங்கடிநகரே. ௮

வடதிசைமதுரைசாளக்கிராமம்வைகுந்தந்துவரையயோத்தி
இடமுடைவதரியிடவகையுடையவெம்புருடோத்தமனிருக்கை
தடவரையதிரத்தரணிவிண்டிடியத்தலைப்பற்றிக்கரைமரஞ்சாடிக்
கடலினைக்கலங்கக்கடுத்திழிகங்கைக்கண்டமென்னுங்கடிநகரே. (௯)

மூன்றெழுத்ததனைமூன்றெழுத்ததனான்மூன்றெழுத்தாக்கிமூன்றெழுத்தை
ஏன்றுகொண்டிருப்பார்க்கிரக்கநன்குடையவெம்புருடோத்தமனிருக்கை
மூன்றடிநிமிர்த்துமூன்றினிற்றோன்றிமூன்றினின்மூன்றுருவானான்
கான்றடம்பொழில்சூழ்கங்கையின்கரைமேற்கண்டமென்னுங்கடிநகரே.

* பொங்கொலிகங்கைக்கரைமலிகண்டத்துறைபுருடோத்தமனடிமேல்
வெங்கலிநலியாவில்லிபுத்தூர்க்கோன்விட்டுசித்தன்விருப்புற்றுத்
தங்கியவன்பாற்செய்தமிழ்மாலைதங்கியநாவுடையார்க்குக்
கங்கையிற்றிருமாற்கழலிணைக்கீழேகுளித்திருந்தகணக்காமே. (௧௧)

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

தங்கை சல மதி ரிமையவ ருழு தலை வில் திரை வட மூன்று பொங்கொ லி மாதவத்தோன்.

ஆ திருமொழி - ௭ - க்கு - பாசுரம் - ௭௪.

## அ - வது. மாதவத்தோன்.

### திருவரங்கம்.

கலிவிருத்தம்.

சங்கராபரணராகம் - ஆதிதாளம்.

* மாதவத்தோன்புத்திரன்போய்மறிகடல்வாய்மாண்டானை
ஓதுவித்ததக்கணையாவுருவுருவேகொடுத்தானூர்
தோதவத்தித்தூய்மறையோர்துறைபடியத்துளும்பி, யெங்கும்
போதில்வைத்ததேன்சொரியும்புனலரங்கமென்பதுவே. (க)

பிறப்பகத்தேமாண்டொழிந்தபிள்ளைகளைநால்வரையும்
இறைப்பொழுதிற்கொணர்ந்துகொடுத்தொருப்படுத்தவுறைப்பனூர்
மறைப்பெருந்தீவளர்த்திருப்பார்வருவிருந்தையளித்திருப்பார்
சிறப்புடையமறையவர்வாழ்திருவரங்கமென்பதுவே. (உ)

மருமகன்றன்சந்ததியையுயிர்மீட்டு, மைத்துனன்மார்
உருமுகத்தேவீழாமேகுருமுகமாய்க்காத்தானூர்
திருமுகமாய்ச்செங்கமலந்திருநிறமாய்க்கருங்குவளைப்
பொருமுகமாய்நின்றலரும்புனலரங்கமென்பதுவே. (ங)

கூன்றுழுத்தைசிதகுழைப்பக்கொடியவள்வாய்கடியசொற்கேட்டு
ஈன்றெடுத்ததாயரையுமிராச்சியமுமாங்கொழியக்
கான்றுடுத்தநெறிபோகிக்கண்டகரைக்களைந்தானூர்
தேன்றுடுத்தமலர்ச்சோலைத்திருவரங்கமென்பதுவே. (ச)

பெருவரங்களவைபற்றிப்பிழக்குடையவிராவணனை
உருவரங்கப்பொருதழித்திவ்வுலகினைக்கண்பெறுத்தானூர்
குரவரும்பக்கோங்கலரக்குயில்கூவுங்குளிர்பொழில்சூழ்
திருவரங்கமென்பதுவேயென்திருமாற்சேர்விடமே. (ரு)

கீழுலகிலசுரர்களைக்கிழங்கிருந்துகிளராமே
ஆழிவிடுத்தவருடையகருவழித்தவழிப்பனூர்
தாழைமடலூடுரிஞ்சித்தவளவண்ணப்பொடியணிந்து
யாழினிசைவண்டினங்களாளம்வைக்குமரங்கமே. (சு)

கொழுப்புடையசெழுங்குருதிகொழித்திழிந்துகுமிழ்த்தெறியப்
பிழக்குடையவசுரர்களைப்பிணம்படுத்தபெருமானூர்
தழுப்பரியசந்தனங்கள்தடவரைவாயீர்த்துக்கொண்டு
தெழிப்புடையகாவிரிவந்தடிதொழுஞ்சீரரங்கமே. (எ)

வல்லெயிற்றுக்கேழலுமாய்வாளெயிற்றுச்சீயமுமாய்
எல்லையிலாத்தரணியையுமவுணனையுமிடந்தானூர்
எல்லியம்போதிருஞ்சிறைவண்டெம்பெருமான்குணம்பாடி.
மல்லிகைவெண்சங்கூதுமதிளரங்கமென்பதுவே. (அ)

குன்றுடுகொழுமுகில்போற்குவளைகள்போற்குரைகடல்போல்
நின்றுடுகணமயில்போனிறமுடையநெடுமாலூர்
குன்றாடுபொழினுழைந்துகொடியிடையார்முலையணவி
மன்றாடுதென்றலுலாமதிளரங்கமென்பதுவே. (கூ)

* பருவரங்களவைபற்றிப்படையாலித்தெழுந்தானைச்
செருவரங்கப்பொருதழித்ததிருவாளன்றிருப்பதிமேல்
திருவரங்கத்தமிழ்மாலைவிட்டுசித்தன்விரித்தனகொண்
டிருவரங்கமெரித்தானையேத்தவல்லாரடியோமே. (க0)

பெரியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

மாதவப்பிரப்புமருமகன்கூன்பெருவரங்கிழ்கொழுப்புவல்லெ குன்றுபரு மரவடி.

ஆ திருமொழி - அ - க்கு - பாசுரம் - அச.

---

## கூ - வது. மரவடியை.

### திருவரங்கம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தோடிராகம் - ஆதிதாளம்.

* மரவடியைத்தம்பிக்குவான்பணையம்வைத்துப்போய்வானோர்வாழச்
செருவுடையதிசைக்கருமந்திருத்திவந்துலகாண்டதிருமாற்கோயில்
திருவடிதன்றிருவுருவுந்திருமங்கைமலர்க்கண்ணுங்காட்டிநின்று
உருவுடையமலர்நீலங்காற்றுட்டவோசலிக்குமொளியரங்கமே. (க)

தன்னடியார்திறத்தகத்துத்தாமரையாளாகிலுஞ்சிதகுரைக்குமேல்
என்னடியாரதுசெய்யார்செய்தாரேனன்றுசெய்தாரென்பர்போலும்
மன்னுடையவிபீடணற்காய்மதிளிலங்கைத்திசைநோக்கிமலர்க்கண்வைத்த
என்னுடையதிருவரங்கற்கன்றியுமற்றொருவர்க்காளாவரே. (உ)

கருளுடையபொழின்மருதுங்கதக்களிறும்பிலம்பனையுங்கடியமாவும்
உருளுடையசகடரையுமல்லரையுமுடையவிட்டோசைகேட்டான்
இருளகற்றுமெறிகதிரோன்மண்டலத்தூடேற்றிவைத்தேணிவாங்கி
அருள்கொடுத்திட்டடியவரையாட்கொள்வானமருமூரணியரங்கமே.

பதினாறுமாயிரவர்தேவிமார்பணிசெய்யத், துவரையென்னு
மதிலநயகராகிவீற்றிருந்தமணவாளர்மன்னுகோயில்
புதுநாண்மலர்க்கமலமெம்பெருமான்பொன்வயிற்றிற்பூவேபோல்வான்
பொதுநாயகம்பாவித்திறுமாந்துபொற்சாய்க்கும்புனலரங்கமே. (அ)

ஆமையாய்க்கங்கையாயாழ்கடலாயவனியாயருவரைகளாய்
நான்முகனாய்நான்மறையாய்வேள்வியாய்த்தக்கணையாய்த்தானுமானான்
சேமமுடைநாரதனார்சென்றுசென்றுதுதித்திறைஞ்சக்கிடந்தான்கோயில்
பூமருவிப்புள்ளினங்கள்புள்ளரையன்புகழ்குழறும்புனலரங்கமே. ௫

மைத்துனன்மார்காதலியைமயிர்முடிப்பித்தவர்களையேமன்னராக்கி
உத்தரைதன்சிறுவனையுமுய்யக்கொண்டவுயிராளனுறையுங்கோயில்
பத்தர்களும்பகவர்களும்பழமொழிவாய்முனிவர்களும்பரந்தநாடும்
சித்தர்களுந்தொழுதிறைஞ்சத்திசைவிளக்காய்நிற்கின்றதிருவரங்கமே.

குறட்பிரமசாரியாய்மாவலியைக்குறும்பதக்கியரசுவாங்கி
இறைப்பொழுதிற்பாதாளங்கலவிருக்கைகொடுத்துகந்தவெம்மான்கோயில்
எறிப்புடையமணிவரைமேலிளஞாயிறெழுந்தாப்போலரவணையின்வாய்ச்
சிறப்புடையபணங்கண்மிசைச்செழுமணிகள்விட்டெறிக்குந்திருவரங்கமே.

உரம்பற்றியிரணியனையுகிர்நுதியாலொள்ளியமார்புறைக்கவூன்றிச்
சிரம்பற்றிமுடியிடியக்கண்பிதுங்கவாயலறத்தெழித்தான்கோயில்
உரம்பெற்றமலர்க்கமலமுலகளந்தசேவடிபோலுயர்ந்துகாட்ட
வரம்புற்றகதிர்ச்செந்நெற்றாட்சாய்த்துத்தலைவணக்குந்தண்ணரங்கமே.

தேவுடையமீனமாயாமையாயேனமாயரியாய்க்குறளாய்
மூவுருவிலிராமனாய்க்கண்ணனாய்க்கற்கியாய்முடிப்பான்கோயில்
சேவலொடுபெடையன்னஞ்செங்கமலமலரேறியூசலாடிப்
பூவணைமேற்றுதைந்தெழுசெம்பொடியாடிவிளையாடும்புனலரங்கமே.

செருவாளும்புள்ளாளன்மண்ணாளன்செருச்செய்யுநாந்தகமென்னும்
ஒருவாளன், மறையாளனோடாதபடையாளன்விழுக்கையாளன்
இரவாளன்பகலாளனென்னையாளனேழுலகப்பெரும்புரவாளன்
திருவாளனினிதாகத்திருக்கண்கள்வளர்கின்றதிருவரங்கமே. (௧0)

* கைந்நாகத்திடர்கடிந்தகனலாழிப்படையுடையான்கருதுங்கோயில்
தென்னாடும்வடநாடுந்தொழநின்றதிருவரங்கன்திருப்பதியின்மேல்
மெய்ந்நாவன்மெய்யடியான்விட்டுசித்தன்விரித்ததமிழுரைக்கவல்லார்
எஞ்ஞான்றுமெம்பெருமானிணையடிக்கீழிணைபிரியாதிருப்பர்தாமே.

பெரியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

மரவடி தன் கருள் பதினா றுமை மைத்துனன் குற ளுரம் தேவு செருக் கைந்நாகத் திப்பு.

ஆ திருமொழி - ௯ - ௫ - பாசுரம் - ௧௫.

## க0 - வது. துப்புடையாரை.

### அரவணைப்பள்ளிகொளரங்கனைப்போற்றல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆரபிராகம் - ஆதிதாளம்.

* துப்புடையாரையடைவதெல்லாஞ்சோர்விடத்துத்துணையாவரென்றே
ஒப்பிலேனுகிலுநின்னடைந்தேனானைக்குநீயருள்செய்தமையால்
எய்ப்பென்னைவந்துநலியும்போதங்கேதுநானுன்னைநினைக்கமாட்டேன்
அப்போதைக்கிப்போதேசொல்லிவைத்தேனரங்கத்தரவணைப்பள்ளியானே.

சாமிடத்தென்னைக்குறிக்கொள்கண்டாய்சங்கொடுசக்கரமேந்தினனே
நாமடித்தென்னையனேகதண்டஞ்செய்வதாநிற்பர்நமன்றமர்கள்
போமிடத்துன்றிறத்தெத்தனையும்புகாவண்ணநிற்பதோர்மாயைவல்லை
யாமிடத்தேயுன்னைச்சொல்லிவைத்தேனரங்கத்தரவணைப்பள்ளியானே.

எல்லையில்வாசற்குறுகிச்சென்றாலெற்றிநமன்றமர்பற்றும்போது
நில்லுமினென்னுமுபாயமில்லைநேமியுஞ்சங்கமுமேந்தினனே[டென்றும்
சொல்லலாம்போதேயுன்னாமமெல்லாஞ் சொல்லினேனென்னைக்குறிக்கொண்
அல்லற்படாவண்ணங்காக்கவேண்டு மரங்கத்தரவணைப்பள்ளியானே.

ஒற்றைவிடையனுநான்முகனுமுன்னையறியாப்பெருமையோனே
முற்றவுலகெலாநீயேயாகிமூன்றெழுத்தாயமுதல்வனேயோ
அற்றதுவாணாளிவற்கென்றெண்ணியஞ்சநமன்றமர்பற்றலுற்ற
அற்றைக்குநீயென்னைக்காக்கவேண்டுமரங்கத்தரவணைப்பள்ளியானே.

பையரவினணைப்பாற்கடலுட்பள்ளிகொள்கின்றபரமமூர்த்தி
உய்யவுலகுபடைக்கவேண்டியுந்தியிற்றோற்றினாய்நான்முகனை
வையமனிதரைப்பொய்யென்றெண்ணிக்காலனையுமுடனேபடைத்தாய்
ஐயவினியென்னைக்காக்கவேண்டுமரங்கத்தரவணைப்பள்ளியானே. ரு

தண்ணனவில்லைநமன்றமர்கள்சாலக்கொடுமைகள்செய்யாநிற்பர்
மண்ணொடுநீருமெரியுங்காலுமற்றுமாகாசமுமாகிநின்றாய் [ன்றும்
எண்ணலாம்போதேயுன்னாமமெல்லாமெண்ணினேனென்னைக்குறிக்கொண்டெ
அண்ணலேநீயென்னைக்காக்கவேண்டுமரங்கத்தரவணைப்பள்ளியானே.

செஞ்சொன்மறைப்பொருளாகிநின்றதேவர்களுநாயகனேயெம்மானே
எஞ்சலிலென்னுடையின்னமுதேயேழுலகுமுடையாயென்னப்பா
வஞ்சவுருவினமன்றமர்கள்வலிந்துநலிந்தென்னைப்பற்றும்போது
அஞ்சலமென்றென்னைக்காக்கவேண்டுமரங்கத்தரவணைப்பள்ளியானே.

நானேதுமுன்மாயமொன்றறியேனமன்றமர்பற்றிநலிந்திட்டிந்த
ஊனேபுகேயென்றுமோதும்போதங்கேதுநானுன்னைநினைக்கமாட்டேன்
வானேவானவர்தங்களீசாமதுரைப்பிறந்தமாமாயனே,யென்
ஆனாய்நீயென்னைக்காக்கவேண்டுமரங்கத்தரவணைப்பள்ளியானே. அ

குன்றெடுத்தாநிரைகாத்தவாயாகோநிரைமேய்த்தவனேயெம்மானே
அன்றுமுதலின்றறுதியாவாதியஞ்சோதிமறந்தறியேன்
நன்றுங்கொடியநமன்றமர்கணலிந்துவலிந்தென்னைப்பற்றும்போது
அன்றங்குநீயென்னைக்காக்கவேண்டுமரங்கத்தரவணைப்பள்ளியானே.

* மாயவனைமதுசூதனனைமாதவனைமறையோர்களேத்தும்
ஆயர்களேற்றினையச்சுதனையரங்கத்தரவணைப்பள்ளியானை
வேயர்புகழ்வில்லிபுத்தூர்விட்டுசித்தன்சொன்னமாலைபத்தும்
தூயமனத்தனராகிவல்லார்தூமணிவண்ணனுக்காளர்தாமே. (௧௰)

பெரியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

துப்புச் சாமிடத் தெல்லை ஒற்றை பை தண்ணன செஞ்சொல் நான் குன்று மாய வாக்கு.

ஆக திருமொழி - ௧௰ - க்கு - பாசுரம் - ௧௰௫.

நான்காம்பத்துமுற்றும்.

ஆக நான்காம்பத்துவரையில் திருமொழி - ௪௰ - க்கு - பாசுரம் - சஙக.

## ஐந்தாம்பத்து.

### க - வது. வாக்குத்தூய்மை.

நைச்யநவிற்றி.

கலிவிருத்தம்.

தன்யாசிராகம் - அடதாளம்.

* வாக்குத்தூய்மையிலாமையினாலேமாதவாவுன்னைவாய்க்கொள்ளமாட்டேன்
நாக்குநின்னையல்லாலறியாதுநானதஞ்சுவனென்வசமன்று
மூர்க்குப்பேசுகின்றானிவனென்றுமுனிவாயேலுமென்னாவினுக்காற்றேன்
காக்கைவாயிலுங்கட்டுரைகொள்வர்காரணாகருளக்கொடியானே. (க)

சழக்குநாக்கொடுபுன்கவிசொன்னேன்சங்குசக்கரமேந்துகையானே
பிழைப்பராகிலுந்தம்மடியார்சொற்பொறுப்பதுபெரியோர்கடனன்றே
விழிக்குங்கண்ணிலேனின்கண்மற்றல்லால்வேறொருவரோடென்மனம்பற்றாது
உழைக்கோர்புள்ளிமிகையன்றுகண்டாயூழியேழுலகுண்டுமிழ்ந்தானே.

நன்மைதீமைகளொன்றுமறியேனாரணாவென்னுமித்தனையல்லால்
புன்மையாலுன்னைப்புள்ளுவம்பேசிப்புகழ்வானன்றுகண்டாய்திருமாலே
உன்னுமாறுன்னையொன்றுமறியேனோவாதேநமோநாரணாவென்பன்
வன்மையாவதுன்கோயிலில்வாழும்வைணவனென்னும்வன்மைகண்டாயே.

நெடுமையாலுலகேழுமளந்தாய்நின்மலாநெடியா, யடியேனைக்
குடிமைகொள்வதற்கையுறவேண்டாகூறைசோறிவைவேண்டுவதில்லை
அடிமையென்னுமக்கோயின்மையாலேயங்கங்கேயவைபோதருங்கண்டாய்
கொடுமைக்கஞ்சனைக்கொன்றுநின்றாதைகோத்தவன்றளைகோள்விடுத்தானே.

தோட்டமில்லவளாத்தொழுவோடைத்துடவையுங்கிணறுமிவையெல்லாம்
வாட்டமின்றியுன்பொன்னடிக்கீழேவளைப்பகம்வகுத்துக்கொண்டிருந்தேன்
நாட்டுமானிடத்தோடெனக்கரிதுநச்சுவார்பலர்கேழலொன்றாகி
கோட்டுமண்கொண்டகொள்கையினானேகுஞ்சரம்விழக்கொம்பொசித்தானே.

கண்ணனாமுகனைப்படைத்தானேகாரணாகரியா, யடியேனான்
உண்ணுநாள்பசியாவதொன்றில்லையோவாதேநமோநாரணாவென்று
எண்ணுநாளுமிருக்கெசுச்சாமவேதநாண்மலர்கொண்டுனபாதம்
நண்ணுநா, ளவைதத்துறுமாகிலன்றெனக்கவைபட்டினிநாளே. (சு)

வெள்ளைவெள்ளத்தின்மேலொருபாம்பைமெத்தையாகவிரித், ததன்மேலே
கள்ளநித்திரைகொள்கின்றமார்க்கங்காணலாங்கொலென்றாசையினாலே
உள்ளஞ்சோரவுகந்தெதிர்விம்மியுரோமகூபங்களாய்க், கண்ணநீர்கள்
துள்ளஞ்சோரத்துயிலணைகொள்ளேன்சொல்லாயானுன்னைத்தத்துறுமாறே.

வண்ணமால்வரையேகுடையாகமாரிகாத்தவனேமதுசூதா
கண்ணனேகரிகோள்விடுத்தானேகாரணாகளிறட்டபிரானே
எண்ணுவாரிடரைக்களைவானேயேத்தரும்பெருங்கீர்த்தியினானே
நண்ணிநானுன்னைநாடொறுமேத்துநன்மையேயருள்செய்யெம்பிரானே.

நம்பனேநவின்றேத்தவல்லார்களாதனேநரசிங்கமதானாய்
உம்பர்கோனுலகேழுமளந்தாயூழியாயினாயாழிமுனேந்திக்
கம்பமாகரிகோள்விடுத்தானேகாரணாகடலைக்கடந்தானே
எம்பிரானென்னையாளுடைத்தேனேயேழையேனிடரைக்களையாயே.

* காமர்தாதைகருதலர்சிங்கங்காணவினியகருங்குழற்குட்டன்
வாமனனென்மரதகவண்ணன்மாதவன்மதுசூதனன்றன்னைச்
சேமநன்கமரும்புதுவையர்கோன்விட்டுசித்தன்வியன்றமிழ்பத்தும்
நாமமென்றுநவின்றுரைப்பார்களண்ணுவாரொல்லைநாரணனுலகே.

பெரியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

வாக்குச் சழக்கு நன்மை நெடுமை தோட்டம் கண்ண வெள்ளை வண்ண நம்பன் காமர் நெய்.

---

## உ - வது. நெய்க்குடத்தை.

அரவணையாதியான்காப்பாற்பிணிபோக்கல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பியாகடைராகம் - ரூபகதாளம்.

நெய்க்குடத்தைப்பற்றியேறுமெறும்புகள்போனிரந், தெங்கும்
கைக்கொண்டுநிற்கின்றநோய்காள்காலம்பெறவுய்யப்போமின்
மெய்க்கொண்டுவந்துபுகுந்துவேதப்பிரானார்கிடந்தார்
பைக்கொண்டபாம்பணையோடும்பண்டன்றுபட்டினங்காப்பே. (க)

சித்திரகுத்தனெழுத்தாற்றென்புலக்கோன்பொறியொற்றி
வைத்தவிலச்சினைமாற்றித்தூதுவரோடியொளித்தார்
முத்துத்திரைக்கடற்சேர்ப்பன்மூதறிவாளன்முதல்வன்
பத்தர்க்கமுதனடியேன்பண்டன்றுபட்டினங்காப்பே. (௨)

வயிற்றிற்றொழுவைப்பிரித்துவன்புலச்சேவையதக்கிக்
கயிற்றுமக்காணிகழித்துக்காலிடைப்பாசங்கழற்றி
எயிற்றிடைமண்கொண்டவெந்தையிராப்பகலோதுவித், தென்னைப்
பயிற்றிப்பணிசெய்யக்கொண்டான்பண்டன்றுபட்டினங்காப்பே. (௩)

மங்கியவல்வினைநோய்காளுமக்குமோர்வல்வினைகண்டீர்
இங்குப்புகேன்மின்புகேன்மினெளிதன்றுகண்டீர்புகேன்மின்
சிங்கப்பிரானவனெம்மான்சேருந்திருக்கோயில்கண்டீர்
பங்கப்படாதுய்யப்போமின்பண்டன்றுபட்டினங்காப்பே. (௪)

மாணிக்குறளுருவாயமாயனையென்மனத்துள்ளே
பேணிக்கொணர்ந்துபுகுதவைத்துக்கொண்டேன்பிறிதின்றி
மாணிக்கப்பண்டாரங்கண்டீர்வலிவன்குறும்பர்களுள்ளீர்
பாணிக்கவேண்டாநடமின்பண்டன்றுபட்டினங்காப்பே. (௫)

உற்றவுறுபிணிநோய்காளுமக்கொன்றுசொல்லுகேன்கேண்மின்
பெற்றங்கண்மேய்க்கும்பிரானார்பேணுந்திருக்கோயில்கண்டீர்
அற்றமுரைக்கின்றேனின்னமாள்வினைகாளுமக்கிங்கோர்
பற்றில்லைகண்டீர்நடமின், பண்டன்றுபட்டினங்காப்பே. (௬)

கொங்கைச்சிறுவரையென்னும்பொதும்பினில்வீழ்ந்துவழுக்கி
அங்கோர்முழையினிற்புக்கிட்டழுந்திக்கிடந்துழல்வேனை
வங்கக்கடல்வண்ணனெம்மான்வல்வினையாயினமாற்றிப்
பங்கப்படாவண்ணஞ்செய்தான்பண்டன்றுபட்டினங்காப்பே. (௭)

ஏதங்களாயினவெல்லாமிறங்கலிடுவித், தென்னுள்ளே
பீதகவாடைப்பிரானார்பிரமகுருவாகிவந்து
போதிற்கமலவன்னெஞ்சம்புகுந்துமென்சென்னித்திடரில்
பாதவிலச்சினைவைத்தான்பண்டன்றுபட்டினங்காப்பே. (௮)

உறகலுறகலுறகலொண்சுடராழியேசங்கே
அறவெறிநாந்தகவாளேயழகியசார்ங்கமேதண்டே
இறவுபடாமலிருந்தவெண்மருலோகபாலீர்காள்
பறவையரையாவுறகல்பள்ளியறைகுறிக்கொண்மின். (௯)

* அரவத்தமளியினோடுமழகியபாற்கடலோடும்
அரவிந்தப்பாவையுந்தானுமகம்படிவந்துபுகுந்து
பரவைத்திரைபலமோதப்பள்ளிகொள்கின்றபிரானைப்
பரவுகின்றான்விட்டுசித்தன்பட்டினங்காவற்பொருட்டே. (௧0)

பெரியாழ்வார் திருவடிகளேஶரணம்.

செய்சித்திரவயிற்றின்மங்கியமாணிஉற்றகொங்கைஏதம்உறகலரவத்துக்க.

ஆ திருமொழி - ௨ - க்கு - பாசுரம் - ௨0.

## ௩ - வது. துக்கச்சுழலையை.

திருமாலிருஞ்சோலையெம்பெருமானைமீக்கூறல்.
கலிநிலைத்துறை.
ஸஹானாராகம் - அடதாளம்.

* துக்கச்சுழலையைச்சூழ்ந்துகிடந்தவலையையறப்பறித்துப்
புக்கினிற்புக்குன்னைக்கண்டுகொண்டேனினிப்போகவிடுவதுண்டே
மக்களறுவரைக்கல்லிடைமோதவிழ்ந்தவடன்வயிற்றில்
சிக்கெனவந்துபிறந்துநின்றாய்திருமாலிருஞ்சோலையெந்தாய். (௧)

வளைத்துவைத்தேனினிப்போகலொட்டேனுன்றனிந்திரசாலங்களால்
ஒளித்திடினின்றிருவாணைகண்டாய்நீயொருவர்க்குமெய்யனல்லை
அளித்தெங்குநாடுநகரமுந்தம்முடைத்தீவினைத்தீர்க்கலுற்றுத்
தெளிந்துவலஞ்செய்யுந்தீர்த்தமுடைத்திருமாலிருஞ்சோலையெந்தாய்.

உனக்குப்பணிசெய்திருக்குந்தவமுடையேனினிப்போயொருவன்
தனக்குப், பணிந்துகடைத்தலையிற்கைநின்சாயையழிவுகண்டாய்
புனத்தினைக்கிள்ளிப்புதுவவிக்காட்டியுன்பொன்னடிவாழ்கவென்று
இனக்குறவர்புதியதுண்ணுமெழின்மாலிருஞ்சோலையெந்தாய். (௩)

காதம்பலவுந்திரிந்துழன்றேற்கங்கோர்நிழலில்லைநீருமில்லை, யுன்
பாதநிழலல்லான்மற்றோருயிர்ப்பிடநானெங்குங்காண்கின்றிலேன்
தூதுசென்றாய்குருபாண்டவர்க்காயங்கோர்பொய்ச்சுற்றம்பேசிச்சென்று
பேதஞ்செய்தெங்கும்பிணம்படுத்தாய்திருமாலிருஞ்சோலையெந்தாய்.

காலுமெழாக்கண்ணநீருநில்லாவுடற்சோர்ந்துநடுங்கிக், குரல்
மேலுமெழாமயிர்கூச்சுமறாவெனதோட்களும்வீழ்வொழியா
மாலுகளாநிற்குமென்மனனேயுன்னைவாழத்தலைப்பெய்திட்டேன்
சேலுகளாநிற்குநீட்சுனைசூழ்திருமாலிருஞ்சோலையெந்தாய். (௫)

எருத்துக்கொடியுடையானும்பிரமனுமிந்திரனு, மற்றும்
ஒருத்தருமிப்பிறவியென்னுநோய்க்குமருந்தறிவாருமில்லை
மருத்துவனாய்நின்றமாமணிவண்ணமறுபிறவிதவிரத்
திருத்தி, யுன்கோயிற்கடைப்புகப்பெய்திருமாலிருஞ்சோலையெந்தாம்.

அக்கரையென்னுமனத்தக்கடலுளழுந்தியுன்பேரருளால்
இக்கரையேறியிளைத்திருந்தேனையஞ்சேலென்றுகைகவியாய்
சக்கரமுந்தடக்கைகளுங்கண்களும்பீதகவாடையொடும்
செக்கர்நிறத்துச்சிவப்புடையாய்திருமாலிருஞ்சோலையெந்தாய். (எ)

எத்தனைகாலமுமெத்தனையூழியுமின்றொடுநாளையென்றே
இத்தனைகாலமும்போய்க்கிறிப்பட்டேனினியுன்னைப்போகலொட்டேன்
மைத்துனன்மார்களைவாழ்வித்துமாற்றலர்நூற்றுவரைக்கெடுத்தாய்
சித்தநின்பாலதறிதியன்றேதிருமாலிருஞ்சோலையெந்தாய். (அ)

அன்றுவயிற்றிற்கிடந்திருந்தேயடிமைசெய்யலுற்றிருப்பன்
இன்றுவந்திங்குன்னைக்கண்டுகொண்டேனினிப்போகவிடுவதுண்டே
சென்றங்குவாணனையாயிரந்தோளுந்திருச்சக்கரமதனால்
தென்றித்திசைதிசைவீழச்செற்றாய்திருமாலிருஞ்சோலையெந்தாய்.

* சென்றுலகங்குடைந்தாடுஞ்சுனைத்திருமாலிருஞ்சோலைதன்னுள்
நின்றபிரா, னடிமேலடிமைத்திறநேர்படவிண்ணப்பஞ்செய் [ல்
பொன்றிகழ்மாடம்பொலிந்துதோன்றும் புதுவையர்கோன்விட்டுசித்தன்சொ
ஒன்றினோடொன்பதும்பாடவல்லாருலகமளந்தான்றமரே. (க0)

பெரியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

தூக்கவலைஉனக்குகாதம்காலுமெருத்தக்களைஎத்தனையன்றுசென்றுசென்னி.

ஆ௨ திருமொழி - ௩ - க்கு - பாசுரம் - ௩0.

---

## ௪ - வது. சென்னியோங்கு.

இதயத்துணிறைந்தெம்பிரான்மலர்ந்தமை.

கலிவிருத்தம்.

ஸ்ரீராகம் - திரிபுடைதாளம்.

* சென்னியோங்குதண்டிருவேங்கடமுடையா, யுலகு
தன்னைவாழநின்றநம்பிதாமோதராசதிரா
என்னையுமென்னுடைமையுமுன்சக்கரப்பொறியொற்றிக்கொண்டு
நின்னருளேபுரிந்திருந்தேனினியுன்றிருக்குறிப்பே. (க)

பறவையேறுபரமபுருடாநீயென்னைக்கைக்கொண்டபின்
பிறவியென்னுங்கடலும்வற்றிப்பெரும்பதமாகின்றதால்
இறவுசெய்யும்பாவக்காடுதீக்கொளீவேகின்றதால்
அறிவையென்னுமமுதவாறுதலைப்பற்றிவாய்க்கொண்டதே. (௨)

எம்மனாவென்குலதெய்வமேயென்னுடைநாயகனே
நின்னுளேனாய்ப்பெற்றநன்மையிவ்வுலகினிலார்பெறுவார்
நம்மன்போல்வீழ்த்தமுக்குநாட்டிலுள்ளபாவமெல்லாம்
சும்மெனாதேகைவிட்டோடித்தூறுகள்பாய்ந்தனவே. (௩)

கடல்கடைந்தமுதங்கொண்டுகலசத்தைநிறைத்தாற்போல்
உடலுருகிவாய்திறந்துமடுத்துன்னைநிறைத்துக்கொண்டேன்
கொடுமைசெய்யுங்கூற்றமுமென்கோலாடுகுறுகப்பெறா
தடவரைத்தோட், சக்கரபாணிசார்ங்கவிற்சேவகனே. (௪)

பொன்னைக்கொண்டுரைகன்மீதேநிறமெழவுரைத்தாற்போல்
உன்னைக்கொண்டென்னாவகம்பால்மாற்றின்றியுரைத்துக்கொண்டேன்
உன்னைக்கொண்டென்னுள்வைத்தேனென்னையுமுன்னிலிட்டேன்
என்னப்பாவென்னிருடீகேசாவென்னுயிர்காவலனே. (௫)

உன்னுடையவிக்கிரமமொன்றொழியாமலெல்லாம்
என்னுடையநெஞ்சகம்பாற்சுவர்வழியெழுதிக்கொண்டேன்
மன்னடங்கமழுவலங்கைக்கொண்டவிராமநம்பீ
என்னிடைவந்தெம்பெருமானினியெங்குப்போகின்றதே. (௬)

பருப்பதத்திற்கயல்பொறித்தபாண்டியர்குலபதிபோல்
திருப்பொலிந்தசேவடியென்சென்னியின்மேற்பொறித்தாய்
மருப்பொசித்தாய்மல்லடர்த்தாயென்றென்றுன்வாசகமே
உருப்பொலிந்தநாவினேனையுனக்குரித்தாக்கினையே. (எ)

அனந்தன்பாலுங்கருடன்பாலுமைதுநொய்தாகவைத், தென்
மனந்தனுள்ளேவந்துவைகிவாழச்செய்தாயெம்பிரான்
நினைந்தென்னுள்ளேநின்றுநெக்குக்கண்களசும்பொழுக
நினைந்திருந்தேசிரமந்தீர்ந்தேனேமிநெடியவனே. (அ)

புனிக்கடலுட்பள்ளிகோளைப்பழகவிட், டோடிவந்தென்
மனக்கடலுள்வாழவல்லமாயமணாளநம்பீ
தனிக்கடலேதனிச்சுடரோதனியுலகேயென்றென்று
உனக்கிட்மாயிருக்கவென்னையுனக்குரித்தாக்கினையே. (௯)

தடவரைவாய்மிளிர்ந்துமின்னுந்தவளநெடுங்கொடிப்போல்
சுடரொளியாய்நெஞ்சினுள்ளேதோன்றுமென்சோதிநம்பீ
வடதடமும்வைகுந்தமும்மதிட்டுவராவதியும்
இடவகைகளிழந்திட்டென்பாலிடவகைகொண்டனையே. (௧0)

※ வேயர்தங்கட்குலத்துதித்தவிட்டுசித்தன்மனத்தே
கோயிற்கொண்டகோவலனைக்கொழுங்குளிர்முகில்வண்ணனை
ஆயரேற்றையமரர்கோவையந்தணர்தமமுதத்தினைச்
சாயைபோலப்பாடவல்லார்தாமுமணுக்கர்களே. (௧௧)

பெரியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

சென்னி பறவை எம்மனு கடல் பொன் னுன் பருப் பனந்தன் பனி தடவரை வேயர் மார்கழி.

ஆ திருமொழி - ௪ - க்கு - பாசுரம் - ௪௧.

ஐந்தாம்பத்து - முற்றியது.

---

ஆ பத்து - ரு - க்கு - திருப்பல்லாண்டுகாப்புள்படபாசுரம் - ௪௭௩.

பெரியாழ்வார்திருமொழி முற்றும்.

ஸ்ரீ

    

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

சுரும்பார்குழற்கோதை

சூடிக்கொடுத்தநாய்ச்சியார்திருவாய்மலர்ந்தருளிய

உபநிஷத்ஸாரமாகும்

# திருப்பாவை.

---

## தனியன்.

பராஸரபட்டரருளிச்செய்தது.

𑌨𑍀𑌳𑌾𑌤𑍁𑌙𑍍𑌗𑌸𑍍𑌤𑌨𑌗𑌿𑌰𑌿𑌤𑌟𑍀𑌸𑍁𑌪𑍍𑌤𑌮𑍁𑌦𑍍𑌬𑍋𑌧𑍍𑌯𑌕𑍃𑌷𑍍𑌣𑌂
𑌪𑌾𑌰𑌾𑌰𑍍𑌥𑍍𑌯𑌂𑌸𑍍𑌵𑌂𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌶𑌤𑌶𑌿𑌰𑌸𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑌮𑌧𑍍𑌯𑌾𑌪𑌯𑌨𑍍𑌤𑍀 ।
𑌸𑍍𑌵𑍋𑌚𑍍𑌛𑌿𑌷𑍍𑌟𑌾𑌯𑌾𑌂𑌸𑍍𑌰𑌜𑌿𑌨𑌿𑌗𑌳𑌿𑌤𑌂𑌯𑌾𑌬𑌲𑌾𑌤𑍍𑌕𑍃𑌤𑍍𑌯𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇
𑌗𑍋𑌦𑌾𑌤𑌸𑍍𑌯𑍈𑌨𑌮𑌇𑌦𑌮𑌿𑌦𑌂𑌭𑍂𑌯𑌏𑌵𑌾𑌸𑍍𑌤𑍁𑌭𑍂𑌯𑌃 ॥

நீளாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தமுத்போத்யக்ருஷ்ணம்
பாரார்த்யம்ஸ்வம்ஶ்ருதிஶதஶிரஸ்ஸித்தமத்யாபயந்தீ
ஸ்வோச்சிஷ்டாயாம்ஸ்ரஜிநிகளிதம்யாபலாத்க்ருத்யபுங்க்தே
கோதாதஸ்யைநமஇதமிதம்பூயஏவாஸ்துபூய:

உய்யக்கொண்டாரருளிச்செய்தது.

இருவிகற்பநேரிசைவெண்பா.

அன்னவயற்புதுவையாண்டாளரங்கற்குப்
பன்னுதிருப்பாவைபல்பதிகம்—இன்னிசையால்
பாடிக்கொடுத்தாணற்பாமாலைபூமாலை
சூடிக்கொடுத்தாளைச்சொல்.

சூடிக்கொடுத்தசுடர்க்கொடியேதொல்பாவை
பாடியருளவல்லபல்வளையாய்—நாடிநீ
வேங்கடவற்கென்னைவிதியென்றவிம்மாற்றம்
நாங்கடவாவண்ணமேநல்கு.

Funding: IKS/Tattva Heritage. Digitization: eGangotri.



இயற்றரவிணைக்கொச்சகக்கலிப்பா.

பிலஹரிராகம் - அடதாளம்.

* மார்கழித்திங்கண்மதிநிறைந்தநன்னாளால்
நீராடப்போதுவீர்போதுமினோநேரிழையீர்
சீர்மல்குமாய்ப்பாடிச்செல்வச்சிறுமீர்காள்
கூர்வேற்கொடுந்தொழிலனந்தகோபன்குமரன்
ஏரார்ந்தகண்ணியசோதையிளஞ்சிங்கம்
கார்மேனிச்செங்கட்கதிர்மதியம்போன்முகத்தான்
நாராயணனேநமக்கேபறைதருவான்
பாரோர்புகழப்படிந்தேலோரெம்பாவாய். (க)

பந்துவராளிராகம் - ஆதிதாளம்.

வையத்துவாழ்வீர்காள்நாமுநம்பாவைக்குச்
செய்யுங்கிரிசைகட்கேளீரோ, பாற்கடலுள்
பையத்துயின்றபரமனடிபாடி
நெய்யுண்ணோம்பாலுண்ணோம்நாட்காலேநீராடி
மையிட்டெழுதோமலரிட்டுநாமுடியோம்
செய்யாதனசெய்யோந்தீக்குறளைச்சென்றோதோம்
ஐயமும்பிச்சையுமாந்தனையுங்கைகாட்டி
உய்யுமாறெண்ணியுகந்தேலோரெம்பாவாய். (உ)

பந்துவராளிராகம் - திரிபுடைதாளம்.

* ஓங்கியுலகளந்தவுத்தமன்பேர்பாடி
நாங்கணம்பாவைக்குச்சாத்திநீராடினல்
தீங்கின்றிநாடெல்லாந்திங்கண்மும்மாரிபெய்து
ஓங்குபெருஞ்செந்நெலூடுகயலுகளப்
பூங்குவளைப்போதிற்பொறிவண்டுகண்படுப்பத்
தேங்காதேபுக்கிருந்துசீர்த்தமுலைபற்றி
வாங்கக், குடநிறைக்கும்வள்ளற்பெரும்பசுக்கள்
நீங்காதசெல்வநிறைந்தேலோரெம்பாவாய். (௩)

காம்போதிராகம் - ஆதிதாளம்.

ஆழிமழைக்கண்ணாவொன்றுநீகைகரவேல்
ஆழியுட்புக்குமுகந்துகொடார்த்தேறி
ஊழிமுதல்வனுருவம்போன்மெய்கறுத்துப்
பாழியந்தோளுடைப்பற்பநாபன்கையில்
ஆழிபோன்மின்னிவலம்புரிபோனின்றதிர்ந்து
தாழாதேசார்ங்கமுதைத்தசரமழைபோல்
வாழவுலகினிற்பெய்திடாய், நாங்களும்
மார்கழிநீராடமகிழ்ந்தேலோரெம்பாவாய். (௪)

சூடிக்கொடுத்தநாய்ச்சியாரருளிய

தோடிராகம் - ரூபகதாளம்.

மாயனைமன்னுவடமதுரைமைந்தனைத்
தூயபெருநீர்யமுனைத்துறைவனை
ஆயர்குலத்தினிற்றோன்றுமணிவிளக்கைத்
தாயைக்குடல்விளக்கஞ்செய்ததாமோதரனைத்
தூயோமாய்வந்துநாந்தூமலர்தூவித்தொழுது
வாயினாற்பாடிமனத்தினாற்சிந்திக்கப்
போயபிழையும்புகுதருவானின்றனவும்
தீயினிற்றூசாகுஞ்செப்பேலோரெம்பாவாய். (ரு)

பூபாளராகம் - ஆதிதாளம்.

புள்ளுஞ்சிலம்பினகாண்புள்ளரையன்கோயில்
வெள்ளைவிளிசங்கின்பேரரவங்கேட்டிலையோ
பிள்ளாயெழுந்திராய்பேய்முலைநஞ்சுண்டு
கள்ளச்சகடங்கலக்கழியக்காலோச்சி
வெள்ளத்தரவிற்றுயிலமர்ந்தவித்தினை
உள்ளத்துக்கொண்டுமுனிவர்களும்யோகிகளும்
மெள்ளவெழுந்தரீஇயென்றபேரரவம்
உள்ளம்புகுந்துகுளிர்ந்தேலோரெம்பாவாய். (சா)

பூபாளராகம் - ரூபகதாளம்.

கீசுகீசென்றெங்குமானைச்சாத்தங், கலந்து
பேசினபேச்சரவங்கேட்டிலையோபேய்ப்பெண்ணே
காசும்பிறப்புங்கலகலப்பக்கைபேர்த்து
வாசநறுங்குழலாய்ச்சியர், மத்தினால்
ஓசைப்படுத்ததயிரரவங்கேட்டிலையோ
நாயகப்பெண்பிள்ளாய்நாராயணன்மூர்த்தி
கேசவனைப்பாடவுநீகேட்டேகிடத்தியோ
தேசமுடையாய்திறவேலோரெம்பாவாய். (எ)

பூபாளராகம் - அடதாளம்.

கீழ்வானம்வெள்ளென்றெருமைசிறுவீடு
மேய்வான்பரந்தனகாண்மிக்குள்ளபிள்ளைகளும்
போவான்போகின்றாரைப்போகாமற்காத், துன்னைக்
கூவுவான்வந்துநின்றோம், கோதுகுலமுடைய
பாவாயெழுந்திராய்பாடிப்பறைகொண்டு
மாவாய்ப்பிளந்தானைமல்லரைமாட்டிய
தேவாதிதேவனைச்சென்றுநாஞ்சேவித்தால்
ஆவாவென்றாராய்ந்தருளேலோரெம்பாவாய். (அ)

மோஹனராகம் - ஆதிதாளம்.

தூமணிமாடத்துச்சுற்றும்விளக்கெரியத்
தூபங்கமழத்துயிலணைமேற்கண்வளரும்
மாமான்மகளேமணிக்கதவந்தாள்திறவாய்
மாமீரவளையெழுப்பீரோ, வுன்மகள்தான்
ஊமையோவன்றிச்செவிடோவனந்தலோ
ஏமப்பெருந்துயின்மந்திரப்பட்டாளோ
மாமாயன்மாதவன்வைகுந்தனென்றென்று
நாமம்பலவுநவின்றேலோரெம்பாவாய். (௯)

அசாவேரிராகம் - ஆதிதாளம்.

நோற்றுச்சுவர்க்கம்புகுகின்றவம்மனாய்
மாற்றமுந்தாராரோவாசறிறவாதார்
நாற்றத்துழாய்முடிநாராயண, னம்மால்
போற்றப்பறைதரும்புண்ணியனால், பண்டொருநாள்
கூற்றத்தின்வாய்வீழ்ந்தகும்பகரணனும்
தோற்றுமுனக்கேபெருந்துயிறான்றந்தானோ
ஆற்றவனந்தலுடையாயருங்கலமே
தேற்றமாய்வந்துதிறவேலோரெம்பாவாய். (க0)

ஸஹானாராகம் - திரிபுடைதாளம்.

கற்றுக்கறவைக்கணங்கள்பலகறந்து
செற்றார்திறலழியச்சென்றுசெருச்செய்யும்
குற்றமொன்றில்லாதகோவலர்தம்பொற்கொடியே
புற்றரவல்குற்புனமயிலேபோதராய்ச்
சுற்றத்துத்தோழிமாரெல்லாரும்வந்து, நின்
முற்றம்புகுந்துமுகில்வண்ணன்பேர்பாடச்
சிற்றாதேபேசாதேசெல்வப்பெண்டாட்டி, நீ
எற்றுக்குறங்கும்பொருளேலோரெம்பாவாய். (கக)

கேதாரகௌளராகம் - ஆதிதாளம்.

கனைத்திளங்கற்றெருமைகன்றுக்கிரங்கி
நினைத்துமுலைவழியேநின்றுபால்சோர
நனைத்தில்லஞ்சேறாக்குநற்செல்வன்றங்காய்
பனித்தலைவீழநின்வாசற்கடைபற்றிச்
சினத்தினாற்றென்னிலங்கைக்கோமானைச்செற்ற
மனத்துக்கினியானைப்பாடவுநீவாய்திறவாய்
இனித்தானெழுந்திராயீதென்னபேருறக்கம்
அனைத்தில்லத்தாருமறிந்தேலோரெம்பாவாய். (கஉ)

### அட்டாணாராகம் - ரூபகதாளம்.

புள்ளின்வாய்கீண்டானைப்பொல்லாவரக்கனைக்
கிள்ளிக்களைந்தானைக்கீர்த்திமைபாடிப்போய்
பிள்ளைகளெல்லாரும்பாவைக்களம்புக்கார்
வெள்ளியெழுந்துவியாழமுறங்கிற்றுப்
புள்ளுஞ்சிலம்பினகாண்போதரிக்கண்ணினாய்
குள்ளக்குளிரக்குடைந்துநீராடாதே
பள்ளிக்கிடத்தியோபாவாய்நீநன்னாளால்
கள்ளந்தவிர்ந்துகலந்தேலோரெம்பாவாய். (கங)

### ஸாரங்கராகம் - ஆதிதாளம்.

உங்கள்புழைக்கடைத்தோட்டத்துவாவியுள்
செங்கழுநீர்வாய்நெகிழ்ந்தாம்பல்வாய்கூம்பினகாண்
செங்கற்பொடிக்கூறைவெண்பற்றவத்தவர்
தங்கள்திருக்கோயிற்சங்கிடுவான்போதந்தார்
எங்களைமுன்னமெழுப்புவான்வாய்பேசும்
நங்காயெழுந்திராய்நாணாதாய்நாவுடையாய்
சங்கொடுசக்கரமேந்துந்தடக்கையன்
பங்கயக்கண்ணானைப்பாடேலோரெம்பாவாய். (கச)

### சௌராஷ்ட்ரராகம் - அடதாளம்.

எல்லேயிளங்கிளியேயின்னமுறங்குதியோ
சில்லென்றழையேன்மின்நங்கைமீர்போதருகின்றேன்
வல்லையுன்கட்டுரைகள்பண்டேயுன்வாயறிதும்
வல்லீர்கணீங்களேநானேதானாயிடுக
ஒல்லைநீபோதாயுனக்கென்னவேறுடையை
எல்லாரும்போந்தாரோபோந்தார்போந்தெண்ணிக்கொள்
வல்லானைக்கொன்றானைமாற்றாரைமாற்றழிக்க
வல்லானை, மாயனைப்பாடேலோரெம்பாவாய். (கரு)

### யமுனகலியாணிராகம் - ஆதிதாளம்.

* நாயகனாய்நின்றநந்தகோபனுடைய
கோயில்காப்பானே, கொடித்தோன்றுந்தோரண
வாசல்காப்பானே, மணிக்கதவந்தாள்திறவாய்
ஆயர்சிறுமியரோமுக், கறைபறை
மாயன்மணிவண்ணனென்னலேவாய்நேர்ந்தான்
தூயோமாய்வந்தோந்துயிலெழபாடுவான்
வாயான்முன்னமுன்னமாற்றாதேயம்மா, நீ
நேசநிலைக்கதவநீக்கேலோரெம்பாவாய். (கசு)

### யமுனாகலியாணிராகம் - ரூபகதாளம்.

அம்பரமேதண்ணீரேசோறேயறஞ்செய்யும்
எம்பெருமானந்தகோபாலாவெழுந்திராய்
கொம்பனார்க்கெல்லாங்கொழுந்தேகுலவிளக்கே
எம்பெருமாட்டியசோதாயறிவுறாய்
அம்பரமூடறுத்தோங்கியுலகளந்த
உம்பர்கோமானேயுறங்காதெழுந்திராய்
செம்பொற்கழலடிச்செல்வாபலதேவா
உம்பியுநீயுமுறங்கேலோரெம்பாவாய். (கஎ)

### சாவேரிராகம் - ஆதிதாளம்.

உந்துமதகளிற்றனோடாததோள்வலியன்
நந்தகோபாலன்மருமகளேநப்பின்னாய்
கந்தங்கமழுங்குழலீகடைதிறவாய்
வந்தெங்குங்கோழியழைத்தனகாண், மாதவிப்
பந்தன்மேற்பல்கால்குயிலினங்கள்கூவினகாண்
பந்தார்விரலீயுன்மைத்துநன்பேர்பாடச்
செந்தாமரைக்கையாற்சீரார்வளையொலிப்ப
வந்துதிறவாய்மகிழ்ந்தேலோரெம்பாவாய். (கஅ)

### ஸ்ரீராகம் - ஆதிதாளம்.

குத்துவிளக்கெரியக்கோட்டுக்காற்கட்டின்மேல்
மெத்தென்றபஞ்சசயனத்தின்மேலேறிக்
கொத்தலர்பூங்குழனப்பின்னைகொங்கைமேல்
வைத்துக்கிடந்தமலர்மார்பாவாய்திறவாய்
மைத்தடங்கண்ணினாய்நீயுன்மணாளனை
எத்தனைபோதுந்துயிலெழவொட்டாய்காண்
எத்தனையேலும்பிரிவாற்றகில்லாயால்
தத்துவமன்றுதகவேலோரெம்பாவாய். (ககூ)

### தேசியராகம் - ஆதிதாளம்.

முப்பத்துமூவரமரர்க்குமுன்சென்று
கப்பந்தவிர்க்குங்கலியேதுயிலெழாய்
செப்பமுடையாய்திறலுடையாய், செற்றார்க்கு
வெப்பங்கொடுக்கும்விமலாதுயிலெழாய்
செப்பன்னமென்முலைச்செவ்வாய்ச்சிறுமருங்குல்
நப்பின்னைநங்காய்திருவேதுயிலெழாய்
உக்கமுந்தட்டொளியுந்தந்துன்மணாளனை
இப்போதேயெம்மைநீராட்டேலோரெம்பாவாய். (உ0)

அபரூபராகம் - ஆதிதாளம்.

ஏற்றகலங்களெதிர்பொங்கிமீதளிப்ப
மாற்றாதேபால்சொரியும்வள்ளற்பெரும்பசுக்கள்
ஆற்றப்படைத்தான்மகனேயறிவுறாய்
ஊற்றமுடையாய்பெரியா, யுலகினில்
தோற்றமாய்நின்றசுடரோதுயிலெழாய்
மாற்றாருனக்குவலிதுலைந்துன்வாசற்கண்
ஆற்றாதுவந்துன்னடிபணியுமாபோலே
போற்றியாம்வந்தோம்புகழ்ந்தேலோரெம்பாவாய். (உக)

பைரவிராகம் - ஆதிதாளம்.

அங்கண்மாஞாலத்தரச, ரபிமான
பங்கமாய்வந்துநின்பள்ளிக்கட்டிற்கீழே
சங்கமிருப்பார்போல்வந்துதலைப்பெய்தோம்
கிண்கிணிவாய்ச்செய்ததாமரைப்பூப்போலே
செங்கண்சிறுச்சிறிதேயெம்மேல்விழியாவோ
திங்களுமாதித்தியனுமெழுந்தாற்போல்
அங்கணிரண்டுங்கொண்டெங்கண்மேனோக்குதியேல்
எங்கண்மேற்சாபமிழந்தேலோரெம்பாவாய். (உஉ)

அட்டாணராகம் - ஆதிதாளம்.

மாரிமலைமுழஞ்சின்மன்னிக்கிடந்துறங்கும்
சீரியசிங்கமறிவுற்றுத்தீவிழித்து
வேரிமயிர்பொங்கவெப்பாடும்பேர்ந்துதறி
மூரிநிமிர்ந்துமுழங்கிப்புறப்பட்டுப்
போதருமாபோலேநீபூவைப்பூவண்ணா, வுன்
கோயினின்றிங்ஙனேபோந்தருளிக், கோப்புடைய
சீரியசிங்காசனத்திருந்து, யாம்வந்த
காரியமாராய்ந்தருளேலோரெம்பாவாய். (உங)

பியாகடைராகம் - திரிபுடைதாளம்.

அன்றிவ்வுலகமளந்தாயடிபோற்றி
சென்றங்குத்தென்னிலங்கைசெற்றாய்திறல்போற்றி
பொன்றச்சகடமுதைத்தாய்புகழ்போற்றி
கன்றுகுணிலாவெறிந்தாய்கழல்போற்றி
குன்றுகுடையாயெடுத்தாய்குணம்போற்றி
வென்றுபகைகெடுக்குநின்கையில்வேல்போற்றி
என்றென்றுன்சேவகமேயேத்திப்பறைகொள்வான்
இன்றுயாம்வந்தோமிரங்கேலோரெம்பாவாய். (உச)

சங்கராபரணராகம் - ஆதிதாளம்.

ஒருத்திமகனுய்ப்பிறந், தோரிரவில்
ஒருத்திமகனுயொளித்துவளரத்
தருக்கிலானுகித்தான்றீங்குநினைந்த
கருத்தைப்பிழைப்பித்துக்கஞ்சன்வயிற்றில்
நெருப்பென்னநின்றநெடுமாலே, யுன்னை
அருத்தித்துவந்தோம்பறைதருதியாகில்
திருத்தக்கசெல்வமுஞ்சேவகமும்யாம்பாடி
வருத்தமுந்தீர்ந்துமகிழ்ந்தேலோரெம்பாவாய். (உரு)

ஆரபிராகம் - ஆதிதாளம்.

மாலேமணிவண்ணுமார்கழிநீராடுவான்
மேலையார்செய்வனகள்வேண்டுவனகேட்டியேல்
ஞாலத்தையெல்லாநடுங்கமுரல்வன
பாலன்னவண்ணத்துன்பாஞ்சசன்னியமே
போல்வனசங்கங்கள்போய்ப்பாடுடையனவே
சாலப்பெரும்பறையேபல்லாண்டிசைப்பாரே
கோலவிளக்கேகொடியேவிதானமே
ஆலினிலையாயருளேலோரெம்பாவாய். (உசு)

ஆநந்தபைரவிராகம் - ஆதிதாளம்.

* கூடாரைவெல்லுஞ்சீர்கோவிந்தா, வுன்றன்னைப்
பாடிப்பறைகொண்டுயாம்பெறுசம்மானம்
நாடுபுகழும்பரிசினுனன்றாகச்
சூடகமேதோள்வளையேதோடேசெவிப்பூவே
பாடகமேயென்றனையபல்கலனுமியாமணிவோம்
ஆடையுடுப்போமதன்பின்னேபாற்சோறு
மூடநெய்பெய்துமுழங்கைவழிவாரக்
கூடியிருந்துகுளிர்ந்தேலோரெம்பாவாய். (உஎ)

தன்யாசிராகம் - ஆதிதாளம்.

* கறவைகள்பின்சென்றுகானஞ்சேர்ந்துண்போம்
அறிவொன்றுமில்லாதவாய்க்குலத், துன்றன்னைப்
பிறவிபெறுந்தனைபுண்ணியநாமுடையோம்
குறைவொன்றுமில்லாதகோவிந்தா, வுன்றன்னோ
டுறவேனமக்கிங்கொழிக்கவொழியாது
அறியாதபிள்ளைகளோமன்பினு, லுன்றன்னைச்
சிறுபேரழைத்தனவுஞ்சீறியருளாதே
இறைவாநீதாராய்பறையேலோரெம்பாவாய் (உகூ)

மத்தநன்னறுமலர்முருக்கமலர்கொண்டு
முப்போதுமுன்னடிவணங்கித்
தத்துவமிலியென்றுநெஞ்செரிந்து
வாசகத்தழித்துன்னைவைதிடாமே
கொத்தலர்பூங்கணைதொடுத்துக்கொண்டு
கோவிந்தனென்பதோர்பேரெழுதி
வித்தகன்வேங்கடவாணனென்னும்
விளக்கினிற்புகவென்னைவிதிக்கிற்றியே. (௩)

சுவரிற்புராணநின்பேரெழுதிச்
சுறவநற்கொடிக்களுந்துரங்கங்களும்
கவரிப்பிணாக்களுங்கருப்புவில்லுங்
காட்டித்தந்தேன்கண்டாய்காமதேவா
அவரைப்பிராயந்தொடங்கியென்று
மாதரித்தெழுந்தவென்றடமுலைகள்
துவரைப்பிரானுக்கேசங்கற்பித்துத்
தொழுதுவைத்தேனொல்லைவிதிக்கிற்றியே. (௪)

வானிடைவாழுமவ்வானவர்க்கு
மறையவர்வேள்வியில்வகுத்தவவி
கானிடைத்திரிவதோர்நரிபுகுந்து
கடப்பதுமோப்பதுஞ்செய்வதொப்ப
ஊனுடையாழிசங்குத்தமற்கென்
றுன்னித்தெழுந்தவென்றடமுலைகள்
மானிடவர்க்கென்றுபேச்சுப்படில்
வாழகில்லேன்கண்டாய்மன்மதனே. (௫)

உருவுடையாரிளையார்களல்லா
ரோத்துவல்லார்களைக்கொண்டு, வைகல்
தெருவிடையெதிர்கொண்டுபங்குனிநாள்
திருந்தவேநோற்கின்றேன்காமதேவா
கருவுடைமுகில்வண்ணன்காயாவண்ணன்
கருவிளைபோல்வண்ணன்கமலவண்ணத்
திருவுடைமுகத்தினிற்றிருக்கண்களால்
திருந்தவேநோக்கெனக்கருள்கண்டாய். (௬)

காயுடைநெல்லொடுகரும்பமைத்துக்
கட்டியரிசியவலமைத்து
வாயுடைமறையவர்மந்திரத்தால்
மன்மதனேயுன்னைவணங்குகின்றேன்
தேசமுன்னளந்தவன்திரிவிக்கிரமன்
திருக்கைகளாலென்னைத்தீண்டும்வண்ணம்
சாயுடைவயிறுமென்றடமுலையுந்
தரணியிற்றலைப்புகழ்தரக்கிற்றியே. (௭)

மாசுடையுடம்பொடுதலையுதறி
வாய்ப்புறம்வெளுத்தொருபோதுமுண்டு
தேசுடைத்திறலுடைக்காமதேவா
நோற்கின்றநோன்பினைக்குறிக்கொள்கண்டாய்
பேசுவதொன்றுண்டிங்கெம்பெருமான்
பெண்மையைத்தலையுடைத்தாக்கும்வண்ணம்
கேசவனம்பியைக்கால்பிடிப்பா
ளென்னுமிப்பேறெனக்கருள்கண்டாய். (அ)

தொழுதுமுப்போதுமுன்னடிவணங்கித்
தூமலர்தூய்த்தொழுதேத்துகின்றேன்
பழுதின்றிப்பாற்கடல்வண்ணனுக்கே
பணிசெய்துவாழப்பெறும்விடி, லுன்
அழுதழுதலமர்ந்தம்மாவழங்க
வாற்றவுமதுவுனக்குறைக்குங்கண்டாய்
உழுவதோரெருத்தினைநுகங்கொடுபாய்ந்
தூட்டமின்றித்துரந்தாலொக்குமே. (௯)

* கருப்புவில்மலர்க்கணைக்காமவேளைக்
கழலிணைபணிந்தங்கோர்கரியலற
மருப்பினையொசித்துப்புள்வாய்பிளந்த
மணிவண்ணற்கென்னைவகுத்திடென்று
பொருப்பன்னமாடம்பொலிந்துதோன்றும்
புதுவையர்கோன்விட்டுசித்தன்கோதை
விருப்புடையின்றமிழ்மாலைவல்லார்
விண்ணவர்கோனடிநண்ணுவரே. (௧0)

ஆண்டாள்திருவடிகளேஶரணம்.

ஜீயர் திருவடிகளேஶரணம்.

தை வெள்ளை மத்தச் சுவர் வா னுருக் காய் மாசு தொழுது கருப்பு நாமம்.

---

## உ - வது. நாமமாயிரம்.

---

சிறுமியர்மாயனைத்தஞ்சிற்றில்சிதையேலெனல்.

கலிவிருத்தம்.

யமுனாகலியாணிராகம் - திரிபுடைதாளம்.

* நாமமாயிரமேத்தநின்றநாராயணாநரனே, யுன்னை
மாமிதன்மகனாகப்பெற்றாலெமக்குவாதைதவிருமே
காமன்போதருகாலமென்றுபங்குனிநாட்கடைபாரித்தோம்
தீமைசெய்யுஞ்சிரீதராவெங்கள்சிற்றில்வந்துசிதையேலே. (௧)

இன்றுமுற்றுமுதுகுநோவவிருந்திழைத்தவிச்சிற்றிலை
நன்றுங்கண்ணுறநோக்கிநாங்களுமார்வந்தன்னைத்தணிகிடாய்
அன்றுபாலகனாகியாலிலைமேற்றுயின்றவெம்மாதியாய்
என்றுமுன்றனக்கெங்கண்மேலிரக்கமெழாததெம்பாவமே. (௨)

குண்டுநீருறைகோளரீமதயானைகோள்விடுத்தா, யுன்னைக்
கண்டுமாலுறுவோங்களைக்கடைக்கண்களாலிட்டுவாதியேல்
வண்டனுண்மணற்றெள்ளியாம்வளைக்கைகளாற்சிரமப்பட்டோம்
தெண்டிரைக்கடற்பள்ளியாயெங்கள்சிற்றில்வந்துசிதையேலே. (௩)

பெய்யுமாமுகில்போல்வண்ணாவுன்றன்பேச்சுஞ்செய்கையு, மெங்க
மையலேற்றிமயக்கவுன்முகமாயமந்திரந்தான்கொலோ [ளை
நொய்யர்பிள்ளைகளென்பதற்குன்னைநோவநாங்களுரைக்கிலோம்
செய்யதாமரைக்கண்ணினாயெங்கள்சிற்றில்வந்துசிதையேலே. (௪)

வெள்ளைநுண்மணற்கொண்டுசிற்றில்விசித்திரப்பட, வீதிவாய்த்
தெள்ளிநாங்களிழைத்தகோலமழித்தியாகிலு, முன்றன்மேல்
உள்ளமோடியுருகலல்லாலுரோடமொன்றுமிலோங்கண்டாய்
கள்ளமாதவாகேசவாவுன்முகத்தனகண்களல்லவே. (௫)

முற்றிலாதபிள்ளைகளோமுலைபோந்திலாதோமை, நாடொறும்
சிற்றில்மேலிட்டுக்கொண்டுநீசிறுதுண்டுதிண்ணெனநாமது,
கற்றிலோங், கடலையடைத்தரக்கர்குலங்களைமுற்றவும்
செற், றிலங்கையைப்பூசலாக்கியசேவகாவெம்மைவாதியேல். (௬)

பேதநன்கறிவார்களோடிவைபேசினாற்பெரிதென்சுவை
யாதுமொன்றறியாதபிள்ளைகளோமைநீநலிந்தென்பயன்
ஓதமாகடல்வண்ணாவுன்மணவாட்டிமாரொடுசூழறும்
சேதுபந்தந்திருத்தினாயெங்கள்சிற்றில்வந்துசிதையேலே. (௭)

வட்டவாய்ச்சிறுதூதையோடுசிறுசுளகுமணலுங்கொண்டு
இட்டமாவிளையாடுவோங்களைச்சிற்றிலீடழித்தென்பயன்
தொட்டுதைத்துநலியேல்கண்டாய்சுடர்ச்சக்கரங்கையிலேந்தினாய்
கட்டியுங்கயிற்றாலின்னாமையறிதியேகடல்வண்ணனே. (௮)

முற்றத்தூடுபுகுந்துநின்முகங்காட்டிப்புன்முறுவல்செய்து
சிற்றிலோடெங்கள்சிந்தையுஞ்சிதைக்கக்கடவையோகோவிந்தா
முற்றமண்ணிடந்தாவிவிண்ணுறநீண்டளந்துகொண்டா, யெம்மைப்
பற்றிமெய்ப்பிணக்கிட்டக்காலிந்தப்பக்கநின்றவரென்சொலார். (௯)

* சீதைவாயமுதமுண்டாயெங்கள்சிற்றில்நீசிதையேலென்று
வீதிவாய்விளையாடுமாயர்சிறுமியர்மழலைச்சொல்லை
வேதவாய்த்தொழிலார்கள்வாழ்வில்லிபுத்தூர்மன்விட்டுசித்தன்றன்
கோதைவாய்த்தமிழ்வல்லவர்குறைவின்றிவைகுந்தஞ்சேர்வரோ (௧௦)

ஆண்டாள்திருவடிகளேஶரணம்.

நாமமின்றுகுண்டுபெய்வெள்ளைமுற்றில்பேதைவட்டமுற்றச்சீதைகோழி.

ஆ. திருமொழி - ௨ - க்கு - பாசுரம் - ௨௦.

## ௩ - வது. கோழியழைப்பதன்.

### கன்னியரோடுகண்ணன் விளையாடல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

செஞ்சுருட்டிராகம் - அடதாளம்.

கோழியழைப்பதன்முன்னங்குடைந்துநீராடுவான்போந்தோம்
ஆழியஞ்செல்வனெழுந்தானரவணைமேற்பள்ளிகொண்டாய்
ஏழமையாற்றவும்பட்டோமினியென்றும்பொய்கைக்குவாரோம்
தோழியுநாமுந்தொழுதோந்துகிலைப்பணித்தருளாயே. (௧)

இதுவென்புகுந்ததிங்கந்தோவிப்பொய்கைக்கெவ்வாறுவந்தாய்
மதுவின்றுழாய்முடிமாலேமாயனேயெங்களமுதே
விதியின்மையாலதுமாட்டோம்வித்தகப்பிள்ளாய்விளையேல்
குதிகொண்டரவினடித்தாய்குருந்திடைக்கூறைபணியாய். (௨)

எல்லேயீதென்னவெளிமையெம்மன்னைமார்காணிலொட்டார்
பொல்லாங்கீதென்றுகருதாய்பூங்குருந்தேறியிருத்தி
வில்லாலிலங்கையழித்தாய்நீவேண்டியதெல்லாந்தருவோம்
பல்லாருங்காணமேபோவோம்பட்டைப்பணித்தருளாயே. (௩)

பரக்கவிழித்தெங்குநோக்கிப்பலர்குடைந்தாடுஞ்சுனையில்
அரக்கநில்லாக்கண்ணநீர்களலமருகின்றவாபாராய்
இரக்கமேயொன்றுமிலாதாயிலங்கையழித்தபிரானே
குரக்கரசாவதறிந்தோங்குருந்திடைக்கூறைபணியாய். (௪)

காலைக்கதுவிடுகின்றகயலொடுவாளைவிரவி
வேலைப்பிடித்தன்னைமார்களோட்டிலென்னவிளையாட்டோ
கோலச்சிற்றாடைபலவுங்கொண்டுநீயேறியிராதே
கோலங்கரியபிரானேகுருந்திடைக்கூறைபணியாய். (௫)

தடத்தவிழ்தாமரைப்பொய்கைத்தாட்களெங்காலைக்கதுவ
விடத்தேளெறிந்தாலேபோலவேதனையாற்றவும்பட்டோம்
குடத்தையெடுத்தேறவிட்டுக்கூத்தாடவல்லவெங்கோவே
படிற்றையெல்லாந்தவிர்ந்தெங்கள்பட்டைப்பணித்தருளாயே. (௬)

நீரிலேநின்றயர்க்கின்றோம்நீதியல்லாதனசெய்தாய்
ஊரகஞ்சாலவுஞ்சேய்த்தாலூழியெல்லாமுணர்வானே
ஆர்வமுனக்கேயுடையோமம்மனைமார்காணிலொட்டார்
போரவிடாயெங்கள்பட்டைப்பூங்குருந்தேறியிராதே. (௭)

மாமிமார்மக்களேயல்லோமற்றுமிங்கெல்லாரும்போந்தார்
தூமலர்க்கண்கள்வளரத்தொல்லையிராத்துயில்வானே
சேமமேலன்றிதுசாலச்சிக்கெனநாமிதுசொன்னோம்
கோமளவாயர்கொழுந்தேகுருந்திடைக்கூறைபணியாய். (௮)

கஞ்சன்வலைவைத்தவன்றுகாரிருளெல்லிற்பிழைத்து
நெஞ்சுதுக்கஞ்செய்யப்போந்தாய்நின்றவிக்கன்னியரோமை
அஞ்சவுரைப்பாளசோதையாணுடைவிட்டிட்டிருக்கும்
வஞ்சகப்பேய்ச்சிபாலுண்டமசிமையிலீகூறைதாராய். (௯)

* கன்னியரோடெங்கணம்பிகரியபிரான்விளையாட்டைப்
பொன்னியல்மாடங்கள்சூழ்ந்தபுதுவையர்கோன்பட்டன்கோதை
இன்னிசையாற்சொன்னமாலையீரைந்தும்வல்லவர்தாம்போய்
மன்னியமாதவனோடுவைகுந்தம்புக்கிருப்பாரே. (௧0)

ஆண்டாள்திருவடிகளேஶரணம்.
ஜீயர்திருவடிகளேஶரணம்.
கோழியிதுபெல்லேபரக்கக்காலேதடத்தநீர்மாமிகஞ்சன்கன்னிதெள்ளியார்.
ஆ திருமொழி - ௩ - இ - பாசுரம் - ௩0.

## ௪ - வது. தெள்ளியார்பலர்.

கூடல் குறிப்பு.
வஞ்சிவிருத்தம்.
கேதாரராகம் - அடதாளம்.

* தெள்ளியார்பலர்கைதொழுந்தேவனார்
வள்ளல்மாலிருஞ்சோலைமணாளனார்
பள்ளிகொள்ளுமிடத்தடிகொட்டிடக்
கொள்ளுமாகில்நீகூடிடுகூடலே. (௧)

காட்டில்வேங்கடங்கண்ணபுரநகர்
வாட்டமின்றிமகிழ்ந்துறைவாமனன்
ஓட்டராவந்தென்கைப்பற்றித், தன்னொடுங்
கூட்டுமாகில்நீகூடிடுகூடலே. (௨)

பூமகன்புகழ்வானவர்போற்றுதற்
காமக, னணிவாணுதற்றேவகி
மாமகன், மிகுசீர்வசுதேவர்தம்
கோமகன்வரிற்கூடிடுகூடலே. (௩)

ஆய்ச்சிமார்களுமாயருமஞ்சிடப்
பூத்தநீள்கடம்பேறிப்புகப்பாய்ந்து
வாய்த்தகாளியன்மேல்நடமாடிய
கூத்தனார்வரிற்கூடிடுகூடலே. (௪)

மாடமாளிகைசூழ்மதுரைப்பதி
நாடி, நந்தெருவினடுவேவந்திட்டு
ஓடைமாமதயானைபுதைத்தவன்
கூடுமாகில்நீகூடிடுகூடலே. (௫)

அற்றவன்மருதமுறியநடை
கற்றவன், கஞ்சனைவஞ்சனையினில்
செற்றவன், திகழுமதுரைப்பதிக்
கொற்றவன்வரிற்கூடிடுகூடலே. (௬)

அன்றின்னாதனசெய்சிசுபாலனும்
நின்றநீண்மருதுமெருதும்புள்ளும்
வென்றிவேல்விறற்கஞ்சனும்வீழ, முன்
கொன்றவன்வரிற்கூடிடுகூடலே. (௭)

ஆவலன்புடையார்தம்மனத்தன்றி
மேவலன், விரைசூழ்துவராபதிக்
காவலன், கன்றுமேய்த்துவிளையாடும்
கோவலன்வரிற்கூடிடுகூடலே. (௮)

கொண்டகோலக்குறளுருவாய்ச்சென்று
பண்டுமாவலிதன்பெருவேள்வியில்
அண்டமுநிலனுமடியொன்றினால்
கொண்டவன்வரிற்கூடிடுகூடலே. (௯)

பழகுநான்மறையின்பொருளாய், மதம்
ஒழுகுவாரணமுய்யவளித்தவெம்
மழகனா, ராணியாய்ச்சியர்சிந்தையுள்
குழகனார்வரிற்கூடிடுகூடலே. (௧௦)

* ஊடல்கூடலுணர்தல்புணர்தலை
நீடுநின்றுநிறைபுகழாய்ச்சியர்
கூடலைக்குழற்கோதைமுற்கூறிய
பாடல்பத்தும்வல்லார்க்கில்லைபாவமே. (௧௧)

ஆண்டாள்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

தெள்ளிகாட்டில்பூமகனுய்ச்சிமாடமற்றன்றிஆவல்கொண்ட பழகூடல்மன்னு.
ஆ திருமொழி - ௪ - க்கு - பாசுரம் - ௪௧.

---

## ரு - வது. மன்னுபெரும்புகழ்.

### குயிற்பத்து.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆநந்தபைரவிராகம் - ஆதிதாளம்.

* மன்னுபெரும்புகழ்மாதவன்மாமணிவண்ணன்மணிமுடிமைந்தன்
தன்னையுகந்ததுகாரணமாகவென்சங்கிழக்கும்வழக்குண்டே
புன்னைகுருக்கத்திஞாழற்செருந்திப்பொதும்பினில்வாழுங்குயிலே
பன்னியெப்போதுமிருந்துவிரைந்தென்பவளவாயன்வரக்கூவாய். (க)

வெள்ளைவிளிசங்கிடங்கையிற்கொண்டவிமலனெனக்குருக்காட்டான்
உள்ளம்புகுந்தென்னைநைவித்துநாளுமுயிர்ப்பெய்துகூத்தாட்டுக்காணும்
கள்ளவிழ்சண்பகப்பூமலர்கோதிக்களித்திசைபாடுங்குயிலே
மெள்ளவிருந்துமிழற்றிமிழற்றாதென்வேங்கடவன்வரக்கூவாய். (௨)

மாதலிதேர்முன்புகோல்கொள்ளமாயனிராவணன்மேற், சரமாரி
தாய்தலையற்றற்றுவீழத்தொடுத்ததலைவன்வரவெங்குங்காணேன்
போதலர்காவிற்புதுமணநாறப்பொறிவண்டின்காமரங்கேட், டுன்
காதலியோடுடன்வாழ்குயிலேயென்கருமாணிக்கம்வரக்கூவாய். (௩)

என்புருகியினவேல்நெடுங்கண்களிமைபொருந்தாபலநாளும்
துன்பக்கடற்புக்குவைகுந்தனென்பதோர்தோணிபெறாதுழல்கின்றேன்
அன்புடையாரைப்பிரிவுறுநோயதுநீயுமறிதிகுயிலே
பொன்புரைமேனிக்கருளக்கொடியுடைப்புண்ணியனைவரக்கூவாய்.

மென்னடையன்னம்பரந்துவிளையாடும்வில்லிபுத்தூருறைவான்றன்
பொன்னடிகாண்பதோராசையினாலென்பொருகயற்கண்ணிணைதுஞ்சா
இன்னடிசிலொடுபாலமுதூட்டியெடுத்தவென்கோலக்கிளியை
உன்னொடுதோழமைகொள்வன்குயிலேயுலகளந்தான்வரக்கூவாய்.

எத்திசையுமமரர்பணிந்தேத்துமிருடீகேசன்வலிசெய்ய
முத்தன்னவெண்முறுவற்செய்யவாயுமுலையுமழகழிந்தேனான்
கொத்தலர்காவில்மணித்தடங்கண்படைகொள்ளுமிளங்குயிலே,யென்
தத்துவனைவரக்கூவிற்றியாகிற்றலையல்லாற்கைம்மாறிலேனே. (௬)

பொங்கியபாற்கடற்பள்ளிகொள்வானைப்புணர்வதோராசையினா, லென்
கொங்கைகிளர்ந்துகுமைத்துக்குதுகலித்தாவியையாகுலஞ்செய்யும்
அங்குயிலே,யுனக்கென்னமறைந்துறைவாழியுஞ்சங்குமொண்டண்டும்
தங்கியகையவனைவரக்கூவில்நீசாலத்தருமம்பெறுதி. (௭)

சார்ங்கம்வளையவலிக்குந்தடக்கைச்சதுரன்பொருத்தமுடையன்
நாங்களெம்மிலிருந்தொட்டியகச்சங்கநானுமவனுமறிதும்
தேங்கனிமாம்பொழிற்செந்தளிர்கோதுஞ்சிறுகுயிலே, திருமாலை
ஆங்குவிரைந்தொல்லைக்கூவிற்றியாகிலவனைநான்செய்வனகாணே. ()

பைங்கிளிவண்ணன்சிரீதரனென்பதோர்பாசத்தகப்பட்டிருந்தேன்
பொங்கொளிவண்டிரைக்கும்பொழில்வாழ்குயிலேகுறிக்கொண்டிதுநீகேள்
சங்கொடுசக்கரத்தான்வரக்கூவுதல்பொன்வளைகொண்டுதருதல்
இங்குள்ளகாவினில்வாழக்கருதிலிரண்டத்தொன்றேல்திண்ணம்வேண்டும்.

அன்றுலகமளந்தானையுகந்தடிமைக்கணவன்வலிசெய்யத்
தென்றலுந்திங்களுமூடறுத்தென்னைநலியுமுறைமையறியேன்
என்றுமிக்காவிலிருந்திருந்தென்னைத்ததர்த்தாதேநீயுங்குயிலே
இன்றுநாராயணனைவரக்கூவாயேலிங்குத்துநின்றுந்துரப்பன். (௧௰)

* விண்ணுறநீண்டடிதாவியமைந்தனைவேற்கண்மடந்தைவிரும்பிக்
கண்ணுறவென்கடல்வண்ணனைக்கூவுகருங்குயிலேயென்றமாற்றம்
பண்ணுறுநான்மறையோர்புதுவைமன்னன்பட்டர்பிரான்கோதைசொன்ன
நண்ணுறுவாசகமாலைவல்லார்நமோநாராயணாயவென்பாரே. (௧௧)

ஆண்டாள்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

மன்றுவெள்ளைமாதவிளன்புமென்னடை எத்திசைபொங்கியசார்ங்கம்பை ங்கிளி அன்றுவிண்வாரணம்.

ஆ திருமொழி - ௫ - க்கு - பாசுரம் - ௫௨.

---

## ௬ - வது. வாரணமாயிரம்.

மாயவன்றன்னை மணஞ்செயக்கண்ட
நாயகற்கனவைத்தோழிக்குரைத்தல்.

கலிவிருத்தம்.

கலியாணிராகம் - ரூபகதாளம்.

* வாரணமாயிரஞ்சூழவலஞ்செய்து
நாரணனம்பிநடக்கின்றானென்றெதிர்
பூரணபொற்குடம்வைத்துப்புறமெங்கும்
தோரணநாட்டக்கனாக்கண்டேன்றோழீநான். (௧)

நாளைவதுவைமணமென்றுநாளிட்டுப்
பாளைகமுகுபரிசுடைப்பந்தற்கீழ்
கோளரிமாதவன்கோவிந்தனென்பானோர்
காளைபுகுதக்கனாக்கண்டேன்றோழீநான். (௨)

இந்திரனுள்ளிட்டதேவர்குழாமெல்லாம்
வந்திருந்தென்னைமகட்பேசிமந்திரித்து
மந்திரக்கோடியுடுத்திமணமாலை
அந்தரிசூட்டக்கனாக்கண்டேன்றோழீநான். (௩)

நாற்றிசைத்தீர்த்தங்கொணர்ந்துநனிநல்கிப்
பார்ப்பனச்சிட்டர்கள் * பல்லாண்டெடுத்தேத்தி
பூப்புனைகண்ணிப்புனிதனோடென்றன்னைக்
காப்புநாண்கட்டக்கனாக்கண்டேன்றோழீநான். (௪)

கதிரொளிதீபங்கலசமுடனேந்திச்
சதிரிளமங்கையர்தாம்வந்தெதிர்கொள்ள
மதுரையார்மன்னனடிநிலைதொட்டெங்கும்
அதிரப்புகுதக்கனாக்கண்டேன்றோழீநான். (௫)

---

* பல்லாரொடுத்தேந்தி - என்றும் பாடம்.

மத்தளங்கொட்டவரிசங்கநின்றூத
முத்துடைத்தாமநிரைதாழ்ந்தபந்தற்கீழ்
மைத்துநனம்பிமதுசூதன்வந்தென்னைக்
கைத்தலம்பற்றக்கனாக்கண்டேன்றோழீநான். (௬)

வாய்நல்லார்நல்லமறையோதிமந்திரத்தால்
பாசிலைநாணற்படுத்துப்பரிதிவைத்துக்
காய்சினமாகளிறன்னானென்கைப்பற்றித்
தீவலஞ்செய்யக்கனாக்கண்டேன்றோழீநான். (௭)

இம்மைக்குமேழேழ்பிறவிக்கும்பற்றாவான்
நம்மையுடையவன்நாராயணனம்பி
செம்மையுடையதிருக்கையாற்றாள்பற்றி
அம்மிமிதிக்கக்கனாக்கண்டேன்றோழீநான். (௮)

வரிசிலைவாண்முகத்தென்னைமார்தாம்வந்திட்டு
எரிமுகம்பாரித்தென்னைமுன்னேநிறுத்தி
அரிமுகனச்சுதன்கைம்மேலென்கைவைத்துப்
பொரிமுகந்தட்டக்கனாக்கண்டேன்றோழீநான். (௯)

குங்குமமப்பிக்குளிர்சாந்தமட்டித்து
மங்கலவீதிவலஞ்செய்துமணநீர்
அங்கவனோடுமுடன்சென்றங்கானைமேல்
மஞ்சனமாட்டக்கனாக்கண்டேன்றோழீநான். (௧௦)

* ஆயனுக்காகத்தான்கண்டகனாவினை
வேயர்புகழ்வில்லிபுத்தூர்க்கோன்கோதைசொல்
தூயதமிழ்மாலையீரைந்தும்வல்லவர்
வாயுநன்மக்களைப்பெற்றுமகிழ்வரே. (௧௧)

ஆண்டாள்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

வாரண நாளை இந்திரன் நாற்றிசைக் கதிர் மத்தளம் வா யிம்மை வரிசிலை குங்குமமாயன் கருப்பூரம்.

ஆ திருமொழி - ௬ - க்கு - பாசுரம் - ௬௩.

---

## எ - வது. கருப்பூரம்நாறுமோ.

பாஞ்சசன்னியத்தைப்பத்மநாபனோடுஞ்சுற்றமாக்கல்.

கலிவிருத்தம்.

வராளிராகம் - ரூபகதாளம்.

* கருப்பூரம்நாறுமோகமலப்பூநாறுமோ
திருப்பவளச்செவ்வாய்தான்றித்தித்திருக்குமோ
மருப்பொசித்தமாதவன்றன்வாய்ச்சுவையுநாற்றமும்
விருப்புற்றுக்கேட்கின்றேன்சொல்லாழிவெண்சங்கே. (௧)

கடலிற்பிறந்துகருதாது, பஞ்சசனன்
உடலில்வளர்ந்துபோயூழியான்கைத்தலத்
திடரிற்குடியேறித்தீயவசுரர்
நடலைப்படமுழங்குந்தோற்றத்தாய்நற்சங்கே. (௨)

தடவரையின்மீதேசரற்காலசந்திரன்
இடையுவாவில்வந்தெழுந்தாலேபோ, னீயும்
வடமதுரையார்மன்னன்வாசுதேவன்கையில்
குடியேறிவீற்றிருந்தாய்கோலப்பெருஞ்சங்கே. (௩)

சந்திரமண்டலம்போற்றாமோதரன்கையில்
அந்தரமொன்றின்றியேறியவன்செவியில்
மந்திரங்கொள்வாயேபோலும்வலம்புரியே
இந்திரனுமுன்னோடுசெல்வத்துக்கேலானே. (௪)

உன்னோடுடனேயொருகடலில்வாழ்வாரை
இன்னாரினியாரென்றெண்ணுவாரில்லைகாண்
மன்னுகின்றமதுசூதன்வாயமுதம்
பன்னாளுமுண்கின்றாய்பாஞ்சசன்னியமே. (௫)

போய்த்தீர்த்தமாடாதேநின்றபுணர்மருதம்
சாய்த்தீர்த்தான்கைத்தலத்தேயேறிக்குடிகொண்டு
சேய்த்தீர்த்தமாய்நின்றசெங்கண்மாற்றன்னுடைய
வாய்த்தீர்த்தம்பாய்ந்தாடவல்லாய்வலம்புரியே. (௬)

செங்கமலநாண்மலர்மேற்றேனுகருமன்னம்போல்
செங்கட்கருமேனிவாசுதேவனுடைய
அங்கைத்தலமேறியன்னவசஞ்செய்யும்
சங்கரையாவுன்செல்வஞ்சாலவழகியதே. (௭)

உண்பதுசொல்லிலுலகளந்தான்வாயமுதம்
கண்படைகொள்ளிற்கடல்வண்ணன்கைத்தலத்தே
பெண்படையாருன்மேற்பெரும்பூசற்சாற்றுகின்றார்
பண்பலசெய்கின்றாய்பாஞ்சசன்னியமே. (௮)

பதினாறாமாயிரவர்தேவிமார்பார்த்திருப்ப
மதுவாயிற்கொண்டாற்போன்மாதவன்றன்வாயமுதம்
பொதுவாகவுண்பதனைப்புக்குநீயுண்டக்கால்
சிதையாரோவுன்னோடுசெல்வப்பெருஞ்சங்கே. (௯)

* பாஞ்சசன்னியத்தைப்பற்பனாபனோடும்
வாய்ந்தபெருஞ்சுற்றமாக்கியவண்புதுவை
ஏய்ந்தப்புகழ்பட்டர்பிரான்கோதைதமிழீரைந்தும்
ஆய்ந்தேத்தவல்லாரவருமணுக்கரே. (௧0)

ஆண்டாள்திருவடிகளேஶரணம்.

கருப்புக் கடல் தடவரை சந்திர னுன்னோடு போய் செங்கமல முண்பது
பதினாறு பாஞ்ச வின் ஆ திருமொழி - எ - இ - பாசுரம் - ௭௩.

## ௮ - வது. விண்ணீலமேலாப்பு.

### மேகவிடுதூது.

கலிவிருத்தம்.

துசாவந்திராகம் - ஆதிதாளம்.

* விண்ணீலமேலாப்புவிரித்தாற்போல்மேகங்காள்
தெண்ணீர்பாய்வேங்கடத்தென்றிருமாலும்போந்தானே
கண்ணீர்கள்முலைக்குவட்டிற்றுளிசோரச்சோர்வேனைப்
பெண்ணீர்மையீடழிக்குமிதுதமக்கோர்பெருமையே. (௧)

மாமுத்தநிதிசொரியுமாமுகில்காள், வேங்கடத்துச்
சாமத்தினிறங்கொண்டதாடாளன்வார்த்தையென்னே
காமத்தீயுட்புகுந்துகதுவப்பட்டிடைக்கங்குல்
ஏமத்தோர்தென்றலுக்கிங்கிலக்காய்நானிருப்பேனே. (௨)

ஒளிவண்ணம்வளைசிந்தையுறக்கத்தோடிவையெல்லாம்
எளிமையாலிட்டென்னையீடழியப்போயினவால்
குளிரருவிவேங்கடத்தென்கோவிந்தன்குணம்பாடி
அளியத்தமேகங்காளாவிகாத்திருப்பேனே. (௩)

மின்னாகத்தெழுகின்றமேகங்காள், வேங்கடத்துத்
தன்னாகத்திருமங்கைதங்கியசீர்மார்பர்க்கு
என்னாகத்திளங்கொங்கைவிரும்பித்தாம்நாடோறும்
பொன்னாகம்புல்குதற்கென்புரிவுடைமைசெப்புமினே. (௪)

வான்கொண்டுகிளர்ந்தெழுந்தமாமுகில்காள், வேங்கடத்துத்
தேன்கொண்டமலர்சிதறத்திரண்டேறிப்பொழிவீர்காள்
ஊன்கொண்டவள்ளுகிராலிரணியனையுடலிடந்தான்
தான்கொண்டசரிவளைகள்தருமாகிற்சாற்றுமினே. (௫)

சலங்கொண்டுகிளர்ந்தெழுந்ததண்முகில்காள், மாவலியை
நிலங்கொண்டான்வேங்கடத்தேநிரந்தேறிப்பொழிவீர்காள்
உலங்கொண்டவிளங்கனிபோலுண்மெலியப்புகுந், தென்னை
நலங்கொண்டநாரணற்கென்னடலைநோய்செப்புமினே. (௬)

சங்கமாகடற்கடைந்தான்றண்முகில்காள், வேங்கடத்துச்
செங்கண்மாற்சேவடிக்கீழடிவீழ்ச்சிவிண்ணப்பம்
கொங்கைமேற்குங்குமத்தின்குழம்பழியப்புகுந், தொருநாள்
தங்குமேலென்னாவிதங்குமென்றுரையீரே. (௭)

கார்காலத்தெழுகின்றகார்முகில்காள், வேங்கடத்துப்
போர்காலத்தெழுந்தருளிப்பொருதவனார்பேர்சொல்லி
நீர்காலத்தெருக்கினம்பழவிலைபோல்வீழ்வேனை
வார்காலத்தொருநாள்தம்வாசகந்தந்தருளாரே. (அ)

மதயானைபோலெழுந்தமாமுகில்காள், வேங்கடத்தைப்
பதியாகவாழ்வீர்காள்பாம்பணையான்வார்த்தையென்னே
கதியென்றுந்தானாவான்கருதா, தோர்பெண்கொடியை
வதைசெய்தானென்னுஞ்சொல்வையகத்தார்மதியாரே. (கூ)

* நாகத்தினணையானைநன்னுதலாள்நயந்துரைசெய்
மேகத்தைவேங்கடக்கோன்விடுதூதில்விண்ணப்பம்
போகத்தில்வழுவாதபுதுவையர்கோன்கோதைதமிழ்
ஆகத்துவைத்துரைப்பாரவரடியாராகுவரே. (க0)

ஆண்டாள்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

விண் மா ஒளி மின் வான் சலம் சங்கம் கார் மத நாக சிந்துர.

ஆ திருமொழி - அ - க்கு - பாசுரம் - அரு.

## கூ - வது. சிந்துரச்செம்போடி.

### திருமாலிருஞ்சோலை யெம்பெருமானை வழிபடல்.

கலிவிருத்தம்.

அபரூபராகம் - ரூபகதாளம்.

* சிந்துரச்செம்பொடிப்போல்திருமாலிருஞ்சோலையெங்கும்
இந்திரகோபங்களேயெழுந்தும்பரந்திட்டனவால்
மந்தரநாட்டியன்றுமதுரக்கொழுஞ்சாறுகொண்ட
சுந்தரத்தோளுடையான்சுழலையினின்றுய்யுங்கொலோ. (க)

போர்க்களிறுபொருமாலிருஞ்சோலையம்பூம்புறவில்
தார்க்கொடிமுல்லைகளுந்தவளநகைகாட்டுகின்ற
கார்க்கொள்படாக்கணின்றுகழறிச்சிரிக்கத்தரியேன்
ஆர்க்கிடுகோதோழீயவன்றார்செய்தபூசலையே. (உ)

கருவிளையொண்மலர்காள்காயாமலர்காள், திருமால்
உருவொளிகாட்டுகின்றீரெனக்குய்வழக்கொன்றுரையீர்
திருவிளையாடுதிண்டோள்திருமாலிருஞ்சோலைநம்பி
வரிவளையில்புகுந்துவந்திபற்றும்வழக்குளதே. (ங)

பைம்பொழில்வாழ்குயில்காள்மயில்காளொண்கருவிளைகாள்
வம்பக்களங்கனிகாள்வண்ணப்பூவைநறுமலர்காள்
ஐம்பெரும்பாதகர்காளணிமாலிருஞ்சோலைநின்ற
எம்பெருமானுடையநிறமுங்களுக்கென்செய்வதே. (ச)

துங்கமலர்ப்பொழில்சூழ்திருமாலிருஞ்சோலைநின்ற
செங்கட்கருமுகிலின்றிருவுருப்போன், மலர்மேல்
தொங்கியவண்டினங்காள்தொகுபூஞ்சுனைகாள், சுனையில்
தங்குசெந்தாமரைகாளெனக்கோர்சரண்சாற்றுமினே. (ரு)

நாறுநறும்பொழில்மாலிருஞ்சோலைநம்பிக்கு, நான்
நூறுதடாவில்வெண்ணெய்வாய்நேர்ந்துபராவிவைத்தேன்
நூறுதடாநிறைந்தவக்காரவடிசிற்சொன்னேன்
ஏறுதிருவுடையானின்றுவந்திவைகொள்ளுங்கொலோ. (சா)

இன்றுவந்தித்தனையுமமுதுசெய்திடப்பெறில், நான்
ஒன்றுநூறாயிரமாகக்கொடுத்துப்பின்னுமாளுஞ்செய்வேன்
தென்றன்மணங்கமழுந்திருமாலிருஞ்சோலைதன்னுள்
நின்றபிரா, னடியேன்மனத்தேவந்துநேர்படிலே. (எ)

காலையெழுந்திருந்துகரியகுருவிக்கணங்கள்
மாலின்வரவுசொல்லிமருட்பாடுதன்மெய்மைகொலோ
சோலைமலைப்பெருமான்றுவராபதியெம்பெருமான்
ஆலினிலைப்பெருமானவன்வார்த்தையுரைக்கின்றதே. (அ)

கோங்கலரும்பொழின்மாலிருஞ்சோலையிற்கொன்றைகண்மேல்
தூங்குபொன்மாலைகளோடுடனாய்நின்றுதூங்குகின்றேன்
பூங்கொள்திருமுகத்துமடுத்தூதியசங்கொலியும்
சார்ங்கவின்னாணொலியுந்தலைப்பெய்வதெஞ்ஞான்றுகொலோ. (கூ)

* சந்தொடுகாரகிலுஞ்சுமந்துதடங்கள்பொருது
வந்திழியுஞ்சிலம்பாறுடைமாலிருஞ்சோலைநின்ற
சுந்தரனைச், சுரும்பார்குழற்கோதைதொகுத்துரைத்த
செந்தமிழ்பத்தும்வல்லார்திருமாலடிசேர்வர்களே. (கய)

ஆண்டாள்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

சிந்துரப்போர்கருவிளைபைம்பொழில் துங்காறு இன்றுகாலைகோங்குசந்துகார்க்கோடல்.

ஆ திருமொழி - கூ - க்கு-பாசுரம் - கூரு.

## கா - வது. கார்க்கோடல்பூக்காள்.

மாற்செய்வகையொடுமாற்றமியம்பல்.

கலிவிருத்தம்.

காம்போதிராகம் - திரிபுடைதாளம்.

* கார்க்கோடற்பூக்காள்கார்க்கடல்வண்ணனெம்மே, லும்மைப்
போர்க்கோலஞ்செய்துபோரவிடுத்தவனெங்குற்றான்
ஆர்க்கோவினிநாம்பூசலிடுவதணிதுழாய்த்
தார்க்கோடுநெஞ்சந்தன்னைப்படைக்கவல்லேனந்தோ. (க)

மேற்றோன்றிப்பூக்காள்மேலுலகங்களின்மீதுபோய்
மேற்றோன்றுஞ்சோதிவேதமுதல்வர்வலங்கையின்
மேற்றோன்றுமாழியின்வெஞ்சுடர்போலச்சுடா, தெம்மை
மாற்றோலைப்பட்டவர்கூட்டத்துவைத்துக்கொள்கிற்றிரே. (உ)

கோவைமணாட்டிநீயுன்கொழுங்கனிகொண், டெம்மை
ஆவிதொலைவியேல்வாயழகர்தம்மையஞ்சுதும்
பாவியேன்தோன்றிப்பாம்பணையார்க்குந்தம்பாம்புபோல்
நாவுமிரண்டுளவாய்த்துநாணிலியேனுக்கே. (ங)

முல்லைப்பிராட்டிநீயுன்முறுவல்கள்கொண், டெம்மை
அல்லல்விளைவியேலாழிநங்காயுன்னடைக்கலம்
கொல்லையரக்கியைமூக்கரிந்திட்டகுமரனார்
சொல்லும்பொய்யானல், நானும்பிறந்தமைபொய்யன்றே. (ச)

பாடுங்குயில்காளீதென்னபாடல், நல்வேங்கடம்
நாடர்நமக்கொருவாழ்வுதந்தால்வந்துபாடுமின்
ஆடுங்கருளக்கொடியுடையார்வந்தருட்செய்து
கூடுவராயிடிற்கூவிநும்பாட்டுக்கள்கேட்குமே. (ரு)

கணமாமயில்காள்கண்ணபிரான்திருக்கோலம்போன்று
அணிமாநடம்பயின்றாடுகின்றீர்க்கடிவீழ்கின்றேன்
பணமாளரவணைப்பற்பலகாலமும்பள்ளிகொள்
மணவாளர்நம்மைவைத்தபரிசிதுகாண்மினே. (சு)

நடமாடித்தோகைவிரிக்கின்றமாமயில்கா, ளும்மை
நடமாட்டங்காணப்பாவியேனுனோர்முதலிலேன்
குடமாடுகூத்தன்கோவிந்தன்கோமிறைசெய், தெம்மை
உடைமாடுகொண்டானுங்களுக்கினியொன்றுபோதுமே. (எ)

மழையேமழையேமண்புறம்பூசியுள்ளாய்நின்று
மெழுகூற்றினாற்போ, லூற்றுநல்வேங்கடத்துணின்று
அழகப்பிரானார்தம்மையென்னெஞ்சத்தகப்படத்
தழுவிநின், றெம்மைத்ததத்திக்கொண்டூற்றவும்வல்லையே. (அ)

கடலேகடலேயுன்னைக்கடைந்துகலக்குறுத்து
உடலுட்புகுந்துநின்றூறலறுத்தவர்க், கென்னையும்
உடலுட்புகுந்துநின்றூறலறுக்கின்றமாயர்க், கென்
நடலைகளெல்லாம்நாகணைக்கேசென்றுரைத்தியே. (கூ)

* நல்லவென்றோழிநாகணைமிசைநம்பரர்
செல்வர்பெரியர்சிறுமானிடவர்நாஞ்செய்வதென்
வில்லிபுதுவைவிட்டுசித்தர்தங்கள்தேவரை
வல்லபரிசுவருவிப்பரேலதுகாண்டுமே. (க0)

ஆண்டாள்திருவடிகளேசரணம்.

கார் மேற் கோவை முல்லை பாடுங் கண நட மழை கடல் நல்ல தாம்.

ஆ திருமொழி - க0 - இ - பாசுரம் - க0ரு.

## ௧௧ - வது. தாமுகக்குந்தங்கை.

### திருவரங்கத்துச்செல்வனைக்காமுறல்.

கலிவிருத்தம்.

சாவேரிராகம் - திரிபுடைதாளம்.

* தாமுகக்குந்தங்கையிற்சங்கமேபோலாவோ
யாமுகக்குமெங்கையிற்சங்கமுமேந்திழையீர்
தீமுகத்துநாகணைமேற்சேருந்திருவரங்கர்
ஆமுகத்தைநோக்காராலம்மனேயம்மனே. (௧)

எழிலுடையவம்மனைமீரென்னரங்கத்தின்னமுதர்
குழலழகர்வாயழகர்கண்ணழகர், கொப்பூழில்
எழுகமலப்பூவழகரெம்மானா, ரென்னுடைய
கழல்வளையைத்தாமுங்கழல்வளையேயாக்கினரே. (௨)

பொங்கோதஞ்சூழ்ந்தபுவனியும்விண்ணுலகும்
அங்காதுஞ்சோராமேயாள்கின்றவெம்பெருமான்
செங்கோலுடையதிருவரங்கச்செல்வனார்
எங்கோல்வளையாலிடர்தீர்வராகாதே. (௩)

மச்சணிமாடமதிளரங்கர்வாமனனார்
பச்சைப்பசுந்தேவர்தாம்பண்டுநீரேற்ற
பிச்சைக்குறையாகியென்னுடையபெய்வளைமேல்
இச்சையுடையரேலித்தெருவேபோதாரே. (௪)

பொல்லாக்குறளுருவாய்ப்பொற்கையினீரேற்று
எல்லாவுலகுமளந்துகொண்டவெம்பெருமான்
நல்லார்கள்வாழுநளிரரங்கநாகணையான்
இல்லாதோங்கைப்பொருளுமெய்துவானொத்துளனே. (௫)

கைப்பொருட்கள்முன்னமேகைக்கொண்டார், காவிரிநீர்
செய்ப்புரளவோடுந்திருவரங்கச்செல்வனார்
எப்பொருட்குநின்றார்க்குமெய்தாது, நான்மறையின்
சொற்பொருளாய்நின்றாரென்மெய்ப்பொருளுங்கொண்டாரே. (௬)

உண்ணாதுறங்காதொலிகடலையூடறுத்துப்
பெண்ணாக்கையாப்புண்டுதாமுற்றபேதெல்லாம்
திண்ணார்மதில்சூழ்திருவரங்கச்செல்வனார்
எண்ணாதேதம்முடையநன்மைகளேயெண்ணுவரே. (௭)

பாசிதூர்த்துக்கிடந்தபார்மகட்குப், பண்டொருநாள்
மாசுடம்பினீர்வாராமானமில்லாப்பன்றியாம்
தேசுடையதேவர்திருவரங்கச்செல்வனார்
பேசியிருப்பனகள்பேர்க்கவும்பேராவே. (௮)

கண்ணாலங்கோடித்துக்கன்னிதனைக்கைப்பிடிப்பான்
திண்ணார்ந்திருந்தசிசுபாலன்றேசழிந்து
அண்ணாந்திருக்கவேயாங்கவளைக்கைப்பிடித்த
பெண்ணாளன்பேணுமூர்பேருமரங்கமே. (௯)

* செம்மையுடையதிருவரங்கர்தாம்பணித்த
மெய்ம்மைப்பெருவார்த்தைவிட்டுசித்தர்கேட்டிருப்பர்
தம்மையுகப்பாரைத்தாமுகப்பரென்னுஞ்சொல்
தம்மிடையேபொய்யானாற்சாதிப்பாராரினியே. (௰)

ஆண்டாள்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

தாமெழில்பொங்குமச்சுபொல்லாக்கைஉண்ணாப்பாசிகண்ணாலஞ்செம்மைமற்று

ஆ திருமொழி - ௧௧ - க்கு - பாசுரம் - ௧௧௩.

## ௧௨ - வது. மற்றிருந்தீர்.

சிதரனிருந்துழிச்செலுத்துவீர்தனையெனக்

கோதைதமர்க்குக்கூறிய துணிபு.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நாதநாமக்கிரியைராகம் - ஆதிதாளம்.

* மற்றிருந்தீர்கட்கறியலாகாமாதவனென்பதோரன்புதன்னை
உற்றிருந்தேனுக்குணைப்பதெல்லாமுமையரோடுசெவிடர்வார்த்தை
பெற்றிருந்தாளையொழியவேபோய்ப்பேர்த்தொருதாயில்வளர்ந்தநம்பி
மற்பொருந்தாமற்களமடைந்தமதுரைப்புறத்தென்னையுய்த்திடுமின்.

நாணியினியோர்கருமமில்லைநாலயலாருமறிந்தொழிந்தார்
பாணியாதென்னைமருந்துசெய்துபண்டுபண்டாக்கவுறுதிராகில்
மாணியுருவாயுலகளந்தமாயனைக்காணிற்றலைமறையும்
ஆணையால்நீரென்னைக்காக்கவேண்டிலாய்ப்பாடிக்கேயென்னையுய்த்திடுமின்.

தந்தையுந்தாயுமுற்றாருநிற்கத்தனிவழிபோயினாளென்னுஞ்சொல்லு
வந்தபின்னைப்பழிகாப்பரிதுமாயவன்வந்துருக்காட்டுகின்றான்
கொந்தளமாக்கிப்பரக்கழித்துக்குறும்புசெய்வானோர்மகனைப்பெற்ற
நந்தகோபாலன்கடைத்தலைக்கேநள்ளிருட்கணென்னையுய்த்திடுமின்.

அங்கைத்தலத்திடையாழிகொண்டானவன்முகத்தன்றிவிழியேனென்று
செங்கச்சுக்கொண்டுகண்ணாடையார்த்துச்சிறுமானிடவரைக்காணினாணும்
கொங்கைத்தலமிவைநோக்கிக்காணீர்கோவிந்தனுக்கல்லால்வாயிற்போகா
இங்குற்றைவாழ்வையொழியவேபோயமுனைக்கரைக்கென்னையுய்த்திடுமின்.

ஆர்க்குமென்னோயிஃதறியலாகாதம்மனைமீர் துழதிப்படாதே
கார்க்கடல்வண்ணனென்பானொருவன்கைகண்டயோகந்தடவத்தீரும்
நீர்க்கரைநின்றகடம்பையேறிக்காளியனுச்சியில்நட்டம்பாய்ந்து
போர்க்களமாகநிருத்தஞ்செய்தபொய்கைக்கரைக்கென்னையுய்த்திடுமின்.

கார்த்தண்முகிலுங்கருவிளையுங்காயாமலருங்கமலப்பூவும்
ஈர்த்திடுகின்றனவென்னைவந்திட்டிருடிகேசன் பக்கல்போகேயென்று
வேர்த்துப்பசித்துவயிறசைந்துவேண்டடிசிலுண்ணும்போதீதென்று
பார்த்திருந்துநெடுநோக்குக்கொள்ளும்பத்தவிலோசனத்துய்த்திடுமின்.

வண்ணந்திரிவுமனங்குழைவுமானமிலாமையும்வாய்வெளுப்பும்
உண்ணலுறாமையுமுள்மெலிவுமோதநீர்வண்ணனென்பானொருவன்
தண்ணந்துழாயென்னுமாலைகொண்டுசூட்டத்தணியும், பிலம்பன்றன்னைப்
பண்ணழியப்பலதேவன்வென்றபாண்டிவடத்தென்னையுய்த்திடுமின்.

கற்றினமேய்க்கவுமேய்க்கப்பெற்றான் காடுவாழ்சாதியுமாகப்பெற்றான்
பற்றியுரலிடையாப்புமுண்டான்பாவிகாளுங்களுக்கேச்சுக்கொலோ
கற்றனபேசிவசையுணாதேகாலிகளுய்யமழைதடுத்துக்
கொற்றக்குடையாகவேந்திநின்றகோவர்த்தனத்தென்னையுய்த்திடுமின்.

கூட்டிலிருந்துகிளியெப்போதுங்கோவிந்தாகோவிந்தாவென்றழைக்கும்
ஊட்டக்கொடாதுசெறுப்பனாகிலுலகளந்தானென்றுயரக்கூவும்
நாட்டிற்றலைப்பழியெய்தியுங்கள்நன்மையிழந்துதலையிடாதே
சூட்டுயர்மாடங்கள்சூழ்ந்துதோன்றுந்துவராபதிக்கென்னையுய்த்திடுமின்.

*மன்னுமதுரைதொடக்கமாகவண்டுவராபதிதன்னளவும்
தன்னைத்தமருய்த்துப்பெய்யவேண்டித்தாழ்குழலாள்துணிந்ததுணிவை [தை
பொன்னியன்மாடம்பொலிந்துதோன்றும்புதுவையர்கோன்விட்டுசித்தன்கோ
இன்னிசையாற்சொன்னசெஞ்சொல்மாலையேத்தவல்லார்க்கிடம்வைகுந்தமே

ஆண்டாள்திருவடிகளேஶரணம்.

ஜீயர் திருவடிகளேஶரணம்.

மற்று நாணி தந்தை யங்கை ஆர்க்கும் கார்த்தண் வண்ணங் கற்றினம் கூ-ட்டில் மன்னு கண்ணன்.

ஆ திருமொழி - கஉ - க்கு - பாசுரம் - கஉ௩.

## க௩ - வது. கண்ணனென்னும்.

அச்சுதனணிபொருட்கொண்டவலந்தணிமினெனல்.

கலிவிருத்தம்.

பைரவிராகம் - ஆதிதாளம்.

* கண்ணனென்னுங்கருந்தெய்வங்காட்சிபழகிக்கிடப்பேனைப்
புண்ணிற்புளிப்பெய்தாற்போல்புறநின்றழகுபேசாதே
பெண்ணின்வருத்தமறியாதபெருமானரையிற்பீதக
வண்ணவாடைகொண்டென்னைவாட்டந்தணியவீசீரே. (க)

பாலாலிலையிற்றுயில்கொண்டபரமன்வலைப்பட்டிருந்தேனை
வேலால்துன்னம்பெய்தாற்போல்வேண்டிற்றெல்லாம்பேசாதே
கோலால்நிரைமேய்த்தாயனாய்க்குடந்தைக்கிடந்தகுடமாடி
நீலார்தண்ணந்துழாய்கொண்டென்னெறிமென்குழன்மேற்சூட்டீரே.
கஞ்சைக்காய்ந்தகருவில்லிகடைக்கணென்னுஞ்சிறைக்கோலால்
நெஞ்சூடுருவவேவுண்டுநிலையுந்தளர்ந்துநைவேனை
அஞ்சேலென்னானவனொருவனவன்மார்பணிந்தவனமாலை
வஞ்சியாதேதருமாகில்மார்பிற்கொணர்ந்துபுரட்டீரே. (௩)
ஆரேயுலகத்தாற்றுவாராயர்பாடிகவர்ந்துண்ணும்
காரேறுழக்கவுழக்குண்டுதளர்ந்தும்முறிந்துங்கிடப்பேனை
ஆராவமுதமனையான்றன்னமுதவாயிலூறிய
நீர்தான்கொணர்ந்துபுலராமேபருக்கியிளைப்பைநீக்கீரே. (௪)
அழிலுந்தொழிலுமுருக்காட்டானஞ்சேலென்னானவனொருவன்
தழுவிமுழுசிப்புகுந்தென்னைச்சுற்றிச்சுழன்றுபோகானல்
தழையும்பொழில்வாய்நிரைப்பின்னேநெடுமாலூதிவருகின்ற
குழலின்றுளைவாய்நீர்கொண்டுகுளிரமுகத்துத்தடவீரே. (௫)
நடையொன்றில்லாவுலகத்துநந்தகோபன்மகனென்னும்
கொடியகடியதிருமாலாற்குளப்புக்கூறுகொளப்பட்டுப்
புடையும்பெயரகில்லேனன்போட்கன்மிதித்தவடிப்பாட்டில்
பொடித்தான்கொணர்ந்துபூசீர்கள்போகாவுயிரென்னுடம்பையே. ()
வெற்றிக்கருளக்கொடியான்றன்மீமீதாடாவுலகத்து
வெற்றவெறிதேபெற்றதாய்வேம்பேயாகவளர்த்தாளே
குற்றமற்றமுலைதன்னைக்குமரன்கோலப்பணைத்தோளோடு
அற்றகுற்றமவைதீரவணையவமுக்கிக்கட்டீரே. (௭)
உள்ளேயுருகிநைவேனையுளளோவிலளோவென்னாத
கொள்ளைகொள்ளிக்குறும்பனைக்கோவர்த்தனனைக்கண்டக்கால்
கொள்ளும்பயனொன்றில்லாதகொங்கைதன்னைக்கிழங்கோடும்
அள்ளிப்பறித்திட்டவன்மார்பிலெறிந்தென்னழலைத்தீர்வேனே. (அ)
கொம்மைமுலைகளிடர்தீரக்கோவிந்தற்கோர்குற்றேவல்
இம்மைப்பிறவிசெய்யாதேயினிப்போய்ச்செய்யுந்தவந்தானென்
செம்மையுடையதிருமார்பிற்சேர்த்தானேலுமொருநான்று
மெய்ம்மைசொல்லிமுகநோக்கிவிடைதான்றருமேல்மிகநன்றே. (௯)
* அல்லல்விளைத்தபெருமானையாயர்பாடிக்கணிவிளக்கை
வில்லிபுதுவைநகர்நம்பிவிட்டுசித்தன்வியன்கோதை
வில்லைத்தொலைத்தபுருவத்தாள்வேட்கையுற்றுமிகவிரும்பும்
சொல்லைத்துதிக்கவல்லார்கள்துன்பக்கடலுள்துவளாரே. (கO)

ஆண்டாள்திருவடிகளேஶரணம்.

கண்ணன்பால்கஞ்சையாரேஅழில்நடைவெற்றியுள்ளேகொம்மையல்லல்பட்டி

ஆ திருமொழி - க௩ - க்கு - பாசுரம் - க௩௩.

## கச - வது. பட்டிமேய்ந்தோர்.

### விருந்தாவனத்தேபரந்தாமற்கண்டமை.

கலிவிருத்தம்.

அபரூபராகம் - ரூபகதாளம்.

* பட்டிமேய்ந்தோர்காரேறுபலதேவர்க்கோர்கீழ்க்கன்றாய்
இட்டீறிட்டுவிளையாடியிங்கேபோதக்கண்டீரே
இட்டமானபசுக்களையினிதுமறித்துநீரூட்டி
விட்டுக்கொண்டுவிளையாடவிருந்தாவனத்தேகண்டோமே. (க)

அனுங்கவென்னைப்பிரிவுசெய்தாயர்பாடிகவர்ந்துண்ணும்
குணுங்குநாறிக்குட்டேற்றைக்கோவர்த்தனனைக்கண்டீரே
கணங்களோடுமின்மேகங்கலந்தாற்போல்வனமாலை
மினுங்கநின்றுவிளையாடவிருந்தாவனத்தேகண்டோமே. (௨)

மாலாய்ப்பிறந்தநம்பியைமாலேசெய்யுமணாளனை
ஏலாப்பொய்களுரைப்பானையிங்கேபோதக்கண்டீரே
மேலாய்ப்பரந்தவெயிற்காப்பான்வினதைசிறுவன்சிறகென்னும்
மேலாப்பின்கீழ்வருவானைவிருந்தாவனத்தேகண்டோமே. (௩)

கார்த்தண்கமலக்கண்ணென்னுநெடுங்கயிறுபடுத்தி, யென்னை
ஈர்த்துக்கொண்டுவிளையாடுமீசன்றன்னைக்கண்டீரே
போர்த்தமுத்தின்குப்பாயப்புகர்மால்யானைக்கன்றேபோல்
வேர்த்துநின்றுவிளையாடவிருந்தாவனத்தேகண்டோமே. (௪)

மாதவனென்மணியினைவலையிற்பிழைத்தபன்றிபோல்
ஏதுமொன்றுங்கொளத்தாராவீசன்றன்னைக்கண்டீரே
பீதகவாடையுடைதாழப்பெருங்கார்மேகக்கன்றேபோல்
வீதியாரவருவானைவிருந்தாவனத்தேகண்டோமே. (௫)

தருமமறியாக்குறும்பனைத்தன்கைச்சார்ங்கமதுவேபோல்
புருவவட்டமழகியபொருத்தமிலியைக்கண்டீரே
உருவுகரிதாய்முகஞ்செய்தாயுதயப்பருப்பதத்தின்மேல்
விரியுங்கதிரேபோல்வானைவிருந்தாவனத்தேகண்டோமே. (௬)

பொருத்தமுடையநம்பியைப்புறம்போலுள்ளுங்கரியானைக்
கருத்தைப்பிழைத்துநின்றவக்கருமாமுகிலைக்கண்டீரே
அருத்தித்தாராகணங்களாலாரப்பருகுவானம்போல்
விருத்தம்பெரிதாய்வருவானைவிருந்தாவனத்தேகண்டோமே. (௭)

வெளியசங்கொன்றுடையானைப்பீதகவாடையுடையானை
அளிநன்குடையதிருமாலையாழியானைக்கண்டீரோ
களிவண்டெங்குங்கலந்தாற்போல்கமழ்பூங்குழல்கள்தடந்தோள்மேல்
மிளிரநின்றுவிளையாடவிருந்தாவனத்தேகண்டோமே. (அ)

நாட்டைப்படையென்றயன்முதலாத்தந்தநளிர்மாமலருந்தி
வீட்டைப்பண்ணிவிளையாடும்விமலன்றன்னைக்கண்டீரோ
காட்டைநாடித்தேனுகனுங்களிறும்புள்ளுமுடன்மடிய
வேட்டையாடிவருவானைவிருந்தாவனத்தேகண்டோமே. (கூ)

* பருந்தாட்களிற்றுக்கருட்செய்தபரமன்றன்னைப், பாரின்மேல்
விருந்தாவனத்தேகண்டமைவிட்டுசித்தன்கோதைசொல்
மருந்தாமென்றுதம்மனத்தேவைத்துக்கொண்டுவாழ்வார்கள்
பெருந்தாளுடையபிரானடிக்கீழ்ப்பிரியாதென்றுமிருப்பாரே. (கo)

ஆண்டாள்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

பட்டிஅனுங்கமால்கார்த்தண்மாதவன்றருமப்பொருத்தம்வெளியநாட்டை
பருந்தாள்இருள்.

ஆ ண் டா ள் தி ரு வா ய் ம ல ர் ந் த ரு ளி ய

திருமொழி - கச - க்கு - பாசுரம் - கசரு.

நாய்ச்சியார்திருமொழி முற்றும்.

---

ஆ திருப்பல்லாண்டுதொடங்கி பாசுரம் - கூசகூ.



ஸ்ரீ







ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ.

குலசேகரப்பெருமாள்திருவாய்மலர்ந்தருளிய

ஸ்ரீமத்ராமாயணஸாரமாகும்

# பெருமாள் திருமொழி.

தனியன்

மணக்கால்நம்பிகளருளிச்செய்தது.

இருவிகற்பநேரிசைவெண்பா.

இன்னமுத மூட்டுகே னிங்கேவா பைங்கிளியே
தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள்,—பொன்னஞ்
சிலைசேர் நுதலியர்வேள் சேரலர்கோ, னெங்கள்
குலசே கரனென்றே கூறு.

கட்டளைக்கலித்துறை.

ஆரங்கெடப்பரனன்பர்கொள்ளாரென்றவர்களுக்கே
வாரங்கொடக்குடப்பாம்பிற்கையிட்டவன்,மாற்றலரை
வீரங்கெடுத்தசெங்கோல்கொல்லிகாவலன்வில்லவர்கோன்
சேரன்குலசேகரன்முடிவேந்தர்சிகாமணியே.

## க - வது. இருளிரியச்சுடர்மணி.

அழகியமணவாளன்விஷயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பந்துவராளிராகம் - ஆதிதாளம்.

* இருளிரியச்சுடர்மணிகளிமைக்குநெற்றி
  யினத்துத்தியணிபணமாயிரங்களார்ந்த
அரவரசப்பெருஞ்சோதியனந்தனென்னு
  மணிவிளங்குமுயர்வெள்ளையணையைமேவித்
திருவரங்கப்பெருநகருட்டெண்ணீர்ப்பொன்னி
  திரைக்கையாலடிவருடப்பள்ளிகொள்ளும்
கருமணியைக்கோமளத்தைக்கண்டுகொண்,டென்
  கண்ணிணைகளென்றுகொலோகளிக்குநாளே. (க)

வாயோரீரைஞ்ஞூறு துதங்களார்ந்த
வளையுடம்பிலழல்நாகமுமிழ்ந்தசெந்தீ
வீயாதமலர்ச்சென்னிவிதானமேபோல்
மென்மேலுமிகவெங்கும்பரந்ததன்கீழ்
காயாம்பூமலர்ப்பிறங்கலன்னமாலைக்
கடியரங்கத்தரவணையிற்பள்ளிகொள்ளும்
மாயோனைமணத்தூணைபற்றிநின், றென்
வாயாரவென்றுகொலோவாழ்த்துநாளே. (உ)

எம்மாண்பினயனான்குநாவினாலும்
எடுத்தேத்தியீரிரண்டுமுகமுங்கொண்டு
எம்மாடுமெழிற்கண்களெட்டினோடுந்
தொழுதேத்தியினிதிறைஞ்சநின்றசெம்பொன்
அம்மான்றன்மலர்க்கமலக்கொப்பூழ்தோன்ற
வணியரங்கத்தரவணையிற்பள்ளிகொள்ளும்
அம்மான்றனடியிணைக்கீழலர்களிட், டங்
கடியவரோடென்றுகொலோவணுகுநாளே. (௩)

மாவினைவாய்பிளந்துகந்தமாலைவேலை
வண்ணனையென்கண்ணனைவன்குன்றமேந்தி
ஆவினையன்றுய்யக்கொண்டவாயரேற்றை
யமரர்கடந்தலைவனையந்தமிழினின்பப்
பாவினை, யவ்வடமொழியைப்பற்றற்றார்கள்
பயிலரங்கத்தரவணையிற்பள்ளிகொள்ளும்
கோவினைநாவுறவழுத்தியென்றன்கைகள்
கொய்மலர்தூயென்றுகொலோகூப்புநாளே. (௪)

இணையில்லாவின்னிசையாழ்கெழுமியின்பத்
தும்புருவுநாரதனுமிறைஞ்சியேத்தத்
துணையில்லாத்தொன்மறைநூற்றோத்திரத்தாற்
றொன்மலர்க்கணயன்வணங்கியோவாதேத்த
மணிமாடமாளிகைகள்மல்குசெல்வ
மதிளரங்கத்தரவணையிற்பள்ளிகொள்ளும்
மணிவண்ணனெம்மானைக்கண்டுகொண், டென்
மலர்ச்சென்னியென்றுகொலோவணங்குநாளே. (௫)

அளிமலர்மேலயனரனிந்திரனோடேனை
யமரர்கடங்குழுவுமரம்பையருமற்றும்
தெளிமதிசேர்முனிவர்கடங்குழுவுமுந்தித்
திசைதிசையின்மலர்தூவிச்சென்றுசேரும்

களிமலர்சேர்பொழிலரங்கத்துரகமேறிக்
கண்வளருங்கடல்வண்ணர்கமலக்கண்ணும்
ஒளிமதிசேர்திருமுகமுங்கண்டுகொண், டென்
னுள்ளமிகவென்றுகொலோவுருகுநாளே. (௬)

மறந்திகழுமனமொழித்துவஞ்சமாற்றி
யைம்புலன்களடக்கியிடர்ப்பாரத்துன்பம்
துறந், திருமுப்பொழுதேத்தியெல்லையில்லாத்
தொன்னெறிக்கணிலைநின்றதொண்டரான
அறந்திகழுமனத்தவர்தங்கதியைப்பொன்னி
யணியரங்கத்தரவணையிற்பள்ளிகொள்ளும்
நிறந்திகழுமாயோனைக்கண்டென்கண்கள்
நீர்மல்கவென்றுகொலோநிற்குநாளே. (௭)

கோலார்ந்தநெடுஞ்சார்ங்கங்கூனற்சங்கங்
கொலையாழிகொடுந்தண்டுகொற்றவொள்வாள்
காலார்ந்தகதிக்கருடனென்னும்வென்றிக்
கடும்பறவையிவையனைத்தும்பிறஞ்சூழ்காப்பச்
சேலார்ந்தநெடுங்கழனிசோலைசூழ்ந்த
திருவரங்கத்தரவணையிற்பள்ளிகொள்ளும்
மாலோனைக்கண்டின்பக்கலவியெய்தி
வல்வினையேனென்றுகொலோவாழுநாளே. (௮)

தூராதமனக்காதற்றொண்டர்தங்கட்
குழாங்குழுமித்திருப்புகழ்கள்பலவும்பாடி
ஆராதமனக்களிப்போடழுதகண்ணீர்
மழைசோரநினைந்துருகியேத்தி, நாளும்
சீரார்ந்தமுழவோசைபரவைகாட்டுந்
திருவரங்கத்தரவணையிற்பள்ளிகொள்ளும்
போராழியம்மானைக்கண்டுதுள்ளிப்
பூதலத்திலென்றுகொலோபுரளுநாளே. (௯)

வன்பெருவானகமுய்யவமரருய்ய
மண்ணுய்யமண்ணுலகின்மனிதருய்யத்
துன்பமிகுதுயரகலவயர்வொன்றில்லாச்
சுகம்வளரவகமகிழுந்தொண்டர்வாழ
அன்பொடுதென்றிசைநோக்கிப்பள்ளிகொள்ளும்
அணியரங்கன்றிருமுற்றத்தடியார்தங்கள்
இன்பமிகுபெருங்குழுவுகண்டியானும்
இசைந்துடனேயென்றுகொலோவிருக்குநாளே. (௧0)

* திடர்விளங்குகரைப்பொன்னிநடுவுபாட்டுத்
திருவரங்கத்தரவணையிற்பள்ளிகொள்ளும்
கடல்விளங்குகருமேனியம்மான்றன்னைக்
கண்ணாரக்கண்டுகக்குங்காதல்தன்னால்
கொடைவிளங்குவிறற்றானைக்கொற்றவொள்வாள்
கூடலர்கோன்குடைக்குலசேகரன்சொற்செய்த
நடைவிளங்குதமிழ்மாலைபத்தும்வல்லார்
நலந்திகழ்நாரணனடிக்கீழ்நண்ணுவாரே. (கக)

குலசேகரப்பெருமாள்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

இருள்வாயெம்மாமாவினினை அளிமறங்கோல்தூராவன்திடர்தேட்டு.

---

## உ - வது. தேட்டருந்திறல்.

---

அழகியமணவாளன்விஷயம்.

கலிநிலைத்துறை.

ஸ்ரீராகம் - ரூபகதாளம்.

* தேட்டருந்திறற்றேனினைத்தென்னரங்கனைத், திருமாதுவாழ்
வாட்டமில்வனமாலைமார்பனைவாழ்த்திமால்கொள்சிந்தையராய்
ஆட்டமேவியலர்ந்தழைத்தயர்வெய்துமெய்யடியார்கடம்
ஈட்டங்கண்டிடக்கூடுமேலதுகாணுங்கண்பயனாவதே. (க)

தோடுலாமலர்மங்கைதோளிணைதோய்ந்ததுஞ்,சுடர்வாளியால்
நீடுமாமரஞ்செற்றதும்நினைமேய்த்ததுமிவையேநினைந்
தாடிப்பாடியரங்கவோவென்றழைக்குந்தொண்டரடிப்பொடி
ஆடநாம்பெறிற்,கங்கைநீர்குடைந்தாடும்வேட்கையென்னாவதே.(உ)

ஏறடர்த்ததுமேனமாய்நிலங்கீண்டதும், முன்னிராமனாய்
மாறடர்த்ததுமண்ணளந்ததுஞ்சொல்லிப்பாடி, வண்பொன்னிப்பேர்
ஆறுபோல்வருங்கண்ணநீர்கொண்டரங்கன்கோயிற்றிருமுற்றம்
சேறுசெய்தொண்டர்சேவடிச்செழுஞ்சேறென்சென்னிக்கணிவனே.

தோய்த்ததண்டயிர்வெண்ணெய்பாலுடனுண்டலுமுடனாய்ச்சிகண்
டார்த்ததோளுடையெம்பிரானென்னரங்கனுக்கடியார்களாய்
நாத்தழும்பெழநாரணாவென்றழைத்துமெய்தழும்பத்தொழு
தேத்தி,யின்புறுதொண்டர்சேவடியேத்திவாழ்த்துமென்னெஞ்சமே.

பொய்சிலைக்குரலேற்றெருத்தமிறுத்துப்போரரவீர்த்தகோன்
செய்சிலைச்சுடர்சூழொளித்திண்ணமாமதிட்டென்னரங்கனும்
மெய்சிலைக்கருமேகமொன்றுதன்னெஞ்சுகணின்றுதிகழப்போய்
மெய்சிலிர்ப்பவர்தம்மையேநினைந்தென்மனமெய்சிலிர்க்குமே. (ரு)

ஆதியந்தமனந்தமற்புதமானவானவர்தம்பிரான்
பாதமாமலர்சூடும்பத்தியிலாதபாவிகளுய்ந்திடத்
தீதினன்னெறிகாட்டியெங்குந்திரிந்தரங்கனெம்மானுக்கே
காதல்செய்தொண்டர்க்கெப்பிறப்பினுங்காதல்செய்யுமென்னெஞ்சமே.

காரினம்புரைமேனிநற்கதிர்முத்தவெண்ணகைசெய்யவாய்
ஆரமார்பனரங்கனென்றுமரும்பெருஞ்சுடரொன்றினைச்
சேருநெஞ்சினராகிச்சேர்ந்துகசிந்திழிந்தகண்ணீர்களால்
வாரநிற்பவர்தாளிணைக்கொருவாரமாகுமென்னெஞ்சமே. (எ)

மாலையுற்றகடற்கிடந்தவன்வண்டுகிண்டுநறுந்துழாய்
மாலையுற்றவரைப்பெருந்திருமார்பனைமலர்க்கண்ணனை
மாலையுற்றெழுந்தாடிப்பாடித்திரிந்தரங்கனெம்மானுக்கே
மாலையுற்றிடுந்தொண்டர்வாழ்வுக்குமாலையுற்றதென்னெஞ்சமே (அ)

மொய்த்துக்கண்பனிசோரமெய்கள்சிலிர்ப்பவேங்கியிளைத்துநின்
றெய்த்துக்கும்பிடுநட்டமிட்டெழுந்தாடிப்பாடியிறைஞ்சி, யென்
அத்தனச்சனரங்கனுக்கடியார்களாகி, யவனுக்கே
பித்தராமவர்பித்தரல்லர்கள்மற்றையார்முற்றும்பித்தரே. (கூ)

* அல்லிமாமலர்மங்கைநாதனரங்கன்மெய்யடியார்கடம்
எல்லையில்லடிமைத்திறத்தினிலென்றுமேவுமனத்தனும்
கொல்லிகாவலன்கூடல்நாயகன்கோழிக்கோன்குலசேகரன்
சொல்லினின்றமிழ்மாலைவல்லவர்தொண்டர்தொண்டர்களாவரே. ()

குலசேகரப்பெருமாள்திருவடிகளேஶரணம்.
ஜீயர்திருவடிகளேஶரணம்.

தேட்டர்தோடேறு தோய்த்தபொய்யாதி காரினம்மாலை மொய்த் தல்லி மெய்.
ஆ திருமொழி - உ - க்கு - பாசுரம் - உக.

---

## ந - வது. மெய்யில்வாழ்க்கையை.

அழகியமணவாளன்விஷயம்.
கலிவிருத்தம்.
சௌராஷ்டிரராகம் - அடதாளம்.

* மெய்யில்வாழ்க்கையைமெய்யெனக்கொள்ளுமிவ்
வையந்தன்னொடுங்கூடுவதில்லையான்
ஐயனேயரங்காவென்றழைக்கின்றேன்
மையல்கொண்டொழிந்தேனென்றன்மாலுக்கே. (க)

நூலினேரிடையார்திறத்தேநிற்கும்
ஞாலந்தன்னொடுங்கூடுவதில்லையான்
ஆலியாவழையாவரங்காவென்று
மாலெழுந்தொழிந்தேனென்றன்மாலுக்கே. (உ)

மாரனார்வரிவெஞ்சிலைக்காட்செய்யும்
பாரினாரொடுங்கூடுவதில்லையான்
ஆரமார்பனரங்கனனந்த, னல்
நாரணன்நரகாந்தகன்பித்தனே. (௩)

உண்டியேயுடையேயுகந்தோடு, மிம்
மண்டலத்தொடுங்கூடுவதில்லையான்
அண்டவாணனரங்கன்வன்பேய்முலை
உண்டவாயன்றனுன்மத்தன்காண்மினே. (௪)

தீதிலன்னெறிநிற்கவல்லாதுசெய்
நீதியாரொடுங்கூடுவதில்லையான்
ஆதியாயனரங்கனந்தாமரைப்
பேதைமாமணவாளன்றன்பித்தனே. (௫)

எம்பரத்தரல்லாரொடுங்கூடலன்
உம்பர்வாழ்வையொன்றாகக்கருதிலன்
தம்பிரானமரர்க்கரங்கநகர்
எம்பிரானுக்கெழுமையும்பித்தனே. (௬)

எத்திறத்திலுமியாரொடுங்கூடு, மச்
சித்தந்தன்னைத்தவிர்த்தனன்செங்கண்மால்
அத்தனேயரங்காவென்றழைக்கின்றேன்
பித்தனாயொழிந்தேனெம்பிரானுக்கே. (௭)

பேயரேயெனக்கியாவருமியானுமோர்
பேயனே, யெவர்க்குமிதுபேசியென்
ஆயனேயரங்காவென்றழைக்கின்றேன்
பேயனாயொழிந்தேனெம்பிரானுக்கே. (௮)

※ அங்கையாழியரங்கனடியிணைத்
தங்குசிந்தைத்தனிப்பெரும்பித்தனாம்
கொங்கர்கோன்குலசேகரன்சொன்னசொல்
இங்குவல்லவர்க்கேதமொன்றில்லையே. (௯)

குலசேகரப்பெருமாள்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

மெய் நூல் மார னுண்டி தீதி லெம்பர மெத்திறம் பே யங்கை ஊனேறு.

ஆ திருமொழி - ௩ - க்கு - பாசுரம் - ௩௦.

## ச - வது. ஊனேறு.

### திருவேங்கடத்தான் விஷயம்.

கொச்சகம்.

தன்யாசிராகம் - திரிபுடைதாளம்.

* ஊனேறுசெல்வத்துடற்பிறவியான்வேண்டேன்
ஆனேறேழ்வென்றானடிமைத்திறமல்லால்
கூனேறுசங்கமிடத்தான்றன்வேங்கடத்துக்
கோனேரிவாழுங்குருகாய்ப்பிறப்பேனே. (க)

ஆனாதசெல்வத்தரம்பையர்கள்தற்சூழ
வானாளுஞ்செல்வமுமண்ணரசுமியான்வேண்டேன்
தேனார்பூஞ்சோலைத்திருவேங்கடச்சுனையில்
மீனாய்ப்பிறக்கும்விதியுடையேனாவேனே. (உ)

பின்னிட்டசடையானும்பிரமனுமிந்திரனும்
துன்னிட்டுப்புகலரியவைகுந்தநீள்வாசல்
மின்வட்டச்சுடராழிவேங்கடக்கோன்றானுமிழும்
பொன்வட்டிற்பிடித்துடனேபுகப்பெறுவேனாவேனே. (ங)

ஒண்பவளவேலையுலவுதண்பாற்கடலுள்
கண்டுயிலுமாயோன்கழலிணைகள்காண்பதற்கும்
பண்பகரும்வண்டினங்கள்பண்பாடும்வேங்கடத்துச்
செண்பகமாய்நிற்குந்திருவுடையேனாவேனே. (ச)

கம்பமதயானைக்கழுத்தகத்தின்மேலிருந்து
இன்பமருஞ்செல்வமுமிவ்வரசுமியான்வேண்டேன்
எம்பெருமானீசனெழில்வேங்கடமலைமேல்
தம்பகமாய்நிற்குந்தவமுடையேனாவேனே. (ரு)

மின்னனையநுண்ணிடையாருருப்பசியுமேனகையும்
அன்னவர்தம்பாடலொடுமாடலவையாதரியேன்
தென்னவெனவண்டினங்கள்பண்பாடும்வேங்கடத்துள்
அன்னனையபொற்குவடாமருந்தவத்தனாவேனே. (சா)

வானாளுமாமதிபோல்வெண்குடைக்கீழ்மன்னவர்தம்
கோனாகிவீற்றிருந்துகொண்டாடுஞ்செல்வறியேன்
தேனார்பூஞ்சோலைத்திருவேங்கடமலைமேல்
கானாறாய்ப்பாயுங்கருத்துடையேனாவேனே. (எ)

பிறையேறுசடையானும்பிரமனுமிந்திரனும்
முறையாயபெருவேள்விக்குறைமுடிப்பான்மறையானான்
வெறியார்தண்சோலைத்திருவேங்கடமலைமேல்
நெறியாய்க்கிடக்குநிலையுடையேனாவேனே. (அ)

செடியாயவல்வினைகள்தீர்க்குந்திருமாலே
நெடியானேவேங்கடவாநின்கோயில்வாசல்
அடியாரும்வானவருமரம்பையருங்கிடந்தியங்கும்
படியாய்க்கிடந்துன்பவளவாய்காண்பேனே. (௯)

உம்பருலகாண்டொருகுடைக்கீழுருப்பசிதன்
அம்பொற்கலையல்குற்பெற்றாலுமாதரியேன்
செம்பவளவாயான்றிருவேங்கடமென்னும்
எம்பெருமான்பொன்மலைமேலேதேனுமாவேனே. (க௰)

* மன்னியதண்சாரல்வடவேங்கடத்தான்றன்
பொன்னியலுஞ்சேவடிகள்காண்பான்புரிந்திறைஞ்சிக்
கொன்னவிலுங்கூர்வேற்குலசேகரன்சொன்ன
பன்னியநூல்தமிழ்வல்லார்பாங்காயபத்தர்களே. (கக)

குலசேகரப்பெருமாள்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஊ ஆனாத பின்னெண் கம்பம் மின் வான் பிறை செடி உம்பர் மன்னிய தரு:
ஆக திருமொழி - ௪ - க்கு - பாசுரம் - ௪௧.

---

## ரு - வது. தருதுயரந்தடாயேல்.

வித்துவக்கோட்டம்மான்விஷயம்.

கலிவிருத்தம்.

சங்கராபரணராகம் - ரூபகதாளம்.

* தருதுயரந்தடாயேலுன்சரணல்லாற்சரணில்லை
விரைகுழுவுமலர்ப்பொழில்சூழ்வித்துவக்கோட்டம்மானே
அரிசினத்தாலீன்றதாயகற்றிடினும், மற்றவள்தன்
அருள்நினைந்தேயழுங்குழவியதுவேபோன்றிருந்தேனே.

கண்டாரிகழ்வனவேகாதலன்றான்செய்திடினும்
கொண்டானையல்லாலறியாக்குலமகள்போல்
விண்டோய்மதிள்புடைசூழ்வித்துவக்கோட்டம்மா, நீ
கொண்டாளாயாகிலுமுன்குரைகழலேகூறுவனே. (௨)

மீனோக்குநீள்வயல்சூழ்வித்துவக்கோட்டம்மா, வென்
பால்நோக்காயாகிலுமுன்பற்றல்லாற்பற்றிலேன்
தானோக்காதெத்துயரஞ்செய்திடினுந், தார்வேந்தர்
கோல்நோக்கிவாழுங்குடிபோன்றிருந்தேனே. (௩)

வாளாலறுத்துச்சுடினும், மருத்துவன்பால்
மாளாதகாதல்நோயாளன்போல், மாயத்தால்
மீளாத்துயர்தரினும்வித்துவக்கோட்டம்மா, நீ
ஆளாவுனதருளேபார்ப்பனடியேனே.

.யது
வந்தாய்
ா,காராதே. ௬

வெங்கட்டிண்களிறடர்த்தாய்வித்துவக்கோட்டம்மானே
எங்குப்போயுய்கேனுன்னிணையடியேயடையலல்லால்
எங்கும்போய்க்கரைகாணாதெறிகடல்வாய்மீண்டேயும்
வங்கத்தின்கூம்பேறுமாப்பறவைபோன்றேனே. (௫)

செந்தழலேவந்தழலைச்செய்திடினுஞ், செங்கமலம்
அந்தரஞ்சேர்வெங்கதிரோற்கல்லாலலராவால்
வெந்துயர்வீட்டாவிடினும்வித்துவக்கோட்டம்மா, வுன்
அந்தமில்சீர்க்கல்லாலகங்குழையமாட்டேனே. (௬)

எத்தனையும்வான்மறந்தகாலத்தும்பைங்கூழ்கள்
மைத்தெழுந்தமாமுகிலேபார்த்திருக்குமற்றவைபோல்
மெய்த்துயர்வீட்டாவிடினும்வித்துவக்கோட்டம்மா, வென்
சித்தமிகவுன்பாலேவைப்பனடியேனே. (௭)

தொக்கிலங்கியாறெல்லாம்பரந்தோடித், தொடுகடலே
புக்கின்றிப்புறநிற்கமாட்டாதுமற்றவைபோல்
மிக்கிலங்குமுகினிறத்தாய்வித்துவக்கோட்டம்மா, வுன்
புக்கிலங்குசீரல்லாற்புக்கிலன்காண்புண்ணியனே. (௮)

நின்னையேதான்வேண்டிநீள்செல்வம்வேண்டாதான்
தன்னையேதான்வேண்டுஞ்செல்வம்போன்மாயத்தால்
மின்னையேசேர்திகிரிவித்துவக்கோட்டம்மானே
நின்னையேதான்வேண்டிநிற்பனடியேனே. (௯)

* வித்துவக்கோட்டம்மாநீவேண்டாயேயாயிடினும்
மற்றாரும்பற்றிலேனென்றவனைத்தாணயந்த
கொற்றவேற்றானைக்குலசேகரன்சொன்ன
நற்றமிழ்பத்தும்வல்லார்நண்ணார்நரகமே. (௧௦)

குலசேகரப்பெருமாள்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

தருக்கண்டார்மீன்வாளா வெங்கச்செந்தழல் எத்தனைதொக்குநின்னைவித்தேர்.

ஆ. திருமொழி - ௫ - க்கு - பாசுரம் - ௫௧.

## ௬ - வது. ஏர்மலர்ப்பூங்குழல்.

ஆ ய் ச் சி ய ரு டி ய ம ல னை பெ ள் க ல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

செஞ்சுருட்டிராகம் - ஆதிதாளம்.

ஏர்மலர்ப்பூங்குழலாயர்மாதரெனைப்பலருள்ளவிவ்வூரி, லுன்றன்
முறையிர்[illegible]தற்காசையின்மையறிந்தறிந்தேயுன்றன்பொய்யைக்கேட்டுக்
வெறியார்[illegible]ார்ப்பனிக்கூதலெய்திக்கூசிநடுங்கியமுனையாற்றில்
நெறியாய்[illegible]ன்றிற்புலரநின்றேன்வாசுதேவாவுன்வரவுபார்த்தே. (௧)

கெண்டையொண்கண்மடவாளொருத்திகீழையகத்துத்தயிர்கடையக்
கண்டொல்லைநானுங்கடைவனென்றுகள்ளவிழியைவிழித்துப்புக்கு
வண்டமர்பூங்குழல்தாழ்ந்துலாவவாண்முகம்வேர்ப்பச்செவ்வாய்துடிப்பத்
தண்டயிர்நீகடைந்திட்டவண்ணந்தாமோதராமெய்யறிவனானே. (௨)

கருமலர்க்கூந்தலொருத்திதன்னைக்கடைக்கணித்தாங்கேயொருத்திதன்பால்
மருவி, மனம்வைத்துமற்றொருத்திக்குரைத்தொருபேதைக்குப்பொய்குறித்துப்
புரிகுழல்மங்கையொருத்திதன்னைப்புணர்தியவளுக்குமெய்யனல்லை
மருதிறுத்தாயுன்வளர்த்தியூடேவளர்கின்றதாலுன்றன்மாயைதானே.

தாய்முலைப்பாலிலமுதிருக்கத்தவழ்ந்துதளர்நடையிட்டுச்சென்று
பேய்முலைவாய்வைத்துநஞ்சையுண்டுபித்தனென்றேபிறரேசநின்றாய்
ஆய்மிகுகாதலோடியானிருப்பயான்விடவந்தவென்றூதியோடே
நீமிகுபோகத்தைநன்குகந்தாயதுவுமுன்கோரம்புக்கேற்குமன்றே. ௪

மின்னொத்தநுண்ணிடையாளைக்கொண்டுவீங்கிருள்வாயென்றன்வீதியூடே
பொன்னொத்தவாடைகுக்கூடலிட்டுப்போகின்றபோதுநான்கண்டுநின்றேன்
கண்ணுற்றவளைநீகண்ணாலிட்டுக்கைவிளிக்கின்றதுங்கண்டேநின்றேன்
என்னுக்கவளைவிட்டிங்குவந்தாயின்னமங்கேநடநம்பிநீயே. (௫)

மற்பொருதோளுடைவாசுதேவாவல்வினையேன்றுயில்கொண்டவாறே
இற்றையிரவிடையேமத்தென்னையின்னணைமேலிட்டகன்றுநீபோய்
அற்றையிரவுமோர்பிற்றைநாளுமரிவையரோடுமணைந்துவந்தாய்
எற்றுக்குநீயென்மருங்கில்வந்தாயெம்பெருமானீயெழுந்தருளே. (௬)

பையரவினணைப்பள்ளியினாய்பண்டையோமல்லோநாம், நீயுகக்கும்
மைபரியொண்கண்ணினாருமல்லோம்வைகியென்சேரிவரவொழிநீ
செய்யவுடையுந்திருமுகமுஞ்செங்கனிவாயுங்குழலுங்கண்டு
பொய்யொருநாள்பட்டதேயமையும்புள்ளுவம்பேசாதேபோகுநம்பீ.

என்னைவருகவெனக்குறித்திட்டினமலர்முல்லையின்பந்தல்நீழல்
மன்னியவளைப்புணரப்புக்குமற்றென்னைக்கண்டுழறநெகிழ்ந்தாய்
பொன்னிறவாடையைக்கையிற்றங்கிப்பொய்யச்சங்காட்டிநீபோதியேலும்
இன்னமென்கையகத்திங்கொருநாள்வருதியேலென்சினந்தீர்வனானே. ௮

மங்கலநல்வனமாலைமார்பிலிலங்கமயிற்றழைப்பீலிசூடிப்
பொங்கிளவாடையரையிற்சாத்திப்பூங்கொத்துக்காதிற்புணரப்பெய்து
கொங்குநறுங்குழலார்களோடுகுழைந்துகுழலினிதூதிவந்தாய்
எங்களுக்கேயொருநாள்வந்தூதவுன்குழலின்னிசைபோதாராதே. ௯

* அல்லிமலர்த்திருமங்கைகேள்வன்றன்னைநயந்திளவாய்ச்சிமார்கள்
எல்லிப்பொழுதினிலேமத்தூடியெள்கியுரைத்தவுரையதனைக்
கொல்லிநகர்க்கிறைகூடற்கோமான்குலசேகரனின்னிசையின்மேவிச்
சொல்லியவின்றமிழ்மாலைபத்துஞ்சொல்லவல்லார்க்கில்லைதுன்பந்தானே.

குலசேகரப்பெருமாள் திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஏர்கெண்டைகருத்தாய்மின்மல்பையரவென்னைமங்கலவல்லி ஆலை.

ஆ திருமொழி - ௬ - க்கு - பாசுரம் - ௬௧.

---

## எ - வது. ஆலைநீள்கரும்பு.

சேய்வளர்காட்சியின்சீரையசோதைபோல்தாய்தேவகிபெருந்
தாழ்வெணிப்புலம்பல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கேதாரகௌளராகம் - அடதாளம்.

* ஆலைநீள்கரும்பன்னவன்றாலோவம்புயத்தடங்கண்ணினன்றாலோ
வேலைநீர்நிறத்தன்னவன்றாலோவேழப்போதகமன்னவன்றாலோ
ஏலவார்குழலென்மகன்றாலோவென்றென்றுன்னையென்வாயிடைநிறையத்
தாலொலித்திடுந்திருவினையில்லாத்தாயரிற்கடையாயினதாயே. (க)

வடிக்கொளஞ்சனமெழுதசெம்மலர்க்கண்மருவிமேலினிதொன்றினைநோக்கி
முடக்கிச்சேவடிமலர்ச்சிறுகருந்தாள்பொலியுநீர்முகிற்குழவியேபோல
அடக்கியாரச்செஞ்சிறுவிரலனைத்துமங்கையோடணைத்தானையிற்கிடந்த
கிடக்கைகண்டிடப்பெற்றிலனந்தோகேசவாகெடுவேன்கெடுவேனே.

முந்தைநன்முறையன்புடைமகளிர்முறைமுறைதந்தங்குறங்கிடையிருத்தி
எந்தையேயெந்தன்குலப்பெருஞ்சுடரேயெழுமுகிற்கணத்தெழிற்கவரேறே
உந்தையாவனென்றுரைப்பநின்செங்கேழ்விரலினுங்கடைக்கண்ணினுங்காட்ட
நந்தன்பெற்றனநல்வினையில்லாநங்கள்கோன்வசுதேவன்பெற்றிலனே.

களிநிலாவெழின்மதிபுரைமுகமுங்கண்ணனேதிண்கைமார்புந்திண்டோளும்
தளிர்மலர்க்கருங்குழற்பிறையதுவுந்தடங்கொள்தாமரைக்கண்களும்பொலிந்த
இளமையின்பத்தையின்றென்றன்கண்ணாற்பருகுவேற்கிவள்தாயெனநினைந்த
அளவில்பிள்ளைமையின்பத்தையிழந்தபாவியேனெனதாவிநில்லாதே.

மருவிநின்றிருநெற்றியிற்சுட்டியசைதரமணிவாயிடைமுத்தம்
தருதலும், முன்றன்தாதையைப்போலும்வடிவுகண்டுகொண்டுள்ளமுள்குளிர
விரலைச்செஞ்சிறுவாயிடைச்சேர்த்துவெகுளியாய்நின்றுரைக்குமவ்வுரையும்
திருவிலேனொன்றும்பெற்றிலேனெல்லாந்தெய்வநங்கையசோதைபெற்றாளே.

தண்ணந்தாமரைக்கண்ணனேகண்ணுதவழ்ந்தெழுந்துதளர்ந்ததோர்நடையால்
மண்ணிற்செம்பொடியாடிவந்தென்றன்மார்பின்மன்னிடப்பெற்றிலேனந்தோ
வண்ணச்செஞ்சிறுகைவிரலனைத்தும்வாரிவாய்க்கொண்டவடிசிலின்மிச்சில்
உண்ணப்பெற்றிலேனோகொடுவினையேனென்னையென்செய்யப்பெற்றதெம்மோ
[யே.

குழகனேயென்றன்கோமளப்பிள்ளாய்கோவிந்தாவென்குடங்கையின்மன்னி
ஒழுகுபேரெழிலிளஞ்சிறுதளிர்போலொருகையாலொருமுலைமுகநெருடா
மழலைமென்னகையிடையிடையருளவாயிலேமுலையிருக்கவென்முகத்தே
எழிற்கொள்நின்றிருக்கண்ணிணைநோக்கந்தன்னையுமிழந்தேனிழந்தேனே.

முழுதம்வெண்ணெயளைந்துதொட்டுண்ணுமுகிழிளஞ்சிறுத்தாமரைக்கையும்
எழிற்கொடாம்புகொண்டடிப்பதற்கிளகுங்கலையும்வெண்டயிர்தோய்ந்தசெவ்வா
அழுகையுமஞ்சிநோக்குமந்நோக்குமணிகொள்செஞ்சிறுவாய்நெளிப்பதுவும்[யும்
தொழுகையுமிவைகண்டவசோதைதொல்லையின்பத்திறுதிகண்டாளே.

குன்றினாற்குடைகவித்ததுங்கோலக்குரவைகோத்ததுங்குடமாட்டும்
கன்றினால்விளவெறிந்ததுங்காலாற்காளியன்றலைமிதித்ததுமுதலா
வென்றிசேர்பிள்ளைநல்விளையாட்டமனைத்திலுமங்கென்னுள்ளமுள்குளிர
ஒன்றுங்கண்டிடப்பெற்றிலேனடியேன்காணுமாறினியுண்டெனிலருளே.

வஞ்சமேவியநெஞ்சுடைப்பேய்ச்சிவறண்டுநார்நரம்பெழக்கரிந்துக்க
நஞ்சமார்தருசுழிமுலையந்தோசுவைத்துநீயருள்செய்துவளர்ந்தாய்
கஞ்சனாள்கவர்கருமுகிலெந்தாய்கடைப்பட்டேன்வெறிதேமுலைசுமந்து
தஞ்சமேலொன்றிலேனுய்ந்திருந்தேன்றக்கதேநல்லதாயைப்பெற்றாயே.

* மல்லைமாநகர்க்கிறையவன்றன்னைவான்செலுத்திவந்தீங்கெனமாயத்
தெல்லையிற்பிள்ளைசெய்வனகாணுத்தெய்வத்தேவகிபுலம்பியபுலம்பல்
கொல்லிகாவலன்மாலடிமுடிமேற்கோலமாங்குலசேகரன்சொன்ன
நல்லிசைத்தமிழ்மாலைவல்லார்கள்நண்ணுவாரொல்லைநாரணனுலகே.

குலசேகரப்பெருமாள்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆலைவடிமுந்தைகளிமருவுதண்ணன் குழகன்முழுதுகுன்று வஞ்சமல்லைமன்னு.

ஆ திருமொழி - எ - க்கு - பாசுரம் - எഉ.

---

## அ - வது. மன்னுபுகழ்.

### கண்ணபுரத்தொளிர்காகுத்தன்றாலாட்டு.

கலிவிருத்தம்.

நீலாம்புரிராகம் - திரிபுடைதாளம்.

* மன்னுபுகழ்க்கௌசலைதன்மணிவயிறுவாய்த்தவனே
தென்னிலங்கைக்கோன்முடிகள்சிந்துவித்தாய், செம்பொன்சேர்
கன்னிநன்மாமதிள்புடைசூழ்கணபுரத்தென்கருமணியே
என்னுடையவின்னமுதேயிராகவனேதாலேலோ. (க)

புண்டரீகமலரதன்மேற்புவனியெல்லாம்படைத்தவனே
திண்டிறலாள்தாடகைதன்னுரமுருவச்சிலைவளைத்தாய்
கண்டவர்தம்மனம்வழங்குங்கணபுரத்தென்கருமணியே
எண்டிசையுமாளுடையாயிராகவனேதாலேலோ. (உ)

கொங்குமலிகருங்குழலாள்கௌசலைதன்குலமதலாய்
தங்குபெரும்புகழ்ச்சனகன்றிருமருகாதாசரதீ
கங்கையிலுந்தீர்த்தமலிகணபுரத்தென்கருமணியே
எங்கள்குலத்தின்னமுதேயிராகவனேதாலேலோ. (ங)

தாமரைமேலயனவனைப்படைத்தவனே, தயரதன்றன்
மாமதலாய்மைதுலிதன்மணவாளா, வண்டினங்கள்
காமரங்களிசைபாடுங்கணபுரத்தென்கருமணியே
ஏமருவெஞ்சிலைவலவாவிராகவனேதாலேலோ. (ச)

பாராளும்படர்செல்வம்பரதநம்பிக்கேயருளி
ஆராவன்பிளையவனோடருங்கானமடைந்தவனே
சீராளும்வரைமார்பாதிருக்கண்ணபுரத்தரசே
தாராரும்நீண்முடியென்றாசரதிதாலேலோ. (ரு)

சுற்றமெல்லாம்பின்றொடரத்தொல்கானமடைந்தவனே
அற்றவர்கட்கருமருந்தேயயோத்திநகர்க்கதிபதியே
கற்றவர்கள்தாம்வாழுங்கணபுரத்தென்கருமணியே
சிற்றவைதன்சொற்கொண்டசீராமாதாலேலோ. (சா)

ஆலினிலைப்பாலகனாயன்றுலகமுண்டவனே
வாலியைக்கொன்றரசிளையவானரத்துக்களித்தவனே
காலின்மணிகரையலைக்குங்கணபுரத்தென்கருமணியே
ஆலிநகர்க்கதிபதியேயயோத்திமனேதாலேலோ. (எ)

மலையதனாலணைகட்டிமதிளிலங்கையழித்தவனே
அலைகடலைக்கடைந்தமரர்க்கமுதருளிச்செய்தவனே
கலைவலவர்தாம்வாழுங்கணபுரத்தென்கருமணியே
சிலைவலவாசேவகனேசீராமாதாலேலோ. (அ)

தளையவிழுநறுங்குஞ்சித்தயரதன்றன்குலமதலாய்
வளையவொருசிலையதனால்மதிளிலங்கையழித்தவனே
களைகழுநீர்மருங்கலருங்கணபுரத்தென்கருமணியே
இளையவர்கட்கருளுடையவிராகவனேதாலேலோ. (கூ)

தேவரையுமசுரரையுந்திசைகளையும்படைத்தவனே
யாவரும்வந்தடிவணங்கவரங்கநகர்த்துயின்றவனே
காவிரிநன்னதிபாயுங்கணபுரத்தென்கருமணியே
ஏவரிவெஞ்சிலைவலவாவிராகவனேதாலேலோ. (க0)

* கன்னிநன்மாமதில்புடைசூழ்கணபுரத்தென்காகுத்தன்
தன்னடிமேற், றாலேலோவென்றுரைத்ததமிழ்மாலை
கொன்னவிலும்வேல்வலவன்குடைக்குலசேகரன்சொன்ன
பன்னியநூல்பத்தும்வல்லார்பாங்காயபத்தர்களே. (கக)

குலசேகரப்பெருமாள்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

மன்னுபுண்டரிகொங்குதாமரை பாசுரம் ஆலின்மலைதலைதேவர்கன்னி வன்றுன்.

ஆ திருமொழி - அ - க்கு-பாசுரம் - அங.

---

## சு - வது. வன்றுளினிணை.

### தனையன்கான்புகத்தசரதன்புலம்பல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

காம்போதிராகம் - ஆதிதாளம்.

* வன்றுளினிணைவணங்கிவளநகரந்தொழுதேத்தமன்னனுவான்
நின்றுயை, யரியணைமேலிருந்தாயைநெடுங்கானம்படரப்போகு
வென்றுளெம்மிராமாவோவுனைப்பயந்தகைகேசிதன்சொற்கேட்டு
நன்றுகநானிலத்தையாள்வித்தேன்நன்மகனேயுன்னைநானே. (க)

வெவ்வாயேன்வெவ்வுரைகேட்டிருநிலத்தைவேண்டாதேவிரைந்து,வென்றி
மைவாயகளிறொழிந்துதேரொழிந்துமாவொழிந்துவனமேமேவி
நெய்வாய்வேல்நெடுங்கண்ணேரிழையுமிளங்கோவும்பின்புபோக
எவ்வாறுநடந்தனையெம்மிராமாவோவெம்பெருமானென்செய்கேனே.

கொல்லணைவேல்வரிநெடுங்கட்கௌசலைதன்குலமதலாய்குனிவில்லேந்தும்
மல்லணைந்தவரைத்தோளாவல்வினையேன்மனமுருக்கும்வகையேகற்றாய்
மெல்லணைமேல்முன்றுயின்றாயின்றினிப்போய்வியன்கானல்மரத்தினிழல்
கல்லணைமேற்கண்டுயிலக்கற்றனையோகாகுத்தாகரியகோவே. (ங)

வாபோகுவாவின்னம்வந்தொருகால்கண்டுபோமலராள்கூந்தல்
வேய்போலுமெழிற்றேளிதன்பொருட்டாவிடையோன்றன்வில்லைச்செற்றாய்
மாபோகுநெடுங்கானம்வல்வினையேன்மனமுருக்குமகனே, யின்று
நீபோகவென்னெஞ்சமிருபிளவாய்ப்போகாதேநிற்குமாறே. (ச)

பொருந்தார்கைவேல்நுதிபோல்பரற்பாயமெல்லடிகள்குருதிசோர
விரும்பாதகான்விரும்பிவெயிலுறைப்பவெம்பசிநோய்கூர, வின்று
பெரும்பாவியேன்மகனேபோகின்றாய்கேகயர்கோன்மகளாய்ப்பெற்ற
அரும்பாவிசொற்கேட்டவருவினையேனென்செய்கேனந்தோயானே.

அம்மாவென்றுகந்தழைக்குமார்வச்சொற்கோளாதேபணிசேர்மார்வம்
என்மார்வத்திடையழுந்தத்தழுவாதேமுழுசாதேமோவாதுச்சிக்
கைம்மாவின்நடையன்னமென்னடையுங்கமலம்போல்முகமுங்காணு
தெம்மானையென்மகனையிழந்திட்டவிழித்தகையேனிருக்கின்றேனே.

பூமருவுநறுங்குஞ்சிபுன்சடையாப்புனைந்துபூந்துகில்சேரல்குல்
காமரெழில்விழலுடுத்துக்கலனணியாதங்கங்களழகுமாறி
ஏமருதோளென்புதல்வனியானின்றுசெலத்தக்கவனந்தான்சேர்தல்
தூமறையீரிதுதகவோசுமந்திரனேவசிட்டனேசொல்லீர்நீரே. (எ)

பொன்பெற்றாரெழில்வேதப்புதல்வனையுந்தம்பியையும்பூவைபோலும்
மின்பற்றாநுண்மருங்குல்மெல்லியலென்மருகியையும்வனத்திற்போக்கி
நின்பற்றாநின்மகன்மேல்பழிவிளைத்திட்டென்னையுநீள்வானிற்போக்க
என்பெற்றாய்கைகேசியிருநிலத்தினினிதாகவிருக்கின்றாயே. (அ)

முன்னொருநாள்மழுவாளிசிலைவாங்கியவன்றவத்தைமுற்றுஞ்செற்றாய்
உன்னையுமுன்னருமையையுமுன்மோயின்வருத்தமுமொன்றாகக்கொள்ளா
தென்னையுமென்மெய்யுரையுமெய்யாகக்கொண்டுவனம்புக்கவெந்தாய்
நின்னையேமகனாகப்பெறப்பெறுவேனேழ்பிறப்புநெடுந்தோள்வேந்தே.

தேனகுமாமலர்க்கூந்தற்கௌசலையுஞ்சுமித்திரையுஞ்சிந்தைநோவக்
கூனுருவிற்கொழுந்தொழுத்தைசொற்கேட்டகொடியவடன்சொற்கொண், டி
கானகமேமிகவிரும்பிநீதுறந்தவளநகரைத்துறந்து, நானும் [ன்று
வானகமேமிகவிரும்பிப்போகின்றேன்மனுகுலத்தார்தங்கள்கோவே.

* ஏரார்ந்தகருநெடுமாலிராமனாய்வனம்புக்கவதனுக்காற்றா [னைக்
தாரார்ந்ததடவரைத்தோள்தயரதன்றான்புலம்பியவப் புலம்பல் தன்
கூரார்ந்தவேல்வலவன்கோழியர்கோன்குடைக்குலசேகரன்சொற்செய்த
சீரார்ந்ததமிழ்மாலையிவைவல்லார்தீநெறிக்கட்செல்லார்தாமே. (கக)

குலசேகரப்பெருமாள்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

வன்றாள் வெவ்வாய் கொல்லணைவாபோகுபொருந்தாவம்மா பூப்பொன்
முன்தேன்ஏரார் அங்கண்.

ஆ திருமொழி - கூ - க்கு - பாசுரம் - கூச.

# கo - வது. அங்கணெடுமதிள்.

தில்லைநகர்த்திருச்சித்திரகூடமால்

தொல்லிராமனாய் தோன்றிய கதைமுறை.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கலியாணிராகம் - ஆதிதாளம்.

* அங்கணெடுமதிள்புடைசூழயோத்தியென்னு
மணிநகரத்துலகனைத்தும்விளங்குஞ்சோதி
வெங்கதிரோன்குலத்துக்கோர்விளக்காய்த்தோன்றி
விண்முழுதுமுய்யக்கொண்டவீரன்றன்னைச்
செங்கணெடுங்கருமுகிலையிராமன்றன்னைத்
தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள்
எங்கள்தனிமுதல்வனையெம்பெருமான்றன்னை
யென்றுகொலோகண்குளிரக்காணுநாளே. (க)

வந்தெதிர்ந்ததாடகைதன்னுரத்தைக்கீறி
வருகுருதிபொழிதரவன்கணையொன்றேவி
மந்திரங்கொள்மறைமுனிவன்வேள்விகாத்து
வல்லரக்கருயிருண்டமைந்தன்காண்மின்
செந்தளிர்வாய்மலர்நகைசேர்செழுந்தண்சோலைத்
தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள்
அந்தணர்களொருமூவாயிரவரேத்த
வணிமணியாசனத்திருந்தவம்மான்றானே. (உ)

செவ்வரிநற்கருநெடுங்கட்சீதைக்காகிச்
சினவிடையோன்சிலையிறுத்துமழுவாளேந்தி
வெவ்வரிநற்சிலைவாங்கிவென்றிகொண்டு
வேல்வேந்தர்பகைதடிந்தவீரன்றன்னை
தெவ்வரஞ்சுநெடும்புரிசையுயர்ந்தபாங்கர்த்
தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள்
எவ்வரிவெஞ்சிலைத்தடக்கையிராமன்றன்னை
யிறைஞ்சுவாரிணையடியேயிறைஞ்சினேனே. (ங)

தொத்தலர்பூஞ்சுரிகுழற்கைகேசிசொல்லால்
தொன்னகரந்துறந்துதுறைக்கங்கைதன்னைப்
பத்தியுடைக்குகன்கடத்தவனம்போய்ப்புக்குப்
பரதனுக்குப்பாதுகையுமரசுமீந்து

சித்திரகூடத்திருந்தான்றன்னையின்று
தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள்
எத்தனையுங்கண்குளிரக்காணப்பெற்ற
விருநிலத்தார்க்கிமையவர்நேரொவ்வார்தாமே. (ச)

வலிவணக்குவரைநெடுந்தோள்விராதைக்கொன்று
வண்டமிழ்மாமுனிகொடுத்தவரிவில்வாங்கி
கலைவணக்குநோக்கரக்கிமூக்கைநீக்கிக்
கரனோடுதூடணன்றனுயிரைவாங்கிச்
சிலைவணக்கிமான்மறியவெய்தான்றன்னைத்
தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள்
தலைவணக்கிக்கைகூப்பியேத்தவல்லார்
திரிதலாத்தவமுடைத்தித்தரணிதானே. (ரு)

தனமருவுவைதேவிபிரியலுற்றுத்
தளர்வெய்திச்சடாயுவைவைகுந்தத்தேற்றி
வனமருவுகவியரசன்காதல்கொண்டு
வாலியைக்கொன்றிலங்கைநகரரக்கர்கோமான்
சினமடங்கமாருதியாற்சுடுவித்தானைத்
தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள்
இனிதமர்ந்தவம்மானையிராமன்றன்னை
யேத்துவாரிணையடியேயேத்தினேனே. (சு)

குரைகடலையடலம்பான்மறுகவெய்து
குலைகட்டிமறுகரையையதனாலேறி
எரிநெடுவேலரக்கரொடுமிலங்கைவேந்த
னின்னுயிர்கொண்டவன்றம்பிக்கரசுமீந்து
திருமகளோடினிதமர்ந்தசெல்வன்றன்னைத்
தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள்
அரசமர்ந்தானடிசூடுமரசையல்லா
லரசாகவெண்ணேன்மற்றரசுதானே. (எ)

அம்பொனெடுமணிமாடவயோத்தியெய்தி
யரசெய்தியகத்தியன்வாய்த்தான்முன்கொன்றான்
தன்பெருந்தொல்கதைகேட்டுமிதிலைச்செல்வி
யுலகுய்யத்திருவயிறுவாய்த்தமக்கள்
செம்பவளத்திரள்வாய்த்தன்சரிதைகேட்டான்
றில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள்
எம்பெருமான்றன்சரிதைசெவியாற்கண்ணாற்
பருகுவோமின்னமுதமதியோமன்றே. (அ)

செறிதவச்சம்புகன்றன்னைச்சென்றுகொன்று
 செழுமறையோனுயிர்மீட்டுத்தவத்தோனீந்த
நிறைமணிப்பூணணியுங்கொண்டிலவணன்றன்னைத்
 தம்பியால்வானேற்றிமுனிவன்வேண்டத்
திறல்விளங்குமிலக்குமனைப்பிரிந்தான்றன்னைத்
 தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள்
உறைவானை, மறவாதவுள்ளந்தன்னை
 யுடையோமற்றுறுதுயரமடையோமன்றே. (கூ)

அன்றுசராசரங்களைவைகுந்தத்தேற்றி
 யடலரவப்பகையேறியசுரர்தம்மை
வென், றிலங்குமணிநெடுங்தோள்நான்குந்தோன்ற
 விண்முழுதுமெதிர்வரத்தந்தாமமேவி
சென்றினிதுவீற்றிருந்தவம்மான்றன்னைத்
 தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள்
என்றுநின்றுனவனிவனென்றேத்திநாளு
 மிறைஞ்சுமினோவெப்பொழுதுந்தொண்டீர்நீரே. (க0)

※ தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள்
 திறல்விளங்குமாருதியோடமர்ந்தான்றன்னை
எல்லையில்சீர்த்தயரதன்றன்மகனய்த்தோன்றிற்
 றதுமுதலாத்தன்னுலகம்புக்கதீறுக்
கொல்லியலும்படைத்தானைக்கொற்றவொள்வாள்
 கோழியர்கோன்குடைக்குலசேகரன்சொற்செய்த
நல்லியலின்றமிழ்மாலைபத்தும்வல்லார்
 நலந்திகழ்நாரணனடிக்கீழ்நண்ணுவாரே. (கக)

குலசேகரப்பெருமாள்திருவடிகளேஶரணம்.

ஜீயர் திருவடிகளேஶரணம்.

அங்கண்வந்துசெவ்வரி தொத்துவலிதனக்குளா அம்பொன்செறியன்று தில்லை பூ.

ஆ திருமொழி - க0 - க்கு - பாசுரம் - க0டு.

பெருமாள்திருமொழி முற்றும்.

---

ஆ திருப்பல்லாண்டுதொடங்கி பாசுரம் - எடுக.

ஸ்ரீ







ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

திருமழிசைப்பிரான் திருவாய்மலர்ந்தருளிய

ஶாஸ்த்ரஸாரமாகும்

# திருச்சந்தவிருத்தம்.

தனியன்

கலிவிருத்தம்.

திருக்கச்சிநம்பிகளருளிச்செய்தது.

தருச்சந்தப்பொழில்தழுவுதாரணியின்றுயர்தீரத்
திருச்சந்தவிருத்தஞ்செய்திருமழிசைப்பரன்வருமூர்
கருச்சந்துங்காரகிலுங்கமழ்கோங்குமணநாறும்
திருச்சந்தத்துடன்மருவுதிருமழிசைவளம்பதியே.

இருவிகற்பநேரிசைவெண்பா.

உலகுமழிசையுமுள்ளுணர்ந்துதம்மில்
புலவர்புகழ்க்கோலாற்றூக்க—உலகுதன்னை
வைத்தெடுத்தபக்கத்தும்மாநீர்மழிசையே
வைத்தெடுத்தபக்கம்வலிது.

தத்வநிலை பரந்தாமனேயெனல்.

கலிவிருத்தம்.

யமுனகலியாணிராகம் - ரூபகதாளம்.

பூநிலாயவைந்துமாய்ப்புனற்கணின்றநான்குமாய்த்
தீநிலாயமூன்றுமாய்ச்சிறந்தகாலிரண்டுமாய்
மீநிலாயதொன்றுமாகிவேறுவேறுதன்மையாய்
நீநிலாயவண்ணநின்னையார்நினைக்கவல்லரே. (க)

ஆறுமாறுமாறுமாயோரைந்துமைந்துமைந்துமாய்
ஏறுசீரிரண்டுமூன்றுமேழுமாறுமெட்டுமாய்
வேறுவேறுஞானமாகிமெய்யினோடுபொய்யுமாய்
ஊறொடோசையாயவைந்துமாயவாயமாயனே. (உ)

ஐந்துமைந்துமைந்துமாகியல்லவற்றுளாயமாய்
ஐந்துமூன்றுமொன்றுமாகிநின்றவாதிதேவனே
ஐந்துமைந்துமைந்துமாகியந்தரத்தணைந்துநின்று
ஐந்துமைந்துமாயநின்னையாவர்காணவல்லரே. (ரு)

மூன்றுமுப்பதாறினோடொரைந்துமைந்துமைந்துமாய்
மூன்றுமூர்த்தியாகிமூன்றுமூன்றுமூன்றுமூன்றுமாய்
தோன்றுசோதிமூன்றுமாய்த்துளக்கமில்விளக்கமாய்
ஏன்றனுவியுட்புகுந்ததென்கொலோவெம்மீசனே. (சு)

நின்றியங்குமொன்றிலாவுருக்கடோறு, மாவியாய்
ஒன்றியுட்கலந்துநின்றநின்னதன்மையின்னதென்று
என்றும்யார்க்குமெண்ணிறந்தவாதியாய், நின்னுந்திவாய்
அன்றுநான்முகற்பயந்தவாதிதேவனல்லையே. (எ)

நாகமேந்துமேருவெற்பைநாகமேந்துமண்ணினை
நாகமேந்துமாகமாகமாகமேந்துவார்புனல்
மாகமேந்துமங்குல்தீயோர்வாயுவைந்தமைந்துகாத்
தேகமேந்திநின்றநீர்மைநின்கணேயியன்றதே. (அ)

ஒன்றிரண்டுமூர்த்தியாயுறக்கமோடுணர்ச்சியாய்
ஒன்றிரண்டுகாலமாகிவேலைஞாலமாயினாய்
ஒன்றிரண்டுதீயுமாகியாயனாயமாயனே
ஒன்றிரண்டுகண்ணினுனுமுன்னையேத்தவல்லனே. (எ)

ஆதியானவானவர்க்குமண்டமாயவப்புறத்து
ஆதியானவானவர்க்குமாதியானவாதிநீ
ஆதியானவானவாணரந்தகாலநீயுரைத்தி
ஆதியானகாலநின்னையாவர்காணவல்லரே. (அ)

தாதுலாவுகொன்றைமாலைதுன்னுசெஞ்சடைச்சிவன்
நீதியால்வணங்குபாதநின்மலாநிலாயசீர்
வேதவாணர்கீதவேள்விநீதியான்கேள்வியார்
நீதியால்வணங்குகின்றநீர்மைநின்கணின்றதே. (கூ)

தன்னுளேதிரைத்தெழுந்தரங்கவெண்தடங்கடல்
தன்னுளேதிரைத்தெழுந்தடங்குகின்றதன்மைபோல்
நின்னுளேபிறந்திறந்துநிற்பவுந்திரிபவும்
நின்னுளேயடங்குகின்றநீர்மைநின்கணின்றதே. (கo)

அபரூப்ராகம் - ரூபகதாளம்.

சொல்லினாற்றொடர்ச்சிநீசொலப்படும்பொருளுநீ
சொல்லினாற்சொலப்படாதுதோன்றுகின்றசோதிநீ
சொல்லினாற்படைக்கநீபடைக்கவந்துதோன்றினார்
சொல்லினாற்சுருங்கநின்குணங்கள்சொல்லவல்லரே. (கக)

உலகுதன்னைநீபடைத்தியுள்ளொடுக்கிவைத்தி, மீண்
டுலகுதன்னுளேபிறத்தியோரிடத்தையல்லையால்
உலகுநின்னொடொன்றிநிற்கவேறுநிற்றியாதலால்
உலகுநின்னையுள்ளசூழல்யாவருள்ளவல்லரோ. (கஉ)

இன்னையென்றுசொல்லலாவதில்லையாதுமிட், டிடைப்
பின்னைகேள்வனென்பருன்பிணக்குணர்ந்தபெற்றியோர்
பின்னையாயகோலமோடுபேருமூருமாதியும்
நின்னையார்நினைக்கவல்லர்நீர்மையால்நினைக்கிலே. (கங)

தூய்மையோகமாயினாய்துழாயலங்கன்மாலையாய்
ஆமையாகியாழ்கடற்றுயின்றவாதிதேவ, நின்
நாமதேயமின்னதென்னவல்லமல்லவாகிலும்
சாமவேதகீதனாயசக்ரபாணியல்லையே. (கச)

அங்கமாறும்வேதநான்குமாகிநின்றவற்றுளே
தங்குகின்றதன்மையாய்த்தடங்கடற்பணத்தலைச்
செங்கணாகணைக்கிடந்தசெல்வமல்குசீரினாய்
சங்கவண்ணமன்னமேனிசார்ங்கபாணியல்லையே. (கரு)

தலைக்கணத்துகட்குழம்புசாதிசோதிதோற்றமாய்
நிலைக்கணங்கள்காணவந்துநிற்றியேலுநீடிரும்
கலைக்கணங்கள்சொற்பொருள்கருத்தினால்நினைக்கொணா
மலைக்கணங்கள்போலுணர்த்துமாட்சிநின்றன்மாட்சியே. (கசா)

ஏகமூர்த்திமூன்றுமூர்த்திநாலுமூர்த்தி, நன்மைசேர்
போகமூர்த்திபுண்ணியத்தின்மூர்த்தியெண்ணில்மூர்த்தியாய்
நாகமூர்த்திசயனமாய்நலங்கடற்கிடந்து, மேல்
ஆகமூர்த்தியாயவண்ணமென்கொலாதிதேவனே. (கஎ)

விடத்தவாயொராயிரமிராயிரங்கண்வெந்தழல்
விடுத்துவீழ்விலாதபோகமிக்கசோதிதொக்கசீர்
தொடுத்துமேல்விதானமாயபௌவநீரராவணைப்
படுத்தபாயல்பள்ளிகொள்வதென்கொல்வேலைவண்ணனே. (கஅ)

புள்ளதாகிவேதநான்குமோதினாயதன்றியும்
புள்ளின்வாய்பிளந்துபுட்கொடிப்பிடித்தபின்னரும்
புள்ளையூர்தியாதலாலதென்கொல்மின்கொள்நேமியாய்
புள்ளின்மெய்ப்பகைக்கடற்கிடத்தல்காதலித்ததே. (ககூ)

கூசமொன்றுமின்றிமாசுணம்படுத்துவேலைநீர்
பேசநின்றதேவர்வந்துபாடமுன்கிடந்ததும்
பாசநின்றநீரில்வாழுமாமையானகேசவா
ஏசவன்றுநீகிடந்தவாறுகூறுதேறவே. (உ0)

அடாணாராகம் - ஆதிதாளம்.

அரங்கனேதரங்கநீர்கலங்கவன்றுகுன்றுசூழ்
மரங்கடேயமாசிலங்குலுங்கமாசுணஞ்சுலாய்
நெருங்கநீகடைந்தபோதுநின்றசூரரென்செய்தார்
குரங்கையாளுகந்தவெந்தைகூறுதேறவீறிதே. (உக)

பண்டுமின்றுமேலுமாயோர்பாலனாகிஞாலமேழும்
உண்டுமண்டியாலிலைத்துயின்றவாதிதேவனே
வண்டுகிண்டுதண்டுழாயலங்கலாய்கலந்தசீர்ப்
புண்டரீகபாவைசேருமார்பபூமிநாதனே. (உஉ)

வானிறத்தொர்சீயமாய்வளைந்தவாளெயிற்றவன்
ஊனிறத்துகிர்த்தலமழுத்தினாயுலாயசீர்
நானிறத்தவேதநாவர்நல்லயோகினால்வணங்கு
பானிறக்கடற்கிடந்தபற்பநாபனல்லையே. (உங)

கங்கைநீர்பயந்தபாதபங்கயத்தெம்மண்ணலே
அங்கையாழிசங்குதண்டுவில்லும்வாளுமேந்தினாய்
சிங்கமாயதேவதேவதேனுலாவுமென்மலர்
மங்கைமன்னிவாழுமார்பவாழிமேனிமாயனே. (உச)

வரத்தினிற்சிரத்தைமிக்கவாளெயிற்றுமற்றவன்
உரத்தினிற்கரத்தைவைத்துகிர்த்தலத்தையூன்றினாய்
இரத்திநீயிதென்னபொய்யிரந்தமண்வயிற்றுளே
கரத்தியுன்கருத்தையாவர்காணவல்லர்கண்ணனே. (உடு)

ஆணினோடுபெண்ணுமாகியல்லவோடுநல்லவாய்
ஊணொடோசையூறுமாகியொன்றலாதமாயையாய்ப்
பூணிபேணுமாயனாகிப்பொய்யினோடுமெய்யுமாய்க்
காணிபேணுமாணியாய்க்கரந்துசென்றகள்வனே. (உசு)

விண்கடந்தசோதியாய்விளங்குஞானமூர்த்தியாய்ப்
பண்கடந்ததேசமேவுபாவநாசநாதனே
எண்கடந்தயோகினோடிரந்துசென்றுமாணியாய்
மண்கடந்தவண்ணநின்னையார்மதிக்கவல்லரே. (உஎ)

படைத்தபாரிடந்தளந்ததுண்டுமிழ்ந்துபௌவநீர்
படைத்தடைத்ததிற்கிடந்துமுன்கடைந்தபெற்றியோய்
மிடைத்தமாலிமாலிமான்விலங்குகாலனூர்புகப்
படைக்கலம்விடுத்தபல்படைத்தடக்கைமாயனே. (உஅ)

பரத்திலும்பரத்தையாதிபௌவநீரணைக்கிடந்
துரத்திலுமொருத்திதன்னைவைத்துகந்ததன்றியும்
நரத்திலும்பிறத்திநாதஞானமூர்த்தியாயினாய்
ஒருத்தருந்நினாதுதன்மையின்னதென்னவல்லரே. (உகூ)

வானகமுமண்ணகமும்வெற்புமேழ்கடல்களும்
போனகஞ்செய்தாலிலைத்துயின்றபுண்டரீகனே
தேனகஞ்செய்தண்ணறுமலர்த்துழாய்நன்மாலையாய்
கூனகம்புகத்தெறித்தகொற்றவில்லியல்லையே. (ந0)

பியாகடைராகம் - திரிபுடைதாளம்.

காலநேமிகாலனேகணக்கிலாதகீர்த்தியாய்
ஞாலமேழுமுண்டுபண்டோர்பாலனாயபண்பனே
வேலைவேவவில்வளைத்தவெல்சினத்தவீர, நின்
பாலராயபத்தர்சித்தமுத்திசெய்யுமூர்த்தியே. (நக)

குரக்கினப்படைகொடுகுரைகடலின்மீதுபோய்
அரக்கரங்கரங்கவெஞ்சரந்துரந்தவாதிநீ
இரக்கமண்கொடுத்தவற்கிரக்கமொன்றுமின்றியே
பரக்கவைத்தளந்துகொண்டபற்பபாதனல்லையே. (நஉ)

மின்னிறத்தெயிற்றரக்கன்வீழவெஞ்சரந்துரந்து
பின்னவற்கருள்புரிந்தரசளித்தபெற்றியோய்
நன்னிறத்தொரின்சொலேழைபின்னைகேள்வ, மன்னுசீர்ப்
பொன்னிறத்தவண்ணனாயபுண்டரீகனல்லையே. (நந)

ஆதியாதியாதிநீயொரண்டமாதி, யாதலால்
சோதியாதசோதிநீயதுண்மையில்விளங்கினாய்
வேதமாகிவேள்வியாகிவிண்ணினோடுமண்ணுமாய்
ஆதியாகியாயனாயமாயமென்னமாயமே. (நச)

அம்புலாவுமீனுமாகியாமையாகியாழியார்
தம்பிரானுமாகிமிக்கதன்புமிக்கதன்றியும்
கொம்பராவுநுண்மருங்குலாயர்மாதர்பிள்ளையாய்
எம்பிரானுமாயவண்ணமென்கொலோவெம்மீசனே. (நரு)

ஆடகத்தபூண்முலையசோதையாய்ச்சிபிள்ளையாய்ச்
சாடுதைத்தொர்புள்ளதாவிகள்ளதாயபேய்மகள்
வீடவைத்தவெய்யகொங்கையையபாலமுதுசெய்
தாடகக்கைமாதர்வாயமுதமுண்டதென்கொலோ. (நசா)

காய்த்தநீள்விளங்கனியுதிர்த்தெதிர்ந்தபூங்குருந்தம்
சாய்த்து, மாபிளந்தகைத்தலத்தகண்ணனென்பரால்
ஆய்ச்சிபாலையுண்டுமண்ணையுண்டுவெண்ணெயுண்டு, பின்
பேய்ச்சிபாலையுண்டுபண்டோரேனமாயவாமனா. (நஎ)

கடங்கலந்தவன்கரிமருப்பொசித்தொர்பொய்கைவாய்
விடங்கலந்தபாம்பின்மேல்நடம்பயின்றநாதனே
குடங்கலந்தகூத்தனாயகொண்டல்வண்ணதண்டுழாய்
வடங்கலந்தமாலைமார்பகாலநேமிகாலனே. (நஅ)

வெற்பெடுத்துவேலைநீர்கலக்கினை, யதன்றியும்
வெற்பெடுத்துவேலைநீர்வரம்புகட்டிவேலைசூழ்
வெற்பெடுத்தவிஞ்சிசூழிலங்கைகட்டழித்தநீ
வெற்பெடுத்துமாரிகாத்தமேகவண்ணனல்லையே. (௩௯)

ஆனைகாத்தோராணைகொன்றதன்றியாயர்பிள்ளையாய்
ஆனைமேய்த்தியானெயுண்டியன்றுகுன்றமொன்றினல்
ஆனைகாத்து, மையரிக்கண்மாதரார்திறத்து, முன்
ஆனையன்றுசென்றடர்த்தமாயமென்னமாயமே. (௪0)

ஆரபிராகம் - ரூபகதாளம்.

ஆயனாகியாயர்மங்கைவேயதோள்விரும்பினாய்
ஆயநின்னையாவர்வல்லரம்பரத்தொடிம்பராய்
மாயமாயமாயைகொல்லதன்றிநீவகுத்தலும்
மாயமாயமாக்கினாயுன்மாயமுற்றுமாயமே. (௪௧)

வேறிசைந்தசெக்கர்மேனிநீறணிந்தபுன்சடைக்
கீறுதிங்கள்வைத்தவன்கைவைத்தவன்கபாலமிசை
ஊறுசெங்குருதியால்நிறைத்தகாரணந்தனை
ஏறுசென்றடர்த்தவீசபேசுகூசமின்றியே. (௪௨)

வெஞ்சினத்தவேழவெண்மருப்பொசித், துருத்தமா
கஞ்சனைக்கடிந்துமண்ணளந்துகொண்டகாலனே
வஞ்சனத்துவந்தபேய்ச்சியாவிபாலுள்வாங்கினாய்
அஞ்சனத்தவண்ணனாயவாதிதேவனல்லையே. (௪௩)

பாலினீர்மைசெம்பொனீர்மைபாசியின்பசும்புறம்
போலுநீர்மை, பொற்படைத்தடர்த்துவண்டுவிண்டுலாம்
நீலநீர்மையென்றிவைநிறைந்தகாலநான்குமாய்
மாலினீர்மைவையகம்மறைத்ததென்னநீர்மையே. (௪௪)

மண்ணுளாய்கொல்விண்ணுளாய்கொல்மண்ணுளேமயங்கிநின்
றெண்ணுமெண்ணகப்படாய்கொலென்னமாயநின்றமர்
கண்ணுளாய்கொல்செய்கைகொல்லனந்தன்மேற்கிடந்தவெம்
புண்ணியா, புனந்துழாயலங்கலம்புனிதனே. (௪௫)

தோடுபெற்றதண்டுழாயலங்கலாடுசென்னியாய்
கோடுபற்றியாழியேந்தியஞ்சிறைப்புள்ளூர்தியால்
நாடுபெற்றநன்மைநண்ணமில்லையேனு, நாயினேன்
வீடுபெற்றிறப்பொடும்பிறப்பறுக்குமாசொலே. (௪௬)

காரொடொத்தமேனிநங்கள்கண்ணவிண்ணினாதனே
நீரிடத்தராவணைக்கிடத்தியென்பரன்றியும்
ஓரிடத்தையல்லையெல்லையில்லையென்பராதலால்
சேர்விடத்தைநாயினேன்றெரிந்திறைஞ்சுமாசொலே. (௪எ)

குன்றினின்றுவானிருந்துநீள்கடற்கிடந்து, மண்
ஒன்றுசென்றதொன்றையுண்டதொன்றிடந்தபன்றியாய்
நன்றுசென்றநாளவற்றுணல்லுயிர்படைத்தவர்க்
கன்றுதேவமைத்தளித்தவாதிதேவனல்லையே. (சஅ)

கொண்டைகொண்டகோதைமீதுதேனுலாவுகூனிகூன்
உண்டைகொண்டரங்கவோட்டியுண்மகிழ்ந்தநாதனூர்
நண்டையுண்டுநாரைபேரவாளைபாய, நீலமே
அண்டைகொண்டுகெண்டைமேயுமந்தணீரரங்கமே. (சகூ)

வெண்டிரைக்கருங்கடற்சிவந்துவேவமுன்னொர்நாள்
திண்டிறற்சிலைக்கைவாளிவிட்டவீரர்சேருமூர்
எண்டிசைக்கணங்களும்மிறைஞ்சியாடுதீர்த்தநீர்
வண்டிரைத்தசோலைவேலிமன்னுசீரரங்கமே. (ருo)

தோடிராகம் - ஆதிதாளம்.

சரங்களைத்துரந்துவில்வளைத்திலங்கைமன்னவன்
சிரங்கள்பத்தறுத்துதிர்த்தசெல்வர்மன்னுபொன்னிடம்
பரந்துபொன்னிரந்துநுந்திவந்தலைக்கும்வார்புனல்
அரங்கமென்பர்நான்முகத்தயன்பணிந்தகோயிலே. (ருக)

பொற்றையுற்றமுற்றல்யானைபோரெதிர்ந்துவந்ததைப்
பற்றியுற்றுமற்றதன்மருப்பொசித்தபாகனூர்
சிற்றெயிற்றுமுற்றன்மூங்கின்மூன்றுதண்டரொன்றினர்
அற்றபத்தர்சுற்றிவாழுமந்தணீரரங்கமே. (ருஉ)

மோடியோடிலச்சையாயசாபமெய்திமுக்கணன்
கூடுசேனைமக்களோடுகொண்டுமண்டிவெஞ்சமத்
தோட, வாணனாயிரங்கரங்கழித்தவாதிமால்
பீடுகோயில்கூடுநீரரங்கமன்னபேரதே. (ருங)

இலைத்தலைச்சரந்துரந்திலங்கைகட்டழித்தவன்
மலைத்தலைப்பிறந்திழிந்துவந்துநுந்துசந்தனம்
குலைத்தலத்திறுத்தெறிந்தகுங்குமக்குழம்பினோடு
அலைத்தொழுகுகாவிரியரங்கமேயவண்ணலே. (ருச)

மன்னுமாமலர்க்கிழத்திவையமங்கைமைந்தனாய்
பின்னுமாயர்பின்னைதோள்மணம்புணர்ந்ததன்றியுப்
உன்னபாதமென்னசிந்தைமன்னவைத்துநல்கினாய்
பொன்னிசூழரங்கமேயபுண்டரீகனல்லையே. (ருரு)

இலங்கைமன்னனைந்தொடைந்துபைந்தலைநிலத்துகக்
கலங்கவன்றுசென்றுகொன்றுவென்றிகொண்டவீரனே
இலங்குநூலர்வேதநாவர்நீதியானகேள்வியார்
வலங்கொளக்குடந்தையுட்கிடந்தமாலுமல்லையே. (ருசா)

சங்குதங்குமுன்கைநங்கைகொங்கைதங்கலுற்றவன்
அங்கமங்கவன்றுசென்றடர்த்தெறிந்தவாழியான்
கொங்குதங்குவார்குழன்மடந்தைமார்குடைந்தநீர்ப்
பொங்குதண்குடந்தையுட்கிடந்தபுண்டரீகனே. (நிஎ)

மரங்கெடநடந்தடர்த்துமத்தயானைமத்தகத்
துரங்கெடப்புடைத்தொர்கொம்பொசித்துகந்தவுத்தமா
துரங்கம்வாய்பிளந்துமண்ணளந்தபாத, வேதியர்
வரங்கொளக்குடந்தையுட்கிடந்தமாலுமல்லையே. (நிஅ)

சாலிவேலிதண்வயற்றடங்கிடங்குபூம்பொழில்
கோலமாடநீடுதண்குடந்தைமேயகோவலா
காலநேமிவக்கிரன்கரன்முரன்சிரமவை
காலனோடுகூடவிற்குனித்தவிற்கைவீரனே. (நிகூ)

செழுங்கொழும்பெரும்பனிபொழிந்திட, வுயர்ந்தவேய்
விழுந்துலர்ந்தெழுந்துவிண்புடைக்கும்வேங்கடத்துணின்
றெழுந்திருந்துதேன்பொருந்துபூம்பொழிற்றழைக்கொழும்
செழுந்தடங்குடந்தையுட்கிடந்தமாலுமல்லையே. (சு0)

கலியாணிராகம் - ரூபகதாளம்.

* நடந்தகால்கணொந்தவோநடுங்கஞாலமேனமாய்
இடந்தமெய்குலுங்கவோவிலங்குமால்வரைச்சுரம்
கடந்தகால்பரந்தகாவிரிக்கரைக்குடந்தையுள்
கிடந்தவாறெழுந்திருந்துபேசுவாழிகேசனே. (சுக)

* காண்டமாடுபொய்கையுட்கரும்பனைப்பெரும்பழம்
புரண்டுவீழ, வாளைபாய்குறுங்குடிநெடுந்தகாய்
திரண்டதோளிரணியன்சினங்கொளாகமொன்றையும்
இரண்டுகூறுசெய்துகந்தசிங்கமென்பதுன்னையே. (சுஉ)

நன்றிருந்துயோகநீதிநண்ணுவார்கள்சிந்தையுள்
சென்றிரந்துதீவினைகள்தீர்த்ததேவதேவனே
குன்றிருந்தமாடநீடுபாடகத்துமூரகத்தும்
நின்றிருந்துவெஃகணைக்கிடந்ததென்னநீர்மையே. (சுங)

நின்றதெந்தையூரகத்திருந்ததெந்தைபாடகத்து
அன்றுவெஃகணைக்கிடந்ததியானிலாதமுன்னெலாம்
அன்றுநான்பிறந்திலேன்பிறந்தபின்மறந்திலேன்
நின்றதுமிருந்ததுங்கிடந்ததுமென்னெஞ்சுளே. (சுசு)

நிற்பதும்மொர்வெற்பகத்திருப்பவிண்கிடப்பதும்
நற்பெருந்திரைக்கடலுள்நானிலாதமுன்னெலாம்
அற்புதனனந்தசயனனாதிபூதன்மாதவன்
நிற்பதுமிருப்பதுங்கிடப்பதுமென்னெஞ்சுளே. (சுரு)

இன்றுசாதனின்றுசாதலன்றியாரும்வையகத்
தொன்றிநின்றுவாழ்தலின்மைகண்டுநீசவொன்கொலோ
அன்றுபாரளந்தபாதபோதையுன்னிவானின்மேல்
சென்றுசென்றுதேவராயிருக்கிலாதவண்ணமே. (சுசு)

சண்டமண்டலத்தினூடுசென்றுவீடுபெற்று, மேல்
கண்டுவீடிலாதகாதலின்பநாளுமெய்துவீர்
புண்டரீகபாதபுண்ணியகீர்த்திநுஞ்செவிமடுத்
துண்டு, நும்முறுவினைத்துயருள்நீங்கியுய்ம்மினோ. (சுஎ)

முத்திறத்துவாணிபத்திரண்டிலொன்றுநீசர்கள்
மத்தராய்மயங்குகின்றதிட்ட தில்லிறந்துபோந்
தெத்திறத்துமுய்வதோருபாயமில்லையுய்குறில்
தொத்தறுத்ததண்டுழாய்நன்மாலைவாழ்த்திவாழ்மினோ. (சுஅ)

காணிலுமுருப்பொலார்செவிக்கினாதகீர்த்தியார்
பேணிலும்வரந்தரமிடுக்கிலாததேவரை
ஆணமென்றடைந்துவாழுமாதர்காளெம்மாதிபால்
பேணிநும்பிறப்பெனும்பிணக்கறுக்ககிற்றிரோ. (சுகூ)

குந்தமோடுசூலம்வேல்கள்தோமரங்கள்தண்டுவாள்
பந்தமானதேவர்கள்பரந்துவானகம்முற
வந்தவாணனீரைஞ்ஞூறுதோள்களைத்துணித்தநாள்
அந்தவந்தவாகுலம்மமரரேயறிவரோ. (எ0)

சாவேறிராகம் - திரிபுடைதாளம்.

வண்டுலாவுகோதைமாதர்காரணத்தினால்வெகுண்
டிண்டவாணனீரைஞ்ஞூறுதோள்களைத்துணித்தநாள்
முண்டநீறன்மக்கள்வெப்புமோடியங்கியோடிடக்
கண்டு, நாணிவாணனுக்கிரங்கினானெம்மாயனே. (எக)

போதின்மங்கைபூதலக்கிழத்திதேவியன்றியும்
போதுதங்குநான்முகன்மகன்னவன்மகன்சொலில்
மாதுதங்குகூறனேறதூர்தியென்றுவேதநூல்
ஓதுகின்றதுண்மையாவதில்லைமற்றுரைக்கிலே. (எஉ)

மரம்பொதச்சரந்துரந்துவாலிவீழமுன்னொர்நாள்
உரம்பொதச்சரந்துரந்தவும்பராளியெம்பிரான்
வரங்குறிப்பில்வைத்தவர்க்கலாதுவானமாளினும்
நிரம்பநீடுபோகமெத்திறத்தும்யார்க்குமில்லையே. (எ௩)

அறிந்தறிந்துவாமனன்னடியிணைவணங்கினால்
செறிந்தெழுந்தஞானமோடுசெல்வமுஞ்சிறந்திடும்
மறிந்தெழுந்ததெண்டிரைபுண்மன்னுமாலைவாழ்த்தினால்
பறிந்தெழுந்ததீவினைகள்பற்றறுதல்பான்மையே. (எச)

ஒன்றிநின்றுநற்றவஞ்செய்தூழியூழிதோறெலாம்
நின்றுநின்றவன்குணங்களுள்ளியுள்ளந்தூயராய்ச்
சென்றுசென்றுதேவதேவரும்பரும்பரும்பராய்
அன்றியெங்கள்செங்கண்மாலையாவர்காணவல்லரே. (எரு)

புன்புலவழியடைத்தரக்கிலச்சினைசெய்து
நன்புலவழிதிறந்துஞானநற்சுடர்கொளீஇ
யென்பிலெள்கிநெஞ்சுருகியுள்கனிந்தெழுந்ததோர்
அன்பிலன்றியாழியானையாவர்காணவல்லரே. (எசு)

எட்டுமெட்டுமெட்டுமாயொரேழுமேழுமேழுமாய்
எட்டுமூன்றுமொன்றுமாகிநின்றவாதிதேவனை
எட்டினாயபேதமோடிறைஞ்சிநின்றவன்பெயர்
எட்டெழுத்துமோதுவார்கள்வல்லர்வானமாளவே. (எஎ)

சோர்விலாதகாதலாற்றொடக்கறாமனத்தராய்
நீரராவணைக்கிடந்தநின்மலன்னலங்கழல்
ஆர்வமோடிறைஞ்சிநின்றவன்பெயரெட்டெழுத்தும்
வாரமாகவோதுவார்கள்வல்லர்வானமாளவே. (எஅ)

பத்தினோடுபத்துமாயொரேழினோடொரொன்பதாய்ப்
பத்துநாற்றிசைக்கணின்றநாடுபெற்றநன்மையாய்ப்
பத்தினாய்த்தோற்றமோடொராற்றன்மிக்கவாதிபால்
பத்தராமவர்க்கலாதுமுத்திமுற்றலாகுமே. (எகூ)

வாசியாகிநேசமின்றிவந்தெதிர்ந்ததேனுகன்
நாசமாகநாளுலப்பநன்மைசேர்பனங்கனிக்கு
வீசிமேல்நிமிர்ந்ததோளினில்லையாக்கினாய்கழற்
காசையாமவர்க்கலாலமரராகலாகுமே. (அ0)

சுருட்டிராகம் - திரிபுடைதாளம்.

கடைந்தபாற்கடற்கிடந்துகாலநேமியைக்கடிந்
துடைந்தவாலிதந்தனக்குதவவந்திராமனாய்
மிடைந்தவேழ்மரங்களும்மடங்கவெய்து, வேங்கடம்
அடைந்தமாலபாதமேயடைந்துநாளுமுய்மினோ. (அக)

எத்திறத்துமொத்துநின்றுயர்ந்துயர்ந்தபெற்றியோய்
முத்திறத்துமூரிநீரராவணைத்துயின்றநின்
பத்துறுத்தசிந்தையோடுநின்றுபாசம்விட்டவர்க்
கெத்திறத்துமின்பமிங்குமங்குமெங்குமாகுமே. (அஉ)

மட்டுலாவுதண்டுழாயலங்கலாய்பொலன்கழல்
விட்டுவீள்விலாதபோகம்விண்ணினண்ணியேறினும்
எட்டினோடிரண்டெனுங்கயிற்றினான்மனந்தனைக்
கட்டி, வீடிலாதுவைத்தகாதலின்பமாகுமே. (அங)

பின்பிறக்கவைத்தனன்கொலன்றிநின்றுதன்கழற்
கன்புறைக்கவைத்தநாளறிந்தனன்கொலாழியான்
தன்றிறத்தொரன்பிலாவறிவிலாதநாயினேன்
என்றிறத்திலென்கொலெம்பிரான்குறிப்பில்வைத்ததே. (அச)

நச்சராவணைக்கிடந்தநாதபாதபோதினில்
வைத்தசிந்தைவாங்குவித்துநீங்குவிக்கநீயினும்
மெய்த்தன்வல்லையாதலாலறிந்தனன்னின்மாயமே
உய்த்துநின்மயக்கினில்மயக்கலென்னைமாயனே. (அரு)

சாடுசாடுபாதனேசலங்கலந்தபொய்கைவாய்
ஆடரவின்வன்பிடர்நடம்பயின்றநாதனே
கோடுநீடுகையசெய்யபாதநாளுமுன்னினால்
வீடனாகமெய்செயாதவண்ணமென்கொல்கண்ணனே. (அசு)

நெற்றிபெற்றகண்ணன்விண்ணினாதனோடுபோதின்மேல்
நற்றவத்தநாதனோடுமற்றுமுள்ளவானவர்
கற்றபெற்றியால்வணங்குபாதநாதவேத, நின்
பற்றலாலோர்பற்றுமற்றதுற்றிலேனுரைக்கிலே. (அஎ)

வெள்ளைவேலைவெற்புநாட்டிவெள்ளெயிற்றராவளாஅ
யள்ளலாக்கடைந்தவன்றருவரைக்கோராமையாய்
உள்ளநோய்கள்தீர்மருந்துவானவர்க்களித்த, வெம்
வள்ளலாரையன்றிமற்றோர்தெய்வநான்மதிப்பனே. (அஅ)

பார்மிகுத்தபாரமுன்னொழிச்சுவானருச்சுனன்
தேர்மிகுத்துமாயமாக்கிநின்றுகொன்றுவென்றிசேர்
மாரதர்க்குவான்கொடுத்துவையமைவர்பாலதாம்
சீர்மிகுத்தநின்னலாலோர்தெய்வநான்மதிப்பனே. (அகூ)

குலங்களாயவீரிரண்டிலொன்றிலும்பிறந்திலேன்
நலங்களாயநற்கலைகள்நாவிலும்நவின்றிலேன்
புலன்களைந்தும்வென்றிலேன்பொறியிலேன்புனித, நின்
இலங்குபாதமன்றிமற்றோர்பற்றிலேனெம்மீசனே. (கூ0)

சங்கராபரணராகம் - ரூபகதாளம்.

பண்ணுலாவுமென்மொழிப்படைத்தடங்கணாள்பொருட்
டெண்ணிலாவரக்கரைநெருப்பினால்நெருக்கினாய்
கண்ணலாலோர்கண்ணிலேன்கலந்தசுற்றமற்றிலேன்
எண்ணிலாதமாயநின்னையென்னுணீக்கலென்றுமே. (கூக)

விடைக்குலங்களேழடர்த்துவென்றிவேற்கண்மாதரார்
கடிக்கலந்ததோள்புணர்ந்தகாலியாயவேலைநீர்
படைத்தடைத்ததிற்கிடந்துமுன்கடைந்தநின்றனக்
கடைக்கலம்புகுந்தவென்னையஞ்சலென்னவேண்டுமே. (கூஉ)

சுரும்பரங்குதண்டுழாய்துதைந்தலர்ந்தபாதமே
விரும்பிநின்றிறைஞ்சுவேற்கிரங்கரங்கவாணனே
கரும்பிருந்தகட்டியேகடற்கிடந்தகண்ணனே
இரும்பரங்கவெஞ்சரந்துரந்தவில்லிராமனே. (கூங)

ஊனின்மேயவாவிநீயுறக்கமோடுணர்ச்சிநீ
ஆனின்மேயவைந்துநீயவற்றுணின்றதூய்மைநீ
வானினோடுமண்ணுநீவளங்கடற்பயனுநீ
யானுநீயதன்றியெம்பிரானுநீயிராமனே. (கூச)

அடக்கரும்புலன்களைந்தடக்கியாசையாமவை
தொடக்கறுத்துவந்துநின்றொழிற்கணின்றவென்னைநீ
விடக்கருதிமெய்செயாதுமிக்கோராசையாக்கினும்
கடற்கிடந்தநின்னலாலொர்கண்ணிலேனெம்மண்ணலே. (கூரு)

வரம்பிலாதமாயைமாயவையமேழுமெய்ம்மையே
வரம்பிலூழியேத்திலும்வரம்பிலாதகீர்த்தியாய்
வரம்பிலாதபல்பிறப்பறுத்துவந்து, நின்கழல்
பொருந்துமாதிருந்தநீவரஞ்செய்புண்டரீகனே. (கூசு)

வெய்யவாழிசங்குதண்டுவில்லும்வாளுமேந்துசீர்க்
கைய, செய்யபோதின்மாதுசேருமார்பநாதனே
ஐயிலாயவாக்கைநோயறுத்துவந்துநின்னடைந்
துய்வதோருபாயநீயெனக்குநல்கவேண்டுமே. (கூஎ)

மறந்துறந்துவஞ்சமாற்றியைம்புலன்களாசையும்
துறந்து, நின்கணாசையேதொடர்ந்துநின்றநாயினேன்
பிறந்திறந்துபேரிடர்ச்சுழிக்கணின்றுநீங்குமா
மறந்திடாதுமற்றெனக்குமாயநல்கவேண்டுமே. (கூஅ)

காட்டிநான்செய்வல்வினைப்பயந்தனால்மனந்தனை
நாட்டிவைத்துநல்லவல்லசெய்யவெண்ணினாரெனக்
கேட்டதன்றியென்னதாவிபின்னைகேள்வநின்னொடும்
பூட்டிவைத்தவென்னைநின்னுள்நீக்கல்பூவைவண்ணனே. (கூகூ)

பிறப்பினோடுபேரிடர்ச்சுழிக்கணின்றுநீங்குமஃ
திறப்பவைத்தஞானநீசரைக்கரைக்கொடேற்றுமா
பெறற்கரியநின்னபாதபத்தியானபாசனம்
பிறர்க்கரியமாயனேயெனக்குநல்கவேண்டுமே. (க00)

செஞ்சுருட்டிராகம் - ரூபகதாளம்.

இரந்துரைப்பதுண்டுவாழியேமநீர்நிறத்தமா
வரந்தருந்திருக்குறிப்பில்வைத்ததாகின்மன்னுசீர்ப்
பரந்தசிந்தையொன்றிநின்றுநின்னபாதபங்கயம்
நிரந்தரம்நினைப்பதாகநீநினைக்கவேண்டுமே. (க0க)

விள்விலாதகாதலால்விளங்குபாதபோதில்வைத்
துள்ளுவேனதூனநோயொழிக்குமாதெழிக்குநீர்ப்
பள்ளிமாயபன்றியாயவென்றிவீரகுன்றினால்
துள்ளுநீர்வரம்புசெய்ததோன்றலொன்றுசொல்லிடே. (க0உ)

திருக்கலந்துசேருமார்பதேவதேவதேவனே
இருக்கலந்தவேதநீதியாகிநின்றநின்மலா
கருக்கலந்தகாளமேகமேனியாயநின்பெயர்
உருக்கலந்தொழிவிலாதுரைக்குமாறுரைசெயே. (க0ங)

கடுங்கவந்தன்வக்கரன்கரன்முரன்சிரமவை
இடந்துகூறுசெய்தபல்படைத்தடக்கைமாயனே
கிடந்திருந்துநின்றியங்குபோதுநின்னபொற்கழல்
தொடர்ந்துமீள்விலாததோர்தொடர்ச்சிநல்கவேண்டுமே. (க0ச)

மண்ணையுண்டுமிழ்ந்துபின்னிரந்துகொண்டளந்துமண்
கண்ணுளல்லதில்லையென்றுவென்றுகாலமாயினாய்ப்
பண்ணைவென்றவின்சொன்மங்கைகொங்கைதங்குபங்கயக்
கண்ண, நின்னவண்ணமல்லதில்லையெண்ணும்வண்ணமே. (க0ரு)

கறுத்தெதிர்ந்தகாலநேமிகாலனோடுகூடவன்
றறுத்தவாழிசங்குதண்டுவில்லும்வாளுமேந்தினாய்
தொறுக்கலந்தவூனமஃதொழிக்கவன்றுகுன்றமுன்
பொறுத்தநின்புகழ்க்கலாலோர்நேசமில்லைநெஞ்சமே. (க0சு)

காய்சினத்தகாசிமன்னன்வக்கிரன்பவுண்டிரன்
மாசினத்தமாலிமான்சுமாலிகேசிதேனுகன்
நாசமுற்றுவீழநாள்கவர்ந்தநின்கழற்கலால்
நேசபாசமெத்திறத்தும்வைத்திடேனெம்மீசனே. (க0எ)

கேடில்சீர்வரத்தனாய்க்கெடும்வரத்தயனரன்
நாடினோடுநாட்டமாயிரத்தனாடுநண்ணிலும்
வீடதானபோகமெய்திவீற்றிருந்தபோதிலும்
கூடுமாசையல்லதொன்றுகொள்வனோகுறிப்பிலே. (க0அ)

சுருக்குவாரையின்றியேசுருங்கினாய்சுருங்கியும்
பெருக்குவாரையின்றியேபெருக்கமெய்துபெற்றியோய்
செருக்குவார்கள்தீக்குணங்கள்தீர்த்ததேவதேவனென்
றிருக்குவாய்முனிக்கணங்களேத்தயானுமேத்தினேன். (க0கூ)

தூயனாயுமன்றியுஞ்சுரும்புலாவுதண்டுழாய்
மாயநின்னைநாயினேன்வணங்கிவாழ்த்துமீதெலாம்
நீயுநின்குறிப்பினிற்பொறுத்துநல்குவேலைநீர்ப்
பாயலோடுபத்தர்சித்தமேயவேலைவண்ணனே. (கக0)

### மோஹனராகம் - ரூபகதாளம்.

வைதுநின்னைவல்லவாபழித்தவர்க்குமாறில்போர்
செய்துநின்றுசெற்றதீயில்வெந்தவர்க்கும்வந்துனை
எய்தலாகுமென்பராதலாலெம்மாயநாயினேன்
செய்தகுற்றநற்றமாகவேகொண்ஞாலநாதனே. (ககக)

வாள்களாகிநாள்கள்செல்லநோய்மைகுன்றிமூப்பெய்தி
மாளுநாளதாதலால்வணங்கிவாழ்த்தென்னெஞ்சமே
ஆளதாகுநன்மையென்றுநன்குணர்ந்ததன்றியும்
மீள்விலாதபோகநல்கவேண்டுமாலபாதமே. (ககஉ)

சலங்கலந்தசெஞ்சடைக்கறுத்தகண்டன்வெண்டலைப்
புலன்கலங்கவுண்டபாதகத்தன்வன்றுயர்கெட
அலங்கன்மார்பில்வாசநீர்கொடுத்தவனடுத்தசீர்
நலங்கொண்மாலைநண்ணும்வண்ணமெண்ணுவாழிநெஞ்சமே. ககங

ஈனமாயவெட்டுநீக்கியேதமின்றிமீதுபோய்
வானமாளவல்லையேல்வணங்கிவாழ்த்தென்னெஞ்சமே
ஞானமாகிஞாயிறாகிஞாலமுற்றுமோரெயிற்
றேனமாயிடந்தமூர்த்தியெந்தைபாதமெண்ணியே. (ககச)

* அத்தனாகியன்னையாகியாளுமெம்பிரானுமாய்
ஒத்தொவ்வாதபல்பிறப்பொழித்துநம்மையாட்கொள்வான்
முத்தனார்முகுந்தனார்புகுந்துநம்முள்மேவினார்
எத்தினாலிடர்க்கடற்கிடத்தியேழைநெஞ்சமே. (ககரு)

மாறுசெய்தவாளரக்கனாளுலப்ப, வன்றிலங்கை
நீறுசெய்துசென்றுகொன்றுவென்றிகொண்டவீரனார்
வேறுசெய்துதம்முளென்னைவைத்திடாமையால், நமன்
கூறுசெய்துகொண்டிறந்தகுற்றமெண்ணவல்லனே. (ககசு)

அச்சநோயொடல்லல்பல்பிறப்பவாயமூப்பிவை
வைத்தசிந்தைவைத்தவாக்கைமாற்றிவானிலேற்றுவான்
அச்சுதனனந்தகீர்த்தியாதியந்தமில்லவன்
நச்சுநாகணைக்கிடந்தநாதன்வேதகீதனே. (ககஎ)

சொல்லினுந்தொழிற்கணுந்தொடக்கறாதவன்பினும்
அல்லினும்பகலினோடுமானமாலைகாலையும்
வல்லிநாண்மலர்க்கிழத்திநாதபாதபோதினைப்
புல்லியுள்ளம்விள்விலாதுமீண்டுமீண்டதில்லையே. (ககஅ)

* பொன்னிசூழரங்கமேயபூவைவண்ணமாயகேள்
என்னதாவியென்னும்வல்வினையினுட்கொழுந்தெழுந்
துன்னபாதமென்னநின்றவொண்சுடர்க்கொழுமலர்
மன்னவந்துபூண்டுவாட்டமின்றியெங்குநின்றதே. (கஙகூ)

* இயக்கறுதபல்பிறப்பிலென்னைமாற்றியின்றுவந்
துயக்கொள்மேகவண்ணனண்ணியென்னிலாயதன்னுளே
மயக்கினான்றன்மன்னுசோதியாதலா, லென்னாவிதான்
இயக்கலாமறுத்தறுதவின்பவீடுபெற்றதே. (கஉ0)

திருமழிசையாழ்வார் திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

பூவாறைந்து மூன்றுநின்றுநாகமொன்றுதிதாதுதன்னுள்சொல்லு—சொல்லுலகி லின்றதூய்மை அங்கந்தலையேகவிடத்தபுல்கூசமரங்கன் — அரங்கன்பண்டுவானிறக்கங்கைவரத்திலாண்விண்படைபரத்திவான கங்காலன்—காலன் குரக்குமின்னுதிஅம்பாடகம்காய்த்தகடம்விற்பானை ஆயன்—ஆயன்வேறு வெஞ்சினப்பால் மண்தோடு கார்குன்று கொண்ட வெண்டிரைசரம்—சரம்பொத்தைமோடியிலேமன்னு மிலங்கைசங்குமரம் சாலிசெழுநடந்த—நடந்த கரண்டம் நன்றுநின்று நிற்பவின்றுசண்டமுத்திறம்கானில்கொந்தம்வண்டு—வண்டுபோதில்மரம்அதிர்ந்துஒன்றிபுன்புலயெட்டுச்சோர்வுபற்றினவாசிகடை—கடையத்திறம்மட்டுப்பின் நச்சராச்சாடுநெற்றிவெள்ளை பார்குலம்பெண்—பெண்விடைசுரும்பூன்அடக்கவரம்புவெய்யமரங்காட்டிபிறப்பிரந்து—இரந்துவிள் திருக்கமெண்கறுத்த காசினக்கேடுசுருக்குத் தூயன்வைது—வைதுவாள் சலம்சலமீனமத்தன் மாறச்சன்சொல்பொன்னி இயக்கறுக்காவல்.

ஆ பாசுரம் - கஉ0.

திருச்சந்தவிருத்தம் முற்றிற்று.

ஆ திருப்பல்லாண்டுதொடங்கி பாசுரம்-அஎக.





ஸ்ரீ

    

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

தொண்டரடிப்பொடியாழ்வார்

திருவாய்மலர்ந்தருளிய,

வேதார்த்தஸாரமாகும்

# திருமாலை.

---

## தனியன்

திருவரங்கப்பெருமாளரயரருளிச்செய்தது.

இருவிகற்பநேரிசைவெண்பா.

மற்றொன்றும் வேண்டா மனமே மதிளரங்கர்
கற்றின மேய்த்த கழலிணைக்கீழ்,—உற்ற
திருமாலை பாடுஞ்சீர்த் தொண்ட ரடிப்பொடியெம்
பெருமானை, யெப்பொழுதும் பேசு.

---

திருவரங்கத்தெம்பெருமான்விஷயம்.

கலிநிலைத்துறை.

ஸஹானாராகம் - இயல்.

* காவலிற்புலனைவைத்துக்கலிதன்னைக்கடக்கப்பாய்ந்து
நாவலிட்டுழுதருகின்றோம்நமன்றமர்தலைகண்மீதே
மூவுலகுண்டுமிழ்ந்தமுதல்வநின்னாமங்கற்ற
ஆவலிப்புடைமைகண்டாயரங்கமாநகருளானே. (க)

பச்சைமாமலைபோன்மேனிபவளவாய்கமலச்செங்கண்
அச்சுதாவமரரேறேயாயர்தங்கொழுந்தேயென்னும்
இச்சுவைதவிரயான்போயிந்திரலோகமாளும்
அச்சுவைபெறினும்வேண்டேனரங்கமாநகருளானே. (உ)

வேதநூற்பிராயநூறுமனிசர்தாம்புகுவரேலும்
பாதியுமுறங்கிப்போகும்நின்றதிற்பதினையாண்டு
பேதைபாலகனதாகும்பிணிபசிமூப்புத்துன்பம்
ஆதலாற்பிறவிவேண்டேனரங்கமாநகருளானே. (ங)

மொய்த்தவல்வினையுணின்றுமூன்றெழுத்துடையபேரால்
கத்திரபந்துமன்றேபராங்கதிகண்டுகொண்டான்
இத்தனையடியரானார்க்கிரங்கும்நம்மரங்கனாய
பித்தனைப்பெற்றுமந்தோபிறவியுட்பிணங்குமாறே. (ச)

பெண்டிராற்சுகங்களுய்ப்பான்பெரியதோரிடும்பைபூண்டு
உண்டிராக்கிடக்கும்போதுடலுக்கேகரைந்துநைந்து
தண்டுழாய்மாலைமார்பன்றமர்களாய்ப்பாடியாடித்
தொண்டுபூண்டமுதமுண்ணாத்தொழும்பர்சோறுகக்குமாறே. (ரு)

மறஞ்சுவர்மதிளெடுத்துமறுமைக்கேவெறுமைபூண்டு
புறஞ்சுவரோட்டைமாடம்புரளும்போதறியமாட்டீர்
அறஞ்சுவராகிநின்றவரங்கனார்க்காட்செய்யாதே
புறஞ்சுவர்கோலஞ்செய்துபுட்கவ்வக்கிடக்கின்றீரோ. (சா)

புலையறமாகிநின்றபுத்தொடுசமணமெல்லாம்
கலையறக்கற்றமாந்தர்காண்பரோகேட்பரோதான்
தலையறுப்புண்டுஞ்சாவேன்சத்தியங்காண்மினையா
சிலையினாலிலங்கைசெற்றதேவனேதேவனாவான். (எ)

வெறுப்பொடுசமணர்முண்டர்விதியில்சாக்கியர்கள், நின்பால்
பொறுப்பரியனகள்பேசிற்போவதேநோயதாகிக்
குறிப்பினுக்கடையுமாகிக்கூடுமேற்றலையை, யாங்கே
அறுப்பதேகருமங்கண்டாயரங்கமாநகருளானே. (அ)

மற்றுமோர்தெய்வமுண்டேமதியிலாமானிடங்காள்
உற்றபோதன்றிநீங்களொருவனென்றுணரமாட்டீர்
அற்றமேலொன்றறியீரவனல்லாற்றெய்வமில்லை
கற்றினமேய்த்தவெந்தைகழலிணைபணிமினீரோ. (கூ)

நாட்டினான்றெய்வமெங்குநல்லதோரருள்தன்னாலே
காட்டினான்றிருவரங்கமுய்பவர்க்குய்யும்வண்ணம்
கேட்டிரேநம்பிமீர்காள்கெருடவாகனனுநிற்கச்
சேட்டைதன்மடியகத்துச்செல்வம்பார்த்திருக்கின்றீரோ. (க0)

ஒருவில்லாலோங்குமுந்நீரடைத்துலகங்களுய்யச்
செருவிலேயரக்கர்கோனைச்செற்றநஞ்சேவகனார்
மருவியபெரியகோயின்மதிட்டிருவரங்கமென்னாக்
கருவிலேதிருவிலாதீர்காலத்தைக்கழிக்கின்றீரோ. (கக)

நமனுமுற்கலனும்பேசநரகினின்றார்கள்கேட்க
நரகமேசுவர்க்கமாகுநாமங்களுடையநம்பி
அவனதூரரங்கமென்னாதயர்த்துவிழ்ந்தழியுமாந்தர்
கவலையுட்படுகின்றாரென்றதனுக்கேகவர்கின்றேனே. (கஉ)

எறியுநீர்வெறிகொள்வேலைமாநிலத்துயிர்களெல்லாம்
வெறிகொள்பூந்துளபமாலைவிண்ணவர்கோனையேத்த
அறிவிலாமனிசரெல்லாமரங்கமென்றழைப்பராகில்
பொறியில்வாழ்நரகமெல்லாம்புல்லெழுந்தொழியுமன்றே. (கங)

⁕ வண்டினமுரலுஞ்சோலைமயிலினமாலுஞ்சோலை
கொண்டல்மீதணவுஞ்சோலைகுயிலினங்கூவுஞ்சோலை
அண்டர்கோனமருஞ்சோலையணிதிருவரங்கமென்னா
மிண்டர்பாய்ந்துண்ணுஞ்சோற்றைவிலக்கிநாய்க்கிடுமினீரே. (கச)

மெய்யர்க்கேமெய்யனாகும்விதியிலாவென்னைப்போலப்
பொய்யர்க்கேபொய்யனாகும்புட்கொடியுடையகோமான்
உய்யப்போமுணர்வினார்கட்கொருவனென்றுணர்ந்தபின்னை
ஐயப்பாடறுத்துத்தோன்றுமழகனூரரங்கமன்றே. (கரு)

சூதனாய்க்கள்வனாகித்தூர்த்தரோடிசைந்தகாலம்
மாதரார்கயற்கணென்னும்வலையுட்பட்டழுந்துவேனைப்
போதரேயென்றுசொல்லிப்புந்தியிற்புகுந்து, தன்பால்
ஆதரம்பெருகவைத்தவழகனூரரங்கமன்றே. (கசு)

விரும்பிநின்றேத்தமாட்டேன்விதியிலேன்மதியொன்றில்லை
இரும்புபோல்வலியநெஞ்சமிறைமிறையுருகும்வண்ணம்
சுரும்பமர்சோலைசூழ்ந்தவரங்கமாகோயில்கொண்ட
கரும்பினைக்கண்டுகொண்டென்கண்ணிணைகளிக்குமாறே. (கஎ)

இனிதிரைத்திவலைமோதவெறியுந்தண்பரவைமீதே
தனிகிடந்தரசுசெய்யுந்தாமரைக்கண்ணனெம்மான்
கனியிருந்தனையசெவ்வாய்க்கண்ணனைக்கண்டகண்கள்
பனியரும்புதிருமாலோவென்செய்கேன்பாவியேனே. (கஅ)

⁕ குடதிசைமுடியைவைத்துக்குணதிசைபாதம்நீட்டி
வடதிசைபின்புகாட்டித்தென்றிசையிலங்கைநோக்கிக்
கடனிறக்கடவுளெந்தையரவணைத்துயிலுமாகண்
டுடலெனக்குருகுமாலோவென்செய்கேனுலகத்தீரே. (ககூ)

பாயுநீரரங்கந்தன்னுட்பாம்பணைப்பள்ளிகொண்ட
மாயனார்திருநன்மார்புமரகதவுருவுந்தோளும்
தூயதாமரைக்கண்களுந்துவரிதழ்பவளவாயும்
ஆய்சீர்முடியுந்தேசுமடியரோர்க்ககலலாமே. (உ0)

பணிவினான்மனமதொன்றிப்பவளவாயரங்கனார்க்குத்
துணிவினால்வாழமாட்டாத்தொல்லைநெஞ்சேநீசொல்லாய்
அணியனார்செம்பொனாயவருவரையனையகோயில்
மணியனார்கிடந்தவாற்றைமனத்தினானினைக்கலாமே. (௨௧)

பேசிற்றேபேசலல்லாற்பெருமையொன்றுணரலாகா
வாசற்றார்தங்கட்கல்லாலறியலாவானுமல்லன்
மாசற்றார்மனத்துளானைவணங்கிநாமிருப்பதல்லால்
பேசத்தானாவதுண்டோபேதைநெஞ்சேநீசொல்லாய். (௨௨)

கங்கையிற்புனிதமாயகாவிரிநடுவுபாட்டுப்
பொங்குநீர்பரந்துபாயும்பூம்பொழிலரங்கந்தன்னுள்
எங்கண்மாலிறைவனீசன்கிடந்ததோர்கிடக்கைகண்டும்
எங்ஙனமறந்துவாழ்கேனேழையேனேழையேனே. (௨௩)

வெள்ளநீர்பரந்துபாயும்விரிபொழிலரங்கந்தன்னுள்
கள்வனார்கிடந்தவாறுங்கமலநன்முகமுங்கண்டும்
உள்ளமேவலியைபோலுமொருவனென்றுணரமாட்டாக்
கள்ளமேகாதற்செய்துன்கள்ளத்தேகழிக்கின்றாயே. (௨௪)

குளித்துமூன்றனலையோம்புங்குறிகொளந்தணமைதன்னை
ஒளித்திட்டே, னென்கணில்லைநின்கணும்பத்தனல்லேன்
களிப்பதென்கொண்டுநம்பீகடல்வண்ணாகதறுகின்றேன்
அளித்தெனக்கருள்செய்கண்டாயரங்கமாநகருளானே. (௨௫)

போதெல்லாம்போதுகொண்டுன்பொன்னடிபுனையமாட்டேன்
தீதிலாமொழிகள்கொண்டுன்றிருக்குணஞ்செப்பமாட்டேன்
காதலானெஞ்சமன்புகலந்திலேனதுதன்னாலே
ஏதிலேனரங்கர்க்கல்லேனென்செய்வான்றோன்றினேனே. (௨௬)

குரங்குகள்மலையைநூக்கக்குளித்துத்தாம்புரண்டிட்டோடி
தரங்கநீரடைக்கலுற்றசலமிலாவணிலம்போலே
மரங்கள்போல்வலியநெஞ்சம்வஞ்சனேன்னெஞ்சுதன்னால்
அரங்கனார்க்காட்செய்யாதேயளியத்தேனயர்க்கின்றேனே. (௨௭)

உம்பராலறியலாகாவொளியுளாரானைக்காகிச்
செம்புலாலுண்டுவாழுமுதலைமேற்சீறிவந்தாய்
நம்பரமாயதுண்டேநாய்களோஞ்சிறுமையோரா
எம்பிராற்காட்செய்யாதேயென்செய்வான்றோன்றினேனே. (௨௮)

ஊரிலேன்காணியில்லையுறவுமற்றொருவரில்லைப்
பாரினின்பாதமூலம்பற்றிலேன்பரமமூர்த்தி
காரொளிவண்ணனேகண்ணனேகதறுகின்றேன்
ஆருளர்களைகணம்மாவரங்கமாநகருளானே. (௨௯)

மனத்திலோர் தூய்மையில்லைவாயிலோரின்சொலில்லைச்
சினத்தினாற்செற்றநோக்கித்தீவிளிவிளிவன்வாளாப்
புனத்துழாய்மாலையானேபொன்னிசூழ்திருவரங்கா
எனக்கினிக்கதியெவ்சொல்லாயென்னையாளுடையகோவே. (ங0)

தவத்துளார்தம்மிலல்லேன்றனம்படைத்தாரிலல்லேன்
உவர்த்தநீர்போலவென்றனுற்றவர்க்கொன்றுமல்லேன்
துவர்த்தசெவ்வாயினார்க்கேதுவக்கறத்துரிசனானேன்
அவத்தமேபிறவிதந்தாயரங்கமாநகருளானே. (ஙக)

ஆர்த்துவண்டலம்புஞ்சோலையணிதிருவரங்கந்தன்னுள்
கார்த்திரளனையமேனிகண்ணனேயுன்னைக்காணும்
மார்க்கமொன்றறியமாட்டாமனிதரிற்றுரிசனாய
மூர்க்கனேன்வந்துநின்றேன்மூர்க்கனேன்மூர்க்கனேனே. (ஙஉ)

மெய்யெலாம்போகவிட்டுவிரிகுழலாரிற்பட்டுப்
பொய்யெலாம்பொதிந்துகொண்டபோழ்க்கனேன்வந்துநின்றேன்
ஐயனேயரங்கனேயுன்னருளென்னுமாசைதன்னால்
பொய்யனேன்வந்துநின்றேன்பொய்யனேன்பொய்யனேனே. (ஙங)

உள்ளத்தேயுறையுமாலையுள்ளுவானுணர்வொன்றில்லாக்
கள்ளத்தேனானுந்தொண்டாய்த்தொண்டுக்கேகோலம்பூண்டு
உள்ளுவாருள்ளத்தெல்லாமுடனிருந்தறிதியென்று
வெள்கிப்போயென்னுளேநான்விலவறச்சிரித்திட்டேனே. (ஙச)

தாவியன்றுலகமெல்லாந்தலைவிழாக்கொண்டவெந்தாய்
சேவியேனுன்னையல்லாற்சிக்கெனச்செங்கண்மாலே
ஆவியேயமுதேயென்றனுருயிரனையவெந்தாய்
பாவியேனுன்னையல்லால்பாவியேன்பாவியேனே. (ஙரு)

மழைக்கன்றுவரைமுனேந்துமைந்தனேமதுரவாறே
உழைக்கன்றேபோலநோக்கமுடையவர்வலையுட்பட்டு
உழைக்கின்றேற்கென்னைநோக்காதொழிவதே, யுன்னையன்றே
அழைக்கின்றேனாதிமூர்த்தியரங்கமாநகருளானே. (ஙசு)

தெளிவிலாக்கலங்கனீர்சூழ்திருவரங்கத்துளோங்கும்
ஒளியுளார்தாமேயன்றேதந்தையுந்தாயுமாவார்
எளியதோராருளுமன்றேயென்றிறத்தெம்பிரானார்
அளியநம்பையலென்னாரம்மவோகொடியவாறே. (ஙஎ)

* மேம்பொருள்போகவிட்டுமெய்ம்மையேமிகவுணர்ந்து
ஆம்பரிசறிந்துகொண்டைம்புலனகத்தடக்கிக்
காம்பறத்தலைசிரைத்துன்கடைத்தலையிருந்துவாழும்
சோம்பரையுகத்திபோலுஞ்சூழ்புனலரங்கத்தானே. (ஙஅ)

பணிவினுன்மனமதொன்றிப்பவளவாயரங்கனுர்க்குத்
துணிவினல்வாழமாட்டாத்தொல்லைநெஞ்சேநீசொல்லாய்
அணியனுர்செம்பொனுயவருவனையனையகோயில்
மணியனுர்கிடந்தவாற்றைமனத்தினுனினைக்கலாமே. (உக)

பேசிற்றேபேசிலல்லாற்பெருமையொன்றுணரலாகா
வாசற்றுர்தங்கட்கல்லாலறியலாவானுமல்லன்
மாசற்றுர்மனத்துளானைவணங்கிநாமிருப்பதல்லால்
பேசத்தானுவதுண்டோபேதைநெஞ்சேநீசொல்லாய். (உஉ)

கங்கையிற்புனிதமாயகாவிரிநடுவுபாட்டுப்
பொங்குநீர்பரந்துபாயும்பூம்பொழிலரங்கந்தன்னுள்
எங்கண்மாலிறைவனீசன்கிடந்ததோர்கிடக்கைகண்டும்
எங்ஙனுமறந்துவாழ்கேனேழையேனேழையேனே. (உஙு)

வெள்ளநீர்பரந்துபாயும்விரிபொழிலரங்கந்தன்னுள்
கள்வனுர்கிடந்தவாறுங்கமலநன்முகமுங்கண்டும்
உள்ளமேவலியைபோலுமொருவனென்றுணரமாட்டாக்
கள்ளமேகாதற்செய்துன்கள்ளத்தேகழிக்கின்றுயே. (உச)

குளித்துமூன்றனலையோம்புங்குறிகொளந்தணமைதன்னை
ஒளித்திட்டேனென்கணில்லைநின்கணும்பத்தனல்லேன்
களிப்பதென்கொண்டுநம்பிகடல்வண்ணுகதறுகின்றேன்
அளித்தெனக்கருள்செய்கண்டாயரங்கமாநகருளானே. (உரு)

போதெல்லாம்போதுகொண்டுன்பொன்னடிபுனையமாட்டேன்
தீதிலாமொழிகள்கொண்டுன்றிருக்குணஞ்செப்பமாட்டேன்
காதலாலெநஞ்சமன்புகலந்திலேன துதன்னுலே
ஏதிலேனரங்கர்க்கல்லேனென்செய்வான்றேன்றினேனே. (உசு)

குரங்குகள்மலையைநூக்கக்குளித்துத்தாம்புரண்டிட்டோடி
தரங்கநீரடைக்கலுற்றசலமிலாவணிலம்போலே
மரங்கள்போல்வலியநெஞ்சம்வஞ்சனேன்னெஞ்சுதன்னுல்
அரங்கனுர்க்காட்செய்யாதேயளியற்றேனயர்க்கின்றேனே. (உஎ)

உம்பராலறியலாகாவொளியுளாரானைக்காகிச்
செம்புலாலுண்டுவாழுமுதலைமேற்சீறிவந்தாய்
நம்பரமாயதுண்டேநாய்களோஞ்சிறுமையோரா
எம்பிராற்காட்செய்யாதேயென்செய்வான்றேன்றினேனே. (உஅ)

ஊரிலேன்காணியில்லையுறவுமற்றொருவரில்லைப்
பாரினின்பாதமூலம்பற்றிலேன்பரமமூர்த்தி
காரொளிவண்ணனேகண்ணனேகதறுகின்றேன்
ஆருளர்களைகணம்மாவரங்கமாநகருளானே. (உகூ)

மனத்திலோர்தூய்மையில்லைவாயிலோரின்சொலில்லைச்
சினத்தினற்செற்றநோக்கித்தீவிளிவிளிவன்வாளாப்
புனைத்துழாய்மாலையானேபொன்னிசூழ்திருவரங்கா
எனக்கினிக்கதியென்சொல்லாயென்னையாளுடையகோவே. (௩0)

தவத்துளார்தம்மிலல்லேன்றனம்படைத்தாரிலல்லேன்
உவர்த்தநீர்போலவென்றனுற்றவர்க்கொன்றுமல்லேன்
துவர்த்தசெவ்வாயினர்க்கேதுவக்கறத்துரிசனேன்
அவத்தமேபிறவிதந்தாயரங்கமாநகருளானே. (௩க)

ஆர்த்துவண்டலம்புஞ்சோலையணிதிருவரங்கந்தன்னுள்
கார்த்திரளனையமேனிகண்ணனேயுன்னைக்காணும்
மார்க்கமொன்றறியமாட்டாமனிதரிற்றுரிசனைய
மூர்க்கனேன்வந்துநின்றேன்மூர்க்கனேன்மூர்க்கனேனே. (௩உ)

மெய்யெலாம்போகவிட்டுவிரிகுழலாரிற்பட்டுப்
பொய்யெலாம்பொதிந்துகொண்டபோழ்க்கனேன்வந்துநின்றேன்
ஐயனேயரங்கனேயுன்னருளென்னுமாசைதன்னால்
பொய்யனேன்வந்துநின்றேன்பொய்யனேன்பொய்யனேனே. (௩௩)

உள்ளத்தேயுறையுமாலையுள்ளுவானுணர்வொன்றில்லாக்
கள்ளத்தேனானுந்தொண்டாய்த்தொண்டுக்கேகோலம்பூண்டு
உள்ளுவாருள்ளத்தெல்லாமுடனிருந்தறிதியென்று
வெள்கிப்போயென்னுளேநான்விலவறச்சிரித்திட்டேனே. (௩௪)

தாவியன்றுலகமெல்லாந்தலைவிழாக்கொண்டவெந்தாய்
சேவியேனுன்னையல்லாற்சிக்கெனச்செங்கண்மாலே
ஆவியேயமுதேயென்றனுருயிரனையவெந்தாய்
பாவியேனுன்னையல்லால்பாவியேன்பாவியேனே. (௩௫)

மழைக்கன்றுவரைமுனேந்துமைந்தனேமதுரவாறே
உழைக்கன்றேபோலநோக்கமுடையவர்வலையுட்பட்டு
உழைக்கின்றேற்கென்னைநோக்காதொழிவதே, யுன்னையன்றே
அழைக்கின்றேனாதிமூர்த்தீயரங்கமாநகருளானே. (௩௬)

தெளிவிலாக்கலங்கனீர்சூழ்திருவரங்கத்துளோங்கும்
ஒளியுளார்தாமேயன்றேதந்தையுந்தாயுமாவார்
எளியதோரருளுமன்றேயென்றிறத்தெம்பிரானார்
அளியநம்பையலென்னாரம்மவோகொடியவாறே. (௩எ)

* மேம்பொருள்போகவிட்டுமெய்ம்மையேமிகவுணர்ந்து
ஆம்பரிசறிந்துகொண்டைம்புலனகத்தடக்கிக்
காம்பறத்தலைசிரைத்துன்கடைத்தலையிருந்துவாழும்
சோம்பரையுகத்திபோலுஞ்சூழ்புனலரங்கத்தானே. (௩அ)

அடிமையிற்குடிமையில்லாவயற்சதுப்பேதிமாரில்
குடிமையிற்கடிமைபட்டகுக்கரிற்பிறப்பரேலும்
முடியினிற்றுளபம்வைத்தாய்மொய்கழற்கன்புசெய்யும்
அடியரையுகத்திபோலுமரங்கமாநகருளானே. (௩௯)

திருமறுமார்பநின்னைச்சிந்தையுட்டிகழவைத்து
மருவியமனத்தராகின்மாநிலத்துயிர்களெல்லாம்
வெருவறக்கொன்றுசுட்டிட்டீட்டியவினையரேலும்
அருவினைப்பயனதுய்யாரரங்கமாநகருளானே. (௪௦)

வானுளாரறியலாகாவானவாவென்பராகில்
தேனுலாந்துளபமாலைச்சென்னியாவென்பராகில்
ஊனமாயினகட்செய்யுமூனகாரகர்களேலும்
போனகஞ்செய்தசேடந்தருவரேற்புனிதமன்றே. (௪௧)

பழுதிலாவொழுகலாற்றுப்பலசதுப்பேதிமார்கள்
இழிகுலத்தவர்களேலுமெம்மடியார்களாகில்
தொழுமினீர்கொடுமின்கொண்மினென்றுநின்னோடுமொக்க
வழிபடவருளினாய்போல்மதிட்டிருவரங்கத்தானே. (௪௨)

அமரவோரங்கமாறும்வேதமோர்நான்குமோதித்
தமர்களிற்றலைவராயசாதியந்தணர்களேலும்
நுமர்களைப்பழிப்பராகினொடிப்பதோரளவி, லாங்கே
அவர்கடாம்புலையர்போலுமரங்கமாநகருளானே. (௪௩)

* பெண்ணுலாஞ்சடையினானும்பிரமனுமுன்னைக்காண்பான்
எண்ணிலாவூழியூழிதவஞ்செய்தார்வெள்கிநிற்ப.
விண்ணுளார்வியப்பவந்தானைக்கன்றருளையீந்த
கண்ணறா, வுன்னையென்னோகளைகணாக்கருதுமாறே. (௪௪)

*வளவெழுந்தவளமாடமதுரைமாநகரந்தன்னுள்
கவளமால்யானைகொன்றகண்ணனையரங்கமாலைத்
துளவத்தொண்டாயதொல்சீர்த்தொண்டரடிப்பொடிசொல்
இளையபுன்கவிதையேலுமெம்பிரார்க்கினியவாறே. (௪௫)

தொண்டரடிப்பொடியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர் திருவடிகளேஶரணம்.

காவல்பச்சைவேதமொய்த்தபெண்டிர்மறம்புலைவெறும்மற்றுநாட்டொருவில்—ஒருவில்நமனெறி வண்டுமெய்சூதவிரும்பி இனிதுகுடபாய்பணி—பணிபேசுகங்கைவெள்ளகுளித்துபோதகுரங்கும்பர் ஊர்மனந்தவம்—தவமார்த்துமெய்யுள்ளந்தாவிமழை தெளிமேம்மடிமைதிருவான்பழுது அமரபெண்வளம்கதிர்.

திருமாலைமுற்றிற்று.

---

ஆ. திருப்பல்லாண்டுதொடங்கி பாசுரம் - ௯௧௬.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# தொண்டரடிப்பொடியாழ்வார்

திருவாய்மலர்ந்தருளிய

வேதார்த்தஸாரமாகும்

# திருப்பள்ளியெழுச்சி.

---

தனியன்

திருமாலையாண்டானருளிச்செய்தது.

பூபாளராகம்.

𑌤𑌮𑍇𑌵𑌮𑌤𑍍𑌵𑌾𑌪𑌰𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌂
𑌰𑌙𑍍𑌗𑍇𑌶𑌯𑌂𑌰𑌾𑌜𑌵𑌦𑌰𑍍𑌹𑌣𑍀𑌯𑌮𑍍।
𑌪𑍍𑌰𑌾𑌬𑍋𑌧𑌿𑌕𑍀𑌂𑌯𑍋𑌽𑌕𑍃𑌤𑌸𑍂𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌲𑌾𑌂
𑌭𑌕𑍍𑌤𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌰𑍇𑌣𑍁𑌂𑌭𑌗𑌵𑌨𑍍𑌤𑌮𑍀𑌡𑍇॥

தமேவமத்வாபரவாஸுதேவம்
ரங்கேஶயம்ராஜவதர்ஹணீயம்
ப்ராபோதகீம்யோக்ருதஸூக்திமாலாம்
பக்தாங்க்ரிரேணும்பகவந்தமீடே.

இருவிகற்பநேரிசைவெண்பா.

திருவரங்கப்பெருமாளரயரருளிச்செய்தது.

மண்டங் குடியென்பர் மாமறையோர் மன்னியசீர்
தொண்ட ரடிப்பொடி தொன்னகரம்,—வண்டு
திணர்த்தவயற் றென்னரங்கத் தம்மானைப், பள்ளி
உணர்த்தும் பிரானுதித்த வூர்.

---

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பூபாளராகம் - அடதாளம்.

* கதிரவன்குணதிசைச்சிகரம்வந்தணைந்தான்
கனவிருளகன்றதுகாலையம்பொழுதாய்
மதுவிரிந்தொழுகினமாமலரெல்லாம்
வானவரரசர்கள்வந்துவந்தீண்டி
எதிர்திசைநிறைந்தனரிவரொடும்புகுந்த
இருங்களிற்றீட்டமும்பிடியொடுமுரசும்
அதிர்தலிலலைகடல்போன்றுளதெங்கும்
அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. (க)

கொழுங்கொடிமுல்லையின்கொழுமலரணவிக்
கூர்ந்ததுகுணதிசைமாருதமிதுவோ
எழுந்தனமலரணைப்பள்ளிகொண்டன்னம்
ஈன்பனிநனைந்ததம்மிருஞ்சிறகுதறி
விழுங்கியமுதலையின்பிலம்புரைபேழ்வாய்
வெள்ளெயிறுறவதன்விடத்தினுக்கனுங்கி
அழுங்கியவானையினருந்துயர்கெடுத்த
அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. (௨)

சுடரொளிபரந்தனசூழ்திசையெல்லாம்
துன்னியதாரகைமின்னொளிசுருங்கிப்
படரொளிபசுத்தனன்பனிமதியிவனோ
பாயிருளகன்றதுபைம்பொழிற்கமுகின்
மடலிடைக்கீறிவண்பாளைகணாற
வைகறைகூர்ந்ததுமாருதமிதுவோ
அடலொளிதிகழ்தருதிகிரியந்தடக்கை
அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. (௩)

மேட்டிளமேதிகள்தளைவிடுமாயர்கள்
வேய்ங்குழலோசையும்விடைமணிக்குரலும்
ஈட்டியவிசைதிசைபரந்தனவயலுள்
இருந்தனசுரும்பினமிலங்கையர்குலத்தை
வாட்டியவரிசிலைவானவரேறே
மாமுனிவேள்வியுங்காத், தவபிரதம்
ஆட்டியவடுதிறலயோத்தியெம்மரசே
அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. (௪)

புலம்பினபுட்களும்பூம்பொழில்களின்வாய்
போயிற்றுக்கங்குல்புகுந்ததுபுலரி
கலந்ததுகுணதிசைகனைகடலரவம்
களிவண்டுமிழற்றியகலம்பகம்புனைந்த
அலங்கலந்தொடையல்கொண்டடியிணைபணிவான்
அமரர்கள்புகுந்தனராதலினம்மா
இலங்கையர்கோன்வழிபாடுசெய்கோயில்
எம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (௫)

இரவியர்மணிநெடுந்தேரொடுமிவரோ
இறையவர்பதினொருவிடையருமிவரோ
மருவியமயிலினனறுமுகனிவனோ
மருதரும்வசுக்களும்வந்துவந்தீண்டிப்
புரவியோடாடலும்பாடலுந்தேரும்
குமரதண்டம்புகுந்தீண்டியவெள்ளம்
அருவரையனையநின்கோயில்முன்னிவரோ
அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. (௬)

அந்தரத்தமரர்கள்கூட்டங்களிவையோ
அருந்தவமுனிவருமருதருமிவரோ
இந்திரனானையுந்தானும்வந்திவனோ
எம்பெருமானுனகோயிலின்வாசல்
சுந்தரர்நெருக்கவிச்சாதரர்நூக்க
இயக்கருமயங்கினர்திருவடிதொழுவான்
அந்தரம்பாரிடமில்லைமற்றிதுவோ
அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. (எ)

வம்பவிழ்வானவர்வாயுறைவழங்க
மாநிதிகபிலையொண்கண்ணாடிமுதலா
எம்பெருமான்படிமெய்க்கலங்காண்டற்
கேற்பனவாயினகொண்டுநன்முனிவர்
தும்புருநாரதர்புகுந்தனரிவரோ
தோன்றினனிரவியுந்துலங்கொளிபரப்பி
அம்பரதலத்தினின்றகல்கின்றதிருள்போய்
அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. (அ)

ஏதமில்தண்ணுமையியக்கமத்தளி
யாழ்குழல்முழவமோடிசைதிசைகெழுமிக்
கீதங்கள்பாடினர்கின்னரர்கருடர்
கந்தருவருமிவர்கங்குலுளெல்லாம்
மாதவர்வானவர்சாரணரியக்கர்
சித்தருமயங்கினர்திருவடிதொழுவான்
ஆதலிலவர்க்குநாளோலக்கமருள
அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. (கூ)

* கடிமலர்க்கமலங்கண்மலர்ந்தனவிவையோ
கதிரவன்கனைகடன்முளைத்தனனிவனோ
துடியிடையார்சுரிகுழல்பிழிந்துதறித்
துகிலுடுத்தேறினர்சூழ்புனலரங்கா
தொடையொத்ததுளவமுங்கூடையும்பொலிந்து
தோன்றியதோள்தொண்டரடிப்பொடியென்னும்
அடியனை, யளியனென்றருளியுன்னடியார்க்
காட்படுத்தாய்பள்ளியெழுந்தருளாயே. (க0)

தொண்டரடிப்பொடியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

கதிர்கொழுசுடர்மோட்டுபுலமிரவி அந்தரம்வம்பவிழேதங்கடிஅமலன்.

திருப்பள்ளியெழுச்சி முற்றிற்று.

---

ஆ திருப்பல்லாண்டுதொடங்கி பாசுரம் - கூஉகூ

Funding: IKS/Tattva Heritage. Digitization: eGangotri.

ஸ்ரீ



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

திருப்பாணாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# அமலனாதிப்பிரான்.

பெரியநம்பிகளருளிச்செய்த-தனியன்.

ஸஹாநாராகம்.

ஆபாதசூடமநுபூய ஹரிம் ஶயாநம்
மத்யே கவேரதுஹிதுர் முதிதாந்தராத்மா ।
அத்ரஷ்ட்ருதாம் நயநயோர் விஷயாந்தராணாம்
யோ நிஶ்சிகாய மநவை முநிவாஹநம் தம் ॥

திருமலைநம்பிகளருளிச்செய்தது.

கலிநிலைத்துறை.

காட்டவேகண்டபாதங்கமலநல்லாடையுந்தி
தேட்டருமுதரபந்தந்திருமார்புகண்டஞ்செவ்வாய்
வாட்டமில்கண்கள்மேனிமுனியேறித்தனிபுகுந்து
பாட்டினாற்கண்டுவாழும்பாணர்தாள்பரவினோமே.

திவ்யமங்களவிக்ரஹத்திருவவயவச்சீர்த்தி.

வெண்டுறை.

அபரூபராகம் - திரிபுடைதாளம்.

* அமலனாதிப்பிரானடியார்க்கென்னையாட்படுத்த
விமலன், விண்ணவர்கோன்விரையார்பொழில்வேங்கடவன்
நிமலன்நின்மலன்நீதிவானவன்நீண்மதிளரங்கத்தம்மான், திருக்
கமலபாதம்வந்தென்கண்ணினுள்ளனவொக்கின்றதே. (க)

உவந்தவுள்ளத்தனாயுலகமளந்தண்டமுற
நிவந்தநீண்முடியனன்றுநேர்ந்தநிசாசரரைக்
கவர்ந்தவெங்கணைக்காகுத்தன்கடியார்பொழிலரங்கத்தம்மா, னரைச்
சிவந்தவாடையின்மேற்சென்றதாமெனசிந்தனையே. (உ)

* மந்திபாய்வடவேங்கடமாமலை, வானவர்கள்
சந்திசெய்யநின்முனரங்கத்தரவினணையான்
அந்திபோல்நிறத்தாடையுமதன்மேலயனைப்படைத்ததோரெழில்
உந்திமேலதன்றோவடியேனுள்ளத்தின்னுயிரே. (ங)

சதிரமாமதில்சூழிலங்கைக்கிறைவன்றலைபத்
துதிரவோட்டி, யோர்வெங்கணையுய்த்தவனோதவண்ணன்
மதுரமாவண்டுபாடமாமயிலாடரங்கத்தம்மான், திருவயிற்
றுதரபந்தனமென்னுள்ளத்துணின்றுலாகின்றதே. (ச)

பாரமாயபழவினைபற்றறுத், தென்னைத்தன்
வாரமாக்கிவைத்தான்வைத்ததன்றியென்னுட்புகுந்தான்
கோரமாதவஞ்செய்தனன்கொலறியேனரங்கத்தம்மான், திரு
வாரமார்பதன்றோவடியேனையாட்கொண்டதே. (ரு)

துண்டவெண்பிறையன்றுயர்தீர்த்தவ, னஞ்சிறைய
வண்டுவாழ்பொழில்சூழரங்கநகர்மேயவப்பன்
அண்டரண்டபகிரண்டத்தொருமாநிலமெழுமால்வரை, முற்றும்
உண்டகண்டங்கண்டீரடியேனையுய்யக்கொண்டதே. (சா)

கையினார்சுரிசங்கனலாழியர்நீள்வரைபோல்
மெய்யனார், துளபவிரையார்கமழ்நீண்முடியெம்
ஐயனா, ரணியரங்கனாரரவினணைமிசைமேயமாயனார்
செய்யவாயையோவென்னைச்சிந்தைகவர்ந்ததுவே. (எ)

பரியனாகிவந்தவவுணனுடல்கீண்ட, வமரர்க்
கரியவாதிப்பிரானரங்கத்தமலன்முகத்துக்
கரியவாகிப்புடைபரந்துமிளிர்ந்துசெவ்வரியோடி, நீண்டவப்
பெரியவாயகண்களென்னைப்பேதைமைசெய்தனவே. (அ)

* ஆலமாமரத்தினிலைமேலொருபாலகனாய்
ஞாலமேழுமுண்டானரங்கத்தரவினணையான்
கோலமாமணியாரமுமுத்துத்தாமமுமுடிவில்லதோரெழில்
நீலமேனியையோநிறைகொண்டதென்னெஞ்சினையே. (கூ)

* கொண்டல்வண்ணனைக்கோவலனாய்வெண்ணெய்
உண்டவாய, னென்னுள்ளங்கவர்ந்தானை
அண்டர்கோனணியரங்க, னென்னமுதினைக்
கண்டகண்கள்மற்றொன்றினைக்காணாவே. (க0)

திருப்பாணாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

அமலனுவந்தமந்திசதிரம்பாரம்துண்டங்கைபரியாலம்கொண்டல்கண்ணி.

அமலனாதிப்பிரான் முற்றிற்று.

---

ஆ திருப்பல்லாண்டுதொடங்கி பாசுரம் - கூஙசு.



ஸ்ரீ

    

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

மதுரகவியாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# கண்ணிநுண்சிறுத்தாம்பு.

## ஆசார்யநிஷ்டை.

ஸ்ரீமந்நாதமுநிகளருளிச்செய்தது.

தனியன்.

ஆரபிராகம்.

𑌅𑌵𑌿𑌦𑌿𑌤𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌶𑍍𑌶𑌠𑌾𑌰𑍇
𑌰𑍁𑌪𑌨𑌿𑌷𑌦𑌾𑌮𑍁𑌪𑌗𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌰𑌭𑍋𑌗𑌃
𑌅𑌪𑌿𑌚𑌗𑍁𑌣𑌵𑌶𑌾𑌤𑍍𑌤𑌦𑍇𑌕𑌶𑍇𑌷𑍀
𑌮𑌧𑍁𑌰𑌕𑌵𑌿𑌰𑍍𑌹𑍃𑌦𑌯𑍇𑌮𑌮𑌾𑌵𑌿𑌰𑌸𑍍𑌤𑍁॥

அவிதிதவிஷயாந்தரஸ்ஶடாரோ ருபநிஷதாமுபகாநமாத்ரபோக:
அபிசகுணவஶாத்ததேகஶேஷீ மதுரகவிர்ஹ்ருதயேமமாவிரஸ்து.

இருவிகற்பநேரிசைவெண்பா.

வேறொன்றும் நானறியேன் வேதந் தமிழ்செய்த
மாறன் சடகோபன் வண்குருகூர்,—ஏறெங்கள்
வாழ்வாமென் றேத்தும் மதுரகவி யா, ரெம்மை
ஆள்வா ரவரே யரண்.

Funding: IKS/Tattva Heritage. Digitization: eGangotri.



## குருகூர்நம்பிவிஷயம்.

### கலிவிருத்தம்.

### ஆரபிராகம்-ஆதிதாளம்.

* கண்ணிநுண்சிறுத்தாம்பினாற்கட்டுண்ணப்
பண்ணியபெருமாய, னென்னப்பனில்
நண்ணித்தென்குருகூர்நம்பியென்றக்கால்
அண்ணிக்குமமுதூறுமென்னாவுக்கே. (க)

நாவினாநவிற்றின்பமெய்தினேன்
மேவினேனவன்பொன்னடிமெய்ம்மையே
தேவுமற்றறியேன்குருகூர்நம்பி
பாவினின்னிசைபாடித்திரிவனே. (உ)

திரிதந்தாகிலுந்தேவபிரானுடைக்
கரியகோலத்திருவுருக்காண்பனான்
பெரியவண்குருகூர்நகர்நம்பிக்காள்
உரியனா, யடியேன்பெற்றநன்மையே. (ங)

நன்மையான்மிக்கநான்மறையாளர்கள்
புன்மையாகக்கருதுவராதலில்
அன்னையாயத்தனாயென்னையாண்டிடும்
தன்மையான், சடகோபனென்னம்பியே. (ச)

நம்பினேன்பிறர்நன்பொருள்தன்னையும்
நம்பினேன்மடவாரையுமுன்னெலாம்
செம்பொன்மாடத்திருக்குருகூர்நம்பிக்
கன்பனா, யடியேன்சதிர்த்தேனின்றே. (ரு)

இன்றுதொட்டுமெழுமையுமெம்பிரான்
நின்றுதன்புகழேத்தவருளினான்
குன்றமாடத்திருக்குருகூர்நம்பி
என்றுமென்னையிகழ்விலன்காண்மினே. (சு)

கண்டுகொண்டென்னைக்காரிமாறப்பிரான்
பண்டைவல்வினைபாற்றியருளினான்
எண்டிசையுமறியவியம்புகேன்
ஒண்டமிழ்ச்சடகோபனருளையே. (எ)

அருள்கொண்டாடுமடியவரின்புற
அருளினனவ்வருமறையின்பொருள்
அருள்கொண்டாயிரமின்றமிழ்பாடினன்
அருள்கண்டீரிவ்வுலகினின்மிக்கதே. (அ)

மிக்கவேதியர்வேதத்தினுட்பொருள்
நிற்கப்பாடியென்னெஞ்சுள்நிறுத்தினன்
தக்கசீர்ச்சடகோபனென்னம்பிக், காள்
புக்ககாதலடிமைப்பயனன்றே. (௯)

* பயனன்றாகிலும்பாங்கலராகிலும்
செயனன்றாகத்திருத்திப்பணிகொள்வான்
குயினின்றார்பொழில்சூழ்குருகூர்நம்பி
முயல்கின்றேனுன்றன்மொய்கழற்கன்பையே. (க0)

* அன்பன்றன்னையடைந்தவர்கட்கெலாம்
அன்பன், றென்குருகூர்நகர்நம்பிக்
கன்பனாய்மதுரகவிசொன்னசொல்
நம்புவார்பதி, வைகுந்தங்காண்மினே. (கக)

மதுரகவியாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

---

திருப்பல்லாண்டு பாசுரம்-கக. பெரியாழ்வார்திருமொழி பாசுரம் - சகூஉ.
திருப்பாவை பாசுரம் - ௩0. நாய்ச்சியார்திருமொழி பாசுரம் - கசங.
பெருமாள்திருமொழி பாசுரம் - க0ரு. திருச்சந்தவிருத்தம் - கஉ0.
திருமாலை பாசுரம் - சரு. திருப்பள்ளியெழுச்சி பாசுரம் - க0.
அமலனாதிப்பிரான் பாசுரம்-க0. கண்ணிநுண்சிறுத்தாம்பு
பாசுரம் - கக.

ஆ ப்ரபந்தம் - க0 - க்கு - பாசுரம் - கூசஎ.

---

முதலாயிரம் - முற்றும்.



ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

மாறன்பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கங்கூற வவதரித்த

வீறுடையவடையார்சீயம்

திருமங்கைமன்னனருளிச்செய்த

# பெரிய திருமொழி,

# திருக்குறுந்தாண்டகம்,

# திருநெடுந்தாண்டகம்.

இவை,

ஸ்ரீமத் உ. வே. தத்வப்ரவர்த்தகராயெழுந்தருளியிருக்கும்

ஸ்ரீமாந்-கபிஸ்தலம்-திருமலை-அநந்தாண்பிள்ளை

அநந்தாசார்யஸ்வாமிகளாலும்,

ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீபாதரேணுவாகிய

ஶங்ககிரி - புரமு

குருஸ்வாமிநாயுடு அவர்களாலும்,

பாடபாடாந்தரங்களுக்குசிதமாக

பரிஶோதிக்கப்பட்டு,

ஸ்ரீ. உ. வேதாந்தேத்யாதி-திருமலை-நல்லான்சக்ரவர்த்தி

க்ருஷ்ணமாசார்யரவர்கள் திருவடிஸம்பந்தியும்,

பரசமயக்கோளரி

ஸ்ரீமாந்-முடிச்சூர்-அப்பாவுமுதலியா ரவர்களால்

ஏற்படுத்தப்பட்டுள்ள

ஸ்ரீமத்வரவரமுநீந்த்ரனைவாழ்த்தும்

ஸபையைச்சேர்ந்தவருமாகிய

ஸ்ரீ. ரா. ராமக்ருஷ்ணபிள்ளையவர்களால்

சென்னை:

ஆதிகலாநிதி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டன.

ஸ்ரீவகுளபூஷணபாஸ்கரோதயம் - சகஅரு-வதான

ஸ்வபாநுநாமஸம்வத்ஸரம்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# விண்ணப்பம்.

மயர்வறமதிநல மருளப்பெற்ற ஆழ்வார்கள் பரமகாருணிகர்களாய் ப்ரவசநம் செய்தருளிய த்ரவிடவேதமாகும் திவ்யப்ரபந்தங்க ளிதுகாறும் ப்ரசுரிக்கப்பட்டுள்ளவை பாடபாடாந்தரங்களுக்கு பேதமாயும், வ்யாக்யாநபந்திகளுக் கொவ்வாதனவாயு முள்ளமைகொண்டு அவை சுத்தப்ரதியாக்கியச்சிட்டுத்தர அநேகபாகவதோத்தமர்கள் விரும்பினமையால், அத்தோஷங்களொன்றுமின்றி, அத்யாபகர்கள் நிறுத்துமிடமுங் குறிப்பிட்டு ப்ரசுரஞ்செய்யலாயின இதனைஸேவிக்கும் காலக்ஷேபஸ்வாமிகளும், மற்றுள்ளாரும், இதிற்கண்டுள்ள ப்ராமாதிகதோஷங்களி லேதேனுங் காணுவ தாண்டாயின் க்ருபைகூர்ந்து அடியேனுக்குத்தெரிவித்தால் அத்தனையுமில்லாமல் மறுபதிப்பில் காணலாம்,

( , ) இக்குறியிட்டுள்ள விடங்களே அத்யாபகாள் நிறுத்துமிடமென்றுணர்வது.

( * ) இக்குறியிட்டுள்ள பாசுரங்கள் இரட்டித்துச்சேவிக்குமவை.

இத் க்ரந்தம் வேண்டுமவர்கள் சென்னை: திருவல்லிக்கேணி ஆலங்காத்தா பிள்ளைவீதி - ௧௧ - வது நெம்பருள்ள மாளிகையில் ஸ்ரீ. ரா. ராமக்ருஷ்ண பிள்ளையிடத்திற் பெற்றுக்கொள்ளலாம்.

இங்ஙனம்,



ஸ்ரீ



ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# த னி ய ன் க ள்.

திருக்கோட்டியூர்நம்பிகளருளிச்செய்தது.

𑌕𑌲𑌯𑌾𑌮𑌿𑌕𑌲𑌿𑌧𑍍𑌵𑌂𑌸𑌂 - 𑌕𑌵𑌿𑌂𑌲𑍋𑌕𑌦𑌿𑌵𑌾𑌕𑌰𑌂।
𑌯𑌸𑍍𑌯𑌗𑍋𑌭𑌿𑌃𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌾𑌭𑌿𑌃 - 𑌰𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌂𑌨𑌿𑌹𑌤𑌂𑌤𑌮𑌃॥

கலயாமிகலித்வம்ஸம் - கவிம்லோகதிவாகரம்
யஸ்யகோபிப்ரகாஸாபி - ராவித்யம்நிஹதம்தம:.

உடையவரருளிச்செய்தது.

நேரிசைவெண்பா.

வாழி பரகாலன் வாழி கலிகன்றி
வாழி குறையலூர் வாழ்வேந்தன்—வாழியரோ
மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன்
தூயோன் சுடர்மான வேல்.

கூரத்தாழ்வானருளிச்செய்தது.

கலித்துறை.

நெஞ்சுக்கிருள்கடிதீபமடங்கா, நெடும்பிறவி
நஞ்சுக்குநல்லவமுதந்தமிழ்நன் னூற்றுறைகள்
அஞ்சுக்கிலக்கியமாரணசாரம்பரசமயப்
பஞ்சுக்கனலின்பொறி, பரகாலன்பனுவல்களே.

எம்பாரருளிச்செய்தது.

நேரிசைவெண்பா.

எங்கள் கதியே யிராமா நுசமுனியே
சங்கை கெடுத்தாண்ட தவராசா—பொங்குபுகழ்
மங்கையர்கோ னீந்த மறையா யிரமனைத்தும்
தங்குமனம் நீயெனக்குத் தா.

தனியன்கள் முற்றிற்று.



ஸ்ரீ







ஸ்ரீமதேராமாநுஜாயநம:

மாறன்பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கங்கூற வவதரித்த

வீறுடையவடையார்ஸியம்

திருமங்கைமன்னனருளிச்செய்த

# பெரியதிருமொழி.

## முதற்பத்து.

### க - வது. வாடினேன்.

பகவத்விஷயீகாரம் பிறந்தபின்னர் கீழ்நின்றநிலையை யநுஸந்தித்து அநுதபித்து யாவருமறிந்துஜ்ஜீவியுங்களென்று திருமந்த்ரப்ரபாவமதனை அருளிச்செய்கிறார்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சங்கராபரணராகம் - திரிபுடைதாளம்.

* வாடினேன்வாடிவருந்தினேன்மனத்தாற்பெருந்துயரிடும்பையிற்பிறந்து
கூடினேன்கூடியிளையவர்தம்மோடவர்தருங்கலவியேகருதி
ஓடினேனோடியுய்வதோர்பொருளாலுணர்வெனும்பெரும்பதந்தெரிந்து
நாடினேனாடிநான்கண்டுகொண்டேன்நாராயணாவென்னுநாமம். (க)

ஆவியேயமுதேயெனநினைந்துருகியவரவர்பணைமுலைதுணையாப்
பாவியேனுணராதெத்தனைபகலும்பழுதுபோயொழிந்தனநாள்கள்
தூவிசேரன்னந்துணையொடும்புணருஞ்சூழ்புனற்குடந்தையேதொழு, தென்
நாவினாலுய்யநான்கண்டுகொண்டேன்நாராயணாவென்னுநாமம். (உ)

சேமமேவேண்டித்தீவினைபெருக்கித்தெரிவைமாருருவமேமருவி
ஊமனார்கண்டகனவிலும்பழுதாயொழிந்தனகழிந்தவந்நாள்கள்
காமனார்தாதைநம்முடையடிகடம்மடைந்தார்மனத்திருப்பார்
நாமநானுய்யநான்கண்டுகொண்டேன்நாராயணாவென்னுநாமம். (ங)

வென்றியேவேண்டிவீழ்பொருட்கிரங்கிவேற்கணார்கலவியேகருதி
நின்றவாநில்லாநெஞ்சினையுடையேனென்செய்கேனெடுவிசும்பணவும்
பன்றியாயன்றுபாரகங்கீண்டபாழியானாழியானருளே
நன்றுநானுய்யநான்கண்டுகொண்டேன்நாராயணாவென்னுநாமம். ச

கள்வனேனானேன்படிறுசெய்திருப்பேன்கண்டவாதிரிதந்தேனேலும்
தெள்ளியேனானேன்செல்கதிக்கமைந்தேன்சிக்கெனத்திருவருட்பெற்றேன்
உள்ளெலாமுருகிக்குரல்தழுத்தொழிந்தேனுடம்பெலாங்கண்ணநீர்சோர
நள்ளிருளளவும்பகலுநானழைப்பன்நாராயணாவென்னுநாமம். (ரு)

எம்பிரானெந்தையென்னுடைச்சுற்றமெனக்கரசென்னுடைவாணாள்
அம்பினாலரக்கர்வெருக்கொளநெருக்கியவருயிர்செகுத்தவெம்மண்ணல்
வம்புலாஞ்சோலைமாமதிட்டஞ்சைமாமணிக்கோயிலேவணங்கி
நம்பிகாளுய்யநான்கண்டுகொண்டேன்நாராயணாவென்னுநாமம்.(சா)

இற்பிறப்பறியீரிவரவரொன்னீரின்னதோர்தன்மையென்றுணரீர்
கற்பகம்புலவர்களைகணென்றுலகிற்கண்டவாதொண்டரைப்பாடும்
சொற்பொருளாளீர்சொல்லுகேன்வம்மின்சூழ்புனற்குடந்தையேதொழுமின்
நற்பொருட்காண்மின்பாடிநீருய்மின்நாராயணாவென்னுநாமம். (எ)

கற்றிலேன்கலைகளைம்புலன்கருதுங்கருத்துளேதிருத்தினேன்மனத்தைப்
பெற்றிலேனதனாற்பேதையேனன்மைபெருநிலத்தாருயிர்க்கெல்லாஞ்
செற்றமேவேண்டித்திரிதருவேன்றவிர்ந்தேன்செல்கதிக்குய்யுமாறெண்ணி
நற்றுணையாகப்பற்றினேனடியேன்நாராயணாவென்னுநாமம். (அ)

* குலந்தருஞ்செல்வந்தந்திடுமடியார்படுதுயராயினவெல்லாம்
நிலந்தரஞ்செய்யும்நீள்விசும்பருளுமருளொடுபெருநிலமளிக்கும்
வலந்தருமற்றுந்தந்திடும்பெற்றதாயினுமாயினசெய்யும்
நலந்தருஞ்சொல்லைநான்கண்டுகொண்டேன்நாராயணாவென்னுநாமம்.கூ

* மஞ்சுலாஞ்சோலைவண்டறைமாநீர்மங்கையார்வாட்கலிகன்றி
செஞ்சொலாலெடுத்ததெய்வநன்மாலையிவைகொண்டுசிக்கெனத்தொண்டீர்
துஞ்சும்போதழைமின்றுயர்வரினினைமின்றுயரிலீர்சொல்லிலுநன்றாம்
நஞ்சுதான்கண்டீர்நம்முடைவினைக்குநாராயணாவென்னுநாமம். (க0)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

வாடாவி சேமம்வென்றி கள்வனெம்பிரானிற்பிறப்புகற்றுக்குலம் மஞ்சுவாலி.

ஆ திருமொழி - க - க்கு - பாசுரம் - க0.

## உ - வது. வாலிமாவல.

மந்த்ரமுபதேசித்து அதற்கர்த்தமான தத்புருஷ பஹுவ்ரீஹிஸமாஸப்ரஸித்தமாய் ஸ்வாமித்வ ஸௌலப்யங்களுக் கெல்லைநிலமாகும் அர்ச்சாவதாரங்களை யாஶ்ரயிக்கும்படிஉபதேசிக்கக்கோலி யுகந்தருளினநிலங்களுக் கெல்லைநிலமான இமவான்நிலத்தில்திருப்பிரிதியளவுஞ்சென்று அவ்விடமநுபவிப்பதாகத் திருவுள்ளத்துக்கருளிச்செய்கிறார்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அடாணாராகம் - ஆதிதாளம்.

* வாலிமாவலத்தொருவனதுடல்கெடவரிசிலைவளைவித், தன்
றேலநாறுதண்டடம்பொழிலிடம்பெறவிருந்தநல்லிமயத்துள்
ஆலிமாமுகிலதிர்தரவருவரையகடுறமுகடேறிப்
பீலிமாமயினடஞ்செயுந்தடஞ்சுனைப்பிரிதிசென்றடைநெஞ்சே. (க)

கலங்கமாக்கடலரிக்குலம்பணிசெயவருவரையணைகட்டி
இலங்கைமாநகர்பொடிசெய்தவடிகடாமிருந்தநல்லிமயத்து
விலங்கல்போல்வனவிறலிருஞ்சினத்தனவேழங்கடுயர்கூரப்
பிலங்கொள்வாளெயிற்றரியவைதிரிதருபிரிதிசென்றடைநெஞ்சே.()

துடிகொணுண்ணிடைச்சுரிகுழற்றுளங்கெயிற்றிளங்கொடிதிறத்,தாயர்
இடிகொள்வெங்குரலினவிடையடர்த்தவனிருந்தநல்லிமயத்துக்
கடிகொள்வேங்கையினறுமலரமளியின்மணியறைமிசை, வேழம்
பிடியினோடுவண்டிசைசொலத்துயில்கொளும்பிரிதிசென்றடைநெஞ்சே.

மறங்கொளாளரியுருவெனவெருவரவொருவனதகன்மார்பம்
திறந்து, வானவர்மணிமுடிபணிதரவிருந்தநல்லிமயத்துள்
இறங்கியேனங்கள்வளைமருப்பிடந்திடக்கிடந்தருகெரிவீசும்
பிறங்குமாமணியருவியொடிழிதருபிரிதிசென்றடைநெஞ்சே. (ச)

கரைசெய்மாக்கடற்கிடந்தவன்கனைகழலமரர்கடொழுதேத்த
வரைசெய்மேகலையலர்மகளவளொடுமமர்ந்தநல்லிமயத்து
வரைசெய்மாக்களிறிளவெதிர்வளர்முளையளைமிகுதேன்றோய்த்துப்
பிரசவாரிதன்னிளம்பிடிக்கருள்செயும்பிரிதிசென்றடைநெஞ்சே. ரு

பணங்களாயிரமுடையநல்லரவணைப்பள்ளிகொள்பரமாவென்
றிணங்கிவானவர்மணிமுடிபணிதரவிருந்தநல்லிமயத்து
மணங்கொண்மாதவிநெடுங்கொடிவிசும்புறநிமிர்ந்தவைமுகில்பற்றிப்
பிணங்குபூம்பொழினுழைந்துவண்டிசைசொலும்பிரிதிசென்றடைநெஞ்சே. சு

கார்கொள்வேங்கைகள்கனவரைதழுவியகறிவளர்கொடிதுன்றிப்
போர்கொள்வேங்கைகள்புனவரைதழுவியபூம்பொழிலிமயத்துள்
ஏர்கொள்பூஞ்சுனைத்தடம்படிந்தினமலரெட்டுமிட், டிமையோர்கள்
பேர்களாயிரம்பரவிநின்றடிதொழும்பிரிதிசென்றடைநெஞ்சே. (எ)

இரவுகூர்ந்திருள்பெருகியவரைமுழையிரும்பசியதுகூர
அரவமாவிக்குமகம்பொழிறழுவியவருவரையிமயத்துப்
பரமனுதியெம்பனிமுகில்வண்ணனென்றெண்ணிநின்,றிமையோர்கள்
பிரமனோடுசென்றடிதொழும்பெருந்தகைப்பிரிதிசென்றடைநெஞ்சே.

ஓதியாயிரநாமங்களுணர்ந்தவர்க்குறுதுயரடையாமல்
ஏதமின்றிநின்றருளுநம்பெருந்தகையிருந்தநல்லிமயத்துத்
தாதுமல்கியபிண்டிவிண்டலர்கின்றதழற்புரையெழிநோக்கிப்
பேதைவண்டுகளெரியெனவெருவருபிரிதிசென்றடைநெஞ்சே. (௰)

* கரியமாமுகிற்படலங்கள்கிடந்தவைமுழங்கிடக், களிறென்று
பெரியமாசுணம்வரையெனப்பெயர்தருபிரிதியெம்பெருமானை
வரிகொள்வண்டறைபைம்பொழின்மங்கையர், கலியனதொலிமாலை
அரியவின்னிசைபாடுநல்லடியவர்க்கருவினையடையாவே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

வாலி கலங்க அடி மறம் கரைசெய் பணம் கா ரிரவு ஓதி கரிய முற்ற.

ஆ திருமொழி - உ - க்கு - பாசுரம் - ௨௦.

---

## ௩ - வது. முற்றமூத்து.

செய்கிறோமென்று நெஞ்சாறியிருக்கச் சீரராஸ்திரத்தையும் வார்த்திக தோஷத்தையுஞ் சொல்லிக்கொண்டு பதரியைச் சீக்ரத்தில் ஆஶ்ரயிப்போமென்று அருளிச்செய்கிறார்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முகாரிராகம் - ஆதிதாளம்.

* முற்றமூத்துக்கோல்துணையாமுன்னடிநோக்கிவளைந்து
இற்றகால்போற்றள்ளிமெள்ளவிருந்தங்கிளையாமுன்
பெற்றதாய்போல்வந்தபேய்ச்சிபெருமுலையூ, டுயிரை
வற்றவாங்கியுண்டவாயான்வதரிவணங்குதுமே. (௧)

முதுகுபற்றிக்கைத்தலத்தான்முன்னொருகோலூன்றி
விதிர்விதிர்த்துக்கண்சுழன்றுமேற்கிளைகொண்டிருமி
இதுவென்னப்பாமூத்தவாறென்றிளையவரேசாமுன்
மதுவுண்வண்டுபண்கள்பாடும்வதரிவணங்குதுமே. (௨)

உறிகள்போன்மெய்நரம்பெழுந்தூன்றளர்ந்துள்ளமெள்கி
நெறியைநோக்கிக்கண்சுழன்றுநின்றுநடுங்காமுன்
அறிதியாகினெஞ்சமன்பாயாயிரநாமஞ்சொல்லி
வெறிகொள்வண்டுபண்கள்பாடும்வதரிவணங்குதுமே. (௩)

பிளேசோரக்கண்ணிடுங்கிப்பித்தெழமூத்திருமித்
தாள்கணேவத்தம்மின்முட்டித்தள்ளிடவாமுன்
காளேயாகிக்கன்றுமேய்த்துக்குன்றெடுத்தன்றுநின்முன்
வாளேபாயுந்தண்டடஞ்சூழ்வதரிவணங்குதுமே. (௪)

பண்டுகாமரானவாறும்பாவையர்வாயமுதம்
உண்டவாறும், வாழ்ந்தவாறுமொக்கவுரைத்திருமித்
தண்டுகாலாவூன்றியூன்றித்தள்ளிநடவாமுன்
வண்டுபாடுந்தண்டுழாயான்வதரிவணங்குதுமே. (௫)

எய்த்தசொல்லோடீளேயேங்கியிருமியிளேத், துடலம்
பித்தர்போலச்சித்தம்வேறுய்ப்பேசியயராமுன்
அத்தனெந்தையாதிமூர்த்தியாழ்கடலேக்கடைந்த
மைத்தசோதியெம்பெருமான்வதரிவணங்குதுமே. (௬)

பப்பவப்பர்மூத்தவாறு, பாழ்ப்பதுசீத்திரளே
யொப்ப, வைக்கள்போதவுந்தவுன்றமர்காண்மினென்று
செப்புநேர்மென்கொங்கைநல்லார்தாஞ், சிரியாதமுனம்
வைப்புநங்கள்வாழ்வுமானுன்வதரிவணங்குதுமே. (௭)

ஈசிபோமினீங்கிரோன்மினிருமியிளேத்தி, ருள்ளம்
கூசியிட்டீரென்றுபேசுங்குவளேயங்கண்ணியர்பால்,
நாசமானபாசம்விட்டுநன்னெறிநோக்கலுறில்
வாசமல்குதண்டுழாயான்வதரிவணங்குதுமே. (௮)

புலன்கணேயமெய்யின்மூத்துப், போந்திருந்துள்ளமெள்கிக்
கலங்கவைக்கள்போதவுந்திக்கண்டபிதற்றுமுன்
அலங்கலாயதண்டுழாய்கொண்டாயிரநாமஞ்சொல்லி
வலங்கொள்தொண்டர்பாடியாடும்வதரிவணங்குதுமே. (௯)

* வண்டுதண்டேனுண்டுவாழும்வதரிநெடுமாலேக்
கண்டல்வேலிமங்கைவேந்தன்கலியனொலிமாலே
கொண்டுதொண்டர்பாடியாடக்கூடிடினீள்விசும்பில்
அண்டமல்லான்மற்றவர்க்கோராட்சியறியோமே. (௧0)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

முற்றமுதகுறிபிளேபண்டெய்த்தபப்பவீசிபுலன்வண்டேனம்.

ஆ திருமொழி-௩-க்கு-பாசுரம்-௩0.



## ௪ - வது. ஏனமுனாகி.

பதரிகாஸ்ரமத்தை யாஸ்ரயிப்போமென்று அருளிச்செய்கிறார்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பந்துவராளிராகம் - ஆதிதாளம்.

* ஏனமுனாகியிருநிலமிடந்தன்றிணையடியிமையவர்வணங்கத்
தானவனாகந்தரணியிற்புரளத்தடஞ்சிலைகுனித்தவென்றலைவன்
தேனமர்சோலைக்கற்பகம்பயந்ததெய்வநன்னறுமலர்கொணர்ந்து
வானவர்வணங்குங்கங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளானே.

கானிடையுருவைச்சுடுசரந்துரந்துகண்டுமுன்கொடுந்தொழிலுரவோன்
ஊனுடையகலத்தடுகணைகுளிப்பவுயிர்கவர்ந்துகந்தவெம்மொருவன்
தேனுடைக்கமலத்தயனொடுதேவர்சென்றுசென்றிறைஞ்சிடப்,பெருகு
வானிடைமுதுநீர்க்கங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளானே.

இலங்கையுங்கடலுமடலிருந்துப்பிலிருநிதிக்கிறைவனு, மரக்கர்
குலங்களுங்கெடமுன்கொடுந்தொழிற்புரிந்தகொற்றவன்,கொழுஞ்சுடர்சுழன்
விலங்கலிலுருஞ்சிமேனின்றுவிசும்பில்வெண்டுகிற்கொடியெனவிரிந்து[ற
வலந்தருமணிநீர்க்கங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளானே.

துணிவினியுனக்குச்சொல்லுவன்மனமேதொழுதெழுதொண்டர்கடமக்குப்
பிணியொழித்தமரர்பெருவிசும்பருளும்பேரருளாளனெம்பெருமான்
அணிமலர்க்குழலாரரம்பையர்துகிலுமாரமும்வாரிவந், தணிநீர்
மணிகொழித்திழிந்தகங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளானே.

பேயிடைக்கிருந்துவந்தமற்றவடன்பெருமுலைசுவைத்திடப், பெற்ற
தாயிடைக்கிருத்தலஞ்சுவனென்றுதளர்ந்திடவளர்ந்தவென்றலைவன்
சேய்முகட்டுச்சியண்டமுஞ்சுமந்துசெம்பொன்செய்விலங்கலிலிங்கு
வாய்முகட்டிழிந்தகங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளானே.

தேரணங்கல்குற்செழுங்கயற்கண்ணிதிறத்தொருமறத்தொழிற்புரிந்து
பாரணங்கிமிலேறேழுமுன்னடர்த்தபனிமுகில்வண்ணனெம்பெருமான்
காரணந்தன்னாற்கடும்புனற்கயத்தகருவரைபிளவெழக்குத்தி
வாரணங்கொணர்ந்தகங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளானே.

வெந்திறற்களிறும்வேலைவாயமுதும்விண்ணொடுவிண்ணவர்க்கரசும்
இந்திரற்கருளியெமக்குமீந்தருளுமெந்தையெம்மடிகளெம்பெருமான்
அந்தரத்தமரரடியிணைவணங்கவாயிரமுகத்தினாலருளி
மந்தரந்திழிந்தகங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளானே.

மான்முனிந்தொருகால்வரிசிலைவளைத்தமன்னவன்பொன்னிறத்துரவோன்
ஊன்முனிந்தவன துடலிருபிளவாவுகிர்நுதிமடுத், தயனரனைத்
தான்முனிந்திட்டவெந்திறற்சாபந்தவிர்த்தவன், றவம்புரிந்துயர்ந்த
மாமுனிகொணர்ந்தகங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளானே.

கொண்டன்மாருதங்கள்குலவரைதொகுநீர்க்குரைகடலுலகுடனனைத்தும்
உண்டமாவயிற்ரோனெண்சுடரேய்ந்தவும்பருமூழியுமானான்
அண்டமூடறுத்தன்றந்தரத்திழிந்தங்கவனியாளலமரப், பெருகும்
மண்டுமாமணிநீர்க்கங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளானே.

* வருந்திரைமணிநீர்க்கங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளானைக்
கருங்கடன்முன்னீர்வண்ணனையெண்ணிக்கலியன்வாயொலிசெய்தபனுவல்
வரஞ்செய்தவைந்துமைந்தும்வல்லார்கள்வானவருலகுடன்மருவி
இருங்கடலுலகமாண்டுவெண்குடைக்கீழிமையவராகுவர்தாமே. ௧0

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஏனங்கானிலங்கைதுணிவுபேய்தேர்வெந்திறல்மான்கொண்டல்வருந்திரைகலை.

ஆ திருமொழி - ச - க்கு - பாசுரம் - ச0.

---

## ரு - வது. கலையுங்கரியும்.

ஸ்ரீசாளக்ராமத்தில்வந்துஸந்நிஹிதனானவனை ஆஶ்ரயிப்போமென்று திருவுள்ளத்தோடேகூட்டுகிறதாக வருளிச்செய்கிறார்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அபரூபராகம்-ஆதிதாளம்.

* கலையுங்கரியும்பரிமாவுந்திரியுங்கானங்கடந்துபோய்ச்
சிலையுங்கணையுந்துணையாகச்சென்ருன்வென்றிச்செருக்களத்து
மலைகொண்டலைநீரணைகட்டிமதிணீரிலங்கை, வாளரக்கர்
தலைவன்றலைபத்தறுத்துகந்தான்சாளக்கிராமமடைநெஞ்சே. (௧)

கடஞ்சூழ்கரியும்பரிமாவுமொலிமான்றேருங்காலாளும்
உடன்சூழ்ந்தெழுந்தகடியிலங்கைபொடியாவடிவாய்ச்சரந்துரந்தான்
இடஞ்சூழ்ந்தெங்குமிருவிசும்பிலிமையோர்வணங்கமணங்கமழும்
தடஞ்சூழ்ந்தெங்குமழகாயசாளக்கிராமமடைநெஞ்சே. (௨)

உலவுதிரையுங்குலவரையுமூழிமுதலாவெண்டிக்கும்
நிலவுஞ்சுடருமிருளுமாய்நின்றான்வென்றிவிறலாழி
வலவன், வானோர்தம்பெருமான்மருவாவரக்கர்க்கெஞ்ஞான்றும்
சலவன், சலஞ்சூழ்ந்தழகாயசாளக்கிராமமடைநெஞ்சே. (௩)

ஊரான்குடந்தையுத்தமனொருகாலிருகாற்சிலைவளையத்
தோராவரக்கர்தேர்வெள்ளஞ்செற்றான்வற்றாவருபுனல்சூழ்
பேரான், பேராயிரமுடையான்பிறங்குசிறைவண்டறைகின்ற
தாரான், றாராவயல்சூழ்ந்தசாளக்கிராமமடைநெஞ்சே. (௪)

அடுத்தார்த்தெழுந்தாள்பிலவாய்விட்டலறவவண்மூக்கயில்வாளால்
விடுத்தான், விளங்குசுடராழிவிண்ணோர்பெருமானண்ணார்முன்
கடுத்தார்த்தெழுந்தபெருமழையைக்கல்லொன்றேந்தியினநிரைக்காத்
தடுத்தான், றடஞ்சூழ்ந்தழகாயசாளக்கிராமமடைநெஞ்சே. (௫)

தாயாய்வந்தபேயுயிருந்தயிரும்விழுதுமுடனுண்ட
வாயான், றூயவரியுருவிற்குறளாய்ச்சென்றுமாவலியை
ஏயானிரப்ப, மூவடிமண்ணின்றேதாவென்றுலகேழும்
தாயான், காயாமலர்வண்ணன்சாளக்கிராமமடைநெஞ்சே. (௬)

ஏனோரஞ்சவெஞ்சமத்துளரியாய்ப்பரியவிரணியனை
ஊனாரகலம்பிளவெடுத்தவொருவன்றானேயிருசுடராய்
வானாய்த்தீயாய்மாருதமாய்மலையாயலைநீருலகனைத்தும்
தானாய்த், தானுமானான்றன்சாளக்கிராமமடைநெஞ்சே. (௭)

வெந்தாரென்புஞ்சுடுநீறுமெய்யிற்பூசிக்கையகத், தோர்
சந்தார்தலைகொண்டுலகேழுந்திரியும்பெரியோன்றான்சென், றென்
எந்தாய்சாபந்தீரென்னவிலங்கமுதுநீர்திருமார்பில்
தந்தான், சந்தார்பொழில்சூழ்ந்தசாளக்கிராமமடைநெஞ்சே. (௮)

தொண்டாமினமுமிமையோருந்துணைநூன்மார்பிலந்தணரும்
அண்டாவெமக்கேயருளாயென்றணையுங்கோயிலருகெல்லாம்
வண்டார்பொழிலின்பழனத்துவயலினயலேகயல்பாயத்
தண்டாமரைகள்முகமலர்த்துஞ்சாளக்கிராமமடைநெஞ்சே. (௯)

* தாராவாரும்வயல்சூழ்ந்தசாளக்கிராமத்தடிகளைக்
காரார்புறவின்மங்கைவேந்தன்கலியனொலிசெய்தமிழ்மாலை
ஆராருலகத்தறிவுடையாரமரர்நன்னாட்டரசாளப்
பேராயிரமுமோதுமின்களன்றியிவையேபிதற்றுமினே. (க0)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

கலைகடவுலவூர்அடுத்தார்தாயேனோர்வெந்தார்தொண்டுதாராவணி.

ஆ திருமொழி - ௫ - க்கு - பாசுரம் - ௫0.

## ௬ - வது. வாணிலாமுறுவல்.

தம்முபதேசங்கேட்டு நெஞ்சொருப்பட்டவாறே ஙிகர்ஷதைவை
அநுஸந்தித்து விஷயாந்தரப்ராவண்ய முதலான பூர்வவிருத்தங்களைச் சொல்லிக்
கொண்டு நைமிசாரண்யஸ்வாமி திருவடிகளிலே ஶரணம்புகுந்ததாக
அருளிச்செய்கிறார்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

காம்போதிராகம் - ஆதிதாளம்.

* வாணிலாமுறுவற்சிறுநுதற்பெருந்தோள்
மாதரார்வனமுலைப்பயனே
பேணினே, னதனைப்பிழையெனக்கருதிப்
பேதையேன்பிறவிநோயறுப்பான்
ஏணிலேனிருந்தேனெண்ணினேனெண்ணி
யிளையவர்கலவியின்றிறத்தை
நாணினேன், வந்துன்றிருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (௧)

சிலம்படியுருவிற்கருநெடுங்கண்ணார்
திறத்தனாயறத்தையேமறந்து
புலம்படிந்துண்ணும்போகமேபெருக்கிப்
போக்கினேன்பொழுதினைவாளா
அலம்புரிதடக்கையாயனேமாயா
வானவர்க்கரசனே, வானோர்
நலம்புரிந்திறைஞ்சுந்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (௨)

சூதினைப்பெருக்கிக்களவினைத்துணிந்து
சுரிகுழன்மடந்தையர்திறத்துக்
காதலேமிகுத்துக்கண்டவாதிரிந்த
தொண்டனே, னமன்றமர்செய்யும்
வேதனைக்கொடுங்கிநடுங்கினேன்வேலை
வெண்டிரையலமரக்கடைந்த
நாதனேவந்துன்றிருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (௩)

வம்புலாங்கூந்தன்மனைவியைத்துறந்து
பிறர்பொருள்தாரமென்றிவற்றை
நம்பினாரிறந்தால்நமன்றமர்பற்றி
யெற்றிவைத், தெரியெழுகின்ற

செம்பினுலியன்றபாவையைப்பாவீ
தழுவெனமொழிவதற்கஞ்சி
நம்பனேவந்துன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (ச)

இடும்பையாலடர்ப்புண்டிடுமிறேறுற்றென்
றிரந்தவர்க்கில்லையேயென்று
நெடுஞ்சொலான்மறுத்தநீசனேனந்தோ
நினைக்கிலேன் வினைப்பயன்றன்னைக்
கடுஞ்சொலார்கடியார்காலனூர்தமராற்
படுவதோர்கொடுமிறைக்கஞ்சி
நடுங்கிநான்வந்துன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (ரு)

கோடியமனத்தாற்சினத்தொழிற்புரிந்து
திரிந்துநாயினத்தொடுந்திரிந்திட்
டோடியுமுழன்றுமுயிர்களேகொன்றே
னுணர்விலேனுறலா, னமனூர்
பாடியைப்பெரிதும்பரிசழித்திட்டேன்
பரமனேபாற்கடற்கிடந்தாய்
நாடிநான்வந்துன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (சா)

நெஞ்சினுனினைந்தும்வாயினுன்மொழிந்தும்
நீதியல்லாதனசெய்தும்
துஞ்சினுர்செல்லுந்தொன்னெறிகேட்டே
துளங்கினேன்விளங்கனிமுனிந்தாய்
வஞ்சனேனடியேனெஞ்சினிற்பிரியா
வானவா தானவர்க்கென்றும்
நஞ்சனே, வந்துன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (எ)

ஏவினுர்கலியார்நலிகவென்றென்மே
லெங்ஙனேவாழுமா, றைவர்
கோவினுர்செய்யுங்கொடுமையைமடித்தேன்
குறுங்குடிநெடுங்கடல்வண்ணா
பாவினுரின்சொற்பன்மலர்கொண்டுன்
பாதமேபரவிநான்பணிந், தென்
நாவினுல்வந்துன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (அ)

ஊனிடைச்சுவர்வைத்தென்புதூணாட்டி
புரோமமேய்ந்தொன்பதுவாசல்
தானுடைக்குரம்பைபிரியும்போதுன்றன்
சரணமேசரணமென்றிருந்தேன்
தேனுடைக்கமலத்திருவினுக்கரசே
திரைகொண்மாநெடுங்கடற்கிடந்தாய்
நானுடைத்தவத்தாற்றிருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (௯)

* ஏதம்வந்தணுகாவண்ணநாமெண்ணி
யெழுமினோதொழுதுமென்றிமையோர்
நாதன்வந்திறைஞ்சுநைமிசாரணியத்
தெந்தையைச்சிந்தையுள்வைத்துக்
காதலேமிகுத்தகலியன்வாயொலிசெய்
மாலைதான்கற்றுவல்லார்கள்
ஓதநீர்வையமாண்டுவெண்குடைக்கீ
ழும்பருமாகுவர்தாமே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

வாணிசிலம்புகுதுவம்பிடும்பைகோடியநெஞ்சேவினூர்ஊனேதமங்கன்.

ஆ திருமொழி - ௬ - க்கு - பாசுரம் - ௬0.

## எ - வது. அங்கண்ஞாலம்.

இவ்வாழ்வாருடைய பயந்திரும்படி சிங்கவேழ்குன்றிலே ஸந்நிதிபண்ணி உமக்கொரு பயம்வேண்டா நீர்கிட்டி நம்மையநுபவித்துச் சுகமேயிருமென்ன ஹ்ருஷ்டராயநுபவிக்கையிலே ஒருப்படுகிறதாக அருளிச்செய்கிறார்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கமாசுராகம் - ரூபகதாளம்.

* அங்கண்ஞாலமஞ்சவங்கோராளரியா, யவுணன்
பொங்கவாகம்வள்ளுகிராற்போழ்ந்தபுனிதனிடம்
பைங்கணானைக்கொம்புகொண்டுபத்திமையா, லடிக்கீழ்ச்
செங்கணாளியிட்டிறைஞ்சுஞ்சிங்கவேழ்குன்றமே. (க)

அலைத்தபேழ்வாய்வாளெயிற்றோர்கோளரியா, யவுணன்
கொலைக்கையாளனெஞ்சிடந்தகூருகிராளனிடம்
மலைத்தசெல்சாத்தெறிந்தபூசல்வன்றுடிவாய்கடுப்பச்
சிலைக்கைவேடர்தெழிப்பறாதசிங்கவேழ்குன்றமே. (உ)

ஏய்ந்தபேழ்வாய்வாளெயிற்றோர்கோளரியா, யவுணன்
வாய்ந்தவாகம்வள்ளுகிரால்வகிர்ந்தவம்மானதிடம்
ஓய்ந்தமாவுமுடைந்தகுன்றுமன்றியுநின்றழலால்
தேய்ந்தவேயுமல்லதில்லாச்சிங்கவேழ்குன்றமே. (ங)

எவ்வும்வெவ்வேற்பொன்பெயரோனேதலனின்னுயிரை
வவ்வி, யாகம்வள்ளுகிரால்வகிர்ந்தவம்மானதிடம்
கவ்வுநாயுங்கழுகுமுச்சிப்போதொடுகாற்சுழன்று
தெய்வமல்லாற்செல்லவொண்ணாச்சிங்கவேழ்குன்றமே. (ச)

மென்றபேழ்வாய்வாளெயிற்றோர்கோளரியா, யவுணன்
பொன்றவாகம்வள்ளுகிராற்போழ்ந்தபுனிதனிடம்
நின்றசெந்தீமொண்டுசூறைநீள்விசும்பூடிரியச்
சென்றுகாண்டற்கரியகோயிற்சிங்கவேழ்குன்றமே. (ரு)

எரிந்தபைங்கணிலங்குபேழ்வாயெயிற்றொடிதெவ்வுருவென்
றிருந்துவானோர்கலங்கியோடவிருந்தவம்மானதிடம்
நெரிந்தவேயின்முழையுணின்றுநீணெறிவாயுழுவை
திரிந்தவானைச்சுவடுபார்க்குஞ்சிங்கவேழ்குன்றமே. (சு)

முனைத்தசீற்றம்விண்சுடப்போய்மூவுலகும்பிறவும்
அனைத்துமஞ்சவாளரியாயிருந்தவம்மானதிடம்
கனைத்ததீயுங்கல்லுமல்லாவில்லுடைவேடருமாய்
தினைத்தனையுஞ்செல்லவொண்ணாச்சிங்கவேழ்குன்றமே. (எ)

நாத்தழும்பநான்முகனுமீசனுமாய்முறையால்
ஏத்த, வங்கோராளரியாயிருந்தவம்மானதிடம்
காய்த்தவாகைநெற்றொலிப்பக்கல்லதர்வேய்ங்கழைபோய்
தேய்த்ததீயால்விண்சிவக்குஞ்சிங்கவேழ்குன்றமே. (அ)

நல்லைநெஞ்சேநாந்தொழுதுநம்முடைநம்பெருமான்
அல்லிமாதர்புல்கநின்றவாயிரந்தோளனிடம்
நெல்லிமல்கிக்கல்லுடைப்பப்புல்லிலையார்த், ததர்வாய்
சில்லிசில்லென்றொல்லறாதசிங்கவேழ்குன்றமே. (கூ)

* செங்கணாளியிட்டிறைஞ்சுஞ்சிங்கவேழ்குன்றுடைய
எங்களீசனெம்பிரானையிருந்தமிழ்நூற்புலவன்
மங்கையாளன்மன்னுதொல்சீர்வண்டறைதார்க்கலியன்
செங்கையாளன்செஞ்சொன்மாலைவல்லவர்தீதிலரே. (க0)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

அங்கணலையேய்ந்தெவ்வு மென்றெரிமுனைநாத்தநல்செங்கண்கொங்கு.

ஆ திருமொழி - எ - க்கு - பாசுரம் - எ0.

ஊனிடைச்சுவர்வைத்தென்புதூணாட்டி
யுரோமமேய்ந்தொன்பதுவாசல்
தானுடைக்குரம்பைபிரியும்போதுன்றன்
சரணமேசரணமென்றிருந்தேன்
தேனுடைக்கமலத்திருவினுக்கரசே
திரைகொண்மாநெடுங்கடற்கிடந்தாய்
நானுடைத்தவத்தாற்றிருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (கூ)

* ஏதம்வந்தணுகாவண்ணநாமெண்ணி
யெழுமினோதொழுதுமென்றிமையோர்
நாதன்வந்திறைஞ்சுநைமிசாரணியத்
தெந்தையைச்சிந்தையுள்வைத்துக்
காதலேமிகுத்தகலியன்வாயொலிசெய்
மாலைதான்கற்றுவல்லார்கள்
ஓதநீர்வையமாண்டுவெண்குடைக்கீ
ழும்பருமாகுவர்தாமே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.
ஜீயர்திருவடிகளேஶரணம்.
வாணிலம்புகுதுவம்பிடும்பைகோடியநெஞ்சேவிஞர்ஊனேதமங்கள்.
ஆ திருமொழி - கூ - க்கு - பாசுரம் - கூ0.

## எ - வது. அங்கண்ஞாலம்.

இவ்வாழ்வாருடைய பயந்திரும்படி சிங்கவேழ்குன்றிலே ஸந்நிதிபண்ணி உமக்கொரு பயம்வேண்டா நீர்கிட்டி நம்மையநுபவித்துச் சுகமேயிருமென்ன ஹ்ருஷ்டராயநுபவிக்கையிலே ஒருப்படுகிறதாக அருளிச்செய்கிறார்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கமாசுராகம் - ரூபகதாளம்.

* அங்கண்ஞாலமஞ்சவங்கோராளரியா, யவுணன்
பொங்கவாகம்வள்ளுகிராற்போழ்ந்தபுனிதனிடம்
பைங்கணானைக்கொம்புகொண்டுபத்திமையா, லடிக்கீழ்ச்
செங்கணாளியிட்டிறைஞ்சுஞ்சிங்கவேழ்குன்றமே. (க)

அலைத்தபேழ்வாய்வாளெயிற்றோர்கோளரியா, யவுணன்
கொலைக்கையாளனெஞ்சிடந்தகூருகிராளனிடம்
மலைத்தசெல்சாத்தெறிந்தபூசல்வன்றுடிவாய்கடுப்பச்
சிலைக்கைவேடர்தெழிப்பருதசிங்கவேழ்குன்றமே. (உ)

ஏய்ந்தபேழ்வாய்வாளெயிற்றோர்கோளரியா, யவுணன்
வாய்ந்தவாகம்வள்ளுகிரால்வகிர்ந்தவம்மானதிடம்
ஓய்ந்தமாவுமுடைந்தகுன்றுமன்றியுநின்றழலால்
தேய்ந்தவேயுமல்லதில்லாச்சிங்கவேழ்குன்றமே. (௩)

எவ்வும்வெவ்வேற்பொன்பெயரோனேதலனின்னுயிரை
வவ்வி, யாகம்வள்ளுகிரால்வகிர்ந்தவம்மானதிடம்
கவ்வுநாயுங்கழுகுமுச்சிப்போதொடுகாற்சுழன்று
தெய்வமல்லாற்செல்லவொண்ணாச்சிங்கவேழ்குன்றமே. (௪)

மென்றபேழ்வாய்வாளெயிற்றோர்கோளரியா, யவுணன்
பொன்றவாகம்வள்ளுகிராற்போழ்ந்தபுனிதனிடம்
நின்றசெந்தீமொண்டுசூறைநீள்விசும்பூடிரியச்
சென்றுகாண்டற்கரியகோயிற்சிங்கவேழ்குன்றமே. (௫)

எரிந்தபைங்கணிலங்குபேழ்வாயெயிற்றொடிதெவ்வுருவென்
றிருந்துவானோர்கலங்கியோடவிருந்தவம்மானதிடம்
நெரிந்தவேயின்முழையுணின்றுநீணெறிவாயுழுவை
திரிந்தவானைச்சுவடுபார்க்குஞ்சிங்கவேழ்குன்றமே. (௬)

முனைத்தசீற்றம்விண்சுடப்போய்மூவுலகும்பிறவும்
அனைத்துமஞ்சவாளரியாயிருந்தவம்மானதிடம்
கனைத்ததீயுங்கல்லுமல்லாவில்லுடைவேடருமாய்
தினைத்தனையுஞ்செல்லவொண்ணாச்சிங்கவேழ்குன்றமே. (௭)

நாத்தழும்பநான்முகனுமீசனுமாய்முறையால்
ஏத்த, வங்கோராளரியாயிருந்தவம்மானதிடம்
காய்த்தவாகைநெற்றொலிப்பக்கல்லதர்வேய்ங்கழைபோய்
தேய்த்ததீயால்விண்சிவக்குஞ்சிங்கவேழ்குன்றமே. (௮)

நல்லைநெஞ்சேநாந்தொழுதுநம்முடைநம்பெருமான்
அல்லிமாதர்புல்கநின்றவாயிரந்தோளனிடம்
நெல்லிமல்கிக்கல்லுடைப்பப்புல்லிலையார்த், ததர்வாய்
சில்லிசில்லென்றொல்லறாதசிங்கவேழ்குன்றமே. (௯)

✻ செங்கணாளியிட்டிறைஞ்சுஞ்சிங்கவேழ்குன்றுடைய
எங்களீசனெம்பிரானையிருந்தமிழ்நூற்புலவன்
மங்கையாளன்மன்னுதொல்சீர்வண்டறைதார்க்கலியன்
செங்கையாளன்செஞ்சொன்மாலைவல்லவர்தீதிலரே. (௧0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

அங்கணலையேய்ந்தெவ்வு மென்றெரிமுனைநாத்தநல்செங்கண் கொங்கு.

ஆ திருமொழி - எ - க்கு - பாசுரம் - ௭0.

## அ - வது. கொங்கலர்ந்த.

நாமஞ்சொன்னருடைய துரிதங்களைப் போக்குகைக்காகத் திருமலையிலேவந்துஸந்நிஹிதனானவனையங்கேபோயநுபவிப்போமென்று திருவுள்ளத்தோடு கூட்டுகிறதாக அருளிச்செய்கிறார்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

எமுனாகலியாணிராகம் - திரிபுடைதாளம்.

※ கொங்கலர்ந்தமலர்க்குருந்தமொசித்தகோவலனெம்பிரான்
சங்குதங்குதடங்கடற்றுயில்கொண்டதாமரைக்கண்ணினன்
பொங்குபுள்ளினைவாய்பிளந்தபுராணர்தம்மிடம், பொங்குநீர்
செங்கயற்றிளைக்குஞ்சுனைத்திருவேங்கடமடைநெஞ்சமே. (க)

பள்ளியாவதுபாற்கடலரங்கமிரங்கவன்பேய்முலை
பிள்ளையாயுயிருண்டவெந்தைபிரானவன்பெருகுமிடம்
வெள்ளியான்கரியான்மணிநிறவண்ணனென்றெண்ணி, நாடொறும்
தெள்ளியார்வணங்கும்மலைத்திருவேங்கடமடைநெஞ்சமே. (உ)

நின்றமாமருதிற்றுவீழநடந்தநின்மலனேமியான்
என்றும்வானவர்கைதொழுமிணைத்தாமரையடியெம்பிரான்
கன்றிமாரிபொழிந்திடக்கடிதாநிரைக்கிடர்நீக்குவான்
சென்றுகுன்றமெடுத்தவன்றிருவேங்கடமடைநெஞ்சமே. (ங)

பார்த்தர்க்காயன்றுபாரதங்கைசெய்திட்டுவென்றபரஞ்சுடர்
கோத்தங்காயர்தம்பாடியிற்குரவைபிணைந்தவெங்கோவலன்
ஏத்துவார்தம்மனத்துள்ளானிடவெந்தைமேவியவெம்பிரான்
தீர்த்தநீர்த்தடஞ்சோலைசூழ்திருவேங்கடமடைநெஞ்சமே. (ச)

வண்கையானவுணர்க்குநாயகன்வேள்வியிற்சென்றுமாணியாய்
மண்கையாலிரந்தான்மராமரமேழுமெய்தவலத்தினான்
எண்கையானிமயத்துள்ளானிருஞ்சோலைமேவியவெம்பிரான்
திண்கைமாதுயர்தீர்த்தவன்றிருவேங்கடமடைநெஞ்சமே. (ரு)

எண்டிசைகளுமேழுலகமும்வாங்கிப்பொன்வயிற்றிற்பெய்து
பண்டொராலிலைப்பள்ளிகொண்டவன்பான்மதிக்கிடர்தீர்த்தவன்
ஒண்டிறலவுணனுரத்துகிர்வைத்தவனொள்ளெயிற்றொடு
திண்டிறலரியாயவன்றிருவேங்கடமடைநெஞ்சமே. (சு)

பாருநீரெரிகாற்றினோடாகாசமுமிவையாயினான்
பேருமாயிரம்பேசநின்றபிறப்பிலிபெருகுமிடம்
காரும்வார்பனிநீள்விசும்பிடைச்சோருமாமுகிற்றோய்தரச்
சேருவார்பொழிற்சூழெழிற்றிருவேங்கடமடைநெஞ்சமே. (எ)

அம்பரமனற்கானிலஞ்சலமாகினின்றவமரர்கோன்
வம்புலாமலர்மேன்மலிமடமங்கைதன்கொழுநனவன்
கொம்பினன்னவிடைமடக்குறமாதர்நீளிதணந்தொறும்
செம்புனமவைகாவல்கொள்திருவேங்கடமடைநெஞ்சமே. (அ)

பேசுமின்றிருநாமமெட்டெழுத்துஞ்சொல்லிநின்றுபின்னரும்
பேசுவார்தம்மையுய்யவாங்கிப்பிறப்பறுக்கும்பிரானிடம்
வாசமாமலர்நாறுவார்பொழிற்சூழ்தருமுலகுக்கெல்லாம்
தேசமாய்த்திகழும்மலைத்திருவேங்கடமடைநெஞ்சமே. (கூ)

* செங்கயற்றிளைக்குஞ்சுனைத்திருவேங்கடத்துறைசெல்வனை
மங்கையர்தலைவன்கலிகன்றிவண்டமிழ்ச்செஞ்சொன்மாலைகள்
சங்கையின்றித்தரித்துரைக்கவல்லார்கள்தஞ்சமதாகவே
வங்கமாகடல்வையங்காவலராகிவானுலகாள்வரே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

கொங்கு பள்ளி நின்ற பார்த்தர் வண்கை எண்டிசை பா ரம்பரம் பேசு செங்கயல் தாய்.

ஆதிமொழி - அ - க்கு - பாசுரம் - அ0.



## கூ - வது. தாயேதந்தை.

திருமலையை ஆஶ்ரயியென்றுசொல்லித் தன்னுடைய நைச்யத்தை அநுசந்தித்துத் தமதுபூர்வ்ருத்தாந்தத்தையெல்லாம் விண்ணப்பஞ்செய்து தாஸ்யதைகொண்டருளவேண்டுமென்றுஶரணம்புகுவதாக அருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம்.

முகாரிராகம் - அடதாளம்.

* தாயேதந்தையென்றுந்தாரமேகிளைமக்களென்றும்
நோயேபட்டொழிந்தேனுன்னைக்காண்பதோராசையினால்
வேயேய்பூம்பொழிற்சூழ்விரையார்திருவேங்கடவா
நாயேன்வந்தடைந்தேனல்கியாளென்னைக்கொண்டருளே. (க)

மானேய்கண்மடவார்மயக்கிற்பட்டு, மாநிலத்து
நானேநானாவிதநரகம்புகும்பாவஞ்செய்தேன்
தேனேய்பூம்பொழிற்சூழ்திருவேங்கடமாமலை, யென்
ஆனாய்வந்தடைந்தேனடியேனையாட்கொண்டருளே. (உ)

கொன்றேன்பல்லுயிரைக்குறிக்கோளொன்றிலாமையினால்
என்றேனுமிரந்தார்க்கினிதாகவுரைத்தறியேன்
குன்றேய்மேகமதிர்குளிர்மாமலைவேங்கடவா
அன்றேவந்தடைந்தேனடியேனையாட்கொண்டருளே. (௩)

குலந்தானெத்தனையும்பிறந்தேயிறந்தெய்த்தொழிந்தேன்
நலந்தானொன்றுமிலேனல்லதோரறஞ்செய்துமிலேன்
நிலந்தோய்நீண்முகிற்சேர்நெறியார்திருவேங்கடவா
அலந்தேன்வந்தடைந்தேனடியேனையாட்கொண்டருளே. (௪)

எப்பாவம்பலவுமிவையேசெய்திளைத்தொழிந்தேன்
துப்பாநின்னடியேதொடர்ந்தேத்தவுங்கிற்கின்றிலேன்
செப்பார்திண்வரைசூழ்திருவேங்கடமாமலை, யென்
அப்பாவந்தடைந்தேனடியேனையாட்கொண்டருளே. (௫)

மண்ணாய்நீரெரிகால்மஞ்சுலாவுமாகாசமுமாம்
புண்ணாராக்கைதன்னுட்புலம்பித்தளர்ந்தெய்த்தொழிந்தேன்
விண்ணார்நீள்சிகரவிரையார்திருவேங்கடவா
அண்ணாவந்தடைந்தேனடியேனையாட்கொண்டருளே. (௬)

தெரியேன்பாலகனாய்ப்பலதீமைகள்செய்துமிட்டேன்
பெரியேனாயினபின்பிறர்க்கேயுழைத்தேழையானேன்
கரிசேர்பூம்பொழிற்சூழ்கனமாமலைவேங்கடவா
அரியேவந்தடைந்தேனடியேனையாட்கொண்டருளே. (௭)

நோற்றேன்பல்பிறவியுன்னைக்காண்பதோராசையினால்
ஏற்றேனிப்பிறப்பேயிடருற்றனனெம்பெருமான்
கோற்றேன்பாய்ந்தொழுகுங்குளிர்சோலைசூழ்வேங்கடவா
ஆற்றேன்வந்தடைந்தேனடியேனையாட்கொண்டருளே. (௮)

பற்றேலொன்றுமிலேன்பாவமேசெய்துபாவியானேன்
மற்றேலொன்றறியேன்மாயனேயெங்கண்மாதவனே
கற்றேன்பாய்ந்தொழுகுங்கமலச்சுனைவேங்கடவா
அற்றேன்வந்தடைந்தேனடியேனையாட்கொண்டருளே. (௯)

* கண்ணாயேழுலகுக்குயிராயவெங்கார்வண்ணனை
விண்ணோர்தாம்பரவும்பொழில்வேங்கடவேதியனைத்
திண்ணார்மாடங்கள்சூழ்திருமங்கையர்கோன்கலியன்
பண்ணார்பாடல்பத்தும்பயில்வார்க்கில்லைபாவங்களே. (௧0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

தாய் மான் கொன்றேன்குலமெப்பாவம்மண்தெரிநோற்றேன்பற்றுகண்ணாய்க

௯ திருமொழி - ௧ - க்கு - பாசுரம் - ௯0. [ஸ்வ

## க0 - வது. கண்ணார்கடல்.

விரோதத்தை நீக்கி யென்னிடத்தில் க்ருபை பண்ணவேண்டுமென்று இவரபேக்ஷித்தபடியே இவர் திருவுள்ளத்தில் வந்து ப்ரபத்யாதிகளைப் பிறப்பித்தானென்று அருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம்.

நாதநாமக்கிரியைராகம் - திரிபுடைதாளம்.

* கண்ணார்கடல்சூழிலங்கைக்கிறைவன்றன்
திண்ணாகம்பிளக்கச்சரஞ்செலவுற்றாய்
விண்ணோர்தொழும்வேங்கடமாமலைமேய
அண்ணாவடியேனிடரைக்களையாயே. (க)

இலங்கைப்பதிக்கன்றிறையாய, வரக்கர்
குலங்கெட்டவர்மாளக்கொடிப்புட்டிரித்தாய்
விலங்கற்குடுமித்திருவேங்கடமேய
அலங்கற்றுளபமுடியாயருளாயே. (உ)

நீரார்கடலுநிலனுமுழுதுண்டு
ஏராலமிளந்தளிர்மேற்றுயிலெந்தாய்
சீரார்திருவேங்கடமாமலைமேய
ஆராவமுதேயடியேற்கருளாயே. (ங)

உண்டாயுறிமேனறுநெய்யமுதாகக்
கொண்டாய்குறளாய்நிலமீரடியாலே
விண்டோய்சிகரத்திருவேங்கடமேய
அண்டாவடியேனுக்கருள்புரியாயே. (ச)

தூணாயதனூடரியாய்வந்துதோன்றிப்
பேணாவவுணனுடலம்பிளந்திட்டாய்
சேணார்திருவேங்கடமாமலைமேய
கோணாகணையாய்குறிக்கொள்ளெனைநீயே. (ரு)

மன்னவிம்மனிசப்பிறவியைநீக்கித்
தன்னாக்கித்தன்னின்னருட்செய்யுந்தலைவன்
மின்னார்முகில்சேர்திருவேங்கடமேய
என்னானையென்னப்பனென்னெஞ்சிலுளானே. (சு)

மானேய்மடநோக்கிதிறத்தெதிர்வந்த
ஆனேழ்விடைசெற்றவணிவரைத்தோளா
தேனேதிருவேங்கடமாமலைமேய
கோனேயென்மனங்குடிகொண்டிருந்தாயே. (எ)

சேயனணியனெனசிந்தையுண்ணின்ற
மாயன், மணிவாளொளிவெண்டரளங்கள்
வேய்விண்டுதிர்வேங்கடமாமலைமேய
ஆயனடியல்லதுமற்றறியேனே. (௮)

வந்தாயென்மனம்புகுந்தாய்மன்னிநின்றாய்
நந்தாதகொழுஞ்சுடரேயெங்களம்பீ
சிந்தாமணியேதிருவேங்கடமேய
எந்தாய், இனியானுன்னையென்றும்விடேனே. (௯)

* வில்லார்மலிவேங்கடமாமலைமேய
மல்லார்திரடோள்மணிவண்ணனெம்மானைக்
கல்லார்திரடோட்கலியன்சொன்னமாலை
வல்லாரவர்வானவராகுவர்தாமே. (௧௦)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

கண்ணிலங்கைநீருண்டாய்தூணாய்மன்றுமானேசேயன்வந்தாய்வில் வானவர்.

ஆக திருமொழி - ௧௦ - க்கு - பாசுரம் - ௧௦௦.

---

முதற்பத்து முற்றியது.

---

## இரண்டாம்பத்து.

### ௧ - வது. வானவர்.

நமக்கிப்படி பகவத் ப்ராவண்ய முண்டாகைக்கடி யென்னெஞ்சிறே யென்று தம்முடையதிருவுள்ளத்தை ஶ்லாகித் தினியராகிறார்.

ஆசிரியத்துறை.

ஆநந்தபைரவிராகம் - ரூபகதாளம்.

*வானவர்தங்கள்சிந்தைபோலவென்னெஞ்சமேயினிதுவந்து,மாதவ
மானவர்தங்கள்சிந்தையமர்ந்துறைகின்றவெந்தை
கானவரிடுகாரகிற்புகையோங்குவேங்கடமேவி, மாண்குறள்
ஆனவந்தணற்கின்றடிமைத்தொழில்பூண்டாயே. (௧)

உறவுசுற்றமென்றொன்றில்லாவொருவனுகந்தவர்தம்மைமண்மிசைப்
பிறவியேகெடுப்பானதுகண்டென்னெஞ்சமென்பாய்க்
குறவர்மாதர்களோடுவண்டுகுறிஞ்சிமருளிசைபாடும், வேங்கடத்
தறவனாயகற்கின்றடிமைத்தொழில்பூண்டாயே. (௨)

இண்டையாயினகொண்டுதொண்டர்களேத்துவா, ருறவோடும்வானிடைக்
கொண்டுபோயிடவுமதுகண்டென்னெஞ்சமென்பாய்
வண்டுவாழ்வடவேங்கடமலைகோயிற்கொண்டதனோடு, மீமிசை
அண்டமாண்டிருப்பாற்கடிமைத்தொழில்பூண்டாயே. (௩)

பாவியாதுசெய்தாயென்னெஞ்சமேபண்டுதொண்டுசெய்தாரை,மண்மிசை
மேவியாட்கொண்டுபோய்விசும்பேறவைக்குமெந்தை
கோவிநாயகன்கொண்டலுந்துயர்வேங்கடமலையாண்டு, வானவர்
ஆவியாயிருப்பாற்கடிமைத்தொழில்பூண்டாயே. (௪)

பொங்குபோதியும்பிண்டியுமுடைப்புத்தர்நோன்பியர்பள்ளியுள்ளுறை
தங்கள்தேவருந்தாங்களுமேயாகவென்னெஞ்சமென்பாய்
எங்கும்வானவர்தானவர்நிறைந்தேத்தும்வேங்கடமேவிநின்றருள்
அங்கணாயகற்கின்றடிமைத்தொழில்பூண்டாயே. (௫)

துவரியாடையர்மட்டையர்சமண்டொண்டர்கண்மண்டியுண்டுபின்னரும்
தமருந்தாங்களுமேதடிக்கவென்னெஞ்சமென்பாய்
கவரிமாக்கணஞ்சேரும்வேங்கடங்கோயிற்கொண்டகண்ணார்விசும்பிடை
அமரர்நாயகற்கின்றடிமைத்தொழில்பூண்டாயே. (௬)

தருக்கினாற்சமண்செய்துசோறுதண்டயிரினாற்றிரளை, மிடற்றிடை
நெருக்குவாரலக்கணதுகண்டென்னெஞ்சமென்பாய்
மருட்கள்வண்டுகள்பாடும்வேங்கடங்கோயிற்கொண்டதனோடும்,வானிடை
அருக்கன்மேவிநிற்பாற்கடிமைத்தொழில்பூண்டாயே. (௭)

சேயனணியன்சிறியன்பெரியனென்பதுஞ்சிலர்பேசக்கேட்டிருந்
தே, யென்னெஞ்சமென்பாயெனக்கொன்றுசொல்லாதே
வேய்கணின்றுவெண்முத்தமேசொரிவேங்கடமலைகோயின்மேவிய
ஆயர்நாயகற்கின்றடிமைத்தொழில்பூண்டாயே. (௮)

கூடியாடியுரைத்ததேயுரைத்தாயென்னெஞ்சமென்பாய்துணிந்துகேள்
பாடியாடிப்பலரும்பணிந்தேத்திக்காண்கிலார்
ஆடுதாமரையோனுமீசனுமமரர்கோனுநின்றேத்தும், வேங்கடத்
தாடுகூத்தனுக்கின்றடிமைத்தொழில்பூண்டாயே. (௯)

* மின்னுமாமுகின்மேவுதண்டிருவேங்கடமலைகோயின்மேவிய
அன்னமாய்நிகழ்ந்தவமரர்பெருமானைக்
கன்னிமாமதிண்மங்கையர்கலிகன்றியின்றமிழாலுரைத்த, விம்
மன்னுபாடல்வல்லார்க்கிடமாகும்வானுலகே. (௧௦)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

வானுயிறண்டைபாவிபொங்குதுவரிதருக்குச் சேயன்கூடியின் றுங்காசை.

ஆ. திருமொழி - கக - சு - பாசுரம் - கசo.

## உ - வது. காசையாடை.

ஸர்வேஶ்வரன் ஆஶ்ரிதர்பக்கல் தனக்குண்டான இனிமையாலே அவர்களுக்கேத்தலாம்படி திருவெவ்வுளூரிலே சாய்ந்தருளினபடியை யநுசந்தித்து இனியராகிறுர்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கமாசுராகம் - ரூபகதாளம்

❋ காசையாடைமூடியோடிக்காதல்செய்தா, னவனூர்
நாசமாகநம்பவல்லநம்பிநம்பெருமான்
வேயினன்னதோண்மடவார்வெண்ணெயுண்டானிவனென்
றேசநின்றவெம்பெருமானெவ்வுட்கிடந்தானே. (க)

தையலாண்மேற்காதல்செய்ததானவன்வாளரக்கன்
பொய்யிலாதபொன்முடிகளொன்பதோடொன்று, மன்று
செய்தவெம்போர்தன்னிலங்கோர்செஞ்சரத்தாலுருள
எய்தவெந்தையெம்பெருமானெவ்வுட்கிடந்தானே. (உ)

முன்னோர்தூதுவானரத்தின்வாயின்மொழிந், தரக்கன்
மன்னூர்தன்னைவாளியினுன்மாளமுனிந், தவனே
பின்னோர்தூதாதிமன்னர்க்காகிப்பெருநிலத்தார்
இன்னார்தூதனெனநின்றனெவ்வுட்கிடந்தானே. (ங)

பந்தணைந்தமெல்விரலாள்பாவைதன்காரணத்தால்
வெந்திறலேறேழும்வென்றவேந்தன், விரிபுகழ்சேர்
நந்தன்மைந்தனுகவாகுநம்பிநம்பெருமான்
எந்தைதந்தைதம்பெருமானெவ்வுட்கிடந்தானே. (ச)

பாலனாகிஞாலமேழுமுண்டுபண்டாலிலைமேல்
சாலநாளும்பள்ளிகொள்ளுந்தாமரைக்கண்ணனெண்ணில்
நீலமார்வண்டுண்டுவாழுநெய்தலந்தண்கழனி
ஏலநாறும்பைம்புறவிலெவ்வுட்கிடந்தானே. (ரு)

சோத்தநம்பீயென்றுதொண்டர்மிண்டித்தொடர்ந்தழைக்கும்
ஆத்தநம்பிசெங்கணம்பியாகிலுந்தேவர்க்கெல்லாம்
மூத்தநம்பிமுக்கணம்பியென்றுமுனிவர்தொழு
தேத்து, நம்பியெம்பெருமானெவ்வுட்கிடந்தானே. (சு)

திங்களப்புவானெரிகாலாகித், திசைமுகனூர்
தங்களப்பன்சாமியப்பன்பாகத்திருந்து, வண்டுண்
தொங்கலப்புநீண்முடியான்சூழ்கழற்சூடநின்ற
எங்களப்பனெம்பெருமானெவ்வுட்கிடந்தானே. (எ)

முனிவன்மூர்த்திமூவராகிவேதம்விரித்துரைத்த
புனிதன், பூவைவண்ணனண்ணற்புண்ணியன்விண்ணவர்கோன்
தனியன்சேயன்றானொருவனாகிலும், தன்னடியார்க்
கினியனெந்தையெம்பெருமானெவ்வுட்கிடந்தானே. (அ)

பந்திருக்குமெல்விரலாள்பாவைபனிமலராள்
வந்திருக்குமார்பன்னீலமேனிமணிவண்ணன்
அந்தரத்தில்வாழும்வானோர்நாயகனாயமைந்த
இந்திரற்குந்தம்பெருமானெவ்வுட்கிடந்தானே. (கூ)

* இண்டைகொண்டுதொண்டரேத்தவெவ்வுட்கிடந்தானை
வண்டுபாடும்பைம்புறவின்மங்கையர்கோன்கலியன்
கொண்டசீராற்றண்டமிழ்செய்மாலையீரைந்தும்வல்லார்
அண்டமாள்வதாணையன்றேலாள்வரமருலகே. (க0)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

காசைசையல்முன்பந்தணைபாலன்சோத்ததிக்கல்முனிபர்நின்னைடவில்

ஆ திருமொழி - கஉ - க்கு - பாசுரம் - கஉ0.

---

## ங - வது. விற்பெருவிழவும்

ஆர்த்தரக்ஷகனானவன் திருவல்லிக்கேணியிலேசாய்ந்தான்
நான்கண்டேனென்கிறார்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

### தோடிராகம் - ஆதிதாளம்.

* விற்பெருவிழவுங்கஞ்சனுமல்லும்வேழமும்பாகனும்வீழச்
செற்றவன்றன்னைப், புரமெரிசெய்தசிவனுறுதுயர்களைதேவைப்
பற்றலர்வீயக்கோல்கையிற்கொண்டுபார்த்தன்றன்றேர்முன்னின்றானைச்
சிற்றவைபணியான்முடிதுறந்தானைத்திருவல்லிக்கேணிக்கண்டேனே.

வேதத்தைவேதத்தின்சுவைப்பயனைவிழுமியமுனிவர்விழுங்குங்
கோதிலின்கனியைநந்தனார்களிற்றைக்குவலயத்தோர்தொழுதேத்தும்
ஆதியையமுதையென்னையாளுடையப்பனையொப்பவரில்லா
மாதர்கள்வாழு, மாடமாமயிலைத்திருவல்லிக்கேணிக்கண்டேனே. (உ)

வஞ்சனைசெய்யத்தாயுருவாகிவந்தபேயலறிமண்சேர
நஞ்சமர்முலையூடுயிர்செகவுண்டநாதனைத்தானவர்கூற்றை
விஞ்சைவானவர்சாரணர்சித்தர்வியந்துதுதிசெயப்பெண்ணுருவாகி
அஞ்சுவையமுதமன்றளித்தானைத்திருவல்லிக்கேணிக்கண்டேனே. ங

இந்திரனுக்கென்றாயர்களெடுத்தவெழில்விழவிற்பழநடைசெய்
மந்திரவிதியிற்பூசனைபெறாதுமழைபொழிந்திடத்தளர்ந், தாயர்
எந்தம்மோடினவாநிரைதளராமலெம்பெருமானருளென்ன
அந்தமில்வரையான்மழைதடுத்தானைத்திருவல்லிக்கேணிக்கண்டேனே.

இன்றுணைப்பதுமத்தலர்மகடனக்குமின்பனற்புவிதனக்கிறைவன்
தன்றுணையாயர்பாவைநப்பின்னைதனக்கிறைமற்றையோர்க்கெல்லாம்
வன்றுணைப், பஞ்சபாண்டவர்க்காகிவாயுரைதூதுசென்றியங்கும்
என்றுணை, யெந்தைதந்தைதம்மானைத்திருவல்லிக்கேணிக்கண்டேனே.

அந்தகன்சிறுவனரசர்தம்மரசற்கிளையவனணியிழையைச்சென்
றெந்தமக்குரிமைசெய்யெனத்தரியாதெம்பெருமானருளென்னச்
சந்தமர்குழலாளலக்கணூற்றுவர்தம்பெண்டிருமெய்திநூலிழப்ப
இந்திரன்சிறுவன்றேர்முனின்றானைத்திருவல்லிக்கேணிக்கண்டேனே.

* பரதனுந்தம்பிசத்துருக்கனுமிலக்குமனோடுமைதிலியும்
இரவுநன்பகலுந்துதிசெய்யநின்றவிராவணாந்தகனையெம்மானைக்
குரவமேகமழுங்குளிர்பொழிலூடுகுயிலொடுமயில்கணின்றால
இரவியின்கதிர்கணுழைதல்செய்தறியாத்திருவல்லிக்கேணிக்கண்டேனே.

பள்ளியிலோதிவந்ததன்சிறுவன்வாயிலோராயிரநாமம்
ஒள்ளியவாகிப்போதவாங்கதனுக்கொன்றுமோர்பொறுப்பிலனாகிப்
பிள்ளையைச்சீறிவெகுண்டுதூண்புடைப்பப்பிறையெயிற்றனல்விழிப்பேழ்வாய்
தெள்ளியசிங்கமாகியதேவைத்திருவல்லிக்கேணிக்கண்டேனே. [த்

* மீனமர்பொய்கைநாண்மலர்கொய்வான்வேட்கையினோடுசென்றிழிந்த
கானமர்வேழங்கையெடுத்தலறக்கராவதன்காலினைக்கதுவ
ஆனையின்றுயரந்தீரப்புள்ளூர்ந்துசென்றுநின்றாழிதொட்டானைத்
தேனமர்சோலைமாடமாமயிலைத்திருவல்லிக்கேணிக்கண்டேனே. (௯)

* மன்னுதண்பொழிலும்வாவியுமதிளுமாடமாளிகையுமண்டபமும்
தென்னன்றொண்டையர்கோன்செய்தநன்மயிலைத் திருவல்லிக்கேணிநின்றானை
கன்னிநன்மாடமங்கையர்தலைவன்காமருசீர்க்கலிகன்றி [க்
சொன்னசொன்மாலைபத்துடன்வல்லார்சுகமினிதாள்வர்வானுலகே.

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்..

வில் வேத வஞ்சனை இந்திர னின்றுணை அந்தகன் பரதன் பள்ளி மீனமர் மன்னு அன்றாயர்.

ஆ திருமொழி - ௧௩ - க்கு - பாசுரம் - ௧௩௦.

---

## ௪ - வது. அன்றாயர்.

ஸர்வேஶ்வரனுகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் பண்ணுகிறவாதரத்தை திருநீர்மலையிலேபண்ணிக்கொண்டுவந்து ஸந்நிஹிதனானான்; அவனை யாஶ்ரயித்து க்ருதார்த்தராகுங்கோளென்று பரோபதேஶ ப்ரவ்ருத்தராகிறார்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அபரூபராகம்-ஆதிதாளம்.

* அன்றாயர்குலக்கொடியோடணிமாமலர்மங்கையொடன்பளவி, யவுணர்க்
கென்றானுமிரக்கமிலாதவனுக்குறையுமிடமாவ, திரும்பொழில்சூழ்
நன்றாயபுனனறையூர்திருவாலிகுடந்தைதடந்திகழ்கோவனகர்
நின்றானிருந்தான்கிடந்தானடந்தாற்கிடமாமலையாவதுநீர்மலையே. ௧

காண்டாவனமென்பதோர்காடமரர்க்கரையனதுகண்டவனிற்க, முனே
மூண்டாரழலுண்ணமுனிந்ததுவுமதுவன்றியுமுன்னுலகம்பொறைதீர்த்
தாண்டா, னவுணனவன்மார்பகலமுகிரால்வகிராகமுனிந், தரியாய்
நீண்டான்குறளாகிநிமிர்ந்தவனுக்கிடமாமலையாவதுநீர்மலையே. (௨)

அலமன்னுமடற்சுரிசங்கமெடுத்தடலாழியினாலணியாருருவிற்
புலமன்னுவடம்புனைகொங்கையினாள்பொறைதீரமுனாளடுவாளமரில்
பலமன்னர்படச்சுடராழியினைப்பகலோன்மறையப்பணிகொண், டணிசேர்
நிலமன்னனுமாயுலகாண்டவனுக்கிடமாமலையாவதுநீர்மலையே. (௩)

தாங்காததோராளரியாயவுணன்றனைவீடமுனிந்தவனாலமரும்
பூங்கோதையர்பொங்கெரிமூழ்கவிளைத்ததுவன்றியும்வென்றிகொள்வாளமரில்
பாங்காகமுனைவரொடன்பளவிப்பதிற்றைந்திரட்டிப்படைவேந்தர்பட
நீங்காச்செருவினிறைகாத்தவனுக்கிடமாமலையாவதுநீர்மலையே. (௪)

மாலுங்கடலாரமலைக்குவடிட்டணைகட்டிவரம்புருவ, மதிசேர்
கோலமதிளாயவிலங்கைகெடப்படைதொட்டொருகாலமரிலதிரக்
காலமிதுவென்றயன்வாளியினாற்கதிர்நீண்முடிபத்துமறுத்தமரும்
நீலமுகில்வண்ணனெமக்கிறைவற்கிடமாமலையாவதுநீர்மலையே. (௫)

பாராருலகும்பனிமால்வரையுங்கடலுஞ்சுடருமிவையுண்டு, மெனக்
காராதெனநின்றவனெம்பெருமானலைநீருலகுக்கரசாகிய, வப்
பேரானைமுனிந்தமுனிக்கரையன்பிறரில்லைநுனக்கெனுமெல்லையினான்
நீரார்பேரானெடுமாலவனுக்கிடமாமலையாவதுநீர்மலையே. (௬)

புகராருருவாகிமுனிந்தவனைப்புகழ்வீடமுனிந்துயிருண், டசுரன்
நகராயினபாழ்படநாமமெறிந்ததுவன்றியும்வென்றிகொள்வாளவுணன்
பகராதவனாயிரநாமமடிப்பணியாதவனைப்பணியா, லமரில்
நிகராயவனெஞ்சிடந்தானவனுக்கிடமாமலையாவதுநீர்மலையே. (௭)

பிச்சச்சிறுபீலிபிடித்துலகிற்பிணங்தின்மடவாரவர்போ, லங்ஙனே
அச்சமிலர்நாணிலராதன்மையாலவர்செய்கைவெறுத்தணிமாமலர்தூய்
நச்சிநமனுரடையாமைநமக்கருள்செய்யெனவுட்குழைந், தார்வமொடு
நிச்சநினைவார்க்கருள்செய்யுமவற்கிடமாமலையாவதுநீர்மலையே. (அ)

பேசுமளவன்றிதுவம்மினமர்பிறர்கேட்பதன்முன், பணிவார்வினைகள்
நாசமதுசெய்திடுமாதன்மையாலதுவேநமதுய்விடநாண்மலர்மேல்
வாசமணிவண்டறைபைம்புறவின்மனமைந்தொடுநைந்துழல்வார், மதியில்
நீசரவர்சென்றடையாதவனுக்கிடமாமலையாவதுநீர்மலையே. (கூ)

* நெடுமாலவன்மேவியநீர்மலைமேனிலவும்புகழ்மங்கையர்கோ, னமரில்
கடமாகளியானைவல்லான்கலியனொலிசெய்தமிழ்மாலைவல்லார்க், குடனே
விடுமால்வினைவேண்டிடின்மேலுலகுமெளிதாயிடுமன்றியிலங்கொலிசேர்
கொடுமாகடல்வையகமாண்டுமதிக்குடைமன்னவராயடிகூடுவரே. ()

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

அன்றுயர் காண்ட அலங் தாங்காத மால் பாரார் புகரார் பிச்ச பேசு நெ டுமால் பாராய.

ஆ திருமொழி-கசு-க்கு-பாசுரம்-கசO.

---

## ரு - வது. பாராயதுண்டு.

திருக்கடன்மல்லைப்பெருமாள்விஷயம்.

பரோபதேஶம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கலியாணிராகம்-ஆதிதாளம்.

* பாராயதுண்டுமிழ்ந்தபவளத்தூணைப்
படுகடலிலமுதத்தைப்பரிவாய்கீண்ட
சீரானை, யெம்மானைத்தொண்டர்தங்கள்
சிந்தையுள்ளேமுளைத்தெழுந்ததீங்கரும்பினைப்
போரானைக்கொம்பொசித்தபோரேற்றினைப்
புணர்மருதமிறநடந்தபொற்குன்றினைக்
காரானையிடர்கடிந்தகற்பகத்தைக்
கண்டதுநான்கடன்மல்லைத்தலசயனத்தே. (க)

பூண்டவத்தம்பிறர்க்கடைந்துதொண்டுபட்டுப்
பொய்ந்நூலைமெய்ந்நூலென்றென்றுமோதி
மாண், டவத்தம்போகாதேவம்மினெந்தை
யென்வணங்கப்படுவானைக், கணங்களேத்தும்

நீண்டவத்தக்கருமுகிலையெம்மான்றன்னை
நின்றவூர்நித்திலத்தைத்தொத்தார்சோலைக்
காண்டவத்தைக்கனலெரிவாய்ப்பெய்வித்தானைக்
கண்டதுநான்கடன்மல்லைத்தலசயனத்தே. (௨)

உடம்புருவின்மூன்றொன்றாய்மூர்த்திவேறா
யுலகுய்யநின்றானை, யன்றுபேய்ச்சி
விடம்பருகுவித்தகனைக்கன்றுமேய்த்து
விளையாடவல்லானைவரைமீகானில்
தடம்பருகுகருமுகிலைத்தஞ்சைக்கோயிற்
றவநெறிக்கோர்பெருநெறியைவையங்காக்கும்
கடும்பரிமேற்கற்கியைநான்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே. (௩)

பேய்த்தாயைமுலையுண்டபிள்ளைதன்னைப்
பிணைமருப்பிற்கருங்களிற்றைப்பிணைமானோக்கில்
ஆய்த்தாயர்தயிர்வெண்ணெயமர்ந்தகோவை
யந்தணர்தமமுதத்தைக்குரவைமுன்னே
கோத்தானைக், குடமாடுகூத்தன்றன்னைக்
கோகுலங்களாமற்குன்றமேந்திக்
காத்தானை, யெம்மானைக்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே. (௪)

பாய்ந்தானைத்திரிசகடம்பாறிவீழப்
பாலகனாயாலிலையிற்பள்ளியின்ப
மேய்ந்தானை, யிலங்கொளிசேர்மணிக்குன்றன்ன
வீரிரண்டுமால்வரைத்தோளெம்மான்றன்னைத்
தோய்ந்தானைநிலமகடோட்டூதிற்சென்றப்
பொய்யறைவாய்புகப்பெய்தமல்லர்மங்கக்
காய்ந்தானை, யெம்மானைக்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே. (௫)

கிடந்தானைத்தடங்கடலுட்பணங்கண்மேவிக்
கிளர்பொறியமறிதிரியவதனின்பின்னே
படர்ந்தானைப், படுமதத்தகளிற்றின்கொம்பு
பறித்தானைப்பாரிடத்தையெயிறுகீற
விடந்தானை, வளைமருப்பினேனமாகி
யிருநிலனும்பெருவிசும்புமெய்தாவண்ணம்
கடந்தானை, யெம்மானைக்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே. (௬)

ச

பேணுதவலியரக்கர்மெலியவன்று
பெருவரைத்தோளிறநெரித்தன்றவுணர்கோனைப்
பூணுகம்பிளவெடுத்தபோர்வல்லோனைப்
பொருகடலுட்டுயிலமர்ந்தபுள்ளூர்தியை
ஊணுகப்பேய்முலைநஞ்சுண்டான்றன்னை
யுள்ளுவாருள்ளத்தேயுறைகின்றானைக்
காணுதுதிரிதருவேன்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே. (எ)

பெண்ணாகியின்னமுதம்வஞ்சித்தானைப்
பிறையெயிற்றன்றடலரியாய்ப்பெருகினானைத்
தண்ணார்ந்தவார்புனல்சூழ்மெய்யமென்னும்
தடவரைமேற்கிடந்தானைப்பணங்கண்மேவி
எண்ணானையெண்ணிறந்தபுகழினானை
யிலங்கொளிசேரரவிந்தம்போன்றுநீண்ட
கண்ணானைக், கண்ணாரக்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே. (அ)

தொண்டாயார்தாம்பரவுமடியினானைப்
படிகடந்ததாளாளற்காளாயுய்தல்
விண்டானைத், தென்னிலங்கையரக்கர்வேந்தை
விலங்குண்ணவலங்கைவாய்ச்சரங்களாண்டு
பண்டாயவேதங்களான்குமைந்து
வேள்விகளுங்கேள்வியோடங்கமாறும்
கண்டானைத், தொண்டனேன்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே. (கூ)

* பட்டநாகத்தணைக்கிடந்தன்றவுணர்கோனைப்
படவெகுண்டுமருதிடைபோய்ப்பழனவேலித்
தடமார்ந்தகடன்மல்லைத்தலசயனத்துத்
தாமரைக்கண்டுயிலமர்ந்ததலைவர்தம்மைக்
கடமாருங்கருங்களிறுவல்லான்வெல்போர்க்
கலிகன்றியொலிசெய்தவின்பப்பாடல்
திடமாகவிவையைந்துமைந்தும்வல்லார்
தீவினையைமுதலரியவல்லார்தாமே. (கO)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

பார்பூண்டேம்புபேய்பாய்கிடந்தபேணுப்பெண்தொண்டுபடநண்ணுத.

ஆ திருமொழி - கடு - க்கு - பாசுரம் - கநO.

## சு - வது. நண்ணாத.

### திருக்கடன்மல்லைப்பெருமாள்விஷயம்.

அவைஷ்ணவரிடத்தில் தமக்குண்டான வஸஹ்யத்தை யருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம்.

ஸஹானாராகம் - ரூபகதாளம்.

* நண்ணாதவாளவுணரிடைப்புக்கு, வானவரைப்
பெண்ணாகியமுதூட்டும்பெருமானார், மருவினிய
தண்ணார்ந்தகடன்மல்லைத்தலசயனத்துறைவாரை
எண்ணாதேயிருப்பாரையிறைப்பொழுதுமெண்ணோமே, (க)

பார்வண்ணமடமங்கைபனிநன்மாமலர்க்கிழத்தி
நீர்வண்ணன்மார்வத்திலிருக்கையைமுன்னினைந்தவனூர்
கார்வண்ணமுதுமுந்நீர்க்கடன்மல்லைத்தலசயனம்
ஆரொண்ணுநெஞ்சுடையாரவரெம்மையாள்வாரே. (உ)

ஏனத்தினுருவாகிநிலமங்கையெழில்கொண்டான்
வானத்திலவர்முறையான்மகிழ்ந்தேத்திவலங்கொள்ளக்
கானத்தின்கடன்மல்லைத்தலசயனத்துறைகின்ற
ஞானத்தினொளியுருவைநினைவாரென்னாயகரே. (ங)

விண்டாரைவென்றாவிவிலங்குண்ண, மெல்லியலார்
கொண்டாடுமல்லகலமழலேறவெஞ்சமத்துக்
கண்டாரைக், கடன்மல்லைத்தலசயனத்துறைவாரைக்
கொண்டாடுநெஞ்சுடையாரவரெங்கட்குலதெய்வமே. (ச)

பிச்சச்சிறுபீலிச்சமண்குண்டர்முதலாயோர்
விச்சைக்கிறையென்னுமவ்விறையைப்பணியாதே
கச்சிக்கிடந்தவனூர்கடன்மல்லைத்தலசயனம்
நச்சித்தொழுவாரைச்சென்றன்னன்னெஞ்சே. (ரு)

புலன்கொணிதிக்குவையோடுபுழைக்கைம்மாகளிற்றினமும்
நலங்கொணவமணிக்குவையுஞ்சுமந்தெங்குநான்றொசிந்து
கலங்களியங்குமல்லைக்கடன்மல்லைத்தலசயனம்
வலங்கொண்மனத்தாரவரைவலங்கொள்ளென்மடநெஞ்சமே. (சா)

பஞ்சிச்சிறுகூழையுருவாகி, மருவாத
வஞ்சப்பெண்ணஞ்சுண்டவண்ணல், முன்னண்ணாத
கஞ்சைக்கடந்தவனூர்கடன்மல்லைத்தலசயனம்
நெஞ்சிற்றொழுவாரைத்தொழுவாயென்றூய்நெஞ்சே. (எ)

செழுநீர்மலர்க்கமலந்திரையுந்துவன்பகட்டால்
உழுநீர்வயலுழவருழப்பின்முன்பிழைத்தெழுந்த
கழுநீர்கடிகமழுங்கடன்மல்லைத்தலசயனம்
தொழுநீர்மனத்தவரைத்தொழுவாயென்றூய்நெஞ்சே. (அ)

பிணங்களிடுகாடதனுண்ணடமாடுபிஞ்ஞகனோ
டிணங்குதிருச்சக்கரத்தெம்பெருமானார்க்கிடம், விசும்பில்
கணங்களியங்குமல்லைக்கடன்மல்லைத்தலசயனம்
வணங்குமனத்தாரவரை வணங்கென்றன்மடநெஞ்சே. (கூ)

* கடிகமழுநெடுமறுகிற்கடன்மல்லைத்தலசயனத்
தடிகளடியேநினையுமடியவர்கடம்மடியான்
வடிகொணெடுவேல்வலவன்கலிசன்றியொலிவல்லார்
முடிகொணெடுமன்னவர்தம்முதல்வர்முதலாவாரே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

கண்ணுதபாரோன விண்டார்பிச்சபுலன் பஞ்சிசெழுநீர் பிணம்கடிதிவள்.

ஆ திருமொழி - கசு - க்கு - பாசுரம் - கசு0.

---

## ஏ - வது. திவளும்.

திருவிடந்தைநித்யகல்யாணர்விஷயம்.

தாய்ச்சொல்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சாவேரிராகம் - அடதாளம்.

*திவளும்வெண்மதிபோற்றிருமுகத்தரிவைசெழுங்கடலமுதினிற்பிறந்த
அவளும், நின்னாகத்திருப்பதுமறிந்துமாகிலுமாசைவிடாளால்
குவளையங்கண்ணிகொல்லியம்பாவைசொல்லுநின்றுணையந்திருந்த
இவளை,யுன்மனத்தாலென்னினைந்திருந்தாயிடவெந்தையெந்தைபிரானே.

துளம்படுமுறுவற்றோழியர்க்கருளாள்துணைமுலைசாந்துகொண்டணியாள்
குளம்படுகுவளைக்கண்ணிணையெழுதாள்கோலநன்மலர்குழற்கணியாள்
வளம்படுமுந்நீர்வையமுன்னளந்தமாலென்னுமாலினமொழியாள்
இளம்பிடியிவளுக்கென்னினைந்திருந்தாயிடவெந்தையெந்தைபிரானே.

சாந்தமும்பூணுஞ்சந்தனக்குழம்புந்தடமுலைக்கணியிலுந்தழலாம்
போந்தவெண்டிங்கட்கதிர்சுடமெலியும்பொருகடற்புலம்பிலும்புலம்பும்
மாந்தளிர்மேனிவண்ணமும்பொன்னாம்வளைகளுமிறைநில்லா,யென்றன்
ஏந்திழையிவளுக்கென்னினைந்திருந்தாயிடவெந்தையெந்தைபிரானே.

ஊழியிற்பெரிதானாழிகையென்னுமொண்சுடர்துயின்றதாலென்னும்
ஆழியும்புலம்புமன்றிலுமுறங்காதென்றலுந்தீயினிற்கொடிதாம்
தோழியோவென்னுந்துணைமுலையரக்குஞ்சொல்லுமினென்செய்கேனென்னும்
ஏழையேன்பொன்னுக்கென்னினைந்திருந்தாயிடவெந்தையெந்தைபிரானே.

ஓதிலுமுன்பேரன்றிமற்றோதாளுருகுநின்றிருவுருநினைந்து
காதன்மைபெரிதுகையறவுடையள்கயனெடுங்கண்டுயின்மறந்தாள்
பேதையேன்பேதைபிள்ளைமைபெரிதுதெள்ளியள்வள்ளிநுண்மருங்குல்
ஏதலர்முன்னாவென்னினைந்திருந்தாயிடவெந்தையெந்தைபிரானே.

தன்குடிக்கேதுந்தக்கவாநினையாள்தடங்கடனுடங்கெயிலிலங்கை
வன்குடிமடங்கவாளமர்தொலைத்தவார்த்தைகேட்டின்புறுமயங்கும்
மின்கொடிமருங்குற்சுருங்கமேனெருங்கிமென்முலைபொன்பயந்திருந்த
என்கொடியிவளுக்கென்னினைந்திருந்தாயிடவெந்தையெந்தைபிரானே.

உளங்கனிந்திருக்குமுன்னையேபிதற்றுமுனக்கன்றியெனக்கன்பொன்றிலளால்
வளங்கனிபொழில்சூழ்மாலிருஞ்சோலைமாயனேயென்றுவாய்வெருவும்
களங்கனிமுறுவற்காரிகைபெரிதுகவலையோடவலஞ்சேர்ந்திருந்த
இளங்கனியிவளுக்கென்னினைந்திருந்தாயிடவெந்தையெந்தைபிரானே.

அலங்கெழுதடக்கையாயன்வாயாம்பற்கழியுமாலென்னுள்ளமென்னும்
புலங்கெழுபொருநீர்ப்புட்குழிபாடும்போதுமோநீர்மலைக்கென்னும்
குலங்கெழுகொல்லிக்கோமளவல்லிக்கொடியிடைநெடுமழைக்கண்ணி
இலங்கெழிற்றோளிக்கென்னினைந்திருந்தாயிடவெந்தையெந்தைபிரானே.

பொன்குலாம்பயலைபூத்தனமென்றோட்பொருகயற்கண்டுயின்மறந்தாள்
அன்பினாலுன்மேலாதரம்பெரிதிவ்வணங்கினுக்குற்றநோயறியேன்
மின்குலாமருங்குற்சுருங்கமேனெருங்கிவீங்கியவனமுலையாளுக்
கென்கொலாங்குறிப்பிலென்னினைந்திருந்தாயிடவெந்தையெந்தைபிரானே.

* அன்னமும்மீனுமாமையுமரியுமாயவெம்மாயனேயருளாய்
என்னுமின்றொண்டர்க்கின்னருட்புரியுமிடவெந்தையெந்தைபிரானை
மன்னுமாமாடமங்கையர்தலைவன்மானவேற்கலியன்வாயொலிகள்
பன்னியபனுவல்பாடுவார்நாளும்பழவினைபற்றறுப்பாரே. (௧0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

திவள் துளம் சாந்தூழி ஓதிலும்தன் னுள்ளலம்பொன் அன்னம் திரிபுரம்

ஆ_ திருமொழி - ௧௭ - க்கு - பாசுரம் - ௧௭0.

## அ-வது. திரிபுரம்.

அஷ்டபுஜம் சக்ரராயர்விஷயம்.

பாவநாப்ரகர்ஷத்தாலே அஷ்டபுஜஸ்வாமியும் தாமும் உத்தர ப்ரத்யுத்தரங்கள் சொல்லுகிறோமென்று தோழி தாய்முதலானோருக்குச் சொல்லுகிறார்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தர்ப்பாரிராகம் - ரூபகதாளம்.

* திரிபுரமூன்றெரித்தானுமற்றைமலர்மிசைமேலயனும்வியப்ப
முரிதிரைமாகடல்போன்முழங்கிமூவுலகுமுறையால்வணங்க
எரியெனகேசரவாளெயிற்றோடிரணியனுகமிரண்டுகூறு
அரியுருவாமிவரார்கொலென்னவட்டபுயகரத்தேனென்றாரே. (க)

வெந்திறல்வீரரில்வீரரொப்பார்வேதமுனைத்திமையோர்வணங்குஞ்
செந்தமிழ்பாடுவார்தாம்வணங்குந்தேவரிவர்கொல்தெரிக்கமாட்டேன்
வந்துகுறளுருவாய்நிமிர்ந்துமாவலிவேள்வியில்மண்ணளந்த
அந்தணர்போன்றிவரார்கொலென்னவட்டபுயகரத்தேனென்றாரே.

செம்பொனிலங்குவலங்கைவாளிதிண்சிலைதண்டொடுசங்கமொள்வாள்
உம்பரிருசுடராழியோடுகேடகமொண்மலர்பற்றியெற்றே
வெம்புசினத்தடல்வேழம்வீழவெண்மருப்பொன்றுபறித், திருண்ட
அம்புதம்போன்றிவரார்கொலென்னவட்டபுயகரத்தேனென்றாரே. ௩

மஞ்சுயர்மாமணிக்குன்றமேந்திமாமழைகாத்தொருமாயவானை
அஞ்ச, வதன்மருப்பன்றுவாங்குமாயர்கொல்மாயமறியமாட்டேன்
வெஞ்சுடராழியுஞ்சங்குமேந்திவேதமுன்னோதுவர்நீதிவானத்து
அஞ்சுடர்போன்றிவரார்கொலென்னவட்டபுயகரத்தேனென்றாரே.

கலைகளும்வேதமுநீதிநூலுங்கற்பமுஞ்சொற்பொருடானு, மற்றை
நிலைகளும்வானவர்க்கும்பிறர்க்குநீர்மையினாலருட்செய்து, நீண்ட
மலைகளுமாமணியுமலர்மேன்மங்கையுஞ்சங்கமுந்தங்குகின்ற
அலைகடல்போன்றிவரார்கொலென்னவட்டபுயகரத்தேனென்றாரே.

எங்ஙனநாமிவர்வண்ணமெண்ணிலேதுமறிகில, மேந்திழையார்
சங்குமனமுநிறைவுமெல்லாந்தம்மனவாகப்புகுந்து, தாமும்
பொங்குகருங்கடற்பூவைகாயாப்போதவிழ்நீலம்புனைந்தமேகம்
அங்ஙனம்போன்றிவரார்கொலென்னவட்டபுயகரத்தேனென்றாரே.

முழுசிவண்டாடியதண்டுழாயின்மொய்ம்மலர்க்கண்ணியு, மேனியஞ்சாந்
திழிசியகோலமிருந்தவாறெங்ஙனஞ்சொல்லுகே, னோவிநல்லார்
எழுதியதாமரையன்னகண்ணுமேந்தெழிலாகமுந்தோளும்வாயும்
அழகியதாமிவரார்கொலென்னவட்டபுயகரத்தேனென்றாரே. (எ)

மேவியெப்பாலும்விண்ணோர்வணங்கவேதமுனைப்பர்முந்நீர்மடந்தை
தேவி, யப்பாலதிர்சங்கமிப்பாற்சக்கரமற்றிவர்வண்ணமெண்ணில்
காவியொப்பார்கடலேயுமொப்பார்கண்ணும்வடிவுநெடியரா, யென்
ஆவியொப்பாரிவரார்கொலென்னவட்டபுயகரத்தேனென்றாரே. (அ)

தஞ்சமிவர்க்கென்வளையுநில்லாநெஞ்சமுந்தம்மதேசிந்தித்தேற்கு
வஞ்சிமருங்குனெருங்கநோக்கிவாய்திறந்தொன்றுபணித்ததுண்டு
நஞ்சமுடைத்திவர்நோக்குநோக்கானிவர்தம்மையறியமாட்டேன்
அஞ்சுவன்மற்றிவரார்கொலென்னவட்டபுயகரத்தேனென்றாரே. (கூ)

* மன்னவன்றொண்டையர்கோன்வணங்குநீண்முடிமாலைவயிரமேகன்
தன்வலிதன்புகழ்சூழ்ந்தகச்சியட்டபுயகரத்தாதிதன்னைக்
கன்னிநன்மாமதிண்மங்கைவேந்தன்காமருசீர்க்கலிகன்றி, குன்றா
இன்னிசையாற்சொன்னசெஞ்சொன்மாலையேத்தவல்லார்க்கிடம்வைகுந்தமே.

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

திரி வெந்திறல் செம்பொன் மஞ்சு கலை எங்ஙனம் முழுசி மேவித் தஞ்சம் மன்னவன் சொல்லு.

ஆ திருமொழி - கஅ - க்கு - பாசுரம் - கஅ0.

---

## கூ - வது. சொல்லுவன்.

பல்லவனும் சோழனுமென்பார் அநுகூலவ்ருத்திகளைப்பண்ணுகிற
பரமேஶ்வர விண்ணகரத்தை யநுபவித்துப் பேசுகிறார்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

எழுனுகலியாணிராகம் - ஆதிதாளம்.

*சொல்லுவன்சொற்பொருடானவையாய்ச்சுவையூறொலிநாற்றமுந்தோற்றமு
நல்லரனுரணனுன்முகனுக்கிடந்தான்றடஞ்சூழ்ந்தழகாயகச்சி [மாய்
பல்லவன்வில்லவனென்றுலகிற்பலராய்ப்பலவேந்தர்வணங்குகழல்
பல்லவன்,மல்லையர்கோன்பணிந்தபரமேச்சுரவிண்ணகரமதுவே. (க)

கார்மன்னுநீள்விசும்புங்கடலுஞ்சுடருநிலனுமலையும், தன்னுந்தித்
தார்மன்னுதாமரைக்கண்ணனிடந்தடமாமதிள்சூழ்ந்தழகாயகச்சி
தேர்மன்னுதென்னவனைமுனையிற்செருவிற்றிறல்வாட்டியதிண்சிலையோன்
பார்மன்னுபல்லவர்கோன்பணிந்தபரமேச்சுரவிண்ணகரமதுவே. (உ)

உரந்தருமெல்லணைப்பள்ளிகொண்டானொருகான்முன்னமாவுருவாய்க்,கடலு
வரந்தருமாமணிவண்ணனிடமணிமாடங்கள்சூழ்ந்தழகாயகச்சி [ள்
நிரந்தவர்மண்ணையிற்புண்ணுகர்வேனெடுவாயிலுகச்செருவின்முனநாள்
பரந்தவன்பல்லவர்கோன்பணிந்தபரமேச்சுரவிண்ணகரமதுவே(௩)

அண்டமுமெண்டிசையுநிலனுமலைநீரொடுவானெரிகான்முதலா
உண்டவனெந்தைபிரானதிடமொளிமாடங்கள்சூழ்ந்தழகாயகச்சி
விண்டவரிண்டைக்குழாமுடனேவிரைந்தாரிரியச்செருவின்முனிந்து
பண்டொருகால்வளைத்தான்பணிந்தபரமேச்சுரவிண்ணகரமதுவே.

தூம்புடைத்திண்கைவன்றாட்களிற்றின்றுயர்தீர்த்தரவம்வெருவ,முனநாள்
பூம்புனற்பொய்கைபுக்கானவனுக்கிடந்தான்றடஞ்சூழ்ந்தழகாயகச்சி[ற
தேம்பொழிற்குன்றெயிற்றென்னவனைத்திசைப்பச்செருமேல்வியந்தன்றுசென்
பாம்புடைப்பல்லவர்கோன்பணிந்தபரமேச்சுரவிண்ணகரமதுவே.௫

திண்படைக்கோளரியினுருவாய்த்திறலோனகலஞ்செருவின்முனநாள்
புண்படப்போழ்ந்தபிரானதிடம்பொருமாடங்கள்சூழ்ந்தழகாயகச்சி
வெண்குடைநீழற்செங்கோனடப்பவிடைவெற்கொடிவேற்படைமுன்னுயர்த்த
பண்புடைப்பல்லவர்கோன்பணிந்தபரமேச்சுரவிண்ணகரமதுவே.௬

இலகியநீண்முடிமாவலிதன்பெருவேள்வியின்மாணுருவாய்முனநாள்
சலமொடுமாநிலங்கொண்டவனுக்கிடந்தான்றடஞ்சூழ்ந்தழகாயகச்சி
உலகுடைமன்னவன்றென்னவனைக்கன்னிமாமதிள்சூழ்கருவூர்வெருவப்
பலபடைசாயவென்றான்பணிந்தபரமேச்சுரவிண்ணகரமதுவே. (௭)

குடைத்திறன்மன்னவனாயொருகாற்குரங்கைப்படையா,மலையாற்கடலை
அடைத்தவனெந்தைபிரானதிடம்மணிமாடங்கள்சூழ்ந்தழகாயகச்சி
விடைத்திறல்வில்லவனென்மெலியில்வெருவச்செருவேல்வலங்கைப்பிடித்த
படைத்திறற்பல்லவர்கோன்பணிந்தபரமேச்சுரவிண்ணகரமதுவே.

பிறையுடைவாணுதற்பின்னைதிறத்துமுன்னேயொருகாற்செருவிலுருமின்
மறையுடைமால்விடையேழடர்த்தாற்கிடந்தான்றடஞ்சூழ்ந்தழகாயகச்சி
கறையுடைவாண்மறமன்னர்கெடக்கடல்போன்முழங்குங்குரற்கடுவாய்ப்
பறையுடைப்பல்லவர்கோன்பணிந்தபரமேச்சுரவிண்ணகரமதுவே.

* பார்மன்னுதொல்புகழ்பல்லவர்கோன்பணிந்தபரமேச்சுரவிண்ணகர்மேல்
கார்மன்னுநீள்வயன்மங்கையர்தந்தலைவன்கலிகன்றிகுன்றாதுரைத்த
சீர்மன்னுசெந்தமிழ்மாலைவல்லார்திருமாமகடன்னருளா, லுலகில்
தேர்மன்னராயொலிமாகடல்சூழ்செழுநீருலகாண்டுதிகழ்வர்களே.()

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

சொல்லுகார் உரமண்டம்தூம்புதிண் இலகியகுடைபிறைபார்மஞ்சாடு.

ஆ திருமொழி - ௧௧ - க்கு - பாசுரம் - ௧௧௦.

## ௧0 - வது. மஞ்சாடு.

### திருக்கோவலூர்திருவிக்ரமன்விஷயம்.

பிராட்டிமாருந்தானுமாகவாஶ்ரயணீயனுய் திருக்கோவலூரிலேவந்து நின்றான் நானவனை யங்கேகண்டநுபவிக்கப்பெற்றேனென்கிறார்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆரபிராகம்-ஆதிதாளம்.

※ மஞ்சாடுவரையேழுங்கடல்களேழும்
வானகமுமண்ணகமுமற்றுமெல்லாம்
எஞ்சாமல்வயிற்றடக்கியாலின்மேலோ
ரிளந்தளிரிற்கண்வளர்ந்தவீசன்றன்னைத்
துஞ்சாநீர்வளஞ்சுரக்கும்பெண்ணைத்தென்பாற்
றூயநான்மறையாளர்சோமுச்செய்யச்
செஞ்சாலிவிளைவயலுட்டிகழ்ந்துதோன்றுந்
திருக்கோவலூரதனுட்கண்டேன்நானே. (௧)

கொந்தலர்ந்தநறுந்துழாய்சாந்தந்தூபந்
தீபங்கொண்டமரர்தொழப்பணங்கொள்பாம்பில்
சந்தணிமென்முலைமலராட்டரணிமங்கை
தாமிருவரடிவருடுந்தன்மையானை
வந்தனைசெய்திசையேழாறங்கமைந்து
வளர்வேள்விநான்மறைகள்மூன்றுதீயும்
சிந்தனைசெய்திருபொழுதுமொன்றுஞ்செல்வத்
திருக்கோவலூரதனுட்கண்டேன்நானே. (௨)

கொழுந்தலருமலர்ச்சோலைக்குழாங்கொள்பொய்கைக்
கோண்முதலைவாளெயிற்றுக்கொண்டற்கெள்கி
அழுந்தியமாகளிற்றினுக்கன்றாழியேந்தி
யந்தரமேவரத்தோன்றியருட்செய்தானை
எழுந்தமலர்க்கருநீலமிருந்தில்காட்ட
விரும்புன்னைமுத்தரும்பிச்செம்பொன்காட்டச்
செழுந்தடநீர்க்கமலந்தீவிகைபோற்காட்டுந்
திருக்கோவலூரதனுட்கண்டேன்நானே. (௩)

தாங்கரும்போர்மாலிபடப்பறவையூர்ந்து
தராதலத்தோர்குறைமுடித்ததன்மையானை
ஆங்கரும்பிக்கண்ணீர்சோர்ந்தன்புகூரு
மடியவர்கட்காரமுதமானான்றன்னைக்
கோங்கரும்புசுரபுன்னைகுரவார்சோலைக்
குழாவரிவண்டிசைபாடும்பாடற்கேட்டுத்
தீங்கரும்புகண்வளருங்கழனிசூழ்ந்த
திருக்கோவலூரதனுட்கண்டேன்நானே. (௪)

கறைவளர்வேற்கரன்முதலாக்கவந்தன்வாலி
கணையொன்றினான்மடிய, விலங்கைதன்னுள்
பிறையெயிற்றுவாளரக்கர்சேனையெல்லாம்
பெருந்தகையோடுடன்றுணித்தபெம்மான்றன்னை
மறைவளரப்புகழ்வளரமாடந்தோறும்
மண்டபமொண்டொளியனைத்தும்வாரமோதச்
சிறையணைந்தபொழிலணைந்துதென்றல்வீசுந்
திருக்கோவலூரதனுட்கண்டேன்நானே. (௫)

உறியார்ந்தநறுவெண்ணெயொளியாற்சென்றங்
குண்டானைக்கண்டாய்ச்சியுரலோடார்க்கத்
தறியார்ந்தகருங்களிறேபோலநின்று
தடங்கண்கள்பனிமல்குந்தன்மையானை
வெறியார்ந்தமலர்மகணாமங்கையோடு
வியன்கலையெண்டோளினாள்விளங்கு, செல்வச்
செறியார்ந்தமணிமாடந்திகழ்ந்துதோன்றுந்
திருக்கோவலூரதனுட்கண்டேன்நானே. (௬)

இருங்கைம்மாகரிமுனிந்துபரியைக்கீறி
யினவிடைகளேழடர்த்துமருதஞ்சாய்த்து
வருஞ்சகடமிறவுதைத்துமல்லையட்டு
வஞ்சஞ்செய்கஞ்சனுக்குநஞ்சானானைக்
கருங்கமுகுபசும்பாளைவெண்முத்தீன்று
காயெல்லாமரதகமாய்ப்பவளங்காட்டச்
செருந்திமிகமொட்டலர்த்துந்தேன்கொள்சோலைத்
திருக்கோவலூரதனுட்கண்டேன்நானே. (௭)

பாரேறுபெரும்பாரந்தீரப்பண்டு
பாரதத்துத்தூதியங்கிப்பார்த்தன், செல்வத்
தேரேறுசாரதியாயெதிர்ந்தார்சேனை
செருக்களத்துத்திறலழியச்செற்றான்றன்னைப்
போரேறொன்றுடையானுமளகைக்கோனும்
புரந்தரனுநான்முகனும்பொருந்துமூர்போல்
சீரேறுமறையாளர்நிறைந்தசெல்வத்
திருக்கோவலூரதனுட்கண்டேன்நானே. (௮)

தூவடிவிற்பார்மகள்பூமங்கையோடு
சுடராழிசங்கிருபாற்பொலிந்துதோன்றக்
காவடிவிற்கற்பகமேபோலநின்று
கலந்தவர்கட்கருள்புரியுங்கருத்தினானைச்

சேவடிகைதிருவாய்கண்சிவந்தவாடை
செம்பொன்செய்திருவுருவமானான்றன்னைத்
தீவடிவிற்சிவனயனேபோல்வார்மன்னு
திருக்கோவலூரதனுட்கண்டேன்நானே. (௯)

* வாரணங்கொளிடர்கடிந்தமாலைநீல
மரதகத்தைமழைமுகிலேபோல்வான்றன்னைச்
சீரணங்குமறையாளர்நிறைந்தசெல்வத்
திருக்கோவலூரதனுட்கண்டேனென்று
வாரணங்குமுலைமடவார்மங்கைவேந்தன்
வாட்கலியனொலியைந்துமைந்தும்வல்லார்
காரணங்களாலுலகங்கலந்தங்கேத்தக்
கரந்தெங்கும்பரந்தானைக்காண்பர்தாமே. (௧0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

மஞ்சுகொந்துகொழுந்துதாங்கு கறையுறி இருங்கைபார்துவடிவாரிருந்தண்
ஆ பத்து - உ - ல் - திருமொழி - உ0 - க்கு - பாசுரம் - உ00.

இரண்டாம்பத்து முற்றியது.

---

## மூன்றும்பத்து.

---

### க - வது. இருந்தண்.

திருவயிந்திரபுரம் தேவநாயகர்விஷயம்.

பரிஸ்சின்னஞானஸர்வேஸ்வரன் பரிச்சேதித்தநுபவிக்கலாம்படி திருவயிந்திரபுரத்திலே நிற்கிறபடியைக்கண்டு அவ்விடத்தை ப்ராப்யமென்று புத்திபண்ணி அத்தையநுபவிக்கிறார்.

நெடிலடியாசிரியவிருத்தம்.

செஞ்சுருட்டிராகம் - ஆதிதாளம்.

* இருந்தண்மாநிலமேனமதாய்வளைமருப்பினிலகத்தொடுக்கிக்
கருந்தண்மாகடற்கண்டுயின்றவனிடங்கமலநன்மலர்த்தேறல்
அருந்தி, யின்னிசைமுரன்றெழுமளிகுலம்பொதுளியம்பொழிலூடே
செருந்திநாண்மலர்சென்றணைந்துழிதருதிருவயிந்திரபுரமே. (க)

மின்னுமாழியங்கையவன்செய்யவளுறைதருதிருமார்பன்
பன்னுநான்மறைப்பல்பொருளாகியபரனிடம்வரைச்சாரல்
பின்னுமாதவிப்பந்தரிற்பெடைவரப்பிணியவிழ்கமலத்துத்
தென்னவென்றுவண்டின்னிசைமுரல்தருதிருவயிந்திரபுரமே. (உ)

வையமேழுமுண்டாலிலைவைகியமாயவ, னடியவர்க்கு
மெய்யனாகியதெய்வநாயகனிடமெய்தகுவரைச்சாரல்
மொய்கொண்மாதவிசெண்பகமுயங்கியமுல்லையங்கொடியாடச்
செய்யதாமரைச்செழும்பணைதிகழ்தருதிருவயிந்திரபுரமே. (௩)

மாறுகொண்டுடன்றெதிர்ந்தவல்லவுணன்றன்மார்பகமிருபிளவாக்
கூறுகொண்டவன்குலமகற்கின்னருட்கொடுத்தவனிட,மிடைந்து
சாறுகொண்டமென்கரும்பிளங்கழைதகைவிசும்புறமணிநீழல்
சேறுகொண்டதண்பழனமதெழிறிகழ்திருவயிந்திரபுரமே. (௪)

ஆங்குமாவலிவேள்வியிலிரந்துசென்றகலிடமளந், தாயர்
பூங்கொடிக்கினவிடைபொருதவனிடம்பொன்மலர்திகழ், வேங்கை
கோங்குசெண்பகக்கொம்பினிற்குதிகொடுகுரக்கினமிரைத்தோடித்
தேன்கலந்ததண்பலங்கனிநுகர்தருதிருவயிந்திரபுரமே. (௫)

கூனுலாவியமடந்தைதன்கொடுஞ்சொலின்றிறத், திளங்கொடியோடும்
கானுலாவியகருமுகிற்றிருநிறத்தவனிடங்கவினாரும்
வானுலாவியமதிதவழ்மால்வரைமாமதிற்புடைசூழத்
தேனுலாவியசெழும்பொழிற்றழுவியதிருவயிந்திரபுரமே. (௬)

மின்னின்னுண்ணிடையடக்கொடிகாரணம்விலங்கலின்மிசையிலங்கை
மன்னன், னீண்முடிபொடிசெய்தமைந்தனதிடமணிவரைநீழல்
அன்னமாமலரரவிந்தத்தமளியிற்பெடையொடுமினிதமரச்
செந்நெலார்கவரிக்குலைவீசுதண்டிருவயிந்திரபுரமே. (௭)

விரைகமழ்ந்தமென்கருங்குழற்காரணம்வில்லிறுத், தடன்மழைக்கு
நிரைகலங்கிடவரைகுடையெடுத்தவனிலவியவிடந், தடமார்
வரைவளந்திகழ்மதகரிமருப்பொடுமலைவளரகிலுந்தித்
திரைகொணர்ந்தணைசெழுநதிவயல்புகுதிருவயிந்திரபுரமே. (௮)

வேல்கொள்கைத்தலத்தரசர்வெம்போரினில்விசையனுக்காய்,மணித்தேர்க்
கோல்கொள்கைத்தலத்தெந்தைபெம்மானிடங்குலவுதண்வரைச்சாரல்
கால்கொள்கண்கொடிக்கையெழக்கமுகிளம்பாளைகள்கமழ்சாரல்
சேல்கள்பாய்தருசெழுநதிவயல்புகுதிருவயிந்திரபுரமே. (௯)

* மூவராகியவொருவனைமூவுலகுண்டுமிழ்ந்தளந்தானைத்
தேவர்தானவர்சென்றுசென்றிறைஞ்சத்தண்டிருவயிந்திரபுரத்து
மேவுசோதியைவேல்வலவன்கலிகன்றிவிரித்துரைத்த
பாவுதண்டமிழ்பத்திவைபாடிடப்பாவங்கள்பயிலாவே. (௧௰)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

இருந்தண்மின்வையம்மாறுங்கூன்மின்விரைவேல்மூவருந்.

ஆ திருமொழி - ௨௧ - க்கு - பாசுரம் - ௨௧௰.

## உ-வது. ஊன்வாட.

திருச்சித்ரகூடம் கோவிந்தராஜர்விஷயம்.

பரோபதேசம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சங்கராபரணராகம் - அடதாளம்.

* ஊன்வாடவுண்ணாதுயிர்காவலிட்
டுடலிற்பிரியாப்புலனைந்துநொந்து
தாம்வாடவாடத்தவஞ்செய்யவேண்டா
தமதாவிமையோருலகாளகிற்பீர்
கானாடமஞ்ஞைக்கணமாடமாடே
கயலாடுகானீர்ப்பழனம்புடைபோய்த்
தேனாடமாடக்கொடியாடுதில்லைத்
திருச்சித்திரகூடஞ்சென்றுசேர்மின்களே. (௧)

காயோடுநீடுகனியுண்டுவீசு
கடுங்கானுகர்ந்து, நெடுங்காலமைந்து
தீயோடுநின்றுதவஞ்செய்யவேண்டா
திருமார்பனைச்சிந்தையுள்வைத்துமென்பீர்
வாயோதுவேதமலிகின்றதொல்சீர்
மறையாளர்நாளுமுறையால்வளர்த்த
தீயோங்கவோங்கப்புகழோங்குதில்லைத்
திருச்சித்திரகூடஞ்சென்றுசேர்மின்களே. (உ)

வெம்புஞ்சினத்துப்புனக்கேழலொன்றாய்
விரிநீர்முதுவெள்ளமுள்புக்கழுந்த
வம்புண்பொழிற்சூழுலகன்றெடுத்தா
னடிப்போதணைவான்விருப்போடிருப்பீர்
பைம்பொன்னுமுத்தும்மணியுங்கொணர்ந்து
படைமன்னவன்பல்லவர்கோன்பணிந்த
செம்பொன்மணிமாடங்கள்சூழ்ந்ததில்லைத்
திருச்சித்திரகூடஞ்சென்றுசேர்மின்களே. (௩)

அருமாநிலமன்றளப்பான்குறளா
யவுணன்பெருவேள்வியிற்சென்றிரந்த
பெருமான்றிருநாமம்பிதற்றிநுந்தம்
பிறவித்துயர்நீங்குதுமென்னகிற்பீர்

கருமாகடலுட்கிடந்தானுவந்து
கவைநாவரவினணைப்பள்ளியின்மேல்
திருமால்திருமங்கையோடாடுதில்லைத்
திருச்சித்திரகூடஞ்சென்றுசேர்மின்களே. (௪)

கோமங்கவங்கக்கடல்வையமுய்யக்
குலமன்னரங்கம்மழுவிற்றுணியத்
தாமங்கமருட்படைதொட்டவென்றித்
தவமாமுனியைத்தமக்காக்ககிற்பீர்
பூமங்கைதங்கிப்புலமங்கைமன்னிப்
புகழ்மங்கையெங்குந்திகழப்புகழ்சேர்
சேமங்கொள்பைம்பூம்பொழிற்சூழ்ந்ததில்லைத்
திருச்சித்திரகூடஞ்சென்றுசேர்மின்களே. (௫)

நெய்வாயழலம்புதுரந்துமுந்நீர்
துணியப்பணிகொண்டணியார்ந், திலங்கும்
மைவாய்மணிவண்ணனையெண்ணிநுந்தம்
மனத்தேயிருத்தும்படிவாழவல்லீர்
அவ்வாயிளமங்கையர்பேசவுந்தா
னருமாமறையந்தணர்சிந்தைபுகச்
செவ்வாய்க்கிளிநான்மறைபாடுதில்லைத்
திருச்சித்திரகூடஞ்சென்றுசேர்மின்களே. (௬)

மௌவற்குழலாய்ச்சிமென்றோணயந்து
மகரஞ்சுழலச்சுழனீர்பயந்த
தெய்வத்திருமாமலர்மங்கைதங்கு
திருமார்பனைச்சிந்தையுள்வைத்துமென்பீர்
கௌவைக்களிற்றின்மருப்பும்பொருப்பிற்
கமழ்சந்துமுந்திநிவாவலங்கொள்
தெய்வப்புனல்சூழ்ந்தழகாயதில்லைத்
திருச்சித்திரகூடஞ்சென்றுசேர்மின்களே. (௭)

மாவாயினங்கம்மதியாதுகீறி
மழைமாமுதுகுன்றெடுத், தாயர்தங்கள்
கோவாய்நிரைமேய்த்துலகுண்டமாயன்
குறைமாகழற்கூடுங்குறிப்புடையீர்
மூவாயிரநான்மறையாளர்நாளும்
முறையால்வணங்கவணங்காயசோதித்
தேவாதிதேவன்றிகழ்கின்றதில்லைத்
திருச்சித்திரகூடஞ்சென்றுசேர்மின்களே. (௮)

செருநீலவேற்கண்மடவார்திறத்துச்
சினத்தோடுநின்றுமனத்தால்வளர்க்கும்
அருநீலபாவமகலப்புகழ்சே
ரமரர்க்குமெய்தாதவண்டத்திருப்பீர்
பெருநீர்நிவாவுந்திமுத்தங்கொணர்ந்தெங்கும்
வித்தும்வயலுட்கயல்பாய்ந்துகளத்
திருநீலநின்றுதிகழ்கின்றதில்லைத்
திருச்சித்திரகூடஞ்சென்றுசேர்மின்களே. (கூ)

* சீரார்பொழிற்சூழ்ந்தழகாயதில்லைத்
திருச்சித்திரகூடத்துறைசெங்கண்மாலுக்
காராதவுள்ளத்தவர்கேட்டுவப்ப
வலைநீருலகுக்கருளேபுரியும்
காரார்புயற்கைக்கலிகன்றிகுன்று
வொலிமாலையோரொன்பதோடொன்றும்வல்லார்
பாராருலகமளந்தானடிக்கீழ்ப்
பலகாலநிற்கும்படிவாழ்வர்தாமே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஊன்காய்வெம்பருமாகோநெய்மேளவல் மாவாய்செருச்சீரார்வாட.

ஆ திருமொழி - உஉ - க்கு - பாசுரம் - உஉ0.

---

## ந - வது. வாடமரு.

திருச்சித்ரகூடம் கோவிந்தராஜர்விஷயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மோகனராகம்-ஆதிதாளம்.

* வாடமருதிடைபோகிமல்லரைக்கொன்றொக்கலித்திட்
டாடனன்மாவுடைத்தாயராகிரைக்கன்றிடர்தீர்ப்பான்
கூடியமாமழைகாத்தகூத்தனெனவருகின்றான்
சேடுயர்பூம்பொழிற்றில்லைச்சித்திரகூடத்துள்ளானே. (க)

பேய்மகள்கொங்கைநஞ்சுண்டபிள்ளைபரிசிதுவென்றால்
மாநிலமாமகண்மாதர்கேள்வனிவனென்றும், வண்டுண்
பூமகணாயகனென்றும்புலன்கெழுகோவியர்பாடித்
தேமலர்தூவவருவான்சித்திரகூடத்துள்ளானே. (உ)

பண்டிவன்வெண்ணெயுண்டானென்றாய்ச்சியர்கூடியிழிப்ப
எண்டிசையோரும்வணங்கவிணைமருதூடுநடந்திட்
டண்டரும்வானத்தவருமாயிரநாமங்களோடு
திண்டிறற்பாடவருவான்சித்திரகூடத்துள்ளானே. (௩)

வளைக்கைநெடுங்கண்மடவாராய்ச்சியரஞ்சியழைப்பத்
தளைத்தவிழ்தாமரைப்பொய்கைத்தண்டடம்புக்கண்டர்காண
முளைத்தவெயிற்றழனாகத்துச்சியினின்றதுவாடத்
திளைத்தமர்செய்துவருவான்சித்திரகூடத்துள்ளானே. (௪)

பருவக்கருமுகிலொத்துமுத்துடைமாகடலொத்து
அருவித்திரடிகழ்கின்றவாயிரம்பொன்மலையொத்து
உருவக்கருங்குழலாய்ச்சித்திறத்தினமால்விடைசெற்றுத்
தெருவிற்றிளைத்துவருவான்சித்திரகூடத்துள்ளானே. (௫)

எய்யச்சிதைந்ததிலங்கைமலங்கவருமழைகாப்பான்
உய்யப்பருவரைதாங்கியாநிரைகாத்தானென்றேத்தி
வையத்தெவரும்வணங்கவணங்கெழுமாமலைபோலே
தெய்வப்புள்ளேறிவருவான்சித்திரகூடத்துள்ளானே. (௬)

ஆவரிவைசெய்தறிவாரஞ்சனமாமலைபோலே
மேவுசினத்தடல்வேழம்வீழமுனிந், தழகாய
காவிமலர்நெடுங்கண்ணார்கைதொழவீதிவருவான்
தேவர்வணங்குதண்டில்லைச்சித்திரகூடத்துள்ளானே. (௭)

பொங்கியமரிலொருகாற்பொன்பெயரோனைவெருவ
அங்கவனாகமளைந்திட்டாயிரந்தோளெழுந்தாடப்
பைங்கணிரண்டெரிகான்றநீண்டவெயிற்றொடுபேழ்வாய்ச்
சிங்கவுருவில்வருவான்சித்திரகூடத்துள்ளானே. (௮)

கருமுகிற்போல்வதோர்மேனிகையனவாழியுஞ்சங்கும்
பெருவிறல்வானவர்சூழவேழுலகுந்தொழுதேத்த
ஒருமகளாயர்மடந்தையொருத்திநிலமகள், மற்றைத்
திருமகளோடும்வருவான்சித்திரகூடத்துள்ளானே. (௯)

* தேனமர்பூம்பொழிற்றில்லைச்சித்திரகூடமமர்ந்த
வானவர்தங்கள்பிரானைமங்கையர்கோன்மருவார்
ஊனமர்வேற்கலிகன்றியொண்டமிழொன்பதோடொன்றும்
நாவலிவைகற்றுவல்லார்மேற்சாராதீவினைதானே. (௧0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

வாடப்பேய்பண்டுவளைபருவெய்யாவர்பொங்கியகருமுகில்தேனமர் ஒருகு.ள்.

ஆ. திருமொழி - ௨௩ - ச்கு - பாசுரம் - ௨௩0.

## ச - வது. ஒருகுறளா.

### காழிச்சீராமவிண்ணகரம் தாடாளப்பெருமாள்விஷயம்.

பரோபதேசம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பியாகடைராகம் - ரூபகதாளம்.

* ஒருகுறளாயிருநிலமூவடிமண்வேண்டி
    யுலகனைத்துமீரடியாலொடுக்கி, யொன்றும்
தருகவெனுமாவலியைச்சிறையில்வைத்த
    தாடாளன்றளணைவீர், தக்கீர்த்தி
அருமறையின்றிரணன்கும்வேள்வியைந்து
    மங்கங்களவையாறுமிசைகளேழும்
தெருவின்மலிவிழாவளமுஞ்சிறக்குங்காழிச்
    சீராமவிண்ணகரோசேர்மினீரே. (க)

நான்முகனுண்மிகத்தருக்கையிருக்குவாய்மை
    நலமிகுசீருரோமசனுனவிற்று, நக்கன்
ஊன்முகமார்தலையோட்டூணொழித்தவெந்தை
    யொளிமலர்ச்சேவடியணைவீ, ருழுசேயோட்சு
சூன்முகமார்வளையளைவாயுகுத்தமுத்தைத்
    தொல்குருகுசினையெனச்சூழ்ந்தியங்க, வெங்கும்
தேன்முகமார்கமலவயற்சேல்பாய்காழிச்
    சீராமவிண்ணகரோசேர்மினீரே. (உ)

வையணைந்தநுதிக்கோட்டுவராகமொன்றாய்
    மண்ணெல்லாமிடந்தெடுத்துமதங்கட்செய்து
நெய்யணைந்ததிகிரியினால்வாணன்றிண்டோள்
    நேர்த்தவன்றளணைகிற்பீர், நெய்தலோடு
மையணைந்தகுவளைகடங்கண்களென்றும்
    மலர்க்குமுதம்வாயென்றுங்கடைசிமார்கள்
செய்யணைந்துகளைகளையாதேறுங்காழிச்
    சீராமவிண்ணகரோசேர்மினீரே. (ந)

பஞ்சியமெல்லடிப்பின்னைத்திறத்துமுன்னாள்
    பாய்விடைகளேழடர்த்துப்பொன்னன்பைம்பூண்
நெஞ்சிடந்துகுருதியுகவுகிர்வேலாண்ட
    நின்மலன்றளணைகிற்பீர், நீலமாலைத்

தஞ்சுடையவிருட்டழைப்பத்தாளமாங்கே
தண்மதியினிலாக்காட்டப்பவளந்தன்னால்
செஞ்சுடர்வெயில்விரிக்குமழகார்காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (ரு)

தெவ்வாயமறமன்னர்குருதிகொண்டு
திருக்குலத்திலிறந்தோர்க்குத்திருத்திசெய்து
வெவ்வாயமாகீண்டுவேழமட்ட
விண்ணவர்கோன்றாளணைவீர், விகிர்தமாதர்
அவ்வாயவாணெடுங்கட்குவளைகாட்ட
வரவிந்தமுகங்காட்ட, வருகேயாம்பல்
செவ்வாயின்றிரள்காட்டும்வயல்சூழ்காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (கு)

பைங்கண்விறற்செம்முகத்துவாலிமாளப்
படர்வனத்துக்கவந்தனொடும்படையார்திண்கை
வெங்கண்விறல்விராதனுகவிற்குனித்த
விண்ணவர்கோன்றாளணைவீர், வெற்புப்போலும்
துங்கமுகமாளிகைமேலாயங்கூறுந்
துடியிடையார்முகக்கமலச்சோதிதன்னால்
திங்கண்முகம்பனிபடைக்குமழகார்காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (சு)

பொருவில்வலம்புரியரக்கன்முடிகள்பத்தும்
புற்றுமறிந்தனபோலப்புவிமேற்சிந்தச்
செருவில்வலம்புரிசிலைக்கைமலைத்தோள்வேந்தன்
திருவடிசேர்ந்துய்கிற்பீர், திரைநீர்த்தெள்கி
மருவிவலம்புரிகைதைக்கழியூடாடி
வயன்ண்ணிமழைதருநீர்த்தவழ்கால்மன்னித்
தெருவில்வலம்புரிதரளமீனுங்காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (எ)

பட்டரவேரகலல்குற்பவளச்செவ்வாய்ப்
பணைநெடுந்தோட்டுணைநெடுங்கட்பாலாமின்சொல்
மட்டவிழுங்குழலிக்காவானோர்காவின்
மரங்கொணர்ந்தானடியணைவீ, ரணில்கடாவ
நெட்டிலையகருங்கமுகின்செங்காய்வீழ
நீள்பலவின்றாழ்சினையினெருங்குபீனத்
தெட்டபழஞ்சிதைந்துமதுச்சொரியுங்காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (அ)

பிறைதங்குசடையானைவலத்தேவைத்துப்
பிரமனைத்தன்னுந்தியிலேதோற்றுவித்துக்
கறைதங்குவேற்றடங்கண்டிருவைமார்பிற்
கலந்தவன்றாளணைகிற்பீர், கழுநீர்கூடித்
துறைதங்குகமலத்துத்துயின்றுகைதைத்
தோடாரும்பொதிசோற்றுச்சுண்ணநண்ணிச்
சிறைவண்டுகளிபாடும்வயல்சூழ்காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (௯)

* செங்கமலத்தயனனையமறையோர்காழிச்
சீராமவிண்ணகரின்செங்கண்மாலை
அங்கமலத்தடவயல்சூழாலிநாட
னருண்மாரியரட்டமுக்கியடையார்சீயம்
கொங்குமலர்க்குழலியர்வேண்மங்கைவேந்தன்
கொற்றவேற்பரகாலன்கலியன்சொன்ன
சங்கமுகத்தமிழ்மாலைபத்தும்வல்லார்
தடங்கடல்சூழுலகுக்குத்தலைவர்தாமே. (௧௦)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஒருநான் வையம் பஞ்சி தெவ்வாய் பைங்கண் பொரு பட்ட பிறை செங்கமலம் வந்து.

ஆ திருமொழி-௨௪-க்கு-பாசுரம்-௨௪௦.

## ௫ - வது. வந்துன்.

திருவாலிநகர்வயலாளிமணவாளப்பெருமாள்விஷயம்

கைங்கர்யப்ரார்த்தனைபண்ணுவாராய் அவன்பண்ணின வுபகாரத்தை ஸ்மரிக்கிறார்.

ஆசிரியத்துறை.

சாவேரிராகம்-ஆதிதாளம்.

* வந்துனதடியேன்மனம்புகுந்தாய்புகுந்ததற்பின்வணங்கு, மென்
சிந்தனைக்கினியாய்திருவேயென்னுருயிரே
அந்தளிரணியாரசோகினிளந்தளிர்கள்கலந், தவையெங்கும்
செந்தழற்புரையுந்திருவாலியம்மானே. (௧)

நீலத்தடவரைமாமணிநிகழக்கிடந்ததுபோ, லரவணை
வேலைத்தலைக்கிடந்தாயடியேன்மனத்திருந்தாய்
சோலைத்தலைக்கணமாமயினடமாடமழைமுகில்போன்றெழுந், தெங்கு
மாலைப்புகைகமழுமணியாலியம்மானே. (௨)

நென்னெற்போய்வருமென்றென்றெண்ணியிராமையென்மனத்தேபுகுந்த
திம்மைக்கென்றிருந்தேனெறிநீர்வளஞ்செறுவில்
செந்நெற்கூழைவரம்பொரீஇயரிவார்முகத்தெழுவாளைபோய்க், கரும்
பந்நற்காடணையுமணியாலியம்மானே. (௩)

மின்னின்மன்னுநுடங்கிடைமடவார்தஞ்சிந்தைமறந்துவந்து, நின்
மன்னுசேவடிக்கேமறவாமைவைத்தாயால்
புன்னைமன்னுசெருந்திவண்பொழில்வாயகன்பணைகள்கலந், தெங்கும்
அன்னம்மன்னும்வயலணியாலியம்மானே. (௪)

நீடுபன்மலர்மாலையிட்டுநின்னிணையடிதொழுதேத்து, மென்மனம்
வாடநீநினையேன்மரமெய்தமாமுனிவா
பாடலின்னொலிசங்கினோசைபரந்துபல்பணையால்மலிந், தெங்கும்
ஆடலோசையறாவணியாலியம்மானே. (௫)

கந்தமாமலரெட்டுமிட்டுநின்காமர்சேவடிகைதொழுதெழும்
புந்தியேன்மனத்தேபுகுந்தாயைப்போகலொட்டேன்
சந்திவேள்விசடங்குநான்மறையோதியோதுவித்தாதியாய்வரும்
அந்தணாளரறாவணியாலியம்மானே. (௬)

உலவுதிரைக்கடற்பள்ளிகொண்டுவந்துன்னடியேன்மனம்புகுந்த, வப்
புலவபுண்ணியனேபுகுந்தாயைப்போகலொட்டேன்
நிலவுமலர்ப்புன்னைநாழனிழல்தண்டாமரைமலரின்மிசை, மலி
அலவன்கண்படுக்குமணியாலியம்மானே. (௭)

சங்குதங்குதடங்கடற்கடன்மல்லையுட்கிடந்தா, யருள்புரிந்து
இங்கென்னுட்புகுந்தாயினிப்போயினாலறையோ
கொங்குசெண்பகமல்லிகைமலர்புல்கியின்னிளவண்டுபோ, யிளந்
தெங்கின்றாதளையுந்திருவாலியம்மானே. (௮)

ஓதியாயிரநாமமும்பணிந்தேத்திநின்னடைந்தேற், கொருபொருள்
வேதியாவரையாவுரையாயொருமாற்றமெந்தாய்
நீதியாகியவேதமாமுனியாளர்தோற்றமுரைத்து, மற்றவர்க்
காதியாயிருந்தாயணியாலியம்மானே. (௯)

* புல்லிவண்டறையும்பொழில்புடைசூழ்தென்னாலியிருந்தமாயனைக்
கல்லின்மன்னுதிண்டோட்கலியனொலிசெய்த
நல்லவின்னிசைமாலைநாலுமோரைந்துமொன்றுநவின்றுதா, முடன்
வல்லராயுரைப்பார்க்கிடமாகும்வானுலகே. (௧௦)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

வந்துநீலநென்னெல்மின்னினீடுகந்தவுலவுசங்கோதிபுல்லினூவிரி.

ஆ திருமொழி - ௨௫ - க்கு - பாசுரம் - ௨௫0.

## சா - வது. தூவிரிய.

### திருவாலிநகர்வயலாளிமணவாளப்பெருமாள்விஷயம்.

ஆதவிடுகிறூர்.

கலிவிருத்தம்.

நாதநாமக்கிரியைராகம் - ரூபகதாளம்.

* தூவிரியமலருழக்கித்துணையோடும்பிரியாதே
பூவிரியமதுநுகரும்பொறிவரியசிறுவண்டே
தீவிரியமறைவளர்க்கும்புகழாளர்திருவாலி
ஏவரிவெஞ்சிலையானுக்கென்னிலைமையுரையாயே. (க)

பிணியவிழுநறுநீலமலர்கிழியப், பெடையோடும்
அணிமலர்மேன்மதுநுகருமறுகாலசிறுவண்டே
மணிகழுநீர்மருங்கலரும்வயலாலிமணவாளன்
பணியறியேனீசென்றென்பயலைநோயுரையாயே. (உ)

நீர்வானமண்ணெரிகாலாய்நின்றநெடுமால், தன்
தாராயநறுந்துளபம்பெறுந்தகையேற்கருளானே
சீராரும்வளர்பொழில்சூழ்திருவாலிவயல்வாழும்
கூர்வாயசிறுகுருகேகுறிப்பறிந்துகூறுயே. (ங)

தானுகநினையானேற்றன்னினைந்துநைவேற், கோர்
மீனுயகொடிநெடுவேள்வலிசெய்யமெலிவேனே
தேன்வாயவரிவண்டேதிருவாலிநகராளும்
ஆனுயற்கென்னுறுநோயறியச்சென்றுரையாயே. (ச)

வாளாயகண்பனிப்பமென்முலைகள்பொன்னரும்ப
நாணுளுநின்னினைந்துநைவேற், கோமண்ணளந்த
தாளாளாதண்குடந்தைநகராளாவரையெடுத்த
தோளாளா, வென்றனக்கோர்துணையாளனுகாயே. (ரு)

தாராயதண்துளபவண்டுழுதவரைமார்பன்
போரானைகொம்பொசித்தபுட்பாகனென்னம்மான்
தேராருநெடுவீதித்திருவாலிநகராளும்
காராயனென்னுடையகனவளையுங்கவர்வானே. (சா)

கொண்டரவத்திரையுலவுகுரைகடன்மேற்குலவரைபோல்
பண்டரவினணைக்கிடந்துபாரளந்தபண்பாளா
வண்டமரும்வளர்பொழில்சூழ்வயலாலிமைந்தா, வென்
கண்டுயினீகொண்டாய்க்கென்கனவளையுங்கடவேனே. (எ)

குயிலாலும்வளர்பொழில்சூழ்தண்குடந்தைக்குடமாடித்
துயிலாதகண்ணிணையேனின்னினைந்துதுயர்வேனோ
முயலாலுமிளமதிக்கேவளையிழந்தேற், கிதுநடுவே
வயலாலிமணவாளாகொள்வாயோமணிநிறமே. (அ)

நிலையாளாநின்வணங்கவேண்டாயேயாயினு, மென்
முலையாளவொருநாளுன்னகலத்தாலாளாயே
சிலையாளாமரமெய்ததிறலாளாதிருமெய்ய
மலையாளா, நீயாளவளையாளமாட்டோமே. (கூ)

* மையிலங்குகருங்குவளைமருங்கலரும்வயலாலி
நெய்யிலங்குசுடராழிப்படையானைநெடுமாலைக்
கையிலங்குவேற்கலியன்கண்டுரைத்ததமிழ்மாலை
ஐயிரண்டுமிவைவல்லார்க்கருவினைகளடையாவே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

அவிரிபிணிநீர்தான்வாள்தாராயகொண்டகுயில்நிலமையிலங்குகள்வன்.

ஆ திருமொழி - உசு - க்கு - பாசுரம் - உசு0.

## எ - வது. கள்வன்.

திருவாலிமணவாளப்பெருமாள்விஷயம்,

தாயார்பாசுரம்.

கலிவிருத்தம்.

அசாவந்திராகம் - ஆதிதாளம்.

* கள்வன்கொல்யானறியேன்கரியானொருகாளைவந்து
வள்ளிமருங்குலென்றன்மடமானினைப்போதவென்று
வெள்ளிவளைக்கைபற்றப்பெற்றதாயரைவிட்டகன்று
அள்ளலம்பூங்கழனியணியாலிபுகுவர்கொலோ. (க)

பண்டிவனுயனங்காய்ப்படிறன்புகுந், தென்மகடன்
தொண்டையஞ்செங்கனிவாய்நுகர்ந்தானையுகந், தவன்பின்
கெண்டையொண்கண்மிளிரக்கிளிபோன்மிழற்றிநடந்து
வண்டமர்கானன்மல்கும்வயலாலிபுகுவர்கொலோ. (உ)

அஞ்சுவன்வெஞ்சொனங்காயரக்கர்குலப்பாவைதன்னை
வெஞ்சினமூக்கரிந்தவிறலோன்றிறங்கேட்கின், மெய்யே
பஞ்சியமெல்லடியெம்பணைத்தோளிபரக்கழிந்து
வஞ்சியந்தண்பணைசூழ்வயலாலிபுகுவர்கொலோ, (ந)

ஏதவன்றொல்பிறப்பிளையவன்வளையூதி, மன்னர்
தூதுவனுயவனூர்சொல்லுவீர்கள்சொல்லீரடியேன்
மாதவன்றன்றுணையாநடந்தாட்டடங்குசூழ்புறவில்
போதுவண்டாடுசெம்மற்புனலாலிபுகுவர்கொலோ. (௪)

தாயெனையென்றிரங்காட்டடந்தோளிதனக்கமைந்த
மாயனைமாதவனைமதித்தென்னை * யகன்ற, விவள்
வேயனதோள்விசிறிப்பெடையன்னமெனநடந்து
போயினபூங்கொடியாள்புனலாலிபுகுவர்கொலோ. (௫)

என்றுணையென்றெடுத்தேற்கிறையேனுமிரங்கிற்றிலள்
தன்றுணையாயவென்றன்றனிமைக்குமிரங்கிற்றிலள்
வன்றுணைவானவர்க்காய்வரஞ்செற்றரங்கத்துறையும்
இன்றுணைவனொடும்போயெழிலாலிபுகுவர்கொலோ. (௬)

அன்னையுமத்தனுமென்றடியோமுக்கிரங்கிற்றிலள்
பின்னைதன்காதலன்றன்பெருந்தோணலம்பேணினளால்
மின்னையும்வஞ்சியையும்வென்றிலங்குமிடையாணடந்து
புன்னையுமன்னமுஞ்சூழ்புனலாலிபுகுவர்கொலோ. (௭)

முற்றிலும்பைங்கிளியும்பந்துமூசலும்பேசுகின்ற
சிற்றில்மென்பூவையும்விட்டகன்றசெழுங்கோதைதன்னைப்
பெற்றிலேன்முற்றிழையைப்பிறப்பிலிபின்னேநடந்து
மற்றெல்லாங்கைதொழப்போய்வயலாலிபுகுவர்கொலோ. (௮)

காவியங்கண்ணியெண்ணிற்கடிமாமலர்ப்பாவையொப்பாள்
பாவியேன்பெற்றமையாற்பணைத்தோளிபரக்கழிந்து
தூவிசேரன்னமன்னநடையாணெடுமாலொடும்போய்
வாவியந்தண்பணைசூழ்வயலாலிபுகுவர்கொலோ. (௯)

* தாய்மனம்நின்றிரங்கத்தனியேநெடுமாற்றுணையாப்
போயினபூங்கொடியாள்புனலாலிபுகுவவொன்று
காய்சினவேற்கலியனொலிசெய்தமிழ்மாலைபத்தும்
மேவியநெஞ்சுடையார்தஞ்சமாவது விண்ணுலகே. (௧0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

கள்வன்பண்டஞ்சுவனேதவன்முயன்றுணைஅன்னைமுற்றில்காவிதாய்மனந்தா

ஆ திருமொழி - உ௭ - க்கு - பாசுரம் - உ௭0.

---

* "யகன்றவன்பின்" எனவுமுண்டு.

## ௮ - வது. நந்தாவிளக்கு.

---

### திருநாங்கூர்மணிமாடக்கோயில்பெருமாள்விஷயம்.

*திருமணிமாடக்கோயிலிலேநின்றருளினவனை*
*நீயங்கேசென்று அநுபவியென்று தன் மனதுக்கு நியமிக்கிறார்.*

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தோடிராகம் - அடதாளம்.

* நந்தாவிளக்கேயளத்தற்கரியாய்
நரநாரணனேகருமாமுகில்போல்
எந்தா, யெமக்கேயருளாயெனநின்
றிமையோர்பரவுமிட, மெத்திசையும்
கந்தாரமந்தேனிசைபாடமாடே
களிவண்டுமிழற்றநிழற்றுதைந்து
மந்தாரநின்றுமணமல்குநாங்கூர்
மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. (௧)

முதலைத்தனிமாமுரண்டீரவன்று
முதுநீர்த்தடத்துச்செங்கண்வேழமுய்ய
விதலைத்தலைச்சென்றதற்கேயுதவி
வினைதீர்த்தவம்மானிடம், விண்ணணவும்
பதலைக்கபோதத்தொளிமாடநெற்றிப்
பவளக்கொழுங்காலபைங்காற்புறவம்
மதலைத்தலைமென்பெடைகூடுநாங்கூர்
மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. (௨)

கொலைப்புண்டலைக்குன்றமொன்றுய்யவன்று
கொடுமாமுதலைக்கிடர்செய்து, கொங்கார்
இலைப்புண்டரீகத்தவளின்பமன்போ
டணைந்திட்டவம்மானிட, மாளரியால்
அலைப்புண்டயானைமருப்புமகிலும்
மணிமுத்தும்வெண்சாமரையோடு, பொன்னி
மலைப்பண்டமண்டத்திரையுந்துநாங்கூர்
மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. (௩)

சிறையாருவணப்புள்ளொன்றேறியன்று
திசைநான்குநான்குமிரியச், செருவில்
கறையார்நெடுவேலரக்கர்மடியக்
கடல்சூழிலங்கைகடந்தானிடந்தான்

முறையால்வளர்க்கின்றமுத்தீயர்நால்வேத
 ஞாவேள்வியாறங்கரேழினிசையோர்
மறையோர்வணங்கப்புகழெய்துநாங்கூர்
 மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. (ச)

இழையாடுகொங்கைத்தலைநஞ்சமுண்டிட்
 டிளங்கன்றுகொண்டுவிளங்காயெறிந்து
தழைவாடவன்றாட்குருந்தம்மொசித்துத்
 தடந்தாமரைப்பொய்கைபுக்கானிடந்தான்
குழையாடவல்லிக்குலமாடமாடே
 குயில்கூவநீடுகொடிமாடமல்கும்
மழைபாடுசோலைமயிலாலுநாங்கூர்
 மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. (ரு)

பண்ணேர்மொழியாய்ச்சியரஞ்சவஞ்சப்
 பகுவாய்க்கழுதுக்கிரங்காதவள்தன்
உண்ணாமுலைமற்றவளாவியோடு
 முடனேசுவைத்தானிட, மோங்குபைந்தாள்
கண்ணார்கரும்பின்கழைதின்றுவைகிக்
 கழுநீரின்மூழ்கிச்செழுநீர்த்தடத்து
மண்ணேந்திளமேதிகள்வைகுநாங்கூர்
 மணிமாடக்கோயில்வணங்கென்மனனே.. (சு)

தளைக்கட்டவிழ்தாமரைவைகுபொய்கைத்
 தடம்புக்கடங்காவிடங்காலரவம்
இளைக்கத்திளைத்திட்டதனுச்சிதன்மே
 லடிவைத்தவம்மானிட, மாமதியம்
திளைக்குங்கொடிமாளிகைசூழ்தெருவிற்
 செழுமுத்துவெண்ணெற்கெனச்சென்று, முன்றில்
வளைக்கைநுளைப்பாவையர்மாறுநாங்கூர்
 மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. (எ)

துளையார்கருமென்குழலாய்ச்சியர்தந்
 துகில்வாரியுஞ்சிற்றிற்சிதைத்து, முற்றா
விளையார்விளையாட்டொடுகாதல்வெள்ளம்
 விளைவித்தவம்மானிடம், வேல்நெடுங்கண்
முளைவாளெயிற்றுமடவார்பயிற்று
 மொழிகேட்டிருந்துமுதிராதவின்சொல்
வளைவாயகிள்ளைமறைபாடுநாங்கூர்
 மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. (அ)

விளங்கனியைஇளங்கன்றுகொண்டுதிரவெறிந்து
வேல்நெடுங்கணாய்ச்சியர்கள்வைத்ததயிர்வெண்ணெய்
உளங்குளிரவமுதுசெய்திவ்வுலகுண்டகாளை
யுகந்தினிதுநாடோறுமருவியுறைகோயில்
இளம்படிநற்கமுகுகுலைத்தெங்குகொடிச்செந்நெ
லீன்கரும்புகண்வளரக்கால்தடவும்புனலால்
வளங்கொண்டபெருஞ்செல்வம்வளருமணிநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. (எ)

ஆறுதசினத்தின்மிகுநரகனுரமழித்த
வடலாழித்தடக்கையனலர்மகட்குமரற்கும்
கூறுகக்கொடுத்தருளுந்திருவுடம்பனிமையோர்
குலமுதல்வன்மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில்
மாறுதமலர்க்கமலஞ்செங்கழுநீர்ததும்பி
மதுவெள்ளமொழுகவயலுழவர்மடையடைப்ப
மாறுதபெருஞ்செல்வம்வளருமணிநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. (அ)

வங்கமலிதடங்கடலுள்வானவர்களோடு
மாமுனிவர்பலர்கூடிமாமலர்கடூவி
யெங்கள்தனிநாயகனேயெமக்கருளாயென்னு
மீசனவன்மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில்
செங்கயலும்வாளைகளுஞ்செந்நெலிடைகுதிப்பச்
சேலுகளுஞ்செழும்பணைசூழ்வீதிதொறுமிடைந்து
மங்குன்மதியகடுரிஞ்சுமணிமாடநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. (கூ)

* சங்குமலிதண்டுமுதற்சக்கரமுனேந்துந்
தாமரைக்கண்ணெடியபிரான்றானமருங்கோயில்
வங்கமலிகடலுலகின்மலிவெய்துநாங்கூர்
வைகுந்தவிண்ணகர்மேல்வண்டறையும்பொழில்சூழ்
மங்கையர்தந்தலைவன்மருவலர்தமுடல்துணிய
வாள்வீசும்பரகாலன்கலிகன்றிசொன்ன
சங்கமலிதமிழ்மாலைபத்திவைவல்லார்கள்
தரணியொடுவிசும்பாளுந்தன்மைபெறுவாறே.

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

சலந்திண்ணியவண்டங்கலைமின்பெண்மைவிளங்கனிஆறுவங்கம்சங்குதிரு,

ஆ திருமொழி - உக - க்கு - பாசுரம் - உகய.

## க0 - வது. திருமடந்தை.

திருஅரிமேயவிண்ணகரம் குடமாடுகூத்தப்பிரான்விஷயம்

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மோஹனராகம் - ஜம்பைதாளம்.

* திருமடந்தைமண்மடந்தையிருபாலுந்திகழத்
தீவினைகள்போயகலவடியவர்கட்கென்றும்
அருணடந்திவ்வேழுலகத்தவர்பணியவானோர்
அமர்ந்தேத்தவிருந்தவிடம், பெரும்புகழ்வேதியர்வாழ்
தருமிடங்கண்மலர்கண்மிகுகைதைகள்செங்கழுநீர்
தாமரைகள்தடங்கடொறுமிடங்கடொறுந்திகழ்
அருவிடங்கள்பொழிறழுவியெழிற்றிகழுநாங்கூ
ரரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. (க)

வென்றிமிகுநரகனுரமதுவழியவிசிறும்
விறலாழித்தடக்கையன்விண்ணவர்கட், கன்று
குன்றுகொடுகுரைகடலைக்கடைந்தமுதமளிக்குங்
குருமணியென்னாரமுதங்குலவியுறைகோயில்
என்றுமிகுபெருஞ்செல்வத்தெழில்விளங்குமறையோ
ரேழிசையுங்கேள்விகளுமியன்றபெருங்குணத்தோர்
அன்றுலகம்படைத்தவனேயனையவர்கணாங்கூ
ரரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. (உ)

உம்பருமிவ்வேழுலகுமேழ்கடலுமெல்லா
முண்டபிரானண்டர்கண்முன்கண்டுமகிழ்வெய்தக்
கும்பமிகுமதயானைமருப்பொசித்துக்கஞ்சன்
குஞ்சிபிடித்தடித்தபிரான்கோயின், மருங்கெங்கும்
பைம்பொனொடுவெண்முத்தம்பலபுன்னைகாட்டப்
பலங்கனிகள்தேன்காட்டப்படவரவேரல்குல்
அம்பனையகண்மடவார்மகிழ்வெய்துநாங்கூ
ரரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. (ங)

ஓடாதவாளரியினுருவதுகொண்டன்
றுலப்பின்மிகுபெருவரத்தவிரணியனைப்பற்றி
வாடாதவள்ளுகிராற்பிளந்தவன்றன்மகனுக்
கருட்செய்தான்வாழுமிடமல்லிகைசெங்கழுநீர்
சேடேறுமலர்ச்செருந்திசெழுங்கமுகம்பாளை
செண்பகங்கள்மணநாறும்வண்பொழிலினூடே
ஆடேறுவயலாலைப்புகைகமழுநாங்கூ
ரரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. (ச)

கண்டவர்தமனமகிழமாவலிதன்வேள்விக்
களவின்மிகுசிறுகுறளாய்மூவடியென்றிரந்திட்
டண்டமுமிவ்வலைகடலுமவனிகளுமெல்லா
மளந்தபிரானமருமிடம்வளங்கொள்பொழிலயலே
அண்டமுறுமுழவொலியும்வண்டினங்களொலியு
மருமறையினொலியுமடவார்சிலம்பினொலியும்
அண்டமுறுமலைகடலினொலிதிகழுநாங்கூ
ரரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. (௫)

வாணெடுங்கண்மலர்க்கூந்தன்மைதிலிக்காயிலங்கை
மன்னன்முடியொருபதுந்தோளிருபதும்போயுதிரத்
தாணெடுந்திண்சிலைவளைத்ததயரதன்சேயென்றன்
தனிச்சரண்வானவர்க்கரசுகருதுமிடந்தடமார்
சேணிடங்கொண்மலர்க்கமலஞ்சேல்கயல்கள்வாளை
செந்நெலொடுமடுத்தரியவுதிர்ந்தசெழுமுத்தம்
வாணெடுங்கண்கடைசியர்கள்வாருமணிநாங்கூ
ரரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. (௬)

தீமனத்தான்கஞ்சனதுவஞ்சனையிற்றிரியுந்
தேனுகனும்பூதனைதன்னாருயிருஞ்செகுத்தான்
காமனைத்தான்பயந்தகருமேனியுடையம்மான்
கருதுமிடம்பொருதுபுனற்றுறைதுறைமுத்துந்தி
நாமனத்தான்மந்திரங்கணால்வேதமைந்து
வேள்வியோடாறங்கநவின்றுகலைபயின், றங்
காமனத்துமறையவர்கள்பயிலுமணிநாங்கூ
ரரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. (௭)

கன்றதனால்விளவெறிந்துகனியுதிர்த்தகாளை
காமருசீர்முகில்வண்ணன்காலிகண்முன்காப்பான்
குன்றதனான்மழைதடுத்துக்குடமாடுகூத்தன்
குலவுமிடங்கொடிமதிள்கள்மாளிகைகோபுரங்கள்
துன்றுமணிமண்டபங்கள்சாலைகள்தூமறையோர்
தொக்கீண்டித்தொழுதியொடுமிகப்பயிலுஞ்சோலை
அன்றலர்வாய்மதுவுண்டங்களிமுரலுநாங்கூ
ரரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. (௮)

வஞ்சனையால்வந்தவடன்னுயிருண்டுவாய்த்த
தயிருண்டுவெண்ணெயமுதுண்டு, வலிமிக்க
கஞ்சனுயிரதுவுண்டிவ்வுலகுண்டகாளை
கருதுமிடங்காவிரிசந்தகில்கனகமுந்தி

மஞ்சுலவுபொழிலூடும்வயலூடும்வந்து
வளங்கொடுப்பமாமறையோர்மாமலர்கடுவி
அஞ்சலித்தங்கரிசரணென்றிறைஞ்சுமணிநாங்கூ
ரரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. (௯)

* சென்றுசினவிடையேழும்படவடர்த்துப்பின்னை
செவ்வித்தோள்புணர்ந்துகந்ததிருமால்தன்கோயில்
அன்றயனுமரன்சேயுமனையவர்கணாங்கூ
ரரிமேயவிண்ணகரமமர்ந்தசெழுங்குன்றைக்
கன்றிநெடுவேல்வலவன்மங்கையர்தங்கோமான்
கலிகன்றியொலிமாலையைந்திரெண்டுமூன்றும்
ஒன்றினொடுமொன்றுமிவைகற்றுவல்லாருலகத்
துத்தமர்கட்குத்தமராயும்பருமாவர்களே. (௧0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

திருவென்றிஉம்பரோடாதகண்டவாள் திமனம்கன்றுவஞ்சனைசென்றுபோது.

ஆ பத்து - ௩ - ல் - திருமொழி - ௩0 - க்கு - பாசுரம் - ௩00.

மூன்றும்பத்து முற்றியது.

---

## நான்காம்பத்து.

### க - வது. போதலர்ந்த.

திருத்தேவனார்தொகைதேவநாயகப்பெருமாள்விஷயம்.

கலிவ்ருத்தம்.

பைரவிராகம் - ஆதிதாளம்.

* போதலர்ந்தபொழிற்சோலைப்புறமெங்கும், பொருதிரைகள்
தாதுதிரவந்தலைக்குந்தடமண்ணித்தென்கரைமேல்
மாதவன்றானுறையுமிடம்வயனாங்கை, வரிவண்டு
தேதெனவென்றிசைபாடுந்திருத்தேவனார்தொகையே. (க)

யாவருமாயாவையுமாயெழில்வேதப்பொருள்களுமாய்
மூவருமாய்முதலாயமூர்த்தியமர்ந்துறையுமிடம்
மாவருந்திண்படைமன்னைவென்றிகொள்வார்மன்னுநாங்கைத்
தேவருஞ்சென்றிறைஞ்சுபொழிற்றிருத்தேவனார்தொகையே. (உ)

வானுமண்ணுமெற்றுள்ளபல்லுயிருந்
தானாயவெம்பெருமான்றலைவனமர்ந்துறையுமிடம்
ஆனாதபெருஞ்செல்வத்தருமறையோர்நாங்கைதன்னுள்
தேனாருமலர்ப்பொழில்சூழ்திருத்தேவனார்தொகையே. (௩)

இந்திரனுமிமையவருமுனிவர்களுமெழிலமர்ந்த
சந்தமலர்ச்சதுமுகனுங்கதிரவனுஞ்சந்திரனும்
எந்தையெமக்கருளெனநின்றருளுமிடமெழினாங்கை
சுந்தரநற்பொழில்புடைசூழ்திருத்தேவனார்தொகையே. (௪)

அண்டமுமிவ்வலைகடலுமவனிகளுங்குலவரையும்
உண்டபிரானுறையுமிடமொளிமணிசந்தகில்கனகந்
தெண்டிரைகள்வரத்திரட்டுந்திகழ்மண்ணித்தென்கரைமேல்
திண்டிறலார்பயினாங்கைத்திருத்தேவனார்தொகையே. (௫)

ஞாலமெல்லாமமுதுசெய்துநான்மறையுந்தொடராத
பாலகனாயாலிலையிற்பள்ளிகொள்ளும்பரமனிடஞ்
சாலிவளம்பெருகிவருந்தடமண்ணித்தென்கரைமேல்
சேலுகளும்வயனாங்கைத்திருத்தேவனார்தொகையே. (௬)

ஓடாதவாளரியினுருவாகி, யிரணியனை
வாடாதவள்ளுகிரால்பிளந்தவனுந்தமாலதிடம்
ஏடேறுபெருஞ்செல்வத்தெழின்மறையோர்நாங்கைதன்னுள்
சேடேறுபொழில்தழுவுதிருத்தேவனார்தொகையே. (௭)

வாராருமிளங்கொங்கைமைதிலியைமணம்புணர்வான்
காரார்திண்சிலையிறுத்ததனிக்காளைகருதுமிடம்
ஏராரும்பெருஞ்செல்வத்தெழின்மறையோர்நாங்கைதன்னுள்
சீராருமலர்ப்பொழில்சூழ்திருத்தேவனார்தொகையே. (௮)

கும்பமிகுமதயானைப்பாகனொடுங்குலைந்துவீழக்
கொம்பதனைப்பறித்தெறிந்தகூத்தனமர்ந்துறையுமிடம்
வம்பவிழுஞ்செண்பகத்தின்மணங்கமழுநாங்கைதன்னுள்
செம்பொன்மதிள்பொழில்புடைசூழ்திருத்தேவனார்தொகையே. (௯)

* காரார்ந்ததிருமேனிக்கண்ணனமர்ந்துறையுமிடஞ்
சீரார்ந்தபொழினாங்கைத்திருத்தேவனார்தொகைமேல்
கூரார்ந்தவேற்கலியன்கூறுதமிழ்பத்தும்வல்லார்
ஏரார்ந்தவைகுந்தத்திமையவரோடிருப்பாரே. (௧௦)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

போயாவவானுடிந்திரனண்டஞாலமோடாதவாரார்கும்பம்காரார்கம்பம்.

ஆ திருமொழி - ௩௧ - க்கு - பாசுரம் - ௩௧௦.

## உ - வது. கம்பமா.

### திருவண்புருஷோத்தமம் புருஷோத்தமப்பிரான்விஷயம்.

கலிவிருத்தம்.

கலியாணிராகம் - ரூபகதாளம்.

* கம்பமாகடலடைத்திலங்கைக்குமன்கதிர்முடியவைபத்தும்
அம்பினலறுத், தரசவன்றம்பிக்களித்தவனுறைகோயில்
செம்பலாநிரைசெண்பகமாதவிசூதகம்வாழைகள்சூழ்
வம்புலாங்கமுகோங்கியநாங்கூர்வண்புருடோத்தமமே. (௧)

பல்லவந்திகழ்பூங்கடம்பேறியக்காளியன்பணவரங்கில்
ஒல்லைவந்துறப்பாய்ந்தருநடஞ்செய்தவும்பர்கோனுறைகோயில்
நல்லவெந்தழன்மூன்றுநால்வேதமைவேள்வியோடாறங்கம்
வல்லவந்தணர்மல்கியநாங்கூர்வண்புருடோத்தமமே. (உ)

அண்டரானவர்வானவர்கோனுக்கென்றமைத்தசோறதுவெல்லாம்
உண்டு, கோநிரைமேய்த்தவைகாத்தவனுகந்தினிதுறைகோயில்
கொண்டலார்முழவில்குளிர்வார்பொழில்குலமயினடமாட
வண்டுதானிசைபாடிடுநாங்கூர்வண்புருடோத்தமமே. (௩)

பருங்கையானையின்கொம்பினைப்பறித்ததன்பாகனைச்சாடிப்புக்
கொருங்கமல்லரைக்கொன்றுபின்கஞ்சனையுதைத்தவனுறைகோயில்
கரும்பினூடுயர்சாலிகள்விளைதருகழனியின்மலிவாவி
மருங்கெலாம்பொழிலோங்கியநாங்கூர்வண்புருடோத்தமமே. (௪)

சாடுபோய்விழத்தாணிமிர்த்திசன்றன்படையொடுங்கிளையோடும்
ஓட, வாணனையிரந்தோட்களுந்துணித்தவனுறைகோயில்
ஆடுவான்கொடியகல்விசும்பணவிப்போய்ப்பகலவனொளிமறைக்கும்
மாடமாளிகைசூழ்தருநாங்கூர்வண்புருடோத்தமமே. (௫)

அங்கையாலடிமூன்றுநீரேற்றயனலர்கொடுதொழுதேத்தக்
கங்கைபோதரக்காநிமிர்த்தருளியகண்ணன்வந்துறைகோயில்
கொங்கைகோங்கவைகாட்டவாய்குமுதங்கள்காட்டமாபதுமங்கள்
மங்கைமார்முகங்காட்டிடுநாங்கூர்வண்புருடோத்தமமே. (௬)

உளையவொண்டிறற்பொன்பெயரோன்றனதுரம்பிளந்துதிரத்தை
அளையும், வெஞ்சினத்தரிபரிகீறியவப்பன்வந்துறைகோயில்
இளையமங்கையரிணையடிச்சிலம்பினேடெழில்கொள்பந்தடிப்போர்கை
வளையினின்றொலிமல்கியநாங்கூர்வண்புருடோத்தமமே. (௭)

அ

வாளையார்தடங்கண்ணுமைபங்கன்வன்சாபமற்றதுநீங்க
மூளையார்சிரத்தையமுன்னளித்தவெம்முகில்வண்ணனுறைகோயில்
பாளைவான்கமுகூடுயர்தெங்கின்வன்பழம்விழவெருவிப்போய்
வாளைபாய்தடஞ்சூழ்தருநாங்கூர்வண்புருடோத்தமமே. (அ)

இந்துவார்சடையீசனைப்பயந்தநான்முகனைத்தன்னெழிலாரும்
உந்திமாமலர்மீமிசைப்படைத்தவனுகந்தினிதுறைகோயில்
குந்திவாழையின்கொழுங்கனிநுகர்ந்துதன்குருளையைத்தழுவிப்போய்
மந்திமாம்பணைமேல்வைகுநாங்கூர்வண்புருடோத்தமமே. (கூ)

* மண்ணுளார்புகழ்வேதியர்நாங்கூர்வண்புருடோத்தமத்துள்
அண்ணல்சேவடிக்கீழடைந்துய்ந்தவனொலியன்னருண்மாரி
பண்ணுளார்தரப்பாடியபாடலிப்பத்தும்வல்லா, ருலகில்
எண்ணிலாதபேரின்பமுற்றிமையவரோடுங்கூடுவரே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

கம்பம்பல்லவம்அண்டர்பருங்கைசாடங்கைஉளைவாளைஇந்துமண்பேரணி.

ஆ திருமொழி - ௩உ - க்கு - பாசுரம் - ௩உ0.

## ௩ - வது. பேரணி.

### திருநாங்கூர்செம்பொன்செய் கோயில்பெருமாள்விஷயம்.

கலிவிருத்தம்.

பந்துவராளிராகம் - அடதாளம்.

* பேரணிந்துலகத்தவர்தொழுதேத்தும்பேரருளாளனெம்பிரானை
வாரணிமுலையாண்மலர்மகளோடுமண்மகளுமுடனிற்பச்
சீரணிமாடநாங்கைநன்னடுவுட்செம்பொன்செய்கோயிலினுள்ளே
காரணிமேகநின்றதொப்பானைக்கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. க

பிறப்பொடுமூப்பொன்றில்லவன்றன்னைப்பேதியாவின்பவெள்ளத்தை
இறப்பெதிர்காலக்கழிவுமானானையேழிசையின்சுவைதன்னைச்
சிறப்புடைமறையோர்நாங்கைநன்னடுவுட்செம்பொன்செய்கோயிலினுள்ளே
மறைப்பெரும்பொருளைவானவர்கோனைக்கண்டுநான்வாழ்ந்தொழிந்தேனே. உ

திடவிசும்பெரிநீர்த்திங்களுஞ்சுடருஞ்செழுநிலத்துயிர்களுமற்றும்
படர்பொருட்களுமாய்நின்றவன்றன்னைப்பங்கயத்தயனவனனைய
திடமொழிமறையோர்நாங்கைநன்னடுவுட்செம்பொன்செய்கோயிலினுள்ளே
கடனிறவண்ணன்றன்னைநானடியேன்கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே.

வசையறுகுறளாய்மாவலிவேள்வியில்மண்ணளவிட்டவன்றன்னை
அசைவறுமமரரடியிணைவணங்கவலைகடற்றுயின்றவம்மானைத்
திசைமுகனனையோர்நாங்கைநன்னடுவுட்செம்பொன்செய்கோயிலினுள்ளே
உயர்மணிமகுடஞ்சூடிநின்றானைக்கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே.

தீமனத்தரக்கர்திறலழித்தவனேயென்றுசென்றடைந்தவர்தமக்குத்
தாய்மனத்திரங்கியருளினைக்கொடுக்குந்தயரதன்மதலையைச்சயமே
தேமலர்ப்பொழில்சூழ்நாங்கைநன்னடுவுட்செம்பொன்செய்கோயிலினுள்ளே
காமனைப்பயந்தான்றன்னைநானடியேன்கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே.

மல்லைமாமுந்நீரதர்படமலையாலணைசெய்துமகிழ்ந்தவன்றன்னைக்
கல்லின்மீதியன்றகடிமதிளிலங்கைகலங்கவோர்வாளிதொட்டானைச்
செல்வநான்மறையோர்நாங்கைநன்னடுவுட்செம்பொன்செய்கோயிலினுள்ளே
அல்லிமாமலராட்டன்னொடுமடியேன்கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே.

வெஞ்சினக்களிறும்வில்லொடுமல்லும்வெகுண்டிறுத்தடர்த்தவன்றன்னைக்
கஞ்சனைக்காய்ந்தகாளையம்மானைக்கருமுகிற்றிருநிறத்தவனைச் [ளே
செஞ்சொனான்மறையோர்நாங்கைநன்னடுவுட்செம்பொன்செய் கோயிலினுள்
அஞ்சனக்குன்றநின்றதொப்பானைக்கண்டுகொண்டல்லலீர்ந்தேனே.

அன்றியவாணனாயிரந்தோளுந்துணியவன்றாழிதொட்டானை
மின்றிகழ்குடுமிவேங்கடமலைமேன்மேவியவேதநல்விளக்கைத்
தென்றிசைத்திலதமனையவர்நாங்கைச்செம்பொன்செய்கோயிலினுள்ளே
மன்றதுபொலியமகிழ்ந்துநின்றானைவணங்கிநான்வாழ்ந்தொழிந்தேனே.

களங்கனிவண்ணாகண்ணனேயென்றன்கார்முகிலேயெனநினைந்திட்
டுளங்கனிந்திருக்குமடியவர்தங்களுள்ளத்துளூறியதேனைத் [ளே
தெளிந்தநான்மறையோர்நாங்கை நன்னடுவுட்செம்பொன்செய் கோயிலினுள்
வளங்கொள்பேரின்பமன்னிநின்றானைவணங்கிநான்வாழ்ந்தொழிந்தேனே.

* தேனமர்சோலைநாங்கைநன்னடுவுட்செம்பொன்செய்கோயிலினுள்ளே
வானவர்கோனைக்கண்டமைசொல்லுமங்கையார்வாட்கலிகன்றி
ஊனமில்பாடலொன்பதோடொன்றுமொழிவின்றிக்கற்றுவல்லார்கள்
மானவெண்குடைக்கீழ்வையகமாண்டுவானவராகுவர்மகிழ்ந்தே. ௧௦

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

பேரணிசிறப்புத்திடவசைதீமல்லைவெஞ்சினமன்றிகளங்கனிதேன்மாற்று.

ஆ திருமொழி - ௩௩ - ச்ரு - பாசுரம் - ௩௩௦.

## ௪ - வது. மாற்றரசர்.

### திருநாங்கூர்திருத்தெற்றியம்பலப்பெருமாள்விஷயம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

செஞ்சுருட்டிராகம் - ரூபகதாளம்.

* மாற்றரசர்மணிமுடியுந்திறலுந்தேசும்
மற்றவர்தங்காதலிமார்குழையுந், தந்தை
காற்றளையுமுடன்கழலவந்துதோன்றிக்
கதநாகங்காத்தளித்தகண்ணர்கண்டீர்
நூற்றிதழ்கொளரவிந்தநுழைந்தபள்ளத்
திளங்கமுகின்முதுபாளைபகுவாய், நண்டின்
சேற்றளையில்வெண்முத்தஞ்சிந்துநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலே. (க)

பொற்றொடித்தோண்மடமகடன்வடிவுகொண்ட
பொல்லாதவன்பேய்ச்சிகொங்கைவாங்கிப்
பெற்றெடுத்ததாய்போலமடுப்பவாரும்
பேணாநஞ்சுண்டுகந்தபிள்ளைகண்டீர்
நெற்றொடுத்தமலர்நீலநிறைந்தசூழ
லிருஞ்சிறையவண்டொலியுநெடுங்கணார்தம்
சிற்றடிமேற்சிலம்பொலியுமிழற்றுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலே. (உ)

படலடைத்தசிறுகுரம்பைநுழைந்துபுக்குப்
பசுவெண்ணெய்பதமாரப்பண்ணைமுற்றும்
அடலடர்த்தவேற்கண்ணார்தோக்கைபற்றி
யலந்தலைமைசெய்துழலுமையன்கண்டீர்
மடலெடுத்தநெடுந்தெங்கின்பழங்கள்வீழ
மாங்கனிகள்திரட்டுருட்டாவருநீர்ப்பொன்னி
திடலெடுத்துமலர்சுமந்தங்கிழிபுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலே. (ங)

வாராருமுலைமடவாள்பின்னைக்காகி
வளைமருப்பிற்கடுஞ்சினத்துவன்றாளார்ந்த
காரார்திண்விடையடர்த்துவதுவையாண்ட
கருமுகில்போற்றிருநிறத்தென்கண்ணர்கண்டீர்
ஏராருமலர்ப்பொழில்கள்தழுவியெங்கு
மெழின்மதியைக்காற்றொடரவிளங்குசோதிச்
சீராருமணிமாடந்திகழுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலே. (ச)

கலையிலங்குமகலல்குற்கமலப்பாவை
கதிர்முத்தவெண்ணகையாட்கருங்கணுய்ச்சி
மூலையிலங்குமொளிமணிப்பூண்வடமுந்தேய்ப்ப
மூவாதவரைநெடுந்தோண்மூர்த்திகண்டீர்
மலையிலங்குகிளைச்சந்திமாடவீதி
யாடவரைமடமொழியார்முகத், திரண்டு
சிலைவிலங்கிமனஞ்சிறைகொண்டிருக்குநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலே. (௫)

தான்போலுமென்றெழுந்தான்றரணியாள
னதுகண்டுதரித்திருப்பா, னரக்கர்தங்கள்
கோன்போலுமென்றெழுந்தான்குன்றமன்ன
விருபதுதோளுடன்றுணித்தவொருவன்கண்டீர்
மான்போலுமென்னேக்கிற்செய்யவாயார்
மரதகம்போன்மடக்கிளியைக்கைமேற்கொண்டு
தேன்போலுமென்மழலைபயிற்றுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலே. (௬)

பொங்கிலங்குபுரிநூலுந்தோலுந்தாழப்
பொல்லாதகுறளுருவாய்ப்பொருந்தாவாணன்
மங்கலஞ்சேர்மறைவேள்வியதனுடபுக்கு
மண்ணகலங்குறையிரந்தமைந்தன்கண்டீர்
கொங்கலர்ந்தமலர்க்குழலார்கொங்கைதோய்ந்த
குங்குமத்தின்குழம்பளைந்தகோலந்தன்னால்
செங்கலங்கல்வெண்மணல்மேற்றவழுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலே. (௭)

சிலம்பினிடைச்சிறுபரல்போற்பெரியமேரு
திருக்குளம்பிற்கணகணப்பத்திருவாகாரம்
குலுங்க, நிலமடந்தைதனையிடந்துபுல்கிக்
கோட்டிடைவைத்தருளியவென்கோமான்கண்டீர்
இலங்கியநான்மறையனைத்துமங்கமாறு
மேழிசையுங்கேள்விகளுமெண்டிக்கெங்கும்
சிலம்பியநற்பெருஞ்செல்வந்திகழுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலே. (௮)

ஏழுலகுந்தாள்வரையுமெங்குமோடி
யெண்டிசையுமண்டலமுமண்டி, யண்டம்
மோழையெழுந்தாழிமிகுமூழிவெள்ளம்
முன்னகட்டிலொடுக்கியவெம்மூர்த்திகண்டீர்

ஊழிதொறூழிதொறுமுயர்ந்தசெல்வத்
தோங்கியநான்மறையனைத்துந்தாங்குநாவர்
சேழுயர்ந்தமணிமாடந்திகழுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலே. (கூ)

* சீரணிந்தமணிமாடந்திகழுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலைக்
கூரணிந்தவேல்வலவனாலிநாடன்
கொடிமாடமங்கையர்கோன்குறையலாளி
பாரணிந்ததொல்புகழான்கலியன்சொன்ன
பாமாலையிவையைந்துமைந்தும்வல்லார்
சீரணிந்தவுலகத்துமன்னராகிச்
சேண்விசும்பில்வானவராய்த்திகழ்வர்தாமே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

மாற்றுப்பொற்படல்வாரார்கலைதான்பொங்குசிலம்பேழ்சீரணி தூம்பு.

ஆ திருமொழி - ௩ச - க்கு - பாசுரம் - ௩ச0.

## ரு - வது தூம்புடை.

### திருமணிக்கூடப்பெருமாள்விஷயம்.

கலிவிருத்தம்.

பில்ஹரிராகம்-ஆதிதாளம்.

* தூம்புடைப்பனைக்கைவேழந்துயர்கெடுத்தருளி, மன்னு
காம்புடைக்குன்றமேந்திக்கடுமழைகாத்தவெந்தை
பூம்புனற்பொன்னிமுற்றும்புகுந்துபொன்வரண்ட, வெங்கும்
தேம்பொழில்கமழுநாங்கூர்த்திருமணிக்கூடத்தானே. (க)

கவ்வைவாளெயிற்றுவன்பேய்கதிர்முலைசுவைத், திலங்கை
வவ்வியவிடும்பைகூரக்கடுங்கணைதுரந்தவெந்தை
கொவ்வைவாய்மகளிர்கொங்கைக்குங்குமங்கழுவிப்போந்த
தெய்வநீர்கமழுநாங்கூர்த்திருமணிக்கூடத்தானே. (உ)

மாத்தொழின்மடங்கச்செற்றுமருதிறநடந்து, வன்றாள்
சேத்தொழிற்சிதைத்துப்பின்னைசெவ்வித்தோள்புணர்ந்தவெந்தை
நாத்தொழின்மறைவல்லார்கணயந்தறம்பயந்த, வண்கைந்
நீத்தொழிற்பயிலுநாங்கூர்த்திருமணிக்கூடத்தானே. (௩)

தாங்கருஞ்சினத்துவன்றாட்டடக்கைமாமருப்புவாங்கிப்
பூங்குருந்தொசித்துப்புள்வாய்பிளந்தெருதடர்த்தவெந்தை
மாங்கனிநுகர்ந்தமந்திவந்துவண்டிரிய, வாழைத்
தீங்கனிநுகருநாங்கூர்த்திருமணிக்கூடத்தானே. (௪)

கருமகளிலங்கையாட்டிப்பிலங்கொள்வாய்திறந்து, தன்மேல்
வருமவள்செவியுமூக்கும்வாளினாற்றடிந்தவெந்தை
பெருமகள்பேதைமங்கைதன்னொடும்பிரிவிலாத
திருமகள்மருவுநாங்கூர்த்திருமணிக்கூடத்தானே. (௫)

கெண்டையுங்குறளும்புள்ளுங்கேழலுமரியுமாவும்
அண்டமுஞ்சுடருமல்லாவாற்றலுமாயவெந்தை
ஒண்டிறற்றென்னனோடவடவரசோட்டங்கண்ட
திண்டிறலாளர்நாங்கூர்த்திருமணிக்கூடத்தானே. (௬)

குன்றமும்வானும்மண்ணுங்குளிர்புனற்றிங்களோடு
நின்றவெஞ்சுடருமல்லாநிலைகளுமாயவெந்தை
மன்றமும்வயலுங்காவுமாடமும்மணங்கொண், டெங்கும்
தென்றல்வந்துலவுநாங்கூர்த்திருமணிக்கூடத்தானே. (௭)

சங்கையுந்துணிவும்பொய்யுமெய்யுமித்தரணியோம்பும்
பொங்கியமுகிலுமல்லாப்பொருள்களுமாயவெந்தை
பங்கயமுகுத்ததேறல்பருகியவாளைபாயச்
செங்கயலுகளுநாங்கூர்த்திருமணிக்கூடத்தானே. (௮)

பாவமுமறமும்வீடுமின்பமுந்துன்பந்தானும்
கோபமுமருளுமல்லாக்குணங்களுமாயவெந்தை
மூவரிலெங்கள்மூர்த்தியிவனெனமுனிவரோடு
தேவர்வந்திறைஞ்சுநாங்கூர்த்திருமணிக்கூடத்தானே. (௯)

* திங்கள்தோய்மாடநாங்கூர்த்திருமணிக்கூடத்தானை
மங்கையர்தலைவன்வண்டார்க்கலியன்வாயொலிகள்வல்லார்
பொங்குநீருலகமாண்டுபொன்னுலகாண்டு, பின்னும்
வெங்கதிர்ப்பருதிவட்டத்தூடுபோய்விளங்குவாரே. (௧௦)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

தூம்புகவ்வைமாதாங்கருங்கெண்டைகுன்றம்சங்கைபாவம்திங்கள்தாவளம்.

ஆ. திருமொழி - ௩௫ - க்கு - பாசுரம் - ௩௫௦.

## ௬ - வது. தாவளந்து.

---

### திருக்காவளம்பாடி கோபாலஸ்வாமிவிஷயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மத்யமாவதிராகம் - ரூபகதாளம்.

* தாவளந்துலகமுற்றுந்தடமலர்ப்பொய்கைபுக்கு
நாவளநவின்றங்கேத்துநாகத்தின்னடுக்கந்தீர்த்தாய்
மாவளம்பெருகிமன்னுமறையவர்வாழும், நாங்கைக்
காவளம்பாடிமேயகண்ணனேகளைகணீயே. (க)

மண்ணிடந்தேனமாகிமாவலிவலிதொலைப்பான்
விண்ணவர்வேண்டச்சென்றுவேள்வியிற்குறையிரந்தாய்
துண்ணெனமாற்றார்தம்மைத்தொலைத்தவர்நாங்கைமேய
கண்ணனேகாவளந்தண்பாடியாய்களைகணீயே. (உ)

உருத்தெழுவாலிமார்பிலொருகணையுருவவோட்டிக்
கருத்துடைத்தம்பிக்கின்பக்கதிர்முடியரசளித்தாய்
பருத்தெழுபலவுமாவும்பழம்விழுந்தொழுகுநாங்கைக்
கருத்தனேகாவிளந்தண்பாடியாய்களைகணீயே. (௩)

முனைமுகத்தரக்கன்மாளமுடிகள்பத்தறுத்துவீழ்த், தாங்
கனையவற்கிளையவற்கேயரசளித்தருளினானே
சுனைகளிற்கயல்கள்பாயச்சுரும்புதேனுகருநாங்கைக்
கனைகழற்காவளந்தண்பாடியாய்களைகணீயே. (௪)

படவரவுச்சிதன்மேற்பாய்ந்துபன்னடங்கள்செய்து
மடவரல்மங்கைதன்னைமார்பகத்திருத்தினானே
தடவரைதங்குமாடத்தகுபுகழ்நாங்கைமேய
கடவுளேகாவளந்தண்பாடியாய்களைகணீயே. (௫)

மல்லரையட்டுமாளக்கஞ்சனைமலைந்துகொன்று
பல்லரசவிந்துவீழப்பாரதப்போர்முடித்தாய்
நல்லரண்காவினீழல்நறைகமழ்நாங்கைமேய
கல்லரண்காவளந்தண்பாடியாய்களைகணீயே. (௬)

மூத்தவற்கரசுவேண்டிமுன்புதூதெழுந்தருளி
மாத்தமர்பாகன்வீழமதகரிமருப்பொசித்தாய்
பூத்தமர்சோலையோங்கிப்புனல்பரந்தொழுகுநாங்கைக்
காத்தனேகாவளந்தண்பாடியாய்களைகணீயே. (௭)

ஏவிளங்கன்னிக்காகியிமையவர்கோனைச்செற்றுக்
காவளங்கடிதிறுத்துக்கற்பகங்கொண்டுபோந்தாய்
பூவளம்பொழில்கள்சூழ்ந்தபுரந்தரன்செய்தநாங்கைக்
காவளம்பாடிமேயகண்ணனேகளைகணீயே. (அ)

சந்தமாய்ச்சமயமாகிச்சமயமைம்பூதமாகி
அந்தமாயாதியாகியருமறையவையுமானாய்
மந்தமார்பொழில்கடோறுமடமயிலாலுநாங்கைக்
கந்தமார்காவளந்தண்பாடியாய்களைகணீயே. (கூ)

* மாவளம்பெருகிமன்னுமறையவர்வாழு, நாங்கைக்
காவளம்பாடிமேயகண்ணனைக்கலியன்சொன்ன
பாவளம்பத்தும்வல்லார்பார்மிசையரசராகிக்
கோவிளமன்னர்தாழக்குடைநிழற்பொலிவர்தாமே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

தாவளம்மன்னுருமுனைபடமல்லமூத்துஏவிளம்சந்தம்மாவளம்கண்ணார்.

ஆ திருமொழி - ௩௯ - க்கு - பாசுரம் - ௩௯0.

---

## எ - வது. கண்ணார்கடல்.

.......... ............

### திருவெள்ளக்குளம் கண்ணன்விஷயம்.

கலிவிருத்தம்.

தேசியராகம் - ஆதிதாளம்.

* கண்ணார்கடல்போற்றிருமேனிகரியாய்
நண்ணார்முனைவென்றிகொள்வார்மன்னுநாங்கூர்
திண்ணார்மதிள்சூழ்திருவெள்ளக்குளத்துள்
அண்ணா, வடியேனிடரைக்களையாயே. (க)

கொந்தார்துளபமலர்கொண்டணிவானே
நந்தாதபெரும்புகழ்வேதியர்நாங்கூர்
செந்தாமரைநீர்த்திருவெள்ளக்குளத்துள்
எந்தா, யடியேனிடரைக்களையாயே. (உ)

குன்றாற்குளிர்மாரிதடுத்துகந்தானே
நன்றாயபெரும்புகழ்வேதியர்நாங்கூர்
சென்றார்வணங்குந்திருவெள்ளக்குளத்துள்
நின்றாய், நெடியாயடியேனிடர்நீக்கே. (ங)

கானார்கரிகொம்பதொசித்தகளிறே
நானாவகைநல்லவர்மன்னியநாங்கூர்
தேனார்பொழில்சூழ்திருவெள்ளக்குளத்துள்
ஆனா, யடியேனுக்கருள்புரியாயே. (ச)

வேடார்திருவேங்கடமேயவிளக்கே
நாடார்புகழ்வேதியர்மன்னியநாங்கூர்
சேடார்பொழில்சூழ்திருவெள்ளக்குளத்தாய்
பாடாவருவேன்வினையாயினபாற்றே. (ரு)

கல்லாற்கடலையணைகட்டியுகந்தாய்
நல்லார்பலவேதியர்மன்னியநாங்கூர்ச்
செல்வா-திருவெள்ளக்குளத்துறைவானே
எல்லாவிடருங்கெடுமாறருளாயே. (சா)

கோலால்நிரைமேய்த்தவெங்கோவலர்கோவே
நாலாகியவேதியர்மன்னியநாங்கூர்
சேலார்வயல்சூழ்திருவெள்ளக்குளத்துள்
மாலே, யெனவல்வினைதீர்த்தருளாயே. (எ)

வாராகமதாகியிம்மண்ணையிடந்தாய்
நாராயணனேநல்லவேதியர்நாங்கூர்ச்
சீரார்பொழில்சூழ்திருவெள்ளக்குளத்துள்
ஆராவமுதே, யடியேற்கருளாயே. (அ)

பூவார்திருமாமகள்புல்கியமார்பா
நாவார்புகழ்வேதியர்மன்னியநாங்கூர்
தேவாதிருவெள்ளக்குளத்துறைவானே
ஆவாவடியானிவனென்றருளாயே. (கூ)

* நல்லன்புடைவேதியர்மன்னியநாங்கூர்ச்
செல்வன்திருவெள்ளக்குளத்துறைவானைக்
கல்லின்மலிதோட்கலியன்சொன்னமாலை
வல்லரெனவல்லவர்வானவர்தாமே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

கண்கொந்தகுன்றுகான்வேடுகல் கோல்வாராகம் பூவார்நல்லன்புகவள.

ஆ திருமொழி - ௩எ - க்கு - பாசுரம் - ௩எ0.

## அ - வது. கவளயானை.

### திருப்பார்த்தன்பள்ளி தாமரையாள்கேள்வன்விஷயம்.

தாயார்பாசுரம்.

கலிவிருத்தம்.

தன்யாசிராகம் - அடதாளம்.

* கவளயானைகொம்பொசித்தகண்ணனென்றும், காமருசீர்க்
குவளைமேகமன்னமேனிகொண்டகோனென்னானையென்றும்
தவளமாடநீடுநாங்கைத்தாமரையாள்கேள்வனென்றும்
பவளவாயாளென்மடந்தைபார்த்தன்பள்ளிபாடுவாளே. (க)

கஞ்சன்விட்டவெஞ்சினத்தகளிறடர்த்தகாளையென்றும்
வஞ்சமேவிவந்தபேயினுயிரையுண்டமாயனென்றும்
செஞ்சொலாளர்நீடுநாங்கைத்தேவதேவனென்றென்றோதிப்
பஞ்சியன்னமெல்லடியாள்பார்த்தன்பள்ளிபாடுவாளே. (உ)

அண்டர்கோனென்னானையென்றுமாயர்மாதர்கொங்குபுல்கு
செண்டனென்று, நான்மறைகள்தேடியோடுஞ்செல்வனென்றும்
வண்டுலவுபொழில்கொணாங்கைமன்னுமாயனென்றென்றோதிப்
பண்டுபோலன்றென்மடந்தைபார்த்தன்பள்ளிபாடுவாளே. (ங)

கொல்லையானாள்பரிசழிந்தாள்கோல்வளையார்தம்முகப்பே
மல்லைமுந்நீர்தட்டிலங்கைகட்டழித்தமாயனென்றும்
செல்வமல்குமறையோர்நாங்கைத்தேவதேவனென்றென்றோதிப்
பல்வளையாளென்மடந்தைபார்த்தன்பள்ளிபாடுவாளே. (ச)

அரக்கராவிமாளவன்றாழ்கடல்சூழிலங்கைசெற்ற
குரக்கரசனென்றுங்கோலவில்லியென்றும், மாமதியை
நெருக்குமாடநீடுநாங்கைநின்மலனென்றென்றோதிப்
பரக்கழிந்தாளென்மடந்தைபார்த்தன்பள்ளிபாடுவாளே. (ரு)

ஞாலமுற்றுமுண்டுமிழ்ந்தநாதனென்றும், நானிலஞ்சூழ்
வேலையன்னகோலமேனிவண்ணனென்றும், மேலெழுந்து
சேலுகளும்வயல்கொணாங்கைத்தேவதேவனென்றென்றோதிப்
பாலினல்லமென்மொழியாள்பார்த்தன்பள்ளிபாடுவாளே. (சு)

நாடியென்றனுள்ளங்கொண்டநாதனென்றும், நான்மறைகள்
தேடியென்றுங்காணமாட்டாச்செல்வனென்றுஞ், சிறைகொள்வண்டு
சேடுலவுபொழில்கணுங்கைத்தேவதேவனென்றென்றோதிப்
பாடகஞ்சேர்மெல்லடியாள்பார்த்தன்பள்ளிபாடுவாளே. (எ)

உலகமேத்துமொருவனென்று, மொண்சுடரோடும்பரெய்தா
நிலவுமாழிப்படையனென்றுநேசனென்றுந், தென்றிசைக்குத்
திலதமன்னமறையோர்நாங்கைத்தேவதேவனென்றென்றோதிப்
பலருமேசவென்மடந்தைபார்த்தன்பள்ளிபாடுவாளே. (அ)

கண்ணனென்றும்வானவர்கட்காதலித்துமலர்கடுவும்
எண்ணனென்று, மின்பனென்றுமேழுலகுக்காதியென்றும்
திண்ணமாடநீடுநாங்கைத்தேவதேவனென்றென்றோதிப்
பண்ணினன்னமென்மொழியாள்பார்த்தன்பள்ளிபாடுவாளே. (௯)

* பாருணல்லமறையோர்நாங்கைப்பார்த்தன்பள்ளிச்செங்கண்மாலை
வார்கொணல்லமுலைமடவாள்பாடலைத்தாய்மொழிந்தமாற்றம்
கூர்கொணல்லவேற்கலியன்கூறுதமிழ்பத்தும்வல்லார்
ஏர்கொணல்லவைகுந்தத்துளின்பநாளுமெய்துவாரே. (௧0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

கவளக்கஞ்சனண்டர்கோல்லை யரக்கர்ஞாலநாடியுலகம்கண்ணன் பாருள் நம்மை.

ஆ திருமொழி - ௩அ - க்கு - பாசுரம் - ௩அ0.

---

## ௯ - வது. நும்மைத்தொழு.

திருவிந்தளூர் பரிமளரங்கநாயகர்விஷயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கேதாரராகம்-ரூபகதாளம்.

* நும்மைத்தொழுதோம்நுந்தம்பணிசெய்திருக்குநும்மடியோம்
இம்மைக்கின்பம்பெற்றோமெந்தாயிந்தளூரீரே
எம்மைக்கடிதாக்கருமமருளியாவாவென்றிரங்கி
நம்மையொருகால்காட்டிநடந்தானுங்களுய்யோமே. (க)

சிந்தைதன்னுணீங்காதிருந்ததிருவேமருவினிய
மைந்தா, வந்தணாலிமாலேசோலைமழகளிறே
நந்தாவிளக்கின்சுடரேநறையூர்நின்றநம்பீ, யென்
எந்தாயிந்தளூராயடியேற்கிறைபுமிரங்காயே. (உ)

பேசுகின்றதிதுவேவையமீரடியாலளந்த
மூசிவண்டுமுரலுங்கண்ணிமுடியீ, நும்மைக்காணும்
ஆசையென்னுங்கடலில்வீழ்ந்திங்கயர்த்தோ, மயலாரும்
ஏசுகின்றதிதுவேகாணுமிந்தளூரீரே. (௩)

ஆசைவழுவாதேத்துமெமக்கிங்கிழுக்காய்த், தடியோர்க்குத்
தேசமறியவுமக்கேயாளாய்த்திரிகின்றோமுக்குக்
காசினொளியிற்றிகழும்வண்ணங்காட்டீரெம்பெருமான்
வாசிவல்லீரிந்தளூரீர்வாழ்ந்தேபோம்நீரே. (௪)

தீயெம்பெருமானீரெம்பெருமான்றிசையுமிருநிலனு
மா, யெம்பெருமானாகிநின்றாலடியோங்காணோமால்
தாயெம்பெருமான்றந்தைதந்தையாவீ, ரடியோமுக்
கேயெம்பெருமானல்லீரோநீரிந்தளூரீரே. (௫)

சொல்லாதொழியகில்லேனறிந்தசொல்லி, னும்மடியார்
எல்லாரோடுமொக்கவெண்ணியிருந்தீரடியேனை
நல்லாரறிவீர்தீயாரறிவீர்நமக்கிவ்வுலகத்து
எல்லாமறிவீரீதேயறியீரிந்தளூரீரே. (௬)

மாட்டீரானீர்பணிநீர்கொள்ளவெம்மைப்பணியறியா
வீட்டீ, ரிதனைவேறேசொன்னோமிந்தளூரீரே
காட்டீரானீர்நுந்தமடிக்கள்காட்டி, னுமக்கிந்த
நாட்டேவந்துதொண்டரானநாங்களுய்யோமே. (௭)

முன்னைவண்ணம்பாலின்வண்ணமுழுதுநிலைநின்ற
பின்னைவண்ணங்கொண்டல்வண்ணம்வண்ணமெண்ணுங்கால்
பொன்னின்வண்ணமணியின்வண்ணம்புரையுந்திருமேனி
இன்னவண்ணமென்றுகாட்டீரிந்தளூரீரே. (௮)

எந்தைதந்தைதம்மானென்றெமரேழளவும்
வந்துநின்றதொண்டரோர்க்கேவாசிவல்லீரால்
சிந்தைதன்னுண்முந்திநிற்றீர்சிறிதுந்திருமேனி
இந்தவண்ணமென்றுகாட்டீரிந்தளூரீரே. (௯)

* ஏரார்பொழில்சூழிந்தளூரிலெந்தைபெருமானைக்
காரார்புறவின்மங்கைவேந்தன்கலியனொலிசெய்த
சீராரின்சொன்மாலைகற்றுத்திரிவாருலகத்து
ஆரா, ரவரேயமரர்க்கென்றுமமரராவாரே. (௧0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

நும்சிந்தைபேசாசைதீசொல்லாமாட்டீர்முன் எந்தை ஏராராய்ச்சியர்.

ஆ திருமொழி - ௩௯ - க்கு - பாசுரம் - ௩௯0.

## க0 - வது. ஆய்ச்சியர்.

### திருவெள்ளியங்குடிகோலவில்லிராமன்விஷயம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மோஹனராகம் - அடதாளம்.

* ஆய்ச்சியரழைப்பவெண்ணெயுண்டொருகாலாலிலைவளர்ந்தவெம்பெருமான்
பேய்ச்சியைமுலையுண்டிணைமருதிறுத்துப்பெருநிலமளந்தவன்கோயில்
காய்த்தநீள்கமுகுங்கதலியுந்தெங்குமெங்குமாம்பொழில்களினடுவே
வாய்த்தநீர்பாயுமண்ணியின்றென்பாற்றிருவெள்ளியங்குடியதுவே. க

ஆநிரைமேய்த்தன்றலைகடலடைத்திட்டரக்கர்தன்சிரங்களையுருட்டிக்
கார்நிரைமேகங்கலந்ததோருருவக்கண்ணனார்கருதியகோயில்
பூநிரைச்செருந்திப்புன்னைமுத்தரும்பிப்பொதும்பிடைவரிவண்டுமிண்டித்
தேனிரைத்துண்டங்கின்னிசைமுரலுந்திருவெள்ளியங்குடியதுவே.

கடுவிடமுடையகாளியன்றடத்தைக்கலக்கிமுன்னலைக்கழித்,தவன்றன்
படமிறப்பாய்ந்துபன்மணிசிந்தப்பன்னடம்பயின்றவன்கோயில்
படவரவல்குற்பாவைநல்லார்கள்பயிற்றியநாடகத்தொலிபோய்
அடைபுடைதழுவியண்டநின்றதிருந்திருவெள்ளியங்குடியதுவே. ந

கறவைமுன்காத்துக்கஞ்சனைக்காய்ந்தகாளமேகத்திருவுருவன்
பறவைமுன்னுயர்த்துப்பாற்கடற்றுயின்றபரமனார்பள்ளிகொள்கோயில்
துறைதுறைதோறும்பொன்மணிசிதறுந்தொகுதிரைமண்ணியின்றென்பால்
செறிமணிமாடக்கொடிகதிரணவுந்திருவெள்ளியங்குடியதுவே. (ச)

பாரினையுண்டுபாரினையுமிழ்ந்துபாரதங்கையெறிந், தொருகால்
தேரினையூர்ந்துதேரினைத்துரந்தசெங்கண்மாற்சென்றுறைகோயில்
ஏர்நிரைவயலுள்வாளைகள்மறுகியெமக்கிடமன்றிதென்றெண்ணிச்
சீர்மலிபொய்கைசென்றணைகின்றதிருவெள்ளியங்குடியதுவே. (ரு)

காற்றிடைப்பூளைகரந்தெனவரந்தையுறக்கடலரக்கர்தஞ்சேனை
கூற்றிடைச்செல்லக்கொடுங்கணைதுரந்தகோலவில்லிராமன்றன்கோயில்
ஊற்றிடைநின்றவாழையின்கனிகளூழ்த்துவீழ்ந்தனவுண்டுமண்டிச்
சேற்றிடைக்கயல்களுகள்திகழ்வயல்சூழ்திருவெள்ளியங்குடியதுவே.

ஒள்ளியகருமஞ்செய்வனென்றுணர்ந்தமாவலிவேள்வியிற்புக்குத்
தெள்ளியகுறளாய்மூவடிகொண்டுதிக்குறவளர்ந்தவன்கோயில்
அள்ளியம்பொழில்வாயிருந்துவாழ்குயில்களரியரியென்றவையழைப்ப
வெள்ளியார்வணங்கவிரைந்தருள்செய்வான்திருவெள்ளியங்குடியதுவே.

முடியுடையமரர்க்கிடர்செய்யுமசுரர்தம்பெருமானை, யன்றரியாய்
மடியிடைவைத்துமார்பைமுன்கிண்டமாயனார்மன்னியகோயில்
படியிடைமாடத்தடியிடைத்தூணிற்பதித்தபன்மணிகளினொளியால்
வெடிபகலிரவென்றறிவரிதாயதிருவெள்ளியங்குடியதுவே. (அ)

குடிகுடியாகக்கூடிநின்றமரர்குணங்களேபிதற்றிநின்றேத்த
அடியவர்க்கருளியரவணைத்துயின்றவாழியானமர்ந்துறைகோயில்
கடியுடைக்கமலமடியிடைமலரக்கரும்பொடுபெருஞ்செந்நெலசைய
வடிவுடையன்னம்பெடையொடுஞ்சேரும்வயல்வெள்ளியங்குடியதுவே.

* பண்டுமுன்னேனமாகியன்றொருகாற்பாரிடந்தெயிற்றினிற்கொண்டு
தெண்டிரைவருடப்பாற்கடற்றுயின்றதிருவெள்ளியங்குடியானை
வண்டறைசோலைமங்கையர்தலைவன்மானவேற்கலியன்வாயொலிகள்
கொண்டிவைபாடுந்தவமுடையார்களாள்வரிக்குரைகடலுலகே. (க0)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆய்ச்சிஆறிரைகடுக்கறவைபார்காற்றெள்ளியமுடிகுடிபண்டறிவது.

ஆ பத்து - ச - ல் - திருமொழி - ச0 - க்கு - பாசுரம் - ச00.

நான்காம்பத்துமுற்றியது.

---

## ஐந்தாம்பத்து.

### க - வது அறிவதரி.

திருப்புள்ளம்பூதங்குடி வல்விலிராமன்விஷயம்.

அறிவதற்குதுர்ப்பலனானவாமனன்வாஸஸ்தானம்புள்ளம்பூதங்குடியென்கிறார்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பந்துவராளிராகம் - ரூபகதாளம்.

* அறிவதரியானனைத்துலகுமுடையானென்னையாளுடையான்
குறியமாணுருவாகியகூத்தன்மன்னியமருமிடம்
நறியமலர்மேற்சுரும்பார்க்கவெழிலார்மஞ்ஞைநடமாடப்
பொறிகொள்சிறைவண்டிசைபாடும்புள்ளம்பூதங்குடிதானே. (க)

கள்ளக்குறளாய்மாவலியைவஞ்சித்துலகைப்படுத்துப்
பொள்ளைக்கரத்தபோதகத்தின்றுன்பந்தவிர்த்தபுனிதனிடம்
பள்ளச்செறுவிற்கயலுகளப்பழனக்கழனியதனுட்போய்ப்
புள்ளுப்பிள்ளைக்கிரைதேடும்புள்ளம்பூதங்குடிதானே. (உ)

மேவாவரக்கர்தென்னிலங்கைவேந்தன்வீயச்சரந்துரந்து
மாவாய்பிளந்துமல்லடர்த்துமருதஞ்சாய்த்தமாலதிடம்
காவார்தெங்கின்பழம்வீழக்கயல்கள்பாயக்குருகிரியும்
பூவார்கழனியெழிலாரும்புள்ளம்பூதங்குடிதானே. (௩)

வெற்பால்மாரிபழுதாக்கிவிறல்வாளரக்கர்தலைவன்றன்
வற்பார்திரடோள்நான்குந்துணித்தவல்விலிராமனிடம்
கற்பார்புரிசைசெய்குன்றங்கவினார்கூடமாளிகைகள்
பொற்பார்மாடமெழிலாரும்புள்ளம்பூதங்குடிதானே. (௪)

மையார்தடங்கண்கருங்கூந்தலாய்ச்சிமறையவைத்ததயிர்
நெய்யார்பாலோடமுதுசெய்தநேமியங்கைமாயனிடஞ்
செய்யாராரலிரைகருதிச்செங்காலாரைசென்றணையும்
பொய்யாநாவின்மறையாளர்புள்ளம்பூதங்குடிதானே. (௫)

மின்னினன்னநுண்மருங்குல்வேயேய்தடந்தோண்மெல்லியற்காய்
மன்னுசினத்தமழவிடைகளேழன்றடர்த்தமாலதிடம்
மன்னுமுதுநீரரவிந்தமலர்மேல்வரிவண்டிசைபாடப்
புன்னைபொன்னேய்தாதுதிர்க்கும்புள்ளம்பூதங்குடிதானே. (௬)

குடையாவிலங்கல்கொண்டேந்திமாரிபழுதாநிரைகாத்துச்
சடையானோடவடல்வாணன்றடந்தோடுணித்ததலைவனிடம்
குடியாவண்டுகொண்டுண்ணக்கோலநீலமட்டுகுக்கும்
புடையார்கழனியெழிலாரும்புள்ளம்பூதங்குடிதானே. (௭)

கறையார்நெடுவேன்மறமன்னர்வீயவிசயன்றேர்கடவி
இறையான்கையினிறையாதமுண்டநிறைத்தவெந்தையிடம்
மறையான்முத்தீயவைவளர்க்குமன்னுபுகழால்வண்மையால்
பொறையான்மிக்கவந்தணர்வாழ்புள்ளம்பூதங்குடிதானே. (௮)

துன்னிமண்ணும்விண்ணாடுந்தோன்றாதிருளாய்மூடியநாள்
அன்னமாகியருமறைகளருளிச்செய்தவமலனிடம்
மின்னுசோதிநவமணியும்வேயின்முத்தின்சாமரையும்
பொன்னும்பொன்னிகொணர்ந்தலைக்கும்புள்ளம்பூதங்குடிதானே. ௯

* கற்றாமறித்துக்காளியன்றன்சென்னிநடுங்கநடம்பயின்ற
பொற்றாமரையாட்டன்கேள்வன்புள்ளம்பூதங்குடிதன்மேல்
கற்றார்பரவுமங்கையர்கோன்காரார்புயற்கைக்கலிகன்றி
சொற்றானீரைந்திவைபாடச்சோரநில்லாதுயர்தானே. (௧0)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

அறிவதுகள்ளமேவாவெற்பால்மையார்மின்னின்குடைகறைதுன்னிகற்றார்தா[ம்

ஆ திருமொழி - ௪௧ - க்கு - பாசுரம் - ௪௧0.

## உ - வது. தாந்தம்.

### திருக்கூடலூர்வையங்காத்தபெருமாள்விஷயம்.

ஆஸ்ரிதபரதந்த்ரனாய் மஹாராஜாவான க்ருஷ்ணனூர்போலே நிரதிசய போக்யமாயிருந்தது கூடலூரென்கிற திவ்யதேசமென்று அத்தை யநுபவிக்கிறார்.

கலிவிருத்தம்.

அபரூபராகம் - ஆதிதாளம்.

* தாந்தம்பெருமையறியார், தூது
வேந்தர்க்காயவேந்தனூர்போல்
காந்தள்விரல்மென்கலைநன்மடவார்
கூந்தல்கமழுங்கூடலூரே. (க)

செறுந்திண்டிமிலேறுடைய, பின்னை
பெறுந்தண்கோலம்பெற்றானூர்போல்
நறுந்தண்டீன்றேனுண்டவண்டு
குறிஞ்சிபாடுங்கூடலூரே. (உ)

பிள்ளையுருவாய்த்தயிருண், டடியேன்
உள்ளம்புகுந்தவொருவனூர்போல்
கள்ளநாரைவயலுட், கயல்மீன்
கொள்ளைகொள்ளுங்கூடலூரே. (ங)

கூற்றேருருவிற்குறளாய், நிலநீர்
ஏற்றானெந்தைபெருமானூர்போல்
சேற்றேருழவர்கோதைப்போதூண்
கோற்றேன்முரலுங்கூடலூரே. (ச)

தொண்டர்பரவச்சுடர்சென்றணவ
அண்டத்தமருமடிகளூர்போல்
வண்டலலையுட்கெண்டைமிளிரக்
கொண்டலதிருங்கூடலூரே. (ரு)

தக்கன்வேள்வித்தகர்த்ததலைவன்
துக்கந்துடைத்ததுணைவனூர்போல்
எக்கலிடுநுண்மணல்மே, லெங்கும்
கொக்கின்பழம்வீழ்கூடலூரே. (சா)

கருந்தண்கடலுமலையுமுலகும்
அருந்துமடிகளமருமூர்போல்
பெருந்தண்முல்லைப்பிள்ளையோடிக்
குருந்தந்தழுவுங்கூடலூரே. (எ)

கலைவாழ்பிணையோடணையுந், திருநீர்
மலைவாழெந்தைமருவுமூர்போல்
இலைதாழ்தெங்கின்மேனின், றிளநீர்
குலைதாழ்கிடங்கின்கூடலூரே. (அ)

பெருகுகாதலடியேனுள்ளம்
உருகப்புகுந்தவொருவரூர்போல்
அருகுகைதைமலரக், கெண்டை
குருகென்றஞ்சுங்கூடலூரே. (கூ)

* காவிப்பெருநீர்வண்ணன், கண்ணன்
மேவித்திகழுங்கூடலூர்மேல்
கோவைத்தமிழாற்கலியன்சொன்ன
பாவைப்பாடப்பாவம்போமே. (கo)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.
ஜீயர்திருவடிகளேஶரணம்.
தாம்செறுபிள்ளைகூற்றுதொண்டர்தக்கன்கருந்தண்கலைபெருகுகாவிவென்றி.
ஆ திருமொழி - சஉ - க்கு - பாசுரம் - சஉo.

---

## ரு - வது. வென்றி.

திருவெள்ளறைபுண்டரீகாக்ஷன்விஷயம்.

ஆஶ்ரிதரக்ஷணத்துக்காகத்திருவெள்ளறையில்நின்றஸ்வாமி ஆஶ்ரிதவிரோதிநிவர்த்தகனென்றதிருவடிகளிற்கைங்கர்யத்தைநாம்பெறும்படி க்ருபைபண்ணவேணுமென்கிறார்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.
சங்கராபரணராகம் - ஆதிதாளம்.

* வென்றிமாமழுவேந்திமுன்மண்மிசைமன்னரைமூவெழுகால்
கொன்றதேவ,நின்குரைகழற்றொழுவதோர்வகையெனக்கருள்புரியே
மன்றில்மாம்பொழினுழைதந்துமல்லிகைமௌவலின்போதலர்த்தி
தென்றல்மாமணங்கமழ்தரவருதிருவெள்ளறைநின்றானே. (க)

வசையினான்மறைகெடுத்தவம்மலரயற்கருளிமுன்பரிமுகமாய்
இசைகொள்வேதநூலென்றிவைபயந்தவனேயெனக்கருள்புரியே
உயர்கொண்மாதவிப்போதொடுலாவியமாருதம்வீதியின்வாய்த்
திசையெல்லாங்கமழும்பொழில்சூழ்திருவெள்ளறைநின்றானே. (உ)

வெய்யனாயுலகேழுடனலைந்தவனுடலகமிருபிளவாக்
கையில்நீளுகிர்ப்படையதுவாய்த்தவனேயெனக்கருள்புரியே
மையினார்தருவராலினம்பாயவண்டடத்திடைக்கமலங்கள்
தெய்வநாறுமொண்பொய்கைகள்சூழ்திருவெள்ளறைநின்றானே. (௩)

வாம்பரியுகமன்னர்தம்முயிர்செகவைவர்கட்கரசளித்த
காம்பினார்திருவேங்கடப்பொருப்பநின்காதலையருளெனக்கு
மாம்பொழிற்றளிர்கோதியமடக்குயில்வாயதுதுவர்ப்பெய்த
தீம்பலங்கனித்தேனதுநுகர்திருவெள்ளறைநின்றானே. (௪)

மானவேலொண்கண்மடவரல்மண்மகளழுங்கமுந்நீர்ப்பரப்பில்
ஏனமாகியன்றிருநிலமிடந்தவனேயெனக்கருள்புரியே
கானமாமுல்லைக்கழைக்கரும்பேறிவெண்முறுவற்செய்தலர்கின்ற
தேனின்வாய்மலர்முருகுகுக்குந்திருவெள்ளறைநின்றானே. (௫)

பொங்குநீண்முடியமரர்கடொழுதெழவமுதினைக்கொடுத்தளிப்பான்
அங்கோராமையதாகியவாதிநின்னடிமையையருளெனக்கு
தங்குபேடையோடூடியமதுகரந்தையலார்குழலணைவான்
திங்கடோய்சென்னிமாடஞ்சென்றணைதிருவெள்ளறைநின்றானே. ௬

ஆறினோடொருநான்குடைநெடுமுடியரக்கன்றன்சிரமெல்லாம்
வேறுவேறாகவில்லதுவளைத்தவனேயெனக்கருள்புரியே
மாறில்சோதியமரதகப்பாசடைத்தாமரைமலர்வார்ந்த
தேறல்மாந்திவண்டின்னிசைமுரல்திருவெள்ளறைநின்றானே. (௭)

முன்னிவ்வேழுலகுணர்வின்றியிருண்மிகவும்பர்கடொழுதேத்த
அன்னமாகியன்றருமறைபயந்தவனேயெனக்கருள்புரியே
மன்னுகேதகைசூதகமென்றிவைவனத்திடைச்சுரும்பினங்கள்
தென்னவென்றுவண்டின்னிசைமுரல்திருவெள்ளறைநின்றானே. (௮)

ஆங்குமாவலிவேள்வியிலிரந்துசென்றகலிடமுழுதினையும்
பாங்கினாற்கொண்டபரமநிற்பணிந்தெழுவேனெனக்கருள்புரியே
ஓங்குபிண்டியின்செம்மலரேறிவண்டுழிதர, மாவேறித்
தீங்குயின்மிழற்றும்படப்பைத்திருவெள்ளறைநின்றானே. (௯)

* மஞ்சுலாமணிமாடங்கள்சூழ்திருவெள்ளறையதன்மேய
அஞ்சனம்புரையுந்திருவுருவனையாதியையமுதத்தை
நஞ்சுலாவியவேல்வலவன்கலிகன்றிசொல்லையிரண்டும்
எஞ்சலின்றிநின்றேத்தவல்லாரிமையோர்க்கரசாவர்களே. (௧0)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

வென்றிவசைவெய்யவாம்பரிமானவேல்பொங்காறுமுன்னுங்குமஞ்சுந்தி.

ஆ திருமொழி - ௪௩ - க்கு - பாசுரம் - ௪௩0.

## ச - வது. உந்தி.

### திருவரங்கம் ஸ்ரீரங்கநாதன் விஷயம்.

சதுர்முகஸ்ருஷ்டாவான நித்யஸூரிநாதனுக்குத்தென்னரங்கம்வாஸஸ்தாந மென்றுநிற்பர்களென்று இனியராகிறார்.

நெடிலடியாசிரியவிருத்தம்.

ஸஹானராகம் - அடதாளம்.

* உந்திமேல்நான்முகனைப்படைத்தானுலகுண்டவன்
எந்தைபெம்மா, னிமையோர்கள்தாதைக்கிடமென்பரால்
சந்திநோடுமணியுங்கொழிக்கும்புனற்காவிரி
அந்திபோலுநிறத்தார்வயல்சூழ்தென்னரங்கமே. (க)

வையமுண்டாலிலைமேவுமாயன்மணிநீண்முடிப்
பைகொளாகத்தணையான்பயிலுமிடமென்பரால்
தையனல்லார்குழன்மாலையுமற்றவர்தடமுலைச்
செய்யசாந்துங்கலந்திழிபுனல்சூழ்தென்னரங்கமே. (உ)

பண்டிவ்வையமளப்பான்சென்றுமாவலிகையில்நீர்
கொண்ட, வாழித்தடக்கைக்குறளனிடமென்பரால்
வண்டுபாடும்மதுவார்புனல்வந்திழிகாவிரி
அண்டநாறும்பொழில்சூழ்ந்தழகார்தென்னரங்கமே. (ங)

விளைத்தவெம்போர்விறல்வாளரக்கனகர்பாழ்பட
வளைத்தவல்விற்றடக்கையவனுக்கிடமென்பரால்
துளைக்கையானைமருப்புமகிலுங்கொணர்ந்துந்தி, முன்
திளைக்குஞ்செல்வப்புனற்காவிரிசூழ்தென்னரங்கமே. (ச)

வம்புலாங்கூந்தன்மண்டோதரிகாதலன்வான்புக
அம்புதன்னான்முனிந்தவழகனிடமென்பரால்
உம்பர்கோனுமுலகேழும்வந்தீண்டிவணங்கு, நற்
செம்பொனருமதிள்சூழ்ந்தழகார்தென்னரங்கமே. (ரு)

கலையுடுத்தவகலல்குல்வன்பேய்மகள்தாயென
முலைகொடுத்தாளுயிருண்டவன்வாழுமிடமென்பரால்
குலையெடுத்தகதலிப்பொழிலூடும்வந்துந்தி, முன்
அலையெடுக்கும்புனற்காவிரிசூழ்தென்னரங்கமே. (சு)

கஞ்சனெஞ்சுங்கடுமல்லருஞ்சகடமுங்காலினால்
துஞ்சவென்றசுடராழியான்வாழுமிடமென்பரால்
மஞ்சுசேர்மாளிகைநீடகிற்புகையும், மறையோர்
செஞ்சொல்வேள்விப்புகையுங்கமழுந்தென்னரங்கமே. (எ)

ஏனமீனாமையோடரியுஞ்சிறுகுறளுமாய்த்
தானுமாயதரணித்தலைவனிடமென்பரால்
வானுமண்ணுநிறையப்புகுந்தீண்டிவணங்கு, நல்
தேனும்பாலுங்கலந்தன்னவர்சேர்தென்னரங்கமே. (அ)

சேயனென்றுமிகப்பெரியனுண்ணேர்மையனாய, இம்
மாயையையாருமறியாவகையானிடமென்பரால்
வேயின்முத்துமணியுங்கொணர்ந்தார்புனற்காவிரி
ஆயபொன்மாமதிள்சூழ்ந்தழகாயதென்னரங்கமே. (கூ)

* அல்லிமாதரமருந்திருமார்பனரங்கத்தைக்
கல்லின்மன்னுமதிள்மங்கையர்கோன்கலிகன்றிசொல்
நல்லிசைமாலைகணாலிரண்டுமிரண்டுமுடன்
வல்லவர்தாமுலகாண்டுபின்வானுலகாள்வரே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.
ஜீயர்திருவடிகளேஶரணம்.

உந்திவையம்பண்டுவிளைத்தவம்புங்கலைக்கஞ்சன்ஏனம்சேயனல்லிவெருவு.

ஆ திருமொழி-சச-க்கு-பாசுரம்-சச0.

## ரு - வது. வெருவாதாள்.

இதுவுமது.

தாயார்பாசுரம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

காம்போதிராகம் - ஆதிதாளம்.

* வெருவாதாள்வாய்வெருவிவேங்கடமேவேங்கடமேயென்கின்றாளால்
மருவாளாலென்குடங்கால்வாணெடுங்கண்டுயின்மறந்தாள்,வண்டார்கொண்ட
லுருவாளன்வானவர்தமுயிராளனொலிதிரைநீர்ப்பௌவங்கொண்ட [ல்
திருவாள, னென்மகளைச்செய்தனகளெங்ஙனநான்சிந்திக்கேனே. (க)

கலையாளாவகலல்குற்கனவளையுங்கையாளாவென்செய்கேனான்
விலையாளாவடியேனைவேண்டுதியோவேண்டாயோவென்னும், மெய்ய
மலையாளன்வானவர்தந்தலையாளன்மராமரமேழெய்தவென்றிச்
சிலையாள, னென்மகளைச்செய்தனகளெங்ஙனநான்சிந்திக்கேனே. (உ)

மானாயமென்னோக்கிவாணெடுங்கண்ணீர்மல்கும்வளையுஞ்சோரும்
தேனாயநறுந்துழாயலங்கலின்றிறம்பேசியுறங்காள்காண்மின்
கானாயன்கடிமனையிற்றயிருண்டுநெய்பருகநந்தன்பெற்ற
ஆனாய, னென்மகளைச்செய்தனகளம்மனைமீரறிகிலேனே. (ங)

தாய்வாயிற்சொற்கேளாள்தன்னாயத்தோடணையாள்தடமென்கொங்கை
யே, யாரச்சாந்தணியாளெம்பெருமான்திருவரங்கமெங்கேயென்னும்
பேய்மாயமுலையுண்டிவ்வுலகுண்டபெருவயிற்றன்பேசினங்காய்
மாமாயனென்மகளைச்செய்தனகண்மங்கைமீர்மதிக்கிலேனே. (ச)

பூண்முலைமேற்சாந்தணியாள்பொருகயற்கண்மையெழுதாள்பூவைபேணாள்
ஏணறியாளெத்தனையுமெம்பெருமான்திருவரங்கமெங்கேயென்னும்
நாண்மலராளாயகனாய்நாமறியவாய்ப்பாடிவளர்ந்தநம்பி
ஆண்மகனாயென்மகளைச்செய்தனகளம்மனைமீரறிகிலேனே. (ரு)

தாதாடுவனமாலைத்தாரானோவென்றென்றேதளர்ந்தாள்காண்மின்
யாதானுமொன்றுரைக்கிலெம்பெருமான்திருவரங்கமென்னும், பூமேல்
மாதாளன்குடமாடிமதுசூதன்மன்னர்க்காய்முன்னஞ்சென்ற
தூதாள, னென்மகளைச்செய்தனகளெங்ஙனநான்சொல்லுகேனே. சா

வாராளுமிளங்கொங்கைவண்ணம்வேறாயினவாறெண்ணா, ளெண்ணில்
பேராளன்பேரல்லாற்பேசாளிப்பெண்பெற்றேனென்செய்கேனான்
தாராளன்றண்குடந்தைநகராளனைவர்க்காயமரிலுற்ற
தேராள, னென்மகளைச்செய்தனகளெங்ஙனநான்செப்புகேனே. (எ)

உறவாதுமிலளென்றென்றொழியாதுபலரேசுமலராயிற்றால்
மறவாதேயெப்பொழுதுமாயவனேமாதவனேயென்கின்றாளால்
பிறவாதபேராளன்பெண்ணாளன்மண்ணாளன்விண்ணோர்தங்கள்
அறவாள, னென்மகளைச்செய்தனகளம்மனைமீரறிகிலேனே. (அ)

பந்தோடுகழன்மருவாள்பைங்கிளியும்பாலூட்டாள்பாவைபேணாள்
வந்தானோதிருவரங்கன்வாரானோவென்றென்றேவளையுஞ்சோரும்
சந்தோகன்பௌழியனைந்தழலோம்புதயித்திரியன்சாமவேதி
அந்தோவந்தென்மகளைச்செய்தனகளம்மனைமீரறிகிலேனே. (கூ)

* சேலுகளும்வயற்புடைசூழ்திருவரங்கத்தம்மானைச்சிந்தைசெய்த
நீலமலர்க்கண்மடவாளிறைவழிவைத்தாய்மொழிந்தவதனை, நேரார்
காலவேற்பரகாலன்கலிகன்றியொலிமாலைகற்றுவல்லார்
மாலைசேர்வெண்குடைக்கீழ்மன்னவராய்ப்பொன்னுலகில்வாழ்வர்தாமே.

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

வெருவுகலைமான்தாய்பூண்தாதாடுவாராளுறவுபந்துசேல் கைம்மானம்.

ஆ திருமொழி - சரு - க்கு - பாசுரம் - சருo.

## சு - வது. கைம்மானம்.

~~~~~~~~~~

### திருத்தென்னரங்கம் ஸ்ரீரங்கநாதன்விஷயம்.

விடாய்த்தவிடத்திலே தண்ணீர் கொடுப்பாரைப்போலே ஆர்த்தரானவவ்விடத்திலே காட்சி கொடுக்கக் கண்டநுபவிக்கிறார்.

கலிவிருத்தம்.

பைரவிராகம் - ரூபகதாளம்.

※ கைம்மானமழகளிற்றைகடற்கிடந்தகருமணியை
மைம்மானமரதகத்தைமறையுரைத்ததிருமாலை
எம்மானையெனக்கென்றுமினியானைப்பனிகாத்த
அம்மானை, யான்கண்டதணிநீர்த்தென்னரங்கத்தே. (க)

பேரானைக்குறுங்குடியெம்பெருமானைத், திருத்தண்கா
ஊரானைக்கரம்பனூருத்தமனை, முத்திலங்கு
காரார்திண்கடலேழுமலையேழிவ்வுலகேழுண்டு
ஆராதென்றிருந்தானைக்கண்டதுதென்னரங்கத்தே. (உ)

ஏனாகியுலகிடந்தன்றிருநிலனும்பெருவிசும்பும்
தானாயபெருமானைத்தன்னடியார்மனத்தென்றும்
தேனாகியமுதாகித்திகழ்ந்தானைமகிழ்ந், தொருகால்
ஆனாயனானானைக்கண்டதுதென்னரங்கத்தே. (௩)

வளர்ந்தவனைத்தடங்கடலுள்வலியுருவிற்றிரிசகடம்
தளர்ந்துதிரவுதைத்தவனைத்தரியா, தன்றிரணியனைப்
பிளந்தவனைப்பெருநிலமீரடிநீட்டிப்பண்டொருநாள்
அளந்தவனை, யான்கண்ட தணிநீர்த்தென்னரங்கத்தே. (௪)

நீரழலாய்நெடுநிலனாய்நின்றானை, யன்றரக்கன்
ஊரழலாலுண்டானைக்கண்டார்பின்காணாமே
பேரழலாய்ப்பெருவிசும்பாய்ப்பின்மறையோர்மந்திரத்தின்
ஆரழலாலுண்டானைக்கண்டதுதென்னரங்கத்தே. (௫)

தஞ்சினத்தைத்தவிர்த்தடைந்தார்தவநெறியைத்தரியாது
கஞ்சனைக்கொன்றன்றுலகமுண்டுமிழ்ந்தகற்பகத்தை
வெஞ்சினத்தகொடுந்தொழிலோன்விசையுருவையசைவித்த
வஞ்சிறைப்புட்பாகனையான்கண்டதுதென்னரங்கத்தே. (௬)

சிந்தனையைத்தவநெறியைத்திருமாலைப்பிரியாது
வந்தெனதுமனத்திருந்தவடமலையை, வரிவண்டார்
கொந்தலர்ந்தபொழிற்கோவலுலகளப்பானடிநிமிர்த்த
வந்தணனையான்கண்டதணிநீர்த்தென்னரங்கத்தே. (௭)
~~~~~~~~~~

துவரிந்தவுடையவர்க்குந் தூய்மையிலாச்சமணர்க்கும்
அவர்கட்கங்கருளில்லாவருளானைத், தன்னடைந்த
எமர்கட்குமடியேற்குமெம்மாற்குமெம்மனைக்கும்
அமரர்க்கும்பிரானாரைக்கண்டதுதென்னரங்கத்தே. (அ)

பொய்வண்ணமனத்தகற்றிப்புலனைந்துஞ்செலவைத்து
மெய்வண்ணநினைந்தவர்க்குமெய்ந்நின்றவித்தகனை
மைவண்ணங்கருமுகில்போற்றிகழ்வண்ணமரதகத்தின்
அவ்வண்ணவண்ணனையான்கண்டதுதென்னரங்கத்தே. (கூ)

* ஆமருவிநிரைமேய்த்தவணியரங்கத்தம்மானைக்
காமருசீர்க்கலிகன்றியொலிசெய்தமலிபுகழ்சேர்
நாமருவுதமிழ்மாலைநாலிரண்டோடிரண்டினையும்
தாமருவிவல்லார்மேற்சாராதீவினைதானே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

கைம்மான்பேரோனுகிவளர்ந்தநீர்தம்சிந்தனைதுவரிபொய்ஆமருவிபண்டை.

ஆ திருமொழி - சகூ - க்கு - பாசுரம் - சகூ0.

---

## எ - வது. பண்டை.

திருவரங்கமாநகரம் ஸ்ரீரங்கநாதன்விஷயம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சாவேரிராகம்-ஆதிதாளம்.

*பண்டைநான்மறையும்வேள்வியுங்கேள்விப்பதங்களும்பதங்களின்பொருளும்
பிண்டமாய்விரிந்தபிறங்கொளியனலும்பெருகியபுனலொடுநிலனும்
கொண்டல்மாருதமுங்குரைகடலேழுமேழுமாமலைகளும்விசும்பும்
அண்டமுந்தானாய்நின்றவெம்பெருமானரங்கமாநகரமர்ந்தானே. (க)

இந்திரன்பிரமனீசனென்றிவர்களெண்ணிற்பல்குணங்களேயியற்ற
தந்தையுந்தாயுமக்களுமிக்கசுற்றமுஞ்சுற்றிநின்றகலாப்
பந்தமும்,பந்தமறுப்பதோர்மருந்தும்பான்மையும்பல்லுயிர்க்கெல்லாம்
அந்தமும்வாழ்வுமாயவெம்பெருமானரங்கமாநகரமர்ந்தானே. (உ)

மன்னுமாநிலனுமலைகளுங்கடலும்வானமுந்தானவருலகும்
துன்னுமாயிருளாய்த்துலங்கொளிசுருங்கித்தொல்லைநான்மறைகளுமறையப்
பின்னும்வானவர்க்குமுனிவர்க்குநல்கிப்பிறங்கிருணிறங்கெட, வொருநாள்
அன்னமாயன்றங்கருமறைபயந்தானரங்கமாநகரமர்ந்தானே. (ங)

மாயிருங்குன்றமொன்றுமத்தாகமாசுணமதனொடுமளவிப்
பாயிரும்பௌவம்பகடுவிண்டலறப்படுதிரைவிசும்பிடைப்படரச்
சேயிருவிசும்புந்திங்களுஞ்சுடருந்தேவருந்தாமுடன்றிசைப்ப
ஆயிரந்தோளாலலைகடற்கடைந்தானரங்கமாநகரமர்ந்தானே. (ச)

எங்ஙனேயுய்வர்தானவர்நினைந்தாலிரணியனிலங்குபூணகலம்
பொங்குவெங்குருதிபொன்மலைபிளந்துபொழிதருமருவியொத்திழிய
வெங்கண்வாளெயிற்றோர்வெள்ளிமாவிலங்கல்விண்ணுறக்கனல்விழித்தெழுந்த
தங்ஙனேயொக்கவரியுருவானானரங்கமாநகரமர்ந்தானே. (ரு)

ஆயிரங்குன்றஞ்சென்றதொக்கனையவடல்புரையெழிறிகழ்திரடோள்
ஆயிரந்துணியவடன்மழுப்பற்றிமற்றவனகல்விசும்பணைய
ஆயிரம்பெயராலமரர்சென்றிறைஞ்சவறிதுயிலலைகடனடுவே
ஆயிரஞ்சுடர்வாயரவணைத்துயின்றானரங்கமாநகரமர்ந்தானே. (சு)

சுரிகுழற்கனிவாய்த்திருவினைப்பிரித்தகொடுமையிற்கடுவிசையரக்கன்
எரிவிழித்திலங்குமணிமுடிபொடிசெய்திலங்கைபாழ்படுப்பதற்கெண்ணி
வரிசிலைவளையவடுசரந்துரந்துமறிகடனெறிபட, மலையால்
அரிகுலம்பணிகொண்டலைகடலடைத்தானரங்கமாநகரமர்ந்தானே.

ஊழியாயோமத்துச்சியாயொருகாலுடையதேரொருவனா, யுலகில்
சூழிமால்யானைத்துயர்கெடுத்திலங்கைமலங்கவன்றடுசரந்துரந்து
பாழியான்மிக்கபார்த்தனுக்கருளிப்பகலவனொளிகெடப், பகலே
ஆழியாலன்றங்காழியைமறைத்தானரங்கமாநகரமர்ந்தானே. (அ)

பேயினார்முலையூண்பிள்ளையாயொருகாற்பெருநிலம்விழுங்கி, யதுமிழ்ந்த
ஆயனாய்மாலாயாலிலைவளர்ந்துமணிமுடிவானவர்தமக்குச்
சேயனா, யடியேற்கணியனாய்வந்தென்சிந்தையுள்வெந்துயரறுக்கும்
ஆயனாயன்றுகுன்றமொன்றெடுத்தானரங்கமாநகரமர்ந்தானே. (கூ)

*பொன்னுமாமணியுமுத்தமுஞ்சுமந்துபொருதிரைமாநதிபுடைசூழ்ந்
தன்னமாடுலவுமலைபுனற்சூழ்ந்தவரங்கமாநகரமர்ந்தானை
மன்னுமாமாடமங்கையர்தலைவன்மானவேற்கலியன்வாயொலிகள்
பன்னியபனுவல்பாடுவார்நாளும்பழவினைபற்றறுப்பாரே. (கo)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

பண்டைஇந்திரன்மன்னுமாயிரும்எங்ஙனுயிரம்சுரியூழிபேய்பொன்ஏழை.

ஆ திருமொழி - சஎ - க்கு - பாசுரம் - சஎo.

## அ - வது. ஏழையேதலன்.

### இதுவுமது.

விஷயசபலத்தையும் சாத்ரவமும் நிக்ருஷ்டஜந்மத்தையுமுடைய குஹப்பெருமாளை இவற்றைநினையாதே தயைபண்ணி மற்றுமவனுக்கு விசேஷ கடாக்ஷத்தைமேலே ப்ரசரிக்கவிட்டு பிராட்டியையுன்தோழியென்றும் என் தம்பியென்றுஞ்சொல்லி அவ்வளவில்விடாதே சந்தோஷத்தோடே நீ எனக்கு ப்ராணசகன்கிடாய் நீ இங்கிருவென்று அவனை ஆதரித்து நீ சொன்னசொற்கள் மனதிற்பட்டு உன்திருவடிகளை ஆஸ்ரயித்தேனென்கிறார்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தன்யாசிராகம் - ஆதிதாளம்.

* ஏழையேதலன்கீழ்மகனென்னு
திரங்கிமற்றவற்கின்னருள்சுரந்து
மாழைமான்மடநோக்கியுன்றோழி
யும்பியெம்பியென்றொழிந்திலை, புகந்த
தோழனீயெனக்கிங்கொழியென்ற
சொற்கள்வந்தடியேன்மனத்திருந்திட
ஆழிவண்ணநின்னடியிணையடைந்தே
னணிபொழிற்றிருவரங்கத்தம்மானே. (க)

வாதமாமகன்மற்கடம்விலங்கு
மற்றோர்சாதியென்றொழிந்திலை, புகந்து
காதலாதரங்கடலினும்பெருகச்செய்
தகவினுக்கில்லைகைம்மாறென்று
கோதில்வாய்மையினுயொடுமுடனே
யுண்பனுனென்றவொண்பொரு, ளெனக்கும்
ஆதல்வேண்டுமென்றடியிணையடைந்தே
னணிபொழிற்றிருவரங்கத்தம்மானே. (உ)

கடிகொள்பூம்பொழிற்காமருபொய்கை
வைகுதாமரைவாங்கியவேழம்
முடியும்வண்ணமோர்முழுவலிமுதலை
பற்றமற்றதுநின்சரணினைப்பக்
கொடியவாய்விலங்கினுயிர்மலங்கக்
கொண்டசீற்றமொன்றுண்டுளதறிந்து, துன்
அடியனேனும்வந்தடியிணையடைந்தே
னணிபொழிற்றிருவரங்கத்தம்மானே. (ங)

நஞ்சுசோர்வதோர்வெஞ்சினவரவம்
  வெருவிவந்துநின்சரணெனச்சரணாய்
நெஞ்சிற்கொண்டுநின்னஞ்சிறைப்பறவைக்
  கடைக்கலங்கொடுத்தருள்செய்ததறிந்து
வெஞ்சொலாளர்கணமன்றமர்கடியர்
  கொடியசெய்வனவுள, வதற்கடியேன்
அஞ்சிவந்துநின்னடியிணையடைந்தே
  னணிபொழிற்றிருவரங்கத்தம்மானே, (ச)

மாகமாநிலமுழுதும்வந்திறைஞ்சும்
  மலரடிக்கண்டமாமறையாளன்
தோகைமாமயிலன்னவரின்பந்
  துற்றிலாமையிலத்தவிங்கொழிந்து
போகநீயெய்திப்பின்னுநம்மிடைக்கே
  போதுவாயென்றபொன்னருளெனக்கும்
ஆகவேண்டுமென்றடியிணையடைந்தே
  னணிபொழிற்றிருவரங்கத்தம்மானே. (ரு)

மன்னுநான்மறைமாமுனிபெற்ற
  மைந்தனைமதியாதவெங்கூற்றன்
தன்னையஞ்சி, நின்சரணெனச்சரணாய்த்
  தகவிற்காலனையுகமுனிந்தொழியாப்
பின்னையென்றுநின்றிருவடிப்பிரியா
  வண்ணமெண்ணியபேரருளெனக்கும்
அன்னதாகுமென்றடியிணையடைந்தே
  னணிபொழிற்றிருவரங்கத்தம்மானே. (சு)

ஓதுவாய்மையுமுவனியப்பிறப்பு
  முனக்குமுன்றந்தவந்தணனொருவன்
காதலென்மகன்புகலிடங்காணேன்
  கண்டுநீதருவாயெனக்கென்று
கோதில்வாய்மையினானுனைவேண்டிய
  குறைமுடித்தவன்சிறுவனைக்கொடுத்தாய்
ஆதலால்வந்துன்னடியிணையடைந்தே
  னணிபொழிற்றிருவரங்கத்தம்மானே. (எ)

வேதவாய்மொழியந்தணனொருவ
  னெந்தைநின்சரணென்னுடைமனைவி
காதன்மக்களைப்பயத்தலுங்காணாள்
  கடியதோர்தெய்வங்கொண்டொளிக்குமென்றழைப்ப
ஏதலார்முன்னேயின்னருளவற்குச்
  செய்துன்மக்கள்மற்றிவரென்றுகொடுத்தாய்
ஆதலால்வந்துன்னடியிணையடைந்தே
  னணிபொழிற்றிருவரங்கத்தம்மானே. (அ)

துளங்குநீண்முடியரசர்தங்குரிசில்
தொண்டைமன்னவன்றிண்டிறலொருவற்
குளங்கொளன்பினோடின்னருட்சுரந்
தங்கொடுநாழிகையேழுடனிருப்ப
வளங்கொண்மந்திரமற்றவற்கருளிச்
செய்தவாறடியேனுமறிந், துலகம்
அளந்தபொன்னடியேயடைந்துய்ந்தே
னணிபொழிற்றிருவரங்கத்தம்மானே. (கூ)

* மாடமாளிகைசூழ்திருமங்கை
மன்னனொன்னலர்தங்களைவெல்லும்
ஆடன்மாவலவன்கலிகன்றி
யணிபொழிற்றிருவரங்கத்தம்மானை
நீடுதொல்புகழாழிவல்லானை
எந்தையைநெடுமாலைநினைந்த
பாடல்பத்திவைபாடுமின்றொண்டீர்
பாடநும்முடைப்பாவம்நில்லாவே. (கo)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஏழைவாதம்கடிநஞ்சமாகமன்னுதுவேதம் துளங்குமாடங்கை.

ஆ திருமொழி - சஅ - ச்சு - பாசுரம் - சஅo.

---

## கூ - வது· கையிலங்கு.

---

திருப்பேர்நகர் அப்பக்குடத்தான்விஷயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அடாணாராகம் - ஜம்பைதாளம்.

* கையிலங்காழி * சங்கன்கருமுகிற்றிருநிறத்தன்
பொய்யிலன்மெய்யன்றன்றாளடைவரேலடிமையாக்கும்
செய்யலர்கமலமோங்குசெறிபொழிற்றென்றிருப்பேர்ப்
பையரவணையான்நாமம்பரவிநானுய்ந்தவாறே. (க)

வங்கமார்கடல்களேழுமலையும்வானகமுமற்றும்
அங்கண்மாஞாலமெல்லாமமுதுசெய்துமிழ்ந்தவெந்தை
திங்கண்மாமுகிலணவுசெறிபொழிற்றென்றிருப்பேர்
எங்கண்மாலிறைவன்நாமமேத்திநானுய்ந்தவாறே. (உ)

---

* "சங்கம்" என்றும் பாடமுண்டு.

ஒருவனையுந்திப்பூமேலோங்குவித், தாகந்தன்னால்
ஒருவனைச்சாபநீக்கியும்பாரொளன்றுவிட்டான்
பெருவளைமதில்கள்சூழ்ந்தபெருநகரரவணைமேல்
கருவளைவண்ணன் * றென்பேர்கருதிநானுய்ந்தவாறே. (ங)

ஊனமர்தலையொன்றேந்தியுலகெல்லாந்திரியுமீசன்
ஈனமர்சாபநீக்காயென்னவொண்புனலையீந்தான்
தேனமர்பொழில்கள்சூழ்ந்தசெறிவயற்றென்திருப்பேர்
வானவர்தலைவன்நாமம்வாழ்த்திநானுய்ந்தவாறே. (ச)

வக்சரன்வாய்முன்கீண்டமாயனேயென்றுவானோர்
புக்கரண்தந்தருளாயென்னப்பொன்னாகத்தானை
நக்கரியுருவமாகிநகங்கிளர்ந்திடந்துகந்த
சக்கரச்செல்வன்றென்பேர்தலைவன்றாளடைந்துய்ந்தேனே. (ரு)

விலங்கலாற்கடலடைத்துவிளங்கிழைபொருட்டு, வில்லால்
இலங்கைமாநகர்க்கிறைவனிருபதுபுயந்துணித்தான்
நலங்கொளுன்மறைவல்லார்களோத்தொலியேத்தக்கேட்டு
மலங்குபாய்வயற்றிருப்பேர்மருவிநான்வாழ்ந்தவாறே. (சு)

வெண்ணெய்தானமுதுசெய்யவெகுண்டுமத்தாய்ச்சியோச்சிக்
கண்ணியார்குறுங்கயிற்றாற்கட்டவிட்டென்றிருந்தான்
திண்ணமாமதில்கள்சூழ்ந்ததென்றிருப்பேருள், வேலை
வண்ணனார்நாமநாளுமவாய்மொழிந்துய்ந்தவாறே. (எ)

அம்பொனாருலகமேழுமறியவாய்ப்பாடிதன்னுள்
கொம்பனார்பின்னைகோலங்கூடுதற்கேறுகொன்றான்
செம்பொனார்மதில்கள்சூழ்ந்ததென்றிருப்பேருண், மேவும்
எம்பிரான்நாமநாளுமேற்றிநானுய்ந்தவாறே. (அ)

நால்வகைவேதமைந்துவேள்வியாறங்கம்வல்லார்
மேலைவானவரின்மிக்கவேதியராதிகாலம்
சேலுகள்வயற்றிருப்பேர்ச்செங்கண்மாலோடும்வாழ்வார்
சீலமாதவத்தர்சிந்தையாளியென்சிந்தையானே. (கூ)

* வண்டறைபொழிற்றிருப்பேர்வரியரவணையிற்பள்ளி
கொண், டுறைகின்றமாலைக்கொடிமதிண்மாடமங்கை
திண்டிறற்றோட்கலியன்செஞ்சொலான்மொழிந்தமாலை
கொண்டிவைபாடியாடக்கூடுவர்நீள்விசும்பே. (கம)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

கைவங்கமொருவனூன்வக்ரன்விலங்கல்வெண்ணெயம்பொன்நால்வகை வண்டறைதீது.

ஆ திருமொழி - சக - க்கு - பாசுரம் சகம.

---

* " தன்பேர் " என்றும் பாடம்.

## ௧௦ - வது. தீதறு.

### நந்திபுரவிண்ணகரம்நாதன்விஷயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சுருட்டிராகம் - ஜம்பைதாளம்.

* தீதறுநிலத்தொடெரிகாலினொடுநீர்கெழுவிசும்புமவையாய்
மாசறுமனத்தினொடுறக்கமொடிறக்கையவையாயபெருமான்
தாய்செறவுளைந்துதயிருண்டுகுடமாடுதடமார்வர்தகைசேர்
நாதனுறைகின்றநகர்நந்திபுரவிண்ணகரநண்ணுமனமே. (௧)

உய்யும்வகையுண்டுசொனசெய்யிலுலகேழுமொழியாமைமுனநாள்
மெய்யினளவேயமுதுசெய்யவலவையனவன்மேவுநகர்தான்
மையவரிவண்டுமதுவுண்டுகிளையோடுமலர்கிண்டியதன்மேல்
நைவளநவிற்றுபொழினந்திபுரவிண்ணகரநண்ணுமனமே. (௨)

உம்பருலகேழுகடலேழுமலையேழுமொழியாமைமுனநாள்
தம்பொன்வயிறாரளவுமுண்டவையுமிழ்ந்ததடமார்பர்தகைசேர்
வம்புமலர்கின்றபொழில்பைம்பொன்வருதும்பிமணிகங்குல்வயல்சூழ்
நம்பனுறைகின்றநகர்நந்திபுரவிண்ணகரநண்ணுமனமே. (௩)

பிறையினொளியெயிறிலகமுறுகியெதிர்பொருதுமெனவந்தவசுரர்
இறைகளவைநெறுநெறெனவெறியவவர்வயிறழலநின்றபெருமான்
சிறைகொண்மயில்குயில்பயிலமலர்களுகவளிமுரலவடிகொணெடுமால்
நறைசெய்பொழின்மழைதவழுநந்திபுரவிண்ணகரநண்ணுமனமே. ௪

மூளவெரிசிந்திமுனிவெய்தியமர்செய்துமெனவந்தவசுரர்
தோளுமவர்தாளுமுடியோடுபொடியாகநொடியாமளவெய்தான்
வாளும்வரிவில்லும்வளையாழிகதைசங்கமிவையங்கையுடையான்
நாளுமுறைகின்றநகர்நந்திபுரவிண்ணகரநண்ணுமனமே. (௫)

தம்பியொடுதாமொருவர்தன்றுணைவிகாதல்துணையாகமுனநாள்
வெம்பியெரிகானகமுலாவுமவர்தாமினிதுமேவுநகர்தான்
கொம்புகுதிகொண்டுகுயில்கூவமயிலாலுமெழிலார்புறவுசேர்
நம்பியுறைகின்றநகர்நந்திபுரவிண்ணகரநண்ணுமனமே. (௬)

தந்தைமனமுந்துதுயர்நந்தவிருள்வந்தவிறல்நந்தன்மதலை
எந்தையிவனென்றமரர்கந்தமலர்கொண்டுதொழநின்றநகர்தான்
மந்தமுழவோசைமழையாகவெழுகார்மயில்களாடுபொழில்சூழ்
நந்திபணிசெய்தநகர்நந்திபுரவிண்ணகரநண்ணுமனமே. (௭)

எண்ணிலினைவெப்தியினியில்லையிறையென்றுமுனியாளர்திருவார்
பண்ணின்மலிகீதமொடுபாடியவராடலொடுகூடவெழிலார்
மண்ணிலிதுபோலநகரில்லையெனவானவர்கடாமலர்கடூய்
நண்ணியுறைகின்றநகர்நந்திபுரவிண்ணகரநண்ணுமனமே. (அ)

வங்கமலிபௌவமதுபாமுகடினுச்சிபுகமிக்கபெருநீர்
அங்கமழியாரவனதாணைதலைசூடுமடியாரறிதியேல்
பொங்குபுனலுந்துமணிகங்குலிருள்சீறுமொளியெங்குமுளதால்
நங்கள்பெருமானுறைபுநந்திபுரவிண்ணகரநண்ணுமனமே. (கூ)

* நறைசெய்பொழின்மழைதவழுநந்திபுரவிண்ணகரநண்ணியுறையும்
உறைகொள்புகராழிசுரிசங்கமவையங்கைபுடையானை, யொளிசேர்
கறைவளரும்வேல்வல்லகலியனொலிமாலையிவையைந்துமைந்தும்
முறையிலிவைபயிலவலவடியவர்கள்கொடுவினைகள்முழுதகலுமே.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

திருவுமும்பர்பிறைமுளதம்பிதந்தைஎண்ணில்வங்கம்நறைசெய்வண்டு.

ஆபத்து - ரு - ல் - திருமொழி - ருo - க்கு - பாசுரம் - ருoo.

ஐந்தாம்பத்துமுற்றியது.

## ஆறும்பத்து.

### க - வது. வண்டுணு.

திருவிண்ணகரம் உப்பலியப்பன்விஷயம்.

கலிவிருத்தம்.

புன்னாகவராளிராகம் - ஆதிதாளம்.

* வண்டுணுநறுமலரின்டைகொண்டுபண்டைநம்வினைகெடவென், றடிமேல்
தொண்டருமமரரும்பணியநின்றங்கண்டமோடகலிடமளந்தவனே
ஆண்டாயுன்னைக்காண்பதோரருளெனக்கருளுதியேல்
வேண்டேன்மனைவாழ்க்கையைவிண்ணகர்மேயவனே. (க)

அண்ணல்செய்தலைகடல்கடைந்ததனுட்கண்ணுதனஞ்சுண்ணக்கண்டவனே
விண்ணவரமுதுணவமுதில்வரும்பெண்ணமுதுண்டவெம்பெருமானே
ஆண்டாயுன்னைக்காண்பதோரருளெனக்கருளுதியேல்
வேண்டேன்மனைவாழ்க்கையைவிண்ணகர்மேயவனே. (உ)

குழனிறவண்ணநின் கூறுகொண்டதழனிறவண்ணனண்ணூர்நகரம்
விழ, நனிமலைசிலைவளைவுசெய்தங்கழனிறவம்பதுவானவனே
ஆண்டாயுன்னைக்காண்பதோரருளெனக்கருளுதியேல்
வேண்டேன்மனைவாழ்க்கையைவிண்ணகர்மேயவனே. (ங)

நிலவொடுவெயினிலவிருசுடருமுலகமுமுயிர்களுமுண்டொருகால்
கலைதருகுழவியினுருவினையாயலைகடலாலிலைவளர்ந்தவனே
ஆண்டாயுன்னைக்காண்பதோரருளெனக்கருளுதியேல்
வேண்டேன்மனைவாழ்க்கையைவிண்ணகர்மேயவனே. (ச)

பாரொழுகடலெழுமலையெழுமாய்ச்சீர்கெழுமிவ்வுலகேழுமெலாம்
ஆர்கெழுவயிற்றினிலடக்கிநின்றங்கோரெழுத்தோருருவானவனே
ஆண்டாயுன்னைக்காண்பதோரருளெனக்கருளுதியேல்
வேண்டேன்மனைவாழ்க்கையைவிண்ணகர்மேயவனே. (ரு)

கார்கெழுகடல்களுமலைகளுமாயேர்கெழுமுலகமுமாகி, முதல்
ஆர்களுமறிவருநிலையினையாய்ச்சீர்கெழுநான்மறையானவனே
ஆண்டாயுன்னைக்காண்பதோரருளெனக்கருளுதியேல்
வேண்டேன்மனைவாழ்க்கையைவிண்ணகர்மேயவனே. (சா)

உருக்குறுநறுநெய்கொண்டாரழலிலிருக்குறுமந்தணர்சந்தியின்வாய்
பெருக்கமொடமரர்களமரநல்குமிருக்கினிலின்னிசையானவனே
ஆண்டாயுன்னைக்காண்பதோரருளெனக்கருளுதியேல்
வேண்டேன்மனைவாழ்க்கையைவிண்ணகர்மேயவனே. (எ)

காதல்செய்திளையவர்கலவிதரும்வேதனைவினையதுவெருவுதலால்
ஆதலினுனதடியணுகுவனுன்போதலர்நெடுமுடிப்புண்ணியனே
ஆண்டாயுன்னைக்காண்பதோரருளெனக்கருளுதியேல்
வேண்டேன்மனைவாழ்க்கையைவிண்ணகர்மேயவனே. (அ)

சாதலும்பிறத்தலுமென்றிவற்றைக்காதல்செய்யாதுனகழலடைந்தேன்
ஓதல்செய்நான்மறையாகியும்பராதல்செய்மூவுருவானவனே
ஆண்டாயுன்னைக்காண்பதோரருளெனக்கருளுதியேல்
வேண்டேன்மனைவாழ்க்கையைவிண்ணகர்மேயவனே. (கூ)

* பூமருபொழிலணிவிண்ணகர்மேல்
காமருசீர்க்கலிகன்றிசொன்ன
பாமருதமிழிவைபாடவல்லார்
வாமனனடியிணைமருவுவரே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

வண்டண்ணல்குழல் நிலவுபார்கார் உருக்குகாதல் சாதல்பூமருபொறுத்தேன்.

ஆ. திருமொழி - ருக - க்கு - பாசுரம் - ருக0.

## ௨ - வது. பொறுத்தேன்.

இருவுமது.

கலிவிருத்தம்.

நாதநாமக்கிரியைராகம் - ஆதிதாளம்.

* பொறுத்தேன்புன்சொன்னெஞ்சிற்பொருளின்பமெனவிரண்டும்
இறுத்தே, னைம்புலன்கட்கடனுயினவாயிலொட்டி
அறுத்தே, னூர்வசெற்றமவைதன்னைமனத்தகற்றி
வெறுத்தேன், நின்னடைந்தேன்றிருவிண்ணகர்மேயவனே. (௧)

மறந்தேனுன்னைமுன்னம்மறந்தமதியின்மனத்தால்
இறந்தே, னெத்தனையுமதனுலிடும்பைக்குழியில்
பிறந்தேயெய்த்தொழிந்தேன்பெருமான்றிருமார்பா
சிறந்தேன்நின்னடிக்கேதிருவிண்ணகர்மேயவனே. (௨)

மானேநோக்கியர்தம்வயிற்றுக்குழியிலுழைக்கும்
ஊனேராக்கைதன்னையுதவாமையுணர்ந்துணர்ந்து
வானேமாநிலமேவந்துவந்தென்மனத்திருந்த
தேனே, நின்னடைந்தேன்றிருவிண்ணகர்மேயவனே. (௩)

பிறிந்தேன்பெற்றமக்கள்பெண்டிரென்றிவர்பின்னுதவா
தறிந்தேன், நீபணித்தவருளென்னுமொள்வாளுருவி
எறிந்தே, னைம்புலன்களிடர்தீரவெறிந்துவந்து
செறிந்தேன், * நின்னடிக்கேதிருவிண்ணகர்மேயவனே. (௪)

பாண்டேன்வண்டறையுங்குழலார்கள்பல்லாண்டிசைப்ப
ஆண்டார்வையமெல்லாமரசாகி, முன்னாண்டவரே
மாண்டாரென்றுவந்தாரந்தோமனைவாழ்க்கைதன்னை
வேண்டே, னின்னடைந்தேன்றிருவிண்ணகர்மேயவனே. (௫)

கல்லாவைம்புலன்களவைகண்டவாறுசெய்யகில்லேன்
மல்லாமல்லமருண்மல்லர்மாளமல்லடர்த்த
மல்லா, மல்லஞ்சீர்மதிணீரிலங்கைபழித்த
வில்லா, நின்னடைந்தேன்றிருவிண்ணகர்மேயவனே. (௬)

வேறாயானிரந்தேன்வெகுளாதுமனக்கொளெந்தாய்
ஆறாவெந்நாகத்தடியேனையிடக்கருதி
கூறாவைவர்வந்துகுமைக்கக்குடிவிட்டவரைத்
தேறாதுன்னடைந்தேன்றிருவிண்ணகர்மேயவனே. (௭)

---

* "நின்னடைந்தேன்" என்றும்பாடம்.

தீவாய்வல்வினையாருடனின்றுசிறந்தவர்போல்
மேவாவெந்நரகத்திடவுற்றுவிரைந்துவந்தார்
மூவாவானவர்தமுதல்வாமதிகோள்விடுத்த
தேவா, நின்னடைந்தேன்றிருவிண்ணகர்மேயவனே. (அ)

போதார்தாமரையாள்புலவிக்குலவானவர்தம்
கோதா, கோதிற்செங்கோல்குடைமன்னரிடைநடந்த
தூதா, தூமொழியாய்சுடர்போலென்மனத்திருந்த
வேதா, நின்னடைந்தேன்றிருவிண்ணகர்மேயவனே. (௯)

* தேனார்பூம்புறவிற்றிருவிண்ணகர்மேயவனை
வானாருமதில்சூழ்வயன்மங்கையர்கோன்மருவார்
ஊனார்வேற்கலியனொலிசெய்தமிழ்மாலைவல்லார்
கோனாய்வானவர்தங்கொடிமாநகர்கூடுவரே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

பொறுமறமானேபிறிபாண்டேன்கல்லாவேறுதீவாய்போதார்தேனார் ௲ற.

ஆ திருமொழி - ௫உ - க்கு - பாசுரம் - ௫உ0.

---

## ௩ - வது. துறப்பேன்.

இ து வு ம து.

கலிவிருத்தம்.

ஆநந்தபைரவிராகம் - ஆதிதாளம்.

* துறப்பேனல்லேனின்பந்துறவாது, நின்னுருவம்
மறப்பேனல்லேனென்றுமறவாதி, யானுலகிற்
பிறப்பேனாகவெண்ணேன்பிறவாமைப்பெற்றது, நின்
திறத்தேனாதன்மையாற்றிருவிண்ணகரானே. (க)

துறந்தேனார்வச்செற்றச்சுற்றந்துறந்தமையால்
சிறந்தேனின்னடிக்கேயடிமைதிருமாலே
அறந்தானாய்த்திரிவாயுன்னையென்மனத்தகத்தே
திறம்பாமற்கொண்டேன்றிருவிண்ணகரானே. (உ)

மானேய்நோக்குநல்லார்மதிபோன்முகத்துலவும்
ஊனேய்கண்வாளிக்குடைந்தோட்டந்துன்னடைந்தேன்
கோனேகுறுங்குடியுட்குழகாதிருநறையூர்த்
தேனே, வருபுனல்சூழ்திருவிண்ணகரானே. (௩)

சாந்தேந்துமென்முலையார்தடந்தோள்புணரின்பவெள்ளத்
தாழ்ந்தே, னருநரகத்தழுந்தும்பயன்படைத்தேன்
போந்தேன்புண்ணியனேயுன்னையெய்தியென்றீவினைகள்
தீர்ந்தேனின்னடைந்தேன்திருவிண்ணகரானே. (௪)

மற்றோர்தெய்வமெண்ணேனுன்னையென்மனத்துவைத்துப்
பெற்றேன், பெற்றதுவும்பிறவாமையெம்பெருமான்
வற்றாநீள்கடல்சூழிலங்கையிராவணனைச்
செற்றாய், கொற்றவனேதிருவிண்ணகரானே. (௫)

மையொண்கருங்கடலுநிலனுமணிவரையும்
செய்யசுடரிரண்டுமிவையாயநின்னை, நெஞ்சில்
உய்யும்வகையுணர்ந்தேனுண்மையாலினி, யாதுமற்றோர்
தெய்வம்பிறிதறியேன்திருவிண்ணகரானே. (௬)

வேறேகூறுவதுண்டடியேன்விரித்துரைக்கு
மாறே, நீபணியாதடைநின்திருமனத்துக்
கூறேனெஞ்சுதன்னாற்குணங்கொண்டு, மற்றோர்தெய்வம்
தேறேனுன்னையல்லாற்றிருவிண்ணகரானே. (௭)

முளிந்தீந்தவெங்கடத்துமூரிப்பெருங்களிற்றால்
விளிந்தீந்தமாமரம்போல்வீழ்ந்தாரைநினையாதே
அளிந்தோர்ந்தசிந்தைநின்பாலடியேற்கு, வானுலகம்
தெளிந்தேயென்றெய்துவதுதிருவிண்ணகரானே. (௮)

சொல்லாய்திருமார்பாவுனக்காகித்தொண்டுபட்ட
னல்லேனை, வினைகணலியாமைநம்புநம்பி
* மல்லாகுடமாடிமதுசூதனே, யுலகில்
செல்லாநல்லிசையாய்திருவிண்ணகரானே. (௯)

* தாரார்மலர்க்கமலத்தடஞ்சூழ்ந்ததண்புறவில்
சீரார்நெடுமறுகிற்றிருவிண்ணகரானைக்
காரார்புயற்றடக்கைக்கலியனொலிமாலை
ஆராரிவைவல்லாரவர்க்கல்லலில்லாவே. (௧௦)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

துறப்பேன்தறமானேசாந்துமற்றோர்மைவேறேமுளிந்தசொல்தாரார்கண்.

ஆ திருமொழி - ௫௩ - க்கு - பாசுரம் - ௫௩௦.

* "மல்லார்குடமாடி" என்றும்பாடம்.

## ௪ - வது. கண்ணும்.

.........................

### திருநறையூர் நம்பிவிஷயம்.

கலிநிலைத்துறை.

பந்துவராளிராகம் - ஜம்பைதாளம்.

* கண்ணுஞ்சுழன்றுபீளையோடீளைவந்தேங்கினால்
பண்ணின்மொழியார்பையநடமினென்னாதமுன்
விண்ணுமலையும்வேதமும்வேள்வியுமாயினான்
நண்ணுநறையூர்நாந்தொழுதுமெழுநெஞ்சமே. (௧)

கொங்குண்குழலார்கூடியிருந்துசிரித்து, நீர்
இங்கென்னிருமியெம்பால்வந்ததென்றிகழாதமுன்
திங்களெரிகாற்செஞ்சுடராயவன்தேசுடை
நங்கணறையூர்நாந்தொழுதுமெழுநெஞ்சமே. (௨)

கொங்கார்குழலார்கூடியிருந்துசிரித், தெம்மை
எங்கோலமையாவென்னினிக்காண்பதென்னாதமுன்
செங்கோல்வலவன்றன்பணிந்தேத்தித்திகழுமூர்
நங்கோனறையூர்நாந்தொழுதுமெழுநெஞ்சமே. (௩)

கொம்புமரவமும்வல்லியும்வென்றநுண்ணேரிடை
வம்புண்குழலார்வாசலடைத்திகழாதமுன்
செம்பொன்கமுகினந்தான்கனியுஞ்செழுஞ்சோலைசூழ்
நம்பனறையூர்நாந்தொழுதுமெழுநெஞ்சமே. (௪)

விலங்குங்கயலும்வேலுமொண்காவியும்வென்றகண்
சலங்கொண்டசொல்லார்தாங்கள்சிரித்திகழாதமுன்
மலங்கும்வராலும்வாளையும்பாய்வயல்சூழ்தரு
நலங்கொணறையூர்நாந்தொழுதுமெழுநெஞ்சமே. (௫)

மின்னேரிடையார்வேட்கையைமாற்றியிருந்
தென்னீரிருமியெம்பால்வந்ததென்றிகழாதமுன்
தொன்னீரிலங்கைமலங்கவிலங்கெரியூட்டினான்
நன்னீர்நறையூர்நாந்தொழுதுமெழுநெஞ்சமே. (௬)

வில்லேர்நுதலார்வேட்கையைமாற்றிச்சிரித், திவன்
பொல்லான்றிரைந்தானென்னும்புறனுரைகேட்பதன்முன்
சொல்லார்மறைநான்கோதியுலகினிலாயவர்
நல்லார்நறையூர்நாந்தொழுதுமெழுநெஞ்சமே. (௭)

வாளொண்கணல்லார்தாங்கண்மதனனென்றார்தம்மைக்
கேண்மின்களீளையோடேங்குகிழவனென்னாதமுன்
வேள்வும்விழவும்வீதியிலென்றுமறாதவூர்
நாளுநறையூர்நாந்தொழுதுமெழுநெஞ்சமே. (அ)

கனிசேர்ந்திலங்குநல்வாயவர்காதன்மைவிட்டிடக்
குனிசேர்ந்துடலங்கோலிற்றளர்ந்திளையாதமுன்
பனிசேர்விசும்பிற்பான்மதிகோள்விடுத்தானிடம்
நனிசேர்நறையூர்நாந்தொழுதுமெழுநெஞ்சமே. (கூ)

* பிறைசேர்நுதலார்பேணுதனம்மையிலாதமுன்
நறைசேர்பொழில்சூழ்நறையூர்தொழுநெஞ்சமேயென்ற
கறையார்நெடுவேன்மங்கையர்கோன்கலிகன்றிசொல்
மறவாதுரைப்பவர்வானவர்க்கின்னரசாவாரே. (கo)

ஆழ்வார் திருவடிகளேஶரணம்.

ஜீயர் திருவடிகளேஶரணம்.

கண்கொங்குண்கொங்கார்கொம்புவிலங்குமின்வில்வாள்கனிபிறைகலங்க.

ஆ திருமொழி - ருச - க்கு - பாசுரம் - ருசo.

---

## ரு - வது. கலங்க.

இதுவுமது.

கலிநிலைத்துறை.

செஞ்சுருட்டிராகம் - அடதாளம்.

* கலங்கமுந்நீர்கடைந்தமுதங்கொண், டிமையோர்
துலங்கல்தீரநல்குசோதிச்சுடராய
வலங்கையாழியிடங்கைச்சங்கமுடையானூர்
நலங்கொள்வாய்மையந்தணர்வாழும்நறையூரே. (க)

முனையார்சீயமாகியவுணன்முரண்மார்பம்
புனைவாளுகிராற்போழ்படவீர்ந்தபுனிதனூர்
சினையார்தேமாஞ்செந்தளிர்கோதிக்குயில்கூவும்
நனையார்சோலைசூழ்ந்தழகாயநறையூரே. (உ)

ஆனைப்புரவித்தேரொடுகாலாளணிகொண்ட
சேனைத்தொகையைச்சாடியிலங்கைசெற்றானூர்
மீனைத்தழுவிவீழ்ந்தெழுமல்லர்க்கலமர்ந்து
நானப்புதலிலாமையொளிக்கும்நறையூரே. (ஙு)

உறியார்வெண்ணெயுண்டுரலோடுங்கட்டுண்டு
வெறியார்கூந்தற்பின்னைபொருட்டால்வென்றானூர்
பொறியார்மஞ்ஞைபூம்பொழில்தோறுநடமாட
கறுநான்மலர்மேல்வண்டிசைபாடும்நறையூரே. (ச)

விடையேழ்வென்றுமென்றோளாய்ச்சிக்கன்பனாய்
நடையானின்றமருதஞ்சாய்த்தநாதனூர்
பெடையோடன்னம்பெய்வளையார்தம்பின்சென்று
நடையோடியலிநாணியொளிக்கும்நறையூரே. (ரு)

பகுவாய்வன்பேய்கொங்கைசுவைத்தாருயிருண்டு
புகுவாய்நின்றபோதகம்வீழப்பொருதானூர்
நெகுவாய்நெய்தற்பூமதுமாந்திக், கமலத்தின்
நகுவாய்மலர்மேலன்னமுறங்கும்நறையூரே. (சு)

முந்துநூலுமுப்புரிநூலுமுன்னீந்த
அந்தணாளன்பிள்ளையையந்நான்றளித்தானூர்
பொந்தில்வாழும்பிள்ளைக்காகிப்புள்ளோடி
நந்துவாரும்பைம்புனல்வாவிநறையூரே. (எ)

வெள்ளைப்புரவித்தேர்விசையற்காய்விறல்யூகம்
விள்ளச், சிந்துக்கோன்விழவூர்ந்தவிமலனூர்
கொள்ளைக்கொழுமீனுண்குருகோடிப்பெடையோடும்
நள்ளக்கமலத்தேறலுகுக்கும்நறையூரே. (அ)

பாரையூரும்பாரந்தீரப்பார்த்தன்றன்
தேரையூருந், தேவதேவன்சேருமூர்
தாரையூருந்தண்டளிர்வேலிபுடைசூழ
நாரையூருநல்வயல்சூழ்ந்தநறையூரே. (கூ)

* தாமத்துளபநீண்முடிமாயன்றானின்ற
நாமத்திரண்மாமாளிகைசூழ்ந்தநறையூர்மேல்
காமக்கதிர்வேல்வல்லான்கலியனொலிமாலை
சேமத்துணையாஞ்செப்புமவர்க்குத்திருமாலே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

கலங்கமுனையானைஉறிவிடைபகுவாய் முந்துவெள்ளைபார்தாமத்தம்புரம்.

ஆ திருமொழி - ருரு - க்கு - பாசுரம் - ருரு0.

## சா - வது. அம்பரம்.

### இதவுமது.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தோடிராகம் - ஆதிதாளம்.

※ அம்பரமும்பெருநிலனுந்திசைகளெட்டு
மலைகடலுங்குலவரையுமுண்டகண்டன்
கொம்பமரும்வடமரத்தினிலைமேற்பள்ளி
கூடினான்றிருவடியேகூடகிற்பீர்
வம்பவிழுஞ்செண்பகத்தின்வாசமுண்டு
மணிவண்டுவகுளத்தின்மலர்மேல்வைகி
செம்பியன்கோச்செங்கணான்சேர்ந்தகோயிற்
றிருநறையூர்மணிமாடஞ்சேர்மின்களே. (க)

கொழுங்கயலாய்நெடுவெள்ளங்கொண்டகாலங்
குலவரையின்மீதோடியண்டத்தப்பால்
எழுந்தினிதுவிளையாடுமீசனெந்தை
யிணையடிக்கீழினிதிருப்பீரினவண்டாலும்
உழுஞ்செறுவின்மணிகொணர்ந்துகரைமேற்சிந்தி
யுலகெல்லாஞ்சந்தனமுமகிலுங்கொள்ளச்
செழும்பொன்னிவளங்கொடுக்குஞ்சோழன்சேர்ந்த
திருநறையூர்மணிமாடஞ்சேர்மின்களே. (உ)

பவ்வநீருடையானையாகச்சுற்றிப்
பாரகலந்திருவடியாப்பவனம்மெய்யா
செவ்விமாதிரமெட்டுந்தோளாவண்டந்
திருமுடியாநின்றான்பாற்செல்லகிற்பீர்
கவ்வைமாகளிறுந்திவிண்ணியேற்றக்
கழன்மன்னர்மணிமுடிமேற்காகமேறத்
தெய்வவாள்வலங்கொண்டசோழன்சேர்ந்த
திருநறையூர்மணிமாடஞ்சேர்மின்களே. (ங)

பைங்கணாளரியுருவாய்வெருவநோக்கிப்
பருவரைத்தோளிரணியனைப்பற்றிவாங்கி
அங்கைவாளுகிர்நுதியாலவனதாக
மங்குருதிபொங்குவித்தானடிக்கீழ்நிற்பீர்

வெங்கண்மாகளிறுந்தி விண்ணியேற்ற
விறன்மன்னர்திறலழியவெம்மாவுற்ற
செங்கணான்கோச்சோழன்சேர்ந்தகோயிற்
றிருநறையூர்மணிமாடஞ்சேர்மின்களே. (௪)

அன்றுலகமூன்றினையுமளந்துவேறோ
ரரியுருவாயிரணியனதாகங்கீண்டு
வென்றவனைவிண்ணுலகிற்செலவுய்த்தாற்கு
விருந்தாவீர்மேலெழுந்துவிலங்கல்பாய்ந்து
பொன்சிதறிமணிகொணர்ந்துகரைமேற்சிந்திப்
புலன்பரந்துநிலம்பரக்கும்பொன்னிநாடன்
தென்றமிழன்வடபுலக்கோன்சோழன்சேர்ந்த
திருநறையூர்மணிமாடஞ்சேர்மின்களே. (௫)

தன்னாலேதன்னுருவம்பயந்ததானாய்த்
தயங்கொளிசேர்மூவுலகுந்தானாய்வானாய்த்
தன்னாலேதன்னுருவின்மூர்த்திமூன்றாய்த்
தானாயனாயினான்சரணென்றுய்வீர்
மின்னாடுவேலேந்துவிளைந்தவேளை
விண்ணேறத்தனிவேலுய்த்துலகமாண்ட
தென்னாடன்குடகொங்கன்சோழன்சேர்ந்த
திருநறையூர்மணிமாடஞ்சேர்மின்களே. (௬)

முலைத்தடத்தநஞ்சுண்டுதுஞ்சப்பேய்ச்சி
முதுதுவரைக்குலபதியாக்காலிப்பின்னே
இலைத்தடத்தகுழலூதியாயர்மாத
ரிளவளைகொண்டானடிக்கீழெய்தகிற்பீர்
மலைத்தடத்தமணிகொணர்ந்துவையமுய்ப்ப
வளங்கொடுக்கும்வருபுனலம்பொன்னிநாடன்
சிலைத்தடக்கைக்குலச்சோழன்சேர்ந்தகோயிற்
றிருநறையூர்மணிமாடஞ்சேர்மின்களே. (௭)

முருக்கிலங்குகனித்துவர்வாய்ப்பின்னைகேள்வன்
மண்ணெல்லாமுன்னவியச்சென்றுவென்றிச்
செருக்களத்துத்திறலழியச்செற்றவேந்தன்
சிரந்துணித்தான்றிருவடிநுஞ்சென்னிவைப்பீர்
இருக்கிலங்குதிருமொழிவாயெண்டோளீசற்
கெழின்மாடமெழுபதுசெய்துலகமாண்ட
திருக்குலத்துவளச்சோழன்சேர்ந்தகோயிற்
றிருநறையூர்மணிமாடஞ்சேர்மின்கனே. (௮)

தாராளன்றண்ணரங்கவாளன்பூமேற்
றனியாளன்முனியாளரேத்தநின்ற
பேராளனு, ஆயிரம்பேருடையவாளன்
பின்னைக்குமணவாளன்பெருமைகேட்பீர்
பாராளரவரிவரென்றழுந்தையேற்றப்
படைமன்னருடலுணியப்பரிமாவுய்த்த
தேராளன்கோச்சோழன்சேர்ந்தகோயிற்
றிருநறையூர்மணிமாடஞ்சேர்மின்களே. (கூ)

* செம்மொழிவாய்நால்வேதவாணர்வாழுந்
திருநறையூர்மணிமாடச்செங்கண்மாலைப்
பொய்ம்மொழியொன்றில்லாதமெய்ம்மையாளன்
புலமங்கைக்குலவேந்தன்புலமையார்ந்த
அம்மொழிவாய்க்கலிகன்றியின்பப்பாடல்
பாடுவார்வியனுலகில்நமனுர்பாடி
வெம்மொழிகேட்டஞ்சாதேமெய்ம்மைசொல்லில்
விண்ணவர்க்குவிருந்தாகும்பெருந்தக்கோரே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

அம்பரங்கொழும்பவ்வம்பைங்கணன்றுதன்னுலேமுலைமுருக்குதாராளன் செம்மொழிஆளும்.

ஆ_திருமொழி - ருகூ - க்கு - பாசுரம் - ருகூ0.

---

## எ - வது. ஆளும்பணி.

### திருநறையூர்நம்பிவிஷயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆரபிராகம்-ரூபகதாளம்.

* ஆளும்பணியுமடியேனைக்கொண்டான்விண்டநிசாசரரைத்
தோளுந்தலையுந்துணிவெய்தச்சுடுவெஞ்சிலைவாய்ச்சரந்துரந்தான்
வேளுஞ்சேயுமனையாரும்வேற்கணுரும்பயில்வீதி
நாளும்விழவினெலியோவாநறையூர்நின்றநம்பியே. (க)

முனியாய்வந்துமூவெழுகான்முடிசேர்மன்னருடலுணியத்
தனிவாய்மழுவின்படையாண்டதாரார்தோளான்வார்புறவில்
பனிசேர்முல்லைபல்லரும்பப்பானலொருபாற்கண்காட்ட
நனிசேர்கமலமுகங்காட்டும்நறையூர்நின்றநம்பியே. (உ)

தெள்ளார்கடல்வாய்விடவாயச்சினவாளரவிற்றுயிலமர்ந்து
துள்ளாவருமான்விழவாளிதுரந்தானிரந்தான்மாவலிமண்
புள்ளார்புறவிற்பூங்காவிபுலன்கொண்மாதர்கண்காட்ட
நள்ளார்கமலமுகங்காட்டும்நறையூர்நின்றநம்பியே. (௩)

ஒளியாவெண்ணெயுண்டானென்றுரலோடாய்ச்சியொண்கயிற்றால்
விளியாவார்க்கவாப்புண்டுவிம்மியழுதான்மென்மலர்மேல்
களியாவண்டுகள்ளுண்ணக்காமர்தென்றலலர்தூற்ற
நளிர்வாய்முல்லைமுறுவலிக்கும்நறையூர்நின்றநம்பியே. (௪)

வில்லார்விழவில்வடமதுரைவிரும்பிவிரும்பாமல்லடர்த்துக்
கல்லார்திரடோட்கஞ்சனைக்காய்ந்தான்பாய்ந்தான்காளியன்மேல்
சொல்லார்சுருதிமுறையோதிச்சோமுச்செய்யுந்தொழிலினோர்
நல்லார்மறையோர்பலர்வாழும்நறையூர்நின்றநம்பியே. (௫)

வள்ளிகொழுநன்முதலாயமக்களோடுமுக்கணான்
வெள்கியோட,விறல்வாணன்வியன்றோள்வனத்தைத்துணித்துகந்தான்
பள்ளிகமலத்திடைப்பட்டபகுவாயலவன்முகம்நோக்கி
நள்ளியூடும்வயல்சூழ்ந்தநறையூர்நின்றநம்பியே. (௬)

மிடையாவந்தவேல்மன்னர்வீயவிசயன்றேர்கடவிக்
குடையாவரையொன்றெடுத்தாயர்கோவாய்நின்றான்கூராழிப்
படையான், வேதநான்கைந்துவேள்வியங்கமாறிசையேழ்
நடையாவல்லவந்தணர்வாழ்நறையூர்நின்றநம்பியே. (௭)

பந்தார்விரலாள்பாஞ்சாலிகூந்தன்முடிக்கப்பாரதத்துக்
கந்தார்களிற்றுக்கழன்மன்னர்கலங்கச்சங்கம்வாய்வைத்தான்
செந்தாமரைமேலயனோடுசிவனுமனையபெருமையோர்
நந்தாவண்கைமறையோர்வாழ்நறையூர்நின்றநம்பியே. (௮)

ஆறும்பிறையுமரவமுமடம்புஞ்சடைமேலணிந், துடலம்
நீறும்பூசியேறூருமிறையோன்சென்றுகுறையிரப்ப
மாறொன்றில்லாவாசநீர்வரைமார்பகலத்தளித்துகந்தான்
நாறும்பொழில்சூழ்ந்தழகாயநறையூர்நின்றநம்பியே. (௯)

* நன்மையுடையமறையோர்வாழ்நறையூர்நின்றநம்பியைக்
கன்னிமதிள்சூழ்வயன்மங்கைக்கலியனொலிசெய்தமிழ்மாலை
பன்னியுலகிற்பாடுவார்பாடுசாராபழவினைகள்
மன்னியுலகமாண்டுபோய்வானோர்வணங்கவாழ்வாரே. (௧௦)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆளும்முனிதெள்ளாரொளிவில்லார்வள்ளிமிடைபந்தாறுநன்மைமான்.

௬ திருமொழி-௫௭-க்கு-பாசுரம்-௫௭௦.

## அ - வது. மான்கொண்ட.

### இதுவுமது.

### கலிவிருத்தம்.

### பைரவிராகம் - ஜம்பைதாளம்.

* மான்கொண்டதோல்மார்பில்மாணியாய், மாவலிமண்
தான்கொண்டுதாளாலளந்தபெருமானைத்
தேன்கொண்டசாரற்றிருவேங்கடத்தானை
நான்சென்றுநாடிநறையூரிற்கண்டேனே. (௧)

முந்நீரைமுன்னாட்கடைந்தானை, மூழ்த்தநாள்
அந்நீரைமீனாயமைத்தபெருமானைத்
தென்னாலிமேயதிருமாலையெம்மானை
நன்னீர்வயல்சூழ்நறையூரிற்கண்டேனே. (௨)

தூவாயபுள்ளூர்ந்துவந்துதுறைவேழம்
மூவாமைநல்கிமுதலைதுணித்தானைத்
தேவாதிதேவனைச்செங்கமலக்கண்ணானை
நாவாயுளானைநறையூரிற்கண்டேனே. (௩)

ஓடாவரியாயிரணியனையூனிடந்த
சேடார்பொழில்சூழ்திருநீர்மலையானை
வாடாமலர்த்துழாய்மாலைமுடியானை
நாடோறுநாடிநறையூரிற்கண்டேனே. (௪)

கல்லார்மதிள்சூழ்கடியிலங்கைக்காரரக்கன்
வல்லாகங்கீளவரிவெஞ்சரந்துரந்த
வில்லானைச், செல்வவிபீடணற்குவேறாக
நல்லானைநாடிநறையூரிற்கண்டேனே. (௫)

உம்பருலகோடுயிரெல்லாமுந்தியில்
வம்புமலர்மேற்படைத்தானைமாயோனை
அம்பன்னகண்ணாளசோதைதன்சிங்கத்தை
நம்பனைநாடிநறையூரிற்கண்டேனே. (௬)

கட்டேறுநீள்சோலைக்காண்டவத்தைத்தீமூட்டி
விட்டானை, மெய்யமமர்ந்தபெருமானை
மட்டேறுகற்பகத்தைமாதர்க்காய்வண்டுவரை
நட்டானைநாடிநறையூரிற்கண்டேனே. (௭)

மண்ணின்மீபாரங்கெடுப்பான்மறமன்னர்
பண்ணின்மேல்வந்தபடையெல்லாம்பாரதத்து
விண்ணின்மீதேறவிசயன்றேரூர்ந்தானை
நண்ணிநான்னாடிநறையூரிற்கண்டேனே. (அ)

பொங்கேறுநீள்சோதிப்பொன்னாழிதன்னோடும்
சங்கேறுகோலத்தடக்கைப்பெருமானைக்
கொங்கேறுசோலைக்குடந்தைக்கிடந்தானை
நங்கோனைநாடிநறையூரிற்கண்டேனே. (கூ)

* மன்னுமதுரைவசுதேவர்வாழ்முதலை
நன்னறையூர்நின்றநம்பியை, வம்பவிழ்தார்க்
கன்னவிலுந்தோளான்கலியனொலிவல்லார்
பொன்னுலகில்வானவர்க்குப்புத்தேளிராகுவரே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

மான்முந்நீர்தூவாய் ஓடாக்கல்லும்பர் கட்டேறுமண்பொங்குமன்னுபெடை.

ஆ திருமொழி - ருஅ - க்கு - பாசுரம் - ருஅ0.

---

## கூ - வது. பெடையடர்த்த.

### திருநறையூர்நம்பிவிஷயம்.

### கலிவிருத்தம்.

### யமுனாகல்யாணிராகம் - ரூபகதாளம்.

பெடையடர்த்தமடவன்னம்பிரியாது, மலர்க்கமல
மடலெடுத்துமதுநுகரும்வயலுடுத்ததிருநறையூர்
முடையடர்த்தசிரமேந்திமூவுலகும்பலிதிரிவோன்
இடர்கெடுத்ததிருவாளனிணையடியேயடைநெஞ்சே. (க)

கழியாருங்கனசங்கங்கலந்தெங்குநிறைந்தேறி
வழியாரமுத்தீன்றுவளங்கொடுக்குந்திருநறையூர்
பழியாரும்விறலரக்கன்பருமுடிகளவைசிதற
அழலாருஞ்சரந்துரந்தானடியிணையேயடைநெஞ்சே. (உ)

களைகொண்டபலங்கனிகள்தேன்பாயக், கதலிகளின்
திளைகொண்டபழங்கெழுமித்திகழ்சோலைத்திருநறையூர்
வளைகொண்டவண்ணத்தன்பின்றோன்றன்மூவுலகோ
டளைவெண்ணெயுண்டான்றன்னடியிணையேயடைநெஞ்சே. (ங)

துன்றோளித்துகிற்படலந்துன்னியெங்குமாளிகைமேல்
நின்றாரவான்மூடிநீள்செல்வத்திருநறையூர்
மன்றாரக்குடமாடிவரையெடுத்துமழைதடுத்த
குன்றாருந்திரடோளன்குரைகழலேயடைநெஞ்சே. (ச)

அகிற்குறடுஞ்சந்தனமுமம்பொன்னுமணிமுத்தும்
மிகக்கொணர்ந்துதிரையுந்தும்வியன்பொன்னித்திருநறையூர்
பகற்கரந்தசுடராழிப்படையானிவ்வுலகேழும்
புகக்கரந்ததிருவயிற்றன்பொன்னடியேயடைநெஞ்சே. (ரு)

பொன்முத்துமரியுகிரும்புழைக்கைமாகரிக்கோடும்
மின்னத்தண்டிரையுந்தும்வியன்பொன்னித்திருநறையூர்
மின்னொத்தநுண்மருங்குன்மெல்லியலைத்திருமார்பில்
மன்னத்தான்வைத்துகந்தான்மலரடியேயடைநெஞ்சே. (சு)

சீர்தழைத்தகதிர்ச்செந்நெற்செங்கமலத்திடையிடையின்
பார்தழைத்துக்கரும்போங்கிப்பயன்விளைக்குந்திருநறையூர்
கார்தழைத்ததிருவுருவன்கண்ணபிரான்விண்ணவர்கோன்
தார்தழைத்ததுழாய்முடியன்றளிரடியேயடைநெஞ்சே. (எ)

குலையார்ந்தபழுக்காயும்பசுங்காயும்பாளைமுத்தும்
தலையார்ந்தவிளங்கமுகின்றடஞ்சோலைத்திருநறையூர்
மலையார்ந்தகோலஞ்சேர்மணிமாடமிகமன்னி
நிலையாரநின்றான்றன்னீள்கழலேயடைநெஞ்சே. (அ)

மறையாரும்பெருவேள்விக்கொழும்புகைப்போய்வளர்ந்தெங்கும்
நிறையாரவான்மூடும்நீள்செல்வத்திருநறையூர்
பிறையாருஞ்சடையானும்பிரமனுமுன்றொழுதேத்த
இறையாகிநின்றான்றன்னிணையடியேயடைநெஞ்சே. (கூ)

* திண்களகமதில்புடைசூழ்திருநறையூர்நின்றானை
வண்களகநிலவெறிக்கும்வயன்மங்கைநகராளன்
பண்களகம்பயின்றசீர்ப்பாடலிவ்வைபத்தும்வல்லார்
விண்களகத்திமையவராய்வீற்றிருந்துவாழ்வாரே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

பெடைகழிசுனைதுன்றகிற்பொன்சீர்குலை மறைதிண்கிடந்த.

ஆ திருமொழி - ருக - க்கு - பாசுரம் - ருகூ0.

## கO - வது. கிடந்தநம்பி.

### திருநறையூர்நம்பிவிஷயம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கமாசுராகம் - திரிபுடைதாளம்.

* கிடந்தநம்பிகுடந்தைமேவிக்கேழலாயுலகை
இடந்தநம்பி, யெங்கள்நம்பியெறிஞரரணழியக்
கடந்தநம்பிகடியாரிலங்கையுலகை, யீரடியால்
நடந்தநம்பிநாமஞ்சொல்லில்நமோநாராயணமே. (க)

விடந்தானுடையவரவம்வெருவச்செருவில்முனநாள், முன்
தடந்தாமரைநீர்ப்பொய்கைபுக்குமிக்க § தாடாளன்
இடந்தான்வையங்கேழலாகியுலகை, யீரடியால்
நடந்தானுடையநாமஞ்சொல்லில்நமோநாராயணமே. (உ)

பூணாதனலுந்தறுகண்வேழமறுக, வளைமருப்பைப்
பேணான்வாங்கியமுதம் * கொண்டபெருமான்றிருமார்பன்
பாணாவண்டுமுரலுங்கூந்தலாய்ச்சிதயிர்வெண்ணெய்
நாணாதுண்டான்நாமஞ்சொல்லில்நமோநாராயணமே. (ங)

கல்லார்மதில்சூழ்கச்சிநகருள்நச்சிப்பாடகத்துள்
எல்லாவுலகும்வணங்கவிருந்தவம்மா, னிலங்கைக்கோன்
வல்லாளாகம்வில்லால்முனிந்தவெந்தை, விபீடணற்கு
நல்லானுடையநாமஞ்சொல்லில்நமோநாராயணமே. (ச)

குடையாவரையால்நிரைமுன்காத்தபெருமான், மருவாத
விடைதானேழும்வென்றான்கோவல்நின்றான், றென்னிலங்கை
அடையாவரக்கர்வீயப்பொருதுமேவிவெங்கூற்றம்
நடையாவுண்ணக்கண்டான்நாமம்நமோநாராயணமே. (ரு)

கானவெண்குங்குரங்குமுசுவும்படையா, வடலரக்கர்
மானமழித்துநின்றவென்றியம்மா, னெனக்கென்றும்
தேனும்பாலுமமுதுமாயதிருமால்திருநாமம்
நானுஞ்சொன்னேன்நமருமுரைமின்நமோநாராயணமே. (சு)

நின்றவரையுங்கிடந்தகடலுந்திசையுமிருநிலனும்
ஒன்றுமொழியாவண்ணமெண்ணிநின்றவம்மானார்
குன்றுகுடையாவெடுத்தவடிகளுடையதிருநாமம்
நன்றுகாண்மின்றொண்டீர்சொன்னேன்நமோநாராயணமே. (எ)

---

§ "தாளாளன்" என்றும்பாடமுண்டு. * "கொண்டுகந்த" என்றும்பாடம்.

கடுங்கால்மாரிகல்லேபொழியவல்லேயெமக்கென்று
படுங்கால், நீயேசரணென்றுயரஞ்சவஞ்சாமுன்
நெடுங்கால்குன்றங்குடையொன்றேந்திநிரையைச்சிரமத்தால்
நடுங்காவண்ணங்காத்தான்நாமம்நமோநாராயணமே. (அ)

பொங்குபுணரிக்கடல்சூழாடைநிலமாமகள்மலர்மா
மங்கை, பிரமன்சிவனிந்திரன்வானவர்நாயகராய
எங்களடிகளிமையோர்தலைவருடையதிருநாமம்
நங்கள்வினைகள்தவிரவுரைமின்நமோநாராயணமே. (கூ)

* வாவித்தடஞ்சூழ்மணிமுத்தாற்றுநறையூர்நெடுமாலை
நாவில்பரவிநெஞ்சில்கொண்டுநம்பிநாமத்ஸதக்
காவித்தடங்கண்மடவார்கேள்வன்கலியனொலிமாலை
மேவிச்சொல்லவல்லார்பாவம்நில்லாவீயுமே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

கிடந்த விடம் பூணு கல் குடை கான நின்ற கடும் பொங்கு வாவி கறவா.

ஆறுபத்து - கூ - ல் - திருமொழி - கூ0 - க்கு - பாசுரம் - கூ00.

ஆறாம்பத்துமுற்றியது.

---

## ஏழாம்பத்து.

### க - வது. கறவாமட.

திருநறையூர்நம்பிவிஷயம்.

கலிவிருத்தம்.

முகாரிராகம் - ரூபகதாளம்.

* கறவாமடநாகுதன்கன்றுள்ளினாற்போல்
மறவாதடியேனுன்னையேயழைக்கின்றேன்
நறவார்பொழில்சூழ்நறையூர்நின்றநம்பீ
பிறவாமையெனைப்பணியெந்தைபிரானே. (க)

வற்றாமுதுநீரொடுமால்வரையேழும்
துற்றாகமுன்றுற்றியதொல்புகழோனே
அற்றேனடியேனுன்னையேயழைக்கின்றேன்
பெற்றேனருடந்திடுமெந்தைபிரானே. (உ)

தாரேன்பிறர்க்குன்னருளென்னிடைவைத்தாய்
ஆரேனதுவேபருகிக்களிக்கின்றேன்
காரேய்கடலேமலையேதிருக்கோட்டி
யூரே, யுகந்தாயையுகந்தடியேனே. (௩)

புள்வாய்பிளந்தபுனிதாவென்றழைக்க
உள்ளேநின்றென்னுள்ளங்குளிருமொருவா
கள்வாகடன்மல்லைக்கிடந்தகரும்பே
வள்ளாலுன்னையெங்ஙனநான்மறக்கேனே. (௪)

வில்லேர்நுதல்வேனெடுங்கண்ணியுநீயும்
கல்லார்கடுங்கானந்திரிந்தகளிறே
நல்லாய்நரநாரணனேயெங்கணம்பீ
சொல்லாயுன்னையான்வணங்கித்தொழுமாறே. (௫)

பனியேபரங்குன்றின்பவளத்திரளே
முனியேதிருமூழிக்களத்துவிளக்கே
இனியாய்தொண்டரோம்பருகின்னமுதாய
கனியே, யுன்னைக்கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. (௬)

கதியேலில்லைநின்னருளல்லதெனக்கு
நிதியேதிருநீர்மலைநித்திலத்தொத்தே
பதியேபரவித்தொழுந்தொண்டர்தமக்குக்
கதியே, யுன்னைக்கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. (௭)

அத்தாவரியேயென்றுன்னையழைக்கப்
பித்தாவென்றுபேசுகின்றார்பிறரென்னை
முத்தேமணிமாணிக்கமேமுளைக்கின்ற
வித்தே, யுன்னையெங்ஙனநான்விடுகேனே. (௮)

தூயாய்சுடர்மாமதிபோலுயிர்க்கெல்லாம்
தாயாயளிக்கின்றதண்டாமரைக்கண்ணா
ஆயாவலைநீருலகேழுமுன்னுண்ட
வாயா, வுன்னையெங்ஙனநான்மறக்கேனே. (௯)

* வண்டார்பொழில்சூழ்நறையூர்நம்பிக், கென்றும்
தொண்டாய்கலியனொலிசெய்தமிழ்மாலை
தொண்டீரிவைபாடுமின்பாடிநின்றாட
உண்டேவிசும்புந்தமக்கில்லைதுயரே. (கO)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

கறவாவற்றுதாரேன்புள்வில்பனிகதிஅத்தாதூயாய்வண்டார்புள்ளாய்.

ஆ திருமொழி - ௬௧ - க்கு - பாசுரம் - ௬௧O.

## உ - வது. புள்ளாயேனமும்.

---

### திருநறையூர்நம்பிவிஷயம்.

கலிவிருத்தம்.

கேதாரகௌளராகம் - ஆதிதாளம்.

* புள்ளாயேனமுமாய்ப்புகுந், தென்னையுள்ளங்கொண்ட
கள்வாவென்றலுமென்கண்கணீர்சோர்தருமால்
உள்ளேநின்றுருகிநெஞ்சமுன்னையுள்ளியக்கால்
நள்ளேனுன்னையல்லால்நறையூர்நின்றநம்பியோ. (க)

ஓடாவாளரியினுருவாய்மருவி, யென்றன்
மாடேவந்தடியேன்மனங்கொள்ளவல்லமைந்தா
பாடேன்றொண்டர்தம்மைக்கவிதைப்பனுவல்கொண்டு
நாடேனுன்னையல்லால்நறையூர்நின்றநம்பியோ. (உ)

எம்மானுமெம்மனையுமென்னைப்பெற்றொழிந்ததற்பின்
அம்மானுமம்மனையுமடியேனுக்காகிநின்ற
நன்மானவொண்சுடரேநறையூர்நின்றநம்பீயுன்
மைம்மானவண்ணமல்லான்மகிழ்ந்தேத்தமாட்டேனே. (௩)

சிறியாயோர்பிள்ளையுமாயுலகுண்டோராலிலைமேல்
உறைவா, யென்னெஞ்சினுள்ளேயுறைவாயுறைந்ததுதான்
அறியாதிருந்தறியேனடியேனணிவண்டுகிண்டு
நறைவாரும்பொழில்சூழ்நறையூர்நின்றநம்பியோ. (௪)

நீண்டாயைவானவர்கணினைந்தேத்திக்காண்பரிதால்
ஆண்டாயென்றுதரிக்கப்படுவாய்க்கு, நானடிமை
பூண்டேனென்னெஞ்சினுள்ளேபுகுந்தாயைப்போகலொட்டேன்
நாண்டானுனக்கொழிந்தேன்நறையூர்நின்றநம்பியோ. (ரு)

எந்தாதைதாதையப்பாலெழுவர்பழவடிமை
வந்தா, றென்னெஞ்சினுள்ளேவந்தாயைப்போகலொட்டேன்
அந்தோவென்னாருயிரேயரசே, யருளெனக்கு
நந்தாமற்றந்தவெந்தாய்நறையூர்நின்றநம்பியோ. (சு)

மன்னஞ்சவாயிரந்தோண்மழுவிற்றுணித்தமைந்தா
என்னெஞ்சத்துள்ளிருந்திங்கினிப்போய்ப், பிறரொருவர்
வன்னெஞ்சம்புக்கிருக்கவொட்டேன்வளைத்துவைத்தேன்
நன்னெஞ்சவன்னமன்னும்நறையூர்நின்றநம்பியோ. (எ)

எப்போதும்பொன்மலரிட்டிமையோர்தொழுது, தங்கள்
கைப்போதுகொண்டிறைஞ்சிக்கழன்மேல்வணங்கநின்றாய்
இப்போதென்னெஞ்சினுள்ளேபுகுந்தாயைப்போகலொட்டேன்
நற்போதுவண்டுகின்டும்நறையூர்நின்றநம்பியோ. (அ)

ஊனேராக்கைதன்னையுழந்தோம்பிவைத்தமையால்
யானாயென்றனக்காயடியேன்மனம்புகுந்த
தேனே, தீங்கரும்பின்றெளிவேயென்சிந்தைதன்னால்
நானேயெய்தப்பெற்றேன் நறையூர்நின்றநம்பியோ. (௯)

※ நன்னீர்வயல்புடைசூழ்நறையூர்நின்றநம்பியைக்
கன்னீர்மால்வரைத்தோட்கலிகன்றிமங்கையர்கோன்
சொன்னீர்சொன்மாலைசொல்வார்கள், சூழ்விசும்பில்
நன்னீர்மையான்மகிழ்ந்துநெடுங்காலம்வாழ்வாரே. (௧0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

புள்ளோடாவெம்மான்சிறியாய்நீண்டாய் எந்தாதைமன்னெப்போதுன் நன்னீர்சினவில்.

ஆ திருமொழி - ௬உ - க்கு - பாசுரம் - ௬உ0.

---

## ௩ - வது. சினவில்.

திருநறையூர்நம்பிவிஷயம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மோஹனராகம் - ரூபகதாளம்.

※ சினவிற்செங்கணரக்கருயிர்மாளச்
　செற்றவில்லியென்றுகற்றவர்தந்தம்
மனவுட்கொண், டென்றுமெப்போது
　நின்றேத்துமாமுனியைமரமேழெய்தமைந்தனை
நனவிற்சென்றார்க்குநண்ணற்கரியானை
　நானடியேனறையூர்நின்றநம்பியைக்
கனவிற்கண்டேனின்றுகண்டமையாலென்
　கண்ணிணைகள்களிப்பக்களித்தேனே. (௧)

தாயைநினைந்தகன்றேயொக்கவென்னையுந்
　தன்னையேநினைக்கச்செய்து, தானெனக்
காயநினைந்தருட்செய்யுமப்பனை
　யன்றிவ்வையகமுண்டுமிழ்ந்திட்ட

வாயனை, மகரக்குழைகாதனை
மைந்தனைமதிட்கோவலிடைகழி
* ஆயனை, யமரர்க்கரியேற்றையென்
னன்பனையன்றியாதரியேனே. (௨)

வந்தநாள்வந்தென்னெஞ்சிடங்கொண்டான்
மற்றோர்நெஞ்சறியா, னடியேனுடைச்
சிந்தையாய்வந்துதென்புலர்க்கென்னைச்
சேர்கொண்டானிதுசிக்கெனப்பெற்றேன்
கொந்துலாம்பொழில்சூழ்குடந்தைத்தலைக்
கோவினைக்குடமாடியகூத்தனை
எந்தையையெந்தைதந்தைதம்மானை
யெம்பிரானையெத்தான்மறக்கேனே. (௩)

உரங்களாலியன்றமன்னர்மாளப்
பாரதத்தொருதேரைவர்க்காய்ச்சென்
றிரங்கியூர்ந்தவர்க்கின்னருளேசெய்யு
மெம்பிரானை, வம்பார்புனற்காவிரி
அரங்கமாளியென்னாளிவிண்ணாளி
யாழிசூழிலங்கைமலங்கச்சென்று
சரங்களாண்ட, தண்டாமரைக்கண்ணனுக்
கன்றியென்மனந்தாழ்ந்துநில்லாதே. (௪)

ஆங்குவெந்நரகத்தழுந்தும்போதஞ்சே
லென்றடியேனையங்கேவந்து
தாங்கு, தாமரையன்னபொன்னாரடி
யெம்பிரானை, யும்பர்க்கணியாய்நின்ற
வேங்கடத்தரியைப்பரிகீறியை
வெண்ணெயுண்டுரலினிடையாப்புண்ட
தீங்கரும்பினைத், தேனைநன்பாலினை
யன்றியென்மனஞ்சிந்தைசெய்யாதே. (௫)

எட்டனைப்பொழுதாகிலுமென்று
மென்மனத்தகலாதிருக்கும்புகழ்
தட்டலர்த்தபொன்னேயலர்கோங்கின்
சூழ்பொழிற்றிருமாலிருஞ்சோலையங்
கட்டியைக், கரும்பீன்றவின்சாற்றைக்
காதலான்மறைநான்குமுன்னோதிய
பட்டனைப், பரவைத்துயிலேற்றையென்
பண்பனையன்றிப்பாடல்செய்யேனே. (௬)

* "ஆயினை" எனவுமுண்டு.

பண்ணிலின்மொழியாழ்நரம்பிற்பெற்ற
பாலையாகியிங்கேவந்துபுகுந், தென்
கண்ணும்நெஞ்சும்வாயுமிடங்கொண்டான்
கொண்டபின்மறையோர்மனந்தன்னுள்
விண்ணுளார்பெருமானையெம்மானை
வீங்குநீர்மகரந்திளைக்குங்கடல்
வண்ணன், மாமணிவண்ணனெம்மண்ணல்
வண்ணமேயன்றிவாயுரையாதே. (எ)

இனியெப்பாவம்வந்தெய்துஞ்சொல்லீ
ரெமக்கிம்மையேயருள்பெற்றமையா, லடும்
துனியைத்தீர்த்தின்பமேதருகின்றதோர்
தோற்றத்தொன்னெறியை, வையந்தொழப்படும்
முனியைவானவரால்வணங்கப்படும்
முத்தினைப்பத்தர்தாநுகர்கின்றதோர்
கனியைக், காதல்செய்தென்னுள்ளங்கொண்ட
கள்வனையின்றுகண்டுகொண்டேனே. (அ)

என்செய்கேனடியேனுரையீரிதற்கென்று
மென்மனத்தேயிருக்கும்புகழ்த்
தஞ்சையாளியைப்பொன்பெயரோன்
நெஞ்சமன்றிடந்தவனைத்தழலேபுரை
மிஞ்சவாளரக்கன்னகர்பாழ்படச்
சூழ்கடற்சிறைவைத், திமையோர்தொழும்
பொன்செய்மால்வரையைமணிக்குன்றினை
யன்றியென்மனம்போற்றியென்னாதே. (கூ)

* தோடுவிண்டலர்பூம்பொழின்மங்கையர்
தோன்றல்வாட்கலியன்றிருவாலி
நாடன், நன்னறையூர்நின்றநம்பிதன்
நல்லமாமலர்ச்சேவடிசென்னியில்
சூடியுந்தொழுதுமெழுந்தாடியுந்
தொண்டர்கட்கவன்சொன்னசொன்மாலை
பாடல்பத்திவைபாடுமின்றொண்டீர்
பாடநும்மிடைப்பாவநில்லாவே. (கO)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

சினவில்தாய்வந்தரமாங்குளட்டலை பண்ணினியென்செய்கேன்தோடுகண்
சோர.

ஆ_திருமொழி – கூ௩ – க்கு – பாசுரம் – கூ௩O.

# ௬ - வது. கண்சோர.

## திருச்சேறை சாரநாதப்பெருமாள்விஷயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அசாவேரிராகம்-அடதாளம்.

கண்சோரவெங்குருதிவந்திழியவெந்தழல்போற்கூந்தலாளை
மண்சேரமுலையுண்டமாமதலாய்வானவர்தங்கோவேயென்று
விண்சேருமிளந்திங்களகடுருஞ்சுமணிமாடமல்கு, செல்வத்
தண்சேறையெம்பெருமான்றாடொழுவார்காண்மினென்றலைமேலாரே. ௧

அம்புருவவரிநெடுங்கணலர்மகளைவரையகலத்தமர்ந்து, மல்லல்
கொம்புருவவிளங்கனிமேலிளங்கன்றுகொண்டெறிந்தகூத்தர்போலாம்
வம்பலருந்தண்சோலைவண்சேறைவானுந்துகோயின்மேய
எம்பெருமான்றாடொழுவாரெப்பொழுதுமென்மனத்தேயிருக்கின்றாரே.

மீதோடிவாளெயிறுமின்னிலகமுன்விலகுமுருவினாளைக்
காதோடுகொடிமூக்கன்றுடனறுத்தகைத்தலத்தாவென்றுநின்று
தாதோடுவண்டலம்புந்தண்சேறையெம்பெருமான்றாளையேத்திப்
போதோடுபுனற்றூவும்புண்ணியரேவிண்ணவரிற்பொலிகின்றாரே. ௩

தேராளும்வாளரக்கன்றென்னிலங்கைவெஞ்சமத்துப்பொன்றிவீழப்
போராளுஞ்சிலையதனாற்பொருகணைகள்போக்குவித்தாயென்று, நாளும்
தாராளும்வரைமார்பன்றண்சேறையெம்பெருமானும்பராளும்
பேராளன்பேரோதும்பெரியோரையொருகாலும்பிரிகிலேனே. (௪)

வந்திக்குமற்றவர்க்குமாசுடம்பில்வல்லமணர்தமக்குமல்லேன்
முந்திச்சென்றரியுருவாயிரணியனைமுரணழித்தமுதல்வற்கல்லால்
சந்தப்பூமலர்ச்சோலைத்தண்சேறையெம்பெருமான்றாளை, நாளும்
சிந்திப்பார்க்கென்னுள்ளந்தேனூறியெப்பொழுதுந்தித்திக்குமே.(௫)

பண்டேனமாயுலகையன்றிடந்தபண்பாளாவென்றுநின்று
தொண்டானேன்றிருவடியேதுணையல்லாற்றுணையிலேன்சொல்லுகின்றேன்
வண்டேந்துமலர்ப்புறவில்வண்சேறையெம்பெருமானடியார்தம்மைக்
கண்டேனுக்கிதுகாணீரென்னெஞ்சுங்கண்ணிணையுங்களிக்குமாறே.

பைவிரியும்வரியரவிற்படுகடலுட்டுயிலமர்ந்தபண்பாவென்றும்
மைவிரியுமணிவரைபோன்மாயவனேயென்றென்றும்வண்டார்நீலம்
செய்விரியுந்தண்சேறையெம்பெருமான்றிருவடியைச்சிந்தித்தேற்,கென்
ஐயறிவுங்கொண்டானுக்காளானார்க்காளாமென்னன்புதானே. (எ)

உண்ணாதுவெங்கூற்றமோவாதுபாவங்கள்சேரா, மேலை
விண்ணோருமண்ணோரும்வந்திறைஞ்சுமென்றளிர்போலடியினானைப்
பண்ணாரவண்டியம்பும்பைம்பொழில்சூழ்தண்சேறையம்மான்றன்னைக்
கண்ணாரக் * கண்டுருகிக்கையாரத்தொழுவாரைக்கருதுங்காலே. (அ)

கள்ளத்தேன்பொய்யகத்தேனாதலாற்போதொருகாற்கவலையென்னும்
வெள்ளத்தேற்கென்கொலோவிளைவயலுட்கருநீலங் களைஞர்தாளால்
தள்ளத், தேன்மணநாறுந்தண்சேறையெம்பெருமான்றாளை, நாளும்
உள்ளத்தேவைப்பாருக்கிதுகாணிரென்னுள்ளமுருகுமாறே. (கூ)

* பூமாண்சேர்கருங்குழலார்போனடந்துவயனின்றபெடையோடன்னம்
தேமாவினின்னிழலிற்கண்டுயிலுந்தண்சேறையம்மான்றன்னை
வாமான்றேர்ப்பரகாலன்கலிகன்றியொலிமாலைகொண்டுதொண்டீர்
தூமாண்சேர்பொன்னடிமேற்சூட்டுமின்னுந்துணைக்கையாற்றொழுதுநின்றே.

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

கண்அம்புமீதுதேர்வந்திபண்டுபைவிரிவுண்ணுதுகள்ளப்பூமாண்தந்தை.

ஆ_திருமொழி - சுசு - ச்கு - பாசுரம் - சுசO.

---

## ரு - வது. தந்தைகால்.

### திருவழுந்தூர் ஆமருவியப்பன்விஷயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சௌராஷ்டிரராகம் - அடதாளம்.

* தந்தைகாலிற்பெருவிலங்குதாளவிழ, நள்ளிருட்கண்
வந்தவெந்தைபெருமானார்மருவிநின்றவூர்போலும்
முந்திவானமழைபொழியமூவாவுருவின்மறையாளர்
அந்திமூன்றுமனலோம்புமணியார்வீதியழுந்தூரே. (க)

பாரித்தெழுந்தபடைமன்னர்தம்மைமாளப், பாரதத்துத்
தேரிற்பாகனாயூர்ந்ததேவதேவனூர்போலும்
நீரிற்பணைத்தநெடுவாளைக்கஞ்சிப்போனகுருகினங்கள்
ஆரற்கவுளோடருகணையுமணியார்வயல்சூழழுந்தூரே. (உ)

* "கண்டிறைஞ்சி" என்றும் பாடமுண்டு.

செம்பொன்மதிட்சூழ்தென்னிலங்கைக்கிறைவன்சிரங்களையிரண்டும்
உம்பர்வாளிக்கிலக்காகவுதிர்த்தவுரவோனூர்போலும்
கொம்பிலார்ந்தமாதவிமேற்கோதிமேய்ந்தவண்டினங்கள்
அம்பராவுங்கண்மடவாரைம்பாலணையுமழுந்தூரே. (௩)

வெள்ளத்துள்ளோராலிலைமேன்மேவியடியேன்மனம்புகுந், தென்
உள்ளத்துள்ளுங்கண்ணுள்ளுநின்றார்நின்றவூர்போலும்
புள்ளுப்பிள்ளைக்கிரைதேடிப்போனகாதற்பெடையோடும்
அள்ளற்செறுவிற்கயனாடுமணியார்வயல்சூழழுந்தூரே. (௪)

பகலுமிரவுந்தானேயாய்ப்பாரும்விண்ணுந்தானேயாய்
நிகரில்சுடராயிருளாகிநின்றார்நின்றவூர்போலும்
துகிலின்கொடியுந்தேர்த்துகளுந்துன்னிமாதர்கூந்தல்வாய்
அகிலின்புகையான்முகிலேய்க்குமணியார்வீதியழுந்தூரே. (௫)

ஏடிலங்குதாமரைபோற்செவ்வாய்முறுவற்செய்தருளி
மாடுவந்தென்மனம்புகுந்துநின்றார்நின்றவூர்போலும்
நீடுமாடத்தனிச்சூலம்போழக்கொண்டற்றுளிதூவ
ஆடலரவத்தார்போவாவணியார்வீதியழுந்தூரே. (௬)

மாலைப்புகுந்துமலரணைமேல்வைகியடியேன்மனம்புகுந், தென்
நீலக்கண்கள்பனிமல்கநின்றார்நின்றவூர்போலும்
வேலைக்கடல்போல்நெடுவீதிவிண்டோய்சுதைவெண்மணிமாடத்
தாலைப்புகையாலழற்கதிரைமறைக்கும்வீதியழுந்தூரே. (௭)

வஞ்சிமருங்குலிடைநோவமணந்துநின்றகனவகத், தென்
நெஞ்சநிறையக்கைகூப்பிநின்றார்நின்றவூர்போலும்
பஞ்சியன்னமெல்லடிநற்பாவைமார்களாடகத்தின்
அஞ்சிலம்பினார்போவாவணியார்வீதியழுந்தூரே. (௮)

என்னைம்புலனுமெழிலுங்கொண்டிங்கேநெருநலெழுந்தருளிப்
பொன்னங்கலைகண்மெலிவெய்தப்போனபுனிதரூர்போலும்
மன்னுமுதுநீரரவிந்தமலர்மேல்வரிவண்டிசைபாட
அன்னம்பெடையோடுடனாடுமணியார்வயல்சூழழுந்தூரே. (௯)

* நெல்லிற்குவளைகண்காட்ட நீரிற்குமுதம்வாய்காட்ட
அல்லிக்கமலமுகங்காட்டுங்கழனியழுந்தூர்நின்றானை
வல்லிப்பொதும்பிற்குயில்கூவுமங்கைவேந்தன்பரகாலன்
சொல்லிற்பொலிந்ததமிழ்மாலைசொல்லப்பாவநில்லாவே. (௧0)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

தந்தைபாரிசெம்பொன்வெள்ளம்பகலேடுமாலைவஞ்சிஎன்னைநெல்லிற்சிங்கம்.

ஆ திருமொழி - ௬௫ - க்கு - பாசுரம் - ௬௫0.

## ௬ - வது. சிங்கம்.

.....................

### திருவழுந்தூர் ஆமருவியப்பன்விஷயம்.

கலிவிருத்தம்.

மத்யமாவதிராகம் - ரூபகதாளம்.

* சிங்கமதாயவுணன்றிறலாகமுன்கீண்டுகந்த
சங்கமிடத்தானைத்தழலாழிவலத்தானைச்
செங்கமலத்தயனனையார்தென்னழுந்தையின்மன்னிநின்ற
அங்கமலக்கண்ணனையடியேன்கண்டுகொண்டேனே. (௧)

கோவானார்மடியக்கொலைபார்மழுக்கொண்டருளும்
மூவாவானவனைமுழுநீர்வண்ணனை, யடியார்க்
காவாவென்றிரங்கித்தென்னழுந்தையின்மன்னிநின்ற
தேவாதிதேவனையான்கண்டுகொண்டுதிளைத்தேனே. (௨)

உடையானையொலிநீருலகங்கள்படைத்தானை
விடையானோடவன்றுவிறலாழிவிசைத்தானை
அடையார்தென்னிலங்கையழித்தானையணியழுந்தூர்
உடையானை, யடியேனடைந்துய்ந்துபோனேனே. (௩)

குன்றான்மாரிதடுத்தவனைக்குலவேழமொன்று
பொன்றாமை, யதனுக்கருள்செய்தபோரேற்றை
அன்றாவினறுநெய்யமர்ந்துண்ணவணியழுந்தூர்
நின்றானை, யடியேன்கண்டுகொண்டுநிறைந்தேனே. (௪)

கஞ்சனைக்காய்ந்தானைக்கண்ணமங்கையுணின்றானை
வஞ்சகப்பேய்முலையூடுயிர்வாய்மடுத்துண்டானைச்
செஞ்சொனான்மறையோர்தென்னழுந்தையின்மன்னிநின்ற
அஞ்சனக்குன்றந்தன்னையடியேன்கண்டுகொண்டேனே. (௫)

பெரியானையமரர்தலைவற்கும்பிரமனுக்கும்
உரியானை, யுவந்தானவனுக்குமுணர்வதனுக்
கரியானை, யழுந்தூர்மறையோர்களடிபணியும்
கரியானை, யடியேன்கண்டுகொண்டுகளித்தேனே. (௬)

திருவாழ்மார்பன்றன்னைத்திசைமண்ணீரெரிமுதலா
உருவாய்நின்றவனையொலிசேருமாருதத்தை
அருவாய்நின்றவனைத்தென்னழுந்தையின்மன்னிநின்ற
கருவார்கற்பகத்தைக்கண்டுகொண்டுகளித்தேனே. (௭)

நிலையாளாகவென்னையுகந்தானைநிலமகடன்
முலையாள்வித்தகனைமுதுநான்மறைவீதிதொறும்
அலையார்கடல்போன்முழங்குந்தென்னழுந்தையின்மன்னிநின்ற
கலையார்சொற்பொருளைக்கண்டுகொண்டுகளித்தேனே. (அ)

பேராளைக்குடந்தைப்பெருமானை, யிலங்கொளிசேர்
வாரார்மென்முலையாண்மலர்மங்கைநாயகனை
ஆராவின்னமுதைத்தென்னழுந்தையின்மன்னிநின்ற
காரார்கருமுகிலைக்கண்டுகொண்டுகளித்தேனே. (கூ)

* திறன்முருகனனையார்தென்னழுந்தையின்மன்னிநின்ற
அறமுதல்வனவனையணியாலியர்கோன்மருவார்
கறைநெடுவேல்வலவன்கலிகன்றிசொல்லையிரண்டும்
முறைவழுவாமைவல்லார்முழுதாள்வர்வானுலகே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

சிங்கம்கோவுடையான்குன்றுல்கஞ்சன் பெரியான்திருநிலைபோரான்திறல்திரு.

ஆ திருமொழி - கூகூ - க்கு - பாசுரம் - கூகூ0.

---

## எ - வது. திருவுக்கும்.

திருவழுந்தூர் ஆமருவியப்பன்விஷயம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

செஞ்சுருட்டிராகம் - ரூபகதாளம்.

* திருவுக்குந்திருவாகியசெல்வா
  தெய்வத்துக்கரசேசெய்யகண்ணா
உருவச்செஞ்சுடராழிவல்லானே
  யுலகுண்டவொருவாதிருமார்பா
ஒருவர்க்காற்றியுய்யும்வகையென்று
  லுடனின்றைவரென்னுட்புகுந், தொழியா
தருவித்தின்றிடவஞ்சிநின்னடைந்தே
  னழுந்தூர்மேற்றிசைநின்றவம்மானே. (க)

பந்தார்மென்விரனல்வளைத்தோளி
  பாவைபூமகடன்னொடுமுடனே
வந்தா, யென்மனத்தேமன்னிநின்றாய்
  மால்வண்ணாமழைபோலொளிவண்ணா

சந்தோகாபௌழியாதைத்திரியா
சாமவேதியனேநெடுமாலே
அந்தோநின்னடியன்றிமற்றறியே
னழுந்தூர்மேற்றிசைநின்றவம்மானே. (௨)

நெய்யாராழியுஞ்சங்கமுமேந்து
நீண்டதோளுடையா, யடியேனைச்
செய்யாதவுலகத்திடைச்செய்தாய்
சிறுமைக்கும்பெருமைக்குமுட்புகுந்து
பொய்யாலைவரென்மெய்குடியேறிப்
போற்றிவாழ்வதற்கஞ்சிநின்னடைந்தேன்
ஐயாநின்னடியன்றிமற்றறியே
னழுந்தூர்மேற்றிசைநின்றவம்மானே. (௩)

பரனேபஞ்சவன்பௌழியன்சோழன்
பார்மன்னர்மன்னர்தாம்பணிந்தேத்தும்
வரனே, மாதவனேமதுசூதாமற்றோர்
நற்றுணைநின்னலாலிலேன்காண்
நரனேநாரணனேதிருநறையூர்நம்பி
யெம்பெருமானும்பராளும்
அரனே, யாதிவராகமுன்னா
யழுந்தூர்மேற்றிசைநின்றவம்மானே. (௪)

விண்டான்விண்புகவெஞ்சமத்தரியாய்ப்
பரியோன்மார்வகம்பற்றிப்பிளந்து
பண்டானுய்யவோர்மால்வரையேந்தும்
பண்பாளாபரனேபவித்திரனே
கண்டேனான்கலியுகத்ததன்றன்மைக்
கருமமாவதுமென்றனக்கறிந்தேன்
அண்டாநின்னடியன்றிமற்றறியே
னழுந்தூர்மேற்றிசைநின்றவம்மானே. (௫)

தோயாவின்றயிர்நெய்யமுதுண்ணச்
சொன்னார்சொல்லிநகும்பரிசே, பெற்ற
தாயாலாப்புண்டிருந்தழுதேங்குந்
தாடாளாதரையோர்க்கும்விண்ணோர்க்கும்
சேயாய், கிரேததிரேததுவாபர
கலியுகமிவைநான்குமுன்னானாய்
ஆயாநின்னடியன்றிமற்றறியே
னழுந்தூர்மேற்றிசைநின்றவம்மானே. (௬)

கறுத்துக்கஞ்சனையஞ்சமுனிந்தாய்
 கார்வண்ணாகடல்போலொளிவண்ணா
இறுத்திட்டான்விடையேழுமுன்வென்று
 யெந்தாயந்தரமேழுமுன்னுறைய்
பொறுத்துக்கொண்டிருந்தாற்பொறுக்கொணா
 போகமேநுகர்வான்புகுந், தைவர்
அறுத்துத்தின்றிடவஞ்சிநின்னடைந்தே
 னழுந்தூர்மேற்றிசைநின்றவம்மானே. (எ)

நெடியானேகடியார்கலிநம்பீ
 நின்னையேநினைந்திங்கிருப்பேனைக்
கடியார்காளையரைவர்புகுந்து
 காவல்செய்தவக்காவலைப்பிழைத்துக்
குடிபோந்துன்னடிக்கீழ்வந்துபுகுந்தேன்
 கூறைசோறிவைதந்தெனக்கருளி
அடியேனைப்பணியாண்டுகொளெந்தா
 யழுந்தூர்மேற்றிசைநின்றவம்மானே. (அ)

கோவாயைவரென்மெய்குடியேறிக்
 கூறைசோறிவைதாவென்றுகுமைத்துப்
போவார், நானவரைப்பொறுக்கில்லேன்
 புனிதாபுட்கொடியாய்நெடுமாலே
தீவாய்நாகணையிற்றுயில்வானே
 திருமாலேயினிச்செய்வதொன்றறியேன்
ஆவாவென்றடியேற்கிறையிரங்கா
 யழுந்தூர்மேற்றிசைநின்றவம்மானே. (கூ)

* அன்னமன்னுபைம்பூம்பொழில்சூழ்ந்த
 வழுந்தூர்மேற்றிசைநின்றவம்மானைக்
கன்னிமன்னுதிண்டோட்கலிகன்றி
 யாலிநாடன்மங்கைக்குலவேந்தன்
சொன்னவின்றமிழ்நன்மணிக்கோவைத்
 தூயமாலையிவைபத்தும்வல்லார்
மன்னிமன்னவராயுலகாண்டுமான
 வெண்குடைக்கீழ்மகிழ்வாரே. (கல)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

திருப்பந்தார்நெய்பரனேவிண்தோயாக்கறுத்துநெடியானேகோவாயன்னம்செங்கமலம்.

ஆ திருமொழி - கூஎ - க்கு - பாசுரம் - கூஎ0.

## அ - வது. செங்கமலம்.

திருவழுந்தூர் ஆமருவியப்பன்விஷயம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பியாகடைராகம் - ஆதிதாளம்.

* செங்கமலத்திருமகளும்புவியுஞ்செம்பொற்
  றிருவடியினிணைவருடமுனிவரேத்த
வங்கமலிதடங்கடலுளனந்தனென்னும்
  வரியரவினணைத்துயின்றமாயோன்காண்மின்
எங்குமலிநிறைபுகழ்நால்வேதமைந்து
  வேள்விகளுங்கேள்விகளுமியன்றதன்மை
அங்கமலத்தயனனையார்பயிலுஞ்செல்வத்
  தணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (க)

முன்னிவ்வுலகேழுமிருண்மண்டியுண்ண
  முனிவரொடுதானவர்கடிகைப்ப, வந்து
பன்னுகலைநால்வேதப்பொருளையெல்லாம்
  பரிமுகமாயருளியவெம்பரமன்காண்மின்
செந்நெல்மலிகதிர்கவரிவீசச்சங்க
  மவைமுரலச்செங்கமலமலரையேறி
அன்னமலிபெடையோடுமமருஞ்செல்வத்
  தணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (உ)

குலத்தலையமதவேழம்பொய்கைபுக்குக்
  கோண்முதலைபிடிக்கவதற்கனுங்கிநின்று
நிலத்திகழுமலர்ச்சுடரேய்சோதியென்ன
  நெஞ்சிடர்தீர்த்தருளியவென்னிமலன்காண்மின்
மலைத்திகழ்சந்தகில்கனகமணியுங்கொண்டு
  வந்துந்திவயல்கடொறுமடைகள்பாய
அலைத்துவரும்பொன்னிவளம்பெருகுஞ்செல்வத்
  தணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (ங)

சிலம்புமுதற்கலனணிந்தோர்செங்கட்குன்றந்
  திகழ்ந்ததெனத்திருவுருவம்பன்றியாகி
இலங்குபுவிமடந்தைதனையிடந்துபுல்கி
  யெயிற்றிடைவைத்தருளியவெம்மீசன்காண்மின்
புலம்புசிறைவண்டொலிப்பப்பூகந்தொக்கப்
  பொழில்கடொறுங்குயில்கூவமயில்களால
அலம்புதிரைப்புனல்புடைசூழ்ந்தழகார்செல்வத்
  தணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (ச)

சினமேவுமடலரியி னுருவமாகித்
திறன்மேவுமிரணியனதாகங்கீண்டு
மனமேவும்வஞ்சனையால்வந்தபேய்ச்சி
மாளவுயிர்வவ்வியவெம்மாயோன்காண்மின்
இனமேவும்வரிவளைக்கையேந்துங்கோவை
யேய்வாய்மரதகம்போற்கிளியினின்சொல்
அனமேவுநடைமடவார்பயிலுஞ்செல்வத்
தணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (ரு)

வானவர்தந்துயர்தீரவந்துதோன்றி
மாணுருவாய்மூவடிமாவலியைவேண்டித்
தானமரவேழுலகுமளந்தவென்றித்
தனிமுதற்சக்கரப்படையென்றலைவன்காண்மின்
தேனமரும்பொழிற்ழுவுமெழில்கொள்வீதிச்
செழுமாடமாளிகைகள்கூடந்தோறும்
ஆனதொல்சீர்மறையாளர்பயிலுஞ்செல்வத்
தணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (சா)

பந்தணைந்தமென்விரலாள்சீதைக்காகிப்
பகலவன்மீதியங்காதவிலங்கைவேந்தன்
அந்தமில்திண்கரஞ்சிரங்கள்புரண்டுவீழ
வடுகணையாலெய்துகந்தவம்மான்காண்மின்
செந்தமிழும்வடகலையுந்திகழ்ந்தநாவர்
திசைமுகனையனையவர்கள்செம்மைமிக்க
வந்தணர்தமாகுதியின்புகையார்செல்வத்
தணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (எ)

கும்பமிகுமதவேழங்குலையக்கொம்பு
பறித்துமழவிடையடர்த்துக்குரவைகோத்து
வம்பவிழுமலர்க்குழலாளாய்ச்சிவைத்த
தயிர்வெண்ணெயுண்டுகந்தமாயோன்காண்மின்
செம்பவளமரதகநன்முத்தங்காட்டத்
திகழ்பூகங்கதலிபலவளமிக்கெங்கும்
அம்பொன்மதிட்பொழில்புடைசூழ்ந்தழகார்செல்வத்
தணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (அ)

ஊடேறுகஞ்சனொடுமல்லும்வில்லு
மொண்கரியுமுருள்சகடுமுடையச்செற்ற
நீடேறுபெருவலித்தோளுடையவென்றி
நிலவுபுகழ்நேமியங்கைநெடியோன்காண்மின்

சேடேறுபொழில்தழுவுமெழில்கொள்வீதித்
திருவிழவில்மணியணிந்ததிண்ணைதோறும்
ஆடேறுமலர்க்குழலார்பயிலுஞ்செல்வத்
தணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (கூ)

* பன்றியாய்மீனாகியரியாய்ப்பாரைப்
படைத்துக்காத்துண்டுமிழ்ந்தபரமன்றன்னை
அன்றமரர்க்கதிபதியுமயனுஞ்சேயு
மடிபணியவணியழுந்தூர்நின்றகோவைக்
கன்றிநெடுவேல்வலவனாலிநாடன்
கலிகன்றியொலிசெய்தவின்பப்பாடல்
ஒன்றினொடொன்குமோராந்தும்வல்லா
ரொலிகடல்சூழுலகாளுமும்பர்தாமே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

செங்கமலமுன்குலேசிலம்புசினவான்பந்தரும்பமூடேறுபன்றிகள்ளம்.

ஆ_திருமொழி - சூஅ - க்கு - பாசுரம் - சூஅ0.

---

## கூ - வது. கள்ளம்.

திருச்சிறுபுலியூர் அருள்மாகடல்நாயகன்விஷயம்.

கலிவிருத்தம்.

அபரூபராகம் - ஆதிதாளம்.

* கள்ளம்மனம்விள்ளும்வகைகருதிக்கழல்தொழுவீர்
வெள்ளம்முதுபரவைத்திரைவிரியக், கரையெங்கும்
தெள்ளும்மணிதிகழுஞ்சிறுபுலியூர்ச்சலசயனத்
துள்ளும், மெனதுள்ளத்துளுமுறைவாரையுள்ளீரோ. (க)

தெருவிற்றிரிசிறுநோன்பியர்செஞ்சோற்றொடுகஞ்சி
மருவிப், பிரிந்தவர்வாய்மொழிமதியாதுவந்தடைவீர்
திருவிற்பொலிமறையோர்சிறுபுலியூர்ச்சலசயனத்
துருவக்குறளடிகள்ளடியுணர்மின்னுணர்வீரோ. (உ)

பறையும்வினைதொழுதுய்ம்மினீர்பணியுஞ்சிறுதொண்டீர்
அறையும்புனலொருபால்வயலொருபால்பொழிலொருபால்
சிறைவண்டினமறையுஞ்சிறுபுலியூர்ச்சலசயனத்
துறையும், மிறையடியல்லதொன்றிறையுமறியேனே. (ரு)

வானார்மதிபொதியுஞ்சடைமழுவாளியொடொருபால்
தானாகியதலைவன்னவனமரர்க்கதிபதியாம்
தேனார்பொழில்தழுவுஞ்சிறுபுலியூர்ச்சலசயனத்
தானாயுன, தடியல்லதொன்றறியேனடியேனே. (சு)

நந்தாநெடுநரகத்திடைநணுகாவகை, நாளும்
எந்தாயெனவிமையோர்தொழுதேத்தும்மிட, மெறிநீர்ச்
செந்தாமரைமலருஞ்சிறுபுலியூர்ச்சலசயனத்
தந்தாமரையடியாயுனதடியேற்கருள்புரியே. (ரு)

முழுநீலமுமலராம்பலுமரவிந்தமும்விரவிக்
கழுநீரொடுமடவாரவர்கண்வாய்முகமலரும்
செழுநீர்வயல்தழுவுஞ்சிறுபுலியூர்ச்சலசயனம்
தொழுநீர்மையதுடையாரடிதொழுவார்துயரிலரே. (சு)

சேயோங்குதண்டிருமாலிருஞ்சோலைமலையுறையும்
மாயா, வெனக்குரையாயிதுமறைநான்கினுளாயோ
தீயோம்புகைமறையோர்சிறுபுலியூர்ச்சலசயனத்
தாயோ, வுனதடியார்மனத்தாயோவறியேனே. (எ)

மையார்வரிநீலமலர்க்கண்ணார்மனம்விட்டிட்
டுய்வானுனகழலேதொழுதெழுவேன்கிளிமடவார்
செவ்வாய்மொழிபயிலுஞ்சிறுபுலியூர்ச்சலசயனத்
தைவாயரவணைமேலுறையமலாவருளாயே. (அ)

கருமாமுகிலுருவாகனலுருவாபுனலுருவா
பெருமால்வரையுருவாபிறவுருவாநினதுருவா
திருமாமகள்மருவுஞ்சிறுபுலியூர்ச்சலசயனத்
தருமாகடலமுதேயுனதடியேசரணமே. (கூ)

* சீரார்நெடுமறுகிற்சிறுபுலியூர்ச்சலசயனத்
தேரார்முகில்வண்ணன்றனையிமையோர்பெருமானைக்
காரார்வயல்மங்கைக்கிறைகலியன்னொலிமாலை
பாராரிவைபரவித்தொழபாவம்பயிலாவே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

கள்ளம்தெருவிற்பறைவான்நந்தாமுழுசேமையார்கருசீரார்பெரும்புற.

ஆ திருமொழி-சுக-க்கு-பாசுரம்-சுகூ0.

## க0 - வது. பெரும்புற.



திருக்கண்ணமங்கை பக்தவத்ஸலபிரான்விஷயம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தோடிராகம் - அடதாளம்.

* பெரும்புறக்கடலையடலேற்றினைப்
  பெண்ணையாணை, யெண்ணின்முனிவர்க்
கருடருந்தவத்தைமுத்தின்றிரட்கோவையைப்
  பத்தராவியைநித்திலத்தொத்தினை
அரும்பினையலரையடியேன்மனத்தாசையை
  யமுதம்பொதியுஞ்சுவைக்
கரும்பினைக், கனியைச்சென்றுநாடிக்
  கண்ணமங்கையுட்கண்டுகொண்டேனே. (க)

மெய்ந்நலத்தவத்தைத்திவத்தைத்தரும்
  மெய்யைப்பொய்யினைக்கையிலோர்சங்குடை
மைந்நிறக்கடலைக்கடல்வண்ணனைமாலை
  யாலிலைப்பள்ளிகொண்மாயனை
நென்னலைப்பகலையிற்றைநாளினை
  நாளையாய்வருந்திங்களையாண்டினைக்
கன்னலைக்கரும்பினிடைத்தேறலைக்
  கண்ணமங்கையுட்கண்டுகொண்டேனே. (உ)

எங்களுக்கருள்செய்கின்றவீசனை
  வாசவார்குழலாள்மலைமங்கைதன்
பங்கனைப், பங்கில்வைத்துகந்தான்றன்னைப்
  பான்மையைப்பனிமாமதியந்தவழ்
மங்குலைச்சுடரைவடமாமலையுச்சியை
  நச்சிநாம்வணங்கப்படும்
கங்குலைப், பகலைச்சென்றுநாடிக்
  கண்ணமங்கையுட்கண்டுகொண்டேனே. (ங)

பேய்முலைத்தலைநஞ்சுண்டபிள்ளையைத்
  தெள்ளியார்வணங்கப்படுந்தேவனை
மாயனைமதிட்கோவலிடைகழி
  மைந்தனையன்றியந்தணர்சிந்தையுள்
ஈசனை, யிலங்குஞ்சுடர்ச்சோதியை
  யெந்தையையெனக்கெய்ப்பினில்வைப்பினைக்
காசினைமணியைச்சென்றுநாடிக்
  கண்ணமங்கையுட்கண்டுகொண்டேனே. (ச)

ஏற்றினையிமயத்துளெம்மீசனை
யிம்மையைமறுமைக்குமருந்தினை
ஆற்றலையண்டத்தப்புறத்துய்த்திடு
மையனைக்கையிலாழியொன்றேந்திய
கூற்றினைக், குருமாமணிக்குன்றினை
நின்றவூர்நின்றநித்திலத்தொத்தினைக்
காற்றினைப்புனலைச்சென்றுநாடிக்
கண்ணமங்கையுட்கண்டுகொண்டேனே. (ரு)

துப்பனைத்துரங்கம்படச்சிறியதோன்றலைச்
சுடர்வான்கலன்பெய்ததோர்
செப்பினைத், திருமங்கைமணாளனைத்
தேவனைத்திகழும்பவளத்தொளி
பொப்பனை, யுலகேழினையூழியை
யாழியேந்தியகையனையந்தணர்
கற்பினைக், கழுநீர்மலரும்வயற்
கண்ணமங்கையுட்கண்டுகொண்டேனே. (சா)

திருத்தனைத்திசைநான்முகன்றந்தையைத்
தேவதேவனைமூவரின்முன்னிய
விருத்தனை, விளங்குஞ்சுடர்ச்சோதியை
விண்ணைமண்ணினைக்கண்ணுதல்கூடிய
வருத்தனை, யரியைப்பரிகீறிய
வப்பனையப்பிலாரழலாய்நின்ற
கருத்தினைக், களிவண்டறையும்பொழிற்
கண்ணமங்கையுட்கண்டுகொண்டேனே. (எ)

வெஞ்சினக்களிற்றைவிளங்காய்வீழக்
கன்றுவீசியவீசனைப், பேய்மகள்
துஞ்சநஞ்சுசுவைத்துண்டதோன்றலைத்
தோன்றல்வாளரக்கன்கெடத்தோன்றிய
நஞ்சினை, யமுதத்தினைநாதனை
நச்சுவாருச்சிமேனிற்குநம்பியைக்
கஞ்சனைத்துஞ்சவஞ்சித்தவஞ்சனைக்
கண்ணமங்கையுட்கண்டுகொண்டேனே. (அ)

பண்ணினைப்பண்ணினின்றதோர்பான்மையைப்
பாலுள்நெய்யினைமாலுருவாய்நின்ற
விண்ணினை, விளங்குஞ்சுடர்ச்சோதியை
வேள்வியைவிளக்கினொளிதன்னை

மண்ணினைமலையையலைநீரினைமாலை
 மாமதியைமறையோர்தங்கள்
கண்ணினைக், கண்களாரளவுநின்று
 கண்ணமங்கையுட்கண்டுகொண்டேனே. (கூ)

* கண்ணமங்கையுட்கண்டுகொண்டேனென்று
 காதலாற்கலிகன்றியுரைசெய்த
வண்ணவொண்டமிழொன்பதோடொன்றிவை
 வல்லராயுரைப்பார்மதியந்தவழ்
விண்ணில்விண்ணவராய்மகிழ்வெய்துவர்
 மெய்மைசொல்லில்வெண்சங்கமொன்றேந்திய
கண்ண, நின்றனக்குங்குறிப்பாகிற்
 கற்கலாங்கவியின்பொருள்தானே. (க0)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

பெருமெய் எங்கள்பேய் ஏற்றின் துப்பன் திருத்தன் வெஞ்சினப்பண்கண்சிலை.

ஆ பத்து - எ - ல் - திருமொழி - எ0 - க்கு - பாசுரம் - எ00.

ஏழாம்பத்து முற்றியது.

---

## எட்டாம்பத்து.

### க - வது. சிலையிலங்கு.

திருக்கண்ணபுரம் சௌரிராசப்பெருமாள்விஷயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

காம்போஜிராகம் - ரூபகதாளம்.

* சிலையிலங்குபொன்னாழிதிண்படைதண்டொண்சங்கமென்கின்றாளால்
மலையிலங்குதோளான்கேமற்றவனுக்கெற்றேகாணென்கின்றாளால்
முலையிலங்குபூம்பயலைமுன்போடவன்போடியிருக்கின்றாளால்
கலையிலங்குமொழியாளர்கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ.

செருவரைமுன்னாசறுத்தசிலையன்றோகைத்தலத்ததென்கின்றாளால்
பொருவரைமுன்போர்துலைத்தபொன்னாழிமற்றொருகையென்கின்றாளால்
ஒருவரையுநின்னொப்பாரொப்பில்லாவென்னப்பாவென்கின்றாளால்
கருவரைபோனின்றானைக்கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ.

துன்னுமாமணிமுடிமேற்றுழாயலங்கடோன்றுமாலென்கின்றாளால்
மின்னுமாமணிமகரக்குண்டலங்கள்வில்வீசுமென்கின்றாளால்
பொன்னின்மாமணியாரமணியாகத்திலங்குமாலென்கின்றாளால்
கன்னிமாமதிட்புடைசூழ்கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ.

தாராயதண்டுளபவண்டுழுதவரைமார்பனென்கின்றாளால்
போரானைக்கொம்பொசித்தபுட்பாகனென்னம்மானென்கின்றாளால்
ஆரானுங்காண்மின்களம்பவளவாயவனுக்கென்கின்றாளால்
கார்வானநின்றதிருங்கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ. (௪)

அடித்தலமுந்தாமரையேயங்கைகளும்பங்கயமேயென்கின்றாளால்
முடித்தலமும்பொற்பூணுமென்னெஞ்சத்துள்ளகலாதென்கின்றாளால்
வடித்தடங்கண்மலரவளோவரையாகத்துள்ளிருப்பாளென்கின்றாளால்
கடிக்கமலங்கள்ளுகுக்குங்கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ.

பேராயிரமுடையபேராளன்பேராளனென்கின்றாளால்
ஏரார்கனமகரக்குண்டலத்தனெண்டோளனென்கின்றாளால்
நீரார்மழைமுகிலேநீள்வரையேயொக்குமாலென்கின்றாளால்
காரார்வயன்மருவுங்கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ. (௬)

செவ்வரத்தவுடையாடையதன்மேலோர்சிவளிகைக்கச்சென்கின்றாளால்
அவ்வரத்தவடியிணையுமங்கைகளும்பங்கயமேயென்கின்றாளால்
மைவளர்க்குமணியுருவமரதகமோமழைமுகிலோவென்கின்றாளால்
கைவளர்க்குமழலாளர்கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொளோ. எ

கொற்றப்புள்ளொன்றேறிமன்றூடேவருகின்றானென்கின்றாளால்
வெற்றிப்போரிந்திரற்குமிந்திரனேயொக்குமாலென்கின்றாளால்
பெற்றக்காலவனாகம்பெண்பிறந்தோமுய்யோமோவென்கின்றாளால்
கற்றநூன்மறையாளர்கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ.(அ)

வண்டமரும்வனமாலைமணிமுடிமேன்மணநாறுமென்கின்றாளால்
உண்டிவர்பாலன்பெனக்கென்றொருக்காலும்பிரிகிலேனென்கின்றாளால்
பண்டிவனைக்கண்டறிவதெவ்வூரில்யாமென்றேபயில்கின்றாளால்
கண்டவர்தமனம்வழங்குங்கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ.

※ மாவளருமென்னோக்கிமாதராள்மாயவனைக்கண்டாளென்று
காவளருங்கடிபொழில்சூழ்கண்ணபுரத்தம்மானைக்கலியன்சொன்ன
பாவளருந்தமிழ்மாலைபன்னியநூலிவையைந்துமைந்தும்வல்லார்
பூவளருங்கற்பகஞ்சேர்பொன்னுலகின்மன்னவராய்ப்புகழ்தக்கோரே.

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

சிலைசெருத்துன்னுதாரடிப்பேர்செவ்வரகொற்றவண்டமாவளருந்தெள்ளியீர்.

ஆ திருமொழி - எக - க்கு - பாசுரம் - எக௦.

## உ - வது. தெள்ளியீர்.

இதுவுமது.

கலிவிருத்தம்.

சைந்தவிராகம் - அடதாளம்.

* தெள்ளியீர்தேவர்க்குந்தேவர்திருத்தக்கீர்
வெள்ளியீர்வெய்யவிழுநிதிவண்ணரோ
துள்ளுநீர்க்கண்ணபுரந்தொழுதாளிவள்
கள்வியோ, கைவளைகொள்வதுதக்கதே. (க)

நீணிலாமுற்றத்துநின்றிவணோக்கினாள்
காணுமோகண்ணபுரமென்றுகாட்டினாள்
பாணனார்திண்ணமிருக்கவினியிவள்
நாணுமோ, நன்றுநன்றுநறையூரர்க்கே. (உ)

அருவிசோர்வேங்கடநீர்மலையென்றுவாய்
வெருவினாள், மெய்யம்வினவியிருக்கின்றாள்
பெருகுசீர்க்கண்ணபுரமென்றுபேசினாள்
உருகினாள், உண்மெலிந்தாளிதுவென்கொலோ. (ங)

உண்ணுநாளில்லையுறக்கமுந்தானில்லைப்
பெண்மையுஞ்சாலநிறைந்திலள்பேதைதான்
கண்ணனூர்கண்ணபுரந்தொழுங்கார்க்கடல்
வண்ணர்மே, லெண்ணமிவட்கிதுவென்கொலோ. (ச)

கண்ணனூர்கண்ணபுரந்தொழுங்காரிகை
பெண்மையுன்றன்னுடையுண்மையுரைக்கின்றாள்
வெண்ணெயுண்டாப்புண்டவண்ணம்விளம்பினால்
வண்ணமும்பொன்னிறமாவதொழியுமே. (ரு)

வடவரைநின்றும்வந், தின்றுகணபுரம்
இடவகைகொள்வதியாமென்றுபேசினாள்
மடவரன்மாதரொன்பேதையிவர்க்கிவள்
கடவதென், கண்டுயிலின்றிவர்கொள்ளவே. (சா)

தரங்கநீர்பேசிலுந்தண்மதிகாயினும்
இரங்குமோவெத்தனைநாளிருந்தெள்கினாள்
துரங்கம்வாய்கீண்டுகந்தானதுதொன்மை, யூர்
அரங்கமேயென்பதிவடனக்காசையே. (எ)

தொண்டெல்லாநின்னடியேதொழுதுய்யுமா
கண்டு, தான்கண்ணபுரந்தொழப்போயினள்
வண்டுலாங்கோதையென்பேதைமணிநிறம்
கொண்டு, தான்கோயின்மைசெய்வதுதக்கதே. (அ)

முள்ளெயிறேந்திலகூழைமுடிகொடா
தெள்ளியளென்பதோர்தேசிலளென்செய்கேன்
கள்ளவிழ்சோலைக்கணபுரங்கைதொழும்
பிள்ளையைப், பிள்ளையென்றெண்ணப்பெறுவரே. (௯)

* கார்மலிகண்ணபுரத்தெம்மடிகளைப்
பார்மலிமங்கையர்கோன்பரகாலன்சொல்
சீர்மலிபாடலிவைபத்தும்வல்லவர்
நீர்மலிவையத்துணீடுநிற்பார்களே. (௧0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

தெள்ளிநீணிலாவருவிஉண்ணுங்கண்ணன்வடதரங்கன்தொண்டு முள்கார்கரை.

ஆ திருமொழி - ௭௨ - க்கு - பாசுரம் - ௭௨0.

---

## ௩ - வது. கரையெடுத்த.

### திருக்கண்ணபுரம் சௌரிராஜன்விஷயம்.

கலிவிருத்தம்.

கேதாரகௌளராகம் - ரூபகதாளம்.

* கரையெடுத்தசுரிசங்குங்கனபவளத்தெழுகொடியும்
திரையெடுத்துவருபுனல்சூழ்திருக்கண்ணபுரத்துறையும்
விரையெடுத்ததுழாயலங்கல்விறல்வரைத்தோட்புடைபெயர
வரையெடுத்தபெருமானுக்கிழந்தேனென்வரிவளையே. (௧)

அரிவிரவுமுகிற்கணத்தாலகிற்புகையால்வரையோடும்
தெரிவரியமணிமாடத்திருக்கண்ணபுரத்துறையும்
வரியரவினணைத்துயின்றுமழைமதத்தசிறுதறுகட்
கரிவெருவமருப்பொசித்தார்க்கிழந்தேனென்கனவளையே. (௨)

துங்கமாமணிமாடநெடுமுகட்டின்சூலிகை, போம்
திங்கள்மாமுகிறுரிக்குந்திருக்கண்ணபுரத்துறையும்
பைங்கண்மால்விடையடர்த்துப்பனிமதிகோள்விடுத்துகந்த
செங்கண்மாலம்மானுக்கிழந்தேனென்செறிவளையே. (ரு)

கணமருவுமயிலகவுகடிபொழில்சூழ்நெடுமறுகில்
திணமருவுகனமதிள்சூழ்திருக்கண்ணபுரத்துறையும்
மணமருவுதோளாய்ச்சியார்க்கப்போ, யுரலோடும்
புணர்மருதமிறநடந்தாற்கிழந்தேனென்பொன்வளையே. (சா)

வாயெடுத்தமந்திரத்தாலந்தணர்தஞ்செய்தொழில்கள்
தீயெடுத்துமறைவளர்க்குந்திருக்கண்ணபுரத்துறையும்
தாயெடுத்தசிறுகோலுக்குளைந்தோடித், தயிருண்ட
வாய்துடைத்தமைந்தனுக்கிழந்தேனென்வரிவளையே. (ரு)

மடலெடுத்தநெடுந்தாழைமருங்கெல்லாம்வளர்பவளம்
திடலெடுத்துச்சுடரிமைக்குந்திருக்கண்ணபுரத்துறையும்
அடலடர்த்தன்றிரணியனைமுரணழிய, வணியுகிரால்
உடலெடுத்தபெருமானுக்கிழந்தேனென்னொளிவளையே. (சா)

வண்டமருமலர்ப்புன்னைவரிநீழலணிமுத்தம்
தெண்டிரைகள்வரத்திரட்டுந்திருக்கண்ணபுரத்துறையும்
எண்டிசையு * மெழுகடலுமிருநிலனும்பெருவிசும்பும்
உண்டுமிழ்ந்தபெருமானுக்கிழந்தேனென்னொளிவளையே, (எ)

கொங்குமலிகருங்குவளைகண்ணாகத்தெண்கயங்கள்
செங்கமலமுகமலர்த்துந்திருக்கண்ணபுரத்துறையும்
வங்கமலிதடங்கடலுள்வரியரவினணைத்துயின்ற
செங்கமலநாபனுக்கிழந்தேனென்செறிவளையே. (அ)

வாராளுமிளங்கொங்கைநெடும்பணைத்தோண்மடப்பாவை
சீராளும்வரைமார்பன்திருக்கண்ணபுரத்துறையும்
பேராளனாயிரம்பேராயிரவாயரவணைமேல்
பேராளர்பெருமானுக்கிழந்தேனென்பெய்வளையே. (கூ)

* தேமருவுபொழில்புடைசூழ்திருக்கண்ணபுரத்துறையும்
வாமனனை, மறிகடல்சூழ்வயலாலிவளநாடன்
காமருசீர்க்கலிகன்றிகண்டுரைத்ததமிழ்மாலை
நாமருவியிவைபாடவினையாயநண்ணாவே. (கo)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

கரையரிதுங்கக்கணம்வாய்மடல்வண்டமர்கொங்குவாராள்தேமருவுவிண்.

ஆ திருமொழி - எங - க்கு - பாசுரம் - எஙo.

---

* "எழுசுடரும்" என்றும்பாடமுண்டு.

## ச - வது. விண்ணவர்.

### திருக்கண்ணபுரம் சௌரிராஜன்விஷயம்.

கலிவிருத்தம்.

கமாசுராகம் - ஆதிதாளம்.

* விண்ணவர்தங்கள்பெருமான்றிருமார்பன்
மண்ணவரெல்லாம்வணங்குமலிபுகழ்சேர்
கண்ணபுரத்தெம்பெருமான்கதிர்முடிமேல்
வண்ணநறுந்துழாய்வந்தூதாய்கோற்றும்பீ. (க)

வேதமுதல்வன்விளங்குபுரிநூலன்
பாதம்பரவிப்பலரும்பணிந்தேத்திக்
காதன்மைசெய்யுங்கண்ணபுரத்தெம்பெருமான்
தாதுநறுந்துழாய்தாழ்ந்தூதாய்கோற்றும்பீ. (உ)

விண்டமலரெல்லாமூதிநீயென்பெறுதி
அண்டமுதல்வனமரர்களெல்லாரும்
கண்டுவணங்குங்கண்ணபுரத்தெம்பெருமான்
வண்டுநறுந்துழாய்வந்தூதாய்கோற்றும்பீ. (௩)

நீர்மலிகின்றதோர்மீனுயோராமையுமாய்
சீர்மலிகின்றதோர்சிங்க * வுருவாயக்
கார்மலிவண்ணன்கண்ணபுரத்தெம்பெருமான்
தார்மலிதண்டுழாய்தாழ்ந்தூதாய்கோற்றும்பீ. (ச)

ஏரார்மலரெல்லாமூதிநீயென்பெறுதி
பாராருலகம்பரவப்பெருங்கடலுள்
காராமையானகண்ணபுரத்தெம்பெருமான்
தாரார்நறுந்துழாய்தாழ்ந்தூதாய்கோற்றும்பீ. (ரு)

மார்விற்றிருவன்வலனேந்துசக்கரத்தன்
பாரைப்பிளந்தபரமன்பரஞ்சோதி
காரிற்றிகழ்காயாவண்ணன்கதிர்முடிமேல்
தாரினறுந்துழாய்தாழ்ந்தூதாய்கோற்றும்பீ. (சு)

வாமனன்கற்கிமதுசூதன்மாதவன்
தார்மன்னுதாசரதியாயதடமார்பன்
காமன்றன்றுதைகண்ணபுரத்தெம்பெருமான்
தாமநறுந்துழாய்தாழ்ந்தூதாய்கோற்றும்பீ. (எ)

* "வுருவாகி" என்பதுமுண்டு.

நீலமலர்கணெடுநீர்வயன்மருங்கில்
சாலமலரெல்லாமூதாதே, வாளரக்கர்
காலன்கண்ணபுரத்தெம்பெருமான்கதிர்முடிமேல்
கோலநறுந்துழாய்கொண்டூதாய்கோற்றும்பீ. (அ)

நந்தன்மதலைநிலமங்கைநற்றுணைவன்
அந்தமுதல்வனமரர்கடம்பெருமான்
கந்தங்கமழ்காயாவண்ணன்கதிர்முடிமேல்
கொந்துநறுந்துழாய்கொண்டூதாய்கோற்றும்பீ. (கூ)

* வண்டமருஞ்சோலைவயலாலிநன்னாடன்
கண்டசீர்வென்றிக்கலியனொலிமாலை
கொண்டனிறவண்ணன்கண்ணபுரத்தானைத்
தொண்டரோம்பாடநினைந்தூதாய்கோற்றும்பீ. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.
ஜீயர்திருவடிகளேஶரணம்.

விண்வேதவிண்டநீர்ஏரார்மார்வில்வாமனன்நீலநந்தன்வண்டமர்தந்தை.

ஆ திருமொழி - எச - க்கு - பாசுரம் - எச0.

---

## ரு - வது. தந்தை.

### திருக்கண்ணபுரம் சௌரிராஜன்விஷயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

எதுகுலகாம்போதிராகம் - ஆதிதாளம்.

* தந்தைகாலில்விலங்கறவந்துதோன்றியதோன்றல்பின், றமியேன்றன்
சிந்தைபோயிற்றுத்திருவருளவனிடைப்பெறுமளவிருந்தேனை
அந்திகாவலனமுதுறுபசுங்கதிரவைசுட, வதனோடு
மந்தமாருதம்வனமுலைதடவந்துவலிசெய்வதொழியாதே. (க)

மாரிமாக்கடல்வளைவணர்க்கிளையவன்வரைபுரைதிருமார்பில்
தாரினாசையிற்போயினநெஞ்சமுந்தாழ்ந்ததோர்துணைகாணேன்
ஊருந்துஞ்சிற்றுலகமுந்துயின்றதொளியவன்விசும்பியங்கும்
தேரும்போயிற்றுத்திசைகளுமறைந்தனசெய்வதொன்றறியேனே.()

ஆயன்மாயமேயன்றிமற்றென்கையில்வளைகளுமிறைநில்லா
பேயினாருயிருண்டிடும்பிள்ளைநம்பெண்ணுயிர்க்கிரங்குமோ
தூயமாமதிக்கதிர்சுடத்துணையில்லையிணைமுலைவேகின்றதால்
ஆயன்வேயினுக்கழிகின்றதுள்ளமுமஞ்செலென்பாரில்லையே. (ங)

கயங்கொள்புண்டலைக்களிறுந்துவெந்திறற்கழன்மன்னர்பெரும்போரில்
மயங்கவெண்சங்கம்வாய்வைத்தமைந்தனும்வந்திலன்மறிகடனீர்
தயங்குவெண்டிரைத்திவலைநுண்பனியெனுந்தழன்முகந்திளமுலைமேல்
இயங்குமாருதம்விலங்கலென்னாவியையெனக்கெனப்பெறலாமே. ௪

ஏழுமாமரந்துளைபடச்சிலைவளைத்திலங்கையைமலங்குவித்த
ஆழியா, னமக்கருளியவருளொடும்பகலெல்லைகழிகின்றதால்
தோழிநாமிதற்கென்செய்துந்துணையில்லைசுடர்படுமுதுநீரில்
ஆழவாழ்கின்றவாவியையடுவதோரந்திவந்தடைகின்றதே. (௫)

முரியும்வெண்டிரைமுதுகயந்தீப்படமுழங்கழலெரியம்பின்
வரிகொள்வெஞ்சிலைவளைவித்தமைந்தனும்வந்திலனென்செய்கேன்
எரியும்வெங்கதிர்துயின்றதுபாவியேனிணைநெடுங்கண்டுயிலா
கரியநாழிகையூழியிற்பெரியனகழியுமாறறியேனே. (௬)

கலங்கமாக்கடல்கடைந்தடைத்திலங்கையர்கோனதுவரையாகம்
மலங்க, வெஞ்சமத்தடுசரந்துரந்தவெம்மடிகளும்வாரானால்
இலங்குவெண்கதிரிளமதியதனொடும்விடைமணியடு, மாயன்
விலங்கல்வேயினதோசையுமாயினிவிளைவதொன்றறியேனே. (எ)

முழுதிவ்வையகமுறைகெடமறைதலுமுனிவனுமுனிவெய்த
மழுவினான்மன்னவராருயிர்வவ்வியமைந்தனும்வாரானால்
ஒழுகுநுண்பனிக்கொடுங்கியபேடையையடங்கவஞ்சிறைகோலித்
தழுவுநள்ளிருட்டனிமையிற்கடியதோர்கொடுவினையறியேனே. (அ)

கனஞ்செய்மாமதிட்கணபுரத்தவனொடுகனவினிலவன்றந்த
மனஞ்செயின்பம்வந்துட்புகவெள்கியென்வளைநெகவிருந்தேனைச்
சினஞ்செய்மால்விடைச்சிறுமணியோசையென்சிந்தையைச்சிந்துவிக்கும்
அனந்தலன்றிலினரிகுரல்பாவியேனாவியையடுகின்றதே. (௯)

* வார்கொண்மென்முலைமடந்தையர்தடங்கடல்வண்ணனைத்தாணயந்
தார்வத்தாலவர்புலம்பியபுலம்பலைப்பதிந்துமுன்னுரைசெய்த
கார்கொள்பூம்பொழின்மங்கையர்காவலன்கலிகன்றியொலிவல்லார்
ஏர்கொள்வைகுந்தமாநகர்புக்கிமையவரோடுங்கூடுவரே. (௧௦)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

தந்தைமாரிஆயன்கயம்ஏழுமுரிகலங்கமுழுது கனஞ்செய்வார்கொள்தொண்டர்

ஆ திருமொழி - எரு - க்கு - பாசுரம் - எருO.

## ௬ - வது. தொண்டர்.

..................

### திருக்கண்ணபுரம் சௌரிராஜன்விஷயம்.

### கலிவிருத்தம்.

### நாதநாமக்கிரியைராகம் - ரூபகதாளம்.

* தொண்டருய்யும்வகைகண்டேன்றுளங்காவரக்கர்துளங்க, முன்
திண்டோணிமிரச்சிலைவளையச்சிறிதேமுனிந்ததிருமார்பன்
வண்டார்கூந்தன்மலர்மங்கைவடிக்கண்மடந்தைமாநோக்கம்
கண்டான், கண்டுகொண்டுகந்தகண்ணபுரநாங்தொழுதுமே. (௧)

பொருந்தாவரக்கர்வெஞ்சமத்துப்பொன்றவன்றுபுள்ளூர்ந்து
பெருந்தோண்மாலிதலையுறளப்பேர்ந்தவரக்கர்தென்னிலங்கை
இருந்தார்தம்மையுடன்கொண்டங்கெழிலார்பிலத்துப்புக்கொளிப்பக்
கருந்தாட்சிலைகைக்கொண்டானூர்கண்ணபுரநாங்தொழுதுமே. (௨)

வல்லியிடையாள்பொருட்டாகமதிணீரிலங்கையார்கோவை
அல்லல்செய்தவெஞ்சமத்துளாற்றன்மிகுத்தவாற்றலான்
வல்லாளரக்கர்குலப்பாவைவாடமுனிதன்வேள்வியைச்
கல்விச்சிலையாற்காத்தானூர்கண்ணபுரநாங்தொழுதுமே. (௩)

மல்லைமுந்நீரதர்படவரிவெஞ்சிலைகால்வளைவித்துக்
கொல்லைவிலங்குபணிசெய்யக்கொடியோனிலங்கைபுகலுற்றுத்
தொல்லைமரங்கள்புகப்பெய்துதிவலைநிமிர்ந்துவானணவக்
கல்லாற்கடலையடைத்தானூர்கண்ணபுரநாங்தொழுதுமே. (௪)

ஆமையாகியரியாகியன்னமாகி, யந்தணர்தம்
ஓமமாகியூழியாகியுவரிசூழ்ந்தநெடும்புணரிச்
சேமமதில்சூழிலங்கைக்கோன்சிரமுங்கரமுந்துணித்து, முன்
காமற்பயந்தான்கருதுமூர்கண்ணபுரநாங்தொழுதுமே. (௫)

வருந்தாதிருநீமடநெஞ்சேநம்மேல்வினைகள்வாரா, முன்
திருந்தாவரக்கர்தென்னிலங்கைசெந்தீயுண்ணச்சிவந்தொருநாள்
பெருந்தோள்வாணற்கருள்புரிந்துபின்னைமணாளனாகி, முன்
கருந்தாட்களிறொன்றொசித்தானூர்கண்ணபுரநாங்தொழுதுமே. (௬)

இலையார்மலர்ப்பூம்பொய்கைவாய்முதலைதன்னாலடர்ப்புண்டு
கொலையார்வேழநடுக்குற்றுக்குலையவதனுக்கருள்புரிந்தான்
அலைநீரிலங்கைத்தசக்கிரீவற்கிளையோற்கரசையருளி, முன்
கலைமாச்சிலையாலெய்தானூர்கண்ணபுரநாங்தொழுதுமே. (௭)

மாலாய்மனமேயருந்துயரில்வருந்தாதிருநீ, வலிமிக்க
காலார்மருதுங்காய்சினத்தகழுதுங்கதமாக்கழுதையும்
மாலார்விடையுமதகரியுமல்லருயிருமடிவித்துக்
காலாற்சகடம்பாய்ந்தானூர்கண்ணபுரநாந்தொழுதுமே. (அ)

குன்றுன்மாரிபழுதாக்கிக்கொடியேரிடையாள்பொருட்டாக
வன்றுள்விடையேழன்றடர்த்தவானோர்பெருமான்மாமாயன்
சென்றுன்றூதுபஞ்சவர்க்காய்த்திரிகாற்சகடஞ்சினமொழித்துக்
கன்றால்விளங்காயெறிந்தானூர்கண்ணபுரநாந்தொழுதுமே. (கூ)

* கருமாமுகில்தோய் * நெடுமாடக்கண்ணபுரத்தெம்மடிகளைத்
திருமாமகளாலருண்மாரிச்செழுநீராலிவளநாடன்
மருவார்புயற்கைக்கலிகன்றிமங்கைவேந்தனொலிவல்லார்
இருமாநிலத்துக்கரசாகியிமையோரிறைஞ்சவாழ்வாரே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

தொண்டர்பொருந்தாவல்லிமல்லையாமைவருந்தாதிலைமால்குன்றுல்கருமாவிய.

ஆ_திருமொழி - எகூ - க்கு - பாசுரம் - எகூ0.

---

## எ - வது. வியமுடை.

திருக்கண்ணபுரம்சௌரிராஜன்விஷயம்.

கலிவிருத்தம்.

அபரூபராகம் - ஆதிதாளம்.

* வியமுடைவிடையினமுடைதர, மடமகள்
குயமுடைதடவரையகலமதுடையவர்
நயமுடைநடையனமிளையவர்நடைபயில்
கயமிடைகணபுரமடிகடமிடமே. (க)

இணைமலி ‡ மருதினொடெருதிறவிகல்செய்து
துணைமலிமுலையவள்மணமிகுகலவியுள்
மணமலிவிழவினொடடியவரளவிய
கணமலிகணபுரமடிகடமிடமே. (உ)

---

* "மணிமாடம்" என்றும்பாடமுண்டு.

‡ "மருதிறவெருதினொடிகல்செய்து" என்று வ்யாக்யாநரூடமானபாடம்.

புயலுறுவரைமழைபொழிதரமணிநிரை
மயலுறவரைகுடையெடுவியநெடியவர்
முயலுளர்பிளைமுயலுளவளவிளைவயல்
கயலுளுகணபுரமடிகடமிடமே. (௫)

ஏதலர்நகைசெயவிளையவராளைவெண்ணெய்
போதுசெய்தமரியபுனிதர்நல்விரைமலர்
கோதியமதுகரங்குலவியமலர்மகள்
காதல்செய்கணபுரமடிகடமிடமே. (௬)

தொண்டருமமரருமுனிவருந்தொழுதெழ
அண்டமொடகலிடமளந்தவரமர்செய்து
விண்டவர்படமதிலிலங்கைமுனெரியெழக்
கண்டவர்கணபுரமடிகடமிடமே. (௫)

மழுவியல்படையுடையவனிடமழைமுகில்
தழுவியவுருவினர்திருமகண்மருவிய
கொழுவியசெழுமலர்முழுசியபறவைபண்
ணெழுவியகணபுரமடிகடமிடமே. (௬)

பரிதியொடணிமதிபனிவரைதிசைநிலம்
எரிதியொடெனவினவியல்வினர்செலவினர்
சுருதியொடருமறைமுறைசொலுமடியவர்
கருதியகணபுரமடிகடமிடமே. (௭)

படிபுல்குமடியிணைபலர்தொழமலர்வைகு
கொடிபுல்குதடவரையகலமதுடையவர்
முடிபுல்குநெடுவயல்படைசெலவடிமலர்
கடிபுல்குகணபுரமடிகடமிடமே. (௮)

புலமனுமலர்மிசைமலர்மகள்புணரிய
நிலமகளெனவினமகளிர்களிவரொடும்
வலமனுபடையுடைமணிவணர்நிதிகுவை
கலமனுகணபுரமடிகடமிடமே. (௯)

* மலிபுகழ்கணபுரமுடையவெமடிகளை
வலிகெழுமதிளயல்வயலணிமங்கையர்
கலியனதமிழிவைவிழுமியவிசையினொ
டொலிசொலுமடியவருறுதுயரிலரே. (௧0)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

வியமிணைபுயல் ஏதலர்தொண்டர்மழுப்பரிதிபடிபுலம் மலிபுகழ்வானோர்.

ஆ திருமொழி - ௭௭ - க்கு - பாசுரம் - ௭௭0.

## அ - வது. வானோர்.

### திருக்கண்ணபுரம் சௌரிராஜன் விஷயம்.

கலிவிருத்தம்.

சாவேரிராகம் - ரூபகதாளம்.

* வானோரளவுமுதுமுந்நீர்வளர்ந்தகாலம், வலியுருவில்
மீனாய்வந்துவியந்துய்யக்கொண்டதண்டாமரைக்கண்ணன்
ஆனாவுருவிலானாயனவனையம்மாவிளைவயலுள்
கானார்புறவில்கண்ணபுரத்தடியேன்கண்டுகொண்டேனே. (க)

மலங்குவிலங்குநெடுவெள்ளமறுகவங்கோர்வரைநட்டு
இலங்குசோதியாரமுதமெய்துமளவோராமையாய்
விலங்கல்திரியத்தடங்கடலுட்சுமந்துகிடந்தவித்தகனைக்
கலங்கன்முந்நீர்க்கண்ணபுரத்தடியேன்கண்டுகொண்டேனே. (உ)

பாராரளவுமுதுமுந்நீர்பரந்தகாலம், வளைமருப்பில்
ஏராருருவத்தேனமாயெடுத்தவாற்றலம்மானைக்
கூராராரலிரைகருதிக்குருகுபாயக்கயலிரியும்
காரார்புறவில்கண்ணபுரத்தடியேன்கண்டுகொண்டேனே. (ங)

உளைந்தவரியுமானிடமுமுடனாய்த்தோன்றவொன்றுவித்து
விளைந்தசீற்றம்விண்வெதும்பவேற்றோனகலம்வெஞ்சமத்துப்
பிளந்துவளைந்தவுகிரானைப்பெருந்தண்செந்நெற்குலைதடிந்து
களஞ்செய்புறவில்கண்ணபுரத்தடியேன்கண்டுகொண்டேனே. (ச)

தொழுநீர்வடிவிற்குறளுருவாய்வந்துதோன்றிமாவலிபால்
முழுநீர்வையமுன்கொண்டமூவாவுருவிலம்மானை
உழுநீர்வயலுட்பொன்கிளைப்பவொருபால்முல்லைமுகையோடும்
கழுநீர்மலருங்கண்ணபுரத்தடியேன்கண்டுகொண்டேனே. (ரு)

வடிவாய்மழுவேபடையாகவந்துதோன்றிமூவெழுகால்
படியாரரசுகளைகட்டபாழியானையம்மானைக்
குடியாவண்டுகொண்டுண்ணக்கோலநீலமட்டுகுக்கும்
கடியார்புறவில்கண்ணபுரத்தடியேன்கண்டுகொண்டேனே. (சு)

வையமெல்லாமுடன்வணங்கவணங்காமன்னனாய்த்தோன்றி
வெய்யசீற்றக்கடியிலங்கைகுடிகொண்டோடவெஞ்சமத்துச்
செய்தவெம்போர்நம்பரனைச்செழுந்தண்கானன்மணநாறும்
கைதைவேலிக்கண்ணபுரத்தடியேன்கண்டுகொண்டேனே. (எ)

ஒற்றைக்குழையுநாஞ்சிலுமொருபாற்ருேன்றத்தான்ருேன்றி
வெற்றித்தொழிலார்வேல்வேந்தர்விண்பாற்செல்லவெஞ்சமத்துச்
செற்றகொற்றத்தொழிலானைச்செந்தீமூன்றுமில்லிருப்பக்
கற்றமறையோர்கண்ணபுரத்தடியேன்கண்டுகொண்டேனே. (அ)

துவரிக்கனிவாய்நிலமங்கைதுயர்தீர்ந்துய்யப்பாரதத்து
விவரிற்றரசர்தடுமாறவிருணுட்பிறந்தவம்மானை
உவரியோதமுத்துந்தவொருபாலொருபாலொண்செந்நெல்
கவரிவீசுங்கண்ணபுரத்தடியேன்கண்டுகொண்டேனே. (கூ)

* மீனேடாமைகேழலரிகுறளாய்முன்னுமிராமனுய்த்
தானுய்ப், பின்னுமிராமனுய்த்தாமோதரனுய்க்கற்கியும்
ஆனுன்றன்னைக், கண்ணபுரத்தடியேன்கலியனெலிசெய்த
தேனுரின்சொற்றமிழ்மாலைசெப்பப்பாவம்நில்லாவே. (௧௦)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

வான்மலக்குபாருளெந்தொழுவடிவையம்ஒற்றைத்துவரிமீன்கைம்மானம்.

ஆ திருமொழி - எஅ - க்கு - பாசுரம் - எஅ௦.

---

## கூ - வது. கைம்மானம்.

திருக்கண்ணபுரம் சௌரிராஜன்விஷயம்.

கலிவிருத்தம்.

மோஹனராகம் - திரிபுடைதாளம்.

* கைம்மானமதயானையிடர்தீர்த்தகருமுகிலை
மைம்மானமணியையணிகொள்மரதகத்தை
எம்மானையெம்பிரானையீசனையென்மனத்துள்
அம்மானை, யடியேனடைந்துய்ந்துபோனேனே. (௧)

தருமானமழைமுகிலைப்பிரியாது, தன்னடைந்தார்
வருமானந்தவிர்க்குமணியையணியுருவில்
திருமாலையெம்மானையமுதத்தைக்கடற்கிடந்த
பெருமானை, யடியேனடைந்துய்ந்துபிழைத்தேனே. (௨)

விடைபேழன்றடர்த்துவெருண்டுவிலங்கலுறப்
படையாலாழிதட்டபரமன்பரஞ்சோதி
மடையார்நீலமல்கும்வயல்சூழ்கண்ணபுரமொன்
றுடையானுக், கடியேனொருவர்க்குரியேனோ. (௩)

மிக்கானைமறையாய்விரிந்தவிளக்கை, யென்னுள்
புக்கானைப்புகழ்சேர்பொலிகின்றபொன்மலையைத்
தக்கானைக்கடிகைத்தடங்குன்றின்மிசையிருந்த
அக்காரக்கனியையடைந்துய்ந்துபோனேனே. (௪)

வந்தாயென்மனத்தேவந்துநீபுகுந்தபின்னை
எந்தாய்போயறியாயிதுவேயமையாதோ
கொந்தார்பைம்பொழில்சூழ்குடந்தைக்கிடந்துகந்த
மைந்தா, வுன்னையென்றுமறவாமைபெற்றேனே. (௫)

எஞ்சாவெந்நரகத்தழுந்திநடுங்குகின்றேற்
கஞ்சேலென்றடியேனையாட்கொள்ளவல்லானை
நெஞ்சேநீநினையாதிறைப்போதுமிருத்திகண்டாய்
மஞ்சார்மாளிகைசூழ்வயலாலிமைந்தனையே. (௬)

பெற்றார்பெற்றொழிந்தார்பின்னுநின்றடியேனுக்
குற்றானாய்வளர்த்தென்னுயிராகிநின்றானை
முற்றாமாமதிகோள்விடுத்தானையெம்மானை
எத்தால்மறக்கேனிதுசொல்லென்னேழைநெஞ்சே. (௭)

கற்றார்பற்றறுக்கும்பிறவிப்பெருங்கடலே
பற்றாவந்தடியேன்பிறந்தேன்பிறந்தபின்னை
வற்றாநீர்வயல்சூழ்வயலாலியம்மானைப்
பெற்றேன், பெற்றதுவும்பிறவாமைபெற்றேனே. (௮)

கண்ணார்கண்ணபுரங்கடிகைகடிகமழும்
தண்ணார்தாமரைசூழ்தலைச்சங்கமேத்திசையுள்
விண்ணோர்நாண்மதியைவிரிகின்றவெஞ்சுடரைக்
கண்ணாரக்கண்டுகொண்டுகளிக்கின்றதிங்கென்றுகொலோ. (௯)

* செருநீர்வேல்வலவன்கலிகன்றிமங்கையர்கோன்
கருநீர்முகில்வண்ணன்கண்ணபுரத்தானை
இருநீரின்றமிழின்னிசைமாலைகள்கொண்டுதொண்டீர்
வருநீர்வையமுய்யவிவைபாடியாடுமினே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

கைம்மானதருவிடைமிக்கான்வந்தாயெஞ்சாபெற்றார்கற்றார்கண்செருவண்டார்.

ஆ திருமொழி - எக - க்கு - பாசுரம் - எக0.

## ௧௦ - வது. வண்டார்.

திருக்கண்ணபுரம்சௌரிராஜன்விஷயம்.

கலிவிருத்தம்.

சௌராஷ்டிரராகம் - ரூபகதாளம்.

* வண்டார்பூமாமலர்மங்கைமணநோக்க
முண்டானே, யுன்னையுகந்துகந்துன்றனக்கே
தொண்டானேற், கென்செய்கின்றாய்சொல்லுநால்வேதம்
கண்டானே, கண்ணபுரத்துறையம்மானே. (௧)

பெருநீரும்விண்ணுமலையுமுலகேழும்
ஒருதாராநின்னுளொடுக்கியநின்னையல்லால்
வருதேவர்மற்றுளரென்றென்மனத்திறையும்
கருதேனுன், கண்ணபுரத்துறையம்மானே. (௨)

மற்றுமோர்தெய்வமுளதென்றிருப்பாரோ
டுற்றிலே, னுற்றதுமுன்னடியார்க்கடிமை
மற்றெல்லாம்பேசிலுநின்றிருவெட்டெழுத்தும்
கற்றுநான், கண்ணபுரத்துறையம்மானே. (௩)

பெண்ணானாய்பேரிளங்கொங்கையினாரழல்போல்
உண்ணாநஞ்சுண்டுகந்தாயையுகந்தேனான்
மண்ணாளாவாணெடுங்கண்ணிமதுமலராள்
கண்ணாளா, கண்ணபுரத்துறையம்மானே. (௪)

பெற்றாருஞ்சுற்றமுமென்றிவைபேணேனான்
மற்றாரும்பற்றிலேனாதலாநின்னடைந்தேன்
உற்றானென்றுள்ளத்துவைத்தருள்செய்கண்டாய்
கற்றார்சேர்கண்ணபுரத்துறையம்மானே. (௫)

ஏத்தியுன்சேவடியெண்ணியிருப்பாரைப்
பார்த்திருந்தங்குநமன்றமர்பற்றாது
சோத்தநாமஞ்சுதுமென்றுதொடாமை, நீ
காத்திபோய்கண்ணபுரத்துறையம்மானே. (௬)

வெள்ளைநீர்வெள்ளத்தணைந்தவரவணைமேல்
துள்ளுநீர்மெள்ளத்துயின்றபெருமானே
வல்லலேயுன்றமர்க்கென்றும்நமன்றமர்
கள்ளர்போல்கண்ணபுரத்துறையம்மானே. (௭)

மாணாகிவையமளந்ததுவும், வாளவுணன்
பூணாகங்கீண்டதுவுமீண்டுநினைந்திருந்தேன்
பேணாதவல்வினையேனிடரெத்தனையும்
காணேன், நான்கண்ணபுரத்துறையம்மானே. (அ)

நாட்டினாயென்னையுனக்குமுன்றொண்டாக
மாட்டினேனத்தனையேகொண்டென்வல்வினையைப்
பாட்டினாலுன்னையென்னெஞ்சத்திருந்தமை
காட்டினாய், கண்ணபுரத்துறையம்மானே. (௯)

* கண்டசீர்க்கண்ணபுரத்துறையம்மானைக்
கொண்டசீர்த்தொண்டன்கலியனொலிமாலை
பண்டமாப்பாடுமடியவர்க்கென்ஞான்றும்
அண்டம்போயாட்சியவர்க்கதறிந்தோமே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

வண்டுபெருமற்றுபெண்பெற்றோத்திவெள்ளைமாணாட்டிகண்டசீர்வங்கம்.

ஆக பத்து - அ - ல் - திருமொழி - அ0 - க்கு - பாசுரம் - அ00.

எட்டாம்பத்து முற்றியது.



## ஒன்பதாம்பத்து.

### க - வது. வங்கமாமுந்நீர்.

திருக்கண்ணங்குடி சாமளமேனிப்பெருமாள்விஷயம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆரபிராகம் - அடதாளம்.

* வங்கமாமுந்நீர்வரிநிறப்பெரியவாளரவினணைமேவிச்
சங்கமாரங்கைத்தடமலருந்திச்சாமமாமேனியென்றலைவன்
அங்கமாறைந்துவேள்விநால்வேதமருங்கலைபயின்,றெரிமூன்றும்[னே.
செங்கையால்வளர்க்குந்துளக்கமில்மனத்தோர் திருக்கண்ணங்குடியுணின்றா

கவளமாகதத்தகரியுய்யப்பொய்கைக்கராங்கொளக்கலங்கியுள்ளினைந்து
துவள, மேல்வந்துதோன்றிவன்முதலைதுணிபடச்சுடுபடைதுரந்தோன்
குவளைநீண்முளரிகுமுதமொண்கழுநீர்கொய்மலர்நெய்தலொண்கழனித்
திவளுமாளிகைசூழ்செழுமணிப்புரிசைத்திருக்கண்ணங்குடியுணின்றானே.

வாதைவந்தடரவானமுநிலனுமலைகளுமலைகடற்குளிப்ப
மீதுகொண்டுகளுமீனுருவாகிவிரிபுனல்வரியகட்டொளித்தோன்
போதலர்புன்னைமல்லிகைமௌவற்புதுவிரைமதுமலரணைந்து
சீதவொண்டென்றற்றிசைதொறுங்கமழுந்திருக்கண்ணங்குடியுணின்றானே.

வென்றிசேர்திண்மைவிலங்கன்மாமேனிவெள்ளெயிற்றொள்ளெரித்தறுகட்
பன்றியா, யன்றுபார்மகட்பயலை,தீர்த்தவன்பஞ்சவர்பாகன்
ஒன்றலாவுருவத்துலப்பில்பல்காலத்துயர்கொடியொளிவளர்மதியம்
சென்றுசேர்சென்னிச்சிகரநன்மாடத்திருக்கண்ணங்குடியுணின்றானே.

மன்னவன்பெரியவேள்வியிற்குறளாய்மூவடிநீரொடுங்கொண்டு
பின்னுமேழுலகுமீரடியாகப்பெருந்திசையடங்கிடநிமிர்ந்தோன்
அன்னமென்கமலத்தணிமலர்ப்பீடத்தலைபுனலிலைக்குடைநீழல்
செந்நெலொண்கவரியசையவீற்றிருக்குந்திருக்கண்ணங்குடியுணின்றானே.

மழுவினாலவனியரசைமூவெழுகால்மணிமுடிபொடிபடுத், துதிரக்
குழுவுவார்புனலுட்குளித்துவெங்கோபந்தவிர்ந்தவன்குலமலிகதலிக்
குழுவும்வார்கமுகுங்குரவுநற்பலவுங்குளிர்தருசூதமாதவியும்
செழுமையார்பொழில்கடழுவுநன்மாடத்திருக்கண்ணங்குடியுணின்றானே.

வானுளாரவரைவலிமையானலியுமறிகடலிலங்கையார்கோனைப்
பானுநேர்சரத்தாற்பனங்கனிபோலப்பருமுடியுதிரவில்வளைத்தோன்
கானுலாமயிலின்கணங்கணின்றாடக்கணமுகில்முரசநின்றதிரத்
தேனுலாவரிவண்டின்னிசைமுரலுந்திருக்கண்ணங்குடியுணின்றானே.

அரவநீள்கொடியோனவையுளாசனத்தையஞ்சிடாதேயிட,வதற்குப்
பெரியமாமேனியண்டமூடுருவப்பெருந்திசையடங்கிடநிமிர்ந்தோன்
வரையின்மாமணியுமரதகத்திரளும்வயிரமும்வெதிருதிர்முத்தும்
திரைகொணர்ந்துந்திவயல்தொறுங்குவிக்குந்திருக்கண்ணங்குடியுணின்றானே.

பன்னியபாரம்பார்மகட்கொழியப்பாரதமாபெரும்போரில்
மன்னர்கள்மடியமணிநெடுந்திண்டேர்மைத்துனர்க்குய்த்தமாமாயன்
துன்னுமாதவியுஞ்சுரபுன்னைப்பொழிலுஞ்சூழ்ந்தெழுசெண்பகமலர்வாய்த்
தென்னவென்றளிகண்முரன்றிசைபாடுந்திருக்கண்ணங்குடியுணின்றானே.

* கலையுலாவல்குற்காரிகைதிறத்துக்கடற்பெரும்படையொடுஞ்சென்று
சிலையினாலிலங்கைதீயெழச்செற்றதிருக்கண்ணங்குடியுணின்றானை
மலைகுலாமாடமங்கையர்தலைவன்மானவேற்கலியன்வாயொலிகள்
உலவுசொன்மாலையொன்பதோடொன்றும்வல்லவர்க்கில்லைநல்குரவே.

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

வங்கக்கவளவாதைவென்றிமன்னவன்மழுவானுளாரவபன்னியகலைபொன்.

ஆ_சிருமொழி - அக - க்கு - பாசுரம் - அகo.

## உ - வது. பொன்னிவர்.

---

### திருநாகை சௌந்தர்யராஜப்பெருமாள்விஷயம்.

கலிவிருத்தம்.

சாரங்காரகம் - ஆதிதாளம்.

*பொன்னிவர்மேனிமரதகத்தின்பொங்கிளஞ்சோதியகலத்தாரம்
மின், னிவர்வாயினல்வேதமோதும்வேதியர்வானவராவர்தோழீ
என்னையுநோக்கியென்னல்குலுநோக்கியேந்திளங்கொங்கையுநோக்குகின்றார்
அன்னையென்னுக்குமென்றஞ்சுகின்றேனச்சோவொருவரழகியவா.

தோடவிழ்நீலமணங்கொடுக்குஞ்சூழ்புனற்சூழ்குடந்தைக்கிடந்த
சேடர்கொலென்றுதெரிக்கமாட்டேன்செஞ்சுடராழியுஞ்சங்குமேந்திப்
பாடகமெல்லடியார்வணங்கப்பன்மணிமுத்தொடிலங்குசோதி
ஆடகம்பூண்டொருநான்குதோளுமச்சோவொருவரழகியவா. (உ)

வேயிருஞ்சோலைவிலங்கல்சூழ்ந்தமெய்யமணாளரிவ்வையமெல்லாம்
தாயினநாயகராவர்தோழீதாமரைக்கண்களிருந்தவாறு
சேயிருங்குன்றந்திகழ்ந்ததொப்பச்செவ்வியவாகிமலர்ந்தசோதி
ஆயிரந்தோளொடிலங்குபூணுமச்சோவொருவரழகியவா. (௩)

வம்பவிழுந்துழாய்மாலைதோண்மேற்கையனவாழியுஞ்சங்குமேந்தி
நம்பர்நம்மில்லம்புகுந்துநின்றார்நாகரிகர்பெரிதுமிளையர்
செம்பவளமிவர்வாயின்வண்ணந்தேவரிவரதுருவஞ்சொல்லில்
அம்பவளத்திரளேயுமொப்பரச்சோவொருவரழகியவா. (௪)

கோழியுங்கூடலுங்கோயில்கொண்டகோவலரேயொப்பர்குன்றமன்ன
பாழியந்தோளுமோர்நான்குடையர்பண்டிவர்தம்மையுங்கண்டறியோம்
வாழியரோவிவர்வண்ணமெண்ணின்மாகடல்போன்றுளர்கையில்வெய்ய
ஆழியொன்றேந்தியோர்சங்குபற்றியச்சோவொருவரழகியவா. (௫)

வெஞ்சினவேழமருப்பொசித்தவேந்தர்கொலேந்திழையார்மனத்தைத்
தஞ்சுடையாளர்கொல்யானறியேன்றாமரைக்கண்களிருந்தவாறு
கஞ்சனையஞ்சமுன்கால்விசைத்தகாளையராவர்கண்டார்வணங்கும்
அஞ்சனமாமலையேயுமொப்பரச்சோவொருவரழகியவா. (௬)

பிணியவிழ்தாமரைமொட்டலர்த்தும்பேரருளாளர்கொல்யானறியேன்
பணியுமென்னெஞ்சமிதென்கொல்தோழீபண்டிவர்தம்மையுங்கண்டறியோம்
அணிகெழுதாமரையன்னகண்ணுமங்கையும்பங்கயமேனிவானத்
தணிகெழுமாமுகிலேயுமொப்பரச்சோவொருவரழகியவா. (௭)

மஞ்சுயர்மாமதிதிண்டநீண்டமாலிருஞ்சோலைமணாளர்வந், தென்
நெஞ்சுள்ளுங்கண்ணுள்ளுநின்றுநீங்கார்நீர்மலையார்கொல்நினைக்கமாட்டேன்
மஞ்சுயர்பொன்மலைமேலெழுந்தமாமுகில்போன்றுளர்வந்துகாணீர்
அஞ்சிறைப்புள்ளுமொன்றேறிவந்தாரச்சோவொருவரழகியவா. அ

எண்டிசையுமெறிநீர்க்கடலுமேழுலகுமுடனேவிழுங்கி
மண்டியோராலிலைப்பள்ளிகொள்ளுமாயர்கொல்மாயமறியமாட்டேன்
கொண்டல்நன்மால்வரையேயுமொப்பர்கொங்கலர்தாமரைக்கண்ணும்வாயும்
அண்டத்தமரர்பணியநின்றாரச்சோவொருவரழகியவா. (கூ)

* அன்னமுங்கேழலுமீனுமாயவாதியைநாகையழகியாரைக்
கன்னிநன்மாமதிள்மங்கைவேந்தன்காமருசீர்க்கலிகன்றி, குன்றா [ர்
இன்னிசையாற்சொன்னசெஞ்சொன்மாலையேழுமிரண்டுமொரொன்றும்வல்லா
மன்னவராயுலகாண்டுமீண்டும்வானவராய்மகிழ்வெய்துவரே. (கO)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

பொன்றுடுவேய்வம்புகோழிவெஞ்சினப்பிணிமஞ்செண்டிசையன்னம்தன்னை

ஆ திருமொழி - அஉ - க்கு - பாசுரம் - அஉO.

---

## ௩ - வது. தன்னை.

திருப்புல்லாணிகல்யாணஜகந்நாயகன்விஷயம்.

கலிவிருத்தம்.

சங்கராபரணராகம் - ரூபகதாளம்.

* தன்னைநைவிக்கிலேன்வல்வினையேன்றொழுதுமெழு
பொன்னைநைவிக்குமப்பூஞ்செருந்திமணநீழல்வாய்
என்னைநைவித்தெழில்கொண்டகன்றபெருமானிடம்
புன்னைமுத்தம்பொழில்சூழ்ந்தழகாயபுல்லாணியே. (க)

உருகிநெஞ்சேநினைந்திங்கிருந்தென்றொழுதுமெழு
முருகுவண்டுண்மலர்க்கைதையினீழலின்முன்னொருநாள்
பெருகுகாதன்மையென்னுள்ளமெய்தப்பிரிந்தானிடம்
பொருதுமுந்நீர்க்கரைக்கேமணியுந்துபுல்லாணியே. (உ)

ஏதுசெய்தால்மறக்கேன்மனமேதொழுதுமெழு
தாதுமல்குநடஞ்சூழ்பொழிற்றாழ்வர்தொடர்ந்து, பின்
பேதைநின்னைப்பிரியேனினியென்றகன்றானிடம்
போதுநாளுங்கமழும்பொழில்சூழ்ந்தபுல்லாணியே. (ங)

கொங்குண்வண்டேகரியாகவந்தான்கொடியேற்கு, முன்
நங்கள்ஈசனமக்கேபணித்தமொழிசெய்திலன்
மங்கைநல்லாய்தொழுதுமெழுபோயவன்மன்னுமூர்
பொங்குமுந்நீர்க்கரைக்கேமணியுந்துபுல்லாணியே. (ச)

உணரிலுள்ளஞ்சுடுமால்வினையேன்றொழுதுமெழு
துணரிணுழனறும்போதுநஞ்சூழ்குழற்பெய்து, பின்
தணரிலாவிதளருமெனவன்புதந்தானிடம்
புணரியோதம்பணிலமணியுந்துபுல்லாணியே. (ரு)

எள்கிநெஞ்சேநினைந்திங்கிருந்தென்றொழுதுமெழு
வள்ளன்மாயன்மணிவண்ணனெம்மான்மருவுமிடம்
கள்ளவிழுமலர்க்காவியுந்தூய்மடற்கைதையும்
புள்ளுமள்ளற்பழனங்களுஞ்சூழ்ந்தபுல்லாணியே. (சா)

பரவிநெஞ்சேதொழுதுமெழுபோயவன்பாலமாய்
இரவுநாளுமினிக்கண்டுயிலாதிருந்தென்பயன்
விரவிமுத்தநெடுவெண்மணல்மேற்கொண்டு, வெண்டிரை
புரவியென்னப்புதஞ்செய்துவந்துந்துபுல்லாணியே. (எ)

அலமுமாழிப்படையுமுடையார்நமக்கன்பராய்ச்
சலமதாகித்தகவொன்றிலர்நாந்தொழுதுமெழு
உலகுகானற்கழியோங்குதண்பைம்பொழிலூடிசை
புலவுகானற்களிவண்டினம்பாடுபுல்லாணியே. (அ)

ஓதிநாமங்குளித்துச்சிதன்னுடு, லொளிமாமலர்ப்
பாதநாளும்பணிவோநமக்கேநலமாதலி
லாதுதாரானெனிலுந்தருமன்றியுமன்பராய்ப்
போதுமாதேதொழுதுமவன்மன்னுபுல்லாணியே. (கூ)

* இலங்குமுத்தும்பவளக்கொழுந்துமெழிற்றாமரைப்
புலங்கள்முற்றும்பொழில்சூழ்ந்தழகாயபுல்லாணிமேல்
கலங்கலில்லாப்புகழான்கலியனொலிமாலை
வலங்கொள்தொண்டர்க்கிடமாவதுபாடில்வைகுந்தமே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

தன்னை உருகி ஏதுகொங்குணரில் எள்கிப்பரவியலம் ஓதி இலங்குகாவார்.

ஆ திருமொழி - அங - க்கு - பாசுரம் - அஙo.

## ச - வது. காவார்.

~~~~~~~~

### இதுவுமது.

கலிவிருத்தம்.

காம்போதிராகம் - அடதாளம்.

\* காவார்மடப்பெண்ணையன்றிலரிகுரலும்
ஏவாயினூடியங்குமெஃகிற்கொடிதாலோ
பூவார்மணங்கமழும்புல்லாணிகைதொழுதேன்
பாவாயிதுநமக்கோர்பான்மையேயாகாதே. (க)

முன்னங்குறளுருவாய்மூவடிமண்கொண்டளந்த
மன்னன்சரிதைக்கேமாலாகிப்பொன்பயந்தேன்
பொன்னங்கழிக்கானற்புள்ளினங்காள், புல்லாணி
அன்னமாய்நூல்பயந்தாற்காங்கிதனைச்செப்புமினே. (உ)

வல்வித்துழாயதன்மேற்சென்றதனிநெஞ்சம்
செவ்வியறியாதுநிற்குங்கொல்நித்திலங்கள்
பவ்வத்திரையுலவுபுல்லாணிகைதொழுதேன்
தெய்வச்சிலையார்க்கென்சிந்தைநோய்செப்புமினே. (ங)

பரியவிரணியனதாகமணியுகிரால்
அரியுருவாய்க்கீண்டானருள்தந்தவாநமக்குப்
பொருதிரைகள்போந்துலவுபுல்லாணிகைதொழுதேன்
அரிமலர்க்கண்ணீர்த்ததும்பவந்துகிலுநில்லாதே. (ச)

வில்லாலிலங்கைமலங்கச்சரந்துரந்த
வல்லாளன்பின்போனநெஞ்சம்வருமளவும்
எல்லாருமென்றன்னையேசினும்பேசிடினும்
புல்லாணியெம்பெருமான்பொய்கேட்டிருந்தேனே. (ரு)

சுழன்றிலங்குவெங்கதிரோன்றேரோடும்போய்மறைந்தான்
அழன்றுகொடிதாகியஞ்சுடரிற்றானடுமால்
செழுந்தடம்பூஞ்சோலைசூழ்புல்லாணிகைதொழுதேன்
இழந்திருந்தேனென்றனெழினிறமுஞ்சங்குமே. (சு)

கனையாரிடிகுரலின்கார்மணியினாவாடல்
தினையேனுநில்லாதுதீயிற்கொடிதாலோ
புனையார்மணிமாடப்புல்லாணிகைதொழுதேன்
வினையேன்மேல்வேலையும்வெந்தழலேவீசுமே. (எ)
~~~~~~~~

தூம்புடைக்கைவேழம்வெருவமருப்பொசித்த
பாம்பினணையானருள்தந்தவாநமக்குப்
பூஞ்செருந்திப்பொன்சொரியும்புல்லாணிகைதொழுதேன்
தேம்பிளம்பிறையுமென்றனக்கோர்வெந்தழலே. (அ)

வேதமும்வேள்வியும்விண்ணுமிருசுருடம்
ஆதியுமானானருள்தந்தவாநமக்குப்
போதலரும்புன்னைசூழ்புல்லாணிகைதொழுதேன்
ஓதமுநானுமுறங்காதிருந்தேனே. (கூ)

* பொன்னலரும்புன்னைசூழ்புல்லாணியம்மானை
மின்னிடையார்வேட்கைநோய்கூரவிருந்ததனைக்
கன்னவிலுந்திண்டோட்கலியனொலிவல்லார்
மன்னவராய்மண்ணாண்டுவானாளுமொன்னுவரே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

காவார்முன்னம்வவ்விப்பரியவில்சுழன்றுகனைதூம்புடைவேதம்பொன்தவள.

ஆ திருமொழி-அச-க்கு-பாசுரம்-அச0.

---

## ரு - வது. தவளவிளம்.

### திருக்குறுங்குடிவைஷ்ணவநம்பிவிஷயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆநந்தபைரவிராகம் - அடதாளம்.

*தவளவிளம்பிறைதுள்ளுமுந்நீர்த்தண்மலர்த்தென்றலோடன்றிலொன்றித்
துவள, வென்னெஞ்சகஞ்சோரவீருஞ்சூழ்பனிநாள்துயிலாதிருப்பேன்
இவளுமோர்பெண்கொடியென்றிரங்காதென்னலமைந்துமுன்கொண்டுபோன
குவளைமலர்நிறவண்ணர்மன்னுகுறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின்.

தாதவிழ்மல்லிகைபுல்லிவந்ததண்மதியினிளவாடையின்னே
ஊதைதிரிதந்துழறியுண்ணவோரிரவுமுறங்கேனுறங்கும்
பேதையர்பேதைமையாலிருந்துபேசினும்பேசுகபெய்வளையார்
கோதைநறுமலர்மங்கைமார்பன்குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின்.

காலையுமாலையொத்துண்டுகங்குலுநாழிகையூழியினீண்டுலாவும்
போல்வதோர்தன்மைபுகுந்துநிற்கும்பொங்கழலேயொக்கும்வாடைசொல்லில்
மாலவன்மாமணிவண்ணன்மாயமற்றுமுளவவைவந்திடாமுன்
கோலமயில்பயிலும்புறவிற்குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். உ

Funding: IKS/Tattva Heritage. Digitization: eGangotri.



கருமணிபூண்டுவெண்ணாகணைந்துகாரிமிலேற்றணர்தாழ்ந்துலாவும்
ஒருமணியோசையென்னுள்ளந்தள்ளவோரிரவுமுறங்காதிருப்பேன்
பெருமணிவானவருச்சிவைத்தபேரருளாளன்பெருமைபேசிக்
குருமணிநீர்கொழிக்கும்புறவிற்குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின்.

திண்டிமிலேற்றின்மணியுமாயன்றீங்குழலோசையுந்தென்றலோடு
கொண்டதோர்மாலையுமந்திவீன்றகோலவிளம்பிறையோடுகூடிப்
பண்டையவல்லவிவைநமக்குப்பாவியேனாவியைவாட்டஞ்செய்யும்
கொண்டல்மணிநிறவண்ணர்மன்னுங்குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின்.

எல்லியுநண்பகலுமிருந்தேயேசிலுமேசுகவேந்திழையார்
நல்லரவர்திறநாமறியோம்நாண்மடமச்சநமக்கிங்கில்லை
வல்லனசொல்லிமகிழ்வரேனுமாமணிவண்ணரைநாமறவோம்
கொல்லைவளரிளமுல்லைபுல்குகுறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின்.

செங்கணெடியகரியமேனித்தேவரொருவரிங்கேபுகுந், தென்
அங்கமெலியவளைகழலவாதுகொலோவென்றுசொன்னபின்னை
ஐங்கணைவில்லிதன்னாண்மையென்னோடாடுமதனையறியமாட்டேன்
கொங்கலர்தண்பணைசூழ்புறவிற்குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின்.

கேவலமன்றுகடலினோசைகேண்மின்களாயன்கையாம்பல்வந், தென்
ஆவியளவுமணைந்துநிற்குமன்றியுமைந்துகணைதெரிந்திட்
டேவலங்காட்டியிவனொருவனிப்படியேபுகுந்தெய்திடாமுன்
கோவலர்கூத்தன்குறிப்பறிந்துகுறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின்.

சோத்தெனநின்றுதொழவிரங்கான்றொன்னலங்கொண்டெனக்கின்றுநாளும்
போர்ப்பதோர்பொற்படந்தந்துபோனான்போயினவூறியே, னென்கொங்கை
மூத்திடுகின்றனமற்றவன்றன்மொய்யகலமணையாதுவாளா
கூத்தனிமையவர்கோன்விரும்புங்குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின்.

* செற்றவன்றென்னிலங்கைமலங்கத்தேவபிரான்றிருமாமகளைப்
பெற்று, மென்னெஞ்சகங்கோயில்கொண்டபேரருளாளன்பெருமைபேசக்
கற்றவன், காமருசீர்க்கலியன்கண்ணகத்துமனத்துமகலாக்
கொற்றவன், முற்றுலகாளிநின்றகுறுங்குடிக்கேயென்னையும்த்திடுமின்.

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

தவளதாதுகாலைகருமணிதிண்டிமிலெல்லிசெங்கண்கேவலம்சோத்தெனச்
செற்றக்கு.

௯ திருமொழி - ௮௫ - க்கு - பாசுரம் - ௮௫௦.

## ௬ - வது. அக்கும்புலி.

.....................

### திருக்குறுங்குடி வைஷ்ணவநம்பிவிஷயம்.

கலிவிருத்தம்.

அடாணாராகம் - ரூபகதாளம்.

* அக்கும்புலியினதளுமுடையா, ரவரொருவர்
பக்கநிற்கநின்றபண்பரூர்போலும்
தக்கமரத்தின்றாழ்சினையேறித்தாய்வாயில்
கொக்கின்பிள்ளை, வெள்ளிறவுண்ணுங்குறுங்குடியே. (௧)

துங்காரரவத்திரைவந்துலவத், தொடுகடலுள்
பொங்காரரவிற்றுயிலும்புனிதரூர்போலும்
செங்காலன்னந்திகழ்தண்டலையிற்பெடையோடும்
கொங்கார்கமலத்தலரிற்சேருங்குறுங்குடியே. (௨)

வாழக்கண்டோம்வந்துகாண்மின்றொண்டர்காள்
கேழற்செங்கண்மாமுகில்வண்ணர்மருவுமூர்
ஏழைச்செங்காலின்றுணைநாரைக்கிரைதேடிக்
கூழைப்பார்வைக்கார்வயன்மேவுங்குறுங்குடியே. (௩)

சிரமுனைந்துமைந்துஞ்சிந்தச்சென், றரக்கன்
உரமுங்கரமுந்துணித்த * வொருவனூர்போலும்
இரவும்பகலுமீன்றேன்முரலமன்றெல்லாம்
குரவின்பூவேதான்மணநாறுங்குறுங்குடியே. (௪)

கவ்வைக்களிற்றுமன்னர்மாளக்கலிமான்றேர்
ஐவர்க்கா, யன்றமரிலுற்றானூர்போலும்
மைவைத்திலங்குகண்ணார்தங்கள்மொழியொப்பான்
கொவ்வைக்கனிவாய்க்கிள்ளைபேசுங்குறுங்குடியே. (௫)

தீநீர்வண்ணமாமலர்கொண்டுவிரையேந்தித்
தூநீர்பரவித்தொழுமினெழுமின்றொண்டர்காள்
மாநீர்வண்ணர்மருவியுறையுமிடம், வானில்
கூநீர்மதியைமாடந்தீண்டுங்குறுங்குடியே. (௬)

வல்லிச்சிறுநுண்ணிடையாரிடைநீர்வைக்கின்ற
அல்லற்சிந்தைதவிரவடைமின்னடியீர்காள்
சொல்லிற்றிருவேயனையார்கனிவாயெயிற்றொப்பான்
கொல்லைமுல்லைமெல்லரும்பீனுங்குறுங்குடியே. (௭)

---

* "வாவோனூர்" என்றும் பாடம்.

நாராரிண்டை.நாண்மலர்கொண்டுகந்தமர்காள்
ஆராவன்போடெம்பெருமானூரடைமின்கள்
தாராவாரும்வார்புனன்மேய்ந்துவயல்வாழும்
கூர்வாய்நாரைபெடையொடாடுங்குறுங்குடியே. (அ)

நின்றவினையுந்துயருங்கெடமாமலரேந்திச்
சென்றுபணிமினெழுமின்றொழுமின்றொண்டீர்காள்
என்றுமிரவும்பகலும்வரிவண்டிசைபாடக்
குன்றின்முல்லைமன்றிடைநாறுங்குறுங்குடியே. (கூ)

* சிலையாலிலங்கைசெற்றான்மற்றோர்சினவேழம்
கொலையார்கொம்புகொண்டான்மேயகுறுங்குடிமேல்
கலையார்பனுவல்வல்லான்கலியனொலிமாலை
நிலையார்பாடல்பாடப்பாவம்நில்லாவே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

அக்குத்துங்கார்வாழசிரமுன்கவ்வைதீவல்லிநாரார்நின்றசிலைதந்தை.

ஆ_திருமொழி - அசு - க்கு - பாசுரம் - அசு0.

---

## எ - வது. தந்தைதாய்.

........................

### திருவல்லவாழ்கோலப்பிரான்விஷயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தன்யாசிராகம் - ரூபகதாளம்.

* தந்தைதாய்மக்களேசுற்றமென்றுற்றவர்பற்றிநின்ற
பந்தமார்வாழ்க்கையைநொந்துநீபழியெனக்கருதினாயேல்
அந்தமாயாதியாயாதிக்குமாதியாயாயனாய
மைந்தனார்வல்லவாழ்சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே. (க)

மின்னுமாவல்லியும்வஞ்சியும்வென்றநுண்ணிடைநுடங்கும்
அன்னமென்னடையினார்கலவியையருவருத்தஞ்சினாயேல்
துன்னுமாமணிமுடிப்பஞ்சவர்க்காகிமுன்றூதுசென்ற
மன்னனார்வல்லவாழ்சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே. (உ)

பூணுலாமென்முலைப்பாவைமார்பொய்யினைமெய்யிதென்று
பேணுவார்பேசுமப்பேச்சைநீபிழையெனக்கருதினையேல்
நீணிலாவெண்குடைவாணனார்வேள்வியின்மண்ணிரந்த
மாணியார்வல்லவாழ்சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே. (ரு)

பண்ணுலாமென்மொழிப்பாவைமார்பணைமுலையணைதுநாமென்
றெண்ணுவாரெண்ணமதொழிந்துநீபிழைத்துயக்கருதினையேல்
விண்ணுளார்விண்ணின்மீதியன்றவேங்கடத்துளார்வளங்கொண்முந்நீர்
வண்ணனார்வல்லவாழ்சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே. (சு)

மஞ்சுதோய்வெண்குடைமன்னராய்வாரணஞ்சூழவாழ்ந்தார்
துஞ்சினாரென்பதோர்சொல்லைநீதுயரெனக்கருதினையேல்
நஞ்சுதோய்கொங்கைமேலங்கைவாய்வைத்தவனுயிருண்ட
மைந்தனார்வல்லவாழ்சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே. (எ)

உருவினார்பிறவிசேருன்பொதிநரம்புதோற்குரம்பையுள்புக்
கருவிநோய்செய்துநின்றைவர்தாம்வாழ்வதற்கஞ்சினையேல்
திருவினார்வேதநான்கைந்துதீவேள்வியோடங்கமாறும்
மருவினார்வல்லவாழ்சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே. (அ)

நோயெலாம்பெய்ததோராக்கையைமெய்யெனக்கொண்டு, வாளா
பேயர்தாம்பேசுமப்பேச்சைநீபிழையெனக்கருதினையேல்
தீயுலாவெங்கதிர்த்திங்களாய்மங்குல்வானாகிநின்ற
மாயனார்வல்லவாழ்சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே. (எ)

மஞ்சுசேர்வானெரிநீர்நிலங்காலிவைமயங்கிநின்ற
வஞ்சுசேராக்கையையரணமன்றென்றுயக்கருதினையேல்
சந்துசேர்மென்முலைப்பொன்மலர்ப்பாவையுந்தாமு, நாளும்
வந்துசேர்வல்லவாழ்சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே. (அ)

வெள்ளியார்பிண்டியார்போதியாரென்றிவரோதுகின்ற
கள்ளநூல்தன்னையுங்கருமமன்றென்றுயக்கருதினையேல்
தெள்ளியார்கைதொழுந்தேவனார்மாமுநீரமுதுதந்த
வள்ளலார், வல்லவாழ்சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே. (கூ)

* மறைவலார்குறைவிலாருறையுமூர்வல்லவாழடிகடம்மைச்
சிறைகுலாவண்டறைச்சோலைசூழ்கோலநீளாலிநாடன்
கறையுலாவேல்வல்லகலியன்வாயொலியிவைகற்றுவல்லார்
இறைவராயிருநிலங்காவல்பூண்டின்பநன்கெய்துவாரே. (க0)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

தந்தைமின்பூண்பண்மஞ்சுருநோய் மஞ்சுசேர்வெள்ளிமறை மூந்தற.

ஆ திருமொழி - அஎ - க்கு - பாசுரம் - அஎ0.

## அ - வது. முந்துற

திருமாலிருஞ்சோலைஅழகர்விஷயம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சுருட்டிராகம்-அட.தாளம்.

* முந்துறவுரைக்கேன்விரைக்குழன்மடவார்கலவியைவிடுதடுமாறல்
அந்தரமேழுமலைகடலேழுமாயவெம்மடிகடங்கோயில்
சந்தொடுமணியுமணிமயிற்றழையுந்தழுவிவந்தருவிகணிறைந்து
வந்திழிசாரன்மாலிருஞ்சோலைவணங்குதும்வாமடநெஞ்சே. (க)

இண்டையும்புனலுங்கொண்டிடையின்றியெழுமினேதொழுதுமென்றிமையோ
அண்டரும்பரவவரவணைத்துயின்றசுடர்முடிக்கடவுடன்கோயில் [ர்
விண்டலர்தூளிவேய்வளர்புறவில்விரைமலர்க்குறிஞ்சியினறுந்தேன்
வண்டமர்சாரன்மாலிருஞ்சோலைவணங்குதும்வாமடநெஞ்சே. (உ)

பிணிவளராக்கைநீங்கநின்றேத்தப்பெருநிலவருளிமுன்னருளி
அணிவளர்குறளாய்அகலிடமுழுதுமளந்தவெம்மடிகடங்கோயில்
கணிவளர்வேங்கைநெடுநிலமதனுட்குறவர்தங்கவணிடைத்துரந்த
மணிவளர்சாரன்மாலிருஞ்சோலைவணங்குதும்வாமடநெஞ்சே. (ங)

சூர்மையிலாயபேய்முலைசுவைத்துச்சுடுசரமடுசிலைத்துரந்து
நீர்மையிலாததாடகைமாளநினைந்தவர்மனங்கொண்டகோயில்
கார்மலிவேங்கைகோங்கலர்புறவிற்கடிமலர்க்குறிஞ்சியினறுந்தேன்
வார்புனல்சூழ்தண்மாலிருஞ்சோலைவணங்குதும்வாமடநெஞ்சே. ச

வணங்கலிலரக்கன்செருக்களத்தவியமணிமுடியொருபதும்புரள
அணங்கெழுந்தவன்றன்கவந்தநின்றாடவமர்செய்தவடிகடங்கோயில்
பிணங்கலினெடுவேய்நுதிமுகங்கிழிப்பபிரசம்வந்திழிதரப்பெருந்தேன்
மணங்கமழ்சாரன்மாலிருஞ்சோலைவணங்குதும்வாமடநெஞ்சே. ரு

விடங்கலந்தமர்ந்தவரவணைத்துயின்றுவிளங்கனிக்கிளங்கன்றுவிசிறிக்
குடங்கலந்தாடிக்குரவைமுன்கோத்தகூத்தவெம்மடிகடங்கோயில்
தடங்கடன்முகந்துவிசும்பிடைப்பிளிறத்தடவரைக்களிறென்றுமுனிந்து
மடங்கனின்றதிருமாலிருஞ்சோலைவணங்குதும்வாமடநெஞ்சே. (சா)

தேனுகனுவிபோயுகவங்கோர்செழுந்திரட்பனங்கனியுதிரத்
தானுகந்தெறிந்ததடங்கடல்வண்ணனொண்ணிமுனிடங்கொண்டகோயில்
வானகச்சோலைமரதகச்சாயன்மாமணிக்கல்லதர்நிறைந்து
மானுகர்சாரன்மாலிருஞ்சோலைவணங்குதும்வாமடநெஞ்சே. (எ)

புதமிகுவிசும்பிற்புணரிசென்றணவப்பொருகடலரவணைத்துயின்று
பதமிகுபரியின்மிகுசினந்தவிர்த்தபனிமுகில்வண்ணர்தங்கோயில்
கதமிகுசினத்தகடதடக்களிற்றின்கவுள்வழிகளிவண்டுபருக
மதமிகுசாரன்மாலிருஞ்சோலைவணங்குதும்வாமடநெஞ்சே. (௮)

புந்தியிற்சமணர்புத்தரென்றிவர்களொத்தனபேசவுமுகந்திட்
டெந்தைபெம்மானிமையவர்தலைவனெண்ணிமுனிடங்கொண்டகோயில்
சந்தனப்பொழிலின்றாழ்சினைநீழற்றாழ்வரைமகளிர்க, ணாளும்
மந்திரத்திறைஞ்சுயாலிருஞ்சோலைவணங்குதும்வாமடநெஞ்சே.(௯)

* வண்டமர்சாரன்மாலிருஞ்சோலைமாமணிவண்ணனைவணங்கும்
தொண்டரைப்பரவுஞ்சுடரொளிநெடுவேற்சூழ்வயலாலிநன்னாடன்
கண்டநல்வேலிமங்கையர்தலைவன்கலியன்வாயொலிசெய்தபனுவல்
கொண்டிவைபாடுந்தவமுடையார்களாள்வரிக்குரைகடலுலகே.(௧௦)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

முந்துறவிண்டைபிணிசூர்மைவணங்கலில்விடந்தேன்புதம்புந்திவண்டமர்மூவர்.

ஆ திருமொழி - ௮௮ - க்கு - பாசுரம் - ௮௮௦.

---

## ௯ - வது. மூவரில்.

### திருமாலிருஞ்சோலை அழகர்விஷயம்.

கலிவிருத்தம்.

கமாசுராகம் - ரூபகதாளம்.

* மூவரின்முன்முதல்வன்முழங்கார்கடலுட்கிடந்து
பூவளருந்திதன்னுட்புவனம்படைத்துண்டுமிழ்ந்த
தேவர்கணாயகனைத்திருமாலிருஞ்சோலைநின்ற
கோவலர்கோவிந்தனைக்கொடியேரிடைகூடுங்கொலோ. (௧)

புனைவளர்பூம்பொழிலார்பொன்னிசூழரங்கநகருள்
முனைவனை, மூவுலகும்படைத்தமுதன்மூர்த்திதன்னைச்
சினைவளர்பூம்பொழில்சூழ்திருமாலிருஞ்சோலைநின்றான்
கனைகழல்காணுங்கொலோகயற்கண்ணியெங்காரிகையே. (௨)

உண்டுலகேழினையுமொருபாலகனாயிலைமேல்
கண்டுயில்கொண்டுகந்தகருமாணிக்கமாமலையைத்
திண்டிறன்மாகரிசேர்திருமாலிருஞ்சோலைநின்ற
அண்டர்தங்கோவினையின்றணுகுங்கொலென்னாயிழையே. (௩)

சிங்கமதாயவுணன்றிறலாகமுன்கீண்டுகந்த
பங்கயமாமலர்கட்பரனையெம்பரஞ்சுடரைத்
திங்கணன்மாமுகில்சேர்திருமாலிருஞ்சோலைநின்ற
நங்கள்பிரானையின்றுநணுகுங்கொலென்னன்னுதலே. (௪)

தானவன்வேள்விதன்னிற்றனியேகுறளாய்நிமிர்ந்து
வானகமுமண்ணகமுமளந்ததிருவிககிரமன்
தேனமர்பூம்பொழில்சூழ்திருமாலிருஞ்சோலைநின்ற
வானவர்கோனையின்றுவணங்கித்தொழவல்லள்கொலோ. (௫)

நேசமிலாதவர்க்குநினையாதவர்க்குமரியான்
வாசமலர்ப்பொழில்சூழ்வடமாமதுரைப்பிறந்தான்
தேசமெல்லாம்வணங்குந்திருமாலிருஞ்சோலைநின்ற
கேசவனம்பிதன்னைக்கெண்டையொண்கண்ணிகாணுங்கொலோ. (௬)

புள்ளினைவாய்பிளந்துபொருமாகரிகொம்பொசித்து
கள்ளச்சகடுதைத்தகருமாணிக்கமாமலையைத்
தெள்ளருவிகொழிக்குந்திருமாலிருஞ்சோலைநின்ற
வள்ளலைவாணுதலாள்வணங்கித்தொழவல்லள்கொலோ. (௭)

பார்த்தனுக்கன்றருளிப்பாரதத்தொருதேர்முனின்று
காத்தவன்றன்னை, விண்ணோர்கருமாணிக்கமாமலையைத்
தீர்த்தனைப்பூம்பொழில்சூழ்திருமாலிருஞ்சோலைநின்ற
மூர்த்தியைக்கைதொழவுமுடியுங்கொலென்மொய்குழற்கே. (௮)

வலம்புரியாழியனைவரையார்திரடோளன்றன்னைப்
புலம்புரிநூலவனைப்பொழில்வேங்கடவேதியனைச்
சிலம்பியலாறுடையதிருமாலிருஞ்சோலைநின்ற
நலந்திகழ்நாரணனைநணுகுங்கொலென்னன்னுதலே. (௯)

தேடற்கரியவனைத்திருமாலிருஞ்சோலைநின்ற
ஆடற்பறவையனையணியாயிழைகாணுமென்று
மாடக்கொடிமதில்சூழ்மங்கையார்கலிகன்றிசொன்ன
பாடற்பனுவல்பத்தும்பயில்வார்க்கில்லைபாவங்களே. (௧௦)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

மூவர்புனையுண்டுசிங்கந்தானவனேசம்புள்பார்த்தன்வலம்புரிதேடற்கெங்கள்.

ஆ. திருமொழி - ௮௯ - க்கு - பாசுரம் - ௮௯௦.

# க0 - வது. எங்கள்.

திருக்கோட்டியூர் சௌம்யநாராயணன்விஷயம்.

ஆசிரியத்துறை.

யமுனாராகம் - அடதாளம்.

எங்களெம்மிறையெம்பிரானிமையோர்க்குநாயக, னேத்தடியவர்
தங்கடம்மனத்துப்பிரியாதருள்புரிவான்
பொங்குதண்ணருவிப்புதஞ்செய்யப்பொன்களேசிதறுமிலங்கொளி
செங்கமலமலருந்திருக்கோட்டியூரானே. (க)

எவ்வநோய்தவிர்ப்பானெமக்கிறைமின்னகைத்துவர்வாய், நிலமகள்
செவ்விதோயவல்லான்றிருமாமகட்கினியான்
மௌவன்மாலைவண்டாடுமல்லிகைமாலையோடுமணைந்த, மாருதம்
தெய்வநாறவருந்திருக்கோட்டியூரானே. (உ)

வெள்ளியான்கரியான்மணிநிறவண்ணன்விண்ணவர்தமக்கிறையெமக்
கொள்ளியானுயர்ந்தானுலகேழுமுண்டுமிழ்ந்தான்
துள்ளுநீர்மொண்டுகொண்டுசாமரைக்கற்றைசந்தனமுந்திவந்தசை
தெள்ளுநீர்புறவிற்றிருக்கோட்டியூரானே. (ந)

ஏறுமேறுமிலங்குமொண்மழுப்பற்றுமீசற்கிசைந், துடம்பிலோர்
கூறுதான்கொடுத்தான்குலமாமகட்கினியான்
நாறுசெண்பகமல்லிகைமலர்புல்கியின்னிளவண்டு, நன்னறும்
தேறல்வாய்மடுக்குந்திருக்கோட்டியூரானே. (ச)

வங்கமாகடல்வண்ணன்மாமணிவண்ணன்விண்ணவர்கோன்,மதுமலர்த்
தொங்கனீண்முடியானெடியான்படிகடந்தான்
மங்குல்தோய்மணிமாடவெண்கொடியாகமீதுயர்ந்தேறி, வானுயர்
திங்கள்தானணவுந்திருக்கோட்டியூரானே. (ரு)

காவலனிலங்கைக்கிறைகலங்கச்சாஞ்செலவுய்த்து, மற்றவன்
ஏவலந்தவிர்த்தானென்னையாளுடையெம்பிரான்
நாவலம்புவிமன்னர்வந்துவணங்கமாலுறைகின்றதிங், கெனத்
தேவர்வந்திறைஞ்சுந்திருக்கோட்டியூரானே. (சு)

கன்றுகொண்டுவிளங்கனியெறிந்தானிரைக்கழிவென்று, மாமழை
நின்றுகாத்துகந்தானிலமாமகட்கினியான்
குன்றின்முல்லையின்வாசமுங்குளிர்மல்லிகைமணமுமளைந், திளம்
தென்றல்வந்துலவுந்திருக்கோட்டியூரானே. (எ)

பூங்குருந்தொசித்தானைகாய்ந்தரிமாச்செகுத், தடியேனையாளுகந்
தீங்கென்னுட்புகுந்தானிமையோர்கடம்பெருமான்
தூங்குதண்பலவின்கனிதொகுவாழையின்கனியொடுமாங்கனி
தேங்குதண்புனல்சூழ்திருக்கோட்டியூரானே. (அ)

கோவையின்றமிழ்பாடுவார்குடமாடுவார்தடமாமலர்மிசை
மேவுநான்முகனில்விளங்குபுரிநூலர்
மேவுநான்மறைவாணரைவகைவேள்வியாறங்கம்வல்லவர்தொழும்
தேவதேவபிரான்றிருக்கோட்டியூரானே. (௯)

ஆலுமாவலவன்கலிகன்றிமங்கையர்தலைவ, னணிபொழில்
சேல்கள்பாய்கழனித்திருக்கோட்டியூரானை
நீலமாமுகில்வண்ணனைநெடுமாலையின்றமிழால்நினைந்த, விந்
நாலுமாறும்வல்லார்க்கிடமாகும்வானுலகே. (௧0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

எங்களெவ்வவெள்ளி ஏறுவங்கக்காவலன்கன்றுபூங்கோவை ஆலும்மொருநல்.

ஆ பத்து - ௯ - ல் - திருமொழி - ௯0 - க்கு - பாசுரம் - ௯00.

ஒன்பதாம்பத்துமுற்றியது.

## பத்தாம்பத்து.

### க - வது. ஒருநல்.

திருநீர்மலை, திருக்கண்ணமங்கை, திருத்தண்கா, திருநாங்கூர் திருவெள்ளறை, திருமெய்யம், திருச்சேறை, திருக்குடந்தை, திருவெஃகா திருமாலிருஞ்சோலை, திருவிண்ணகர், திருக்கோட்டியூர்- திருநாவாய் பெருமாள் விஷயம்.

கலிவிருத்தம்.

தர்ப்பாரிராகம் - அடதாளம்.

* ஒருநற்சுற்றமெனக்குயிரொண்பொருள்
வருநற்றொல்கதியாகியமைந்தனை
நெருநற்கண்டதுநீர்மலையின்றுபோய்
கருநற்சூழ்கண்ணமங்கையுட்காண்டுமே. (க)

பொன்னைமாமணியையணியார்ந்ததோர்
மின்னை, வேங்கடத்துச்சியிற்கண்டுபோய்
என்னையாளுடையீசனையெம்பிரான்
றன்னை, யான்சென்றுகாண்டுந்தண்காவிலே. (உ)

வேலையாலிலைப்பள்ளிவிரும்பிய
பாலையாரமுதத்தினைப், பைந்துழாய்
மாலையாலியிற்கண்டுமகிழ்ந்துபோய்
ஞாலமுன்னியைக்காண்டும்நாங்கூரிலே. (ரு)

துளக்கமிற்சுடரையவுணனுடல்
பிளக்குமைந்தனைப், பேரில்வணங்கிப்போய்
அளப்பிலாரமுதையமரர்க்கருள்
விளக்கினைச், சென்றுவெள்ளறைக்காண்டுமே. (சு)

சுடலையிற்சுடுநீறனமர்ந்ததோர்
நடலைதீர்த்தவனைநறையூரிற்கண், டென்
உடலையுட்புகுந்துள்ளமுருக்கியுண்
விடலையைச்சென்றுகாண்டுமெய்யத்துளே. (ளு)

வானையாரமுதந்தந்தவள்ளலைத்
தேனைநீள்வயற்சேறையிற்கண்டுபோய்
ஆனைவாட்டியருளுமமரர்தம்
கோனை, யாங்குடந்தைச்சென்றுகாண்டுமே. (சு)

கூந்தலார்மகிழ்கோவலனைய், வெண்ணெய்
மாந்தழுந்தையிற்கண்டுமகிழ்ந்துபோய்ப்
பாந்தட்பாழியிற்பள்ளிவிரும்பிய
வேந்தனைச்சென்றுகாண்டும்வெஃகாவிலே. (எ)

பத்தராவியைப்பான்மதியை, யணித்
தொத்தைமாலிருஞ்சோலைத்தொழுதுபோய்
முத்தினைமணியைமணிமாணிக்க
வித்தினைச், சென்றுவிண்ணகர்க்காண்டுமே. (அ)

கம்பமாகளிறஞ்சிக்கலங்க, வோர்
கொம்புகொண்டகுரைகழற்கூத்தனைக்
கொம்புலாம்பொழிற்கோட்டியூர்க்கண்டுபோய்
நம்பனைச்சென்றுகாண்டும்நாவாயுளே. (கூ)

* பெற்றமாளியைப்பேரின்மணாளனைக்
கற்றநூற்கலிகன்றியுரைசெய்த
சொற்றிறமிவைசொல்லியதொண்டர்கட்கு
அற்றமில்லையண்டமவர்க்காட்சியே. (கO)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஒருபொன்வேலைத்துளக்கம்சுடலைவான்கூந்தல்பத்தர்கம்பம்பெற்றமிரக்கம்.

ஆ திருமொழி - கூக - க்கு - பாசுரம் - கூ௱O.

## உ - வது. இரக்கமின்றி.

சக்ரவர்த்தித்திருமகன்விஷயம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பியாகடைராகம் - அடதாளம்

* இரக்கமின்றியெங்கோன்செய்ததீமை
யிம்மையேயெமக்கெய்திற்றுக்காணீர்
பரக்கயாமின்றுரைத்தெமிராவணன்
பட்டனனினியாவர்க்குரைக்கோம்
குரக்குநாயகர்காளிளங்கோவே
கோலவல்விலிராமபிரானே
அரக்கராடழைப்பாரிலைநாங்க
ளஞ்சினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. (க)

பத்துநீண்முடியுமவற்றிரட்டி
பாழித்தோளும்படைத்தவன்செல்வம்
சித்தமங்கையர்பால்வைத்துக்கெட்டான்
செய்வதொன்றறியாதடியோங்கள்
ஒத்ததோளிரண்டுமொருமுடியு
மொருவர்தந்திறத்தோமன்றிவாழ்ந்தோம்
அத்தவெம்பெருமானெம்மைக்கொல்லே
லஞ்சினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. (உ)

தண்டகாரணியம்புகுந்தன்று
தையலைத்தகவிலியெங்கோமான்
கொண்டுபோந்துகெட்டானெமக்கிங்கோர்
குற்றமில்லைக்கொல்லேல்குலவேந்தே
பெண்டிராற்கெடுமிக்குடிதன்னைப்
பேசுகின்றதென்றாசரதீ, யுன்
அண்டவாணருகப்பதேசெய்தா
யஞ்சினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. (ங)

எஞ்சலிலிலங்கைக்கிறையெங்கோன்
றன்னைமுன்பணிந்து, நங்கள்கண்முகப்பே
நஞ்சுதானரக்கர்குடிக்கென்று
நங்கையையவன்றம்பியேசொன்னான்

விஞ்சைவானவர்வேண்டித்தேபட்டோம்
வேரிவார்பொழின்மாமயிலன்ன
அஞ்சிலோதியைக்கொண்டுநடமின்
அஞ்சினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. (௪)

செம்பொனீண்முடியெங்களிராவணன்
சீதையென்பதோர்தெய்வங்கொணர்ந்து
வம்புலாங்கடிகாவிற்சிறையா
வைத்ததேகுற்றமாயிற்றுக்காணீர்
கும்பனோடுநிகும்பனும்பட்டான்
கூற்றமானிடமாய்வந்துதோன்றி
அம்பினாலெம்மைக்கொன்றிடுகின்ற
தஞ்சினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. (௫)

ஓதமாகடலைக்கடந்தேறி
யுயர்கொண்மாக்கடிகாவையிறுத்துக்
காதன்மக்களுஞ்சுற்றமுங்கொன்று
கடியிலங்கைமலங்கவெரித்துத்
தூதுவந்தகுரங்குக்கேயுங்கள்
தோன்றல்தேவியைவிட்டுக்கொடாதே
ஆதனின்றுபடுகின்றதந்தோ
வஞ்சினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. (௬)

தாழமின்றிமுந்நீரையஞ்ஞான்று
தகைந்ததேகண்டு, வஞ்சிநுண்மருங்குல்
மாழைமான்மடநோக்கியைவிட்டு
வாழகிலாமதியின்மனத்தானை
ஏழையையிலங்கைக்கிறைதன்னை
யெங்களையொழியக்கொலையவனைச்
சூழுமாநினைமாமணிவண்ணா
சொல்லினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. (௭)

மனங்கொண்டேறுமண்டோதரிமுதலா
வங்கயற்கண்ணினார்களிருப்பத்
தனங்கொண்மென்முலைநோக்கமொழிந்து
தஞ்சமேசில்தாபதரென்று
புனங்கொண்மென்மயிலைச்சிறைவைத்த
புன்மையாளனெஞ்சிற்புகவெய்த
அனங்கனன்னதிண்டோளெம்மிராமற்
கஞ்சினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. (௮)

புரங்கள்மூன்றுமோர்மாத்திரைப்போதிற்
பொங்கெரிக்கிரைகண்டவ, னம்பில்
சரங்களேகொடிதாயடுகின்ற
சாம்பவானுடனிற்கத்தொழுதோம்
இரங்குநீரெமக்கெந்தைபிரானே
யிலங்குவெங் *கதிரோன்சிறுவா
குரங்குகட்கரசேயெம்மைக்கொல்லேல்
கூறினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. (௯)

* அங்கவ்வானவர்க்காகுலந்திர
வணியிலங்கையழித்தவன்றன்னைப்
பொங்குமாவலவன்கலிகன்றி
புகன்றபொங்கத்தங்கொண், டிவ்வுலகினில்
எங்கும்பாடிநின்றாடுமின்றெண்டீ
ரிம்மையேயிடரில்லை, யிறந்தால்
தங்குமூரண்டமேகண்டுகொண்மின்
சாற்றினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. (௧0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

இரக்கம்பத்துதண்டகமெஞ்சல்செம்பொனேதம்தாழமனம்புரம்அங்கேத்து.

ஆ திருமொழி - ௧௨ - க்கு - பாசுரம் - ௧௨0.

## ௩ - வது. எத்துகின்றேம்.

இதுவுமது.

கலிவிருத்தம்.

கலியாணிராகம் - திரிபுடைதாளம்.

* எத்துகின்றேம்நாத்தழும்பவிராமன்றிருநாமம்
சோத்தநம்பிசுக்கிரீவாவும்மைத்தொழுகின்றேம்
வார்த்தைபேசிரெம்மையுங்கள்வானரங்கொல்லாமே
கூத்தர்போலவாடுகின்றேங்குழமணிதூரமே. (௧)

எம்பிரானேயென்னையாள்வாயென்றென்றலற்றாதே
அம்பின்வாய்ப்பட்டாற்றகில்லாதிந்திரசித்தழிந்தான்
நம்பியனுமாசுக்கிரீவாவங்கதனேநளனே
கும்பகரனன்பட்டுப்போனான்குழமணிதூரமே. (௨)

* "கதிரோன்றன்சிறுவா" என்றும்பாடம்.

ஞாலமாளுமுங்கள்கோமானெங்களிராவணற்குக்
காலனாகிவந்தவாகண்டஞ்சிக், கருமுகில்போல்
நீலன்வாழ்கச்சுடேணன்வாழ்கவங்கதன்வாழ்கவென்று
கோலமாகவாடுகின்றோங்குழமணிதூரமே. (௩)

மணங்கள்நாறும்வார்குழலார்மாதர்களாதரத்தைப்
புணர்ந்தசிந்தைப்புன்மையாளன்பொன்றவரிசிலையால்
கணங்களுண்ணவாளியாண்டகாவலனுக்கிளையோன்
குணங்கள்பாடியாடுகின்றோங்குழமணிதூரமே. (௪)

வென்றிதந்தோமானம்வேண்டோந்தானமெமக்காக
இன்றுதம்மினெங்கள்வாணாளெம்பெருமான்றமர்காள்
நின்றுகாணீர்கண்களாரநீரெம்மைக்கொல்லாதே
குன்றுபோலவாடுகின்றோங்குழமணிதூரமே. (௫)

கல்லின்முந்நீர்மாற்றிவந்துகாவல்கடந், திலங்கை
அல்லல்செய்தானுங்கள்கோமானெம்மையமர்க்களத்து
வெல்லகில்லாதஞ்சினோங்காண்வெங்கதிரோன்சிறுவா
கொல்லவேண்டாவாடுகின்றோங்குழமணிதூரமே. (௬)

மாற்றமாவதித்தனையேவம்மினரக்கருள்ளீர்
சீற்றநும்மேற்றீரவேண்டிற்சேவகம்பேசாதே
ஆற்றற்சார்ந்ததொல்பிறப்பிலனுமனைவாழ்கவென்று
கூற்றமன்னார்காணவாடீர்குழமணிதூரமே. (௭)

கவளயானைப்பாய்புரவித்தேரோடரக்கரெல்லாம்
துவள, வென்றவென்றியாளன்றன்றமர்கொல்லாமே
தவளமாடநீடயோத்திகாவலன்றன்சிறுவன்
குவளைவண்ணன்காணவாடீர்குழமணிதூரமே. (௮)

ஏடொத்தேந்துநீணிலைவேலெங்களிராவணனார்
ஓடிப்போனார், நாங்களெய்த்தோமுய்வதோர்காரணத்தால்
சூடிப்போந்தோமுங்கள்கோமானாணை தடோன்மின்
கூடிக்கூடியாடுகின்றோங்குழமணிதூரமே. (௯)

* வென்றதொல்சீர்த்தென்னிலங்கைவெஞ்சமத், தன்றரக்கர்
குன்றமன்னாராடியுய்ந்தகுழமணிதூரத்தைக்
கன்றிநெய்நீர்நின்றவேற்கைக்கலியனொலிமாலை
ஒன்றுமொன்றுமைந்துமூன்றும்பாடிநின்றாடுமினே. (௧௰)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.
ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஏத்தம் பிரான் ஞாலம் மணம் வென்றி கல்லில் மாற்றம் கவள வேடு வென்ற சந்தம்.

ஆ திருமொழி - ௯௩ - க்கு - பாசுரம் - ௯௩௰.

## ௪ - வது. சந்தமலர்.

### கண்ணன்விஷயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

புன்னாகவராளிராகம் - ரூபகதாளம்.

* சந்தமலர்க்குழல்தாழத்தானுகந்தோடித்தனியே
வந், தென்முலைத்தடந்தன்னைவாங்கிநின்வாயின்மடுத்து
நந்தன்பெறப்பெற்றநம்பீநானுகந்துண்ணுமமுதே
எந்தைபெருமானேயுண்ணாயென்னம்மஞ்சேமமுண்ணாயே. (௧)

வங்கமறிகடல்வண்ணாமாமுகிலேயொக்குநம்பீ
செங்கணெடியதிருவேசெங்கமலம்புரைவாயா
கொங்கைசுரந்திடவுன்னைக்கூவியுங்காணாதிருந்தேன்
எங்கிருந்தாயர்களோடென்விளையாடுகின்றாயே. (௨)

திருவிற்பொலிந்தவெழிலாராயர்தம்பிள்ளைகளோடு
தெருவிற்றிளைக்கின்றநம்பீசெய்கின்றதீமைகள்கண்டிட்
டுருகியென்கொங்கையிற்றீம்பாலோட்டைந்துபாய்ந்திடுகின்ற
மருவிக்குடங்காலிருந்துவாய்முலையுண்ணநீவாராய். (௩)

மக்கட்பெறுதவம்போலும்வையத்துவாழுமடவார்
மக்கள்பிறர்கண்ணுக்கொக்குமுதல்வாமதக்களிறன்னாய்
செக்கரிளம்பிறைதன்னைவாங்கிநின்கையிற்றருவன்
ஒக்கலைமேலிருந்தம்மமுவந்தினிதுண்ணநீவாராய். (௪)

மைத்தகருங்குஞ்சிமைந்தாமாமருதூடுநடந்தாய்
வித்தகனேவிரையாதேவெண்ணெய்விழுங்கும்விகிர்தா
இத்தனைபோதன்றியென்றன்கொங்கைசுரந்திருக்கில்லா
உத்தமனேயம்மமுண்ணாயுலகளந்தாயம்மமுண்ணாய். (௫)

பிள்ளைகள்செய்வனசெய்யாய்பேசிற்பெரிதும்வலியை
கள்ளமனத்திலுடையைகாணவேதீமைகள்செய்தி
உள்ளமுருகியென்கொங்கையோட்டைந்துபாய்ந்திடுகின்ற
பள்ளிக்குறிப்புச்செய்யாதேபாலமுதுண்ணநீவாராய். (௬)

தன்மகனாகவன்பேய்ச்சிதான்முலையுண்ணக்கொடுக்க
வன்மகனாயவளாவிவாங்கி * முலையுண்டநம்பீ
நன்மகளாய்மகளோடுநானிலமங்கைமணாளா
என்மகனேயம்மமுண்ணாயென்னம்மஞ்சேமமுண்ணாயே. (௭)

---

* "முலையுண்டபிள்ளை" என்றும்பாடம்.

உந்தமடிகள்முனிவருன்னைநானென்கையிற்கோலால்
நொந்திடமோதவுங்கில்லேனுங்கள்தமாநிரையெல்லாம்
வந்துபுகுதரும்போதுவானிடைத்தெய்வங்கள்காண
அந்தியம்போதங்குநில்லேலாழியங்கையனேவாராய். (அ)

பெற்றந்தலைவனெங்கோமான்பேரருளாளன்மதலாய்
சுற்றக்குழாத்திளங்கோவேதோன்றியதொல்புகழாளா
கற்றினந்தோறுமறித்துக்கானந்திரிந்தகளிறே
எற்றுக்கெனம்மமுண்ணுதேயெம்பெருமானிருந்தாயே. (கூ)

* இம்மையிடர்கெடவேண்டியேந்தெழிற்றேட்கலிகன்றி
செம்மைப்பனுவனூல்கொண்டுசெங்கணெடியவன்றன்னை
அம்மமுண்ணென்றுரைக்கின்றபாடலிவையைந்துமைந்தும்
மெய்ம்மைமனத்துவைத்தேத்தவிண்ணவராகலுமாமே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

சந்தவங்கம்திருமக்கள்ஸமைத்தபிள்ளைதன்மகனுந்தம்பெற்றவிம்மைபூங்கோதை.

ஆ திருமொழி – கச – க்கு – பாசுரம் – கச0.

---

## ரு - வது. பூங்கோதை.

### சப்பாணிப்பருவம்.

கலித்தாழிசை.

எமுனகலியாணிராகம் – ஆதிதாளம்.

* பூங்கோதையாய்ச்சிகடைவெண்ணெய்புக்குண்ண
ஆங்கவளார்த்துப்புடைக்கப்புடையுண்டு
ஏங்கியிருந்துசிணுங்கிவிளையாடும்
ஓங்கோதவண்ணனேசப்பாணியொளிமணிவண்ணனேசப்பாணி. (க)

தாயர்மனங்கள்தடிப்பத்தயிர்நெய்யுண்
டேயெம்பிராக்க, ளிருநிலத்தெங்கள்தம்
ஆயரழகவடிக, ளரவிந்த
வாயவனேகொட்டாய்சப்பாணிமால்வண்ணனேகொட்டாய்சப்பாணி

தாமோருருட்டித்தயிர்நெய்விழுங்கிட்டுத்
தாமோதவழ்வவொன்றுய்ச்சியர்தாம்பினல்
தாமோதரக்கையாலார்க்கத்தழும்பிருந்த
தாமோதரா கொட்டாய்சப்பாணிதாமரைக்கண்ணனேசப்பாணி.(ரு)

பெற்றார்தளைகழலப்பேர்ந்தங்கயலிடத்
துற்றதொருவருமின்றியுலகினில்
மற்றாருமஞ்சப்போய்வஞ்சப்பெண்ணஞ்சுண்ட
கற்றாயனேகொட்டாய்சப்பாணிகார்வண்ணனேகொட்டாய்சப்பாணி

சோத்தனனின்னைத்தொழுவன்வரந்தரப்
பேய்ச்சிமுலையுண்டபிள்ளாய், பெரியன
ஆய்ச்சியரப்பந்தருவ, ரவர்க்காகச்
சாற்றியோரா யிரஞ்சப்பாணிதடங்கைகளாற்கொட்டாய்சப்பாணி.()

கேவலமன்றுன்வயிறு, வயிற்றுக்கு
நானவலப்பந்தருவன், கருவிளைப்
பூவலர்நீண்முடிநந்தன்றன்போரேறே
கோவலனேகொட்டாய்சப்பாணிகுடமாடீகொட்டாய்சப்பாணி.(சு)

புள்ளினைவாய்பிளந்துபூங்குருந்தஞ்சாய்த்துத்
துள்ளிவிளையாடித்தூங்குறிவெண்ணெயை
அள்ளியகையாலடியேன்முலைநெருடும்
பிள்ளைப்பிரான்கொட்டாய்ச்சப்பாணிபேய்முலையுண்டானேசப்பாணி.

ஆயும்பிறருமறியாதயாமத்து
மாயவலவைப்பெண்வந்துமுலைதரப்
பேயென்றதனைப்பிடித்துயிருண்ட
மாயவனேகொட்டாய்சப்பாணிமால்வண்ணனேகொட்டாய்சப்பாணி

கள்ளக்குழவியாய்க்காலாற்சகடத்தைத்
தள்ளியுதைத்திட்டுத்தாயாய்வருவாளை
மெள்ளத்தொடர்ந்துபிடித்தாருயிருண்ட
வள்ளலேகொட்டாய்சப்பாணிமால்வண்ணனேகொட்டாய்சப்பாணி.

* காரார்புயற்கைக்கலிகன்றிமங்கையர்கோன்
பேராளனெஞ்சிற்பிரியாதிடங்கொண்ட
சீராளா, செந்தாமரைக்கண்ணா, தண்டுழாய்த்
தாராளாகொட்டாய்சப்பாணிதடமார்வாகொட்டாய்சப்பாணி. (கO)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.
ஜீயர்திருவடிகளேஶரணம்.

பூங்கோதை தாயர் தாமோர் பெற்றார் சோத்தனக் கேவலம்புள்ளியாயுங் கள்ளகாரார் எங்கானு.

அ திருமொழி - கரு - க்கு - பாசுரம் - கருO.

## சூ - வது. எங்கானும்.

### மாயன்வெண்ணெயுண்டமாட்சிமை.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சாவேரிராகம்-அடதாளம்.

* எங்கானுமீதொப்பதோர்மாயமுண்டே
நரநாரணனுயுலகத்தறநூல்
சிங்காமைவிரித்தவனெம்பெருமா
னதுவன்றியுஞ்செஞ்சுடருநிலனும்
பொங்கார்கடலும்பொருப்புநெருப்பும்
நெருக்கிப்புகப்பொன்மிடறெத்தனைபோ
தங்காந்தவன்காண்மினின்றுய்ச்சியரா
லளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே.　(க)

குன்றொன்றுமத்தாவரவமளவிக்
குரைமாகடலைக்கடைந்திட்டொருகால்
நின்றுண்டைகொண்டோட்டிவன்கூனிமிர
நினைந்தபெருமானதுவன்றியும்முன்
நன்றுண்டதொல்சீர்மகரக்கடலேழ்
மலையேழுலகேழொழியாமைநம்பி
அன்றுண்டவன்காண்மினின்றுய்ச்சியரா
லளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே.　(உ)

உளைந்திட்டெழுந்தமதுகைடவர்க
ளுலப்பில்வலியாரவர்பால், வயிரம்
விளைந்திட்டதென்றெண்ணிவிண்ணோர்பரவ
வவர்நாளொழித்தபெருமான்முனநாள்
வளைந்திட்டவில்லாளிவல்வாளெயிற்று
மலைபோலவுணனுடல்வள்ளுகிரால்
அளைந்திட்டவன்காண்மினின்றுய்ச்சியரா
லளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே.　(ந)

தளர்ந்திட்டிமையோர்சரண்டாவெனத்தான்
சரணாய்முரணாயவனை, யுகிரால்
பிளந்திட்டமரர்க்கருள்செய்துகந்த
பெருமான்திருமால்விரிநீருலகை
வளர்ந்திட்டதொல்சீர்விறல்மாவலியை
மண்கொள்ளவஞ்சித்தொருமாண்குறளாய்
அளந்திட்டவன்காண்மினின்றுய்ச்சியரா
லளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே.　(ச)

நீண்டான்குறளாய்நெடுவானளவு
 மடியார்படுமாழ்துயராயவெலாம்
தீண்டாமைநினைந்திமையோரளவுஞ்
 செலவுய்த்தபிரானதுவன்றியுமுன்
வேண்டாமைநமன்றமரென்றமரை
 வினவப்பெறுவாரலரென், றுலகேழ்
ஆண்டானவன்காண்மினின்றுய்ச்சியரா
 லளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (ரு)

பழித்திட்டவின்பப்பயன்பற்றறுத்துப்
 பணிந்தேத்தவல்லார்துயராயவெல்லாம்
ஒழித்திட்டவரைத்தனக்காக்கவல்ல
 பெருமான்றிருமாலதுவன்றியுமுன்
தெழித்திட்டெழுந்தேயெதிர்நின்றமன்னன்
 சினத்தோளவையாயிரமும், மழுவால்
அழித்திட்டவன்காண்மினின்றுய்ச்சியரா
 லளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (சா)

படைத்திட்டதிவ்வையமுய்யமுனநாட்
 பணிந்தேத்தவல்லார்துயராயவெல்லாம்
துடைத்திட்டவரைத்தனக்காக்கவென்னத்
 தெளியாவரக்கர்திறல்போயவிய
மிடைத்திட்டெழுந்தகுரங்கைப்படையா
 விலங்கல்புகப்பாய்ச்சி, விம்மக்கடலை
அடைத்திட்டவன்காண்மினின்றுய்ச்சியரா
 லளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (எ)

நெறித்திட்டமென்கூழைநன்னேரிழையோ
 டுடனாயவில்லென்னவல்லேயதனை
இறுத்திட்டவளின்பமன்போடணைந்திட்
 டிளங்கொற்றவனாய்த்துளங்காதமுந்நீர்
செறித்திட்டிலங்கைமலங்கவரக்கன்
 செழுநீண்முடிதோளொடுதாள்துணிய
அறுத்திட்டவன்காண்மினின்றுய்ச்சியரா
 லளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (அ)

சுரிந்திட்டசெங்கேழுளைப்பொங்கரிமாத்
 தொலையப்பிரியாதுசென்றெய்தி, யெய்தா
திரிந்திட்டிடங்கொண்டடங்காததன்வா
 யிருகூறுசெய்துகந்தபெருமான்முனநாள்

வரிந்திட்டவில்லான்மரமேழுமெய்து
 மலைபோலுருவத்தொரிராக்கதிமூக்
கரிந்திட்டவன்காண்மினின்றாய்ச்சியரா
 லளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (௯)

* நின்றார்முகப்புச்சிறிதுநினையான்
 வயிற்றைநிறைப்பானுறிப்பால்தயிர்நெய்
அன்றாய்ச்சியர்வெண்ணெய்விழுங்கியுரலோ
 டாப்புண்டிருந்தபெருமானடிமேல்
நன்றாயதொல்சீர்வயன்மங்கையர்கோன்
 கலியனொலிசெய்தமிழ்மாலைவல்லார்
என்றானுமெய்தாரிடரின்பமெய்தி
 யிமையோர்க்குமப்பாற்செலவெய்துவாரே. (௧0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

எங்கான்குன்றலைதளர்நீண்டான்பழிபடைநெறிசுநிரின்றார் மானம்.

ஆ திருமொழி - ௬௯ - க்கு - பாசுரம் - ௬௯0.

---

## எ - வது. மானமுடை.

---

ஆய்ச்சியர் கண்ணனைக்குறித்து முறையிடல்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கேதாரகௌளராகம் - அடதாளம்.

* மானமுடைத்துங்களாயர்குலமதனாற்பிறர்மக்கடம்மை
ஊனமுடையனசெய்யப்பெறாயென்றிரப்பனுரைக்ககில்லேன்
நானுமுரைத்திலேனந்தன்பணித்திலனங்கைகாள்நானென்செய்கேன்
தானுமோர்கன்னியுங்கீழையகத்துத்தயிர்கடைகின்றான்போலும். (௧)

காலையெழுந்துகடைந்தவிம்மோர்விற்கப்போகின்றேன்கண்டேபோனேன்
மாலைநறுங்குஞ்சிநந்தன்மகனல்லான்மற்றுவந்தாருமில்லை
மேலையகத்துநங்காய்வந்துகாண்மின்கள்வெண்ணெயேயன், றிருந்த
பாலும்பதின்குடங்கண்டிலேன்பாவியேனென்செய்கேனென்செய்கேனே.

தெள்ளியவாசிறியாநங்கைகாளுறிமேலைத்தடாநிறைந்து
வெள்ளிமலையிருந்தாலொத்தவெண்ணெயைவாரிவிழுங்கியிட்டுக்
கள்வனுறங்குகின்றான்,வந்துகாண்மின்கள்கையெல்லாநெய்,வயிறு [கேனே.
பிள்ளைபரமன்றிவ்வேழுலகுங்கொள்ளும்பேதையேனென்செய்கேனென்செய்

மைந்நம்புவேல்கணல்லாள்முன்னம்பெற்றவளைவண்ணநன்மாமேனி
தன்னம்பிநம்பியுமிங்குவளர்ந்ததவனிவைசெய்தறியான்
பொய்ந்நம்பிபுள்ளுவன்கள்வம்பொதியனைபோகின்றவாதவிழ்ந்திட்
டிந்நம்பிநம்பியாலாய்ச்சியர்க்குய்வில்லையென்செய்கேனென்செய்கேனே.

தந்தைபுகுந்திலனுனிங்கிருந்திலென்றேழிமாராருமில்லை
சந்தமலர்க்குழலாள்தனியேவிளையாடுமிடங்குறுகிப்
பந்துபறித்துத்துகில்பற்றிக்கீறிப்படிறன்படிறுசெய்யும்
நந்தன்மதலைக்கிங்கென்கடவோநங்காயென்செய்கேனென்செய்கேனே.

மண்மகள்கேள்வன்மலர்மங்கைநாயகனந்தன்பெற்றமதலை
அண்ணலிலைக்குழலூதிநஞ்சேரிக்கேயல்லுற்றான்வந்தபின்னைக்
கண்மலர்சோர்ந்துமுலைவந்துவிம்மிக்கமலச்செவ்வாய்வெளுப்ப
என்மகள்வண்ணமிருக்கின்றவாநங்காயென்செய்கேனென்செய்கேனே.

ஆயிரங்கண்ணுடையிந்திரனாருக்கென்றாயர்விழவெடுப்பப்
பாசனநல்லனபண்டிகளாற்புகப்பெய்தவதனையெல்லாம்
போயிருந்தங்கொருபூதவடிவுகொண்டுன்மகனின்றுநங்காய்
மாயமதனையெல்லா * முற்றம்வாரிவளைத்துண்டிருந்தான்போலும். எ

தோய்த்ததயிருநறுநெய்யும்பாலுமோரோர்குடந்துற்றிடுமென்
றாய்ச்சியர்கூடியழைக்கவுநானிதற்கெள்கியிவனைநங்காய்
சோத்தம்பிரானிவைசெய்யப்பெறாயென்றிரப்பனுரப்பகில்லேன்
பேய்ச்சிமுலையுண்டபின்னையிப்பிள்ளையைப்பேசுவதஞ்சுவனே. (அ)

ஈடும்வலியுமுடையவிந்நம்பிபிறந்தவெழுதிங்களில்
ஏடலர்கண்ணியினானைவளர்த்தியமுனைநீராடப்போனேன்
சேடன்றிருமறுமார்பன்கிடந்துதிருவடியான், மலைபோல்
ஓடுஞ்சகடத்தைச்சாடியபின்னையுரப்புவதஞ்சுவனே. (கூ)

அஞ்சுவன்சொல்லியழைத்திடநங்கைகாளாயிரநாழிநெய்யைப்
பஞ்சியமெல்லடிப்பிள்ளைகளுண்கின்றபாகந்தான்வையார்களே
கஞ்சன்கடியன்கறவெட்டுநாளிலென்கைவலத்தாதுமில்லை
நெஞ்சத்திருப்பனசெய்துவைத்தாய்நம்பீயென்செய்கேனென்செய்கேனே.

அங்ஙனந்தீமைகள்செய்வர்களோநம்பீயாயர்மடமக்களைப்
பங்கயநீர்குடைந்தாடுகின்றார்கள்பின்னேசென்றொளித்திருந்து
அங்கவர்பூந்துகில்வாரிக்கொண்டிட்டரவேரிடையாரிரப்ப
மங்கைநல்லீர்வந்துகொண்மினென்றுமரமேறியிருந்தாய்போலும். கக

அச்சந்தினைத்தனையில்லையிப்பிள்ளைக்காண்மையுஞ்சேவகமும்
உச்சியில்முத்திவளர்த்தெடுத்தேனுக்குரைத்திலன்றானின்றுபோய்ப்
பச்சிலைப்பூங்கடம்பேறிவிசைகொண்டுபாய்ந்துபுக், காயிரவாய்
நச்சழல்பொய்கையினுகத்திறேடுபிணங்கிநீவந்தாய்போலும். (கஉ)

* "முற்றும்வாரி" எனவுமுண்டு.

தம்பரமல்லனவாண்மைகளைத்தனியேநின்றுதான்செய்வரோ
எம்பெருமானுன்னைப்பெற்றவயிறுடையேனினியென்செய்கேன்
அம்பரமேழுமதிருமிடிகுரலங்கநற்செங்கணுடை
வம்பவிழ்கானத்துமால்விடைபோடுபிணங்கிநீவந்தாய்போலும். கஙு

* அன்னநடைமடவாய்ச்சிவயிறடித்தஞ்சவருவனைபோல்
மன்னுகருங்களிற்றருயிர்வவ்வியமைந்தனைமாகடல்சூழ்
கன்னிநன்மாமதிள்மங்கையர்காவலன்காமருசீர்க்கலிகன்றி
இன்னிசைமாலைகளீரேழும்வல்லவர்க்கேதுமிடரிலையே. (கச)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

மானம்காலைதெள்ளிமைதந்தைமன்னுயிரம்தோய்த்திடு அஞ்சுவனங்ஙன
ச்சம்தம்பரமன்னகாதில்.

ஆ திருமொழி - கூஎ - க்கு - பாசுரம் - கூஎச.

---

## அ - வது. காதிற்கடிப்பு.

### ஆய்ச்சியின் ஊடல்திறம்.

கலிவிருத்தம்.

உசேனிராகம் - ரூபகதாளம்.

* காதிற்கடிப்பிட்டுக்கலிங்கமுடுத்துத்
தாதுநற்றண்ணந்துழாய்கொடணிந்து
போதுமறுத்துப்புறமேவந்துநின்றீர்
ஏதுக்கிதுவென்னிதுவென்னிதுவென்னோ. (க)

துவராடையுடுத்தொருசெண்டுசிலுப்பிக்
கவராகமுடித்துக்கலிக்கச்சுக்கட்டிச்
சுவரார்கதவின்புறமேவந்துநின்றீர்
இவராரிதுவென்னிதுவென்னிதுவென்னோ, (உ)

கருளக்கொடியொன்றுடையீர்தனிப்பாகீர்
உருளச்சகடமதுறக்கிநிமிர்த்தீர்
மருளைக்கொடுபாடிவந்தில்லம்புகுந்தீர்
இருளொத்ததுவென்னிதுவென்னிதுவென்னோ. (ங)

நாமம்பலவுமுடைநாரணநம்பீ
தாமத்துளபமிகநாறிடுகின்றீர்
காமனெனப்படிவந்தில்லம்புகுந்தீர்
ஏமத்திதுவென்னிதுவென்னிதுவென்னோ. (ச)

சுற்றுங்குழல்தாழச்சுருகையணிந்து
மற்றும்பலமாமணிபொன்கொடணிந்து
முற்றம்புகுந்துமுறுவல்செய்துநின்றீர்
எற்றுக்கிதுவென்னிதுவென்னிதுவென்னோ. (௫)

ஆனயருமாநிரையுமங்கொழியக்
கூனயதோர்கொற்றவில்லொன்றுகையேந்திப்
போனரிருந்தாரையும்பார்த்துப்புகுந்தீர்
ஏனோர்கள்முன்னென்னிதுவென்னிதுவென்னோ. (௬)

மல்லேபொருதிரடோள்மணவாளீர்
அல்லேயறிந்தோம்நும்மனத்தின்கருத்தைச்
சொல்லாதொழியீர்சொன்னபோதினல்வாரீர்
எல்லேயிதுவென்னிதுவென்னிதுவென்னோ. (௭)

புக்காடரவம்பிடித்தாட்டும்புனிதீர்
இக்காலங்கள்யாமுமக்கேதொன்றுமல்லோம்
தக்கார்பலர்தேவிமார்சாலவுடையீர்
எக்கேயிதுவென்னிதுவென்னிதுவென்னோ. (௮)

ஆடியசைந்தாய்மடவாரொடுநீபோய்க்
கூடிக்குரவைபிணைகோமளப்பிள்ளாய்
தேடித்திருமாமகள்மண்மகணிற்ப
ஏடியிதுவென்னிதுவென்னிதுவென்னோ. (௯)

* அல்லிக்கமலக்கண்ணனையங்கோராய்ச்சி
எல்லிப்பொழுதூடியவூடற்றிறத்தைக்
கல்லின்மலிதோட்கலியன்சொன்னமாலை
சொல்லித்துதிப்பாரவர்துக்கமிலரே. (௧௦)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.
காதில்துவர்கருநாமம்சுற்றுனயர்மல்லேபுக்காடிஅல்லிபுள்ளு.
ஆ_திருமொழி- ௧௮ - க்கு - பாசுரம் - ௧௮௭.

---

## ௯ - வது. புள்ளுருவாகி.

நற்றாய்கண்ணனைவேண்டல்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

செஞ்சுருட்டிராகம்-திரிபுடைதாளம்.

* புள்ளுருவாகிநள்ளிருள்வந்தபூதனைமாள, இலங்கை
ஒள்ளெரிமண்டியுண்ணப்பணித்தவூக்கமதனைநினைந்தோ
கள்ளவிழ்கோதைகாதலுமெங்கள்காரிகைமாதர்கருத்தும்
பிள்ளைதன்கையிற்கிண்ணமேயொக்கப்பேசுவதெந்தைபிரானே. (௧)

மன்றின்மலிந்தகூத்துவந்தாடிமால்விடையேழுமடர்த், தாயர்
அன்றுநடுங்கவாநிரைகாத்தவாண்மைகொலோவறியேனுன்
நின்றபிரானேநீள்கடல்வண்ணநீயிவள்தன்னைநின்கோயில்
முன்றிலெழுந்தமுருங்கையிற்றேனுமுன்கைவளைகவர்ந்தாயே. (௨)

ஆர்மலியாழிசங்கொடுபற்றியாற்றலையாற்றன்மிகுத்துக்
கார்முகில்வண்ணாகஞ்சனைமுன்னங்கடந்தநின்கடுந்திறல்தானே
நேரிழைமாதைநித்திலத்தொத்தைநெடுங்கடலமுதனையாளை
ஆரொழில்வண்ணாவங்கையில்வட்டாமிவளெனக்கருதுகின்றாயே.(௩)

மல்கியதோளுமானுரியதளுமுடையவர்தமக்குமோர்பாகம்
நல்கியநலமோநரகனைத்தொலைத்தகரதலத்தமைதியின்கருத்தோ
அல்லியங்கோதையணிநிறங்கொண்டுவந்துமுன்னேநின்றுபோகாய்
சொல்லியென்னம்பீயிவளைநீயுங்கள்தொண்டர்கைத்தண்டென்றவாறே.

செருவழியாதமன்னர்கள்மாளத்தேர்வலங்கொண்டவர்செல்லும்
அருவழிவானமதர்படக்கண்டவாண்மைகொலோவறியேனுன்
திருமொழியெங்கள்தேமலர்க்கோதைசீர்மையைநினைந்திலையந்தோ
பெருவழிநாவற்கனியினுமெளியளிவளெனப்பேசுகின்றாயே. (௫)

அரக்கியராகம்புல்லெனவில்லாலணிமதிலிலங்கையர்கோனைச்
செருக்கழித்தமரர்பணியமுன்னின்றசேவகமோசெய்ததின்று
முருக்கிதழ்வாய்ச்சிமுன்கைவெண்சங்கங்கொண்டுமுன்னேநின்றுபோகாய்
எருக்கிலைக்காகவெறிமழுவோச்சலென்செய்வதெந்தைபிரானே.(௬)

ஆழியந்திண்டேரரசர்வந்திறைஞ்சவலைகடலுலகமுன்னுண்டப்
பாழியந்தோளோராயிரம்வீழப்படைமழுப்பற்றியவலியோ
மாழைமென்னோக்கிமணிநிறங்கொண்டுவந்துமுன்னேநின்றுபோகாய்
கோழிவெண்முட்டைக்கென்செய்வதெந்தாய்குறுந்தடிநெடுங்கடல்வண்ணா.

பொருந்தலைநாகம்புள்ளுவந்தேறவள்ளுகிராற்பிளந், தன்று
பெருந்தகைக்கிரங்கிவாலியைமுனிந்தபெருமைகொலோசெய்ததின்று
பெருந்தடங்கண்ணிசுரும்புறுகோதைபெருமையைநினைந்திலைபேசில்
கருங்கடல்வண்ணாகவுட்கொண்டநீராமிவளெனக்கருதுகின்றாயே.அ

நீரழல்வானாய்நெடுநிலங்காலாய்நின்றநின்னீர்மையைநினைந்தோ
சீர்கெழுகோதையென்னலதிலளென்றன்னதோர்தோற்றன்மைதானே
பார்கெழுபவ்வத்தாரமுதனையபாவையைப்பாவஞ்செய்தேனுக்
காரழலோம்புமந்தணந்தோட்டமாகநின்மனத்துவைத்தாயே. (௯)

* வேட்டத்தைக்கருதாதடியிணைவணங்கிமெய்ம்மைநின்றெம்பெருமானை
வாட்டிறற்றானைமங்கையர்தலைவன்மானவேற்கலியன் வாயொலிகள்
தோட்டலர்பைந்தார்ச்சுடர்முடியானைப்பழமொழியாற்பணிந்துரைத்த
பாட்டிவைபாடப்பத்திமைபெருகிச்சித்தமுந்திருவொடுமிகுமே. ௧0

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

புள்மன்றிலார்மல்கியசெருவரக்கியாழிபொருநீர் வேட்டத்திருத்தாய்.

ஆ திருமொழி - ௬௬ - க்கு - பாசுரம் - ௬௬௪.

## க0 - வது. திருத்தாய்.

பறவைகளைநோக்கி மாயனை யழையெனல்.

வெண்டுறை.

கமாசுராகம் - ஆதிதாளம்.

* திருத்தாய்செம்போத்தே
திருமாமகட்கினியான்
மருத்தார்தொல்புகழ்மாதவனைவரத்
திருத்தாய்செம்போத்தே. (க)

கரையாய்காக்கைப்பிள்ளாய்
கருமாமுகிற்போனிறத்தன்
உரையார்தொல்புகழுத்தமனைவரக்
கரையாய்காக்கைப்பிள்ளாய். (உ)

கூவாய்பூங்குயிலே
குளிர்மாரிதடுத்துகந்த
மாவாய்கீண்டமணிவண்ணனைவரக்
கூவாய்பூங்குயிலே. (ங)

கொட்டாய்பல்லிக்குட்டி
குடமாடியுலகளந்த
மட்டார்பூங்குழன்மாதவனைவரக்
கொட்டாய்பல்லிக்குட்டி. (ச)

சொல்லாய்பைங்கிளியே
சுடராழிவலனுயர்த்த
மல்லார்தோள்வடவேங்கடவனைவரச்
சொல்லாய்பைங்கிளியே. (ரு)

கோழிகூவென்னுமால்
தோழிநானென்செய்கேன்
ஆழிவண்ணர்வரும்பொழுதாயிற்றுக்
கோழிகூவென்னுமால். (சு)

காமற்கென்கடவேன்
கருமாமுகில்வண்ணற்கல்லால் [க்
பூமேலைங்கணைகோத்துப்புகுந்தெய்ய
காமற்கென்கடவேன். (எ)

இங்கேபோதுங்கொலோ
இனவேனெடுங்கண்களிப்பக்[மால்
கொங்கார்சோலைக்குடந்தைக்கிடந்த
இங்கேபோதுங்கொலோ. (அ)

இன்னாரென்றறியேன்
அன்னேயாழியொடும்
பொன்னார்சார்ங்கமுடையவடிகளை
இன்னாரென்றறியேன். (கூ)

* தொண்டீர்பாடுமினோ
சுரும்பார்பொழின்மங்கையர்கோன்
ஒண்டார்வேற்கலியனொலிமாலைகள்
தொண்டீர்பாடுமினோ. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

திருக்கரைகூவாய்கொட்டாய்சொல்லாய்கோழிகாமர்இங்கேஇன்னார்தொண்டீர்குன்றம்.

ஆ பத்து - க0 - ல் - திருமொழி - க00 - க்கு - பாசுரம் - க00ச.

பத்தாம்பத்து முற்றியது.

# பதினோராம்பத்து.

## க - வது. குன்றமொன்று.

### தலைவி யிரங்கல்.

கலிவிருத்தம்.

கானடராகம் - ஆதிதாளம்.

* குன்றமொன்றெடுத்தேந்தி, மாமழை
அன்றுகாத்தவம்மா, னரக்கரை
வென்றவில்லியார்வீரமேகொலோ
தென்றல்வந்துதீவீசுமென்செய்கேன். (க)

காரும்வார்பனிக்கடலுமன்னவன்
தாருமார்வமுங்கண்டதண்டமே
சோருமாமுகிற்றுளியினூடுவந்
தீரவாடைதானீருமென்னையே. (உ)

சங்குமாமையுந்தளருமேனிமேல்
திங்கள்வெங்கதிர்சீறுமென்செய்கேன்
பொங்குவெண்டிரைப்புணரிவண்ணனார்
கொங்கலர்ந்ததார்கூவுமென்னையே. (ஙு)

அங்கொராய்க்குலத்துள்வளர்ந்துசென்
றங்கொர்தாயுருவாகிவந்தவன்
கொங்கைநஞ்சுண்டகோயின்மைகொலோ
திங்கள்வெங்கதிர்சீறுகின்றதே. (ச)

அங்கொராளரியா, யவுணனைப்
பங்கமாவிருகூறுசெய்தவன்
மங்குன்மாமதிவாங்கவேகொலோ
பொங்குமாகடல்புலம்புகின்றதே. (ரு)

சென்றுவார்சிலைவளைத், திலங்கையை
வென்றவில்லியார்வீரமேகொலோ
முன்றிற்பெண்ணைமேல்முளரிக்கூட்டகத்
தன்றிலின்குரலடருமென்னையே. (சூ)

பூவைவண்ணனார்புள்ளின்மேல்வர
மேவிநின்றுநான்கண்டதண்டமோ
வீவிலைங்கணைவில்லியம்புகோத்
தாவியேயிலக்காகவெய்வதே. (எ)

மாலினந்துழாய்வருமெனெஞ்சகம்
மாலினந்துழாய்வந்தெனுட்புகக்
கோலவாடையுங்கொண்டுவந்ததோர்
ஆலிவந்ததாலரிதுகாவலே. (அ)

கெண்டையொண்கணுந்துயிலு, மென்னிறம்
பண்டுபண்டுபோலொக்கு, மிக்கசீர்த்
தொண்டரிட்டபூந்துளவின்வாசமே
வண்டுகொண்டுவந்தூதுமாகிலே. (கூ)

* அன்றுபாரதத்தைவர்தூதனாய்ச்
சென்றமாயனைச்செங்கண்மாலினை
மன்றிலார்புகழ்மங்கைவாட்கலி
கன்றி, சொல்வலார்க்கல்லலில்லையே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

நன்றங்கார்சங்கங்கோராளரிசென்றுபூவைமாலினம்கெண்டைஅன்றுகுன்றம்.

ஆ திருமொழி - க0க -க்கு - பாசுரம் - க0கச.

---

## உ - வது. குன்றமெடுத்து.

தலைவிவருந்தல்.

கலித்துறை.

கௌளிபந்துராகம் - ஆதிதாளம்.

* குன்றமெடுத்துமழைதடுத்திளையாரொடும்
அன்றிற்குரவைபிணைந்தமாலென்னைமால்செய்தான்
முன்றிற்றநின்றபெண்ணைமேற்கிடந்தீர்கின்ற
அன்றிலின்கூட்டைப்பிரிக்ககிற்பவராரகொலோ. (க)

பூங்குருந்தொசித்தானைகாய்ந்தரிமாச்செகுத்து
ஆங்குவேழத்தின்கொம்புகொண்டு, வன்பேய்முலை
வாங்கியுண்டவவ்வாயனிற்கவிவ்வாயன்வாய்
ஏங்குவேய்ங்குழலென்னோடாடுமிளமையே. (உ)

மல்லொடுகஞ்சனுந் துஞ்சவென்றமணிவண்ணன்
அல்லிமலர்த்தண்டுழாய்நினைந்திருந்தேனையே
எல்லியின்மாருதம்வந்திடுமதுவன்றியும்
கொல்லைவல்லேற்றின்மணியுங்கோயின்மைசெய்யுமே. (ந)

பொருந்துமாமரமேழுமெய்தபுனிதனார்
திருந்துசேவடியென்மனத்துநினைதொறும்
கருந்தண்மாகடற்கங்குலார்க்குமதுவன்றியும்
வருந்தவாடைவருமிதற்கினியென்செய்கேன். (ச)

அன்னமுனிவதுமன்றிலின்குரலீர்வதும்
மன்னுமறிகடலார்ப்பதும்வளைசோர்வதும்
பொன்னங்கலையல்குலன்னமென்னடைப்பூங்குழல்
பின்னைமணாளர்திறத்துமாயினபின்னையே. (ரு)

ஆழியுஞ்சங்குமுடையநங்களடிகள்தாம்
பாழிமையானகனவில்நம்மைப்பகர்விதித்தார்
தோழியுநானுமொழியவையந்துயின்றது
கோழியுங்கூகின்றதில்லைக்கூரிருளாயிற்றே. (சா)

காமன்றனக்குமுறையல்லேன்கடல்வண்ணனார்
மாமணவாளரெனக்குத்தானுமகன்சொல்லில்
யாமங்கடோறெறிவீசுமென்னிளங்கொங்கைகள்
மாமணிவண்ணர்திறத்தவாய்வளர்கின்றவே. (எ)

மஞ்சுறுமாலிருஞ்சோலைநின்றமணாளனார்
நெஞ்சுநிறைகொண்டுபோயினார்நினைக்கின்றிலர்
வெஞ்சுடர்போய்வெடியாமலெவ்விடம்புக்கதோர்
நஞ்சுடலந்துயின்றால்நமக்கினிநல்லதே. (அ)

காமன்கணைக்கோரிலக்கமாய்நலத்தின்மிகு
பூமருகோலநம்பெண்மைசிந்தித்திராதுபோய்
தூமலர்நீர்கொடுதோழிநான்றொழுதேத்தினால்
கார்முகில்வண்ணரைக்கண்களாற்காணலாங்கொலோ. (கூ)

* வென்றிவிடையுடனேழடர்த்தவடிகளை
மன்றின்மலிபுகழ்மங்கைமன்கலிகன்றிசொல்
ஒன்றுநின்றவொன்பதுமுரைப்பர்தங்கண்மேல்
என்றுமில்லாவினையொன்றுஞ்சொல்லுலகிலே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

குன்றம் பூமல் பொருந்தன்னை ஆழிகாமன் மஞ்சுறுகாமன்கணை வென்றிமன்.

ஆ திருமொழி-ஈஉ-க்கு-பாசுரம்-க0உச.

## ௩ - வது. மன்னிலங்கு.

இதுவுமது.

கலிவிருத்தம்.

ஸ்ரீராகம் - ரூபகதாளம்.

* மன்னிலங்குபாரதத்துத்தேரூர்ந்து, மாவலியைப்
பொன்னிலங்குதிண்விலங்கில்வைத்துப், பொருகடல்சூழ்
தென்னிலங்கையீடழித்ததேவற்கிதுகாணீர்
என்னிலங்குசங்கோடெழில்தோற்றிருந்தேனே. (௧)

இருந்தானென்னுள்ளத்திறைவன்கறைசேர்
பருந்தாட்களிற்றுக்கருள்செய்த, செங்கட்
பெருந்தோள்நெடுமாலைப்பேர்பாடியாட
வருந்தாதென்கொங்கையொளிமன்னுமன்னே. (௨)

அன்னேயிவரையறிவன்மறைநான்கு
முன்னேயுரைத்தமுனிவரிவர்வந்து
பொன்னேய்வளைகவர்ந்துபோகார்மனம்புகுந்து
என்னேயிவரெண்ணுமெண்ணமறியோமே. (௩)

அறியோமேயென்றுரைக்கலாமே, யெமக்கு
வெறியார்பொழிற்சூழ்வியன்குடந்தைமேவிச்
சிறியானோர்பிள்ளையாய்மெள்ளநடந்திட்
டுறியார்நறுவெண்ணெயுண்டுகந்தார்தம்மையே. (௪)

தம்மையேநாளும்வணங்கித்தொழுவார்க்குத்
தம்மையேயொக்கவருள்செய்வராதலால்
தம்மையேநாளும்வணங்கித்தொழுதிறைஞ்சித்
தம்மையேபற்றுமனத்தென்றும்வைத்தோமே. (௫)

வைத்தாரடியார்மனத்தினில்வைத், தின்பம்
உய்த்தாரொளிவிசும்பிலோரடிவைத், தோரடிக்கும்
எய்த்தாதுமண்ணென்றிமையோர்தொழுதேத்திக்
கைத்தாமரைகுவிக்குங்கண்ணனென்கண்ணனையே. (௬)

கண்ணன்மனத்துள்ளேநிற்கவுங், கைவளைகள்
என்னோகழன்றவிவையென்னமாயங்கள்
பெண்ணானோம்பெண்மையோம்நிற்க, வவன்மேய
அண்ணல்மலையுமரங்கமும்பாடோமே. (௭)

பாடோமேயெந்தைபெருமானைப், பாடிநின்று
ஆடோமேயாயிரம்பேரானைப், பேர்நினைந்து
சூடோமேசூடுந்துழாயலங்கல், சூடிநாம்
கூடோமேகூடக்குறிப்பாகில்நன்னெஞ்சே. (அ)

நன்னெஞ்சேநம்பெருமானுளுமினி,தமரும்
அன்னஞ்சேர்கானலணியாலிகைதொழுது
முன்னஞ்சேர்வல்வினைகள்போகமுகில்வண்ணன்
பொன்னஞ்சேர்சேவடிமேற்போதணியப்பெற்றேமே. (௯)

* பெற்றாராராயிரம்பேரானைப், பேர்பாடப்
பெற்றான்கலியனொலிசெய்தமிழ்மாலை
கற்றோரமுற்றுலகாள்வரிவைகேட்க
உற்றார்க், குறுதுயரில்லையுலகத்தே. (க0)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

மன்னிருந்தானன்னே அறியோம் தம்மைவைத்தார் கண்ணன்பாடோ நன்னெஞ்சேபெற்றார்நிலை.

ஆ திருமொழி - க0௩ - க்கு-பாசுரம் - க0௩ச.

---

ச - வது. நிலையிடம்.

தசாவதாரங்களின்சிறப்பு.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அடாணுராகம் - திரிபுடைதாளம்.

* நிலையிடமெங்குமின்றிநெடுவெள்ளமும்பர்வளநாடுமூட,விமையோர்
தலையிடமற்றெமக்கோர்சரணில்லையென்னவரணாவனென்னுமருளால்
அலைகடனீர்குழம்பவகடாடவோடியகல்வானுருஞ்சமுதுகில்
மலைகளைமீதுகொண்டுவருமீனைமாலைமறவாதிறைஞ்சென்மனனே. க

செருமிகவாளெயிற்றரவொன்றுசுற்றித்திசைமண்ணும்விண்ணுமுடனே
வெருவரவெள்ளைவெள்ளமுழுதுங்குழம்பவிமையோர்கணின்றுகடையப்
பருவரையொன்றுநின்றுமுதுகிற்பரந்துசுழலக்கிடந்துதுயிலும்
அருவரையன்னதன்மையடலாமையானதிருமால்நமக்கோரரணே. உ

நிதறுதிங்கள்பொங்குசுடரும்பரும்பருலகேழினோடுமுடனே
மாதிரமண்சுமந்தவடகுன்றுநின்றமலையாறுமேழுகடலும்
பாதமர்சூழ்குளம்பினகமண்டலத்தினொருபாலொடுங்கவளர்சேர்
ஆதிமுனேனமாகியரணாயமூர்த்தியதுநம்மையாளுமரசே. (௩)

தளையவிழ்கோதைமாலையிருபால்தயங்கவெரிகான்றிரண்டுதறுகண்
அளவெழவெம்மைமிக்கவரியாகியன்றுபரியோன்சினங்களவிழ
வளையுகிராளிமொய்ம்பில்மருவோனதாகமதியாதுசென்றொருகிரால்
பிளவெழவிட்டகுட்டமதுவையமூடுபெருநீரின்மும்மைபெரிதே. ௪

வெந்திறல்வாணன்வேள்வியிடமெய்தியங்கோர்குறளாகிமெய்ம்மையுணரச்
செந்தொழில்வேதநாவின்முனியாகிவையமடிமூன்றிரந்துபெறினும்
அந்தரமீதுபோகிமதிநின்றிறைஞ்சுமலரோன்வணங்கவளர்சேர்
அந்தரமேழினூடுசெலவுய்த்தபாதமதுநம்மையாளுமரசே. (௫)

இருநிலமன்னர்தம்மையிருநாலுமெட்டுமொருநாலுமொன்றுமுடனே
செருநுதலூடுபோகியவராவிமங்கமழுவாளில்வென்றதிறலோன்
பெருநிலமங்கைமன்னர்மலர்மங்கைநாதர்புலமங்கைகேள்வர்புகழ்சேர்
பெருநிலமுண்டுமிழ்ந்தபெருவாயராகியவர்நம்மையாள்வர்பெரிதே.

இலைமலிபள்ளியெய்திதுமாயமென்னவினமாயமான்பினெழில்சேர்
அலைமலிவேற்கணாளையகல்விப்பதற்கொருருவாயமானையமையாக்
கொலைமலிவெய்துவித்தகொடியோனிலங்கைபொடியாகவென்றியவிருட்
சிலைமலிசெஞ்சரங்கள்செலவுய்த்தநங்கள்திருமால்நமக்கொரரணே.

முன்னுலகங்களேழுமிருண்மண்டியுண்ணமுதலோடுவீடுமறியா
தென்னிதுவந்ததென்னவிமையோர்திசைப்பவெழில்வேதமின்றிமறையப்
பின்னும்வானவர்க்குமுனிவர்க்குநல்கியிருள்தீர்ந்திவ்வையமகிழ
அன்னமதாயிருந்தங்கறநூலுரைத்தவதுநம்மையாளுமரசே. (௮)

துணைநிலைமற்றெமக்கொருளதென்றிராதுதொழுமின்கள்தொண்டர்துலைய
உணமுலைமுன்கொடுத்தவுரவோளதாவியுகவுண்டுவெண்ணெய்மருவிப்
பணைமுலையாயர்மாதருரலோடுகட்டவதனோடுமோடியடல்சேர்
இணைமருதிற்றுவீழநடைகற்றதெற்றல்வினைபற்றறுக்கும்விதியே. ௯

*கொலைகெழுசெம்முகத்தகளிறொன்றுகொன்றுகொடியோனிலங்கைபொடியா
சிலைகெழுசெஞ்சரங்கள்செலவுய்த்தநங்கள்திருமாலைவேலைபுடைசூழ்[ச்
கலிகெழுமாடவீதிவயன்மங்கைமன்னுகலிகன்றிசொன்னபனுவல்
ஒலிகெழுபாடல்பாடியுழல்கின்றதொண்டரவராள்வரும்பருலகே. ௧௰

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

சிலைசெருத்தித்தறுதளைவெந்திறல்இருநிலம்இலைமுன்துணைகொலைமான்.

ஆ. திருமொழி - ௧௦௪ - க்கு - பாசுரம் - ௧௦௪௪.

## ரு - வது. மானமரும்.

எம்பெருமான் திருச்சாழல் அவதாரச்சிறப்புகளை
வினவிடைகளாகக்கூறல்.

கொச்சகக்கலிப்பா.

கண்டாராகம் - ஆதிதாளம்.

* மானமருமென்னேக்கிவைதேவியின்றுணையாக்
கானமருங்கல்லதர்போய்க்காடுறைந்தான்காணேடி
கானமருங்கல்லதர்போய்க்காடுறைந்தபொன்னடிகள்
வானவர்தஞ்சென்னிமலர்கண்டாய்சாழலே. (க)

தந்தைதளைகழலத்தோன்றிப்போ, யாய்ப்பாடி
நந்தன்குலமதலையாய்வளர்ந்தான்காணேடி
நந்தன்குலமதலையாய்வளர்ந்தா, னன்முகற்குத்
தந்தைகாணெந்தைபெருமான்காண்சாழலே. (உ)

ஆழ்கடல்சூழ்வையகத்தாரேசப்போ, யாய்ப்பாடித்
தாழ்குழலார்வைத்ததயிருண்டான்காணேடி
தாழ்குழலார்வைத்ததயிருண்டபொன்வயி, றிவ்
வேழுலகுமுண்டுமிடமுடைத்தாற்சாழலே. (ங)

அறியாதார்க்கானுயனுகிப்போ, யாய்ப்பாடி
உறியார்நறுவெண்ணெயுண்டுகந்தான்காணேடி
உறியார்நறுவெண்ணெயுண்டுகந்தபொன்வயிற்றுக்
கெறிநீருலகனைத்துமெய்தாதாற்சாழலே. (ச)

வண்ணக்கருங்குழலாய்ச்சியால்மொத்துண்டு
கண்ணிக்குறுங்கயிற்றாற்கட்டுண்டான்காணேடி
கண்ணிக்குறுங்கயிற்றாற்கட்டுண்டானுகிலும்
எண்ணற்கரியனிமையோர்க்குஞ்சாழலே. (ரு)

கன்றப்பறைகறங்கக்கண்டவர்தங்கண்களிப்ப
மன்றின்மரக்காற்கூத்தாடினன்காணேடி.
மன்றின்மரக்காற்கூத்தாடினனுகிலும்
என்றுமரியனிமையோர்க்குஞ்சாழலே. (சா)

கோதைவேலைவர்க்காய்மண்ணகலங்கூறிடுவான்
தூதனுய்மன்னவனுற்சொல்லுண்டான்காணேடி
தூதனுய்மன்னவனுற்சொல்லுண்டானுகிலும்
ஓதநீர்வையகமுண்டுமிழ்ந்தான்சாழலே. (எ)

பார்மன்னர்மங்கப்படைதொட்டுவெஞ்சமத்துத்
தேர்மன்னர்க்காயன்றுதேரூர்ந்தான்காணேடி
தேர்மன்னர்க்காயன்றுதேரூர்ந்தானாகிலும்
தார்மன்னர்தங்கள்தலைமேலான்சாழலே. (அ)

கண்டாரிரங்கக்கழியக்குறளுருவாய்
வண்டாரான்வேள்வியில்மண்ணிரந்தான்காணேடி
வண்டாரான்வேள்வியில்மண்ணிரந்தானாகிலும்
விண்டேழுலகுக்குமிக்கான்காண்சாழலே. (கூ)

* கள்ளத்தால்மாவலியைமூவடிமண்கொண்டளந்தான்
வெள்ளத்தான்வேங்கடத்தானென்பரால்காணேடி
வெள்ளத்தான்வேங்கடத்தானேலும், கலிகன்றி
உள்ளத்தினுள்ளேயுளன்கண்டாய்சாழலே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

மான்தந்தைஆழ்கடலறியாதார்வண்ணகன்றக்கோதைபார்கண்டார்கள்ளம்மை.

ஆ திருமொழி - க0ரு - க்கு - பாசுரம் - க0ருச.

---

## கூ - வது. மைந்நின்ற.

உலகினரைநோக்கி மாயனை வணங்கிரொனல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நீலாம்புரிராகம்-அடதாளம்.

* மைந்நின்றகருங்கடல்வாயுலகின்றிவானவரும்யாவுமெல்லாம்
நெய்ந்நின்றசக்கரத்தன்திருவயிற்றினெடுங்காலங்கிடந்ததோரீர்
எந்நன்றிசெய்தாராவேதிலோர்தெய்வத்தையேத்துகின்றீர்
செய்ந்நன்றிகுன்றேன்மின்தொண்டர்காளண்டனையேயேத்தீர்களே.

நில்லாதபெருவெள்ளம்நெடுவிசும்பின்மீதோடிமிர்ந்தகாலம்
மல்லாண்டதிருக்கையாற்பகிரண்டமகப்படுத்தகாலத், தன்று
எல்லாருமறியாரோவெம்பெருமானுண்டுமிழ்ந்தவெச்சிற்றேவர்
அல்லாதார்தாமுளரோயவனருளேயுலகாள்வதறியீர்களே. (உ)

நெற்றிமேற்கண்ணானுநிறைமொழிவாய்நான்முகனுநீண்டநால்வாய்
ஒற்றைக்கைவெண்பகட்டிலொருவனையுமுள்ளிட்டவமரரோடும்
வெற்றிப்போர்க்கடலரையன்விழுங்காமற்றான்விழுங்கியுய்யக்கொண்ட
கொற்றப்போராழியான்குணம்பரவாச்சிறுதொண்டர்கொடியவாறே.

பனிப்பரவைத்திரைததும்பப்பாரெல்லாநெடுங்கடலேயானகாலம்
இனிக்களைகணிவர்க்கில்லையென்றுலகமேழினையுமூழில்வாங்கி
முனித்தலைவன்முழங்கொளிசேர்திருவயிற்றில்வைத்தும்மையுய்யக்கொண்ட
கனிக்கவளத்திருவுருவத்தொருவனையேகழல்தொழுமாகல்லீர்களே.

பாராருங்காணாமேபரவைமாநெடுங்கடலேயானகாலம்
ஆரானுமவனுடையதிருவயிற்றினெடுங்காலங்கிடந்ததுள்ளத்
தோராதவுணர்விலீருணருதியேவுலகளந்தவும்பர்கோமான்
பேராளன்பேரானபேர்களாயிரங்களுமேபேசீர்களே. (ரு)

பேயிருக்குநெடுவெள்ளம்பெருவிசும்பின்மீதோடிப்பெருகுகாலம்
தாயிருக்கும்வண்ணமேயும்மைத்தன்வயிற்றிருத்தியுய்யக்கொண்டான்
போயிருக்கமற்றிங்கோர்புதுத்தெய்வங்கொண்டாடுந்தொண்டீர், பெற்ற
தாயிருக்கமணைவெந்நீராட்டுதிரோமாட்டாததகவற்றீரே. (சு)

மண்ணாடும்விண்ணாடும்வானவருந்தானவருமற்றுமெல்லாம்
உண்ணாதபெருவெள்ளமுண்ணாமற்றான்விழுங்கியுய்யக்கொண்ட
கண்ணாளன்கண்ணமங்கைநகராளன்கழல்சூடியவனையுள்ளத்
தெண்ணாதமானிடத்தையெண்ணாதபோதெல்லாமினியவாறே. (எ)

மறங்கிளர்ந்துகருங்கடனீருரந்துரந்துபரந்தேறியண்டத்தப்பால்
புறங்கிளர்ந்தகாலத்துப்பொன்னுலகமேழினையுமூழில்வாங்கி
அறங்கிளர்ந்ததிருவயிற்றினகம்படியில்வைத்தும்மையுய்யக்கொண்ட
நிறங்கிளர்ந்தகருஞ்சோதிநெடுந்தகையைநினையாதார்நீசர்தாமே. (அ)

அண்டத்தின்முகடழுந்தவலைமூந்நீர்த்திரைததும்ப, வாவாவென்று
தொண்டர்க்குமமரர்க்குமுனிவர்க்குந்தானருளி, யுலகமேழும்
உண்டொத்ததிருவயிற்றினகம்படியில்வைத்தும்மையுய்யக்கொண்ட
கொண்டற்கைமணிவண்ணன்றண்குடந்தைநகர்பாடியாடீர்களே. கூ

*தேவரையுமசுரரையுந்திசைகளையுங்கடல்களையுமற்றுமுற்றும்
யாவரையுமொழியாமேயெம்பெருமானுண்டுமிழ்ந்ததறிந்துசொன்ன
காவளரும்பொழின்மங்கைக்கலிகன்றியொலிமாலைகற்றுவல்லார்
பூவளருந்திருமகளாலருள்பெற்றுப்பொன்னுலகிற்பொலிவர்தாமே.

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

மைந்நில்லாநெற்றிபனிபார்பேய்மண்மறமண்டத்தேவர்நீணகம்.

ஆ திருமொழி - க0சு - க்கு - பாசுரம் - க0சுச.

## ௭-வது. நீணாகம்.

கண்ணனைக்காணாக் கண்முதலியன பயனிலவெனல்.

கலிவிருத்தம்.

வராளிராகம் - ரூபகதாளம்.

* நீணாகஞ்சுற்றிநெடுவரைநட், டாழ்கடலைப்
பேணான்கடைந்தமுதங்கொண்டுகந்தபெம்மானைப்
பூணாரமார்பனைப்புள்ளூரும்பொன்மலையைக்
காணாதார்கண்ணென்றுங்கண்ணல்லகண்டாமே. (௧)

நீள்வான்குறளுருவாய்நின்றிரந்து, மாவலிமண்
தாளாலளவிட்டதக்கணைக்குமிக்கானைத்
தோளாதமாமணியைத்தொண்டர்க்கினியானைக்
கேளாச்செவிகள்செவியல்லகேட்டாமே. (௨)

தூயானைத்தூயமறையானைத், தென்னாலி
மேயானைமேவாருயிருண்டமுதுண்ட
வாயானை, மாலைவணங்கியவன்பெருமை
பேசாதார்பேச்சென்றும்பேச்சல்லகேட்டாமே. (௩)

கூடாவிரணியனைக்கூருகிரால்மார்பிடந்த
தோடாவடலரியையும்பரார்கோமானைத்
தோடார்நறுந்துழாய்மார்பனையார்வத்தால்
பாடாதார்பாட்டென்றும்பாட்டல்லகேட்டாமே. (௪)

மையார்கடலுமணிவரையுமாமுகிலும்
கொய்யார்குவளையுங்காயாவும்போன்றிருண்ட
மெய்யானை, மெய்யமலையானைச்சங்கேந்தும்
கையானைக், கைதொழாக்கையல்லகண்டாமே. (௫)

கள்ளார்துழாயுங்கணவலருங்கூவிளையும்
முள்ளார்முளரியுமாம்பலுமுன்கண்டக்கால்
புள்ளாயோரேனமுமாய்ப்புக்கிடந்தான்பொன்னடிக்கென்
றுள்ளாதாருள்ளத்தையுள்ளமாய்க்கொள்ளோமே. (௬)

கனையார்கடலுங்கருவிளையுங்காயாவும்
அனையானையன்பினாலார்வத்தா, லென்றும்
சுனையார்மலரிட்டுத்தொண்டராய், நின்று
நினையாதார்நெஞ்சென்றுநெஞ்சல்லகண்டாமே. (௭)

வெறியார்கருங்கூந்தலாய்ச்சியர்வைத்த
உறியார்நறுவெண்ணெய்தானுகந்துண்ட
சிறியானைச், செங்கணெடியானைச்சிந்தித்
தறியாதா, ரென்றுமறியாதார்கண்டாமே. (அ)

தேனுடைவண்டாலுந்திருமாலிருஞ்சோலை
தானிடமாய்க்கொண்டான்றடமலர்க்கண்ணிக்காய்
ஆன்விடையேழன்றடர்த்தார்க்காளானா, ரல்லாதார்
மானிடவரல்லரென்றென்மனத்தேவைத்தேனே. (கூ)

* மெய்ந்நின்றபாவமகலத், திருமாலைக்
கைந்நின்றவாழியான்சூழுங்கழல்சூடிக்
கைந்நின்றவேற்கைக்கலியனொலிமாலை
ஐயொன்றுமைந்துமிவைபாடியாடுமினே. (க0)

ஆழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

நீணாகம்நீள்வான்தூயானகூடாமையார்கள்ளார்களை வெறிதேன்மெய்மாற்றம்

ஆ திருமொழி - க0எ - க்கு - பாசுரம் - க0எச.

## அ - வது. மாற்றமுளவாகிலும்.

நம்பியைநோக்கி உய்யும்வகையருளெனல்.

கலிவிருத்தம்.

மாஞ்சிராகம் - அடதாளம்.

* மாற்றமுளவாகிலுஞ்சொல்லுவன், மக்கள்
தோற்றக்குழிதோற்றுவிப்பாய்கொலென், றின்னம்
ஆற்றங்கரைவாழ்மரம்போலஞ்சுகின்றேன்
நாற்றச்சுவையூறொலியாகியநம்பி. (க)

சீற்றமுளவாகிலுஞ்செப்புவன், மக்கள்
தோற்றக்குழிதோற்றுவிப்பாய்கொலென்றஞ்சிக்
காற்றத்திடைப்பட்டகலவர்மனம்போல்
ஆற்றத்துளங்காநிற்பனாழிவலவா. (உ)

தூங்கார்பிறவிக்களின்னம்புகப்பெய்து
வாங்காயென்றுசிந்தித்துநானதற்கஞ்சிப்
பாம்போடொருகூரையிலேபயின்றாப்போல்
தாங்காதுள்ளந்தள்ளுமென்றாமரைக்கண்ணா. (ங)

உருவார்பிறவிக்கணின்னம்புகப்பெய்து
திரிவாயென்றுசிந்தித்தியென்றதற்கஞ்சி
இருபாடெரிகொள்ளியினுள்ளெறும்பேபோல்
உருகாநிற்குமென்னுள்ளமூழிமுதல்வா. (ச)

கொள்ளக்குறையாதவிடும்பைக்குழியில்
தள்ளிப்புகப்பெய்திகொலென்றதற்கஞ்சி
வெள்ளத்திடைப்பட்டநரியினம்போலே
உள்ளந்துளங்காநிற்பனூழிமுதல்வா. (ரு)

படைநின்றபைந்தாமரையோ, டணிநீலம்
மடைநின்றலரும்வயலாலிமணாளா
விடையனெறிந்தமரமேயொத்திராமே
அடையவருளாயெனக்குன்றனருளே. (சு)

வேம்பின்புழுவேம்பன்றியுண்ணா, தடியேன்
நான்பின்னுமுன்சேவடியன்றிநயவேன்
தேம்பலிளந்திங்கட்சிறைவிடுத், தைவாய்ப்
பாம்பினணைப்பள்ளிகொண்டாய்பரஞ்சோதி. (எ)

* அணியார்பொழில்சூழரங்கநகரப்பா
துணியேனினிநின்னருளல்லதெனக்கு
மணியேமணிமாணிக்கமேமதுசூதா
பணியாயெனக்குய்யும்வகைபரஞ்சோதி. (அ)

* நந்தாநரகத்தழுந்தாவகை, நாளும்
எந்தாய்தொண்டரானவர்க்கின்னருள்செய்வாய்
சந்தோகாதலைவனேதாமரைக்கண்ணா
அந்தோவடியேற்கருளாயுன்னருளே. (கூ)

* குன்றமெடுத்தாநிரைகாத்தவன்றன்னை
மன்றின்மலிபுகழ்மங்கைமன்கலிகன்றிசொல்
ஒன்றுநின்றவொன்பதும்வல்லவர்தம்மேல்
என்றும்வினையாயினசாரகில்லாவே. (க0)

திருமங்கையாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

மாற்றம்சீற்றம்தூங்காருருக்கொள்ளப்படைவேம்பினணிநந்தாகுன்றம்நிதி.

ஆ திருமொழி - க0அ - க்கு-பாசுரம் - க0அச.



ஸ்ரீ

    

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

திருமங்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# திருக்குறுந்தாண்டகம்.

திருமாலிருஞ்சோலைமுதலியதிருப்பதிகளில்
எழுந்தருளிய எம்பெருமான்விஷயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தோடிராகம் - ரூபகதாளம்.

* நிதியினைப்பவளத்தூணைநெறிமையால்நினையவல்லார்
கதியினைக், கஞ்சன்மாளக்கண்டுமுன்னண்டமாளும்
மதியினைமாலைவாழ்த்திவணங்கியென்மனத்துவந்த
விதியினைக், கண்டுகொண்டதொண்டனேன்விடுகிலேனே. (க)

காற்றினைப்புனலைத்தீயைக்கடிமதிளிலங்கைசெற்ற
ஏற்றினை, யிமயமேயவெழின்மணித்திரளை, யின்ப
ஆற்றினையமுதந்தன்னையவுணனாருயிரையுண்ட
கூற்றினைக்குணங்கொண்டுள்ளங்கூறுநீ * கூறுமாறே. (உ)

பாயிரும்பரவைதன்னுட்பருவரைதிரித்து, வானோர்க்
காயிருந்தமுதங்கொண்டவப்பனையெம்பிரானை
வேயிருஞ்சோலைசூழ்ந்துவிரிகதிரிரியநின்ற
மாயிருஞ்சோலைமேயமைந்தனைவணங்கினேனே. (ங)

கேட்கயானுற்றதுண்டுகேழலாயுலகங்கொண்ட
பூக்கெழுவண்ணனாரைப்போதரக்கனவிற்கண்டு
வாக்கினாற்கருமந்தன்னான்மனத்தினாற்சிரத்தைதன்னால்
வேட்கைமீதூரவாங்கிவிழுங்கினேற்கினியவாறே. (ச)

---

* "கூடுமாறே" எனவுமுள.

இரும்புநன் றுண்டநீர்போலெம்பெருமானுக்கென்றன்
அரும்பெறலன்புபுக்கிட்டடிமைபூண்டுய்ந்துபோனேன்
வரும்புயல்வண்ணனாரைமருவியென்மனத்துவைத்துக்
கரும்பினின்சாறுபோலப்பருகினேற்கினியவாறே. (௫)

மூவரின்முதல்வனாயவொருவனையுலகங்கொண்ட
கோவினைக்குடந்தைமேயகுருமணித்திரளை, யின்பப்
பாவினைப்பச்சைத்தேனைப்பைம்பொன்னையமரர்சென்னிப்
பூவினைத், புகழுந்தொண்டரென்சொல்லிப்புகழ்வர்தாமே. (௬)

இம்மையைமறுமைதன்னையெமக்குவீடாகிநின்ற
மெய்ம்மையை, விரிந்தசோலைவியன்றிருவரங்கமேய
செம்மையைக்கருமைதன்னைத்திருமலை * யொருமையானைத்
தன்மையைநினைவாரென்றன்றலைமிசைமன்னுவாரே. (௭)

வானிடைப்புயலைமாலைவரையிடைப்பிரசமீன்ற
தேனிடைக்கரும்பின்சாற்றைத்திருவினைமருவிவாழா
மானிடப்பிறவியந்தோமதிக்கிலர்கொள்கத், தந்தம்
ஊனுடைக்குரம்பைவாழ்க்கைக்குறுதியேவேண்டினாரே. (௮)

உள்ளமோவொன்றிநில்லாதோசையிலெரிநின்றுண்ணும்
கொள்ளிமேலெறும்புபோலக்குழையுமாலென்றனுள்ளம்
தெள்ளியீர்தேவர்க்கெல்லாந்தேவராயுலகங்கொண்ட
ஒள்ளியீரும்மையல்லாலெழுமையுந்துணையிலோமே. (௯)

சித்தமுஞ்செவ்வைநில்லாதென்செய்கேன்றீவினையேன்
பத்திமைக்கன்புடையேனாவதேபணியாயெந்தாய்
முத்தொளிமரதகமேமுழங்கொளிமுகில்வண்ணா, வென்
அத்தநின்னடிமையல்லால்யாதுமொன்றறிகிலோமே. (௧௰)

தொண்டெல்லாம்பரவிநின்னைத்தொழுதடிபணியுமாறு
கண்டு, தான்கவலைதீர்ப்பானாவதேபணியாயெந்தாய்
அண்டமாயெண்டிசைக்குமாதியாய்நீதியான
பண்டமாம்பரமசோதியுன்னையேபரவுவேனே. (௧௧)

ஆவியையரங்கமாலையழுக்குடம்பெச்சில்வாயால்
தூய்மையிற்றொண்டனேனான்சொல்லினேன்றொல்லைநாமம்
பாவியேன்பிழைத்தவாறென்றஞ்சினேற்கஞ்சலென்று
காவிபோல்வண்ணர்வந்தென்கண்ணுளேதோன்றினாரே. (௧௨)

இரும்புநன்றுண்டநீரும்போதருங்கொள்க, வென்றன்
அரும்பிணிபாவமெல்லாமகன்றனவென்னைவிட்டுச்
சுரும்பமர்சோலைசூழ்ந்தவரங்கமாகோயில்கொண்ட
கரும்பினைக்கண்டுகொண்டென்கண்ணிணைகளிக்குமாறே. (௧௩)

---

* "ஒருமையான" எனவுமடும்.

காவியைவென்றகண்ணூர்கலவியேகருதி, நாளும்
பாவியேனாகவெண்ணியதனுள்ளேபழுத்தொழிந்தேன்
தூவிசேரன்னமன்னுஞ்சூழ்புனற்குடந்தையானைப்
பாவியேன்பாவியாதுபாவியேனாயினேனே. (கச)

முன்பொலாவிராவணன்றன்முதுமதிளிலங்கைவேவித்
தன்பினாலனுமன்வந்தாங்கடியிணைபணியநின்றாற்
கென்பெலாமுருகியுட்கிட்டென்னுடைநெஞ்சமென்னும்
அன்பினால்ஞானநீர்கொண்டாட்டுவனடியனேனே. (கரு)

மாயமான்மாயச்செற்றுமருதிறநடந்து, வையம்
தாயமாபரவைபொங்கத்தடவரைதிரித்துவானோர்க்
கீயுமாலெம்பிரானார்க்கென்னுடைச்சொற்களென்னும்
தூயமாமாலைகொண்டுசூட்டுவன்றொண்டனேனே. (கசா)

பேசினார்பிறவிநீந்தார்பேருளான்பெருமைபேசி
ஏசினாருய்ந்துபோனாரென்பதிவ்வுலகின்வண்ணம்
பேசினேனேசமாட்டேன்பேதையேன், பிறவிநீத்தற்
காசையோபெரிதுகொள்கவலைகடல்வண்ணர்பாலே. (கஎ)

இளைப்பினையியக்கநீக்கியிருந்துமுன்னிமையைக்கூட்டி
அளப்பிலைம்புலனடக்கியன்பவர்கண்ணேவைத்துத்
துளக்கமிற்சிந்தைசெய்துதோன்றலுஞ்சுடர்விட், டாங்கே
விளக்கினைவிதியிற்காண்பார்மெய்ம்மையைக்காண்கிற்பாரே. (கஅ)

பிண்டியார்மண்டையேந்திப்பிறர்மனைதிரிதந்துண்ணும்
உண்டியான்சாபந்தீர்த்தவொருவனூருலகமேத்தும்
கண்டியூரரங்கமெய்யங்கச்சிபேர்மல்லையென்று
மண்டினாருய்யலல்லான்மற்றையார்க்குய்யலாமே. (க௯)

※ வானவர்தங்கள்கோனுமலர்மிசையயனும், நாளும்
தேமலர்தூவியேத்துஞ்சேவடிச்செங்கண்மாலை
மானவேற்கலியன்சொன்னவண்டமிழ்மாலைநாலைந்
தூனமதன்றிவல்லாரொளிவிசும்பாள்வர்தாமே. (உ0)

திருமங்கையாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

நிதிகாற்றுபாயிருங்கேட்க இரும்புமூவரிம்மைவானுள்ளம்சித்தம்தொண்டு
ஆவியிரும்புகாவிமுன்மாயப்பேசியிளைப்புபிண்டிவானவர்மின்.

திருக்குறுந்தாண்டகம் முற்றிற்று.

ஆ திருமொழி - க0௯ - க்கு - பாசுரம் - கக0௪.



ஸ்ரீ







ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

திருமங்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# திருநெடுந்தாண்டகம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கல்யாணிராகம் - அடதாளம்.

* மின்னுருவாய்முன்னுருவில்வேதநான்காய்
விளக்கொளியாய்முளைத்தெழுந்ததிங்கள்தானாய்ப்
பின்னுருவாய்முன்னுருவில்பிணிமூப்பில்லாப்
பிறப்பிலியாயிறப்பதற்கேயெண்ணா, தெண்ணும்
பொன்னுருவாய்மணியுருவில்பூதமைந்தாய்ப்
புனலுருவாயனலுருவில்திகழுஞ்சோதி
தன்னுருவாயென்னுருவில்நின்றவெந்தை
தளிர்புரையுந்திருவடியென்றலைமேலவே. (௧)

கல்யாணிராகம் - ஆதிதாளம்.

பாருருவில்நீரெரிகால்விசும்புமாகிப்
பல்வேறுசமயமுமாய்ப்பரந்துநின்ற
ஏருருவில்மூவருமேயெனநின்ற
விமையவர்தந்திருவுருவேறெண்ணும்போது
ஓருருவம்பொன்னுருவமொன்றுசெந்தீ
யொன்றுமாகடலுருவமொத்துநின்ற
மூவுருவுங்கண்டபோதொன்றாஞ்சோதி
முகிலுருவமெம்மடிகளுருவந்தானே. (௨)

தோடிராகம் - ரூபகதாளம்.

திருவடிவிற்கருநெடுமால்சேயனென்றுந்
திரேதைக்கண்வளையுருவாய்த்திகழ்ந்தானென்றும்
பெருவடிவிற்கடலமுதங்கொண்டகாலம்
பெருமானைக்கருநீலவண்ணன்றன்னை
ஒருவடிவத்தோருருவென்றுணரலாகா
வூழிதோறூழிநின்றேத்தியல்லால்
கருவடிவிற்செங்கண்ணவண்ணன்றன்னைக்
கட்டுரையேயாரொருவர்காண்கிற்பாரே. (௩)

தோடிராகம் - ஆதிதாளம்.

இந்திரற்கும்பிரமற்குமுதல்வன்றன்னை
யிருநிலங்கால்தீநீர்விண்பூதமைந்தாய்ச்
செந்திறத்ததமிழோசைவடசொல்லாகித்
திசைநான்குமாய்த்திங்கள்ஞாயிறாகி
அந்தரத்திற்றேவர்க்குமறியலாகா
வந்தணனையந்தணர்மாட்டந்திவைத்த
மந்திரத்தை, மந்திரத்தால்மறவாதென்றும்
வாழ்தியேல்வாழலாமடநெஞ்சமே. (௪)

தோடிராகம் - திரிபுடைதாளம்.

ஒண்மிதியிற்புனலுருவியொருகால்நிற்ப
வொருகாலுங்காமருசீரவுணனுள்ளத்
தெண்மதியுங்கடந்தண்டமீதுபோகி
யிருவிசும்பினூடுபோயெழுந்து, மேலைத்
தண்மதியுங்கதிரவனுந்தவிரவோடித்
தாரகையின்புறந்தடவியப்பால்மிக்கு
மண்முழுதுமகப்படுத்துநின்றவெந்தை
மலர்புரையுந்திருவடியேவணங்கினேனே. (௫)

மோஹனராகம் - ஆதிதாளம்.

அலம்புரிந்தநெடுந்தடக்கையமரர்வேந்த
னஞ்சிறைப்புட்டனிப்பாகனவுணர்க்கென்றும்
சலம்புரிந்தங்கருளில்லாத்தன்மையாளன்
றானுகந்தவூரெல்லாந்தந்தாள்பாடி

நிலம்பரந்துவருங்கலுழிப்பெண்ணையீர்த்த
நெடுவேய்கள்படுமுத்தமுந்தவுந்திப்
புலம்பரந்துபொன்விளைக்கும்பொய்கைவேலிப்
பூங்கோவலூர்தொழுதும்போதுநெஞ்சே. (சு)

மோஹனராகம் - ரூபகதாளம்.

வற்புடையவரைநெடுந்தோள்மன்னர்மாள
வடிவாயமழுவேந்திபுலகமாண்டு
வெற்புடையநெடுங்கடலுட்டனிவேலுய்த்த
வேள்முதலாவென்றானூர், விந்தைமேய
கற்புடையமடக்கன்னிகாவல்பூண்ட
கடிபொழில்சூழ்நெடுமறுகிற்கமலவேலிப்
பொற்புடையமலையரையன்பணியநின்ற
பூங்கோவலூர்தொழுதும்போதுநெஞ்சே. (எ)

தேசியராகம் - ஆதிதாளம்.

நீரகத்தாய்நெடுவரையினுச்சிமேலாய்
நிலாத்திங்கள் துண்டத்தாய்நிறைந்தகச்சி
ஊரகத்தா, யொண்டுறைநீர்வெஃகாவுள்ளா
யுள்ளுவாருள்ளத்தா, யுலகமேத்தும்
காரகத்தாய்கார்வானத்துள்ளாய்கள்வா
காமருபூங்காவிரியின்றென்பால்மன்னு
பேரகத்தாய், பேராதென்னெஞ்சினுள்ளாய்
பெருமானுன்றிருவடியேபேணினேனே. (அ)

சங்கராபரணராகம் - ஆதிதாளம்.

வங்கத்தால்மாமணிவந்துந்துமுந்நீர்
மல்லையாய்மதிள்கச்சியூராய்பேராய்
கொங்குத்தார்வளங்கொன்றையலங்கல்மார்பன்
குலவரையன்மடப்பாவையிடப்பால்கொண்டான்
பங்கத்தாய்பாற்கடலாய்பாரின்மேலாய்
பனிவரையினுச்சியாய்பவளவண்ணா
எங்குற்றாயெம்பெருமானுன்னைநாடி
யேழையேனிங்ஙனமேயுழிதருகேனே. (கூ)

சங்கராபரணராகம் - ரூபகதாளம்.

* பொன்னானாய்பொழிலேழுங்காவல்பூண்ட
    புகழானாயிகழ்வாயதொண்டனேன்னான்
என்னானாயென்னானாயென்னிலல்லா
    லென்னறிவனேழையே, னுலகமேத்தும்
தென்னானாய்வடவானாய்குடபாலானாய்
    குணபாலமதயானாயிமையோர்க்கென்றும்
முன்னானாய்பின்னானார்வணங்குஞ்சோதி
    திருமூழிக்களத்தானாய்முதலானாயே. (கO)

பந்துவராளிராகம் - அடதாளம்.

பட்டுடுக்குமயர்த்திரங்கும்பாவைபேணாள்
    பனிநெடுங்கண்ணீர்ததும்பப்பள்ளிகொள்ளாள்
எட்டனைப்போதென்குடங்காலிருக்ககில்லா
    ளெம்பெருமான்றிருவரங்கமெங்கேயென்னும்
மட்டுவிக்கிமணிவண்டுமுரலுங்கூந்தல்
    மடமானையிதுசெய்தார்தம்மை, மெய்யே
கட்டுவிச்சிசொல்லென்னச்சொன்னாள் நங்காய்
    கடல்வண்ணரிதுசெய்தார்காப்பாராரே. (கக)

பந்துவராளிராகம் - ரூபகதாளம்.

நெஞ்சுருகிக்கண்பனிப்பநிற்குஞ்சோரும்
    நெடிதுயிர்க்குமுண்டறியாளுறக்கம்பேணாள்
நஞ்சரவில்துயிலமர்ந்தநம்பீயென்னும்
    வம்பார்பூம்வயலாலிமைந்தாவென்னும்
அஞ்சிறையப்புட்கொடியேயாடும்பாடு
    மணியரங்கமாடுதுமோதோழீயென்னும்
எஞ்சிறகின்கீழடங்காப்பெண்ணைப்பெற்றே
    னிருநிலத்தோர்பழிபடைத்தேனேபாவமே. (கஉ)

பந்துவராளிராகம் - ஜம்பைதாளம்.

கல்லெடுத்துக்கல்மாரிகாத்தாயென்றுங்
    காமருபூங்கச்சியூரகத்தாயென்றும்
வில்லிறுத்துமெல்லியல்தோள்தோய்ந்தாயென்றும்
    வெஃகாவில்துயிலமர்ந்தவேந்தேயென்றும்
மல்லடர்த்துமல்லரையன்றட்டாயென்றும்
    மாகீண்டகைத்தலத்தென்மைந்தாவென்றும்
சொல்லெடுத்துத்தன்கிளியைச்சொல்லேயென்றுந்
    துணைமுலைமேல்துளிசோரச்சோர்கின்றாளே. (கங)

சாவேரிராகம் - ரூபகதாளம்.

முளைக்கதிரைக்குறுங்குடியுள் முகிலைமூவா
மூவுலகுங்கடந்தப்பால்முதலாய்நின்ற
அளப்பரியவாரமுதையரங்கமேய
வந்தணனையந்தணர்தஞ்சிந்தையானை
விளக்கொளியைமரதகத்தைத்திருத்தண்காவில்
வெஃகாவில்திருமாலைப்பாடக்கேட்டு
வளர்த்ததனாற்பயன்பெற்றேன்வருகவென்று
மடக்கிளியைக்கைகூப்பிவணங்கினாளே. (கச)

சாவேரிராகம் - திரிபுடைதாளம்.

கல்லுயர்ந்தநெடுமதில்சூழ்கச்சிமேய
களிறென்றுங்கடற்கிடந்தகனியேயென்றும்
அல்லியம்பூமலர்ப்பொய்கைப்பழனவேலி
யணியழுந்தூர்நின்றுகந்தவம்மானென்றும்
சொல்லுயர்ந்தநெடுவீணைமுலைமேல்தாங்கித்
தூமுறுவல்நகையிறையேதோன்றெனக்கு
மெல்விரல்கள்சிவப்பெய்தத்தடவியாங்கே
மென்கிளிபோல்மிகமிழற்றுமென்பேதையே. (கரு)

சாவேரிராகம் - ஜம்பைதாளம்.

* கன்றுமேய்த்தினிதுகந்தகாளாயென்றுங்
கடிபொழில்சூழ்கணபுரத்தென்கனியேயென்றும்
மன்றமரக்கூத்தாடிமகிழ்ந்தாயென்றும்
வடதிருவேங்கடமேயமைந்தாவென்றும்
வென்றசுரர்குலங்களைந்தவேந்தேயென்றும்
விரிபொழில்சூழ்திருநறையூர்நின்றாயென்றும்
துன்றுகுழல்கருநிறத்தென்றுணையேயென்றுந்
துணைமுலைமேல்துளிசோரச்சோர்கின்றாளே. (கசா)

எதுகுலகாம்போதிராகம் - ஜம்பைதாளம்.

பொங்கார்மென்னிளங்கொங்கைபொன்னேபூப்பப்
பொருகயற்கண்ணீரரும்பப்போந்துநின்று
செங்காலமடப்புறவம்பெடைக்குப்பேசுஞ்
சிறுகுரலுக்குடலுருகிச்சிந்தித், தாங்கே
தண்காலுந்தண்குடந்தைநகரும்பாடித்
தண்கோவலூர்பாடியாடக்கேட்டு
நங்காய்நங்குடிக்கிதுவோநன்மையென்ன
நறையூரும்பாடுவாள்நவில்கின்றாளே. (கஎ)

பந்துவராளிராகம் - ரூபகதாளம்.

கார்வண்ணன்திருமேனிகண்ணும்வாயுங்
கைத்தலமுமடியிணையுங்கமலவண்ணம்
பார்வண்ணமடமங்கைபத்தர்பித்தர்
பனிமலர்மேல்பாவைக்குப்பாவஞ்செய்தேன்
ஏர்வண்ணவென்பேதையென்சொற்கேளா
ளெம்பெருமான்றிருவரங்மெங்கேயென்னும்
நீர்வண்ணன்நீர்மலைக்கேபோவேனென்னு
மிதுவன்றோநிறைவழிந்தார்நிற்குமாறே. (கஅ)

பந்துவராளிராகம் - ரூபகதாளம்.

முற்றாராவனமுலையாள்பாவைமாயன்
மொய்யகலத்துள்ளிருப்பாளஃதுங்கண்டு
மற்றாள், தன்னிறைவழிந்தாளாவிக்கின்றா
ளணியரங்கமாடுதுமோதோழீயென்னும்
பெற்றேன்வாய்ச்சொல்லிறையும்பேசக்கேளாள்
பேர்பாடித்தண்குடந்தைநகரும்பாடிப்
பொற்றாமரைக்கயநீராடப்போனாள்
பொருவற்றாளென்மகளும்பொன்னுமஃதே. (கசூ)

அடாணாராகம் - ஆதிதாளம்.

* தேராளன்வாளரக்கன்செல்வம்மாளத்
தென்னிலங்கைமுன்மலங்கச்செந்தீயொல்கி
போராளனாயிரந்தோள்வாணன்மாளப்
பொருகடலையரண்கடந்துபுக்குமிக்கப்
பாராளன், பாரிடந்துபாரையுண்டு
பாருமிழ்ந்துபாரளந்துபாரையாண்ட
பேராளன், பேரோதும்பெண்ணைமண்மேல்
பெருந்தவத்தளென்றல்லால்பேசலாமே. (உ0)

அடாணாராகம் - திரிபுடைதாளம்.

* மைவண்ணநறுங்குஞ்சிகுழல்பின்றாழ
மகரஞ்சேர்குழையிருபாடிலங்கியாட
எய்வண்ணவெஞ்சிலையேதுணையாயிங்கே
யிருவராய்வந்தாரென்முன்னேநின்றார்
கைவண்ணந்தாமரைவாய்கமலம்போலுங்
கண்ணிணையுமரவிந்தமடியுமஃதே
அவ்வண்ணத்தவர்நிலைமைகண்டுந்தோழீ
யவரைநாந்தேவரென்றஞ்சினோமே. (உக)

ஆநந்தபைரவிராகம் - திரிபுடைதாளம்.

நைவளமொன்றாராயாள்நம்மைநோக்காள்
நாணினுள்போலிறையேநயங்கள்பின்னும்
செய்வளவிலென்மனமுங்கண்ணுமோடி
யெம்பெருமான்றிருவடிக்கீழணைய, விப்பால்
கைவளையும்மேகலையுங்காணேன்கண்டேன்
கனமகரக்குழையிரண்டும்நான்குதோளும்
எவ்வளவுண்டெம்பெருமான்கோயிலென்றேற்
கிதுவன்றோவெழிலாலியென்றார்தாமே. (உஉ)

காம்போஜிராகம் - திரிபுடைதாளம்.

உள்ளூருஞ்சிந்தைநோயெனக்கேதந்தென்
னொளிவளையும்மாநிறமுங்கொண்டாரிங்கே
தெள்ளூருமிளந்தெங்கின்றேறல்மாந்திச்
சேலுகளுந்திருவரங்கம்நம்மூரென்ற
கள்ளூரும்பைந்துழாய்மாலையானைக்
கனவிடத்தில்யான்காண்பன்கண்டபோது
புள்ளூருங்கள்வாநீபோகேலென்ப
னென்றாலுமித்நமக்கோர்புலவிதானே. (உங)

வராளிராகம் - ரூபகதாளம்.

இருகையிற்சங்கிவைநில்லாவெல்லேபாவ
மிலங்கொலிநீர்பெரும்பௌவமண்டியுண்ட
பெருவயிற்றகருமுகிலேயொப்பர்வண்ணம்
பெருந்தவத்தருந்தவத்துமுனிவர்சூழ
ஒருகையிற்சங்கொருகைமற்றாழியேந்தி
யுலகுண்டபெருவாயரிங்கேவந், தென்
பொருகயற்கண்ணீரரும்பப்புலவிதந்து
புனலரங்கமூரென்றுபோயினாரே. (உச)

பந்துவராளிராகம் - ரூபகதாளம்.

மின்னிலங்குதிருவுருவும்பெரியதோளுங்
கரிமுனிந்தகைத்தலமுங்கண்ணும்வாயும்
தன்னலர்ந்தநறுந்துழாய்மலரின்கீழே
தாழ்ந்திலங்குமகரஞ்சேர்குழையுங்காட்டி
யென்னலனுமென்னிறைவுமென்சிந்தையு
மென்வளையுங்கொண்டென்னையாளுங்கொண்டு
பொன்னலர்ந்தநறுஞ்செருந்திப்பொழிலினூடே
புனலரங்கமூரென்றுபோயினாரே. (உரு)

### கேதாரராகம் - ரூபகதாளம்.

தேமருவுபொழிலிடத்துமலர்ந்தபோதை
  தேனதனைவாய்மடுத்துன்பெடையும்நீயும்
பூமருவியினிதமர்ந்துபொறியிலார்ந்த
  வறுகாலசிறுவண்டேதொழுதேனுன்னை
ஆமருவிநிரைமேய்த்தவமரர்கோமா
  னணியழுந்தூர்நின்றானுக்கின்றேசென்று
நீமருவியஞ்சாதேநின்றோர்மாது
  நின்னயந்தாளென்றிறையேயியம்பிக்காணே. (உரு)

### சாரங்கராகம் - ரூபகதாளம்.

* செங்காலமடநாராயின்றேசென்று
  திருக்கண்ணபுரம்புக்கென்செங்கண்மாலுக்
கெங்காதலென்றுணைவற்குரைத்தியாகி
  லிதுவொப்பதெமக்கின்பமில்லை, நாளும்
பைங்கானமீதெல்லாமுனதேயாகப்
  பழனமீன்கவர்ந்துண்ணத்தருவன், றந்தால்
இங்கேவந்தினிதிருந்துன்பெடையுநீயு
  மிருநிலத்திலினிதின்பமெய்தலாமே. (உஎ)

### மோஹனராகம் - அடதாளம்.

* தென்னிலங்கையரண்சிதறியவுணன்மாளச்
  சென்றுலகமூன்றினையுந்திரிந்தோர்தேரால்
மன்னிலங்குபாரதத்தைமாளவூர்ந்த
  வரையுருவில்மாகளிற்றைத்தோழீ, யென்றன்
பொன்னிலங்குமுலைக்குவட்டிற்பூட்டிக்கொண்டு
  போகாமல்வல்லேனுய்ப்புலவியெய்தி
என்னிலங்கமெல்லாம்வந்தின்பமெய்த
  வெப்பொழுதும்நினைந்துருகியிருப்பன்நானே. (உஅ)

### மோஹனராகம் - ஜம்பைதாளம்.

* அன்றாயர்குலமகளுக்கரையன்றன்னை
  யலைகடலைக்கடைந்தடைத்தவம்மான்றன்னைக்
குன்றாதவலியரக்கர்கோனைமாளக்
  கொடுஞ்சிலைவாய்ச்சரந்துரந்துகுலங்களைந்து
வென்றானைக், குன்றெடுத்ததோளினானை
  விரிதிரைநீர்விண்ணகரம்மருவிநாளும்
நின்றானைத், தண்குடந்தைக்கிடந்தமாலை
  நெடியானையடிநாயேன்நினைந்திட்டேனே. (உகூ)

## மங்களம்.

* மின்னுமாமழைதவழும்மேகவண்ணா
விண்ணவர்தம்பெருமானேயருளாயென்று
அன்னமாய்முனிவரோடமரரேத்த
வருமறையைவெளிப்படுத்தவம்மான்றன்னை
மன்னுமாமணிமாடமங்கைவேந்தன்
மானவேல்பரகாலன்கலியன்சொன்ன
பன்னியநூல்தமிழ்மாலைவல்லார்தொல்லைப்
பழவினையைமுதலரியவல்லார்தாமே. (௩௰)

திருமங்கையாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

மின்பார்திருவடி இந்திரன்ஒண்மிதி அலம்வற்புநீர்வங்கபொன்பட்டு—பட்டுநெஞ்சுகல் முளைகல்லுயர்ந்த கன்றுபொங்குகார் முற்றுதேராளன்மை—மைனைவளம்உள்ளிருக்கையின்தேமருவுசெங்காலதென்னிலன்றுயர்மின்னுமாவையம்.

திருநெடுந்தாண்டகம் முற்றிற்று.

---

ஆ திருமொழி - கக௰ - க்கு - பாசுரம் - ககஙச.

---

ஆ பத்து - கக - க்கு - திருமொழி பாசுரம் - க௦அச.
திருக்குறுந்தாண்டகம் பாசுரம் - உ௦.
திருநெடுந்தாண்டகம் பாசுரம் - ௩௦.

---

# பெரியதிருமொழிமுற்றும்.

---

ஆ முதலாயிரமுள்பட பாசுரம் - உ௦அக.

---

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

த்ரவிட வேதமாகும் திவ்யப்ரபந்தங்களுள்
ப்ரபந்நஜநாக்ரகண்யர்களாகும்
பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார்
திருமழிசைப்பிரான், நம்மாழ்வார்
திருமங்கைமன்னன்
இவர்கள் திருவாய்மலர்ந்தருளிய

# இயற்பா.

இஃது,
ஸ்ரீமத் உ. வே. தத்வப்ரவர்த்தகராயெழுந்தருளியிருக்கும்
ஸ்ரீமாந்-கபிஸ்தலம்-திருமலை-அநந்தாண்பிள்ளை
அநந்தாசார்யஸ்வாமிகளாலும்,
ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீபாதரேணுவாகிய
ஸங்ககிரி - புரமு
குருஸ்வாமிநாயுடு அவர்களாலும்,
பாடபாடாந்தரங்களுக்குசிதமாக
பரிஶோதிக்கப்பட்டு,
ஸ்ரீ. உ. வேதாந்தேத்யாதி-திருமலை-நல்லான்சக்ரவர்த்தி
க்ருஷ்ணமாசார்யரவர்கள் திருவடி ஸம்பந்தியும்,
பரசமயக்கோளரி
ஸ்ரீமாந்-முடிச்சூர்-அப்பாவுமுதலியாரவர்களால்
ஏற்படுத்தப்பட்டுள்ள
ஸ்ரீமத்வரவரமுநீந்த்ரனை வாழ்த்தும்
ஸபையைச்சேர்ந்தவருமாகிய
ஸ்ரீ. ரா. ராமக்ருஷ்ணபிள்ளையவர்களால்

சென்னை:
ஆதிகலாநிதி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

ஸ்ரீவகுளபூஷணபாஸ்கரோதயம் - ௪௯௮௫-வதான
ஸ்வபாநுநாமஸம்வத்ஸரம்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# விண்ணப்பம்.

மயர்வறமதிநல மருளப்பெற்ற ஆழ்வார்கள் பரமகாருணிகர்களாய் ப்ரவசநம் செய்தருளிய த்ரவிடவேதமாகும் திவ்யப்ரபந்தங்கள் இதுகாறும் ப்ரசுரிக்கப்பட்டுள்ளவை பாடபாடாந்தரங்களுக்கு பேதமாயும், வ்யாக்யாந பங்திகளுக் கொவ்வாதனவாயு முள்ளமைகொண்டு அவைவ சுத்தப்ரதியாக்கி யச்சிட்டுத்தர அநேகபாகவதோத்தமர்கள் விரும்பினமையால், அத்தோஷங் களொன்றுமின்றி, அத்யாபகர்கள் நிறுத்துமிடங்களுங்குறிப்பிட்டுப்ரசுரஞ்செய்யலாயின இதனைஸேவிக்கும் காலக்ஷேபஸ்வாமிகளும், மற்றுள்ளாரும், கீழிற்கண்டுள்ள ப்ராமாதிகதோஷங்களி லேதேனுங் காணுவ துண்டாயின் க்ருபைகூர்ந்து அடியேனுக்குத்தெரிவித்தால் அத்தனையுமில்லாமல் மறுபதிப்பில் காணலாம்,

( , ) இக்குறியிட்டுள்ள விடங்களே அத்யாபகாள் நிறுத்துமிடமென்றுணர்வது.

( * ) இக்குறியிட்டுள்ள பாசுரங்கள் இரட்டித்துச்சேவிக்குமவை.

இக் க்ரந்தம் வேண்டுமவர்கள் சென்னை: திருவல்லிக்கேணி ஆலங்காத்தா பிள்ளைவீதி - கக - வது நெம்பருள்ள மாளிகையில் ஸ்ரீ. ரா. ராமக்ருஷ்ண பிள்ளையிடத்திற் பெற்றுக்கொள்ளலாம்.

இங்ஙனம்,



ஸ்ரீ



ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ.

மயர்வறமதிநலமருளப்பெற்ற

பொய்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# முதற்றிருவந்தாதி.

தனியன்

முதலியாண்டானருளிச்செய்தது.

நேரிசைவெண்பா.

கைதைசேர்பூம்பொழில்சூழ்கச்சிநகர்வந்துதித்த
பொய்கைப்பிரான்கவிஞர்போரேறு—வையத்
தடியவர்கள்வாழவருந்தமிழ்நூற்றந்தாதி
படிவிளங்கச்செய்தான்பரிந்து.

ஸஹானாராகம் - திரிபுடைதாளம்.

※ வையந்தகளியாவார்கடலேநெய்யாக
வெய்யகதிரோன்விளக்காகச்—செய்ய
சுடராழியானடிக்கேசூட்டினேன்சொன்மாலை
இடராழிநீங்குகவேயென்று. (க)

என்றுகடல்கடைந்ததெவ்வுலகம்நீரேற்ற
தொன்றுமதனையுணரேன்—அன்ற
தடைத்துடைத்துக்கண்படுத்தவாழி, யிதுநீ
படைத்திடந்துண்டுமிழ்ந்தபார். (உ)

பாரளவுமோரடிவைத்தோரடியும்பாருடுத்த
நீரளவுஞ்செல்லநிமிர்ந்ததே—சூருருவில்
பேயளவுகண்டபெருமானறிகிலேன்
நீயளவுகண்டநெறி. (௩)

நெறிவாசல்தானேயாய்நின்றானை, யைந்து
பொறிவாசல்போர்க்கதவஞ்சாத்தி—அறிவானாம்
ஆலமரநீழலறநால்வர்க்கன்றுரைத்த
ஆலமமர்கண்டத்தரன். (௪)

அரனாரணனாமமான்விடைபுள்ளூர்தி
உரைநூல்மறையுறையுங்கோயில்—வரைநீர்
கருமமழிப்பளிப்புக்கையதுவேல்நேமி
உருவமெரிகார்மேனியொன்று. (௫)

ஒன்றுமறந்தறியேனோதநீர்வண்ணனைநான்
இன்றுமறப்பனோவேழைகாள்—அன்று
கருவரங்கத்துட்கிடந்துகைதொழுதேன்கண்டேன்
திருவரங்கமேயான்றிசை. (௬)

திசையுந்திசையுறுதெய்வமுந், தெய்வத்
திசையுங்கருமங்களெல்லாம்—அசைவில்சீர்க்
கண்ணனெடுமால்கடல்கடைந்த, காரோத
வண்ணன்படைத்தமயக்கு. (௭)

மயங்கவலம்புரிவாய்வைத்து, வானத்
தியங்குமெறிகதிரோன்றன்னை—முயங்கமருள்
தேராழியால்மறைத்ததென்னீதிருமாலே
போராழிக்கையால்பொருது. (௮)

பொருகோட்டோரேனமாய்ப்புக்கிடந்தாய்க், கன்றுன்
ஒருகோட்டின்மேற்கிடந்ததன்றே—விரிதோட்ட
சேவடியைநீட்டித்திசைநடுங்கவிண்துளங்க
மாவடிவினீயளந்தமண். (௯)

மண்ணுமலையுமறிகடலுமாருதமும்
விண்ணும்விழுங்கியதுமெய்யென்பர்—எண்ணில்
அலகளவுகண்டசீராழியாய்க், கன்றிவ்
வுலகளவுமுண்டோவுன்வாய். (௧0)

வாயவனையல்லதுவாழ்த்தாது, கையுலகம்
தாயவனையல்லதுதான்றொழா—பேய்முலைநஞ்
சூணாகவுண்டானுருவொடுபேரல்லால்
காணாகண்கேளாசெவி. (௧௧)

செவிவாய்கண்மூக்குடலென்றைம்புலனுஞ், செந்தீ
புவிகால்நீர்விண்பூதமைந்தும்—அவியாத
ஞானமும்வேள்வியும்நல்லறமுமென்பரே
ஏனமாய்நின்றாற்கியல்பு. (௧௨)

இயல்பாகவீன்றுழாயானடிக்கேசெல்ல
முயல்வாரியலமரர்முன்னம்—இயல்பாக
நீதியாலோதிநியமங்களாற்பரவ
வாதியாய்நின்றாரவர். (கங)

அவரவர்தாந்தாமறிந்தவாறேத்தி
இவரிவரெம்பெருமானென்று—சுவர்மிசை
சாத்தியும்வைத்துந்தொழுவ, ருலகளந்த
மூர்த்தியுருவேமுதல். (கச)

முதலாவார்மூவரேயம்மூவருள்ளும்
முதலாவான்மூரிநீர்வண்ணன்—முதலாய
நல்லானருளல்லால்நாமநீர்வையகத்துப்
பல்லாரருளும்பழுது. (கரு)

பழுதேபலபகலும்போயினவென், றஞ்சி
அழுதேனரவணைமேற்கண்டு—தொழுதேன்
கடலோதங்காலலைப்பக்கண்வளருஞ், செங்கண்
அடலோதவண்ணரடி. (கசு)

அடியும்படிகடப்பத்தோடிசைமேற்செல்ல
முடியும்விசும்பளந்ததென்பர்—வடிவுகிரால்
ஈர்ந்தானிரணியனதாக, மிருஞ்சிறைப்புள்
ஊர்ந்தானுலகளந்தஞான்று. (கஎ)

நான்றமுலைத்தலைநஞ்சுண், டுறிவெண்ணெய்
தோன்றவுண்டான்வென்றிசூழ்களிற்றை—யூன்றிப்
பொருதுடைவுகண்டானும்புள்ளின்வாய்கீண்டானும்
மருதிடைபோய்மண்ணளந்தமால். (கஅ)

மாலுங்கருங்கடலேயென்னோற்றாய், வையகமுண்
டாலிலைத்துயின்றவாழியான்—கோலக்
கருமேனிச்செங்கண்மால்கண்படையு, ளென்றும்
திருமேனிநீதீண்டப்பெற்று. (ககூ)

பெற்றார்தளைகழலப்பேர்ந்தோர்குறளுருவாய்ச்
செற்றார்படிகடந்தசெங்கண்மால்—நற்றா
மரைமலர்ச்சேவடியைவானவர்கைகூப்பி
நிரைமலர்கொண்டேத்துவராம்நின்று. (உ0)

நின்றுநிலமங்கைநீரேற்றுமூவடியால்
சென்றுதிசையளந்தசெங்கண்மாற்—கென்றும்
படையாழிபுள்ளூர்திபாம்பணையான்பாதம்
அடையாழிநெஞ்சேயறி. (உக)

அறியுமுலகெல்லாம்யானேயுமல்லேன்
பொறிகொள்சிறையுவணமூர்ந்தாய்—வெறிகமழும்
காம்பேய்மென்றோளிகடைவெண்ணெயுண்டாயைத்
தாம்பேகொண்டார்த்ததழும்பு. (உஉ)

தழும்பிருந்தசார்ங்கநாண்தோய்ந்தவாமங்கை
தழும்பிருந்தாள்சகடஞ்சாடித்—தழும்பிருந்த
பூங்கோதையாள்வெருவப்பொன்பெயரோன்மார்பிடந்த
வீங்கோதவண்ணர்விரல். (உ௩)

விரலொடுவாய்தோய்ந்தவெண்ணெய்கண், டாய்ச்சி
உரலொடுறப்பிணித்தஞான்று—குரலோவா
தேங்கிநினைந்தயலார்காணவிருந்திலையே
ஓங்கோதவண்ணாவுரை. (உச)

உரைமேற்கொண்டென்னுள்ளமோவா, தெப்போதும்
வரைமேல்மரகதமேபோலத்—திரைமேல்
கிடந்தானைக்கீண்டானைக்கேழலாய்ப், பூமி
இடந்தானையேத்தியெழும். (உரு)

எழுவார்விடைகொள்வாரீன்றுழாயானை
வழுவாவகைநினைந்துவைகல்—தொழுவார்
வினைச்சுடரைநந்துவிக்கும்வேங்கடமேவானோர்
மனச்சுடரைத்தூண்டுமலை. (உசு)

மலையால்குடைகவித்துமாவாய்பிளந்து
சிலையால்மராமரமேழ்செற்றுக்—கொலையானைப்
போர்க்கோடொசித்தனவும்பூங்குருந்தஞ்சாய்த்தனவும்
கார்க்கோடுபற்றியான்கை. (உஎ)

கையவலம்புரியுநேமியுங், கார்வண்ணத்
தையமலர்மகள்நின்னாகத்தாள்—செய்ய
மறையானின்னுந்தியான்மாமதிள்மூன்றெய்த
இறையானின்னாகத்திறை. (உஅ)

இறையுநிலனுமிருவிசும்புங்காற்றும்
அறைபுனலுஞ்செந்தீயுமாவான்—பிறைமருப்பில்
பைங்கண்மால்யானைபடுதுயரங்காத்தளித்த
செங்கண்மால்கண்டாய்தெளி. (உகூ)

தெளிதாகவுள்ளத்தைச்செந்நிறீஇ, ஞானத்
தெளிதாகநன்குணர்வார்சிந்தை—எளிதாகத்
தாய்நாடுகன்றேபோல்தண்டுழாயானடிக்கே
போய்நாடிக்கொள்ளும்புரிந்து. (௩0)

புரியொருகைபற்றியோர்பொன்னாழியேந்தி
அரியுருவுமாளுருவுமாகி—எரியுருவ
வண்ணத்தான்மார்பிடந்தமாலடியேயல்லால், மற்
றெண்ணத்தானாமோவிமை. (௩க)

இமையாதகண்ணாலிருளகலநோக்கி
அமையாப்பொறிபுலன்களைந்தும்—நமையாமல்
ஆகத்தணைப்பாரணைவரோ, யாயிரவாய்
நாகத்தணையானகர். (௩உ)

நகரமருள்புரிந்துநான்முகற்குப், பூமேல்
பகரமறைபயந்தபண்பன்—பெயரினையே
புந்தியால்சிந்தியாதோதியுருவெண்ணும்
அந்தியாலாம்பயனங்கென். (௩௩)

என்னொருவர்மெய்யன்பரோழுலகுண், டாலிலையின்
முன்னொருவனாயமுகில்வண்ணா—நின்னுருகிப்
பேய்த்தாய்முலைதந்தாள்பேர்ந்திலளால், பேரமர்க்கண்
ஆய்த்தாய்முலைதந்தவாறு. (௩ச)

ஆறியவன்பிலடியார்தம்மார்வத்தால்
கூறியகுற்றமாக்கொள்ளல்நீ—தேறி
நெடியோயடியடைதற்கன்றே, யீரைந்து
முடியான்படைத்தமுரண். (௩ரு)

மூரணவலிதொலைதற்காமன்றே, முன்னம்
தரணிதனதாகத்தானே—இரணியனைப்
புண்ணிரந்தவள்ளுகிரால்பொன்னாழிக்கையா, நீ
மண்ணிரந்துகொண்டவகை. (௩சா)

வகையறுநுண்கேள்விவாய்வார்கள், நாளும்
புகைவிளக்கும்பூம்புனலுமேந்தித்—திசைதிசையின்
வேதியர்கள்சென்றிறைஞ்சும்வேங்கடமே, வெண்சங்கம்
ஊதியவாய்மாலுகந்தவூர். (௩எ)

ஊரும்வரியரவமொண்குறவர்மால்யானை
பேரவெறிந்தபெருமணியைக்—காருடைய
மின்னென்றுபுற்றடையும்வேங்கடமே, மேலசுரார்
என்னென்றமாலதிடம். (௩அ)

இடந்ததுபூமியெடுத்ததுகுன்றம்
கடந்ததுகஞ்சனைமுன்னஞ்சக்—கிடந்ததுவும்
நீரோதமாகடலேநின்றதுவும்வேங்கடமே
பேரோதவண்ணர்பெரிது. (௩கூ)

பெருவில்பகழிக்குறவர்கைச்செந்தீ
வெருவிப்புனந்துறந்தவேழம்—இருவிசும்பின்
மீன்வீழக்கண்டஞ்சும்வேங்கடமே, மேலசுரர்
கோன்வீழக்கண்டுகந்தான்குன்று. (௬௦)

குன்றனையகுற்றஞ்செயினுங்குணங்கொள்ளும்
இன்றுமுதலாகவென்னெஞ்சே—என்றும்
புறனுரையேயாயினும்பொன்னாழிக்கையான்
திறனுரையேசிந்தித்திரு. (௬௧)

திருமகளுமண்மகளுமாய்மகளுஞ்சேர்ந்தால்
திருமகட்கேதீர்ந்தவாறென்கொல்—திருமகள்மேல்
பாலோதஞ்சிந்தப்படநாகணைக்கிடந்த
மாலோதவண்ணர்மனம். (௬௨)

மனமாசுதீருமருவினையுஞ்சாரா
தனமாயதானேகைகூடும்—புனமேய
பூந்துழாயானடிக்கேபோதொடுநீரேந்தித்
தாந்தொழாநிற்பார்தமர். (௬௩)

தமருகந்ததெவ்வுருவமவ்வுருவந்தானே
தமருகந்ததெப்பேர்மற்றப்பேர்—தமருகந்து
எவ்வண்ணஞ்சிந்தித்திமையாதிருப்பரே
அவ்வண்ணமாழியானும். (௬௪)

ஆமேயமரர்க்கறியவதுநிற்க
நாமேயறிகிற்போம்நன்னெஞ்சே—பூமேய
மாதவத்தோன்றாள்பணிந்தவாளரக்கனீண்முடியைப்
பாதமத்தாலெண்ணினான்பண்பு. (௬௫)

பண்புரிந்தநான்மறையோன்சென்னிப்பலியேற்ற
வெண்புரிநூல்மார்பன்வினைதீரப்—புண்புரிந்த
ஆகத்தான்றாள்பணிவார்கண்டீ, ரமரர்தம்
போகத்தால்பூமியாள்வார். (௬௬)

வாரிசுருக்கிமதக்களிறைந்தினையும்
சேரிதிரியாமற்செந்நிறீஇ—கூரிய
மெய்ஞ்ஞானத்தாலுணர்வார்காண்பரே, மேலொருநாள்
கைந்நாகங்காத்தான்கழல். (௬௭)

கழலொன்றெடுத்தொருகைசுற்றி, யோர்கைமேல்
சுழலுஞ்சுராசுரர்களஞ்ச—அழலும்
செருவாழியேந்தினான்சேவடிக்கேசெல்ல
மருவாழிநெஞ்சேமகிழ். (௬௮)

மகிழலகொன்றேபோல்மாறும்பலயாக்கை
நெகிழமுயல்கிற்பார்க்கல்லால்—முகிழ்விரிந்த
சோதிபோல்தோன்றுஞ்சுடர்பொன்னெடுமுடி, யெம்
ஆதிகாண்பார்க்குமரிது. (சகூ)

அரியபுலனைந்தடக்கியாய்மலர்கொண், டார்வம்
புரியபரிசினாற்புல்கில்—பெரியனாய்
மாற்றாதுவீற்றிருந்தமாவலிபால், வண்கைநீர்
ஏற்றானைக்காண்பதெளிது. (ருo)

எளிதிலிரண்டடியுங்காண்பதற், கென்னுள்ளம்
தெளியத்தெளிந்தொழியுஞ்செவ்வே—களியின்
பொருந்தாதவனைப்பொரலுற், றரியா
யிருந்தான்றிருநாமமெண். (ருக)

எண்மர்பதினொருவரீரறுவரோரிருவர்
வண்ணமலரேந்திவைகலும்—நண்ணி
ஒருமாலையால்பரவியோவா, தெப்போதும்
திருமாலைக்கைதொழுவர்சென்று. (ருஉ)

சென்றால்குடையாமிருந்தால்சிங்காசனமாம்
நின்றால்மரவடியாம்நீள்கடலுள்—என்றும்
புணையாமணிவிளக்காம்பூம்பட்டாம்புல்கும்
அணையாந், திருமாற்கரவு. (ருந)

அரவமடல்வேழமான்குருந்தம்புள்வாய்
குரவைகுடமுலைமற்குன்றம்—கரவின்றி
விட்டிறுத்துமேய்த்தொசித்துக்கீண்டுகோத்தாடி, யுண்
டட்டெடுத்தசெங்கணவன். (ருச)

அவன்றமரெவ்வினையராகிலு, மெங்கோன்
அவன்றமரேயென்றொழிவதல்லால்—நமன்றமரால்
ஆராயப்பட்டறியார்கண்டீரரவணைமேல்
பேராயற்காட்பட்டார்பேர். (ருரு)

பேரேவரப்பிதற்றலல்லா, லெம்பெம்மானை
யாரேயறிவாரதுநிற்க—நேரே
கடிக்கமலத்துள்ளிருந்துங்காண்கிலான், கண்ணன்
அடிக்கமலந்தன்னையயன். (ருகூ)

அயனின்றவல்வினையையஞ்சினேனஞ்சி
உயநின்றிருவடியேசேர்வான்—அயனின்ற
நன்மாலைகொண்டுநமோநாரணாவென்னும்
சொன்மாலைகற்றேன்றொழுது. (ருள)

தொழுதுமலர்கொண்டுதூபங்கையேந்தி
எழுதுமெழுவாழிநெஞ்சே—பழுதின்றி
மந்திரங்கள்கற்பனவுமாலடியேகைதொழுவான்
அந்தரமொன்றில்லையடை. (ரு அ)

அடைந்தவருவினையோடல்லல்நோய்பாவம்
மிடைந்தவைமீண்டொழியவேண்டில்—நுடங்கிடையை
முன்னிலங்கைவைத்தான்முரணழிய, முன்னொருநாள்
தன்விலங்கைவைத்தான்சரண். (ரு கூ)

சரணமறைபயந்ததாமரையானோடு
மரணயமன்னுயிர்கட்கெல்லாம்—அரணாய
பேராழிகொண்டபிரானன்றிமற்றறியா
தோராழிசூழ்ந்தவுலகு. (சூ0)

உலகுமுலகிறந்தவூழியு, மொண்கேழ்
விலகுகருங்கடலும்வெற்பும்—உலகினில்
செந்தீயுமாருதமும்வானுந், திருமால்தன்
புந்தியிலாயபுணர்ப்பு. (சூக)

புணர்மருதினூடுபோய்ப்பூங்குருந்தஞ்சாய்த்து
மணமருவமால்விடையேழ்செற்றுக்—கணம்வெருவ
ஏழுலகுந்தாயினவுமெண்டிசையும்போயினவும்
சூழரவப்பொங்கணையான்றாள். (சூஉ)

தோளவனையல்லால்தொழா, வென்செவியிரண்டும்
கேளவனதின்மொழியேகேட்டிருக்கும்—நாநாளும்
கோணகணையான்குரைகழலேகூறுமதே
நாணாமைநள்ளேனயம். (சூங)

நயவேன்பிறர்பொருளைநள்ளேன்கீழாரோ
டுயவேனுயர்ந்தவரோடல்லால்—வியவேன்
திருமாலையல்லதுதெய்வமென்றேத்தேன்
வருமாறென்னம்மேல்வினை. (சூச)

வினையாலடர்ப்படார்வெந்நரகிற்சேரார்
தினையேனுந்தீக்கதிக்கண்செல்லார்—நினைதற்
கரியானைச்சேயானையாயிரம்பேர், செங்கண்
கரியானைக்கைதொழுதக்கால். (சூரு)

காலையெழுந்துலகங்கற்பனவுங்கற்றுணர்ந்த
மேலைத்தலைமறையோர்வேட்பனவும்—வேலைக்கண்
ஓராழியானடியேயோதுவதுமோர்ப்பனவும்
பேராழிகொண்டான்பெயர். (சூசா)

பெயருங்கருங்கடலேநோக்குமா, றுண்பூ
உயருங்கதிரவனேநோக்கும்—உயிரும்
தருமனையேநோக்குமொண்டாமரையாள்கேள்வன்
ஒருவனையேநோக்குமுணர்வு. (சுஎ)

உணர்வாராருன்பெருமையூழிதோறூழி
உணர்வாராருன்னுருவந்தன்னை—யுணர்வாரார்
விண்ணகத்தாய்மண்ணகத்தாய்வேங்கடத்தாய், நால்வேதப்
பண்ணகத்தாய்நீகிடந்தபால். (சுஅ)

பாலன்றனதுருவாயேழுலகுண், டாலிலையின்
மேலன்றுநீகிடந்தமெய்யென்பர்—ஆலன்று
வேலைநீருள்ளதோவிண்ணதோமண்ணதோ
சோலைசூழ்குன்றெடுத்தாய்சொல்லு. (சுசு)

சொல்லுந்தனையுந்தொழுமின்விழுமுடம்பு
செல்லுந்தனையுந்திருமாலை—நல்லிதழ்
தாமத்தால்வேள்வியால்தந்திரத்தால்மந்திரத்தால்
நாமத்தாலேத்துதிரேல்நன்று. (எ0)

நன்றுபிணிமூப்புக்கையகற்றிநான்கூழி
நின்றுநிலமுழுதுமாண்டாலும்—என்றும்
விடலாழிநெஞ்சமேவேண்டினேன்கண்டாய்
அடலாழிகொண்டான்மாட்டன்பு. (எக)

அன்பாழியானையணுகென்னுநாவவன்றன்
பண்பாழித்தோள்பரவியேத்தென்னும்—முன்பூழி
காணானைக்காணென்னுங்கண்செவிகேளென்னும்
பூணாரம்பூண்டான்புகழ். (எஉ)

புகழ்வாய்பழிப்பாய்நீபூந்துழாயானை
இகழ்வாய்கருதுவாய்நெஞ்சே—திகழ்நீர்க்
கடலுமலையுமிருவிசும்புங்காற்றும்
உடலுமுயிருமேற்றான். (எங)

ஏற்றான்புள்ளூர்ந்தானெயிலெரித்தான்மார்பிடந்தான்
நீற்றானிழல்மணிவண்ணத்தான்—கூற்றோர்பால்
மங்கையான்பூமகளான்வார்சடையான், நீண்முடியான்
கங்கையான்நீள்கழலான்காப்பு. (எச)

காப்புன்னையுன்னக்கழியுமருவினைகள்
ஆப்புன்னையுன்னவவிழ்ந்தொழியும்—மூப்புன்னைச்
சிந்திப்பார்க்கில்லைதிருமாலே, நின்னடியை
வந்திப்பார்காண்பர்வழி. (எரு)

வழிநின்றுநின்னைத்தொழுவார்வழுவா
மொழிநின்றமூர்த்தியரேயாவர்—பழுதொன்றும்
வாராதவண்ணமேவிண்கொடுக்கு, மண்ணளந்த
சீரான்றிருவேங்கடம். (எசு)

வேங்கடமும்விண்ணகரும்வெஃகாவு, மஃகாத
பூங்கிடங்கினீள்கோவற்பொன்னகரும்—நான்கிடத்தும்
நின்றானிருந்தான்கிடந்தானடந்தானே
என்றால்கெடுமாமிடர். (எஎ)

இடரார்படுவாரெழுநெஞ்சே, வேழம்
தொடர்வான்கொடுமுதலைசூழ்ந்த—படமுடையப்
பைந்நாகப்பள்ளியான்பாதமேகைதொழுதும்
கொய்ந்நாகப்பூம்போதுகொண்டு. (எஅ)

கொண்டானையல்லாற்கொடுத்தாரையார்பழிப்பார்
மண்டாவெனவிரந்துமாவலியை—யொண்டாரை
நீரங்கைதோயநிமிர்ந்திலையே, நீள்விசும்பில்
ஆரங்கைதோயவடுத்து. (எகூ)

அடுத்தகடும்பகைஞற்காற்றேனென்றோடிப்
படுத்தபெரும்பாழிசூழ்ந்த—விடத்தரவை,
வல்லாளன்கைக்கொடுத்தமாமேனிமாயவனுக்
கல்லாதுமாவரோவாள். (அ0)

ஆளமர்வென்றியடுகளத்துளஞ்ஞான்று
வாளமர்வேண்டிவரைநட்டு—நீளரவைச்
சுற்றிக்கடைந்தான்பெயரன்றே, தொன்னர்கைப்
பற்றிக்கடத்தும்படை. (அக)

படையாரும்வாள்கண்ணார்பாரசினாள், பைம்பூம்
தொடையலோடேந்தியதூபம்—இடையிடையின்
மீன்மாயமாசூணும்வேங்கடமே, மேலொருநாள்
மான்மாயவெய்தான்வரை. (அஉ)

வரைகுடைதோள்காம்பாகவாநிரைகாத், தாயர்
நிரைவிடையேழ்செற்றவாறென்னே—உரவுடைய
நீராழியுட்கிடந்துநேராநிசாசரர்மேல்
பேராழிகொண்டபிரான். (அங)

பிரானுன்பெருமைபிறராரறிவார்
உராயுலகளந்தஞான்று—வராகத்
தெயிற்றளவுபோதாவாறென்கொலோ, வெந்தை
அடிக்களவுபோந்தபடி. (அச)

படிகண்டறிதியேபாம்பணையினான், புள்
கொடிகண்டறிதியேகூறாய்—வடிவில்
பொறியைந்துமுள்ளடக்கிப்போதொடுநீரேந்தி
நெறிநின்றநெஞ்சமேநீ. (௮௫)

நீயுந்திருமகளுநின்றாயால், குன்றெடுத்துப்
பாயும்பனிமறைத்தபண்பாளா—வாசல்
கடைகழியாயுட்புகாய்காமருபூங்கோவல்
இடைகழியேபற்றியினி. (௮௬)

இனியார்புகுவாரெழுநரகவாசல்
முனியாதுமூரித்தாள்கொள்மின்—கனிசாயக்
கன்றெறிந்ததோளான்கனைகழலேகாண்பதற்கு
நன்கறிந்தநாவலஞ்சூழ்நாடு. (௮௭)

நாடிலுநின்னடியேநாடுவன், நாடோறும்
பாடிலுநின்புகழேபாடுவன்—சூடிலும்
பொன்னாழியேந்தினான்பொன்னடியேசூடுவேற்
கென்னாகிலென்னேயெனக்கு. (௮௮)

எனக்காவாராரொருவரோ, யெம்பெருமான்
தனக்காவான்றானேமற்றல்லால்—புனக்காயாம்
பூமேனிகாணப்பொதியவிழும்பூவைப்பூ
மாமேனிகாட்டும்வரம். (௮௯)

வரத்தால்வலிநினைந்துமாதவநின்பாதம்
சிரத்தால்வணங்கானாமென்றே—உரத்தினால்
ஈரரியாய்நேர்வலியோனாயவிரணியனை
ஓரரியாய்நீயிடந்ததூன். (௯0)

ஊனக்குரம்பையினுட்புக்கிருள்நீக்கி
ஞானச்சுடர்கொளீஇநாடோறும்—ஏனத்
துருவாயுலகிடந்தவூழியான்பாதம்
மருவாதார்க்குண்டாமோவான். (௯௧)

வானாகித்தீயாய்மறிகடலாய்மாருதமாய்த்
தேனாகிப்பாலாந்திருமாலே—ஆனாய்ச்சி
வெண்ணெய்விழுங்கநிறையுமே, முன்னொருநாள்
மண்ணையுமிழ்ந்தவயிறு. (௯௨)

வயிறழலவாளுருவிவந்தானையஞ்ச
எயிறிலகவாய்மடித்ததென்னீ—பொறியுகிரால்
பூவடிவையீடழித்தபொன்னாழிக்கையா, நின்
சேவடிமேலீடழியச்செற்று. (௯௩)

செற்றெழுந்துதீவிழித்துச்சென்றவிந்தவேழுலகும்
மற்றிவையாவென்றுவாயங்காந்து—முற்றும்
மறையவர்க்குக்காட்டியமாயவனையல்லால்
இறையேனுமேத்தாதென்னா. (கூச)

நாவாயிலுண்டேநமோநாரணாவென்று
ஓவாதுரைக்குமுறையுண்டே—மூவாத
மாக்கதிக்கட்செல்லும்வகையுண்டே, யென்னொருவர்
தீக்கதிக்கட்செல்லுந்திறம். (கூரு)

திறம்பாதென்னெஞ்சமேசெங்கண்மால்கண்டாய்
அறம்பாவமென்றிரண்டுமாவான்—புறந்தாணிம்
மண்டானமறிகடறுன்மாருதந்தான், வான்றானே
கண்டாய்கடைக்கட்பிடி. (கூசு)

பிடிசேர்களிறளித்தபேராளா, வுன்றன்
அடிசேர்ந்தருள்பெற்றாளன்றே—பொடிசேர்
அனற்கங்கையேற்றானவிர்சடைமேற்பாய்ந்த
புனற்கங்கையென்னும்பெயர்ப்பொன். (கூஎ)

பொன்றிகழுமேனிப்புரிசடையம்புண்ணியனும்
நின்றுலகந்தாயநெடுமாலும்—என்றும்
இருவரங்கத்தாற்றிரிவரேலு, மொருவன்
ஒருவரங்கத்தென்றுமுளன். (கூஅ)

உளன்கண்டாய்நன்னெஞ்சேயுத்தமனென்றும்
உளன்கண்டா, யுள்ளுவாருள்ளத்—துளன்கண்டாய்,
வெள்ளத்திலுள்ளானும்வேங்கடத்துமேயானும்
உள்ளத்திலுள்ளானென்றோர். (கூகூ)

ஓரடியுஞ்சாடுதைத்தவொண்மலர்ச்சேவடியும்
ஈரடியுங்காணலாமென்னெஞ்சே—ஓரடியில்
தாயவனைக்கேசவனைத்தண்டுழாய்மாலைசேர்
மாயவனையேமனத்துவை. (க00)

பொய்கையாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

வையம்வாய்நின்றுபுரிகுன்றெளிதுலகுநன்றாளுனன்பு.

முதற்திருவந்தாதி முற்றிற்று.

பாசுரம் - க00.



ஸ்ரீ







ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ.

மயர்வறமதிநலமருளப்பெற்ற

பூதத்தாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# இரண்டாந்திருவந்தாதி.

தனியன்

திருக்குருகைப்பிரான்பிள்ளானருளிச்செய்தது.

நேரிசைவெண்பா.

என்பிறவிதீரவிறைஞ்சினேனின்னமுதா
யன்பேதகளியளித்தானை—நன்புகழ்சேர்
சீதத்தார்முத்துக்கள்சேருங், கடன்மல்லைப்
பூதத்தார்பொன்னங்கழல்.

பைரவிராகம் - திரிபுடைதாளம்.

அன்பேதகளியாவார்வமேநெய்யாக
இன்புருகுசிந்தையிடுதிரியா—நன்புருகி
ஞானச்சுடர்விளக்கேற்றினேனாரணற்கு
ஞானத்தமிழ்புரிந்தநான். (க)

ஞானத்தால்நன்குணர்ந்துநாரணன்றன்னாமங்கள்
தானத்தால்மற்றவன்பேர்சாற்றினால்—வானத்
தணியமரராக்குவிக்குமஃதன்றே, நங்கள்
பணியமரர்கோமான்பரிசு. (உ)

பரிசுநறுமலராற்பாற்கடலான்பாதம்
புரிவார்புகப்பெறுவர்போலாம்—புரிவார்கள்
தொல்லமரர்கேள்வித்துளங்கொளிசேர்தோற்றத்து
நல்லமரர்கோமானகர். (ங)

நகரிழைத்துநித்திலத்துநாண்மலர்கொண், டாங்கே
திகழுமணிவயிரஞ்சேர்த்து—நிகரில்லாப்
பைங்கமலமேந்திப்பணிந்தேன்பனிமலராள்
அங்கவலங்கொண்டானடி. (ரு)

அடிமூன்றிலிவ்வுலகமன்றளந்தாய்போலும்
அடிமூன்றிரந்தவனிகொண்டாய்—படிநின்ற
நீரோதமேனிநெடுமாலே, நின்னடியை
யாரோதவல்லாரறிந்து. (௬)

அறிந்தைந்துமுள்ளடக்கியாய்மலர்கொண், டார்வஞ்
செறிந்தமனத்தராய்ச்செவ்வே—அறிந்தவன்றன்
பேரோதியேத்தும்பெருந்தவத்தோர்காண்பரோ
காரோதவண்ணன்கழல். (சு)

கழலெடுத்துவாய்மடுத்துக்கண்சுழன்றுமாற்றார்
அழலெடுத்தசிந்தையராயஞ்சத்—தழலெடுத்த
போராழியேந்தினான்பொன்மலர்ச்சேவடியே
ஓராழிநெஞ்சேயுகந்து. (எ)

உகந்துன்னைவாங்கியொளிநிறங்கொள்கொங்கை
அகங்குளிரவுண்ணென்றாளாவி—உகந்து
முலையுண்பாய்போலேமுனிந்துண்டாய், நீயும்
அலைபண்பாலானமையாலன்று. (அ)

அன்றதுகண்டஞ்சாதவாய்ச்சியுனக்கிரங்கி
நின்றுமுலைதந்தவிந்நீர்மைக்—கன்று
வரன்முறையால்நீயளந்தமாகடல்சூழ்ஞாலம்
பெருமுறையாலெய்துமோபேர்த்து. (௯)

பேர்த்தனைமாசகடம்பிள்ளையாய், மண்ணிரந்து
காத்தனைபல்லுயிருங்காவலனே—ஏத்திய
நாவுடையேன்பூவுடையேனின்னுள்ளிநின்றமையால்
காவடியேன்பட்டகடை. (க0)

கடைநின்றமரர்கழல்தொழுது, நாளும்
இடைநின்றவின்பத்தராவர்—புடைநின்ற
நீரோதமேனிநெடுமாலே, நின்னடியை
யாரோதவல்லாரவர். (கக)

அவரிவரென்றில்லையரவணையான்பாதம்
எவர்வணங்கியேத்தாதாரெண்ணில்—பவரும்
செழுங்கதிரோனொண்மலரோன்கண்ணுதலோனன்றே
தொழுந்தகையார்நாளுந்தொடர்ந்து. (கஉ)

தொடரொடுத்தமால்யானைசூழ்கயம்புக்கஞ்சிப்
படரொடுத்தபைங்கமலங்கொண், டன்—றிடரடுக்க
ஆழியான்பாதம்பணிந்தன்றே, வானவர்கோன்
பாழிதானெய்திற்றுப்பண்டு. (௧௩)

பண்டிப்பெரும்பதியையாக்கிப்பழிபாவம்
கொண், டிங்குவாழ்வாரைக்கூறாதே—எண்டிசையும்
பேர்த்தகரநான்குடையான்பேரோதிப்பேதைகாள்
தீர்த்தகரராமின்றிரிந்து. (௧௪)

திரிந்ததுவெஞ்சமத்துத்தேர்கடவி, யன்று
பிரிந்ததுசீதையைமான்பின்போய்—புரிந்ததுவும்
கண்பள்ளிகொள்ளவழகியதே, நாகத்தின்
தண்பள்ளிகொள்வான்றனக்கு. (௧௫)

தனக்கடிமைபட்டதுதானறியானேலும்
மனத்தடையவைப்பதாமாலை—வனத்திடரை
ஏரியாம்வண்ணமியற்றுமிதுவல்லால்
மாரியார்பெய்கிற்பார்மற்று. (௧௬)

மற்றாரியலாவார்வானவர்கோன்மாமலரோன்
சுற்றும்வணங்குந்தொழிலானை—ஒற்றைப்
பிறையிருந்தசெஞ்சடையான்பின்சென்று, மாலைக்
குறையிரந்துதான்முடித்தான்கொண்டு. (௧௭)

கொண்டதுலகங்குறளுருவாய்க்கோளரியாய்
ஒண்டிறலோன்மார்பத்துகிர்வைத்த—துண்டதுவும்
தான்கடந்தவேழுலகேதாமரைக்கண்மாலொருநாள்
வான்கடந்தான்செய்தவழக்கு. (௧௮)

வழக்கன்றுகண்டாய்வலிசகடஞ்செற்றாய்
வழக்கென்றுநீமதிக்கவேண்டா—குழக்கன்று
தீவிளவின்காய்க்கெறிந்ததீமைதிருமாலே
பார்விளங்கச்செய்தாய்பழி. (௧௯)

பழிபாவங்கையகற்றிப்பல்காலுநின்னை
வழிவாழ்வார்வாழ்வராமாதோ—வழுவின்றி
நாரணன்றன்னாமங்கள்நன்குணர்ந்துநன்கேத்தும்
காரணங்கள்தாமுடையார்தாம். (௨0)

தாமுளரேதம்முள்ளமுள்ளுளதே, தாமரையின்
பூவுளதேயேத்தும்பொழுதுண்டே—வாமன்
திருமருவுதாள்மருவுசென்னியரே, செவ்வே
அருநரகஞ்சேர்வதரிது. (௨௧)

சுருக்காகவாங்கிச்சுலாவினின், றையார்
நெருக்காமுன்னீர்நினைமின்கண்டீர்—திருப்பொலிந்த
ஆகத்தான்பாதமறிந்து, மறியாத
போகத்தாலில்லைபொருள். (சு0)

பொருளாலமருலகம்புக்கியலலாகா
தருளானறமருளுமன்றே—அருளாலே
மாமறையோர்க்கீந்தமணிவண்ணன்பாதமே
நீமறவேல்நெஞ்சேநினை. (சுக)

நினைப்பன்றிருமாலைநீண்டதோள்காண
நினைப்பார்பிறப்பொன்றுநேரார்—மனைப்பால்
பிறந்தார்பிறந்தெய்தும்பேரின்பமெல்லாம்
துறந்தார்தொழுதாரத்தோள். (சுஉ)

தோளிரண்டெட்டேழுமூன்றுமுடியனைத்தும்
தாளிரண்டும்வீழச்சரந்துரந்தான்—தாளிரண்டும்
ஆர்தொழுவார்பாதமவைதொழுவதன்றேயென்
சீர்கெழுதோள்செய்யுஞ்சிறப்பு. (சுங)

சிறந்தார்க்கெழுதுணையாஞ்செங்கண்மால்நாமம்
மறந்தாரைமானிடமாவையேன்—அறந்தாங்கும்
மாதவனேயென்னுமனம்படைத்து, மற்றவன்பேர்
ஓதுவதேநாவினுலுள்ளு. (சுச)

உளதென்றிறுமாவாருண்டில்லையென்று
தளர்தலதனருகுஞ்சாரார்—அளவரிய
வேதத்தான்வேங்கடத்தான்விண்ணோர்முடிதோயும்
பாதத்தான்பாதம்பயின்று. (சுரு)

பயின்றதரங்கந்திருக்கோட்டிபன்னுள்
பயின்றதுவும்வேங்கடமேபன்னுள்—பயின்ற
தணிதிகழுஞ்சோலையணிநீர்மலையே
மணிதிகழும்வண்தடக்கைமால். (சுசா)

மாலையரியுருவன்பாதமலரணிந்து
காலைதொழுதெழுமின்கைகோலி—ஞாலம்
அளந்திடந்துண்டுமிழ்ந்தவண்ணலைமற்றல்லால்
உளங்கிடந்தவாற்றுலுணர்ந்து. (சுஎ)

உணர்ந்தாய்மறைநான்குமோதினுய்நீதி
மணந்தாய்மலர்மகள்தோள்மாலே—மணந்தாய்போய்
வேயிருஞ்சாரல்வியலிருஞாலஞ்சூழ்
மாயிருஞ்சோலைமலை. (சுஅ)

மலையேழுமாநிலங்களேழுமதிரக்
குலைசூழ்குரைகடல்களேழும்—முலைசூழ்ந்த
நஞ்சுரத்துப்பெண்ணைநவின்றுண்டநாவனென்று
அஞ்சாதென்னெஞ்சேயழை. (௪௯)

அழைப்பன்திருமாலையாங்கவர்கள்சொன்ன
பிழைப்பில்பெரும்பெயரேபேசி—இழைப்பரிய
வாயவனேயாதவனேயென்றிவனையார்முகப்பும்
மாயவனேயென்றுமதித்து. (௫0)

மதிக்கண்டாய்நெஞ்சேமணிவண்ணன்பாதம்
மதிக்கண்டாய்மற்றவன்பேர்தன்னை—மதிக்கண்டாய்
பேராழிநின்றுபெயர்ந்துகடல்கடைந்த
நீராழிவண்ணனிறம். (௫௧)

நிறங்கரியன்செய்யநெடுமலராள்மார்பன்
அறம்பெரியனாரதறிவார்—மறம்புரிந்த
வாளரக்கன்போல்வானைவானவர்கோன்றானத்து
நீளிருக்கைக்குய்த்தானெறி. (௫௨)

நெறியார்குழற்கற்றைமுன்னின்றுபின்றாழ்ந்
தறியாதிளங்கரியென்றெண்ணிப்—பிரியாது
பூங்கொடிக்கள்வைகும்பொருபுனற்குன்றென்னும்
வேங்கடமேயாம்விரும்பும்வெற்பு. (௫௩)

வெற்பென்றிருஞ்சோலைவேங்கடமென்றிவ்விரண்டும்
நிற்பென்றுநீமதிக்குநீர்மைபோல்—நிற்பென்
றுளங்கோயிலுள்ளம்வைத்துள்ளினேன், வெள்ளத்
திளங்கோயில்கைவிடேலென்று. (௫௪)

என்றுமறந்தறியேனேழ்பிறப்புமெப்பொழுதும்
நின்றுநினைப்பொழியாநீர்மையால்—வென்றி
அடலாழிகொண்டவறிவனே, யின்பக்
கடலாழிநீயருளிக்காண். (௫௫)

காணக்கழிகாதல்கைமிக்குக்காட்டினால்
நாணப்படுமென்றால்நாணுமே—பேணிக்
கருமாலைப்பொன்மேனிகாட்டாமுன்காட்டும்
திருமாலைநங்கள்திரு. (௫௬)

திருமங்கைநின்றருளுந்தெய்வநாவாழ்த்தும்
கருமங்கடைப்படுமின்கண்டீர்—உரிமையால்
ஏத்தினேம்பாதமிருந்தடக்கையெந்தைபேர்
நாற்றிசையுங்கேட்டீரோநாம். (௫௭)

வரைச்சந்தனக்குழம்பும்வான்கலனும்பட்டும்
விரைப்பொலிந்தவெண்மல்லிகையும்—நிரைத்துக்கொண்
டாதிக்கணின்றவறிவனடியிணையே
ஓதிப்பணிவதுறும். (எசு)

உறுங்கண்டாய்நன்னெஞ்சேயுத்தமனற்பாதம்
உறுங்கண்டாயொண்கமலந்தன்னால்—உறுங்கண்டாய்
ஏத்திப்பணிந்தவன்பேரீரைஞ்ஞூறெப்பொழுதும்
சாற்றியுரைத்தல்தவம். (எஎ)

தவஞ்செய்துநான்முகனேபெற்றான், தரணி
நிவர்ந்தளப்பநீட்டியபொற்பாதம்—சிவந்ததன்
கையனைத்துமாரக்கழுவினான், கங்கைநீர்
பெய்தனைத்துப்பேர்மொழிந்தபின். (எஅ)

பின்னின்றுதாயிரப்பக்கேளான், பெரும்பணைத்தோள்
முன்னின்றுதானிரப்பாள்மொய்மலராள்—சொன்னின்ற
தோள்நலந்தானேரில்லாத்தோன்ற, லவனளந்த
நீள்நிலந்தானெத்தனைக்குநேர். (எகூ)

நேர்ந்தேனடிமைநினைந்தேனதொண்கமலம்
ஆர்ந்தேனுன்சேவடிமேலன்பாய்—ஆர்ந்த
அடிக்கோலங்கண்டவர்க்கென்கொலோ, முன்னைப்
படிக்கோலங்கண்டபகல். (அ0)

பகற்கண்டேன்நாரணனைக்கண்டேன், கனவில்
மிகக்கண்டேன்மீண்டவனைமெய்யே,—மிகக்கண்டேன்
ஊன்றிகழுநேமியொளிதிகழுஞ்சேவடியான்
வான்றிகழுஞ்சோதிவடிவு. (அக)

வடிக்கோலவாணெடுங்கண்மாமலராள், செவ்விப்
படிக்கோலங்கண்டகலாள்பன்னாள்—அடிக்கோலி
ஞாலத்தாள்பின்னுநலம்புரிந்ததென்கொலோ
கோலத்தாவில்லைகுறை. (அஉ)

குறையாகவெஞ்சொற்கள்கூறினேன்கூறி
மறையாங்கெனவுரைத்தமாலை—இறையேனும்
ஈயுங்கொலென்றேயிருந்தேனெனைப்பகலும்
மாயன்கண்சென்றவரம். (அங)

வரங்கருதித்தன்னைவணங்காதவன்மை
உரங்கருதுமூக்கத்தவனை—நரங்கலந்த
சிங்கமாய்க்கீண்டதிருவனடியிணையே
அங்கண்மாஞாலத்தமுது. (அச)

அமுதென்றுந்தேனென்றுமாழியானென்றும்
அமுதன்றுகொண்டுகந்தானென்றும்—அமுதன்னச்
சொன்மாலையேத்தித்தொழுதேன்சொலப்பட்ட
நன்மாலையேத்திநவின்று. (௮௫)

நவின்றுரைத்தநாவலர்கள்நாண்மலர்கொண், டாங்கே
பயின்றதனாற்பெற்றபயனென்கொல்—பயின்றார்தம்
மெய்த்தவத்தால்காண்பரியமேகமணிவண்ணனை, யான்
எத்தவத்தால்காண்பன்கொலின்று. (௮௬)

இன்றாவறிகின்றேனல்லேன், னிருநிலத்தைச்
சென்றாங்களந்ததிருவடியை—அன்று
கருக்கோட்டியுட்கிடந்துகைதொழுதேன்கண்டேன்
திருக்கோட்டியெந்தைதிறம். (௮௭)

திறம்பிற்றினியறிந்தேன்றென்னரங்கத்தெந்தை
திறம்பாவழிசென்றார்க்கல்லால்—திறம்பாச்
செடிநரகைநீக்கித்தான்செல்வதன்முன், வானோர்
கடிநகரவாசற்கதவு. (௮௮)

கதவிக்கதஞ் * சிறந்தகஞ்சனைமுற்காய்ந்
ததவிப்போர்யானையொசித்துப்—பதவியாய்ப்
பாணியால்நீரேற்றுப்பண்டொருகால்மாவலியை
மாணியாய்க்கொண்டிலையேமண். (௮௯)

மண்ணுலகமாளேனேவானவர்க்கும்வானவனாய்
விண்ணுலகந்தன்னகத்துமேவேனே—நண்ணித்
திருமாலைச்செங்கணெடியானை, யெங்கள்
பெருமானைக்கைதொழுதபின். (௯0)

பின்னாலருநரகஞ்சேராமற்பேதுறுவீர்
முன்னால்வணங்கமுயன்மினோ—பன்னூல்
அளந்தானைக்கார்க்கடல்சூழ்ஞாலத்தை, யெல்லாம்
அளந்தானவன்சேவடி. (௯௧)

அடியான்முற்கஞ்சனைச்செற், றமரரேத்தும்
படியான்கொடிமேற்புட்கொண்டான்—நெடியான்றன்
நாமமேயேத்துமின்க † ளேத்தினால், தாம்வேண்டும்
காமமேகாட்டுங்கடிது. (௯௨)

கடிதுகொடுநரகம்பிற்காலுஞ்செய்கை
கொடிதென்றதுகூடாமுன்னம்—வடிசங்கம்
கொண்டானைக்கூந்தல்வாய்கீண்டானைக், கொங்கைநஞ்
சுண்டானையேத்துமினோவுற்று. (௯௩)

---

* "சிறந்து" என்றும் பாடம். † "ஏத்தினார்" எனவுமுண்டு.

உற்றுவணங்கித்தொழுமி, னுலகேழும்
முற்றும்விழுங்குமுகில்வண்ணன்—பற்றிப்
பொருந்தாதான்மார்பிடந்துபூம்பாடகத்துள்
இருந்தானை, யேத்துமென்னெஞ்சு. (சுரு)

என்னெஞ்சமேயானென்சென்னியான், றானவனை
வன்னெஞ்சங்கீண்டமணிவண்ணன்—முன்னஞ்சே
யூழியானூழிபெயர்த்தா, னுலகேத்தும்
ஆழியானத்தியூரான். (சுசு)

அத்தியூரான்புள்ளையூர்வா, னணிமணியின்
துத்திசேர்நாகத்தின்மேற்றுயில்வான்— * முத்தி
மறையாவான்மாகடனஞ்சுண்டான்றனக்கும்
இறையாவானெங்கள்பிரான். (சுசு)

எங்கள்பெருமானிமையோர்தலைமகனீ
செங்கணெடுமால்திருமார்பா—பொங்கு
படமூக்கினாயிரவாய்ப்பாம்பணைமேற்சேர்ந்தாய்
குடமூக்கில்கோயிலாக்கொண்டு. (சுஎ)

கொண்டுவளர்க்கக்குழவியாய்த்தான்வளர்ந்த
துண்டதுலகேழுமுள்ளொடுங்க—கொண்டு
குடமாடிக்கோவலனாய்மேவி, யென்னெஞ்சம்
இடமாகக்கொண்டவிறை. (சுஅ)

இறையெம்பெருமானருளென், றிமையோர்
முறைநின்றுமொய்மலர்கவே—அறைகழல
சேவடியான்செங்கணெடியான், குறளுருவாய்
† மாவடியின்மண்கொண்டான்மால். (சுசு)

* மாலேநெடியோனேகண்ணனே, விண்ணவர்க்கு
மேலாவியன்றுழாய்க்கண்ணியனே—மேலாய்
விளவின்காய்கன்றினால்வீழ்த்தவனே, யென்றன்
அளவன்றால்யானுடையவன்பு. (௧00)

பூதத்தாழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

அன்புகடைதாம்பிரான்பொருள்மதிநின்றவிடம்பகற்பின்னுற்றிரு.

இரண்டாந்திருவந்தாதி முற்றிற்று.

---

ஆ திருவந்தாதி - உ - க்குப் பாசுரம் - உ00.

---

* "முந்தி" எனவும் பாடம். † "மாவடிவில்" என்றுமுண்டு.



ஸ்ரீ



ஸ்ரீமதேராமாநுஜாயநம꞉.

மயர்வறமதிநலமருளப்பெற்ற

பேயாழ்வார்திருவாய்மலர்ந்தருளிய

# மூன்றாந்திருவந்தாதி.

தனியன்

குருகைகாவலப்பனருளிச்செய்தது.

நேரிசைவெண்பா.

சீராருமாடத்திருக்கோவலூரதனுள்
காரார்கருமுகிலைக்காணப்புக்—கோராத்
திருக்கண்டேனென்றுரைத்தசிரான்கழலே
உரைக்கண்டாய்நெஞ்சேயுகந்து.

மோஹனராகம் - திரிபுடைதாளம்.

* திருக்கண்டேன்பொன்மேனிகண்டேன், திகழும்
அருக்கனணிநிறமுங்கண்டேன்—செருக்கிளரும்
பொன்னாழிகண்டேன்புரிசங்கங்கைக்கண்டேன்
என்னாழிவண்ணன்பாலின்று. (க)

இன்றேகழல்கண்டேனேழ்பிறப்பும்யானறுத்தேன்
பொன்றோய்வரைமார்பிற்பூந்துழாய்—அன்று
திருக்கண்டுகொண்டதிருமாலே, யுன்னை
மருக்கண்டுகொண்டென்மனம். (உ)

மனத்துள்ளான்மாகடல்நீருள்ளான், மலராள்
தனத்துள்ளான்றண்டுழாய்மார்பன்—சினத்துச்
செருநருகச்செற்றுகந்ததேங்கோதவண்ணன்
வருநரகந்தீர்க்குமருந்து. (ங)

மருந்தும்பொருளுமமுதமுந்தானே
திருந்தியசெங்கண்மாலாங்கே— * பொருந்திய
நின்றுலகமுண்டுமிழ்ந்துநீரேற்றுமூவடியால்
அன்றுலகந்தாயோனடி. (ச)

அடிவண்ணந்தாமரையன்றுலகந்தாயோன்
படிவண்ணம்பாற்கடனீர்வண்ணம்—முடிவண்ணம்
ஓராழிவெய்யோனொளியுமஃதன்றே
ஆராழிகொண்டாற்கழகு. (ரு)

அழகன்றேயாழியாற்காழிநீர்வண்ணம்
அழகன்றேயண்டங்கடத்தல்—அழகன்றே
அங்கைநீரேற்றாற்கலர்மேலோன்கால்கழுவக்
கங்கைநீர்கான்றகழல். (சு)

கழல்தொழுதும்வாநெஞ்சேகார்க்கடல்நீர்வேலைப்
பொழிலளந்தபுள்ளூர்திச்செல்வன்—எழிலளந்தங்
கெண்ணற்கரியானையெப்பொருட்குஞ்சேயானை
நண்ணற்கரியானைநாம். (எ)

நாமம்பலசொல்லிநாராயணாவென்று
நாமங்கையாற்றொழுதுநன்னெஞ்சே—வா, மருவி
மண்ணுலகமுண்டுமிழ்ந்த † வண்டறையுந்தண்டுழாய்க்
கண்ணனையேகாண்கநங்கண். (அ)

கண்ணுங்கமலங்கமலமேகைத்தலமும்
மண்ணளந்தபாதமுமற்றவையே—எண்ணில்
கருமாமுகில்வண்ணன்கார்க்கடல்நீர்வண்ணன்
திருமாமணிவண்ணன்றேசு. (கூ)

தேசுந்திறலுந்திருவுமுருவமும்
மாசில்குடிபிறப்புமற்றவையும்—பேசில்,
வலம்புரிந்தவான்சங்கங்கொண்டான்பேரோத
நலம்புரிந்துசென்றடையும்நன்கு. (க0)

நன்கோதுநால்வேதத்துள்ளா, னறவிரியும்
பொங்கோதருவிப்புனல்வண்ணன்—சங்கோதப்
பாற்கடலான்பாம்பணையின்மேலான், பயின்றுரைப்பான்
நூற்கடலானுண்ணறிவினான். (கக)

அறிவென்னுந்தாள்கொளுவியைம்புலனுந்தம்மில்
செறிவென்னுந்திண்கதவஞ்செம்மி—மறையென்றும்
நன்கோதிநன்குணர்வார்காண்பரே, நாடோறும்
பைங்கோதவண்ணன்படி. (கஉ)

* "பொருந்தியும்" என்றும் பாடம். † "வண்டுறையும்" எனவுமுண்டு.

படிவட்டத்தாமரைபண்டுலகம்நீரேற்
றடிவட்டத்தாலளப்பனீண்ட—முடிவட்டம்
ஆகாயமூடறுத்தண்டம்போய்நீண்டதே
மாகாயமாய்நின்றமாற்கு. (கங)

மாற்பான்மனஞ்சுழிப்பமங்கையர்தோள்கைவிட்டு
நூற்பான்மனம்வைக்கநொய்விதாம்—நாற்பால
வேதத்தான்வேங்கடத்தான்விண்ணோர்முடிதோயும்
பாதத்தான்பாதம்பணிந்து. (கச)

பணிந்துயர்ந்தபௌவப்படுத்திரைகள்மோதப்
பணிந்தபணமணிகளாலே—அணிந், தங்
கனந்தனணைக்கிடக்குமம்மா, னடியேன்
மனந்தனணைக்கிடக்கும்வந்து. (கரு)

வந்துதைத்தவெண்டிரைகள்செம்பவளவெண்முத்தம்
அந்திவிளக்குமணிவிளக்காம்—எந்தை
ஒருவல்லித்தாமரையாளொன்றியசீர்மார்பன்
திருவல்லிக்கேணியான்சென்று. (கசா)

சென்றநாட்செல்லாதசெங்கண்மாலெங்கண்மால்
என்றநாளெந்நாளுநாளாகும்—என்றும்
இறவாதவெந்தையிணையடிக்கேயாளாய்
மறவாதுவாழ்த்துகவென்வாய். (கஎ)

வாய்மொழிந்துவாமனனாய்மாவலிபால், மூவடிமண்
நீயளந்துகொண்டநெடுமாலே—தாவியநின்
எஞ்சாவிணையடிக்கேயேழ்பிறப்புமாளாகி
அஞ்சாதிருக்கவருள். (கஅ)

அருளாதொழியுமேயாலிலைமே, லன்று
தெருளாதபிள்ளையாய்ச்சேர்ந்தான்—இருளாத
சிந்தையராய்ச்சேவடிக்கேசெம்மலர்தூய்க்கைதொழுது
முந்தையராய்நிற்பார்க்குமுன். (ககூ)

முன்னுலகமுண்டுமிழ்ந்தாய்க்கவ்வுலகமீரடியால்
பின்னளந்துகோடல்பெரிதொன்றே—என்னே
திருமாலேசெங்கணெடியானே, யெங்கள்
பெருமானேநீயிதனைப்பேசு. (உ0)

பேசுவாரெவ்வளவுபேசுவரவ்வளவே
வாசமலர்த்துழாய்மாலையான்—தேசுடைய
சக்கரத்தான்சங்கினான்சார்ங்கத்தான், பொங்கரவ
வக்கரனைக்கொன்றான்வடிவு. (உக)

வடிவார்முடிகோட்டிவானவர்கள்நாளும்
கடியார்மலர்தூவிக்காணும்—படியானைச்
சம்மையாலுள்ளுருகிச்செவ்வனேநெஞ்சமே
மெய்ம்மையேகாணவிரும்பு. (உஉ)

விரும்பிவிண்மண்ணளந்தவஞ்சிறையவண்டார்
சுரும்புதுளையிற்சென்றூத—அரும்பும்
புனந்துழாய்மாலையான்பொன்னங்கழற்கே
மனந்துழாய்மாலாய்வரும். (உ௩)

வருங்காலிருநிலனுமால்விசும்புங்காற்றும்
நெருங்குதீநீருருவுமானான்—பொருந்தும்
சுடராழியொன்றுடையான்சூழ்கழலே, நாளும்
தொடராழிநெஞ்சேதொழுது. (உ௪)

தொழுதாற்பழுதுண்டேதூநீருலகம்
முழுதுண்டுமொய்குழலாளாய்ச்சி—விழுதுண்ட
வாயானைமால்விடையேழ்செற்றானைவானவர்க்கும்
சேயானைநெஞ்சேசிறந்து. (உ௫)

சிறந்தவென்சிந்தையுஞ்செங்கணரவும்
நிறைந்தசீர்நீள்கச்சியுள்ளும்—உறைந்ததுவும்
வேங்கடமும்வெஃகாவும்வேளுக்கைப்பாடியுமே
தாங்கடவார்தண்டுழாயார். (உ௬)

ஆரேதுயருழந்தார்துன்புற்றாராண்டையார்
காரேமலிந்தகருங்கடலை—நேரே
கடைந்தானைக்காரணனைநீரணைமேற்பள்ளி
அடைந்தானைநாளுமடைந்து. (உ௭)

அடைந்ததரவணைமேலைவர்க்கா, யன்று
மிடைந்ததுபாரதவெம்போர்—உடைந்ததுவும்
ஆய்ச்சிபால்மத்துக்கேயம்மனேவாளெயிற்றுப்
பேய்ச்சிபாலுண்டபிரான். (உ௮)

பேய்ச்சிபாலுண்டபெருமானைப்பேர்ந்தெடுத்து
ஆய்ச்சிமுலைகொடுத்தாளஞ்சாதே—வாய்த்த
இருளார்திருமேனியின்பவளச்செவ்வாய்த்
தெருளாமொழியானைச்சேர்ந்து. (உ௯)

சேர்ந்ததிருமால்கடல்குடந்தைவேங்கடம்
நேர்ந்தவென்சிந்தைநிறைவிசும்பும்—வாய்ந்த
மறைபாடகமனந்தன்வண்டுழாய்க்கண்ணி
இறைபாடியாயவிவை. (௩0)

Funding: IKS/Tattva Heritage. Digitization: eGangotri.



இவையவன்கோயிலிரணியனதாகம்
அவைசெய்தரியுருவமானான்—செவிதெரியா
நாகத்தானால்வேதத்துள்ளானறவேற்றான்
பாகத்தான்பாற்கடலுள்ளான். (௩௧)

பாற்கடலும்வேங்கடமும்பாம்பும்பனிவிசும்பும்
நாற்கடலுநுண்ணூலதாமரைமேல்—பாற்பட்
டிருந்தார்மனமுமிடமாகக்கொண்டான்
குருந்தொசித்தகோபாலகன். (௩௨)

பாலகனாயாலிலைமேற்பையவுலகெல்லாம்
மேலொருநாளுண்டவனேமெய்ம்மையே—மாலவனே
மந்தரத்தால்மாநீர்க்கடல்கடைந்து, வானமுதம்
அந்தரத்தார்க்கீந்தாய்நீயன்று. (௩௩)

அன்றிவ்வுலகமளந்தவசைவேகொல்
நின்றிருந்துவேளுக்கைநீணகர்வாய்—அன்று
கிடந்தானைக்கேடில்சீரானை, முன்கஞ்சைக்
கடிந்தானைநெஞ்சமேகாண். (௩௪)

காண்காணெனவிரும்புங்கண்கள், கதிரிலகு
பூண்டாரகலத்தான்பொன்மேனி—பாண்கட்
டொழில்பாடிவண்டறையுந்தொங்கலான், செம்பொற்
கழல்பாடியாந்தொழுதுங்கை. (௩௫)

கையனலாழிகார்க்கடல்வாய்வெண்சங்கம்
வெய்யகதைசார்ங்கம்வெஞ்சுடர்வாள்—செய்ய
படைபரவைபாழிப்பனிநீருலகம்
அடியளந்தமாயனவற்கு. (௩௬)

அவர்க்கடிமைபட்டேனகத்தான்புறத்தான்
உவர்க்குங்கருங்கடனீருள்ளான்—துவர்க்கும்
பவளவாய்ப்பூமகளும்பன்மணிப்பூணும்
திகழுந்திருமார்பன்றான். (௩௭)

தானேதனக்குவமன்றன்னுருவேயெவ்வுருவும்
தானேதவவுருவுந்தாரகையும்—தானே
எரிசுடருமால்வரையுமெண்டிசையுமண்டத்
திருசுடருமாயவிறை. (௩௮)

இறையாய்நிலனாகியெண்டிசையுந்தானாய்
மறையாய்மறைப்பொருளாய்வானாய்—பிறைவாய்ந்த
வெள்ளத்தருவிவிளங்கொளிநீர்வேங்கடத்தான்
உள்ளத்தினுள்ளேயுளன். (௩௯)

உளன்கண்டாய்நன்னெஞ்சேயுத்தமனென்றும்
உளன்கண்டாயுள்ளுவாருள்ளத்—துளன்கண்டாய்
விண்ணொடுங்கக்கோடுயரும்விங்கருவிவேங்கடத்தான்
மண்ணொடுங்கத்தானளந்தமன். (௪0)

மன்னுமணிமுடிநீண்டண்டம்போயெண்டிசையும்
துன்னுபொழிலனைத்துஞ்சூழ்கழலே—மின்னை
உடையாகக்கொண்டன்றுலகளந்தான்குன்றம்
குடையாகவாகாத்தகோ. (௪௧)

கோவலனாயாநிரைகள்மேய்த்துக்குழலூதி
மாவலனாய்க்கீண்டமணிவண்ணன்—மேவி
அரியுருவமாகியிரணியனதாகம்
தெரியுகிரால்கீண்டான்சினம். (௪௨)

சினமாமதகளிற்றின்றிண்மருப்பைச்சாய்த்துப்
புனமேயபூமியதனைத்—தனமாகப்
பேரகலத்துள்ளொடுக்கும்பேராரமார்பனார்
ஓரகலத்துள்ளதுலகு. (௪௩)

உலகமுமூழியுமாழியுமொண்கேழ்
அலர்கதிருஞ்செந்தீயுமாவான்—பலகதிர்கள்
பாரித்தபைம்பொன்முடியானடியிணைக்கே
பூரித்தென்னெஞ்சேபுரி. (௪௪)

புரிந்துமதவேழமாப்பிடியோடூடித்
திரிந்துசினத்தாற்பொருது—விரிந்தசீர்
வெண்கோட்டுமுத்துதிர்க்கும்வேங்கடமே, மேலொருநாள்
மண்கோட்டுக்கொண்டான்மலை. (௪௫)

மலைமுகடுமேல்வைத்துவாசுகியைச்சுற்றித்
தலைமுகடுதானொருகைப்பற்றி—அலைமுகட்
டண்டம்போய்நீர்தெறிப்பவன்றுகடல்கடைந்தான்
பிண்டமாய்நின்றபிரான். (௪௬)

நின்றபெருமானேநீரேற், றுலகெல்லாம்
சென்றபெருமானேசெங்கண்ணா—அன்று
துரகவாய்கீண்டதுழாய்முடியாய், நங்கள்
நரகவாய்கீண்டாயுநீ. (௪௭)

நீயன்றேநீரேற்றுலகமடியளந்தாய்
நீயன்றேநின்றுநிரைமேய்த்தாய்—நீயன்றே
மாவாயுரம்பிளந்துமாமருதினூடுபோய்த்
தேவாசுரம்பொருதாய்செற்று. (௪௮)

செற்றதுவுஞ்சேராவிரணியனைச், சென்றேற்றுப்
பெற்றதுவுமாநிலம்பின்னைக்காய்—முற்றல்
முரியேற்றின்முன்னின்றுமொய்ம்பொழித்தாய், மூரிச்
சுரியேறுசங்கினாய்சூழ்ந்து. (௪௯)

சூழ்ந்ததுழாயலங்கல்சோதிமணிமுடிமால்
தாழ்ந்தவருவித்தடவரைவாய்—ஆழ்ந்த
மணிநீர்ச்சுனைவளர்ந்தமாமுதலைகொன்றான்
அணிநீலவண்ணத்தவன். (௫0)

அவனேயருவரையாலாநிரைகள்காத்தான்
அவனேயணிமருதஞ்சாய்த்தான்—அவனே
கலங்காப்பெருநகரங்காட்டுவான்கண்டீர்
இலங்காபுரமெரித்தானெய்து. (௫௧)

எய்தான்மராமரமேழுமிராமனாய்
எய்தானம்மான்மறியவேந்திழைக்காய்—எய்ததுவும்
தென்னிலங்கைக்கோன்வீழச்சென்றுகுறளுருவாய்
முன்னிலங்கைக்கொண்டான்முயன்று. (௫௨)

முயன்றுதொழுநெஞ்சேமூரிநீர்வேலை
இயன்றமரத்தாலிலையின்மேலால்—பயின்றங்கோர்
மண்ணலங்கொள்வெள்ளத்துமாயக்குழவியாய்த்
தண்ணலங்கல்மாலையான்றாள். (௫௩)

தாளாற்சகடமுதைத்துப்பகடுந்திக்
கீளாமருதிடைபோய்க்கேழலாய்—மீளாது
மண்ணகலங்கிண்டங்கோர்மாதுகந்தமார்பற்குப்
பெண்ணகலங்காதல்பெரிது. (௫௪)

பெரியவரைமார்பிற்பேராரம்பூண்டு
கரியமுகிலிடைமின்போலத்—திரியுங்கால்
பாணொடுங்கவண்டறையும்பங்கயமே, மற்றவன்றன்
நீணெடுங்கண்காட்டுநிறம். (௫௫)

நிறம்வெளிதுசெய்துபசிதுகரிதென்
றிறையுருவம்யாமறியோமெண்ணில்—நிறைவுடைய
நாமங்கைதானுநலம்புகழவல்லளே
பூமங்கைகேள்வன்பொலிவு. (௫௬)

பொலிந்திருண்டகார்வானின்மின்னேபோற்றோன்றி
மலிந்துதிருவிருந்தமார்பன்—பொலிந்து
கருடன்மேற்கொண்டகரியான்கழலே
தெருடன்மேற்கண்டாய்தெளி. (௫௭)

தெளிந்தசிலாதலத்தின்மேலிருந்தமந்தி
அளிந்தகடுவனையேநோக்கி—விளங்கிய
வெண்மதியந்தாவென்னும்வேங்கடமே, மேலொருநாள்
மண்மதியிற்கொண்டுகந்தான்வாழ்வு. (௫௮)

வாழும்வகையறிந்தேன்மைபோல்நெடுவரைவாய்த்
தாழுமருவிபோற்றார்கிடப்பச்—சூழும்
திருமாமணிவண்ணன்செங்கண்மா, லெங்கள்
பெருமானடிசேரப்பெற்று. (௫௯)

பெற்றம்பிணைமருதம்பேய்முலைமாச்சகடம்
முற்றக்காத்தூடுபோயுண்டுதைத்துக்—கற்றுக்
குணிலைவிளங்கனிக்குக்கொண்டெறிந்தான், வெற்றிப்
பணிலம்வாய்வைத்துகந்தான்பண்டு. (௬0)

பண்டெல்லாம்வேங்கடம்பாற்கடல்வைகுந்தம்
கொண்டங்குறைவார்க்குக்கோயில்போல்—வண்டு
வளங்கிளருநீள்சோலைவண்பூங்கடிகை
இளங்குமரன்றன்விண்ணகர். (௬௧)

விண்ணகரம்வெஃகாவிரிதிரைநீர்வேங்கடம்
மண்ணகரமாமாடவேளுக்கை—மண்ணகத்த
தென்குடந்தைதேனார்திருவரங்கந்தென்கோட்டி
தன்குடங்கைநீரேற்றான்றாழ்வு. (௬௨)

தாழ்சடையுநீண்முடியுமொண்மழுவுஞ்சக்கரமும்
சூழரவும்பொன்னாணுந்தோன்றுமால்—சூழும்
திரண்டருவிபாயுந்திருமலைமேலெந்தைக்
கிரண்டுருவுமொன்றாயிசைந்து. (௬௩)

இசைந்தவரவமும்வெற்புங்கடலும்
பசைந்தங்கமுதுபடைப்ப—அசைந்து
கடைந்தவருத்தமோகச்சிவெஃகாவில்
கிடந்திருந்துநின்றதுவுமங்கு. (௬௪)

அங்கர்க்கிடரின்றியந்திப்பொழுதத்து
மங்கவிரணியனதாகத்தைப்—பொங்கி
அரியுருவமாய்ப்பிளந்தவம்மானவனே
கரியுருவங்கொம்பொசித்தான்காய்ந்து. (௬௫)

காய்ந்திருளைமாற்றிக்கதிரிலகுமாமணிகள்
ஏய்ந்தபணக்கதிர்மேல்வெவ்வுயிர்ப்ப—வாய்ந்த
மதுகைடவரும்வயிறுருகிமாண்டார்
அதுகேடவர்க்கிறுதியங்கு. (௬௬)

ஆங்குமலருங்குவியுமாலுந்திவாய்
ஓங்குகமலத்தினொண்போது—ஆங்கைத்
திகிரிசுடரென்றும்வெண்சங்கம், வானில்
பகருமதியென்றும்பார்த்து. (௬௭)

பார்த்தகடுவன்சுனைநீர்நிழல்கண்டு
பேர்த்தோர்கடுவனெனப்பேர்ந்து—கார்த்த
களங்கனிக்குக்கைநீட்டும்வேங்கடமே, மேனாள்
விளங்கனிக்குக்கன்றெறிந்தான்வெற்பு. (௬௮)

வெற்பென்றுவேங்கடம்பாடும்வியன்றுழாய்
கற்பென்றுசூடுங்கருங்குழல்மேல்—மற்பொன்ற
நீண்டதோள்மால்கிடந்தநீள்கடனீராடுவான்
பூண்டநாளெல்லாம்புகும். (௬௯)

புகுமதத்தால்வாய்பூசிக்கீழ்தாழ்ந், தருவி
உகுமதத்தால்கால்கழுவிக்கையால்—மிகுமதத்தேன்
விண்டமலர்கொண்டுவிறல்வேங்கடவனையே
கண்டுவணங்குங்களிறு. (௭௦)

களிறுமுகில்குத்தக்கையெடுத்தோடி
ஒளிருமருப்பொசிகையாளி—பிளிறி
விழக், கொன்றுநின்றதிரும்வேங்கடமேமேனாள்
குழக்கன்றுகொண்டெறிந்தான்குன்று. (௭௧)

குன்றொன்றினாயகுறமகளிர்கோல்வளைக்கைச்
சென்றுவிளையாடுந்தீங்கழைபோய்—வென்று
விளங்குமதிகோள்விடுக்கும்வேங்கடமே, மேலை
இளங்குமரர்கோமானிடம். (௭௨)

இடம்வலமேழ்பூண்டவிரவித்தேரோட்டி
வடமுகவேங்கடத்துமன்னும்—குடநயந்த
கூத்தனாய்நின்றான்குரைகழலேகூறுவதே
நாத்தனாலுள்ளநலம். (௭௩)

நலமேவலிதுகொல்நஞ்சூட்டுவன்பேய்
நிலமேபுரண்டுபோய்வீழச்—சலமேதான்
வெங்கொங்கையுண்டானைமீட்டாய்ச்சியூட்டுவான்
தன்கொங்கைவாய்வைத்தாள்சார்ந்து. (௭௪)

சார்ந்தகடுதேய்ப்பத்தடாவியகோட்டுச்சிவாய்
ஊர்ந்தியங்கும்வெண்மதியினொண்முயலைச்—சேர்ந்து
சினவேங்கைபார்க்குந்திருமலையே, யாயன்
புனவேங்கைநாறும்பொருப்பு. (௭௫)

பொருப்பிடையேநின்றும்புனல்குளித்து, மைந்து
நெருப்பிடையேநிற்கவுநீவேண்டா—விருப்புடைய
வெஃகாவேசேர்ந்தானைமெய்ம்மலர்தூய்க்கைதொழுதால்
அஃகாவேதீவினைகளாய்ந்து. (௭௬)

ஆய்ந்தவருமறையோனான்முகத்தோனன்குறங்கில்
வாய்ந்தகுழவியாய்வாளரக்கன்—ஏய்ந்த
முடிப்போதுமூன்றேழென்றெண்ணினா, னார்ந்த
அடிப்போதுநங்கட்கரண். (௭௭)

அரணாம்நமக்கென்றுமாழிவலவன்
முரணாள்வலஞ்சுழிந்தமொய்ம்பன்—சரணாமேல்
ஏதுகதியேதுநிலையேதுபிறப்பென்னாதே
ஓதுகதிமாயனையேயோர்த்து. (௭௮)

ஓர்த்தமனத்தராயைந்தடக்கியாராய்ந்து
பேர்த்தால்பிறப்பேழும்பேர்க்கலாம்—கார்த்த
விரையார்நறுந்துழாய்வீங்கோதமேனி
நிரையாரமார்பனையேநின்று. (௭௯)

நின்றெதிராயநிரைமணித்தேர்வாணன்றோள்
ஒன்றியவீரைஞ்ஞூறுடன்றுணிய—வென்றிலங்கும்
ஆர்படுவானேமியரவணையான், சேவடிக்கே
நேர்படுவான்றான்முயலுநெஞ்சு. (௮௰)

நெஞ்சால்நினைப்பரியனேலும், நினைப்பெற்றென்
நெஞ்சமேபேசாய்நினைக்குங்கால்—நெஞ்சற்றுப்
பேராதுநிற்கும்பெருமானையென்கொலோ
ஓராதுநிற்பதுணர்வு. (௮௧)

உணர்விலுணர்வரியனுள்ளம்புகுந்து
புணரிலுங்காண்பரியனுண்மை—இணரணையக்
கொங்கணைந்துவண்டறையுந்தண்டுழாய்க்கோமானை
எங்கணைந்துகாண்டுமினி. (௮௨)

இனியவன்மாயனெனவுரைப்பரேலும்
இனியவன்காண்பரியனேலும்—இனியவன்
கள்ளத்தால்மண்கொண்டுவிண்கடந்தபைங்கழலான்
உள்ளத்தினுள்ளேயுளன். (௮௩)

உளனாயநான்மறையினுட்பொருளை, யுள்ளத்
துளனாகத்தேர்ந்துணர்வரேலும்—உளனாய
வண்டாமரைநெடுங்கண்மாயவனையாவரே
கண்டாருகப்பர்கவி. (௮௪)

கவியினாற்கைபுனைந்தகண்ணார்கழல்போய்ச்
செவியினாற்கேள்வியராய்ச்சேர்ந்தார்—புவியினார்
போற்றியுரைக்கப்பொலியுமேபின்னைக்காய்
ஏற்றுயிரையட்டானெழில். (அரு)

எழில்கொண்டுமின்னுக்கொடியெடுத்து, வேகத்
தொழில்கொண்டுதான் * முழங்கித்தோன்றும்—எழில்கொண்ட
நீர்மேகமன்னநெடுமால்நிறம்போலக்
கார்வானங்காட்டுங்கலந்து. (அசு)

கலந்துமணியிமைக்குங்கண்ணா, நின்மேனி
மலர்ந்துமரகதமோகாட்டும்—நலந்திகழும்
கொந்தின்வாய்வண்டறையுந்தண்டுழாய்க்கோமானை
அந்திவான்காட்டுமது. (அஎ)

அதுநன்றிதுதீதென்றையப்படாதே
மதுநின்றதண்டுழாய்மார்பன்—பொதுநின்ற
பொன்னங்கழலேதொழுமின், முழுவினைகள்
முன்னங்கழலுமுடிந்து. (அஅ)

முடிந்தபொழுதிற்குறவாண, ரேனம்
படிந்துழுசால்பைந்தினைகள்வித்தத்—தடிந்தெழுந்த
வேய்ங்கழைபோய்விண்டிறக்கும்வேங்கடமே, மேலொருநாள்
தீங்குழல்வாய்வைத்தான்சிலம்பு. (அகூ)

சிலம்புஞ்செறிகழலுஞ்சென்றிசைப்ப, விண்ணார்
அலம்பியசேவடிபோ, யண்டம்—புலம்பியதோள்
எண்டிசையுஞ்சூழவிடம்போதாதென்கொலோ
வண்டுழாய்மாலளந்தமண். (கூ0)

மண்ணுண்டுபேய்ச்சிமுலையுண்டுமாற்றாதாய்
வெண்ணெய்விழுங்கவெகுண், டாய்ச்சி—கண்ணிக்
கயிற்றினாற்கட்டத்தான்கட்டுண்டிருந்தான்
வயிற்றினோடாற்றாமகன். (கூக)

மகனொருவற்கல்லாதமாமேனிமாயன்
மகனாமவன்மகன்றன்காதல்—மகனைச்,
சிறைசெய்தவாணன்றோள்செற்றான்கழலே
நிறைசெய்தென்னெஞ்சேநினை. (கூஉ)

நினைத்துலகிலார்தெளிவார்நீண்டதிருமால்
அனைத்துலகுமுள்ளொடுக்கிப்பால்மேல்—கனைத்துலவு
வெள்ளத்தோர்பிள்ளையாய்மெள்ளத்துயின்றானை
உள்ளத்தேவைநெஞ்சேயுய்த்து. (கூங)

* “முயங்கி” எனவுமுண்டு.

உய்த்துணர்வென்னுமொளிகொள்விளக்கேற்றி
வைத்தவனைநாடிவலைப்படுத்தேன்—மெத்தெனவே
நின்றானிருந்தான்கிடந்தானென்னெஞ்சத்துப்
பொன்றாமைமாயன்புகுந்து. (௯௪)

புகுந்திலங்குமந்திப்பொழுதத், தரியாய்
இகழ்ந்தவிரணியனதாகஞ்—சுகிர்ந்தெங்கும்
சிந்தப்பிளந்ததிருமால்திருவடியே
வந்தித்தென்னெஞ்சமேவாழ்த்து. (௯௫)

வாழ்த்தியவாயராய்வானோர்மணிமகுடம்
தாழ்த்திவணங்கத்தழும்பாமே—கேழ்த்த
அடித்தாமரைமலர்மேல்மங்கைமணாளன்
அடித்தாமரையாமலர். (௯௬)

அலரொடுத்தவுந்தியானாங்கெழிலாய
மலரொடுத்தமாமேனிமாயன்—அலரொடுத்த
வண்ணத்தான்மாமலரான்வார்சடையா,னென்றிவர்கட்
கெண்ணத்தானாமோவிமை. (௯௭)

இமஞ்சூழ்மலையுமிருவிசும்புங்காற்றும்
அமஞ் * சூழ்ந்தறவிளங்கித்தோன்றும்—நமஞ்சூழ்
நரகத்துநம்மைநணுகாமற்காப்பான்
துரகத்தைவாய்பிளந்தான்றொட்டு. (௯௮)

தொட்டபடையெட்டுந்தோலாதவென்றியான்
அட்டபுயகரத்தானஞ்ஞான்று—குட்டத்துக்
கோள்முதலைதுஞ்சக்குறித்தெறிந்தசக்கரத்தான்
தாள்முதலேநங்கட்குச்சார்பு. (௯௯)

* சார்புநமக்கென்றுஞ்சக்கரத்தான், றண்டுழாய்த்
தார்வாழ்வரைமார்பன்றான்முயங்கும்—காரார்ந்த
வானவருமின்னிமைக்கும்வண்டாமரைநெடுங்கண்
தேனமரும்பூமேல்திரு. (௧௦௦)

பேயாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

திருநன்குபேசுவாரிவைமன்னுமவனேபண்டுகளிறுநெஞ்சுமண்ணன்முகன்.

மூன்றாந்திருவந்தாதி முற்றிற்று.

---

ஆ திருவந்தாதி - ௩ - க்குப் பாசுரம் - ௩௦௦.

---

* "சூழ்தர" எனவுமமையும்.



ஸ்ரீ



ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ.

மயர்வறமதிநலமருளப்பெற்ற

திருமழிசையாழ்வார்திருவாய்மலர்ந்தருளிய

# நான்முகன் றிருவந்தாதி.

தனியன்

ஸ்ரீராமப்பிள்ளையருளிச்செய்தது.

நேரிசைவெண்பா.

நாராயணன்படைத்தான்நான்முகனைநான்முகனுக்
கேரார்சிவன்பிறந்தானென்னுஞ்சொல்—சீரார்
மொழிசெப்பிவாழலாம்நெஞ்சமே, மொய்பூ
மழிசைப்பரனடியேவாழ்த்து.

அடாணாராகம் - ரூபகதாளம்.

* நான்முகனைநாராயணன்படைத்தான், நான்முகனும்
தான்முகமாய்ச்சங்கரனைத்தான்படைத்தான்—யான்முகமாய்
அந்தாதிமேலிட்டறிவித்தேனாழ்பொருளைச்
சிந்தாமற்கொண்மினீர்தேர்ந்து. (க)

தேருங்கால்தேவனொருவனேயென்றுரைப்பன்
யாருமறியாரவன்பெருமை—ஒரும்
பொருள்முடிவுமித்தனையேயெத்தவஞ்செய்தார்க்கும்
அருள்முடிவதாழியான்பால். (உ)

பாலில்கிடந்ததுவும்பண்டரங்கமேயதுவும்
ஆலில்துயின்றதுவுமாரறிவார்—ஞாலத்
தொருபொருளைவானவர்தம்மெய்ப்பொருளை, யப்பில்
அருபொருளையானறிந்தவாறு. (ங)

ஆறுசடைக்கரந்தானண்டர்கோன்றன்னோடும்
கூறுடையனென்பதுவுங்கொள்கைபற்றேன்—வேறொருவர்
இல்லாமைநின்றானையெம்மானை, யெப்பொருட்கும்
சொல்லானைச்சொன்னேன்றொகுத்து. (ச)

தொகுத்தவரத்தனாய்த்தோலாதான்மார்பம்
வகிர்த்தவளையுகிர்த்தோள்மாலே—யுகத்தில்
ஒருநான்றுநீயுயர்த்தியுள்வாங்கிநீயே
அருநான்குமானாயறி. (ரு)

அறியார்சமணரயர்த்தார்பவுத்தர்
சிறியார்சிவப்பட்டார்செப்பில்—வெறியாய
மாயவனைமாலவனைமாதவனையேத்தாதார்
ஈனவரேயாதலாலின்று. (சூ)

இன்றாகநாளையேயாக, வினிச்சிறிதும்
நின்றாகநின்னருளென்பாலதே—நன்றாக
நானுன்னையன்றியிலேன்கண்டாய், நாரணனே
நீயென்னையன்றியிலை. (எ)

இலைதுணைமற்றென்னெஞ்சேயீசனைவென்ற
சிலைகொண்டசெங்கண்மால்சேராக்—குலைகொண்ட
ஈரைந்தலையானிலங்கையையீடழித்த
கூரம்பனல்லால்குறை. (அ)

குறைகொண்டுநான்முகன்குண்டிகைநீர்பெய்து
மறைகொண்டமந்திரத்தால்வாழ்த்திக்—கறைகொண்ட
கண்டத்தான்சென்னிமேலேறக்கழுவினான்
அண்டத்தான்சேவடியையாங்கு. (கூ)

ஆங்காரவாரமதுகேட், டழலுமிழும்
பூங்காரரவணையான்பொன்மேனி—யாங்காண
வல்லமேயல்லமேமாமலரான்வார்சடையான்
வல்லரோயல்லரோவாழ்த்து. (க0)

வாழ்த்துகவாய்காண்ககண்கேட்கசெவி, மகுடம்
தாழ்த்திவணங்குமின்கள்தண்மலரால்—சூழ்த்த
துழாய்மன்னுநீண்முடியென்றொல்லைமால்தன்னை
வழாவண்கைகூப்பிமதித்து. (கக)

மதித்தாய்போய்நான்கின்மதியார்போய்வீழ
மதித்தாய்மதிகோள்விடுத்தாய்—மதித்தாய்
மடுக்கிடந்தமாமுதலைகோள்விடுப்பா, னாழி
விடற்கிரண்டும்போயிரண்டின்வீடு. (கஉ)

வீடாக்கும்பெற்றியறியாது, மெய்வருத்திக்
கூடாக்கினின்றுண்டுகொண்டுழல்வீர்—வீடாக்கும்
மெய்ப்பொருள்தான்வேதமுதற்பொருள்தான், விண்ணவர்க்கு
நற்பொருள்தான்நாராயணன். (௧௩)

நாராயணனென்னையாளி, நரகத்துச்
சேராமற்காக்குந்திருமால், தன்—பேரான
பேசப்பெறாதபிணச்சமயர்பேசக்கேட்
டாசைப்பட்டாழ்வார்பலர். (௧௪)

பலதேவரேத்தப்படிகடந்தான்பாதம்
மலரேறவிட்டிறைஞ்சிவாழ்த்த—வல்லராகில்,
மார்க்கண்டன்கண்டவகையேவருங்கண்டார்
நீர்க்கண்டன்கண்டநிலை. (௧௫)

நிலைமன்னுமென்னெஞ்சமஞ்ஞான்று, தேவர்
தலைமன்னர்தாமேமாற்றாகப்—பலமன்னர்
போர்மாளவெங்கதிரோன்மாயப்பொழில்மறையத்
தேராழியால்மறைத்தாரால். (௧௬)

ஆலநிழற்கீழறநெறியை, நால்வர்க்கு
மேலையுகத்துரைத்தான்மெய்த்தவத்தோன்—ஞாலம்
அளந்தானையாழிக்கிடந்தானை, யால்மேல்
வளர்ந்தானைத்தான்வணங்குமாறு. (௧௭)

மாறாயதானவனைவள்ளுகிரால்மார்பிரண்டு
கூறாகக்கீறியகோளரியை—வேறாக
ஏத்தியிருப்பாரைவெல்லுமே, மற்றவரைச்
சாத்தியிருப்பார்தவம். (௧௮)

தவஞ்செய்துநான்முகனால்பெற்றவரத்தை
அவஞ்செய்தவாழியாயன்றே—உவந்தெம்மைக்
காப்பாய்நீகாப்பதனையாவாய்நீ, வைகுந்த
மீப்பாயுமெவ்வுயிர்க்குநீ. (௧௯)

நீயேயுலகெல்லாம்நின்னருளேநிற்பனவும்
நீயேதவத்தேவதேவனும்—நீயே
எரிசுடருமால்வரையுமெண்டிசையு, மண்டத்
திருசுடருமாயவிவை. (௨0)

இவையாபிலவாய்திறந்தெரிகான்ற
இவையாவெரிவட்டக்கண்கள்—இவையா
வெரிபொங்கிக்காட்டுமிமையோர்பெருமான்
அரிபொங்கிக்காட்டுமழகு. (௨௧)

அழகியான்றானேயரியுருவன்றானே
பழகியான்றாளேபணிமின்—குழவியாய்த்
தானேழுலகுக்குந்தன்மைக்குந்தன்மயனே
மீனுயுயிரளிக்கும்வித்து. (உஉ)

வித்துமிடவேண்டுங்கொலோவிடையடர்த்த
பத்தியுழவன்பழம்புனத்து—மொய்த்தெழுந்த
கார்மேகமன்னகருமால்திருமேனி
நீர்வானங்காட்டும்நிகழ்ந்து. (உங)

நிகழ்ந்தாய்பால்பொன்பசுப்புக், கார்வண்ணம்நான்கும்
இகழ்ந்தாயிருவரையும்வீயப்—புகழ்ந்தாய்,
சினப்போர்ச்சுவேதனைச்சேனாபதியாய்
மனப்போர்முடிக்கும்வகை. (உச)

வகையால்மதியாதுமண்கொண்டாய், மற்றும்
வகையால்வருவதொன்றுண்டே—வகையால்
வயிரங்குழைத்துண்ணுமாவலிதானென்னும்
வயிரவழக்கொழித்தாய்மற்று. (உரு)

மற்றுத்தொழுவாரொருவரையும்யானின்மை
கற்றைச்சடையான்கரிக்கண்டாய்—எற்றைக்கும்
கண்டுகொள்கண்டாய்கடல்வண்ணா, யானுன்னைக்
கண்டுகொள்கிற்குமாறு. (உசு)

மாறான்புகுந்தமடநெஞ்சம், மற்றதுவும்
பேறாகக்கொள்வனோபேதைகாள்—நீறாடி
தான்காணமாட்டாததாரகலசேவடியை
யான்காணவல்லேற்கிது. (உஎ)

இதுவிலங்கைவீடழியக்கட்டியசேது
இதுவிலங்குவாலியைவீழ்த்ததுவும்—இதுவிலங்கை
தானொடுங்கவில்நுடங்கத்தண்டாரிராவணனை
ஊனொடுங்கவெய்தானுகப்பு. (உஅ)

உகப்புருவன்றானேயொளியுருவன்றானே
மகப்புருவன்றானேமதிக்கில்—மிகப்புருவம்
ஒன்றுக்கொன்றோசனையான்வீழ, வொருகணையால்
அன்றிக்கொண்டெய்தானவன். (உகூ)

அவனென்னையாளியரங்கத்தரங்கில்
அவனென்னையெய்தாமற்காப்பான்—அவனென்ன
துள்ளத்துநின்றானிருந்தான்கிடக்குமே
வெள்ளத்தரவணையின்மேல். (ங0)

மேனான்முகனரனையிட்ட விடுசாபம்
தானாரணனொழித்தான்றாரகையுள்—வானோர்
பெருமானையேத்தாதபேய்காள், பிறக்கும்
கருமாயம்பேசிற்கதை. (௩௧)

கதைப்பொருள்தான்கண்ணன்றிருவயிற்றினுள்ள
உதைப்பளவுபோதுபோக்கின்றி—வதைப்பொருள்தான்
வாய்ந்தகுணத்துப்படாததறிமினோ
ஆய்ந்தகுணத்தானடி. (௩௨)

அடிச்சகடஞ்சாடியரவாட்டி, யானை
பிடித்தொசித்துப்பேய்முலைநஞ்சுண்டு—வடிப்பவள
வாய்ப்பின்னைதோளிக்காவல்லேற்றெருத்திறுத்துக்
கோப்பின்னுமானான்குறிப்பு. (௩௩)

குறிப்பெனக்குக்கோட்டியூர்மேயானையேத்தக்
குறிப்பெனக்குநன்மைபயக்க—வெறுப்பனோ
வேங்கடத்துமேயானைமெய்வினைநோயெய்தாமல்
தாங்கடத்துந்தன்மையான்றாள். (௩௪)

தாளாலுலகமளந்தவசைவேகொல்
வாளாகிடந்தருளும்வாய்திறவான்—நீளோதம்
வந்தலைக்குமாமயிலைமாவல்லிக்கேணியான்
ஐந்தலைவாய்நாகத்தணை. (௩௫)

நாகத்தணைக்குடந்தைவெஃகாத்திருவெவ்வுள்
நாகத்தணையரங்கம்பேரன்பில்—நாகத்
தணைப்பாற்கடற்கிடக்குமாதிநெடுமால்
அணைப்பார்கருத்தனவான். (௩௬)

வானுலவுதீவளிமாகடல்மாபொருப்புத்
தானுலவுவெங்கதிருந்தண்மதியும்—மேனிலவு
கொண்டற்பெயருந்திசையெட்டுஞ்சூழ்ச்சியும்
அண்டந்திருமாலகைப்பு. (௩௭)

அகைப்பின்மனிசரையாறுசமயம்
புகைத்தான், பொருகடனீர்வண்ணன்—உகைக்குமேல்
எத்தேவர்வாலாட்டுமெவ்வாறுசெய்கையும்
அப்போதொழியுமழைப்பு. (௩௮)

அழைப்பன்றிருவேங்கடத்தானைக்காண
விழைப்பன்றிருக்கூடல்கூட—மழைப்பேர்
அருவிமணிவரன்றிவந்திழிய, யானை
வெருவவரவொடுங்கும்வெற்பு. (௩௯)

வெற்பென்றுவேங்கடம்பாடினேன், வீடாக்கி
நிற்கின்றேனின்றுநினைக்கின்றேன்—கற்கின்ற
நூல்வலையிற்பட்டிருந்தநூலாட்டிகேள்வனார்
காலவலையிற்பட்டிருந்தேன்காண். (சுo)

காணலுறுகின்றேன்கல்லருவிமுத்துதிர
ஓணவிழவிலொலியதிரப்—பேணி
வருவேங்கடவாவென்னுள்ளம்புகுந்தாய்
திருவேங்கடமதனைச்சென்று. (சுக)

சென்றுவணங்குமினோசேணுயர்வேங்கடத்தை
நின்றுவினைகெடுக்குநீர்மையால்—என்றும்
கடிக்கமலநான்முகனுங்கண்மூன்றத்தானும்
அடிக்கமலமிட்டேத்துமங்கு. (சுஉ)

மங்குல்தோய்சென்னிவடவேங்கடத்தானைக்
கங்குல்புகுந்தார்கள்காப்பணிவான்—திங்கள்
சடையேறவைத்தானுந்தாமரைமேலானும்
குடையேறத்தாங்குவித்துக்கொண்டு. (சுஙு)

கொண்டுகுடங்கால்மேல்வைத்தகுழவியாய்த்
தண்டவரக்கன்றலைதாளால்—பண்டெண்ணிப்
போங்குமரனிற்கும்பொழில்வேங்கடமலைக்கே
போங்குமரருள்ளீர்புரிந்து. (சுச)

புரிந்துமலரிட்டுப்புண்டரீகப்பாதம்
பரிந்துபடுகாடுநிற்பத்—தெரிந்தெங்கும்
தானோங்கிநிற்கின்றான்றண்ணருவிவேங்கடமே
வானோர்க்குமண்ணோர்க்கும்வைப்பு. (சுரு)

வைப்பன்மணிவிளக்காமாமதியை, மாலுக்கென்
றெப்பொழுதுங்கைநீட்டும்யானையை—எப்பாடும்
வேடுவளைக்கக்குறவர்வில்லெடுக்கும்வேங்கடமே
நாடு * வளைத்தாடுதிரேல்நன்று. (சுசா)

நன்மணிவண்ணனூராளியுங்கோளரியும்
பொன்மணியுமுத்தமும்பூமரமும்—பன்மணிநீர்
ஓடுபொருதுருளுங்கானமும்வானரமும்
வேடுமுடைவேங்கடம். (சுஎ)

வேங்கடமேவிண்ணோர்தொழுவதுவு, மெய்ம்மையால்
வேங்கடமேமெய்வினைநோய்தீர்ப்பனவும்—வேங்கடமே
தானவரைவீழத்தன்னாழிப்படைதொட்டு
வானவரைக்காப்பான்மலை. (சுஅ)

---

* "வளைத்தாடுதுமேல்" என்பாருமுளர்.

மலையாமைமேல்வைத்துவாசுகியைச்சுற்றித்
தலையாமைதானொருகைபற்றி—அலையாமல்
பீறக்கடைந்தபெருமான்றிருநாமம்
கூறுவதேயாவர்க்குங்கூற்று. (௪௯)

கூற்றமுஞ்சாராகொடுவினையுஞ்சாராதி
மாற்றமுஞ்சாராவகையறிந்தேன்—ஆற்றங்
கரைக்கிடக்குங்கண்ணன்கடற்கிடக்கு, மாயன்
உரைக்கிடக்குமுள்ளத்தெனக்கு. (௫0)

எனக்காவாராரொருவரோ, யெம்பெருமான்
தனக்காவான்றானேமற்றல்லால்—புனக்காயா
வண்ணனேயுன்னைப்பிறரறியா, றொன்மதிக்கு
விண்ணெலலாமுண்டோவிலை. (௫௧)

விலைக்காட்படுவர்விசாதியேற்றுண்பர்
தலைக்காட்பலிதிரிவர்தக்கோர்—முலைக்கால்
விடமுண்டவேந்தனையேவேறாவேத்தாதார்
கடனுண்டார்கல்லாதவர். (௫௨)

கல்லாதவரிலங்கைகட்டழித்த, காகுத்தன்
அல்லாலொருதெய்வம்யானிலேன்—பொல்லாத
தேவரைத்தேவரல்லாரைத்திருவில்லாத்
தேவரைத்தேறேன்மின்றேவு. (௫௩)

தேவராய்நிற்குமத்தேவுமத்தேவரில்
மூவராய்நிற்குமுதுபுணர்ப்பும்—யாவராய்
நிற்கின்றதெல்லாம்நெடுமாலென்றோராதார்
கற்கின்றதெல்லாங்கடை. (௫௪)

கடைநின்றமரர்கழல்தொழுது, நாளும்
இடைநின்றவின்பத்தராவர்—புடைநின்ற
நீரோதமேனிநெடுமாலே, நின்னடியை
யாரோதவல்லாரவர். (௫௫)

அவரிவரொன்றில்லையனங்கவேள்தாதைக்
கெவருமெதிரில்லைகண்டீர்—உவரிக்
கடனஞ்சமுண்டான்கடனென்று, வாணற்
குடனின்றுதோற்றானொருங்கு. (௫௬)

ஒருங்கிருந்தநல்வினையுந்தீவினையுமாவான்
பெருங்குருந்தஞ்சாய்த்தவனேபேசில்—மருங்கிருந்த
வானவர்தாந்தானவர்தாந்தாரகைதா, னென்னெஞ்சம்
ஆனவர்தாமல்லாததென். (௫௭)

என்னெஞ்சமேயானிருணீக்கியெம்பிரான்
மன்னஞ்சமுன்னொருநாள்மண்ணளந்தான்—என்னெஞ்சம்
மேயானையில்லாவிடையேற்றான், வெவ்வினைதீர்த்
தாயானுக்காக்கினேனன்பு. (௫அ)

அன்பாவாயாரமுதமாவா, யடியேனுக்
கின்பாவாயெல்லாமுநீயாவாய்—பொன்பாவை
கேள்வாகிளரொளியென்கேசவனே, கேடின்றி
ஆள்வாய்க்கடியேனானேன். (௫௯)

ஆட்பார்த்துழிதருவாய்கண்டுகொளென்று, நின்
தாட்பார்த்துழிதருவேன்றன்மையைக்—கேட்பார்க்
கரும்பொருளாய்நின்றவரங்கனே, யுன்னை
விரும்புவதேவிள்ளேன்மனம். (௬0)

மனக்கேதஞ்சாராமதுசூதன்றன்னைத்
தனக்கேதான்றஞ்சமாக்கொள்ளில்—எனக்கேதான்
இன்றொன்றிநின்றுலகையேழாணையோட்டினான்
சென்றொன்றிநின்றதிரு. (௬௧)

திருநின்றபக்கந்திறவிதென்றோரார்
கருநின்றகல்லார்க்குரைப்பர்— * திருநின்ற
மார்பன்சிரீதரன்றன்வண்டுலவுதண்டுழாய்த்
தார்தன்னைச்சூடித்தரித்து. (௬௨)

தரித்திருந்தேனாகவேதாராகணப்போர்
விரித்துரைத்தவென்னாகத்துன்னைத்—தெரித்தெழுதி
வாசித்துங்கேட்டும்வணங்கிவழிபட்டும்
பூசித்தும்போக்கினேன்போது. (௬௩)

போதானவிட்டிறைஞ்சியேத்துமினோ, பொன்மகரக்
காதானையாதிப்பெருமானை—நாதானை
நல்லானைநாரணனைநம்மேழ்பிறப்பறுக்கும்
சொல்லானைச், சொல்லுவதேசூது. (௬௪)

சூதாவதென்னெஞ்சத்தெண்ணினேன், சொன்மாலை
மாதாய † மாதவனைமாலவனை—யாதானும்
வல்லவாசிந்தித்திருப்பேற்கு, வைகுந்தத்
தில்லையோசொல்லீரிடம். (௬௫)

இடமாவதென்னெஞ்சமின்றெல்லாம், பண்டு
படநாகணைநெடியமாற்குத்—திடமாக
வையேன்மதிசூடிதன்னோ, டயனைநான்
வையேனாட்செய்யேன்வலம். (௬௬)

---

* "திருவிருந்த" என்றும் பாடம். † "மாலவனை மாதவனை" எனவுமுண்டு.

வலமாகமாட்டாமைதானாக, வைகல்
குலமாகக்குற்றந்தானாக—நலமாக
நாரணனைநாபதியைஞானப்பெருமானைச்
சீரணனையேத்துந்திறம். (௬௭)

திறம்பேன்மின்கண்டீர்திருவடிதன்னாமம்
மறந்தும்புறந்தொழாமாந்தரை—இறைஞ்சியும்
சாதுவராய்ப்போதுமின்களென்றான், நமனுந்தன்
தூதுவரைக்கூவிச்செவிக்கு. (௬௮)

செவிக்கின்பமாவதுவுஞ்செங்கண்மால்நாமம்
புவிக்கும்புவியதுவேகண்டீர்—கவிக்கு
நிறைபொருளாய்நின்றானைநேர்பட்டேன், பார்க்கில்
மறைபொருளுமத்தனையேதான். (௬௯)

தானொருவனாகித்தரணியிடந்தெடுத்து
ஏனொருவனாயெயிற்றிற்றாங்கியதும்—யானொருவன்
இன்றாவறிகின்றேனல்லே, னிருநிலத்தைச்
சென்றாங்கடிப்படுத்தசேய். (௭௦)

சேயனணியன்சிறியன்மிகப்பெரியன்
ஆயன்றுவரைக்கோனாய்நின்ற—மாயனன்
றோதியவாக்கதனைக்கல்லா, ருலகத்தில்
ஏதிலராய்மெய்ஞ்ஞானமில். (௭௧)

இல்லறமல்லேற்றுறவறமில்லென்னும்
சொல்லறமல்லனவுஞ்சொல்லல்ல—நல்லறம்
ஆவனவுநால்வேதமாத்தவமு, நாரணனே
ஆவதீதன்றென்பாரார். (௭௨)

ஆரோயறிவாரனைத்துலகுமுண்டுமிழ்ந்த
பேராழியான்றன்பெருமையைக்—கார்செறிந்த
கண்டத்தானெண்கண்ணான்காணா, ரவன்வைத்த
பண்டைத்தானத்தின்பதி. (௭௩)

பதிப்பகைஞற்காற்றாதுபாய்திரைநீர்ப்பாழி
மதித்தடைந்தவாளரவந்தன்னை—மதித்தவன்றன்
வல்லாகத்தேற்றியமாமேனிமாயவனை
யல்லாதொன்றேத்தாதென்னா. (௭௪)

நாக்கொண்டுமானிடம்பாடேனலமாகத்
தீக்கொண்டசெஞ்சடையான்சென்றென்றும்—பூக்கொண்டு
வல்லவாறேத்தமகிழாதவைகுந்தச்
செல்வனார்சேவடிமேற்பாட்டு. (௭௫)

பாட்டுமுறையும்படுகதையும்பல்பொருளும்
ஈட்டியதீயுமிருவிசும்பும்—கேட்ட
மனுவுஞ்சுருதிமறைநான்குமாயன்
தனமாயையிற்பட்டதற்பு. (எசு)

தற்பென்னைத்தானறியானேலுந், தடங்கடலைக்
கற்கொண்டுதூர்த்தகடல்வண்ணன்—எற்கொண்ட
வெவ்வினையுநீங்கவிலங்காமனம்வைத்தான்
எவ்வினையுமாயுமாற்கண்டு. (எஎ)

கண்டுவணங்கினார்க்கென்னுங்கொல், காமனுடல்
கொண்டதவத்தாற்குமையுணர்த்த—வண்டலம்பும்
தாரலங்கல்நீண்முடியான்றன்பெயரேகேட்டிருந், தங்
காரலங்கலானமையாலாய்ந்து. (எஅ)

ஆய்ந்துகொண்டாதிப்பெருமானை, யன்பினால்
வாய்ந்தமனத்திருத்தவல்லார்கள்—ஏய்ந்ததம்
மெய்குந்தமாகவிரும்புவரோ, தாமுந்தம்
வைகுந்தங்காண்பான்விரைந்து. (எகூ)

விரைந்தடைமின்மேலொருநாள்வெள்ளம்பரக்கக்
கரந்துலகங்காத்தளித்தகண்ணன்—பரந்துலகம்
பாடின * வாடினகேட்டுப், படுநரகம்
வீடினவாசற்கதவு. (அ0)

கதவுமனமென்றுங்காணலாமென்றும்
குதையும்வினையாவிதீர்ந்தேன்—விதையாக
நற்றமிழைவித்தியென்னுள்ளத்தைநீவிளைத்தாய்
கற்றமொழியாகிக்கலந்து. (அக)

கலந்தானென் † னுள்ளத்துக்காமவேள்தாதை
நலந்தானுமீதொப்பதுண்டே—அலர்ந்தலர்கள்
இட்டேத்துமீசனுநான்முகனு, மென்றிவர்கள்
விட்டேத்தமாட்டாதவேந்து. (அஉ)

வேந்தராய்விண்ணவராய்விண்ணாகித்தண்ணளியாய்
பாந்தராய்மாதாய்மற்றெல்லாமாய்ச்—சார்ந்தவர்க்குத்
தன்னாற்றானேமியான்மால்வண்ணன்றான்கொடுக்கும்
பின்னாற்றான்செய்யும்பிதிர். (அங)

பிதிருமனமிலேன்பிஞ்ஞகன்றன்னோ
டெதிர்வனவனெனக்குநேரான்—அதிரும்
கழற்காலமன்னனையேகண்ணனையே, நாளும்
தொழக்காதல்பூண்டேன்றொழில். (அச)

---

* "வாடினர்" எனவுமுண்டு. † "உள்ளத்தை" எனவுமடும்.

தொழிலெனக்குத்தொல்லைமால்தன்னாமமேத்தப்
பொழுதெனக்குமற்றதுவேபோது—கழிசினத்த
வல்லாளன்வானரக்கோன்வாலிமதனழித்த
வில்லாளனெஞ்சத்துளன். (௮௫)

உளன்கண்டாய்நன்னெஞ்சேயுத்தமனென்றும்
உளன்கண்டா, யுள்ளுவாருள்ளத்—துளன்கண்டாய்,
தன்னொப்பான்றானாயுளன்காண்டமியேற்கும்
என்னொப்பார்க்கீசனிமை. (௮௬)

இமயப்பெருமலைபோலிந்திரனார்க்கிட்ட
சமையவிருந்துண்டார்காப்பார்—சமயங்கள்
கண்டானவைகாப்பான்கார்க்கண்டனான்முகனோ
டுண்டானுலகோடுயிர். (௮௭)

உயிர்கொண்டுடலொழியவோடும்போதோடி
அயர்வென்றதீர்ப்பான்பெயர்பாடிச்—செயல்தீரச்
சிந்தித்துவாழ்வாரேவாழ்வார், சிறுசமயப்
பந்தனையார்வாழ்வேற்பழுது. (௮௮)

பழுதாகாதொன்றறிந்தேன்பாற்கடலான்பாதம்
வழுவாவகைநினைந்துவைகல்—தொழுவாரைக்,
கண்டிறைஞ்சிவாழ்வார்கலந்தவினைகெடுத்து
விண்டிறந்துவீற்றிருப்பார்மிக்கு. (௮௯)

வீற்றிருந்துவிண்ணாளவேண்டுவார், வேங்கடத்தான்
பாற்றிருந்துவைத்தாரேபன்மலர்கள்—மேற்றிருந்து
வாழ்வார்வருமதிபார்த்தன்பினராய், மற்றவற்கே
தாழ்வாயிருப்பார்தமர். (௯௰)

தமராவார்யாவர்க்குந்தாமரைமேலாற்கும்
அமரர்க்குமாடரவார்த்தாற்கும்—அமரர்கள்
தாட்டாமரைமலர்களிட்டிறைஞ்சி, மால்வண்ணன்
தாட்டாமரையடைவோமென்று. (௯௧)

என்றுமறந்தறியேனென்னெஞ்சத்தேவைத்து
நின்றுமிருந்துநெடுமாலை—என்றும்
திருவிருந்தமார்பன்சிரீதரனுக்காளாய்க்
கருவிருந்தநாண்முதலாக்காப்பு. (௯௨)

காப்புமறந்தறியேன்கண்ணனேயென்றிருப்பன்
ஆப்பங்கொழியவும்பல்லுயிர்க்கும்—ஆக்கை
கொடுத்தளித்தகோனேகுணப்பரனே, யுன்னை
விடத்துணியார்மெய்தெளிந்தார்தாம். (கூங)

மெய்தெளிந்தாரென்செய்யார்வேருனார்நீருகக்
கைதெளிந்துகாட்டிக்களப்படுத்துப்—பைதெளிந்த
பாம்பினணையாயருளாயடியேற்கு
வேம்புங்கறியாகுமேன்று. (கூச)

என்றேனடிமையிழிந்தேன்பிறப்பிடும்பை
ஆன்றேனமரர்க்கமராமை—ஆன்றேன்
கடனாடுமண்ணாடுங்கைவிட்டு, மேலை
இடனாடுகாணவினி. (கூரு)

* இனியறிந்தேனீசற்குநான்முகற்குந்தெய்வம்
இனியறிந்தேனெம்பெருமானுன்னை—இனியறிந்தேன்
காரணனீகற்றவைநீகற்பவைநீ, நற்கிரிசை
நாரணனீநன்கறிந்தேனான். (கூசு)

திருமழிசையாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

நான்முகன்வாழ்த்திவைமேல்காணயெனக்குமனக்கேதம்சேயன்கதவுதமர் பொய்.

நான்முகன்திருவந்தாதி முற்றிற்று.

---

ஆ திருவந்தாதி - ச - க்குப் பாசுரம் - நகூசு.





ஸ்ரீ











ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ.

மயர்வறமதிநலமருளப்பெற்ற

ப்ரபந்நஜநகூடஸ்தரான

நம்மாழ்வாரருளிச்செய்த

ப்ரபந்தங்கள் நான்கனுள்

முதலாவதாய், ருக்வேதஸாரமான

# திருவிருத்தம்.

## தனியன்

கிடாம்பியாச்சானருளிச்செய்தது.

கருவிருத்தக்குழிநீத்தபின்காமக்கடுங்குழிவீழ்ந்
தொருவிருத்தம்புக்குழலுறுவீருயிரின்பொருள்கட்
கொருவிருத்தம்புகுதாமற்குருகையர்கோனுரைத்த
திருவிருத்தத்தோரடிகற்றிரீர்திருநாட்டகத்தே.

கல்யாணிராகம் - ரூபகதாளம்.

* பொய்ந்நின்றஞானமும்பொல்லாவொழுக்குமழுக்குடம்பும்
இந்நின்றநீர்மையினியாமுறாமை, யுயிரளிப்பான்
எந்நின்றயோனியுமாய்ப்பிறந்தாயிமையோர்தலைவா
மெய்ந்நின்றுகேட்டருளா, யடியேன்செய்யும்விண்ணப்பமே. (க)

செழுநீர்த்தடத்துக்கயல்மிளிர்ந்தாலொப்பச், சேயரிக்கண்
அழுநீர்துளும்பவலமருகின்றன, வாழியரோ
முழுநீர்முகில்வண்ணன்கண்ணன்விண்ணாட்டவர்மூதுவராம்
தொழுநீரிணையடிக்கே, யன்புசூட்டியசூழ்குழற்கே. (உ)

குழற்கோவலர்மடப்பாவையும்மண்மகளுந், திருவும்
நிழற்போல்வனர்கண்டுநிற்குங்கொல்மீளுங்கொல், தண்ணந்துழாய்
அழற்போலடுஞ்சக்கரத்தண்ணல்விண்ணோர்தொழக்கடவும்
தழற்போல்சினத்த, வப்புள்ளின்பின்போனதனிநெஞ்சமே. (ங)

தனிநெஞ்சமுன்னவர்புள்ளைகவர்ந்தது, தண்ணந்துழாய்க்
கினிநெஞ்சமிங்குக்கவர்வதுயாமிலம், நீநடுவே
முனிவஞ்சப்பேய்ச்சிமுலைசுவைத்தான்முடிசூடுதுழாய்ப்
பனிநஞ்சமாருதமே, யெம்மதாவிபனிப்பியல்பே. (௪)

பனிப்பியல்வாகவுடையதண்வாடையிக்காலமிவ்வூர்
பனிப்பியல்வெல்லாந்தவிர்ந்தெரிவீசு, மந்தண்ணந்துழாய்
பனிப்புயல்சோருந்தடங்கண்ணிமாமைத்திறத்துக்கொலாம்
பனிப்புயல்வண்ணன், செங்கோலொருநான்றுதடாவியதே. (௫)

தடாவியவம்புமுரிந்தசிலைகளும்போகவிட்டுக்
கடாயனகொண்டொல்கும்வல்லியீதேனு, மசுரர்மங்கக்
கடாவியவேகப்பறவையின்பாகன்மதனசெங்கோல்
நடாவியகூற்றங்கண்டீருயிர்காமின்கள்ஞாலத்துள்ளே. (௬)

ஞாலம்பனிப்பச்செறுத்து, நன்னீரிட்டுக்கால்சிதைந்து
நீலவல்லேறுபொராநின்றவானமிது, திருமால்
கோலஞ்சுமந்துபிரிந்தார்கொடுமைகுழறுதண்பூங்
காலங்கொலோவறியேன், வினையாட்டியேன்காண்கின்றவே. (௭)

காண்கின்றனகளுங்கேட்கின்றனகளுங்காணி, லிந்நாள்
பாண்குன்றநாடர்பயில்கின்றன, யிதெல்லாமறிந்தோம்
மாண்குன்றமேந்தித்தண்மாமலைவேங்கடத்தும்பர்நம்பும்
சேண்குன்றஞ்சென்று, பொருள்படைப்பான்கற்றதிண்ணனவே. (௮)

திண்பூஞ்சுடர்நுதிநேமியஞ்செல்வர், விண்ணாடனைய
வண்பூமணிவல்லியாரேபிரிபவர்தா, மிவையோ
கண்பூங்கமலங்கருஞ்சுடராடிவெண்முத்தரும்பி
வண்பூங்குவளை, மடமான்விழிக்கின்றமாயிதழே. (௯)

மாயோன்வடதிருவேங்கடநாட, வல்லிக்கொடிகாள்
நோயோவுரைக்கிலுங்கேட்கின்றிலீருரையீர், நுமது
வாயோவதுவன்றிவல்வினையேனுங்கிளியுமெள்கும்
ஆயோவடுந்தொண்டையோ, வறையோவிதறிவரிதே. (௧0)

அரியனயாமின்றுகாண்கின்றன, கண்ணன்விண்ணனையாய்
பெரியனகாதம்பொருட்கோபிரிவென, ஞாலமெய்தற்
குரியனவொண்முத்தும்பைம்பொன்னுமேந்தியோரோகுடங்கைப்
பெரியனகெண்டைக்குல, மிவையோவந்துபேர்கின்றவே. (௧௧)

பேர்கின்றதுமணிமாமைபிறங்கியள்ளற்பயலை
ஊர்கின்றதுகங்குலூழிகளே, யிதெல்லாமினவே
ஈர்கின்றசக்கரத்தெம்பெருமான்கண்ணன்றண்ணந்துழாய்ச்
சார்கின்றநன்னெஞ்சினார், தந்துபோனதனிவளமே. (௧௨)

தனிவளர்செங்கோல்நடாவு, தழல்வாயரசவியப்
பனிவளர்செங்கோலிருள்வீற்றிருந்தது, பார்முழுதும்
துனிவளர்காதல்துழாயைத்துழாவுதண்வாடைதடிந்
தினிவளைகாப்பவரா, ரெனையூழிகளீர்வனவே. (௧௩)

ஈர்வனவேலுமஞ்சேலு, முயிர்மேல்மிளிர்ந்திவையோ
பேர்வனவோவல்லதெய்வநல்வேள்கணைப்பேரொளியே
சோர்வனநீலச்சுடர்விடுமேனியம்மான்விசும்பூர்
தேர்வன, தெய்வமந்நீரகண்ணோவிச்செழுங்கயலே. (௧௪)

கயலோநுமகண்களென்றுகளிறுவினவிநிற்றீர்
அயலோரறியிலுமீதென்னவார்த்தை, கடல்கவர்ந்த
புயலோடுலாங்கொண்டல்வண்ணன்புனவேங்கடத்தெம்மொடும்
பயலோவிலீர், கொல்லைகாக்கின்றநாளும்பலபலவே. (௧௫)

பலபலவூழிகளாயிடு, மன்றியோர்நாழிகையைப்
பலபலகூறிட்டகூறாயிடுங், கண்ணன்விண்ணனையாய்ப்
பலபலநாளன்பர்கூடிலுநீங்கிலும்யாமெலிதும்
பலபலசூழலுடைத், தம்மவாழியிப்பாயிருளே. (௧௬)

இருள்விரிந்தாலன்ன, மாநீர்த்திரைகொண்டுவாழியரோ
இருள்பிரிந்தாரன்பர்தேர்வழிதூர, லரவணைமேல்
இருள்விரிநீலக்கருநாயிறுசுடர்கால்வதுபோல்
இருள்விரிசோதிப், பெருமானுறையுமெறிகடலே. (௧௭)

கடல்கொண்டெழுந்ததுவான, மவ்வானத்தையன்றிச்சென்று
கடல்கொண்டொழிந்தவதனாலிது, கண்ணன்மண்ணும்விண்ணும்
கடல்கொண்டெழுந்தவக்காலங்கொலோபுயற்காலங்கொலோ
கடல்கொண்டகண்ணீ, ரருவிசெய்யாநிற்குங்காரிகையே. (௧௮)

காரிகையார்நிறைகாப்பவர்யாரென்றுகார்கொண்டின்னே
மாரிகையேறியறையிடுங்காலத்தும், வாழியரோ
சாரிகைப்புள்ளரந்தண்ணந்துழாயிறைகூயருளார்ச்
சேரிகையேறும், பழியாய்விளைந்ததென்சின்மொழிக்கே. (௧௯)

சின்மொழிநோயோகழிபெருந்தெய்வ, மின்னோயினதென்
றின்மொழிகேட்குமிளந்தெய்வமன்றிது, வேலநின்னீ
என்மொழிகேண்மினென்னம்மனைமீருலகேழுமுண்டான்
சொன்மொழி, மாலையந்தண்ணந்துழாய்கொண்டுசூட்டுமினே. (௨0)

சூட்டுநன்மாலைகடூயனவேந்தி, விண்ணோர்கள்நன்னீர்
ஆட்டியந்தூபந்தராநிற்கவேயங், கோர்மாயையினால்
ஈட்டியவெண்ணெய்தொடுவுண்ணப்போந்திமிலேற்றுவன்கூன்
கோட்டிடையாடினைகூத், தடலாயர்தங்கொம்பினுக்கே. (௨௧)

கொம்பார்தழைகைசிறுநாணெறிவிலம், வேட்டைகொண்டாட்
டம்பார்களிறுவினவுவதையர், புள்ளூருங்கள்வர்
தம்பாரகத்தென்றுமாடாதனதம்மிற்கூடாதன
வம்பார்வினுச்சொல்லவோ, வெம்மைவைத்ததிவ்வான்புனத்தே. உஉ.

புனமோபுனத்தயலேவழிபோகுமருவினையேன்
மனமோமகளிர்நுங்காவல்சொல்லீர், புண்டரீகத்தங்கேழ்
வனமோரனையகண்ணான்கண்ணன்வானாடமருந்தெய்வத்
தினமோரனையீர்களா, யிவையோநும்மியல்புகளே. (உங)

இயல்பாயினவஞ்சநோய்கொண்டுலாவு, மோரோகுடங்கைக்
கயல்பாய்வனபெருநீர்க்கண்கள்தன்னொடுங், குன்றமொன்றால்
புயல்வாயினநிரைகாத்தபுள்ளூர்திகள்ளூருந்துழாய்க்
கொயல்வாய்மலர்மேல்,மனத்தொடென்னுங்கொலெங்கோல்வளைக்கே.

எங்கோல்வளைமுதலாக், கண்ணன்மண்ணும்விண்ணுமளிக்கும்
செங்கோல்வளைவுவிளைவிக்குமால், திறல்சேரமரர்
தங்கோனுடையதங்கோனும்பரொல்லாயவர்க்குந்தங்கோன்
நங்கோனுகக்குந்துழா, யென்செய்யாதினிநானிலத்தே. (உரு)

நானிலம்வாய்க்கொண்டுநன்னீரறமென்றுகோதுகொண்ட
வேனிலஞ்செல்வன்சுவைத்துமிழ்பாலை, கடந்தபொன்னே
கானிலந்தோய்ந்துவிண்ணோர்தொழுங்கண்ணன்வெஃகாவிதம்பூந்
* தேனலஞ்சோலை, யப்பாலதெப்பாலைக்குஞ்சேமத்ததே. (உசு)

சேமஞ்செங்கோனருளே, செருவாருநட்பாகுவரொன்
றேமம்பெறவையஞ்சொல்லுமெய்யே, பண்டெல்லாமறைகூஉய்
யாமங்கடோறெரிவீசுநங்கண்ணனந்தண்ணந்துழாய்த்
தாமம்புனைய, வவ்வாடையிதோவந்துதண்ணென்றதே. (உஎ)

தண்ணந்துழாய்வளைகொள்வதுயாமிழப்போம், நடுவே
வண்ணந்துழாவியோர்வாடையுலாவும், வள்வாயலகால்
புண்ணந்துழாமேபொருநீர்த்திருவரங்காவருளாய்
எண்ணந்துழாவுமிடத், துளவோபண்டுமின்னன்னவே. (உஅ)

இன்னன்னதூதெம்மையாளற்றப்பட்டிரந்தாளிவளென்
றன்னன்னசொல்லாப்பெடையொடும்போய்வரும், நீலமுண்ட
மின்னன்னமேனிப்பெருமானுலகிற்பெண்தூதுசெல்லா
வன்னன்னநீர்மைகொலோ, குடிச்சீர்மையிலன்னங்களே. (உகூ)

அன்னஞ்செல்வீரும்வண்டானஞ்செல்வீருந்தொழுதிரந்தேன்
முன்னஞ்செல்வீர்கள்மறவேன்மினோ, கண்ணன்வைகுந்தனோ
டென்னெஞ்சினாரைக்கண்டாலென்னைச்சொல்லியவரிடைநீர்
இன்னஞ்செல்லீரோ, விதுவோதகவென்றிசைமின்களே. (ங0)

* "தேனிளஞ்சோலை" என்றுரைதலும்பாடம்.

இசைமின்கள்தூதென்றிசைத்தாலிசையில, மென்றலைமேல்
அசைமின்களென்றாலசையுங்கொலா, மம்பொன்மாமணிகள்
திசைமின்மிளிருந்திருவேங்கடத்துவன்றாட்சிமயம்
மிசை, மின்மிளிரியபோவான்வழிக்கொண்டமேகங்களே. (௫௧)

மேகங்களோவுரையீர், திருமால்திருமேனியொக்கும்
யோகங்களுங்களுக்கெவ்வாறுபெற்றீ, ருயிரளிப்பான்
மாகங்களெல்லாந்திரிந்துநன்னீர்கள்சுமந்துநுந்தம்
ஆகங்கணோவ, வருத்துந்தவமாமருள்பெற்றதே. (௫௨)

அருளார்திருச்சக்கரத்தா, லகல்விசும்புந்நிலனும்
இருளார்வினைகெடச்செங்கோல்நடாவுதி, ரீங்கோர்பெண்பால்
பொருளோவெனுமிகழ்வோவிவற்றின்புறத்தாளென்றெண்ணோ
தெருளோமரவணையீ, ரிவள்மாமைசிதைக்கின்றதே. (௫௩)

சிதைக்கின்றதாழியென்றாழியைச்சீறித், தன்சீரடியால்
உதைக்கின்றநாயகந்தன்னொடுமாலே, யுனதுதண்டார்
ததைக்கின்றதண்ணந்துழாயணிவானதுவேமனமாய்ப்
பதைக்கின்றமாதின்றிறத், தறியேன்செயற்பாலதுவே. (௫௪)

பால்வாய்ப்பிறைப்பிள்ளையொக்கலைக்கொண்டு, பகலிழந்த
மேல்பாற்றிசைப்பெண்புலம்புறுமாலை, யுலகளந்த
மால்பாற்றுழாய்க்குமனமுடையார்க்குநல்கிற்றையெல்லாம்
சோல்வான்புகுந், திதுவோர்பனிவாடைதுழாகின்றதே. (௫௫)

துழாநெடுஞ்சூழிருளென்று, தன்றண்டாரதுபெயரா
வெழாநெடுவூழியெழுந்தவிக்காலத்து, மீங்கிவளோ
வழாநெடுந்துன்புற்றளென்றிரங்காரம்மனோவிலங்கைக்
குழாநெடுமாட, மிடித்தபிரானார்கொடுமைகளே. (௫௬)

கொடுங்காற்சிலையர்நிரைகோளுழவர்கொலையில்வெய்ய
கடுங்காவிளைஞர்துடிபடுங்கவ்வத், தருவினையேன்
நெடுங்காலமுங்கண்ணனீண்மலர்ப்பாதம்பரவிப்பெற்ற
தொடுங்காலொசியுமிடை, யிளமான்சென்றசூழ்கடமே. (௫௭)

கடமாயினகள்கழித்துத், தங்கால்வன்மையாற்பலநாள்
தடமாயினபுக்குநீர்நிலைநின்றதவமிதுகொல்
குடமாடியிம்மண்ணும்விண்ணுங்குலுங்கவுலகளந்து
நடமாடியபெருமா, னுருவொத்தனநீலங்களே. (௫௮)

நீலத்தடவரைமேற்புண்டரீகநெடுந்தடங்கள்
போலப், பொலிந்தெமக்கெல்லாவிடத்தவும், பொங்குமுந்நீர்
ஞாலப்பிரான்விசும்புக்கும்பிரான்மற்றுநல்லோர்பிரான்
கோலங்கரியபிரா, னெம்பிரான்கண்ணின்கோலங்களே. (௫௯)

கோலப்பகற்களிறொன்றுகற்புய்யக், குழாம்விரிந்த
நீலக்கங்குற்களிறெல்லாநிறைந்தன, நேரிழையீர்
ஞாலப்பொன்மாதின்மணாளன்றுழாய்நங்கள்சூழ்குழற்கே
ஏலப்புனைந்தென்னைமா, ரெம்மைநோக்குவதென்றுகொலோ. (௪0)

என்றும்புன்வாடையிதுகண்டறிதும், மிவ்வாறுவெம்மை
ஒன்றுமுருவுஞ்சுவடுந்தெரியில, மோங்கசுரர்
பொன்றும்வகைபுள்ளையூர்வானருளருளாதவிந்நாள்
மன்றின்னிறைபழிதூற்றி, நின்றென்னைவன்காற்றடுமே. (௪௧)

வன்காற்றறையவொருங்கேமறிந்துகிடந்தலர்ந்த
மென்காற்கமலத்தடம்போற்பொலிந்தன, மண்ணும்விண்ணும்
என்காற்களவின்மைகாண்மினென்பானொத்துவானிமிர்ந்த
* தன்பாற்பணிந்தவென்பா, லெம்பிரானதடங்கண்களே. (௪௨)

கண்ணுஞ்செந்தாமரைகையுமவையடியோவவையே
வண்ணங்கரியதோர்மால்வரைபோன்று, மதிவிகற்பால்
விண்ணுங்கடந்தும்பரப்பாய்மிக்குமற்றெப்பால்யவர்க்கு
மெண்ணுமிடத்ததுவோ, வெம்பிரானதெழில்நிறமே. (௪௩)

நிறமுயர்கோலமும்பேருமுருவுமிவையிவையென்
றறமுயன்ஞானச்சமயிகள்பேசிலு, மங்கங்கெல்லாம்
உறவுயர்ஞானச்சுடர்விளக்காய்நின்றதன்றியொன்றும்
பெறமுயன்றாரில்லையா, லெம்பிரானபெருமையையே. (௪௪)

பெருங்கேழலார்தம்பெருங்கண்மலர்ப்புண்டரீக, நம்மேல்
ஒருங்கேபிறழவைத்தாரிவ்வகால, மொருவர்நம்போல்
வருங்கேழ்பவருளரோதொல்லைவாழியஞ்சூழ்பிறப்பும்
மருங்கேவரப்பெறுமே, சொல்லுவாழிமடநெஞ்சமே. (௪௫)

மடநெஞ்சமென்றுந்தமதென்று, மோர்கருமங்கருதி
விடநெஞ்சையுற்றார்விடவோவமையுமப்பொன்பெயரோன்
தடநெஞ்சங்கீண்டபிரானார்தமதடிக்கீழ்விடப்போய்த்
திடநெஞ்சமா, யெம்மைநீத்தின்றுதாறுந்திரிகின்றதே. (௪௬)

திரிகின்றதுவடமாருதந்திங்கள்வெந்தீமுகந்து
சொரிகின்றதுவதுவும்மது, கண்ணன்விண்ணூர்தொழவே
சரிகின்றதுசங்கந்தண்ணந்துழாய்க்குவண்ணம்பயலை
விரிகின்றதுமுழுமெய்ய, மென்னுங்கொலென்மெல்லியற்கே. (௪௭)

மெல்லியலாக்கைக்கிருமிக்குருவின்மிளிர்ந்தாங்கே
செல்லியசெல்கைத்துலகையென்காணு, மென்னலுந்தன்னைச்
சொல்லியசூழல்திருமாலவன்கவியாதுகற்றேன்
பல்லியின்சொல்லுஞ்சொல்லாக்கொள்வதோவுண்டுபெண்டுபெண்டே.

* "தன்காற்பணிந்த" என்றுமாயில்வேறுபாடந்தோன்றுகிறது.

Funding: IKS/Tattva Heritage. Digitization: eGangotri.



பண்டும்பலபலவீங்கிருள்காண்டு, மிப்பாயிருள்போல்
கண்டுமறிவதுங்கேட்பதும்யாமிலங், காளவண்ண
வண்டுழாய்ப்பெருமான்மதுசூதனன்தாமோதரன்
உண்டுமுமிழ்ந்துங்கடாய, மண்ணேரன்னவொண்ணுதலே. (௪௯)

ஒண்ணுதல்மாமையொளிபயவாமைவிரைந்துநந்தேர்
நண்ணுதல்வேண்டும்வலவகடாகின்று, தேனவின்ற
விண்முதனாயகனீண்முடிவெண்முத்தவாசிகைத்தாய்
மண்முதல்சேர்வுற், றருவிசெய்யாநிற்குமாமலைக்கே. (௫௦)

மலைகொண்டுமத்தாவரவாற்சுழற்றியமாயப்பிரான்
அலைகண்டுகொண்டவமுதங்கொள்ளாதுகடல், பரதர்
விலைகொண்டுதந்தசங்கமிவைவேரித்துழாய்துணையாத்
துலைகொண்டுதாயங்கிளர்ந்து,கொள்வானொத்தழைக்கின்றதே. (௫௧)

அழைக்குங்கருங்கடல்வெண்டிரைக்கேகொண்டுபோ,யலர்வாய்
மழைக்கண்டமங்கையரவணையேற, மண்மாதர்விண்வாய்
அழைத்துப்புலம்பிமுலைமலைமேல்நின்றுமாறுகளாய்
மழைக்கண்ணநீர், திருமால்கொடியானென்றுவார்கின்றதே. (௫௨)

வாராயினமுலையாளிவள்வானோர்தலைமகனும்
சீராயினதெய்வநன்னோயிது, தெய்வத்தண்ணந்துழாய்த்
தாராயினுந்தழையாயினுந்தண்கொம்பதாயினுங்கீழ்
வேராயினு, நின்றமண்ணாயினுங்கொண்டுவீசுமினே. (௫௩)

வீசுஞ்சிறகாற்பறத்தீர், விண்ணாடுநுங்கட்கெளிது
பேசும்படியன்னபேசியும்போவது, நெய்தொடுவுண்
டேசும்படியன்னசெய்யுமெம்மீசர்விண்ணோர்பிரானார்
மாசின்மலரடிக்கீ, ழெம்மைச்சேர்விக்கும்வண்டுகளே. (௫௪)

வண்டுகளோவம்மி, னீர்ப்பூநிலப்பூமரத்திலொண்பூ
உண்டுகளித்துழல்வீர்க்கொன்றுரைக்கிய, மேனமொன்றாய்
மண்டுகளாடிவைகுந்தமன்னாள்குழல்வாயவிரைபோல்
விண்டுகள்வாரு, மலருளவோநும்வியலிடத்தே. (௫௫)

வியலிடமுண்டபிரானார்விடுத்ததிருவருளால்
உயலிடம்பெற்றுய்ந்தமஞ்சலந்தோழி, யோர்தண்டென்றல்வந்
தயலிடையாருமறிந்திலரம்பூந்துழாயினின்றேன்
புயலுடைநீர்மையினாற்றடவிற்றென்புலன்கலனே. (௫௬)

புலக்குண்டலப்புண்டரீகத்தபோர்க்கெண்டை, வல்லியொன்றால்
விலக்குண்டுலாகின்றுவேல்விழிக்கின்றன, கண்ணன்கையால்
மலக்குண்டமுதஞ்சுரந்தமறிகடல்போன்றவற்றால்
கலக்குண்டநான்றுகண்டா, ரெம்மையாருங்கழறலரே. (௫௭)

கழறலமொன்றேநிலமுழுதாயிற், றொருகழல்போய்
நிழறரவெல்லாவிசும்புநிறைந்தது, நீண்டவண்டத்
துழறலர்ஞானச்சுடர்விளக்காயுயர்ந்தோரையில்லா
வழறலர்தாமரைக்கண்ண, னென்னோவிங்களக்கின்றதே. (௫அ)

அளப்பருந்தன்மையவூழியங்கங்கு, லந்தண்ணந்துழாய்க்
குளப்பெருங்காதலினீளியவாயுள, வோங்குமுந்நீர்
வளப்பெருநாடன்மதுசூதனனென்னும்வல்வினையேன்
தளப்பருநீண்முறுவற், செய்யவாயதடமுலையே. (௫௯)

* முலையோமுழுமுற்றும்போந்தில, மொய்பூங்குழற்குறிய
கலையோவரையில்லைநாவோகுழறுங், கடன்மண்ணெல்லாம்
விலையோவெனமிளிருங்கணிவள்பரமேபெருமான்
மலையோ, திருவேங்கடமென்றுகற்கின்றவாசகமே. (௬௦)

வாசகஞ்செய்வதுநம்பரமே, தொல்லைவானவர்தம்
நாயகனாயகரெல்லாந்தொழுமவன், ஞாலமுற்றும்
வேயகமாயினுஞ்சோராவகையிரண்டேயடியால்
தாயவ, னாய்க்குலமாய்வந்துதோன்றிற்றுநம்மிறையே. (௬௧)

இறையோவிரக்கினுமீங்கோர்பெண்பா, லெனவுமிரங்கா
தறையோவெனநின்றதிருங்கருங்கடல், லீங்கிவள்தன்
நிறையோவினியுன்றிருவருளாலன்றிக்காப்பரிதால்
முறையோ, வரவணைமேற்பள்ளிகொண்டமுகில்வண்ணனே. (௬௨)

வண்ணஞ்சிவந்துளவானாடமருங்குளிர்விழிய
தண்மென்கமலத்தடம்போற்பொலிந்தன, தாமிவையோ
கண்ணன்றிருமால்திருமுகந்தன்னொடுங்காதல்செய்தேற்
கெண்ணம்புகுந், தடியேனொடிக்காலமிருக்கின்றதே. (௬௩)

இருக்கார்மொழியால்நெறியிழுக்காமை, யுலகளந்த
திருத்தாளிணைநிலத்தேவர்வணங்குவர், யாமுமவா
ஒருக்காவினையொடுமெம்மொடுநொந்துகனியின்மையில்
கருக்காய்கடிப்பவர்போல், திருநாமச்சொற்கற்றனமே. (௬௪)

கற்றுப்பிணைமலர்க்கண்ணின்குலம்வென், றோரோகருமம்
முற்றுப்பயின்றுசெவியொடுசாவி, யுலகமெல்லாம்
முற்றும்விழுங்கியுமிழ்ந்தபிரானார்திருவடிக்கீழ்
உற்றுமுறாது, மிளிர்ந்தகண்ணாயெம்மையுண்கின்றவே. (௬௫)

உண்ணாதுறங்காதுணர்வுறுமெத்தனையோகியர்க்கும்
எண்ணாய்மிளிருமியல்வினவா, மெரிநீர்வளிவான்
மண்ணாகியவெம்பெருமான்றனதுவைகுந்தமன்னாள்
கண்ணாயருவினையே, னுயிராயினகாவிகளே. (௬௬)

காவியுநீலமும்வேலுங்கயலும்பலபலவென்
றாவியின்றன்மையளவல்லபாரிப், பசுரைச்செற்ற
மாவியம்புள்வல்லமாதவன்கோவிந்தன்வேங்கடஞ்சேர்
தூவியம்பேடையன்னாள், கண்களாயதுணைமலரே. (௬௭)

மலர்ந்தேயொழிந்திலமாலையுமாலைப்பொன்வாசிகையும்
புலந்தோய்தழைப்பந்தல்தண்டுறநாற்றிப், பொருகடல்சூழ்
நிலந்தாவியவெம்பெருமான்றனதுவைகுந்தமன்னாய்
கலந்தார்வரவெதிர்கொண்டு, வன்கொன்றைகள்கார்த்தனவே. (௬௮)

காரேற்றிருள்செகிலேற்றின்சுடருக்குளைந்து, வெல்வான்
போரேற்றெதிர்ந்ததுபுன்றலைமாலை, புவனியெல்லாம்
நீரேற்றளந்தநெடியபிரானருளாவிடுமே
வாரேற்றிளமுலையாய், வருந்தேலுன்வளைத்திறமே. (௬௯)

வளையாய்த்திருச்சக்கரத்தெங்கள்வானவனார்முடிமேல்
தளைவாய்நறுங்கண்ணித்தண்ணந்துழாய்க்குவண்ணம்பயலை
விளைவான்மிகவந்துநாடிங்களாண்டூழிநிற்கவெம்மை
உளைவான்புகுந், திதுவோர்கங்குலாயிரமூழிகளே. (௭௰)

ஊழிகளாயுலகேழுமுண்டானென்றிலம், பழங்கண்
டாழிகளாம்பழவண்ணமென்றேற், கஃதேகொண்டென்னை
நாழிவளோவென்றுஞாலமுண்டான்வண்ணஞ்சொல்லிற்றென்றும்
தோழிகளோவுரையீ, ரெம்மையம்மனைசூழ்கின்றவே. (௭௧)

சூழ்கின்றகங்குற்சுருங்காவிருளின்கருந்திணும்பைப்
போழ்கின்றதிங்களம்பிள்ளையும்போழ்க, துழாய்மலர்க்கே
தாழ்கின்றநெஞ்சத்தொருதமியாட்டியேன்மாமைக்கின்று
வாழ்கின்றவாறிதுவோ, வந்துதோன்றிற்றுவாலியதே. (௭௨)

வால்வெண்ணிலவுலகாரச்சுரக்கும்வெண்டிங்களென்னும்
பால்விண்சுரவிசுரமுதிர்மாலை, பருதிவட்டம்
போலுஞ்சுடரடலாழிப்பிரான்பொழிலேழளிக்கும்
சால்பின்றகைமைகொலாந், தமியாட்டிதளர்ந்ததுவே. (௭௩)

தளர்ந்துமுறிந்தும்வருதிரைப்பாயிற், றிருநெடுங்கண்
வளர்ந்துமறிவுற்றும்வையம்விழுங்கியு, மால்வரையைக்
கிளர்ந்துமறிதரக்கீண்டெடுத்தான்முடிசூடுதுழாய்
அளைந்துண்சிறுபசுந்தென்ற, லந்தோவந்துலாகின்றதே. (௭௪)

உலாகின்றகெண்டையொளியம், பெம்மாவியையூடுருவக்
குலாகின்றவெஞ்சிலைவாண்முகத்தீர், குனிசங்கிடறிப்
புலாகின்றவேலைப்புணரியம்பள்ளியம்மானடியார்
நிலாகின்றவைகுந்தமோ, வையமோநுந்நிலையிடமே. (௭௫)

இடம்போய்விரிந்திவ்வுலகளந்தானெழிலார்தண்டுழாய்
வடம்போதினையுமட நெஞ்சமே, நங்கள்வெள்வளைக்கே
விடம்போல்விரிதலிதுவியப்பேவியன்றுமனையின்
தடம்போதொடுங்க, மெல்லாம்பலலர்விக்கும்வெண்டிங்களே. (எசு)

திங்களம்பிள்ளைபுலம்பத்தன்செங்கோலரசுபட்ட
செங்களம்பற்றிநின்றெள்குபுன்மாலை, தென்பாலிலங்கை
வெங்களஞ்செய்தநம்விண்ணோர்பிரானார்துழாய்துணையா
நங்களைமாமைகொள்வான், வந்துதோன்றிநலிகின்றதே. (எஎ)

நலியுநரகனைவீட்டிற்றும், வாணன்திண்டோள்துணித்த
வலியும்பெருமையும்யான்சொல்லுநீர்த்தல்ல, மைவரைபோல்
பொலியுமுருவிற்பிரானார்புனைபூந்துழாய்மலர்க்கே
மெலியுமடநெஞ்சினார், தந்துபோயினவேதனையே. (எஅ)

வேதனைவெண்புரிநூலனை, விண்ணோர் * பரவநின்ற
நாதனைஞாலம்விழுங்குமநாதனை, ஞாலந்தத்தும்
பாதனைப்பாற்கடற்பாம்பணைமேற்பள்ளிகொண்டருளும்
சீதனையேதொழுவார், விண்ணுளாரினுஞ்சீரியரே. (எகூ)

சீரரசாண்டுதன்செங்கோல்சிலநாட்செலீஇக்கழிந்த
பாரரசொத்துமறைந்ததுஞாயிறு, பாரளந்த
பேரரசேயெம்விசும்பரசேயெம்மைநீத்துவஞ்சித்
தோரரசேயருளா, யிருளாய்வந்துறுகின்றதே. (அ0)

உறுகின்றகன்மங்கள்மேலனவோர்கிலரா, யிவளைப்
பெறுகின்றதாயர்மெய்நொந்துபெறார்கொல், துழாய்குழல்வாய்
துறுகின்றிலர்தொல்லைவேங்கடமாட்டவுஞ்சூழ்கின்றிலர்
இறுகின்றதாலிவளாக, மெல்லாவியெரிகொள்ளவே. (அக)

எரிகொள்செஞ்ஞாயிறிரண்டுடனே, யுதயமலைவாய்
விரிகின்றவண்ணத்தவெம்பெருமான்கண்கள், மீண்டவற்றுள்
எரிகொள்செந்தீவீழசுரரைப்போலவெம்போலியர்க்கும்
விரிவசொல்லீரிதுவோ, வையமுற்றும்விளரியதே. (அஉ)

விளரிக்குரலன்றின்மென்பெடைமேகின்றமுன்றிற்பெண்ணை
முளரிக்குரம்பையிதுவிதுவாக, முகில்வண்ணன்பேர்
கிளரிக்கிளரிப்பிதற்றுமெல்லாவியுநைவுமெல்லாம்
தளரிற்கொலோவறியே, னுய்யலாவதித்தையலுக்கே. (அங)

தையலநல்லார்கள்குழாங்கள்குழியகுழுவினுள்ளும்
மையனல்லார்கள்குழியகுழுவினு, மங்கங்கெல்லாம்
கையபொன்னாழிவெண்சங்கொடுங்காண்பானவாவுவனான்
மையவண்ணாமணியே, முத்தமேயென்றன்மாணிக்கமே. (அச)

* "பரவுகின்ற" என்றும்பாடம்.

மாணிக்கங்கொண்டுகுரங்கெறிவொத்திருளோடுமுட்டி
ஆணிப்பொன்னன்னசுடர்படுமாலை, யுலகளந்த
மாணிக்கமேமரதகமேமற்றொப்பாரையில்லா
ஆணிப்பொன்னே, யடியேனடியாவியடைக்கலமே. (அரு)

அடைக்கலத்தோங்குகமலத்தலரயன்சென்னியென்னும்
முடைக்கலத்துண்முன்னரனுக்குநீக்கியை, யாழிசங்கம்
படைக்கலமேந்தியைவெண்ணெய்க்கன்றாய்ச்சிவன்றாம்புகளால்
புடைக்கலந்தானையெம்மானை, யென்சொல்லிப்புலம்புவனே. (அசு)

புலம்புங்கனைகுரல்போழ்வாயவன்றிலும்பூங்கழிபாய்ந்
தலம்புங்கனைகுரற்சூழ்திரையாழியு, மாங்கவையின்
வலம்புள்ளதுநலம்பாடுமிதுகுற்றமாகவையம்
சிலம்பும்படிசெய்வதே, திருமாலித்திருவினையே. (அஎ)

திருமாலுருவொக்குமேரு, வம்மேருவிற்செஞ்சுடரோன்
திருமால்திருக்கைத்திருச்சக்கரமொக்கு, மன்னகண்டும்
திருமாலுருவோடவன்சின்னமேபிதற்றாநிற்பதோர்
திருமால்தலைக்கொண்டநங்கட், கெங்கேவருந்தீவினையே. (அஅ)

தீவினைக்கருநஞ்சைநல்வினைக்கின்னமுதத்தினைப்
பூவினைமேவியதேவிமணாளனைப், புன்மையெள்கா
தாவினைமேய்க்கும்வல்லாயனையன்றுலகீரடியால்
தாவினவேற்றையெம்மானை, யெஞ்ஞான்றுதலைப்பெய்வனே. (அகூ)

தலைப்பெய்துயானுன்திருவடிச்சூடுந்தகைமையினால்
நிலைப்பெய்தவாக்கைக்குநோற்றவிம்மாயமு, மாயஞ்செவ்வே
நிலைப்பெய்திலாதநிலைமையுங்காண்டோறசுரர்குழாம்
தொலைப்பெய்தநேமியெந்தாய், தொல்லையூழிசுருங்கலதே. (கூ0)

சுருங்குறிவெண்ணெய்தொடுவுண்டகள்வனை, வையமுற்றும்
ஒருங்குறவுண்டபெருவயிற்றாளனை, மாவலிமாட்
டிருங்குறளாகியிசையவோர்மூவடிவேண்டிச்சென்ற
பெருங்கிறியானையல்லா, லடியேனெஞ்சம்பேணலதே. (கூக)

பேணலமில்லாவரக்கர்முந்நீர்ப்பெரும்பதிவாய்
நீணகர்நீளெரிவைத்தருளாயென்று, நின்னைவிண்ணோர்
தாணிலந்தோய்ந்துதொழுவர்நின்மூர்த்திபல்கூற்றிலொன்றும்
காணலுமாங்கொலென்றே, வைகல்மாலையுங்காலையுமே. (கூஉ)

காலைவெய்யோற்குமுன்னோட்டுக்கொடுத்தகங்குற்குறும்பர்
மாலைவெய்யோன்படவையகம்பாவுவ, ரன்னகண்டும்
காலைநன்ஞானத்துறைபடிந்தாடிக்கண்போதுசெய்து
மாலைநன்னாவிற்கொள்வார், நினையாரவன்மைப்படியே. (கூங)

மைப்படிமேனியுஞ்செந்தாமரைக்கண்ணும்வைதிகரே
மெய்ப்படியாலுன்றிருவடிச்சூட்டுந்தகைமையினர்
எப்படியூராமிலைக்கக்குருட்டாமிலைக்குமென்னும்
அப்படியானுஞ்சொன்னே, னடியேன்மற்றியாதென்பனே. (௯௪)

யாதானுமோராக்கையிற்புக், கங்காப்புண்டுமாப்பவிழ்ந்து
மூதாவியிற்றடுமாறுமுயிர்முன்னமே, யதனால்
யாதானும்பற்றிநீங்கும்விரதத்தைநல்விடுசெய்யும்
மாதாவினைப்பிதுவைத், திருமாலைவணங்குவனே. (௯௫)

வணங்குந்துறைகள்பலபலவாக்கி, மதிவிகற்பால்
பிணங்குஞ்சமயம்பலபலவாக்கி, யவையவைதோ
றணங்கும்பலபலவாக்கிநின்மூர்த்திபரப்பிவைத்தாய்
இணங்குநின்னோரையில்லாய், நின்கண்வேட்கையெழுவிப்பனே. ௯௬

எழுவதுமீண்டேபடுவதும்பட், டேனையூழிகள்போய்க்
கழிவதுங்கண்டுகண்டெள்கலல்லா, லிமையோர்கள்குழாம்
தொழுவதுஞ்சூழ்வதுஞ்செய்தொல்லைமாலைக்கண்ணாரக்கண்டு
கழிவதோர்காதலுற்றார்க்கு, முண்டோகண்கள்துஞ்சுதலே. (௯௭)

* துஞ்சாமுனிவருமல்லாதவருந்தொடரநின்ற
எஞ்சாப்பிறவியிடர்கடிவா, னிமையோர்தமக்கும்
தஞ்சார்விலாததனிப்பெருமூர்த்திதன்மாயஞ்செவ்வே
நெஞ்சால்நினைப்பரிதால், வெண்ணெயூணென்னுமீனச்சொல்லே. ()

* ஈனச்சொல்லாயினுமாக, வெறிதிரைவையமுற்றும்
ஏனத்துருவாயிடந்தபிரா, னிருங்கற்பகஞ்சேர்
வானத்தவர்க்குமல்லாதவர்க்குமற்றெல்லாயவர்க்கும்
ஞானப்பிரானையல்லாலில்லை, நான்கண்டநல்லதுவே. (௯௯)

* நல்லார்நவில்குருகூர்நகரான், திருமால்திருப்பேர்
வல்லாரடிக்கண்ணிசூடிய, மாறன்விண்ணப்பஞ்செய்த
சொல்லார்தொடையலிந்நூறும்வல்லாரழுந்தார்பிறப்பாம்
பொல்லாவருவினை, மாயவன்சேற்றள்ளற்பொய்நிலத்தே. (௧00)

நம்மாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

பொய்யரிசூட்டிசையென்றும்மலைவாசகமுழியுஅசுருங்குசெக்கர்.

திருவிருத்தம் முற்றும்.

---

ஆ. திருவந்தாதி - ௪ - க்குப் பாசுரம் - ௩௯௯.

திருவிருத்தம் - ௧00.



ஸ்ரீ







ஸ்ரீமதேராமாநுஜாயநம:

மயர்வறமதிநலமருளப்பெற்ற
ப்ரபந்நஜநகூடஸ்தரான
நம்மாழ்வாரருளிச்செய்த
ப்ரபந்தங்கள் நான்கனுள்
இரண்டாவதாய், யஜுர்வேதஸாரமான

# திருவாசிரியம்.

## தனியன்

அருளாளப்பெருமாளெம்பெருமானாருளிச்செய்தது.

கலிவிருத்தம்.

காசினியோர்தாம்வாழக்கலியுகத்தேவந்துதித்து
ஆசிரியப்பாவதனாலரு * மறைநூல்விரித்தானைத்
தேசிகனைப்பராங்குசனைத்திகழ்வகுளத்தாரானை
மாசடையாமனத்துவைத்துமறவாமல் † வாழ்த்துவனே.

தேசியராகம் - ஆதிதாளம்.

செக்கர்மாமுகிலுடுத்துமிக்கசெஞ்சுடர்ப்
பரிதிசூடி, யஞ்சுடர்மதியம்பூண்டு
பலசுடர்புனைந்தபவளச்செவ்வாய்
திகழ்பசுஞ்சோதிமரதகக்குன்றம்
கடலோன்கைமிசைக்கண்வளர்வதுபோல்
பீதகவாடை-முடி-பூண்முதலா
மேதகுபல்கலனணிந்து, சோதி
வாயவுங்கண்ணவுஞ்சிவப்ப, மீதிட்டுப்
பச்சைமேனிமிகப்பகைப்ப

* "மறையைவிரித்தானை" என்றும் பாடங்காண்கிறோம்.
† "வாழ்த்துதுமே" எனலுமடும்.

நச்சுவினைக்கவர்தலையரவினமளியேறி
யெறிகடனடுவுளறிதுயிலமர்ந்து
சிவனயனிந்திரனிவர்முதலனைத்தோர்
தெய்வக்குழாங்கள்கைதொழக்கிடந்த
தாமரையுந்திதனிப்பெருநாயக
மூவுலகளந்தசேவடியோயே. (௧)

உலகுபடைத்துண்டவெந்தை, யறைகழல்
சுடர்ப்பூந்தாமரைசூடுதற், கவாவா
ருயிருருகியுக்கநேரியகாத
லன்பிலன்பின்றேற, லமுத
வெள்ளத்தானுஞ்சிறப்புவிட், டொருபொருட்
கசைவோரசைக, திருவொடுமருவிய
வியற்கை, மாயாப்பெருவிறலுலகம்
மூன்றினொடுநல்வீடுபெறினும்
கொள்வதெண்ணுமோதெள்ளியோர்குறிப்பே. (௨)

குறிப்பிற்கொண்டுநெறிப்பட, வுலகம்
மூன்றுடன்வணங்குதோன்றுபுகழாணை
மெய்பெறநடாயதெய்வமூவரில்
முதல்வனாகிச், சுடர்விளங்ககலத்து
வரைபுரைதிரைபொருபெருவரைவெருவுற
வுருமுரலொலிமலிநளிர்கடற்படவர
வரசுடற்றடவரைசுழற்றிய, தனிமாத்
தெய்வத்தடியவர்க்கினிநாமாளாகவே
இசையுங்கொ, லூழிதோறூழியோவாதே. (௩)

ஊழிதோறூழியோவாதுவாழிய
வென்று, யாந்தொழவிசையுங்கொல்
யாவகையுலகமும்யாவருமில்லா
மேல்வருபெரும்பாழ்காலத், திரும்பொருட்
கெல்லாமரும்பெறல்தனிவித், தொருதா
னாகித்தெய்வநான்முகக்கொழுமுளை
யீன்று, முக்கணீசனொடுதேவுபலநுதலி
மூவுலகும்விளைத்தவுந்தி
மாயக்கடவுண்மாமுதலடியே. (௪)

மாமுதலடிப்போதொன்றுகவிழ்த்தலர்த்தி
மண்முழுதுமகப்படுத், தொண்சுடரடிப்போ
தொன்றுவிண்செலீஇ, நான்முகப்புத்தேள்
நாடுவியந்துவப்ப, வானவர்முறைமுறை
வழிபடநெறீஇத், தாமரைக்காடு
மலர்க்கண்ணொடுகனிவாயுடையது

மா, யிருநாயிருபிரமலர்ந்தன்ன
கற்பகக்காவுபற்பலவன்ன
முடிதோளாயிரந்தழைத்த
நெடியோய்க்கல்லதடியதோவுலகே. (ரு)

ஓஓ உலகினதியல்பெ, யீன்றோளிருக்க
மணைநீராட்டிப், படைத்திடந்துண்டுமிழ்ந்
தளந்து, தேர்ந்துலகளிக்குமுதற்பெருங்
கடவுணிற்பப், புடைப்பலதானறி
தெய்வம்பேணுதற், றனாது
புல்லறிவாண்மைபொருந்தக்காட்டிக்
கொல்வனமுதலாவல்லனமுயலு
மினையசெய்கையின்புதுன்பளீஇ
தொன்மாமாயப்பிறவியுணீங்காப்
பன்மாமாயத்தழுந்துமாநளிர்ந்தே. (சு)

* நளிர்மதிச்சடையனுநான்முகக்கடவுளும்
தளிரொளியிமையவர்தலைவனுமுதலா
யாவகையுலகமும்யாவருமகப்பட
நிலநீர்தீகால்சுடரிருவிசும்பும்
மலர்சுடர்பிறவுஞ்சிறிதுடன்மயங்க
வொருபொருட்புறப்பாடின்றிமுழுவது
மகப்படக்கரந், தோராலிலைச்சேர்ந்தவெம்
பெருமாமாயனையல்ல
தொருமாதெய்வமற்றுடையமோயாமே. (எ)

நம்மாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

செக்கருலகுகுதிப்பூழிமாமுதலோஓவுலகுளிர்முயற்றி.

திருவாசிரியம் முற்றிற்று.

---

ஆ திருவந்தாதி - ௨ - க்கு - பாசுரம் - ௲௬.

திருவிருத்தம் - ௱௦௦.—திருவாசிரியம் -எ.



ஸ்ரீ







ஸ்ரீமதேராமாநுஜாயநம꞉.

மயர்வறமதிநலமருளப்பெற்ற

ப்ரபந்நஜநகூடஸ்தரான

நம்மாழ்வாரருளிச்செய்த

ப்ரபந்தங்கள் நான்கனுள்

மூன்றாவதாய், அதர்வணவேதஸாரமான

# பெரியதிருவந்தாதி.

தனியன்

எம்பெருமானாரருளிச்செய்தது.

நேரிசைவெண்பா.

முந்துற்றநெஞ்சேமுயற்றிதரித்துரைத்து
வந்தித்துவாயாரவாழ்த்தி—சந்தம்
முருகூருஞ்சோலைசூழ்மொய்பூம்பொருநல்
குருகூரன்மாறன்பேர்கூறு.

செஞ்சுருட்டிராகம் - ரூபகதாளம்.

*முயற்றிசுமந்தெழுந்துமுந்துற்றநெஞ்சே
இயற்றுவாயெம்மொடுநீகூடி—நயப்புடைய
நாவீன்றொடைகிளவியுட்பொதிவோநற்பூவைப்
பூவீன்றவண்ணன்புகழ். (க)

புகழ்வோம்பழிப்போம்புகழோம்பழியோம்
இகழ்வோமதிப்போமதியோம்—இகழோம், மற்
றெங்கண்மாற்செங்கண்மாற்சிறனீதீவினையோம்
எங்கண்மாற்கண்டாயிவை. (உ)

இவையன்றேநல்லவிவையன்றேதீய
இவையென்றிவையறிவனேனும்—இவையெல்லாம்
என்னாலடைப்புநீக்கொண்ணாதிறையவனே
என்னாற்செயற்பாலதென். (௩)

என்னின்மிகுபுகழார்யாவரே, பின்னையுமற்
றெண்ணின்மிகுபுகழேன்யானல்லால்—அன்ன
கருஞ்சோதிகண்ணன்கடற்புரையுஞ், சீலப்
பெருஞ்சோதிக்கென்னெஞ்சாட்பெற்று. (௪)

பெற்றதாய்நீயேபிறப்பித்ததந்தைநீ
மற்றையாராவாருநீபேசில்—எற்றேயோ
மாய்மாமாயவளைமாயமுலைவாய்வைத்த
நீயம்மாகாட்டுநெறி. (௫)

நெறிகாட்டிநீக்குதியோ, நின்பாற்கருமா
முறிமேனிகாட்டுதியோ, மேனாள்—அறியோமை
என்செய்வானெண்ணினாய்கண்ணனே, யீதுரையாய்
என்செய்தாலென்படோம்யாம். (௬)

யாமேயருவினையோஞ்சேயோ, மென்னெஞ்சினார்
தாமேயணுக்கராய்ச்சார்ந்தொழிந்தார்—பூமேய
செம்மாதைநின்மார்பிற்சேர்வித்துப், பாரிடந்த
அம்மாநின்பாதத்தருகு. (௭)

அருகுஞ்சுவடுந்தெரிவுணரோ, மன்பே
பெருகுமிகவிதுவென்பேசீர்—பருகலாம்
பண்புடையீர்பாரளந்தீர்பாவியேங்கண்காண்பரிய
நுண்புடையீர்நும்மைநுமக்கு. (௮)

நுமக்கடியோமென்றென்றுநொந்துரைத், தென்மாலார்
தமக்கவர்தாஞ்சார்வரியரானால்—எமக்கினி
யாதானுமாகிடுகாணெஞ்சே, யவர்திறத்தே
யாதானுஞ்சிந்தித்திரு. (௯)

இருநால்வரீரைந்தின்மேலொருவ, ரெட்டோ
டொருநால்வரோரிருவரல்லால்—திருமாற்கு
யாமார்வணக்கமாரேபாவநன்னெஞ்சே
நாமாமிகவுடையோம்நாழ். (௧௰)

நாழாலமர்முயன்றவல்லரக்கனின்னுயிரை
வாழாவகைவலிதனின்வலியே—ஆழாத
பாருநீவானுநீகாலுநீதீயுநீ
நீருநீயாய்நின்றநீ. (௧௧)

நீயன்றேயாழ்துயரில்வீழ்விப்பானின்றுழன்றாய்
போயொன்றுசொல்லியென்போநெஞ்சே—நீயென்றும்
காழ்த்துபதேசந்தரினுங்கைக்கொள்ளாய், கண்ணன்றாள்
வாழ்த்துவதேகண்டாய்வழக்கு. (௧௨.)

வழக்கொடுமாறுகொளன்றடியார்வேண்ட
இழக்கவுங்காண்டுமிறைவ—இழப்புண்டே
எம்மாட்கொண்டாகிலும்யான்வேண்டவென்கண்கள்
தம்மாற்காட்டுன்மேனிச்சாய். (௧௩)

சாயாற்கரியானையுள்ளறியாராய்நெஞ்சே
பேயார்முலைகொடுத்தார்பேயராய்—நீயார்போய்த்
தேம்பூண்சுவைத்தூனறிந்தறிந்தும், தீவினையாம்
பாம்பார்வாய்க்கைநீட்டல்பார்த்தி. (௧௪)

பார்த்தோமெதிரிதாநெஞ்சே, படுதுயரம்
பேர்த்தோதப்பீடழிவாம்பேச்சில்லை—ஆர்த்தோதம்
தம்மேனித்தாடடவத்தாங்கிடந்து, தம்முடைய
செம்மேனிக்கண்வளர்வார்சீர். (௧௫)

சீராற்பிறந்துசிறப்பால்வளராது
பேர்வாமனாகாக்காற்பேராளா—மார்பாரப்
புல்கிநீயுண்டுமிழ்ந்தபூமிநீரேற்பரிதே
சொல்லுநீயாமறியச்சூழ்ந்து. (௧௬)

சூழ்ந்தடியார்வேண்டினக்காற்றோன்றாதுவிட்டாலும்
வாழ்ந்திடுவர்பின்னுந்தம்வாய்திறவார்—சூழ்ந்தெங்கும்
வாள்வரைகள்போலரக்கன்வன்றலைகடாமிடியத்
தாள்வரைவில்லேந்தினார்தாம். (௧௭)

தாம்பாலாப்புண்டாலுமத்தழும்புதானிளகப்
பாம்பாலாப்புண்டுபாடுற்றாலும்—சோம்பாதிப்
பல்லுருவையெல்லாம்படர்வித்தவித்தா, வுன்
தொல்லுருவையாரறிவார்சொல். (௧௮)

சொல்லிற்குறையில்லைச்சூதறியாநெஞ்சமே
எல்லிப்பகலென்னாதெப்போதும்—தொல்லைக்கண்
மாத்தானைக்கெல்லாமோரைவரையேமாறாகக்
காத்தானைக்காண்டுநீகாண். (௧௯)

காணப்புகிலறிவுகைக்கொண்டநன்னெஞ்சம்
நாணப்படுமன்றேநாம்பேசில்—மாணி
உருவாகிக்கொண்டுலகநீரேற்றசீரான்
திருவாகந்தீண்டிற்றுச்சென்று. (௨௦)

சென்றங்குவெங்கரத்திற்சேராமற்காப்பதற்
கின்றிங்கென்னெஞ்சாலிடுக்குண்ட—அன்றங்குப்
பாருருவம்பார்வளைத்தநீருருவங்கண்புதையக்
காருருவன்றானிமிர்த்தகால். (உக)

காலேபொதத்திரிந்துகத்துவராமினநாள்
மாலார்குடிபுகுந்தாரென்மனத்தே—மேலால்
தருக்குமிடம்பாட்டினொடும்வல்வினையார், தாம்வீற்
றிருக்குமிடங்காணாதிளைத்து. (உஉ)

இளைப்பாயிளையாப்பாய்நெஞ்சமேசொன்னேன்
இளைக்கநமன்றமர்கள்பற்றி—இளைப்பெய்த
நாய்தந்துமோதாமைநல்குவானல்காப்பான்
தாய்தந்தையெவ்வுயிர்க்குந்தான். (உ௩)

தானேதனித்தோன்றறன்னளப்பொன்றில்லாதான்
தானேபிறர்களுக்குந்தற்றோன்றல்—தானே
இளைக்கிற்பார்கீழ்மேலாமீண்டமைப்பானானால்
அளக்கிற்பார்பாரின்மேலார். (உச)

ஆராலுமாதானுஞ்செய்ய, வகலிடத்தை
ஆராய்ந்ததுதிருத்தலாவதே—சீரார்
மனத்தலைவன்றுன்பத்தைமாற்றினேன், வானோர்
இனத்தலைவன்கண்ணனால்யான். (உரு)

யானுமென்னெஞ்சுமிசைந்தொழிந்தோம், வல்வினையைக்
கானுமலையும்புகக்கடிவான்—தானோர்
இருளன்னமாமேனியெம்மிறையார்தந்த
அருளென்னுந்தண்டாலடித்து. (உசு)

அடியாற்படிகடந்தமுத்தோ, வதன்றேல்
முடியால்விசும்பளந்தமுத்தோ—நெடியாய்ச்
செறிகழல்கடாணிமிர்த்துச்சென்றுலகமெல்லாம்
அறிகிலமானீயளந்தவன்று. (உஎ)

அன்றேநங்கண்காணுமாழியான்காருருவம்
இன்றேநாங்காணாதிருப்பதுவும்—என்றேனும்
கட்கண்ணாற்காணாதவவ்வுருவை, நெஞ்சென்னும்
உட்கண்ணேற்காணுமுணர்ந்து. (உஅ)

உணரவொருவர்க்கெளியனேசெவ்வே
இணருந்துழாயலங்கலெந்தை—உணரத்
தனக்கெளியரெவ்வளவரவ்வளவனானால்
எனக்கெளியனெம்பெருமானிங்கு. (உகூ)

இங்கில்லைபண்டுபோல்வீற்றிருத்த, லென்னுடைய
செங்கண்மாற்சீர்க்குஞ்சிறிதுள்ளம்—அங்கே
மடியடக்கிநிற்பதனில்வல்வினையார்தா, மீண்
டடியெடுப்பதன்றோவழகு. (௬0)

அழகுமறிவோமாய் * வல்வினையுந்தீர்ப்பான்
நிழலுமடிதாறுமானோம்—சுழலக்
குடங்கடலைமீதெடுத்துக்கொண்டாடி, யன்றத்
தடங்கடலைமேயார்தமக்கு. (௬௧)

தமக்கடிமைவேண்டுவார்தாமோதரனார்
தமக்கடிமைசெய்யென்றாற்செய்யா—தெமக்கென்றும்
தாஞ்செய்யுந்தீவினைக்கேதாழ்வுறுவர்நெஞ்சினார்
யான்செய்வதிவ்விடத்திங்கியாது. (௬௨)

யாதானுமொன்றறியிற்றன்னுகக்கிலென்கொலோ
யாதானுநேர்ந்தணுகாவாறுதான்—யாதானும்
தேறுமாசெய்யாவசுரர்களை, நேமியால்
பாறுபாறாக்கினான்பால். (௬௩)

பாலாழிநீகிடக்கும்பண்பை, யாங்கேட்டேயும்
காலாழுநெஞ்சழியுங்கண்சுழலும்—நீலாழிச்
சோதியாயாதியாய்தொல்வினையும்பாற்கடியும்
நீதியாய்நிற்சார்ந்துநின்று. (௬௪)

நின்றுமிருந்துங்கிடந்துந்திரிதந்தும்
ஒன்றுமோவாற்றானென்னெஞ்சகலான்—அன்றங்கை
அன்புடையாற்பொன்பெயரோன்வாய்தகர்த்துமார்பிடந்தான்
அன்புடையனன்றேயவன். (௬௫)

அவனாமிவனாமுவனா, மற்றும்பர்
அவனாமவனென்றிராதே—அவனாம்
அவனேயெனத்தெளிந்துகண்ணனுக்கேதீர்ந்தால்
அவனேயெவனேலுமாம். (௬௬)

ஆமாறறிவுடையாராவதரிதன்றே
நாமேயதுவுடையோநன்னெஞ்சே—பூமேய்
மதுகரமேதண்டுழாய்மாலாரை, வாழ்த்தா
மதுகரமேயன்பாலமை. (௬௭)

அமைக்கும்பொழுதுண்டேயாராயினெஞ்சே
இமைக்கும்பொழுதுமிடைச்சி—குமைத்திறங்கள்
ஏசியேயாயினுமீன்றுழாய்மாயனையே
பேசியேபோக்காய்பிழை. (௬௮)

---

* "வல்வினையைத்தீர்ப்பான்" என்றும்பாடம்.

பிழைக்கமுயன்றோமோநெஞ்சமேபேசாய்
தழைக்குந்துழாய்மார்பன்றன்னை—யழைத்தொருகால்
போயுபகாரம்பொலியக்கொள்ளா, தவன்புகழே
வாயுபகாரங்கொண்டவாய்ப்பு. (௩௯)

வாய்ப்போவிதுவொப்பமற்றில்லைவாநெஞ்சே
போய்ப்போய்வெந்நரகிற்பூவியேல்—தீப்பால
பேய்த்தாயுயிரளாயபாலுண்டவளுயிரை
மாய்த்தானைவாழ்த்தேவலி. (௪0)

வலியமெனநினைந்துவந்தெதிர்ந்தமல்லர்
வலியமுடியிடியவாங்கி—வலியநின்
பொன்னாழிக்கையாற்புடைத்திடுதிகீளாதே
பன்னாளுநிற்குமிப்பார். (௪௧)

பாருண்டான்பாருமிழ்ந்தான்பாரிடந்தான்பாரளந்தான்
பாரிடமுன்படைத்தானென்பரால்—பாரிடம்
ஆவானுந்தானானாலாரிடமே, மற்றொருவர்க்
காவான்புகாவாலவை. (௪௨)

அவயமெனநினைந்துவந்தசுரர்பாலே
நவையைநளிர்விப்பான்றன்னைக்—கவையில்
மனத்துயரவைத்திருந்துவாழ்த்தாதார்க்குண்டோ
மனத்துயரைமாய்க்கும்வகை (௪௩)

வகைசேர்ந்தநன்னெஞ்சுநாவுடையவாயும்
மிகவோர்ந்துவீழாவெனிலும்—மிகவாய்ந்து
மாலைத்தாம்வாழ்த்தாதிருப்பரிதுவன்றே
மேலைத்தாஞ்செய்யும்வினை. (௪௪)

வினையார்தரமுயலும்வெம்மையையஞ்சித்
தினையாஞ்சிறிதளவுஞ்செல்ல—நினையாது,
வாசகத்தாலேத்தினேன்வானோர்தொழுதிறைஞ்சும்
நாயகத்தான்பொன்னடிக்கணான். (௪௫)

நான்கூறுங்கூற்றாவதித்தனையே, நாளும்
தேங்கோதநீருருவன்செங்கண்மால்—நீங்காத
மாகதியாம்வெந்நரகிற்சேராமற்காப்பதற்கு
நீகதியாம்நெஞ்சேநினை. (௪௬)

நினைத்திறைஞ்சிமானிடவரொன்றிரப்பரென்றே
நினைத்திடவும்வேண்டாநீநேரே—நினைத்திறைஞ்ச
எவ்வளவரெவ்விடத்தோர்மாலே, யதுதானும்
எவ்வளவுமுண்டோவெமக்கு. (௪௭)

எமக்கியாம்விண்ணாட்டுக்குச்சமதாம்வீட்டை
அமைத்திருந்தோமஃதன்றேயாமா—றமைப்பொலிந்த
மென்றோளிகாரணமாவெங்கோட்டேறேழுடனே
கொன்றானையேமனத்துக்கொண்டு. (சஅ)

கொண்டறான்மால்வரைதான்மாகடறான்கூரிருடான்
வண்டறாப்பூவைதான்மற்றுத்தான்—கண்டநாள்
காருருவங்காண்டோறுநெஞ்சோடுங், கண்ணனார்
பேருருவென்றெம்மைப்பிரிந்து. (சகூ)

பிரிந்தொன்றுநோக்காதுதம்முடையபின்னே
திரிந்துழலுஞ்சிந்தனையார்தம்மைப்—புரிந்தொருகால்
ஆவாவெனவிரங்காரந்தோவலிதேகொல்
மாவாய்பிளந்தார்மனம். (ருo)

மனமாளுமோரைவர்வன்குறும்பர்தம்மைச்
சினமாள்வித்தோரிடத்தேசேர்த்துப்—புனமேய
தண்டுழாயானடியைத்தான்காணுமஃதன்றே
வண்டுழாஞ்சீரார்க்குமாண்பு. (ருக)

மாண்பாவித்தஞ்ஞான்றுமண்ணிரந்தான், மாயவனாஞ்
ஞூண்பாவித்துண்டானதோருருவம்—காண்பானம்
கண்ணவாமற்றொன்றுகாணுறா, சீர்பரவா
துண்ணவாய்தானுறுமோவொன்று. (ருஉ)

ஒன்றுண்டுசெங்கண்மால்யானுரைப்ப, துன்னடியார்க்
கென்செய்வனென்றேயிருத்திநீ—நின்புகழில்
வைகுந்தஞ்சிந்தையிலுமற்றினிதோ, நீயவர்க்கு
வைகுந்தமென்றருளும்வான். (ருங)

வானோமறிகடலோமாருதமோதீயகமோ
கானோவொருங்கிற்றுங்கண்டிலமால்—ஆனீன்ற
கன்றுயரத்தாமெறிந்துகாயுதிர்த்தார்தாட்பணிந்தோம்
வன்றுயரையாவாமருங்கு. (ருச)

மருங்கோதமோதுமணிநாகணையார்
மருங்கேவரவரியரோலும்—ஒருங்கே
எமக்கவரைக்காணலாமெப்பொழுதுமுள்ளால்
மனக்கவலைதீர்ப்பார்வரவு. (ருரு)

வரவாறொன்றில்லையால்வாழ்வினிதாலெல்லே
ஒருவாறொருவன்புகாவா—றுருமாறு
வாயவர்தாஞ்சேயவர்தாமன்றுலகந்தாயவர்தாம்
மாயவர்தாங்காட்டும்வழி. (ருசா)

வழித்தங்குவல்வினையைமாற்றுனோநெஞ்சே
தழீஇக்கொண்டுபோரவுணன்றன்னைச்—சூழ்த்தெங்கும்
தாழ்விடங்கள்பற்றிப்புலால்வெள்ளந்தானுகள
வாழ்வடங்கமார்பிடந்தமால். (ருஎ)

மாலேபடிச்சோதிமாற்றே, லினியுனது
பாலேபோற்சீரிற்பழுத்தொழிந்தேன்—மேலால்
பிறப்பின்மைபெற்றடிக்கீழ்குற்றேவ, லன்று
மறப்பின்மையான்வேண்டுமாடு. (ருஅ)

மாடேவரப்பெறுவராமென்றே, வல்வினையார்
காடானுமாதானுங்கைக்கொள்வார்—ஊடேபோய்ப்
பேரோதஞ்சிந்துதிரைக்கண்வளரும்; பேராளன்
பேரோதச்சிந்திக்கப்பேர்ந்து. (ருகூ)

பேர்ந்தொன்றுநோக்காதுபின்னிற்பாய்நில்லாப்பாய்
ஈர்ந்துழாய்மாயனையேயென்னெஞ்சே—பேர்ந்தெங்கும்
தொல்லைமாவெந்நரகிற்சேராமற்காப்பதற்
கில்லைகாண்மற்றோரிறை. (சாo)

இறைமுறையான்சேவடிமேன்மண்ணளந்தவந்நாள்
மறைமுறையால்வானாடர்கூடி—முறைமுறையின்
தாதிலகுபூத்தெளித்தாலோவாதே, தாழ்விசும்பின்
மீதிலகித்தான்கிடக்குமீன். (சாக)

மீனென்னுங்கம்பில்வெறியென்னும்வெள்ளிவேய்
வானென்னுங்கேடிலாவான்குடைக்குத்—தானோர்
மணிக்காம்புபோனிமிர்ந்துமண்ணளந்தா, னங்கள்
பிணிக்காம்பெருமருந்துபின். (சாஉ)

பின்றுரக்குங்காற்றிழந்தசூற்கொண்டற், பேர்ந்தும்போய்
வன்றிரைக்கண்வந்தணைந்தவாய்மைத்தே—அன்று
திருச்செய்யநேமியான்றீயரக்கிமூக்கும்
* பருச்செவியுமீர்ந்தபரன். (சாங)

பரனுமவனாதல்பாவிப்பராகில்
உரனாலொருமூன்றுபோதும்—மரமேழன்
றெய்தானைப்புள்ளின்வாய்கீண்டானையே, யமரர்
கைதான்றொழாவேகலந்து. (சாச)

கலந்துநலியுங்கடுந்துயரைநெஞ்சே
மலங்கவடித்துமடிப்பான்—விலங்கல்போல்
தொன்மாலைக்கேசவனைநாரணனைமாதவனைச்
சொன்மாலையெப்பொழுதுஞ்சூட்டு. (சாரு)

* "பரிச்செவியும்" எனவும்பாடங்காண்கின்றோம்.

சூட்டாயநேமியான்றொல்லரக்கனின்னுயிரை
மாட்டேதுயரிழைத்தமாயவனை—ஈட்ட
வெறிகொண்டதண்டுழாய்வேதியனை, நெஞ்சே
அறிகண்டாய்சொன்னேனது. (௬௬)

அதுவோநன்றென்றங்கமருலகோவேண்டில்
அதுவோபொருளில்லையன்றே—அதுவொழிந்து
மண்ணின்றாள்வேனெனினுங்கூடுமடநெஞ்சே
கண்ணன்றாள்வாழ்த்துவதேகல். (௬௭)

கல்லுங்கனைகடலும்வைகுந்தவானாடும்
புல்லென்றொழிந்தனகொலேபாவம்—வெல்ல
நெடியானிறங்கரியானுட்புகுந்துநீங்கான்
அடியேனதுள்ளத்தகம். (௬௮)

அகஞ்சிவந்தகண்ணினராய்வல்வினையராவார்
முகஞ்சிதைவராமன்றேமுக்கி—மிகுந்திருமால்
சீர்க்கடலைப்புட்பொதிந்தசிந்தனையேன்றன்னை
ஆர்க்கடலாஞ்செவ்வேயடர்த்து. (௬௯)

அடர்பொன்முடியானையாயிரம்பேரானைச்
சுடர்கொள்சுடராழியானை—இடர்கடியும்
மாதாபிதுவாகவைத்தேனெனதுள்ளே
யாதாகில்யாதேயினி. (௭0)

இனிநின்றுநின்பெருமையானுரைப்பதென்னே
தனிநின்றசார்பிலாமூர்த்தி—பனிநீர்
அகத்துலவுசெஞ்சடையானகத்தா, னான்கு
முகத்தானின்றுந்திமுதல். (௭௧)

முதலாந்திருவுருவமூன்றென்பரொன்றே
முதலாகுமூன்றுக்குமென்பர்—முதல்வா,
நிகரிலகுகாருருவாநின்னகத்ததன்றே
புகரிலகுதாமரையின்பூ. (௭௨)

பூவையுங்காயாவுநீலமும்பூக்கின்ற
காவிமலரென்றுங்காண்டோறும்—பாவியேன்
மெல்லாவிமெய்மிகவேபூரிக்கு, மவ்வவை
எல்லாம்பிரானுருவேயென்று. (௭௩)

என்று * மொருநாளொழியாமையானிரந்தால்
ஒன்றுமிரங்காருருக்காட்டார்—குன்று
குடையாகவாகாத்தகோவலனார், நெஞ்சே
புடைதான்பெரிதேபுவி. (௭௪)

* “ ஒருநாளுமொழியாமை ” என்றும்பாடம்.

புவியுமிருவிசும்புநின்னகத்த, நீயென்
செவியின்வழிபுகுந்தென்னுள்ளாய்—அவிவின்றி
யான்பெரியனீபெரியையென்பதனையாரறிவார்
ஊன்பருகுநேமியாயுள்ளு. (எரு)

உள்ளிலுமுள்ளந்தடிக்கும்வினைப்படலம்
விள்ளவிழித்துன்னைமெய்யுற்றால்—உள்ள
உலகளவுயானுமுளனவனென்கொலோ
உலகளந்தமூர்த்தியுரை. (எசா)

உரைக்கிலோர்சுற்றத்தாருற்றாரொன்றுரோ
இரைக்குங்கடற்கிடந்தவெந்தாய்—உரைப்பெல்லாம்
நின்னன்றிமற்றிலேன்கண்டா, யெனதுயிர்க்கோர்
சொன்னன்றியாகுந்துணை. (எஎ)

துணைநாட்பெருங்கிளையுந்தொல்குலமுஞ்சுற்றந்
திணைநாளுமின்புடைத்தாமேலும்—கணைநாணில்
ஓவாத்தொழிற்சார்ங்கன்றொல்சீரைநன்னெஞ்சே
ஓவாதவூணாகவுண். (எஅ)

உண்ணாட்டுத்தேசென்றேயூழ்வினையைஞ்சுமே
விண்ணாட்டையொன்றாகமெச்சுமே—மண்ணாட்டில்
ஆராகியெவ்விழிவிற்றானாலு, மாழியங்கைப்
பேராயற்காளாம்பிறப்பு. (எகூ)

பிறப்பிறப்புமூப்புப்பிணிதுறந்து, பின்னும்
இறக்கவுமின்புடைத்தாமேலும்—மறப்பெல்லாம்
ஏதமேயென்றல்லாலெண்ணுவனே, மண்ணளந்தான்
பாதமேயேத்தாப்பகல். (அ0)

புகலிராவென்பதுவும்பாவியா, தெம்மை
இகல்செய்திருபொழுதுமாள்வர்—தகவாத்
தொழும்பரிவர்சீர்க்குந்துணையிலரொன்றோரார்
செழும்பறவைமேயார்தெரிந்து. (அக)

தெரிந்துணர்வொன்றின்மையாற்றீவினையேன், வாளா
இருந்தொழிந்தேன்கீழ்நாட்களெல்லாம்—கரந்துருவில்
அம்மானையந்நான்றுபின்றொடர்ந்த, வாழியங்கை
அம்மானையேத்தாதயர்த்து. (அஉ)

அயர்ப்பாயயராப்பாய்நெஞ்சமேசொன்னேன்
உயப்போநெறியிதுவேகண்டாய்—செயற்பால
வல்லவேசெய்கிறுதிநெஞ்சமேயஞ்சினேன்
மல்லர்நாள்வவ்வினனைவாழ்த்து. (அரு)

வாழ்த்தியவனடியைப்பூப்புனைந்து, நின்றலையைத்
தாழ்த்திருகைகூப்பென்றாற்கூப்பாத—பாழ்த்தவிதி,
எங்குற்றாயென்றவனையேத்தாதென்னெஞ்சமே
தங்கத்தானுமேலுந்தங்கு. (அசு)

தங்காமுயற்றியவாய்த்தாழ்விசும்பின்மீதுபாய்ந்
தெங்கேபுக்கெத்தவஞ்செய்திட்டனகொல்—பொங்கோதத்
தண்ணம்பால்வேலைவாய்க்கண்வளரு, மென்னுடைய
கண்ணன்பானன்னிறங்கொள்கார். (அரு)

* கார்கலந்தமேனியான்கைகலந்தவாழியான்
பார்கலந்தவல்வயிற்றான்பாம்பணையான்—சீர்கலந்த
சொன்னினைந்துபோக்காரேற்சூழ்வினையினாழ்துயரை
என்னினைந்துபோக்குவரிப்போது. (அசு)

* இப்போதுமின்னுமினிச்சிறிதுநின்றாலும்
எப்போதுமீதேசொல்லென்னெஞ்சே—எப்போதும்
கைகழலாநேமியானம்மேல்வினைகடிவான்
மொய்கழலேயேத்தமுயல். (அஎ)

நம்மாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

முயற்றிநாழ்சென்றழகுவலியமனமிறையினிப்பகவொருபேர்

பெரியதிருவந்தாதி முற்றும்.

---

ஆ திருவந்தாதி - ச - க்குப் பாசுரம் - நகூசு.

திருவிருத்தம் - க00.—திருவாசிரியம்-எ.

பெரியதிருவந்தாதி - அஎ.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

மாறன்பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கங்கூற வவதரித்த
வீறுடையவடையார்சீயம்
திருமங்கைமன்னனருளிச்செய்த

# திருவெழுகூற்றிருக்கை.

தனியன்

உடையவரருளிச்செய்தது.

நேரிசைவெண்பா.

வாழிபரகாலன்வாழிகலிகன்றி
வாழிகுறையலூர்வாழ்வேந்தன்—வாழியரோ
மாயோனைவாள்வலியான்மந்திரங்கொண்மங்கையர்கோன்
தூயோன்சுடர்மானவேல்.

தேசியராகம் - ஆதிதாளம்.

* ஒருபேருந்தியிருமலர்த்தவிசில்[றை
ஒருமுறையயனையீன்றனை, யொருமு
இருசுடர்மீதினிலியங்கா, மும்மதிள்
இலங்கையிருகால்வளைய, வொருசிலை
ஒன்றியவீரெயிற்றழல்வாய்வாளியில்
அட்டனை, மூவடிநானிலம்வேண்டி
முப்புரிநூலொடுமானுரியிலங்கு
மார்பினி, லிருபிறப்பொருமாணாகி
ஒருமுறையீரடிமூவுலகளந்தனை
நாற்றிசைநடுங்கவஞ்சிறைப்பறவை
ஏறி, நால்வாய்மும்மதத்திருசெவி
ஒருதனிவேழத்தரந்தையை, யொரு
[நாள்

இருநீர்மடுவுட்டீர்த்தனை, முத்தீ [ழில்
நான்மறையைவகைவேள்வி,யறுதொ
அந்தணர்வணங்குந் தன்மையை, யை
[ம்புலன்
அகத்தினுட்செறுத்து,நான்குடனடக்கி
முக்குணத்திரண்டவையகற்றி, யொ
[ன்றினில்
ஒன்றிநின், றுங்கிருபிறப்பறுப்போர்
அறியுந்தன்மையை,முக்கணாற்றோள்
ஐவாயரவொ, டாறுபொதிசடையோ
[ன்
அறிவருந்தன்மைப் பெருமையுளின்ற
[னை

ஏழுலகெயிற்றினிற்கொண்டனைக்,கூறி [ய
அறுசுவைப்பயனுமாயினை, சுடர்விடும்
ஐம்படையங்கையுளமர்ந்தனை, சுந்தர
நாற்றோண்முந்நீர்வண்ண, நின்னிரடி
ஒன்றியமனத்தா, லொருமதிமுகத்து
மங்கையரிருவருமலரென,வங்கையில்
முப்பொழுதும்வருட வறிதுயிலமர்ந் [தனை
நெறிமுறைநால்வகை வருணமுமாயி
மேதகுமைம்பெரும்பூதமுநீயே [னை
அறுபதமுரலுங்கூந்தல்காரணம்[கைச்
ஏழ்விடையடங்கச்செற்றனை, யறுவ
சமயமுமறிவருநிலையினை, யைம்பால்
ஓதியையாகத்திருத்தினை, யறமுதல்
நான்கவையாகிமூர்த்திமூன்றாய்
இருவகைப்பயனாயொன்றாய்விரிந்து
நின்றனை, குன்றாமதுமலர்ச்சோலை
வண்கொடிப்படப்பை, வருபுனற்பொ [ன்னி
மாமணியலைக்குஞ், செந்நெலொண்க [ழனித்
திகழ்வனமுடுத்த, கற்போர்புரிசைக்
கனகமாளிகை, நிமிர்கொடிவிசும்பில்
இளம்பிறைதுவக்குஞ்,* செல்வமல்கு [தென்
திருக்குடந்தை, யந்தணர்மந்திரமொ [ழியுடன்
வணங்க, வாடரவமளியிலறிதுயில்
அமர்ந்தபரம, நின்னடியிணைபணிவன்
வருமிடரகலமாற்றுவினையே.

திருமங்கையாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர்திருவடிகளேஶரணம்.

இடங்கொண்டநெஞ்சத்திணங்கிக்கிடப்ப, னென்றும்பொன்னித்
தடங்கொண்டதாமரைசூழுமலர்ந்ததண்பூங்குடந்தை
விடங்கொண்டவெண்பற்கருந்துத்திச்செங்கட்டழலுமிழ்வாய்ப்
படங்கொண்டபாம்பணைப்பள்ளிகொண்டான்றிருப்பாதங்களே.

திருவெழுகூற்றிருக்கைமுற்றியது.

---

ஆ பாசுரம் - ருகக.

ஆ திருவந்தாதி - ச - க்கு - பாசுரம் - ருகரு.

திருவிருத்தம் - க00.—திருவாசிரியம்-எ.

பெரியதிருவந்தாதி - அஎ.—திருவெழுகூற்றிருக்கை-க.

---

திருவெழுகூற்றிருக்கைக்கிரண்டாந்தனியனாகச் சிலப்ரதேஶங்களில் வழங்கப்பட்டுவரும்

கலித்துறை.

* சீரார்திருவெழுகூற்றிருக்கையெனுஞ்செந்தமிழால்
ஆராவமுதங்குடந்தைப்பிரான்றன்னடியிணைக்கீழ்
ஏரார்மறைப்பொருளெல்லாமெடுத்திவ்வுலகுய்யவே
சோராமற்சொற்றவருண்மாரிபாதந்துணைநமக்கே.

* இதனைப் பெரும்பாலார் வழங்காமைகொண்டு ப்ரதமத்திலமைத்திலம்.

Funding: IKS/Tattva Heritage. Digitization: eGangotri.



ஸ்ரீ







ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

மாறன்பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கங்கூற வவதரித்த

வீறுடையவடையார்சியம்

திருமங்கைமன்னனருளிச்செய்த

# சிறிய திருமடல்.

தனியன்

பிள்ளைதிருநறையூரரையரருளிச்செய்தது.

நேரிசைவெண்பா.

முள்ளிச்செழுமலரோர்தாரான்முளைமதியம்
கொள்ளிக்கென்னுள்ளங்கொதியாமே—வள்ளல்
திருவாளன்சீர்க்கலியன்கார்க்கலியைவெட்டி
மருவாளன்றந்தான்மடல்.

நாதநாமக்ரியைராகம் - ஆதிதாளம்.

※ காரார்வரைக்கொங்கைகண்ணார்கடலுடுக்கைச்
சீரார்சுடர்சுட்டிச்செங்கலுழிப்பேராற்றுப் (௧)
பேராரமார்பிற்பெருமாமழைக்கூந்தல்
நீராரவேலிநிலமங்கையென்னு, மிப் (௨)
பாரோர்சொலப்பட்டமூன்றன்றே, யம்மூன்று
மாராயிற்றானேயறம்பொருளின்பமென்று (௩)
ஆராரிவற்றினிடையதனையெய்துவார்
சீராரிருகலையுமெய்துவர், சிக்கெனமற் (௪)
றாரானுமுண்டென்பானென்பதுதானதுவு
மோராமையன்றேயுலகத்தார்சொல்லுஞ்சொல் (௫)
ஓராமையாமாறதுவுரைக்கேன்கேளாமே
காரார்புரவியேழ்பூண்டதனியாழித் (௬)

தேரார்நிறைகதிரோன்மண்டலத்தைக்கீண்டுபுக்
காராவமுதமங்கெய்தி, யதினின்றும் (எ)

வாராதொழிவதொன்றுண்டே, யதுநிற்க
ஏரார்முயல்விட்டுக்காக்கைப்பின்போவதே (அ)

ஏராரிளமுலையீரென்றனக்குற்றதுதான்
காரார்குழலெடுத்துக்கட்டிக், கதிர்முலையை (கூ)

வாராரவீக்கிமணிமேகலைதிருத்தி
ஆராரயில்வேற்கணஞ்சனத்தினீறணிந்து (க0)

சீரார்செழும்பந்துகொண்டடியாநின்றேனான்
நீரார்கமலம்போற்செங்கண்மாலென்றொருவன் (கக)

பாரோர்களெல்லாமகிழப்பறைகறங்கச்
சீரார்குடமிரண்டேந்திச், செழுந்திருவே (கஉ)

ஆராரெனச்சொல்லியாடுமதுகண்டு
ஏராரிளமுலையாரென்னையருமெல்லாரும் (கங)

வாராயோவென்றார்க்குச்சென்றேனென்வல்வினையால்
காரார்மணிநிறமுங்கைவளையுங்காணேனான் (கச)

ஆரானுஞ்சொல்லிற்றுங்கொள்ளே, னறிவழிந்து
தீராவுடம்பொடுபேதுறுவேன்கண்டிரங்கி (கரு)

ஏரார்கிளிக்கிளவியெம்மனைதான்வந்தென்னைச்
சீரார்செழும்புழுதிக்காப்பிட்டு, செங்குறிஞ்சித் (கசா)

தாரார்நறுமாலைசாத்தற்குத், தான்பின்னும்
நேராதனவொன்றுநேர்ந்தா, ளதனாலும் (கஎ)

தீராதென்சிந்தைநோய்தீராதென்பேதுறவு
வாராதுமாமையதுகண்டுமற்றாங்கே (கஅ)

ஆரானுமூதறியுமம்மனைமார்சொல்லுவார்
பாரோர்சொலப்படுங்கட்டுப்படுத்திரேல் (ககூ)

ஆரானுமெய்ப்படுவனென்றா, ரதுகேட்டுக்
காரார்குழற்கொண்டைகட்டுவிச்சிகட்டேறிச் (உ0)

சீரார்சுளகிற்சிலநெற்பிடித்தெறியா
வேராவிதிர்விதிராமெய்சிலிராக்கைமோவாப் (உக)

பேராயிரமுடையானென்றாள், பேர்த்தேயும்
காரார்திருமேனிகாட்டினாள், கையதுவும் (உஉ)

சீரார்வலம்புரியேயென்றாள், திருத்துழாய்த்
தாரார்நறுமாலைகட்டுரைத்தாள்கட்டுரையா (உங)

நீரேதுமஞ்சேன்மின்னும்மகளைநோய்செய்தான்
ஆரானுமல்லனறிந்தேனவனைநான் (உச)

கூரார்வேற்கண்ணீருமக்கறியக்கூறுகேனே
ஆராலிவ்வையமடியளப்புண்டதுதான் (௨௫)
ஆராலிலங்கைபொடிபொடியாவீழ்ந்தது, மற்
றாராலேகன்மாரிகாத்ததுதா, னாழிநீர் (௨௬)
ஆராற்கடைந்திடப்பட்ட, தவன்காண்மின்
ஊராநிரைமேய்த்துலகெல்லாமுண்டுமிழ்ந்தும் (௨௭)
ஆராததன்மையனாயாங்கொருநாளாய்ப்பாடிச்
சீரார்கலையல்குற்சீரடிச்செந்துவர்வாய் (௨௮)
வாரார்வனமுலையாண்மத்தாரப்பற்றிக்கொண்
டேராரிடைநோவவெத்தனையோர்போதுமாய்ச் (௨௯)
சீரார்தயிர்கடைந்துவெண்ணெய்திரண்டதனை
வேரார்நுதன்மடவாள்வேறோர்கலத்திட்டு (௩0)
நாராருறியேற்றிநன்கமையவைத்ததனைப்
போரார்வேற்கண்மடவாள்போந்தனையும்பொய்யுறக்கம்()
ஓராதவன்போலுறங்கியறிவுற்றுத்
தாரார்தடந்தோள்களுள்ளளவுங்கைநீட்டி (௩௨)
ஆராதவெண்ணெய்விழுங்கி, யருகிருந்த
மோரார்குடமுருட்டிமுன்கிடந்ததானத்தே (௩௩)
ஓராதவன்போற்கிடந்தானைக்கண்டவளும்
வாராத்தான்வைத்ததுகாணாள், வயிறடித்திங் (௩௪)
காரார்புகுதுவாரையரிவரல்லால்
நீராமிதுசெய்தீரொன்றோர்நெடுங்கயிற்றால் (௩௫)
ஊரார்களெல்லாருங்காணவுரலோடே
தீராவெகுளியளாய்ச்சிக்கெனவார்த்தடிப்ப (௩௬)
ஆராவயிற்றினோடாற்றாதா, னன்றியும்
நீரார்நெடுங்கயத்தைச்சென்றலைக்கநின்றுரப்பி (௩௭)
ஓராயிரம்பண்வெங்கோவியனாகத்தை
வாராயெனக்கென்றுமற்றதன்மத்தகத்துச் (௩௮)
சீரார்திருவடியாற்பாய்ந்தான், றன்சீதைக்கு
நேராவனென்றோர்நிசாசரிதான்வந்தாளைக் (௩௯)
கூரார்ந்தவாளாற்கொடிமூக்குங்காதிரண்டும்
ஈராவிடுத்தவட்குமூத்தோனை, வெந்நரகம் (௪0)
சேராவகையேசிலைகுனித்தான், செந்துவர்வாய்
வாரார்வனமுலையாள்வைதேவிகாரணமா (௪௧)
ஏரார்தடந்தோளிராவணனை, யீரைந்து
சீரார்சிரமறுத்துச்செற்றுகந்தசெங்கண்மால் (௪௨)
போரார்நெடுவேலோன்பொன்பெயரோனாகத்தைக்
கூரார்ந்தவள்ளுகிராற்கீண்டு, குடன்மாலை (௪௩)

சீரார்திருமார்பின்மேற்கட்டிச், செங்குருதி
சோராக்கிடந்தானைக்குங்குமத்தோள்கொட்டி (௪௪)
ஆராவெழுந்தானரியுருவா, யன்றியும்
பேர்வாமனனாகியகாலத்து, மூவடிமண் (௪௫)
தாராயெனக்கென்றுவேண்டிச்சலத்தினால்
நீரேற்றுலகெல்லாநின்றளந்தான்மாவலியை (௪௬)
ஆராதபோரிலசுரர்களுந்தானுமாய்
காரார்வரைநட்டுநாகங்கயிறாகப் (௪௭)
பேராமற்றாங்கிக்கடைந்தான், திருத்துழாய்த்
தாரார்ந்தமார்பன்றடமால்வரைபோலும் (௪௮)
போரானைபொய்கைவாய்க்கோட்பட்டுநின்றலறி
நீரார்மலர்க்கமலங்கொண்டோர்நெடுங்கையால் (௪௯)
நாராயணாவோமணிவண்ணாநாகணையாய்
வாராயென்னாரிடரைநீக்கா, யெனவெகுண்டு (௫0)
தீராதசீற்றத்தாற்சென்றிரண்டுகூறாக
ஈராவதனையிடர்கடிந்தானெம்பெருமான் (௫௧)
பேராயிரமுடையான்பேய்ப்பெண்டீர்நும்மகளைத்
தீராநோய்செய்தானெனவுரைத்தாள், சிக்கெனமற் (௫௨)
றாரானுமல்லாமைகேட்டெங்களம்மனையும்
போரார்வேற்கண்ணீரவனாகிற்பூந்துழாய் (௫௩)
தாராதொழியுமேதன்னடிச்சியல்லளே, மற்
றாரானுமல்லனேயென்றொழிந்தாள், நானவனைக் (௫௪)
காரார்திருமேனிகண்டதுவேகாரணமாப்
பேராப்பிதற்றாத்திரிதருவன், பின்னையும் (௫௫)
ஈராப்புகுதலுமிவ்வுடலைத்தண்வாடை
சோராமறுக்கும்வகையறியேன், சூழ்குழலார் (௫௬)
ஆரானுமேசுவரென்னுமதன்பழியை
வாராமற்காப்பதற்குவாளாவிருந்தொழிந்தேன் (௫௭)
வாராய்மடநெஞ்சேவந்து, மணிவண்ணன்
சீரார்திருத்துழாய்மாலைநமக்கருளித் (௫௮)
தாரான்றருமென்றிரண்டத்திலொன்றதனை
யாரானுமொன்றாதார்கேளாமேசொன்னக்கால் (௫௯)
ஆராயுமேலும்பணிகேட்டதன்றெனிலும்
போராதொழியாதேபோந்திடுநீயென்றேற்குக் (௬0)
காரார்கடல்வண்ணன்பின்போனநெஞ்சமும்
ஆராதேயென்னைமறந்ததுதான், வல்வினையேன் (௬௧)
ஊராருகப்பதேயாயினேன், மற்றெனக்கிங்
காராய்வாரில்லையழல்வாய்மெழுகுபோல் (௬௨)

நீராயுருகுமென்னுவி, நெடுங்கண்கள்
ஊராருறங்கிலுந்தானுறங்கா, வுத்தமன்றன் (௬௩)
பேராயினவேபிதற்றுவன், பின்னையும்
காரார்கடல்போலுங்காமத்தராயினர் (௬௪)
ஆரேபொல்லாமையறிவாரதுநிற்க
ஆரானுமாதானுமல்லளவள்காணீர் (௬௫)
வாரார்வனமுலைவாசவதத்தையென்று
ஆரானுஞ்சொல்லப்படுவா, ளவளுந்தன் (௬௬)
பேராயமெல்லாமொழியப்பெருந்தெருவே
தாரார்தடந்தோட்டளைக்காலன்பின்போனாள் (௬௭)
ஊராரிகழ்ந்திடப்பட்டாளே, மற்றெனக்கிங்
காரானுங்கற்பிப்பார்நாயகரோ, நானவனைக் (௬௮)
காரார்திருமேனிகாணுமளவும்போய்
* சீரார்திருவேங்கடமேதிருக்கோவ (௬௯)
லூரே, மதிட்கச்சியூரகமேபேரகமே
பேராமருதிறுத்தான்வெள்ளறையேவெஃகாவே (௭0)
பேராலிதண்கால்நறையூர்திருப்புலியூர்
* ஆராமஞ்சூழ்ந்தவரங்கங், கணமங்கை (௭௧)
காரார்மணிநிறக்கண்ணனூர் விண்ணகரம்
சீரார்கணபுரஞ்சேறைதிருவழுந்தூர் (௭௨)
காரார்குடந்தைகடிகைகடன்மல்லை
ஏரார்பொழில்சூழிட்வெந்தைநீர்மலை (௭௩)
சீராருமாலிருஞ்சோலைதிருமோகூர்
பாரோர்புகழும்வதரிவடமதுரை (௭௪)
ஊராயவெல்லாமொழியாமேநானவனை
ஓரானைகொம்பொசித்தோரானைகோள்விடுத்த (௭௫)
சீரானைச், செங்கணெடியானைத்தேன்றுழாய்த்
தாரானைத், தாமரைபோற்கண்ணானை, யெண்ணருஞ்சீர் ()
பேராயிரமும்பிதற்றி, * பெருந்தெருவே
ஊராரிகழிலுமூராதொழியேனான் (௭௭)
வாரார்பூம்பெண்ணைமடல். (௭௭௨)

ஆ வாக்யம் - கஙுரு - க்குப் பாசுரம் - ௭௭௨.

ஊராதொழியேனுலகறியவொண்ணுதலீர்
சீரார்முலைத்தடங்கள்சேரளவும்—பாரெல்லாம்
அன்றோங்கிநின்றளந்தானின்றதிருநறையூர்
மன்றோங்கவூர்வன்மடல்.

திருமங்கையாழ்வார்திருவடிகளேஶரணம்.

சிறியதிருமடல் முற்றியது.

ஆ பாசுரம் - ௬௬௮௨.

ஸ்ரீ







ஸ்ரீமதேராமாநுஜாயநம:

மாறன்பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கங்கூற வவதரித்த

வீறுடையவடையார்சியம்

திருமங்கைமன்னனருளிச்செய்த

# பெரியதிருமடல்.

தனியன்

பிள்ளைதிருநறையூரரையரருளிச்செய்தது.

நேரிசைவெண்பா.

பொன்னுலகில்வானவரும்பூமகளும்போற்றிசெய்யும்
நன்னுதலீர்நம்பிநறையூரர்—மன்னுலகில்
என்னிலைமைகண்டுமிரங்காரேயாமாகில்
மன்னுமடலூர்வன்வந்து.

நாதநாமக்ரியைராகம் - ஆதிதாளம்.

* மன்னியபல்பொறிசேராயிரவாய்வாளரவின்
சென்னிமணிக்குடுமித்தெய்வச்சுடர்நடுவுள் (௧)
மன்னியநாகத்தணைமேலோர்மாமலைபோல்
மின்னுமணிமகரகுண்டலங்கள்வில்வீசத் (௨)
துன்னியதாரகையின்பேரொளிசேராகாச
என்னும்விதானத்தின்கீழா, லிருசுடரை (௩)
மன்னும்விளக்காகவேற்றி, மறிகடலும்
பன்னுதிரைக்கவரிவீச, நிலமங்கை (௪)
தன்னைமுனநாளளவிட்டதாமரைபோல்
மன்னியசேவடியைவானியங்குதாரகைமீன் (௫)
என்னுமலர்ப்பிணையலேய்ந்த, மழைக்கூந்தல்
தென்னனுயர்பொருப்புந்தெய்வவடமலையும் (௬)

என்னுமிவையேமுலையாவடிவமைந்த
அன்னநடையவணங்கே, அடியிணையைத் (எ)
தன்னுடையவங்கைகளாற்றான்றடவத்தான்கிடந், தோ
ருன்னியயோகத்துறக்கந்தலைக்கொண்ட (அ)
பின்னைத், தன்னுபிவலயத்துப்பேரொளிசேர்
மன்னியதாமரைமாமலர்பூத், தம்மலர்மேல் (கூ)
முன்னந்திசைமுகனைத்தான்படைக்க, மற்றவனும்
முன்னம்படைத்தனனான்மறைகள, ம்மறைதான் (க0)
மன்னுமறம்பொருளின்பம்வீடென்றுலகில்
நன்னெறிமேம்பட்டனநான்கன்றே, நான்கெனினும் (கக)
பின்னையதுபின்னைப்பெயர்தருமென்பதோர்
தொன்னெறியைவேண்டுவார்வீழ்கனியுமூழிலையும் (கஉ)
என்னுமிவையேநுகர்ந்துடலந்தாம்வருந்தித்
துன்னுமிலைக்குரம்பைத்துஞ்சியும், வெஞ்சுடரோன் (கஙு)
மன்னுமழனுகர்ந்தும்வண்டடத்தினுட்கிடந்தும்
இன்னதோர்தன்மையராயிங்குடலம்விட்டெழுந்து (கச)
தொன்னெறிக்கண்சென்றாரெனப்படுஞ்சொல்லல்லால்
இன்னதோர்காலத்தினையாரிதுபெற்றார் (கரு)
என்னவுங்கேட்டறிவதில்லை, யுளதென்னில்
மன்னுங்கடுங்கதிரோன்மண்டலத்தினன்னடுவுள் (கசு)
அன்னதோரில்லியினூடுபோய், வீடென்னும்
தொன்னெறிக்கட்சென்றாரைச்சொல்லுமின்கள்சொல்லாதே
அன்னதேபேசுமறிவிற்சிறுமனத், தாங்
கன்னவரைக்கற்பிப்போம்யாமேயதுநிற்க (கஅ)
முன்னநான்சொன்னவறத்தின்வழிமுயன்ற
அன்னவர்தாங்கண்டீர்களாயிரக்கண்வானவர்கோன் (ககூ)
பொன்னகரம்புக்கமரர்போற்றிசைப்ப, பொங்கொளிசேர்
கொன்னவிலுங்கோளரிமாத்தான்சுமந்தகோலஞ்சேர் உ0
மன்னியசிங்காசனத்தின்மேல், வாணெடுங்கண்
கன்னியராலிட்டகவரிப்பொதியவிழ், தாங்
கின்னிளம்பூந்தென்றலியங்க, மருங்கிருந்த
மின்னனையநுண்மருங்குன்மெல்லியலார்வெண்முறுவல்()
முன்னமுகிழ்த்தமுகிழ்நிலாவந்தரும்ப
அன்னவர்தமானுக்கமுண்டாங்கணிமலர்சேர் (உஙு)
பொன்னியற்கற்பகத்தின்காடுடுத்தமாடெல்லாம்
மன்னியமந்தாரம்பூத்தமதுத்திவலை (உச)
இன்னிசைவண்டமருஞ்சோலைவாய்மாலைசேர்
மன்னியமாமயில்போற்கூந்தன், மழைத்தடங்கண் (உரு)

மின்னிடையாரோடும்விளையாடிவேண்டிடத்து
மன்னுமணித்தலத்துமாணிக்கமஞ்சரியின் (௨௬)
மின்னினொளிசேர்பளிங்குவிளிம்படுத்த
மன்னும்பவளக்காற்செம்பொன்செய்மண்டபத்துள் (௨௭)
அன்னநடையவரம்பையர்தங்கைவளர்த்த
இன்னிசையாழ்பாடல்கேட்டின்புற், றிருவிசும்பில் (௨௮)
மன்னுமழைதவழும்வாணிலாநீண்மதிதோய்
மின்னினொளிசேர்விசும்பூருமாளிகைமேல் (௨௯)
மன்னுமணிவிளக்கைமாட்டி, மழைக்கண்ணார்
பன்னுவிசித்திரமாப்பாப்படுத்தபள்ளிமேல் (௩௦)
துன்னியசாலேகஞ்சூழ்கதவந்தாடிறப்ப
அன்னமுழக்கநெரிந்துக்கவாணீலச் (௩௧)
சின்னநறுந்தாதுசூடி, யோர்மந்தாரம்
துன்னுநறுமலராற்றோள்கொட்டிக், கற்பகத்தின் (௩௨)
மன்னுமலர்வாய்மணிவண்டுபின்றொடர
இன்னிளம்பூந்தென்றல்புகுந்தீங், கிளமுலைமேல் (௩௩)
நன்னறுஞ்சந்தனச்சேறுபுலர்த்த,தாங்கருஞ்சீர்
மின்னிடைமேற்கைவைத்திருந்தேந்திளமுலைமேல் (௩௪)
பொன்னரும்பாரம்புலம்ப, வகங்குழைத்தாங்
கின்னவுருவிமையாத்தடங்கண்ணார் (௩௫)
அன்னவர்தம்மானோக்கமுண்டாங்கணிமுறுவல்
இன்னமுதமாந்தியிருப்ப, ரிதுவன்றே (௩௬)
அன்னவறத்தின்பயனுவ, தொண்பொருளும்
அன்னதிறத்ததேயாதலாற், காமத்தின் (௩௭)
மன்னும்வழிமுறையேநிற்றுநா, மானோக்கில்
அன்னநடையாரலரேசவாடவர்மேல் (௩௮)
மன்னுமடலூராரொன்பதோர்வாசகமும்
தென்னுரையிற்கேட்டறிவதுண்டதனையாந்தெளியோம் ( )
மன்னும்வடநெறியேவேண்டினோம், வேண்டாதார்
தென்னன்பொதியிற்செழுஞ்சந்தனக்குழம்பின் (௪௦)
அன்னதோர்தன்மையறியாதா, ராயன்வே
யின்னிசையோசைக்கிரங்காதார், மால்விடையின் (௪௧)
மன்னுமணிபுலம்பவாடாதார், பெண்ணைமேல்
பின்னுமவ்வன்றிற்பெடைவாய்ச்சிறுகுரலுக் (௪௨)
குன்னியுடலுருகிநையாதா, ரும்பர்வாய்த்
துன்னுமதியுகுத்ததூநிலாநீணெருப்பில் (௪௩)
தம்முடலம்வேவத்தளராதார், காமவேள்
மன்னுஞ்சிலைவாய்மலர்வாளிகோத்தெய்யப் (௪௪)

பொன்னெடுவீதிபுகாதார், தம்பூவணைமேல்
சின்னமலர்க்குழலுமல்குலுமென்முலையும் (௪௫)
இன்னிளவாடைதடவத்தாங்கண்டுயிலும்
பொன்னனையார்பின்னுந்திருவுறுக, போர்வேந்தன் (௪௬)
தன்னுடையதாதைபணியாலரசொழிந்து
பொன்னகரம்பின்னேபுலம்பவலங்கொண்டு (௪௭)
மன்னும்வளநாடுகைவிட்டு, மாதிரங்கள்
மின்னுருவில்விண்டேர்திரிந்துவெளிப்பட்டுக் (௪௮)
கன்னிறைந்துதீய்ந்துகழையுடைந்துகால்சுழன்று
பின்னுந்திரைவயிற்றுபேயேதிரிந்துலவாக் (௪௯)
கொன்னவிலும்வெங்கானத்தூடு, கொடுங்கதிரோன்
துன்னுவெயில்வறுத்தவெம்பரல்மேற்பஞ்சடியால் (௫0)
மன்னனிராமன்பின்வைதேவியென்றுரைக்கும்
அன்னநடையவணங்குநடந்திலளே (௫௧)
பின்னுங்கருநெடுங்கட்செவ்வாய்ப்பிணைநோக்கில்
மின்னனையநுண்மருங்குல்வேகவதியென்றுரைக்கும் ௫௨
கன்னி, தன்னின்னுயிராங்காதலனைக்காணாது
தன்னுடையமுன்றோன்றற்கொண்டேகத்தான்சென்றங் ()
கன்னவனைநோக்காதழித்துரப்பி, வாளமருள்
கன்னவில்தோள்காளையைக்கைப்பிடித்துமீண்டும்போய் ()
பொன்னவிலுமாகம்புணர்ந்திலளே, பூங்கங்கை
முன்னம்புனல்பரக்குநன்னாடன், மின்னாடும் (௫௫)
கொன்னவிலுநீள்வேற்குருக்கள்குலமதலை
தன்னிகரொன்றில்லாதவென்றித்தனஞ்சயனைப் (௫௬)
பன்னாகராயன்மடப்பாவை, பாவைதன்
மன்னியநாணச்சமடமென்றிவையகலத் (௫௭)
தன்னுடையகொங்கைமுகநெரிய, தானவன்றன்
பொன்வரையாகந்தழீஇக்கொண் போய், தனது (௫௮)
நன்னகரம்புக்குநயந்தினிதுவா ந்ததுவும்
முன்னுரையிற்கேட்டறிவதில்லையே, சூழ்கடலுள் (௫௯)
பொன்னகரஞ்செற்றபுரந் ரனோடொக்கும்
மன்னவன்வாணனவு க்குவாள்வேந்தன் (௬0)
தன்னுடையபாவை லகத்துத்தன்னொக்கும்
கன்னியரையில்ல காட்சியாள், தன்னுடைய
இன்னுயிர்த்தோழியா லெம்பெருமானீன்றுழாய்
மன்னுமணி த்தோண்மாயவன், பாவியேன் (௬௨)
என்னை விளைத்தவிரண்டுமால்வரைத்தோள்
ன்றன்காதலனைமாயத்தாற்கொண்டுபோய் (௬௩)

தன்னுடையதாண்மேற்கடாத்தி, யவனுடைய
பொன்னகலம்வள்ளுகிராற்போழ்ந்துபுகழ்படைத்த க0உ
மின்னிலங்குமாழிப்படைத்தடக்கைவீரனை
மன்னிவ்வகலிடத்தைமாமுதுநீர்தான்விழுங்கப் (க0ங)
பின்னுமோரேனமாய்ப்புக்குவளைமருப்பில்
கொன்னவிலுங்கூர்நுதிமேல்வைத்தெடுத்தகூத்தனை க0ச
மன்னும்வடமலையைமத்தாகமாசுணத்தால்
மின்னுமிருசுடரும்விண்ணும்பிறங்கொளியும் (க0ரு)
தன்னினுடனேசுழலமலைதிரித், தாங்
கின்னமுதம்வானவரையூட்டி, யவருடைய (க0சு)
மன்னுந்துயர்கடிந்தவள்ளலை, மற்றன்றியும்
தன்னுருவமாருமறியாமற்றானங்கோர் (க0எ)
மன்னுங்குறளுருவில்மாணியாய், மாவலிதன்
பொன்னியலும்வேள்விக்கண்புக்கிருந்து, போர்வேந்தர் ()
மன்னைமனங்கொள்ளவஞ்சித்துநெஞ்சுருக்கி
என்னுடையபாதத்தால்யானளப்பமூவடிமண் (க0கூ)
மன்னதருகென்றுவாய்திறப்ப, மற்றவனும்
என்னாற்றரப்பட்டதென்றலுமே, யத்துணைக்கண் (கக0)
மின்னார்மணிமுடிபோய்விண்டடவ, மேலெடுத்த
பொன்னார்கனைகழற்காலேழுலகும்போய்க்கடந், தங் ககக
கொன்னவசுரர்துளங்கச்சிலைநீட்டி
மன்னிவ்வகலிடத்தைமாவலியைவஞ்சித்துத் (ககஉ)
தன்னுலகமாக்குவித்ததாளானைத், தாமரைமேல்
மின்னிடையாளுபகனைவிண்ணகருட்பொன்மலையைப் ()
பொன்னிமணிகொழிக்கும்பூங்குடந்தைபோர்விடையைத்
தென்னங்குறுங்குடியுட்செம்பவளக்குன்றினை (ககச)
மன்னியதண்சேறைவள்ளலை, மாமலர்மேல்
அன்னந்துயிலுமணிநீர்வயலாலி (ககரு)
என்னுடையவின்னமுதையெவ்வுட்பெருமலையைக்
கன்னிமதில்சூழ்கணமங்கைக்கற்பகத்தை (ககசு)
மின்னையிருசுடரைவெள்ளறையுட்கல்லறைமேல்
பொன்னை, மரதகத்தைப்புட்குழியெம்போரேற்றை (ககஎ)
* மன்னுமரங்கத்தெம்மாமணியை, வல்லவாழ்
பின்னைமணாளனைப்பேரிற்பிறப்பிலியைத் (ககஅ)
தொன்னீர்கடற்கிடந்ததோளாமணிச்சுடரை
என்மனத்துமாலையிடவெந்தையீசனை (கககூ)
மன்னுங்கடன்மல்லைமாயவனை, வானவர்தம்
சென்னிமணிச்சுடரைத்தண்கால்திறல்வலியைத் (கஉ0)

தன்னைப்பிறரறியாத்தத்துவத்தைமுத்தினை
அன்னத்தைமீனையரியையருமறையை (௧௨௧)
முன்னிவ்வுலகுண்டமூர்த்தியைக், கோவலூர்
மன்னுமிடைகழியெம்மாயவனைப், பேயலறப் (௧௨௨)
பின்னுமுலையுண்டபிள்ளையை, யள்ளல்வாய்
அன்னமிரைதேரழுந்தூரெழுஞ்சுடரைத் (௧௨௩)
* தென்தில்லைச்சித்திரகூடத்தென்செல்வனை
மின்னிமழைதவழும்வேங்கடத்தெம்வித்தகனை (௧௨௪)
மன்னனைமாலிருஞ்சோலைமணாளனைக்
கொன்னவிலுமாழிப்படையானைக், கோட்டியூர் (௧௨௫)
அன்னவுருவிலரியைத், திருமெய்யத்
தின்னமுதவெள்ளத்தையிந்தளூரந்தணனை (௧௨௬)
மன்னுமதிட்கச்சிவேளுக்கையாளரியை
மன்னியபாடகத்தெம்மைந்தனை, வெஃகாவில் (௧௨௭)
உன்னியயோகத்துறக்கத்தை, யூரகத்துள்
அன்னவனையட்டபுயகரத்தெம்மானேற்றை (௧௨௮)
என்னைமனங்கவர்ந்தவீசனை, வானவர்தம்
முன்னவனைமூழிக்களத்துவிளக்கினை (௧௨௯)
அன்னவனையாதனூராண்டளக்குமையனை
நென்னலையின்றினைநாளையை, நீர்மலைமேல் (௧௩0)
மன்னுமறைநான்குமானானைப், புல்லாணித்
தென்னன்றமிழைவடமொழியை, நாங்கூரில் (௧௩௧)
மன்னுமணிமாடக்கோயின்மணாளனை
நன்னீர்த்தலைச்சங்கைநாண்மதியை, நான்வணங்கும் ௧௩௨
கண்ணனைக்கண்ணபுரத்தானைத், தென்னறையூர்
மன்னுமணிமாடக்கோயின்மணாளனைக் (௧௩௩)
கன்னவில்தோட்காளையைக்கண்டாங்குக்கைதொழுது
என்னிலைமையெல்லாமறிவித்தாலெம்பெருமான் (௧௩௪)
தன்னருளுமாகமுந்தாரானேற், றன்னைநான்
மின்னிடையார்சேரியிலும்வேதியர்கள்வாழ்விடத்தும் ()
தன்னடியார்முன்புந்தரணிமுழுதாளும்
கொன்னவிலும்வேல்வேந்தர்கூட்டத்துநாட்டகத்தும் ()
தன்னிலைமையெல்லாமறிவிப்பன், முன்முன்னாள்
மின்னிடையாய்ச்சியர்தஞ்சேரிக்களவின்கண் (௧௩௭)
துன்னுபடற்றிறந்துபுக்குத், தயிர்வெண்ணெய்
தன்வயிறாரவிழுங்கக், கொழுங்கயற்கண் (௧௩௮)
மன்னுமடவோர்கள்பற்றியோர்வான்கயிற்றால்
பின்னுமுரலோடுகட்டுண்டபெற்றிமையும் (௧௩௯)

அன்னதோர்பூதமாயாயர்விழவின்கண்
துன்னுசகடத்தாற்புக்கபெருஞ்சோற்றை (௧௪௰)
முன்னிருந்துமுற்றத்தான்றுற்றியதெற்றெனவும்
மன்னர்பெருஞ்சவையுள்வாழ்வேந்தர்தூதனாய்த் (௧௪௧)
தன்னையிகழ்ந்துரைப்பத்தான்முனநாட்சென்றதுவும்
மன்னுபறைகறங்கமங்கையர்தங்கண்களிப்பக் (௧௪௨)
கொன்னவிலுங்கூத்தனாய்ப்பேர்த்துங்குடமாடி
என்னிவனென்னப்படுகின்றவீடறவும் (௧௪௩)
தென்னிலங்கையாட்டியரக்கர்குலப்பாவை
மன்னனிராவணன்றனற்றங்கை, வாளெயிற்றுத் (௧௪௪)
துன்னுசுடுசினத்துச்சூர்ப்பணகாச்சோர்வெய்திப்
பொன்னிறங்கொண்டுபுலர்ந்தெழுந்தகாமத்தால் (௧௪௫)
தன்னைநயந்தாளைத்தான்முனிந்துமூக்கரிந்து
மன்னியதிண்ணெனவும்வாய்த்தமலைபோலும் (௧௪௬)
தன்னிகரொன்றில்லாததாடகையை, மாமுனிக்காத்
தென்னுலகமேற்றுவித்ததிண்டிறலு, மற்றிவைதான் ௧௪௭
உன்னியுலவாவுலகறியவூர்வன்னான்
முன்னிமுளைத்தெழுந்தோங்கியொளிபரந்த ௧௪௮
மன்னியபூம்பெண்ணைமடல். (௧௪௯)

ஆ வாக்யம் - ௨௬௭ - க்குப்பாசுரம் - ௧௪௯.

என்னிலைமையெல்லாமறிவித்தாலெம்பெருமான்
தன்னருளுமாகமுந்தாரானேல்—பின்னைப்போய்
ஒண்டுறைநீர்வேலையுலகறியவூர்வன்னான்
வண்டறைபூம்பெண்ணைமடல்.

திருவெழுகூற்றிருக்கை பாசுரம் - ௧.

சிறியதிருமடல் வாக்யம் - ௧௫௫.—பெரியதிருமடல் வாக்யம் - ௨௬௭.

ஆ வாக்யம்-௪௨௨-க்கு-வாக்யம்-௨-க்கு-ஒரு பாசுரமாக-௨௨௬.

ஆ ப்ரபந்தம்-௩-க்கு-பாசுரம்-௨௨௭.

---

திருமங்கையாழ்வார்திருவடிகளேஶரணம்.

ஜீயர் திருவடிகளேஶரணம்.

பெரியதிருமடல்முற்றும்.

---

## இயற்பா முற்றிற்று.

முதலாயிரம் ... ... பாசுரம் ... ௬௪௭.
பெரியதிருமொழி... ...பாசுரம் ...௧௧௩௪.
இயற்பா ... ... ...பாசுரம் ... ௮௧௭.
ஆ பாசுரம் ...௨௮௧௮.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

மயர்வறமதிநலமருளப்பெற்ற
ப்ரபந்நஜநகூடஸ்தரான
நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய
ப்ரபந்தங்கள் நான்கனுள் சரமமாய்
பகவதநுபவபரீவாஹரூப த்ராவிடவேதஸாகரமான
ஸாமவேதஸாரமாகிய

# திருவாய்மொழி.

இஃது,
ஸ்ரீமத் உ. வே. தத்வப்ரவர்த்தகராயெழுந்தருளியிருக்கும்
ஸ்ரீபாங்-கபிஸ்தலம்-திருமலை-அநந்தாண்பிள்ளை
அநந்தாசார்யஸ்வாமிகளாலும்,
ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீபாதரேணுவாகிய
ஸங்ககிரி - புரமு
குருஸ்வாமிநாயுடு அவர்களாலும்,
பாடபாடாந்தரங்களுக்குசிதமாக
பரிசோதிக்கப்பட்டு,
ஸ்ரீ. உ. வேதாந்தேத்யாதி-திருமலை-நல்லான்சக்ரவர்த்தி
க்ருஷ்ணமாசார்யரவர்கள் திருவடிஸம்பந்தியும்,
பரசமயக்கோளரி
ஸ்ரீமாந்-முடிச்சூர்-அப்பாவுமுதலியாரவர்களால்
ஏற்படுத்தப்பட்டுள்ள
ஸ்ரீமத்வரவரமுநீந்த்ரனைவாழ்த்தும்
ஸபையைச்சேர்ந்தவருமாகிய
ஸ்ரீ. ரா. ராமக்ருஷ்ணபிள்ளையவர்களால்

சென்னை:
ஆதிகலாநிதி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

ஸ்ரீவகுளபூஷணபாஸ்கரோதயம் - ௪௯௮௫-வதான
ஸ்வபாநுநாமஸம்வத்ஸரம்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ.

# விண்ணப்பம்.

மயர்வறமதிநல மருளப்பெற்ற ஆழ்வார்கள் பரமகாருணிகர்களாய் ப்ரவசநம் செய்தருளிய த்ரவிடவேதமாகும் திவ்யப்ரபந்தங்கள் இதுகாறும் ப்ரசுரிக்கப்பட்டுள்ளவை பாடபாடாந்தரங்களுக்கு பேதமாயும், வ்யாக்யாந பங்திகளுக் கொவ்வாதனவாயு முள்ளமைகொண்டு அவை சுத்தப்ரதியாக்கி யச்சிட்டுத்தர அநேகபாகவதோத்தமர்கள் விரும்பினமையால், அத்தோஷங் களொன்றுமின்றி,அத்யாபகர்கள் நிறுத்துமிடங்களுங்குறிப்பிட்டுப்ரசுரஞ்செ ய்யலாயின இதனைஸேவிக்கும் காலக்ஷேபஸ்வாமிகளும், மற்றுள்ளாரும், கீழி ற்கண்டுள்ள ப்ராமாதிகதோஷங்களி லேதேனுங் காணுவ துண்டாயின் க்ரு பைகூர்ந்து அடியேனுக்குத்தெரிவித்தால் அத்தனையுமில்லாமல் மறுபதிப்பில் காணலாம்,

( , ) இக்குறியிட்டுள்ள விடங்களே அத்யாபகாள் நிறுத்துமிடமென்று ணர்வது.

( * ) இக்குறியிட்டுள்ள பாசுரங்கள் இரட்டித்துச்சேவிக்குமவை.

இக் க்ரந்தம் வேண்டுமெவர்கள் சென்னை: திருவல்லிக்கேணி ஆலங்காத்தா பிள்ளைவீதி - ௧௧ - வது நெம்பருள்ள மாளிகையில் ஸ்ரீ. ரா. ராமக்ருஷ்ண பிள்ளையிடத்திற் பெற்றுக்கொள்ளலாம்.

இங்ஙனம்,



ஸ்ரீ

    

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# திருவாய்மொழி

## தனியன்கள்.

ஸ்ரீமந்நாதமுநிகளருளிச்செய்தது.

𑌭𑌕𑍍𑌤𑌾𑌮𑍃𑌤𑌂𑌵𑌿𑌶𑍍𑌵𑌜𑌨𑌾𑌨𑍁𑌮𑍋𑌦𑌨𑌮𑍍
𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌦𑌂𑌶𑍍𑌰𑍀𑌶𑌠𑌕𑍋𑌪𑌵𑌾𑌙𑍍𑌮𑌯𑌮𑍍 ।
𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑌾𑌖𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑌮𑌾𑌗𑌮𑌮𑍍
𑌨𑌮𑌾𑌮𑍍𑌯𑌹𑌂𑌦𑍍𑌰𑌾𑌵𑌿𑌡𑌵𑍇𑌦𑌸𑌾𑌗𑌰𑌮𑍍 ॥

பக்தாம்ருதம்விஸ்வஜநாநுமோதநம்
ஸர்வார்த்ததம்ஸ்ரீஶடகோபவாங்மயம்
ஸஹஸ்ரஶாகோபநிஷத்ஸமாகமம்
நமாம்யஹம்த்ராவிடவேதஸாகரம்.

ஈஶ்வரமுநிகளருளிச்செய்தது.

திருவழுதிநாடென்றுந்தென்குருகூரென்றும்
மருவினியவண்பொருநலென்றும்—அறுமறைகள்
அந்தாதிசெய்தானடியிணையேயெப்பொழுதும்
சிந்தியாய்நெஞ்சேதெளிந்து.

சொட்டைநம்பிகளருளிச்செய்தது.

மனத்தாலும்வாயாலும்வண்குருகூர்பேணும்
இனத்தாரையல்லாதிறைஞ்சேன்—தனத்தாலும்
ஏதுங்குறைவிலேனெந்தைசடகோபன்
பாதங்கள்யாமுடையபற்று.

அநந்தாழ்வானருளிச்செய்தது.

ஏய்ந்தபெருங்கீர்த்தியிராமாநுசமுனிதன்
வாய்ந்தமலர்ப்பாதம்வணங்குகின்றேன்—ஆய்ந்தபெரும்
சீரார்சடகோபன்செந்தமிழ்வேதந்தரிக்கும்
பேராதவுள்ளம்பெற.

பட்டரருளிச்செய்தன.

வான்றிகழுஞ்சோலைமதிளரங்கர்வண்புகழ்மேல்
ஆன்றதமிழ்மறைகளாயிரமும்—ஈன்ற
முதற்றாய்சடகோபன்மொய்ம்பால்வளர்த்த
இதத்தா, யிராமாநுசன்.

மிக்கவிறைநிலையுமெய்யாமுயிர்நிலையும்
தக்கநெறியுந்தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும்வாழ்வினையுமோதுங்குருகையர்கோன்
யாழினிசைவேதத்தியல்

---

## ஸ்ரீ மணவாளமாமுனிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருவாய்மொழி நூற்றந்தாதியின்

## தனியன்கள்.

நேரிசைவெண்பா.

அல்லும்பகலுமனுபவிப்பார்தங்கட்குச்
சொல்லும்பொருளுந்தொகுத்துரைத்தான்—நல்ல
மணவாளமாமுனிவன்மாறன்மறைக்குத்
தணவாநூற்றந்தாதிதான்.

மன்னுபுகழ்சேர்மணவாளமாமுனிவன்
தன்னருளாலுட்பொருள்கடன்னுடனே—சொன்ன
திருவாய்மொழிநூற்றந்தாதியாந்தேனை
ஒருவாதருந்துநெஞ்சேயுற்று.

தனியன்கள் முற்றும்.

---



ஸ்ரீ



ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ.

ஶாஸ்த்ரஜந்யஜ்ஞாந போகஜந்யஜ்ஞாநங்களைவிட ஆயிரமடங்கதிஶயித்த
பகவத்ப்ரஸாதஜந்ய தத்வயாதாத்ம்யஜ்ஞாந வித்தமராய்,
மயர்வறமதிநலமருளப்பெற்ற ப்ரபந்நஜநகூடஸ்த்தரா யெழுந்தருளியிருக்கும்
மஹாப்ரபாவரான
நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய
ப்ரபந்தங்கள் நான்கனுள் சரமமாய்
பகவதநுபவ பரீவாஹரூப த்ராவிடவேதஸாகரமான
ஸாமவேதஸாரமாகிய

# திருவாய்மொழி.

## முதற்பத்து.

### க - ம் திருவாய்மொழி - உயர்வு.

எம்பெருமானது கல்யாணகுணங்களையும், பரத்வத்தையும்
அருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம் - பண் - முதிர்ந்த குறிஞ்சி - தாளம் - ஏழொத்து.

கமாசுராகம் - ஆதிதாளம்.

* உயர்வறவுயர்நலமுடையவன்யவனவன்
மயர்வறமதிநலமருளினன்யவனவன்
அயர்வறுமமரர்களதிபதியவனவன்
துயரறுசுடரடிதொழுதெழென்மனனே. (க)

மனனகமலமறமலர்மிசையெழுதரும்
மனனுணர்வளவிலன்பொறியுணர்வவையிலன்
இனனுணர்முழுநலமெதிர்நிகழ்கழிவினும்
இனனிலனெனனுயிர்மிகுநரையிலனே. (௨)

இலனதுவுடையனிதெனநினைவரியவன்
நிலனிடைவிசும்பிடையுருவினனருவினன்
புலனொடுபுலனலனொழிவிலன்பரந்த, வந்
நலனுடையொருவனைநணுகினம்நாமே. (௩)

நாமவனிவனுவனவளிவளுவளெவள்
தாமவரிவருவரதுவிதுவுதுவெது
வீமவையிவையுவையவைநலந்தீங்கவை
ஆமவையாயவையாய்நின்றவவரே. (௪)

அவரவர்தமதமதறிவறிவகைவகை
அவரவரிறையவரெனவடியடைவர்கள்
அவரவரிறையவர்குறைவிலரிறையவர்
அவரவர்விதிவழியடையநின்றனரே. (௫)

நின்றனரிருந்தனர்கிடந்தனர்திரிந்தனர்
நின்றிலரிருந்திலர்கிடந்திலர்திரிந்திலர்
என்றுமோரியல்வினரெனநினைவரியவர்
என்றுமோரியல்வொடுநின்றவெந்திடரே. (௬)

திடவிசும்பெரிவளிநீர்நிலமிவைமிசைப்
படர்பொருண்முழுவதுமாயவையவைதொறும்
உடன்மிசையுயிரெனக்கரந்தெங்கும்பரந்துளன்
சுடர்மிகுசுருதியுளிவையுண்டசுரனே. (௭)

சுரரறிவருநிலைவிண்முதன்முழுவதும்
வரன்முதலாயவைமுழுதுண்டபரபரன்
புரமொருமூன்றெரித்தமரர்க்குமறிவியந்
தரனயனெனவுலகழித்தமைத்துளனே. (௮)

உளனெனிலுளனவனுருவமிவ்வுருவுகள்
உளனலனெனிலவனருவமிவ்வருவுகள்
உளனெனவிலனெனவிவைகுணமுடைமையில்
உளனிருதகைமையொடொழிவிலன்பரந்தே. (௯)

பரந்ததண்பரவையுணீர்தொறும்பரந்துளன்
பரந்தவண்டமிதெனநிலவிசும்பொழிவறக்
கரந்தசிலிடந்தொறுமிடந்திகழ்பொருடொறும்
கரந்தெங்கும்பரந்துளனிவையுண்டகரனே. (௧௦)

* கரவிசும்பெரிவளிநீர்நிலமிவைமிசை
வரனவிறிறல்வலியவளிபொறையாய்நின்ற
பரனடிமேற்குருகூர்ச்சடகோபன்சொல்
நிரனிறையாயிரத்திவைபத்தும்வீடே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம் - ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ பாசுரம் - கக.

---

உயர்வேபரன்படியையுள்ளவெலாந்தான்கண்
டுயர்வேதநேர்கொண்டுரைத்து—மயர்வேதும்
வாராமன்மானிடனைவாழ்விக்குமாறன்சொல்
வேராகவேவிளையும்வீடு. (க)

---

## உ-ம் திருவாய்மொழி - வீடு.

இப்படிப்பட்ட பரத்வத்தில் ஸகலரும் ப்ரபத்திபண்ணி
உஜ்ஜீவியுங்கோளென்றருளிச்செய்கிறார்.

வஞ்சித்துறை - பண் - முதிர்ந்தகுறிஞ்சி - தாளம் - ஏழொத்து.

செஞ்சுருட்டிராகம் - அடதாளம்.

* வீடுமின்முற்றவும்
வீடுசெய், தும்முயிர்
வீடுடையானிடை
வீடுசெய்மின்னே. (க)

மின்னினிலையில
மன்னுயிராக்கைகள்
என்னுமிடத், திறை
உன்னுமினீரே. (உ)

நீர்நுமதென்றிவை
வேர்முதன்மாய்த், திறை
சேர்மினுயிர்க்கதன்
நேர்நிறையில்லே. (ங)

இல்லதுமுள்ளதும்
அல்லதவனுரு
எல்லையிலந்நலம்
புல்குபற்றற்றே. (ச)

அற்றதுபற்றெனில்
உற்றதுவீடுயிர்
செற்றதுமன்னுறில்
அற்றிறைபற்றே. (ரு)

பற்றிலனீசனும்
முற்றவுநின்றனன்
பற்றிலையா, யவன்
முற்றிலடங்கே. (சு)

அடங்கெழில்சம்பத்
தடங்கக்கண், டீசன்
அடங்கெழிலஃதென்
றடங்குகவுள்ளே. (எ)

உள்ளமுரைசெயல்
உள்ளவிம்மூன்றையும்
உள்ளிக்கெடுத், திறை
உள்ளிலொடுங்கே. (அ)

ஒடுங்கவவன்கண்
ஒடுங்கலுமெல்லாம்
விடும்பின்னுமாக்கை
விடும்பொழுதெண்ணே. (கூ)

* எண்பெருக்கந்நலத்
தொண்பொருளீறில
வண்புகழ்நாரணன்
திண்கழல்சேரே. (க0)

தானொருருவேதனிவித்தாய்த்தன்னின்மூவர்முதலாய
வானோர்பலருமுனிவருமற்றும்மற்றுமுற்றுமாய்த்
தானோர்பெருநீர்தன்னுள்ளேதோற்றியதனுட்கண்வளரும்
வானோர்பெருமான்மாமாயன்வைகுந்தனெம்பெருமானே. (௪)

மானேநோக்கிமடவாளைமார்பிற்கொண்டாய்மாதவா
கூனேசிதையவுண்டைவின்னிறத்திற்றெறித்தாய்கோவிந்தா
வானார்சோதிமணிவண்ணாமதுசூதாநீயருளா, யுன்
தேனேமலருந்திருப்பாதஞ்சேருமாறுவினையேனே. (௫)

வினையேன்வினைதீர்மருந்தானாய்விண்ணோர்தலைவாகேசவா
மனைசேராயர்குலமுதலேமாமாயனேமாதவா
சினையேய்தழையமராமரங்களேழுமெய்தாய்சிரீதரா
இனையாயினையபெயரினாயென்றுநைவனடியேனே. (௬)

அடியேன்சிறியஞானத்தனறிதலார்க்குமரியானைக்
கடிசேர்தண்ணந்துழாய்க்கண்ணிபுனைந்தான்றன்னைக்கண்ணனைச்
செடியாராக்கையடியாரைச்சேர்தல்தீர்க்குந்திருமாலை
அடியேன்காண்பானலற்றுவனிதனின்மிக்கோரயர்வுண்டே. (௭)

உண்டாயுலகேழ்முன்னமேயுமிழ்ந்துமாயையாற்புக்
குண்டாய்வெண்ணெய்சிறுமனிசருவலையாக்கைநிலையெய்தி
மண்டான்சோர்ந்ததுண்டேலுமனிசர்க்காகும்பீர், சிறிதும்
அண்டாவண்ணமண்கரையநெய்யூண்மருந்தோமாயோனே. (௮)

மாயோந்தீயவலவலைப்பெருமாவஞ்சப்பேய்வீயத்
தூயகுழவியாய்விடப்பாலமுதாவமுதுசெய்திட்ட
மாயன், வானோர்தனித்தலைவன்மலராண்மைந்தனெவ்வுயிர்க்கும்
தாயோன், றம்மானென்னம்மானம்மாமூர்த்தியைச்சார்ந்தே. (௯)

சார்ந்தவிருவல்வினைகளுஞ்சரித்துமாயப்பற்றறுத்துத்
தீர்ந்துதன்பான்மனம்வைக்கத்திருத்திவீடுதிருத்துவான்
ஆர்ந்தஞானச்சுடராகியகலங்கீழ்மேலளவிறந்து
நேர்ந்தவுருவாயருவாகுமிவற்றினுயிராநெடுமாலே. (௧0)

* மாலேமாயப்பெருமானேமாமாயனேயென்றென்று
மாலேயேறிமாலருளான்மன்னுகுருகூர்ச்சடகோபன்
பாலேய்தமிழரிசைகாரர்பத்தர்பரவுமாயிரத்தின்
பாலேபட்டவிவைபத்தும்வல்லார்க்கில்லைபரிவதே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆக திருவாய்மொழி - ரு - க்குப் பாசுரம் - ருரு.

---

வளமிக்கமால்பெருமைமன்னுயிரின்றன்மை
உளமுற்றங்கூடுருவவோர்ந்து—தளர்வுற்று
நீங்கநினைமாறனைமால்நீடிலகுசீலத்தால்
பாங்குடனேசேர்த்தான்பரிந்து. (ரு)

## சுா - ம் திருவாய்மொழி - பரிவதில்.

ஈஶ்வரனிடத்திலிப்படிப்பட்டகுணமிருப்பதையறியாமல் ஆத்மாக்கள் நரகத்தையடைவது அந்யாயமென்று, ஈஶ்வரன் துராராத்யனன்று எல்லாருமாஶ்ரயித்து உஜ்ஜீவியுங்கோளென்கிறார்.

வஞ்சிவிருத்தம் - பண் — முதிர்ந்தகுறிஞ்சி - தாளம் - ஏழொத்து.
நாதநாமக்கிரியைராகம் - அடதாளம்.

* பரிவதிலீசனைப்பாடி
விரிவதுமேவலுறுவீர்
பிரிவகையின்றிநன்னீர்தூய்ப்
புரிவதுவும்புகைபூவே. (க)

மதுவார்தண்ணந்துழாயான்
முதுவேதமுதல்வனுக்
கெதுவேதென்பணியென்னா
ததுவேயாட்செய்யுமீடே. (உ)

ஈடுமெடுப்புமிலீசன்
மாடுவிடாதென்மனனே
பாடுமென்னாவவன்பாடல்
ஆடுமெனங்கமணங்கே. (ங)

அணங்கெனவாடுமெனங்கம்
வணங்கிவழிபடுமீசன்
பிணங்கியமரர்பிதற்றும்
குணங்கெழுகொள்கையினானே. (௪)

கொள்கைகொளாமையிலாதான்
எள்கலிராகமிலாதான்
விள்கைவிள்ளாமைவிரும்பி
உள்கலந்தார்க்கோரமுதே. (ரு)

அமுதமமரர்கட்கீந்த
நிமிர்சுடராழிநெடுமால்
அமுதிலுமாற்றவினியன்
நிமிர்திரைநீள்கடலானே. (சா)

நீள்கடல்சூழிலங்கைக்கோன்
தோள்கடிலதுணிசெய்தான்
தாள்கடலையில்வணங்கி
நாள்கடலைக்கழிமினே. (எ)

கழிமின்றொண்டர்கள்கழித்துத்
தொழுமினவனைத்தொழுதால்
வழிநின்றவல்வினைமாள்வித்
தழிவின்றியாக்கந்தருமே. (அ)

தருமவரும்பயனாய
திருமகளார்தனிக்கேள்வன்
பெருமையுடையபிரானார்
இருமைவினைகடிவாரே. (கூ)

கடிவார்தீயவினைகள்
நொடியாருமளவைக்கட்
கொடியாவடுபுள்ளுயர்த்த
வடிவார்மாதவனாரே. (க0)

* மாதவன்பாற்சடகோபன்
தீதவமின்றியுரைத்த
ஏதமிலாயிரத்திப்பத்
தோதவல்லார்பிறவாரே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்,
ஆ திருவாய்மொழி - சு - க்குப் பாசுரம் - சுசு.

பரிவதிலீசன்படியைப்பண்புடனேபேசி
அரியனலனாராதனைக்கென்—றுரிமையுடன்
ஓதியருண்மாறனெறியோதாதவர்க்கிவ்வுலகில்
பேதையர்கடங்கள்பிறப்பு (சுா)

## எ-ம் திருவாய்மொழி - பிறவி.

ஸ்வாராத்யனான ஈஶ்வரனுடைய ஆராதநம் ஸுகரூபமா யிருக்குமென்றருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம் - பண் - வியந்தம் - தாளம் - ஏழொத்து.

மத்தியமாவதிராகம் - அடதாளம்.

* பிறவித்துயரறஞானத்துணின்று
துறவிச்சுடர்விளக்கந்தலைப்பெய்வார்
அறவனையாழிப்படையந்தணனை
மறவியையின்றிமனத்துவைப்பாரே. (க)

வைப்பாமருந்தாமடியரை, வல்வினைத்
துப்பாம்புலனைந்துந்துஞ்சக்கொடானவன்
எப்பாலெவர்க்குநலத்தாலுயர்ந்துயர்ந்
தப்பாலவனெங்களாயர்கொழுந்தே. (உ)

ஆயர்கொழுந்தாயவராற்புடையுண்ணும்
மாயப்பிரானையென்மாணிக்கச்சோதியைத்
தூயவமுதைப்பருகிப்பருகி, யென்
மாயப்பிறவிமயர்வறுத்தேனே. (௩)

மயர்வறவென்மனத்தேமன்னினான்றன்னை
உயர்வினையேதருமொண்சுடர்க்கற்றையை
அயர்விலமரர்களாதிக்கொழுந்தை, யென்
இசைவினையென்சொல்லியான்விடுவேனோ. (௪)

விடுவேனோவென்விளக்கையென்னாவியை
நடுவேவந்துய்யக்கொள்கின்றநாதனைத்
தொடுவேசெய்திளவாய்ச்சியர்கண்ணினுள்
விடவேசெய்துவிழிக்கும்பிரானையே. (௫)

பிரான்பெருநிலங்கீண்டவன், பின்னும்
விராய்மலர்த்துழாய்வேய்ந்தமுடியன்
மராமரமெய்தமாயவனென்னுள்
இரானெனிற்பின்னையானொட்டுவேனோ. (௬)

யானொட்டியென்னுளிருத்துவமென்றிலன்
தானொட்டிவந்தென்றனிநெஞ்சைவஞ்சித்
தூனொட்டிநின்றென்னுயிரிற்கலந், தியல்
வானொட்டுமோவினியென்னைநெகிழ்க்கவே. (எ)

என்னைநெகிழ்க்கிலுமென்னுடைநன்னெஞ்சம்
தன்னையகல்விக்கத்தானுங்கில்லானினிப்
பின்னைநெடும்பணைத்தோள்மகிழ்ப்பீடுடை
முன்னையமரர்முழுமுதலானே. (அ)

அமரர்முழுமுதலாகியவாதியை
அமரர்க்கமுதீந்தவாயர்கொழுந்தை
அமரவழும்பத்துழாவியென்னுவி
அமரத்தழுவிற்றினியகலுமோ. (௯)

அகவிலகலுமணுகிலணுகும்
புகலுமரியன்பொருவல்லனெம்மான்
நிகரிலவன்புகழ்பாடியிளைப்பிலம்
பகலுமிரவும்படிந்துகுடைந்தே. (க0)

* குடைந்துவண்டுண்ணுந்துழாய்முடியானை
அடைந்ததென்குருகூர்ச்சடகோபன்
மிடைந்தசொற்றொடையாயிரத்திப்பத்
துடைந்துநோய்களையோடுவிக்குமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - எ - க்குப் பாசுரம் - எஎ.

---

பிறவியற்றுநீள்விசும்பிற்பேரின்பமுய்க்கும்
திறமளிக்குஞ்சீலத்திருமால்—அறவினியன்
பற்றுமவர்க்கென்றுபகர்மாறன்பாதமே
உற்றதுணையென்றுளமேயோடு. (எ)

---

## அ - ம் திருவாய்மொழி - ஓடும்.

ஸ்வரூபமான ஆஶ்ரயணமுடைய ஈஶ்வரன்
கரணத்ரயத்தாலுங்கிட்டமாட்டாதசேதநரிடத்தில்ஆர்ஜவகுணத்தோடே
ஆஶ்ரிதஸம்ஶ்லேஷம் பண்ணிக்கொண்டிருப்பானென்று
அருளிச்செய்கிறார்.

குறளடிவஞ்சித்துறை - பண் - இந்தளம் - தாளம் - ஏழொத்து.

தேசியராகம் - ஆதிதாளம்.

* ஓடும்புள்ளேறிச்
சூடுந்தண்டுழாய்
நீடுநின்றவை
ஆடுமம்மானே. (க)

அம்மானாய்ப்பின்னும்
எம்மாண்புமானான்
வெம்மாவாய்கீண்ட
செம்மாகண்ணனே. (உ)

கண்ணாவானென்று
மண்ணோர்விண்ணோர்க்குத்
தண்ணார்வேங்கட
விண்ணோர்வெற்பனே. (ங)

வெற்பையொன்றெடுத்
தொற்கமின்றியே
நிற்குமம்மான்சீர்
கற்பன்வைகலே. (ச)

வைகலும்வெண்ணெய்
கைகலந்துண்டான்
பொய்கலவாதென்
மெய்கலந்தானே. (ரு)

கலந்தென்னுவி
நலங்கொணுதன்
புலன்கொண்மாணுய்
நிலங்கொண்டானே. (சு)

கொண்டானேழ்விடை
உண்டானேழ்வையம்
தண்டாமஞ்செய்தென்
எண்டானுனுனே. (எ)

ஆனுனுனுயன்
மீனேடேனமும்
தானுனுனென்னில்
தானுயசங்கே. (அ)

சங்குசக்கரம்
அங்கையிற்கொண்டான்
எங்குந்தானுய
நங்கணுதனே. (கூ)

நாதன்ஞாலங்கொள்
பாதனென்னம்மான்
ஓதம்போற்கிளர்
வேதநீரனே. (க0)

‡ நீர்புரைவண்ணன்
சீர்சடகோபன்
நேர்தலாயிரத்
தோர்தலிவையே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி – அ – க்குப் பாசுரம் – அஅ.

---

ஓடுமனஞ்செய்கையுரையொன்றினில்லாதாருடனே
கூடிநெடுமாலடிசேமகொள்ளுங்கிலை—நாடறிய
ஓர்ந்தவன்றன்செம்மையுரைசெய்தமாறனென
ஏய்ந்துநிற்கும்வாழ்வாமிவை. (அ)

---

## கூ – ம் திருவாய்மொழி – இவையும்.

ஆர்ஜவகுண ஸந்தாநம் பண்ணினதம்மிடத்தில் ஈஶ்வரன்ஸாத்மிக்க
ஸாத்மிக்க ஸர்வாவயவ ஸம்ஶ்லேஷம் பண்ணின
அநுபவரஸத்தை யருளிச்செய்கிருர்.

ஆசிரியவிருத்தம்–பண்–கொல்லி–தாளம்–ஏமொத்து.

மோஹனராகம் – ஆதிதாளம்

* இவையுமவையுமுவையுமிவருமவருமுவரும்
யவையும்யவருந்தன்னுள்ளேயாகியுமாக்கியுங்காக்கும்
அவையுட்டனிமுதலெம்மான்கண்ணபிரானென்னமுதம்
சுவையன்திருவின்மணுளனென்னுடைச்சூழலுளானே. (க)

சூழல்பலபலவல்லான்றெல்லையங்காலத்துலகைக்
கேழலொன்றாகியிடந்தகேசவனென்னுடையம்மான்
வேழமருப்பையொசித்தான்விண்ணவர்க்கெண்ணலரியான்
ஆழநெடுங்கடல்சேர்ந்தானவனென்னருகலிலானே. (உ)

அருகலிலாயபெருஞ்சிரமரர்களாதிமுதல்வன்
கருகியநீலநன்மேனிவண்ணன்செந்தாமரைக்கண்ணன்
பொருசிறைப்புள்ளுவந்தேறும்பூமகளார்தனிக்கேள்வன்
ஒருகதியின்சுவைதந்திட்டொழிவிலனென்னோடுடனே. (ஙு)

உடனமர்காதன்மகளிர்திருமகண்மண்மகளாயர்
மடமகளென்றிவர்மூவராளுமுலகமுமூன்றே
உடனவையொக்கவிழுங்கியாலிலைசேர்ந்தவனெம்மான்
கடன்மலிமாயப்பெருமான்கண்ணனென்னொக்கலையானே. (சு)

ஒக்கலைவைத்துமுலைப்பாலுண்ணென்றுதந்திடவாங்கிச்
செக்கஞ்செகவன்றவள்பாலுயிர்செகவுண்டபெருமான்
நக்கபிரானோடயனுமிந்திரனும்முதலாக
ஒக்கவுந்தோற்றியவீசன்மாயனென்னெஞ்சினுளானே. (ரு)

மாயனென்னெஞ்சினுள்ளான்மற்றும்யவர்க்குமதுவே
காயமுஞ்சீவனுந்தானேகாலுமெரியுமவனே
சேயனணியன்யவர்க்குஞ்சிந்தைக்குங்கோசரமல்லன்
தூயன்றுயக்கன்மயக்கனென்னுடைத்தோளிணையானே. (சு)

தோளிணைமேலுநன்மார்பின்மேலுஞ்சுடர்முடிமேலும்
தாளிணைமேலும்புனைந்ததண்ணந்துழாயுடையம்மான்
கேளிணையொன்றுமிலாதான்கிளருஞ்சுடரொளிமூர்த்தி
நாளணைந்தொன்றுமகலானென்னுடைநாவினுளானே. (எ)

நாவினுணின்றுமலருஞானக்கலைகளுக்கெல்லாம்
ஆவியுமாக்கையுந்தானேயழிப்போடளிப்பவன்றானே
பூவியலுற்றடந்தோளன்பொருபடையாழிசங்கேந்தும்
காவிநன்மேனிக்கமலக்கண்ணனென்கண்ணினுளானே. (அ)

கமலக்கண்ணனென்கண்ணினுள்ளான்காண்பனவன்கண்களாலே
அமலங்களாகவிழிக்குமைம்புலனுமவன்மூர்த்தி
கமலத்தயனம்பிதன்னைக்கண்ணுதலானொடுந்தோற்றி
அமலத்தெய்வத்தோடுலகமாக்கியென்னெற்றியுளானே. (கூ)

நெற்றியுணின்றென்னையாளுநிரைமலர்ப்பாதங்கள்சூடிக்
கற்றைத்துழாய்முடிக்கோலக்கண்ணபிரானைத்தொழுவார்
ஒற்றைப்பிறையணிந்தானுநான்முகனுமிந்திரனும்
மற்றையமரருமெல்லாம்வந்தெனதுச்சியுளானே. (க0)

* உச்சியுள்ளேநிற்குந்தேவதேவற்குக்கண்ணபிராற்
கிச்சையுட்செல்லவுணர்த்திவண்குருகூர்ச்சடகோபன்
இச்சொன்னவாயிரத்துளிவையுமோர்பத்தெம்பிராற்கு
நிச்சலும்விண்ணப்பஞ்செய்யநீள்கழல்சென்னிபொருமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - க - க்குப் பாசுரம் - கக.

---

இவையறிந்தோர்தம்மளவிலீசனுவந்தாற்ற
அவயவங்டோறுமணையும்—சுவையதனைப்
பெற், ருர்வத்தான்மாறன்பேசினசொற்பேச, மால்
பொற்றுணஞ்சென்னிபொரும். (கூ)

---

## க0 - ம் திருவாய்மொழி - பொருமா.

ஸர்வேஶ்வரன் பண்ணின ஸர்வாங்கஸம்ஶ்லேஷத்துக்கு ஹேதுவேதாகிலும் தம்மிடத்திலேயுண்டோவென்று விசாரித்து ஒருஹேதுவும் இல்லாமையாலே ஈஶ்வரனுடையநிர்ஹேதுக உபகாரத்வத்தை அருளிச்செய்கிருர்.

கலிவிருத்தம்—பண்-தக்கராகம்-தாளம்-ஏழொத்து.

பைரவிராகம் - ஆதிதாளம்.

* பொருமாநீள்படையாழிசங்கத்தொடு
திருமாநீள்கழலேழுலகுந்தொழ
ஒருமாணிக்குறளாகிநிமிர்ந்தவக்
கருமாணிக்கமென்கண்ணுள்ளதாகுமே. (க)

கண்ணுள்ளேநிற்குங்காதன்மையாற்றொழில்
எண்ணிலும்வருமென்னினிவேண்டுவம்
மண்ணுநீருமெரியுநல்வாயுவும்
விண்ணுமாய்விரியுமெம்பிரானையே. (உ)

எம்பிரானையெந்தைதந்தைதந்தைக்கும்
தம்பிரானைத்தண்டாமரைக்கண்ணனைக்
கொம்பராவுநுண்ணேரிடைமார்பனை
எம்பிரானைத்தொழாய்மடநெஞ்சமே. (ந)

நெஞ்சமேநல்லைநல்லையுன்னைப்பெற்றால்
என்செய்யோமினியென்னகுறைவினம்
மைந்தனைமலராண்மணவாளனைத்
துஞ்சும்போதும்விடாதுதொடர்கண்டாய். (ச)

கண்டாயேநெஞ்சேகருமங்கள்வாய்க்கின்றோர்
எண்டானுமின்றியேவந்தியலுமா
றுண்டானையுலகேழுமோர்மூவடி
கொண்டானைக்கண்டுகொண்டனைநீயுமே. (௫)

நீயுநானுமிந்நேர்நிற்கின், மேன்மற்றோர்
நோயுஞ்சார்கொடானெஞ்சமேசொன்னேன்
தாயுந்தந்தையுமாயிவ்வுலகினில்
வாயுமீசன்மணிவண்ணனெந்தையே. (௬)

எந்தையேயென்றுமெம்பெருமானென்றும்
சிந்தையுள்வைப்பன்சொல்லுவன்பாவியேன்
எந்தையெம்பெருமானென்றுவானவர்
சிந்தையுள்வைத்துச், சொல்லுஞ்செல்வனையே. (௭)

செல்வநாரணனென்றசொற்கேட்டலும்
மல்குங்கண்பனிநாடுவன்மாயமே
அல்லுநன்பகலுமிடைவீடின்றி
நல்கியென்னைவிடானம்பிநம்பியே. (௮)

நம்பியைத்தென்குறுங்குடிநின்ற, வச்
செம்பொனேதிகழுந்திருமூர்த்தியை
உம்பர்வானவராதியஞ்சோதியை
எம்பிரானையென்சொல்லிமறப்பனே. (௯)

மறப்புஞானமுநானொன்றுணர்ந்திலன்
மறக்குமென்றுசெந்தாமரைக்கண்ணொடு
மறப்பறவென்னுள்ளேமன்னினான்றன்னை
மறப்பனோவினியானென்மணியையே. (௧௦)

*மணியைவானவர்கண்ணனைத்தன்னதோர்
அணியைத், தென்குருகூர்ச்சடகோபன்சொல்
பணிசெயாயிரத்துள்ளிவைபத்துடன்
தணிவிலர்கற்பரேற்கல்விவாயுமே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

பத்து - ௧ - ல் - திருவாய்மொழி - ௧௦ - க்குப் பாசுரம் - ௧௧௦.

முதற்பத்து முற்றியது.

---

பொருமாழிசங்குடையோன்பூதலத்தேவந்து
தருமாறோரேதுவறத்தன்னைத்—திரமாகப்
பார்த்துறைசெய்மாறன்பதம்பணிகவென்சென்னி
வாழ்த்திடுகவென்னுடையவாய். (௧௦)

# இரண்டாம்பத்து.

## க - ம் திருவாய்மொழி - வாயுந்திரை.

பரத்வஸௌலப்ய ஸௌந்தர்யங்களை யநுபவித்து
அந்தவஸ்து பாஹ்ய ஸம்ஶ்லேஷயோகமாகவேணுமென்று ஆசைப்பட்டு
அஃதகப்படாமையாலார்த்திமிகுந்து ஆழ்வார்தாமொருபிராட்டிஅவஸ்தையை
யடைந்து அசேதநங்களையும் திர்யக்குகளையும் தம்மோடேஸமதுःகிகளாக
வெண்ணித் தந்நிமித்தமாகப் ப்ரலாபித்ததை
அருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம் - பண் - புறநீர்மை - தாளம் - இடையொத்து.

எதுகுலகாம்போதிராகம் - ஆதிதாளம்,

* வாயுந்திரையுகளுங்கானன்மடநாராய்
ஆயுமமருலகுந்துஞ்சிலுநீதுஞ்சாயால்
நோயும்பயலைமையுமீதூரவெம்மேபோல்
நீயுந்திருமாலானெஞ்சங்கோட்பட்டாயே. (௧)

கோட்பட்டசிந்தையையாய்க்கூர்வாயவன்றிலே
சேட்பட்டயாமங்கள்சேராதிரங்குதியால்
ஆட்பட்டவெம்மேபோனீயுமரவணையான்
தாட்பட்டதண்டுழாய்த்தாமங்காமுற்றாயே. (௨)

காமுற்றகையறவோடெல்லேயிராப்பகல்
நீமுற்றக்கண்டுயிலாய்நெஞ்சுருகியேங்குதியால்
தீமுற்றத்தென்னிலங்கையூட்டினான்றாணயந்த
யாமுற்றதுற்றாயோவாழிகனைகடலே. (௩)

கடலுமலையும்விசும்புந்துழாயெம்போல்
சுடர்கொளிராப்பகற்றுஞ்சாயாற்றண்வாடாய்
அடல்கொள்படையாழியம்மானைக்காண்பானீ
உடலநோயுற்றாயோவூழிதோறூழியே. (௪)

ஊழிதோறூழியுலகுக்குநீர்கொண்டு
தோழியரும்யாமும்போனீராய்நெகிழ்கின்ற
வாழியவானமேநீயுமதுசூதன்
பாழிமையிற்பட்டவன்கட்பாசத்தானைவாயே. (௫)

நைவாயவெம்மேபோனாண்மதியேநீயிந்நாள்
மைவானிருளகற்றாய்மாழாந்துதேம்புதியால்
ஐவாயரவணைமேலாழிப்பெருமானார்
மெய்வாசகங்கேட்டுன்மெய்ந்நீர்மைதோற்றாயே. (௬)

தோற்றேமட நெஞ்சமெம்பெருமானாரணற், செம்
ஆற்றுமைசொல்லியழுவோமைநீநடுவே
வேற்றேர்வகைவிற்கொடிதாயெனையூழி
மாற்றுண்மைநிற்றியோவாழிகனையிருளே. (எ)

இருளின்றிணிவண்ணமாநீர்க்கழியேபோய்
மருளுற்றிராப்பகற்றுஞ்சிலுநீதுஞ்சாயால்
உருளுஞ்சகடமுதைத்தபெருமானார்
அருளின்பெருநசையாலாழாந்துநொந்தாயே. (அ)

நொந்தாராக்காதனோய்மெல்லாவியுள்ளுலர்த்த
நந்தாவிளக்கமேநீயுமளியத்தாய்
செந்தாமரைத்தடங்கட்செங்கனிவாயெம்பெருமான்
அந்தாமத்தண்டுழாயாசையால்வேவாயே. (கூ)

வேவாராவேட்கைநோய்மெல்லாவியுள்ளுலர்த்த
ஓவாதிராப்பகலுன்பாலேவீழ்த்தொழிந்தாய்
மாவாய்பிளந்துமருதிடைபோய்மண்ணளந்த
மூவாமுதல்வாவினியெம்மைச்சோரேலே. (க0)

* சோராதவெப்பொருட்குமாதியாஞ்சோதிக்கே
ஆராதகாதற்குருகூர்ச்சடகோபன்
ஓராயிரஞ்சொன்னவவற்றுளிவைபத்தும்
சோரார்விடார்கண்டீர்வைகுந்தந்திண்ணனவே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம் - ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - கக - க்குப் பாசுரம் - கஉக.

---

வாயுந்திருமால்மறையநிற்கவாற்றமை
போய்விஞ்சிமிக்குப்புலம்புதலாய்—ஆய
அறியாதவற்றேடணைந்தழுதமாறன்
செறிவாரைநோக்குந்திணிந்து. (கக)

---

## உ - ம் திருவாய்மொழி - திண்ணன்வீடு.

இந்தஆர்த்திபோக்குகைக்கு ஈஶ்வரன் ஸாந்நித்யம்பண்ணி
நிற்கையாலே அந்த ஆர்த்தியெல்லாம்போய் ஸகலகல்யாணகுண
ஸம்ருத்திஹேதுவானபரத்வம் அவதாரத்திலுண்டென்று
பரோபதேஶம்பண்ணினதை யருளிச்செய்கிறார்.

வஞ்சிவிருத்தம் - பண் - தக்கராகம் - தாளம் - ஏழொத்து.

சுருட்டிராகம் - ரூபகதாளம்.

* திண்ணன்வீடுமுதன்முழுதுமாய்
எண்ணின்மீதியனெம்பெருமான்
மண்ணும்விண்ணுமெல்லாமுடனுண்ட, நங்
கண்ணன்கண்ணல்லதில்லையோர்கண்ணே. (க)

ஏபாவம்பரமேயேழுலகும்
ஈபாவஞ்செய்தருளாலளிப்பாரார்
மாபாவம்விடவரற்குப்பிச்சைபெய்
கோபாலகோளரியேறன்றியே. (உ)

ஏறனைப்பூவனைப்பூமகடன்னை
வேறின்றிவிண்டொழத்தன்னுள்வைத்து
மேறன்னைமீதிடநிமிர்ந்துமண்கொண்ட
மாறனின்மிக்குமோர்தேவுமுளதே. (ங)

தேவுமெப்பொருளும்படைக்கப்
பூவினுன்முகனைப்படைத்த
தேவனெம்பெருமானுக்கல்லால்
பூவும்பூசனையுந்தகுமே. (ச)

தகுஞ்சீர்த்தன்றனிமுதலினுள்ளே
மிகுந்தேவுமெப்பொருளும்படைக்கத்
தகுங்கோலத்தாமரைக்கண்ணனெம்மான்
மிகுஞ்சோதிமேலறிவார்யவரே. (ரு)

யவரும்யாவையுமெல்லாப்பொருளும்
கவர்வின்றித்தன்னுள்ளொடுங்கநின்ற
பவர்கொள்ஞானவெள்ளச்சுடர்மூர்த்தி
அவரெம்மாழியம்பள்ளியாரே. (சா)

பள்ளியாலிலையேழுலகுங்கொள்ளும்
வள்ளல்வல்வயிற்றுப்பெருமான்
உள்ளுளாரறிவார், ரவன்றன்
கள்ளமாயமனக்கருத்தே. (எ)

கருத்திற்றேவுமெல்லாப்பொருளும்
வருத்தித்தமாயப்பிரானையன்றி, யாரே
திருத்தித்திண்ணிலைமூவுலகுந், தம்முள்
இருத்திக்காக்குமியல்வினரே. (அ)

காக்குமியல்வினன்கண்ணபெருமான்
சேர்க்கைசெய்துதன்னுந்தியுள்ளே
வாய்த்ததிசைமுகனிந்திரன்வானவர்
ஆக்கினுன்றெய்வவுலகுகளே. (கூ)

கள்வாவெம்மையுமேழுலகு, நின்
உள்ளேதோற்றியவிறைவவென்று
வெள்ளேறனுன்முகனிந்திரன்வானவர்
புள்ளூர்திகழல்பணிந்தேத்துவரே. (க0)

* ஏத்தவேழுலகுங்கொண்டகோலக்
கூத்தனைக், குருகூர்ச்சடகோபன்சொல்
வாய்ந்தவாயிரத்துள்ளிவைபத்துடன்
ஏத்தவல்லவர்க்கில்லையோருனமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். - ஜீயர்திருவடிகளேஶரணம்.
ஆ_ திருவாய்மொழி - கஉ - க்குப் பாசுரம் - கஉ.

---

திண்ணிதாமாறன்றிருமால்பரத்துவத்தை
நண்ணியவதாரத்தேநன்குரைத்த—வண்ணமறிந்
தற்றார்கள்யாவரவரடிக்கேயாங்கவர்பால்
உற்றாராமேலிடாதான். (கஉ)

---

## ௩. - ம் திருவாய்மொழி - ஊனில்வாழ்.

ஈஶ்வரன் ஸாந்நித்யம் பண்ணுகையில் ப்ரகாஶமாக பரத்வத்தை அருளிச்செய்து இந்தபகவதநுபவத்துக்கு ஸம்ஸாரிகள் ஸஹாய ரன்றென்று இதற்கு ஸஹாயபூதரான நித்யஸூரிகளோடே யெப்போது கூடப்போகிறோமென்கிற ப்ரார்த்தனையை யருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம் - பண் - நாட்டம் - தாளம் - ஏழொத்து.

முகாரிராகம் - அடதாளம்.

* ஊனில்வாழுயிரேநல்லைபோவுன்னைப்பெற்று
வானுளார்பெருமான்மதுசூதனென்னம்மான்
தானும்யானுமெல்லாந்தன்னுள்ளேகலந்தொழிந்தோம்
தேனும்பாலுநெய்யுங்கன்னலுமமுதுமொத்தே. (க)

ஒத்தார்மிக்காரையிலையாயமாமாய
ஒத்தாயெப்பொருட்குமுயிரா, யென்னைப்பெற்ற
அத்தாயாய்த்தந்தையாயறியாதனவறிவித்
தத்தாநீசெய்தனவடியேனறியேனே. (உ)

அறியாக்காலத்துள்ளேயடிமைக்கணன்புசெய்வித்
தறியாமாமாயத்தடியேனைவைத்தாயால்
அறியாமைக்குறளாய்நிலமாவலிமூவடியென்
றறியாமைவஞ்சித்தாயெனதாவியுள்கலந்தே. (௩)

எனதாவியுள்கலந்தபெருநல்லுதவிக்கைம்மா
றெனதாவிதந்தொழிந்தேனினிமீள்வதென்பதுண்டே
எனதாவியாவியுநீபொழிலேழுமுண்டவெந்தாய்
எனதாவியார்யானார்தந்தநீகொண்டாக்கினையே. (௪)

இனியார்ஞானங்களாலெடுக்கலெழாதவெந்தாய்
கனிவார்வீட்டின்பமேயென்கடற்படாவமுதே
தனியேன்வாழ்முதலேபொழிலேழுமேனமொன்ருய்
நுனியார்கோட்டில்வைத்தாயுனபாதஞ்சேர்ந்தேனே. (ரு)

சேர்ந்தார்தீவினைகட்கருநஞ்சைத்திண்மதியைத்
தீர்ந்தார்தம்மனத்துப்பிரியாதவருயிரைச்
சோர்ந்தேபுகல்கொடாச்சுடரையரக்கியைமூக்
கீர்ந்தாயை, யடியேனடைந்தேன்முதன்முன்னமே. (சு)

முன்னல்யாழ்பயினூனரம்பின்முதிர்சுவையே
பன்னலார்பயிலும்பரனேபவித்திரனே
கன்னலேயமுதேகார்முகிலேயென்கண்ணு
நின்னலாலிலேன்காணென்னைநீகுறிக்கொள்ளே. (எ)

குறிக்கொண்ஞானங்களாலெனையூழிசெய்தவமும்
கிறிக்கொண்டிப்பிறப்பேசிலநாளிலெய்தினன்யான்
உறிக்கொண்டவெண்ணெய்பாலொளித்துண்ணுமம்மான்பின்
நெறிக்கொண்டநெஞ்சனுய்ப்பிறவித்துயர்கடிந்தே. (அ)

கடிவார்தண்ணந்துழாய்க்கண்ணன்விண்ணவர்பெருமான்
படிவானமிறந்தபரமன்பவித்திரன்சீர்ச்
செடியார்நோய்கள்கெடப்படிந்துகுடைந்தாடி
அடியேன்வாய்மடுத்துப்பருகிக்களித்தேனே. (கூ)

களிப்புங்கவர்வுமற்றுப்பிறப்புப்பிணிமூப்பிறப்பற்
ருெளிக்கொண்டசோதியுமாயுடன்கூடுவதென்றுகொலோ
துளிக்கின்றவானிந்நிலஞ்சுடராழிசங்கேந்தி
அளிக்கின்றமாயப்பிரானடியார்கள்குழாங்களையே. (க0)

* குழாங்கொள்பேரரக்கன்குலம்வீயமுனிந்தவனைக்
குழாங்கொள்தென்குருகூர்ச்சடகோபன்தெரிந்துரைத்த
குழாங்கொளாயிரத்துளிவைபத்துமுடன்பாடிக்
குழாங்களாயடியீருடன்கூடிநின்றுடுமினே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். - ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - கந - க்குப் பாசுரம் - கசந.

---

ஊனமறவேவந்துள்கலந்தமாலினிமை
யானதனுபவித்தற்காந்துணையா—வானில்
அடியார்குழாங்கூடவாசையுற்றமாறன்
அடியாருடனெஞ்சேயாடு. (கந)

## ச - ம் திருவாய்மொழி - ஆடியாடி.

ப்ரார்த்தனைஸித்தியாதபடியினாலே இவ்வாழ்வார் ஒருபிராட்டி யவஸ்தையடைந்து மோஹித்திருக்கையில் அந்தநாயகியினுடைய அவஸ்தையைத் தாய்சொல்லுகிறதாக அருளிச்செய்கிறார்.

வஞ்சிவிருத்தம் - பண் - நாட்டம் - தாளம் - ஏழொத்து.

எழுநூகலியாணிராகம் - திரிபுடைதாளம்.

* ஆடியாடியகங்கரைந், திசை
பாடிப்பாடிக்கண்ணீர்மல்கி, யெங்கும்
நாடிநாடிநரசிங்காவென்று
வாடிவாடுமிவ்வாணுதலே. (க)

வாணுதலிம்மடவர, லும்மைக்
காணுமாசையுளைநின்றாள், விறல்
வாணனாயிரந்தோடுணித்தீ, ருமைக்
காணநீரிரக்கமிலீரோ. (உ)

இரக்கமனத்தோடெரியணை
அரக்குமெழுகுமொக்குமிவள்
இரக்கமெழீரிதற்கென்செய்கேன்
அரக்கனிலங்கைசெற்றீருக்கே. (௩)

இலங்கைசெற்றவனேயென்னும், பின்னும்
வலங்கொள்புள்ளுயர்த்தாயென்னுமுள்ளம்
மலங்கவெவ்வுயிர்க்கும், கண்ணீர்மிகக்
கலங்கிக்கைதொழுநின்றிவளே. (ச)

இவளிராப்பகல்வாய்வெரீஇத், தன
குவளையொண்கண்ணநீர்கொண்டாள்வண்டு
திவளுந்தண்ணந்துழாய்கொடீ, ரெனத்
தவளவண்ணர்தகவுகளே. (ரு)

தகவுடையவனேயென்னும், பின்னும்
மிகவிரும்பும்பிரானென்னுமென
தகவுயிர்க்கமுதேயென்னு, முள்ளம்
உகவுருகிநின்றுள்ளுளே. (சா)

உள்ளுளாவியுலர்ந்துலர்ந், தென
வள்ளலேகண்ணனேயென்னும், பின்னும்
வெள்ளநீர்க்கிடந்தாயென்னு, மென
கள்விதான்பட்டவஞ்சனையே. (எ)

வஞ்சனேயென்னுங்கைதொழுந், தன
நெஞ்சம்வேவநெடிதுயிர்க்கும், விறல்
கஞ்சனைவஞ்சனைசெய்தீ, ருமைத்
தஞ்சமென்றிவள்பட்டனவே. (அ)

பட்டபோதெழுபோதறியாள், விரை
மட்டலர்தண்டுழாயென்னுஞ், சுடர்
வட்டவாய்நுதிநேமியீர்நும
திட்டமென்கொலிவ்வேழைக்கே. (௯)

ஏழைபேதையிராப்பகற், றன
கேழிலொண்கண்ணநீர்கொண்டாள், கிளர்
வாழ்வைவேவவிலங்கைசெற்றீ, ரிவள்
மாழைநோக்கொன்றும்வாட்டேன்மினே. (க0)

* வாட்டமில்புகழ்வாமனனை, யிசை
கூட்டிவண்சடகோபன்சொல், லமை
பாட்டோராயிரத்திப்பத்தா, லடி
சூட்டலாகுமந்தாமமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.
ஆ திருவாய்மொழி - கச - க்குப் பாசுரம் - கடுசு.

---

ஆடிமகிழ்வானிலடியார்குழாங்களுடன்
கூடியின்பமெய்தாக்குறையதனால்—வாடிமிக
அன்புற்றார்தங்கிலேமையாய்ந்துரைக்கமோகித்துத்
துன்புற்றான்மாறனந்தோ. (கசு)

---

## ரு - ம் திருவாய்மொழி - அந்தாமத்தன்பு.

இவ்வார்த்திபோக்குகைக்கு ஈஶ்வரன் ஸம்ஶ்லேஷிக்கையாலே அந்ததாபம் நிவர்த்தியாய் ஈஶ்வரனுடைய திவ்யபூஷண திவ்யாயுத திவ்யாவயவ ஸௌந்தர்யத்தையும் நித்யஸூரிஸேவையையும் அநுஸந்தித்ததை யருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம் - பண் - சீகாமரம் - தாளம் — நடையொத்து.

பைரவிராகம் — ஆதிதாளம்.

* அந்தாமத்தன்புசெய்தென்னாவிசேரம்மானுக்
கந்தாமவாண்முடிசங்காழிநூலாரமுள
செந்தாமரைத்தடங்கண்செங்கனிவாய்செங்கமலம்
செந்தாமரையடிக்கள்செம்பொன்றிருவுடம்பே. (க)

திருவுடம்புவான்சுடர்செந்தாமரைகண்கைகமலம்
திருவிடமேமார்வமயனிடமேகொப்பூழ்
ஒருவிடமுமெந்தைபெருமாற்கரனேயோ
ஒருவிடமொன்றின்றியென்னுள்கலந்தானுக்கே. (உ)

என்னுள்கலந்தவன்செங்கனிவாய்செங்கமலம்
மின்னுஞ்சுடர்மலைக்குக்கண்பாதங்கைகமலம்
மன்னுமுழுவேழுலகும்வயிற்றினுள
தன்னுள்கலவாதவெப்பொருளுந்தானில்லையே. (ங)

எப்பொருளுந்தானாய்மரதகக்குன்றமொக்கும்
அப்பொழுதைத்தாமரைப்பூக்கண்பாதங்கைகமலம்
எப்பொழுதுநாடிங்களாண்டூழியூழிதோறும்
அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதமே. (ச)

ஆராவமுதமாயல்லாவியுள்கலந்த
காரார்கருமுகில்போலென்னம்மான்கண்ணனுக்கு
நேராவாய்செம்பவளங்கண்பாதங்கைகமலம்
பேராரநீண்முடிநாண்பின்னுமிழைபலவே. (ரு)

பலபலவேயாபரணம்பேரும்பலபலவே
பலபலவேசோதிவடிவுபண்பெண்ணில்
பலபலகண்டுண்டுகேட்டுற்றுமோந்தின்பம்
பலபலவேஞானமும்பாம்பணைமேலாற்கேயோ. (சு)

பாம்பணைமேற்பாற்கடலுட்பள்ளியமர்ந்ததுவும்
காம்பணைதோட்பின்னைக்காயேறுடனேழ்செற்றதுவும்
தேம்பணையசோலைமராமரமேழெய்ததுவும்
பூம்பிணையதண்டுழாய்ப்பொன்முடியம்போரேறே. (எ)

பொன்முடியம்போரேற்றையெம்மானைநாற்றடந்தோள்
தன்முடிவொன்றில்லாததண்டுழாய்மாலையனை
என்முடிவுகாணாதேயென்னுள்கலந்தானைச்
சொன்முடிவுகாணேனான்சொல்லுவதென்சொல்லீரே. (அ)

சொல்லீரென்னம்மானையென்னாவியாவிதனை
எல்லையில்சீரென்கருமாணிக்கச்சுடரை
நல்லவமுதம்பெறற்கரியவீடுமாய்
அல்லிமலர்விரையொத்தாணல்லன்பெண்ணல்லனே. (கூ)

ஆணல்லன்பெண்ணல்லனல்லாவலியுமல்லன்
காணலுமாகானுளனல்லனில்லையல்லன்
பேணுங்காற்பேணுமுருவாகுமல்லனுமாம்
கோணைபெரிதுடைத்தெம்பெம்மானைக்கூறுதலே. (க0)

* கூறுதலொன்றுராக்குடக்கூத்தவம்மானைக்
கூறுதலேமேவிக்குருகூர்ச்சடகோபன்
கூறினவந்தாதியோராயிரத்துளிப்பத்தும்
கூறுதல்வல்லாருளரேற்கூடுவர்வைகுந்தமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஸரணம். ஜீயர்திருவடிகளேஸரணம்.
ஆ திருவாய்மொழி - கரு - க்குப் பாசுரம் - கசூரு.

அந்தாமத்தன்பாலடியார்களோடிறைவன்
வந்தாரத்தான்கலந்தவண்மையினால்—சந்தாபம்
தீர்ந்தசடகோபன்றிருவடிக்கேநெஞ்சமே
வாய்ந்தவன்பைநாடோறும்வை. (கரு)

## சூ - ம் திருவாய்மொழி - வைகுந்தா.

ஸாந்நித்யம்பண்ணின எம்பெருமானிடத்திலே ஆழ்வார் அதிசைச்யஞ்செய்ய அதைப்பார்த்து ஆழ்வார் தம்மைவிட்டுப்பிரிவரோ என்று ஈஸ்வரனதிசங்கைபண்ண ஆழ்வார் உம்மை யொருக்காலும் விடத்தக்கதில்லையென்றபின்பு ஈஸ்வரனுக்கதிசங்கைநீங்கினதை அருளிச்செய்கிறார்.

ஆசிரியத்துறை-பண்-பழந்தக்கராகம்-தாளம்-ஏழொத்து.

ஆநந்தபைரவிராகம் - ஆதிதாளம்,

* வைகுந்தாமணிவண்ணனேயென்பொல்லாத்திருக்குறளாவென்னுண்மன்னி
வைகும்வைகல்தோறுமமுதாயவானேறே
செய்குந்தாவருந்தீமையுன்னடியார்க்குத், தீர்த்தசுரர்க்குத்தீமைகள்
செய்குந்தாவுன்னைநான்பிடித்தேன்கொள்சிக்கெனவே. (க)

சிக்கெனச்சிறிதோரிடமும்புறப்படாத்தன்னுள்ளேயுலகுகள்
ஒக்கவேவிழுங்கிப்புகுந்தான்புகுந்ததற்பின்
மிக்கஞானவெள்ளச்சுடர்விளக்காய்த்துளக்கற்றமுதமா, யெங்கும்
பக்கநோக்கறியானென்பைந்தாமரைக்கண்ணனே. (உ)

தாமரைக்கண்ணனைவிண்ணோர்பரவுந்தலைமகனைத், துழாய்விரைப்
பூமருவுகண்ணியெம்பிரானைப்பொன்மலையை
நாமருவிநன்கேத்தியுள்ளிவணங்கிநாமகிழ்ந்தாட, நாவலர்
பாமருவிநிற்கத்தந்தபான்மையேய்வள்ளலே. (ந)

வள்ளலேமதுசூதனுவென்மரதகமலையே, யுனைநினைந்
தெள்கறந்தவெந்தாயுன்னையெங்ஙனம்விடுகேன்
வெள்ளமேவுனாநின்புகழ்குடைந்தாடிப்பாடிக்களித்துகந்துகந்
துள்ளநோய்களெல்லாந்துரந்துய்ந்துபோந்திருந்தே. (சு)

உய்ந்துபோந்தென்னுலப்பிலாதவெந்தீவினைகளைநாசஞ்செய், துன
தந்தமிலடிமையடைந்தேன்விடுவேனே
ஐந்துபைந்தலையாடரவணைமேவிப்பாற்கடல்யோகநித்திரைச்
சிந்தைசெய்தவெந்தாயுன்னைச்சிந்தைசெய்துசெய்தே. (ரு)

உன்னைச்சிந்தைசெய்துசெய்துன்னெடுமாமொழியிசைபாடியாடி,யென்
முன்னைத்தீவினைகண்முழுவேரரிந்தனன்யான்
உன்னைச்சிந்தையினுலிகழ்ந்தவிரணியனகன்மார்பங்கீண்ட, வென்
முன்னைக்கோளரியேமுடியாததென்னெனக்கே. (சா)

முடியாததென்னெனக்கேலினிமுழுவேழுலகுமுண்டா, னுகந்துவந்
தடியேனுட்புகுந்தானகல்வானுமல்லனினிச்
செடியார்நோய்களெல்லாந்துரந்தெமர்கீழ்மேலெழுபிறப்பும்
விடியாவெந்நரகத்தென்றுஞ்சேர்தன்மாறினரே. (எ)

மாறிமாறிப்பலபிறப்பும்பிறந்தடியையடைந்துள்ளந்தேறி
ஈறிலின்பத்திருவெள்ளம்யான்மூழ்கினன்
பாறிப்பாறியசுரர்தம்பல்குழாங்கணீறெழப், பாய்பறவைபொன்
றேறிவீற்றிருந்தாயுன்னையென்னுணீக்கேலெந்தாய். (அ)

எந்தாய்தண்டிருவேங்கடத்துணின்றாயிலங்கைசெற்றாய், மராமரம்
பைந்தாளேழுருவவொருவாளிகோத்தவில்லா
கொந்தார்தண்ணந்துழாயினுயமுதேயுன்னையென்னுளேகுழைத்தவெம்
மைந்தா, வானேறேயினியெங்குப்போகின்றதே. (சு)

போகின்றகாலங்கள்போயகாலங்கள்போகுகாலங்கள், தாய்தந்தையுயிர்
ஆகின்றாயுன்னைநானடைந்தேன்விடுவேனே
பாகின்றதொல்புகழ்மூவுலகுக்குநாதனேபரமா, தண்வேங்கட
மேகின்றாய்தண்டுழாய்விரைநாறுகண்ணியனே. (க0)

* கண்ணித்தண்ணந்துழாய்முடிக்கமலத்தடம்பெருங்
கண்ணனைப், புகழ்நண்ணித்தென்குருகூர்ச்சடகோபன்மாறன்சொன்ன
எண்ணிற்சோர்விலந்தாதியாயிரத்துள்ளிவையுமோர்பத்,திசையொடும்
பண்ணிற்பாடவல்லாரவர்கேசவன்றமரே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ திருவாய்மொழி - கசு - க்குப் பாசுரம் - கஎசு.

---

வைகுந்தன்வந்துகலந்ததற்பின்வாழ்மாறன்
செய்கின்றவைச்சியத்தைச்சிந்தித்து—வைகின்ற
தன்மைதனைக்கண்டுன்னைத்தான்விடேனென்றுவாக்க
வன்மையடைந்தான்கேசவன். (சுசு)

## எ - ம் திருவாய்மொழி - கேசவன்.

ஈஸ்வரனுக்குத் தம்ம விஷயத்தி லுண்டான ப்ரீதியானது தம்முடைய ஸம்பந்தஸம்பந்திகளிலும் உண்டானதுகண்டு மிகவும் ப்ரீதராய் த்வாதஶநாம ப்ரதிபாத்யனான ஸர்வேஶ்வரனுடைய ஸம்பந்தத்தாலே தம்முடைய ஏழேழுதலைமுறையோரும் க்ருதார்த்தரானார்களென்கிறார்.

கலித்துறை - தக்கராகம் - தாளம் - ஏழொத்து.

கலியாணிராகம் - ரூபகதாளம்.

* கேசவன்றமர்கீழ்மேலெமரோழேழுபிறப்பும்
மாசதிரிதுபெற்றுநம்முடைவாழ்வுவாய்க்கின்றவா
ஈசனென்கருமாணிக்கமென்செங்கோலக்கண்ணன்விண்ணோர்
நாயக, னெம்பிரானெம்மானாராயணனாலே. (க)

நாரணன்முழுவேழுலகுக்குநாதன்வேதமயன்
காரணங்கிரிசைகருமமிவை முதல்வனெந்தை
சிரணங்கமரர்பிறர்பலருந்தொழுதேத்தநின்று
வாரணத்தைமருப்பொசித்தபிரானென்மாதவனே. (உ)

மாதவனென்றதேகொண்டென்னையினியிப்பாற்பட்டது
யாதவங்களுஞ்சேர்கொடேனென்றென்னுட்புகுந்திருந்து
தீதவங்கெடுக்குமமுதஞ்செந்தாமரைக்கட்குன்றம்
கோதவமிலன்கன்னற்கட்டியெம்மானென்கோவிந்தனே. (ங)

கோவிந்தன்குடக்கூத்தன்கோவலனென்றென்றேகுனித்துத்
தேவுந்தன்னையும்பாடியாடத்திருத்தி, யென்னைக்கொண்டென்
பாவந்தன்னையும்பாறக்கைத்தெமரோழேழுபிறப்பும்
மேவுந்தன்மையமாக்கினான்வல்லனெம்பிரான்விட்டுவே. (ச)

விட்டிலங்குசெஞ்சோதித்தாமரைபாதங்கைகள்கண்கள்
விட்டிலங்குகருஞ்சுடர்மலையேதிருவுடம்பு
விட்டிலங்குமதியஞ்சீர்சங்குசக்கரம்பருதி
விட்டிலங்குமுடியம்மான்மதுசூதனன்றனக்கே. (ரு)

மதுசூதனையன்றிமற்றிலேனென்றெத்தாலுங்கருமமின்றித்
துதிசூழ்ந்தபாடல்கள்பாடியாடநின்றூழிழியூழிதொறும்
எதிர்சூழல்புக்கெனைத்தோர்பிறப்புமெனக்கேயருள்கள்செய்ய
விதிசூழ்ந்ததாலெனக்கேலம்மான்றிரிவிக்கிரமனையே. (சா)

திரிவிக்கிரமன்செந்தாமரைக்கணெம்மானென்செங்கனிவாய்
உருவிற்பொலிந்தவெள்ளைப்பளிங்குநிறத்தனென்றென், றுள்ளிப்
பரவிப்பணிந்துபல்லூழியூழிநின்பாதபங்கயமே
மருவித்தொழுமனமேதந்தாய்வல்லைகாணென்வாமனனே. (எ)

வாமனனென்மரதகவண்ணன்றாமரைக்கண்ணினன்
காமனைப்பயந்தா, யென்றென்றுன்கழல்பாடியேபணிந்து
தூமனத்தனனாய்ப்பிறவித்துழதிநீங்க, வென்னைத்
தீமனங்கெடுத்தாயுனக்கென்செய்கேனென்சிரீதரனே. (அ)

சிரீதரன்செய்யதாமரைக்கண்ணனென்றென்றிராப்பகல்வாய்
வெரீஇ, யலமந்துகண்கணீர்மல்கிவெவ்வுயிர்த்துயிர்த்து
மரீஇயதீவினைமாளவின்பம்வளரவைகல்வைகல்
இரீஇ, யுன்னையென்னுள்வைத்தனையென்னிருடீகேசனே. (௯)

இருடீகேசனெம்பிரானிலங்கையரக்கர்குலம்
முருடுதீர்த்தபிரானெம்மானமரர்பெம்மானென்றென்று
தெருடியாகினெஞ்சேவணங்குதிண்ணமறியறிந்து
மருடியேலும்விடேல்கண்டாய்நம்பிபற்பநாபனையே. (௧0)

பற்பநாபனுயர்வறவுயரும்பெருந்திறலோன்
எற்பரனென்னையாக்கிக்கொண்டெனக்கேதன்னைத்தந்த
கற்பகமென்னமுதங்கார்முகில்போலும்வேங்கடநல்
வெற்பன், விசும்போர்பிரானெந்தைதாமோதரனே. (௧௧)

தாமோதரனைத்தனிமுதல்வனைஞாலமுண்டவனை
ஆமோதரமறியவொருவர்க்கென்றேதொழுமவர்கள்
தாமோதரனுருவாகியசிவற்குந்திசைமுகற்கும்
ஆமோதரமறியவெம்மானையென்னாழிவண்ணனையே. (௧௨)

* வண்ணமாமணிச்சோதியையமரர்தலைமகனைக்
கண்ணனைநெடுமாலைத்தென்குருகூர்ச்சடகோபன்
பண்ணியதமிழ்மாலையாயிரத்துள்ளிவைபன்னிரண்டும்
பண்ணிற்பன்னிருநாமப்பாட்டண்ணலுளணைவிக்குமே. (௧௩)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - ௧எ - க்குப் பாசுரம் - ௧அ௧.

---

கேசவனுலெந்தமர்கள்கீழ்மேலெழுபிறப்பும்
தேசடைந்தாரொன்றுசிறந்துரைத்த—வீசுபுகழ்
மாறன்மலரடியேமன்னுயிர்க்கெல்லாமுய்கைக்
காறென்றுநெஞ்சேயணை. (௧எ)

## அ - ம் திருவாய்மொழி - அணைவது.

ஈச்வரன் தன்ஸம்பந்த ஸம்பந்திகளிலும் வ்யாமோஹம் பண்ணினதுகண்டு ஸம்ஸாரிகளையும் தன்னுடைய ஸம்பந்திகளாகப்பண்ண வேணுமென்று அவர்களுக்கு மோக்ஷப்ரதத்தை யுபதேசித்ததை யருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம் - பண் - இந்தளம் - தாளம் - ஏழொத்து.

சௌராஷ்டிரராகம் - அடதாளம்.

* அணைவதரவணைமேற்பூம்பாவையாகம்
புணர்வதிருவரவர்முதலுந்தானே
இணைவனுமெப்பொருட்கும்வீடுமுதலாம்
புணைவன்பிறவிக்கடனீந்துவார்க்கே. (க)

நீந்துந்துயர்ப்பிறவியுட்படமற்றெவ்வெவையும்
நீந்துந்துயரில்லாவீடுமுதலாம்
பூந்தண்புனற்பொய்கையானையிடர்கடிந்த
பூந்தண்டுழாயென்றனிநாயகன்புணர்ப்பே. (உ)

புணர்க்குமயனுமழிக்குமரனும்
புணர்த்ததன்னுந்தியோடாகத்துமன்னிப்
புணர்த்ததிருவாகித்தன்மார்விற்றான்சேர்
புணர்ப்பன்பெரும்புணர்ப்பெங்கும்புலனே. (ங)

புலனைந்துமேயும்பொறியைந்துநீங்கி
நலமந்தமில்லதோர்நாடுபுகுவீர்
அலமந்துவீயவசுரரைச்செற்றான்
பலமுந்துசீரிற்படிமினோவாதே. (ச)

ஓவாத்துயர்ப்பிறவியுட்படமற்றெவ்வெவையும்
மூவாத்தனிமுதலாய்மூவுலகுங்காவலோன்
மாவாகியாமையாய்மீனாகிமானிடமாம்
தேவாதிதேவப்பெருமானென்தீர்த்தனே. (ரு)

தீர்த்தனுலகளந்தசேவடிமேற்பூந்தாமம்
சேர்த்தியவையேசிவன்முடிமேற்றான்கண்டு
பார்த்தன்றெளிந்தொழிந்தபைந்துழாயான்பெருமை
பேர்த்துமொருவராற்பேசக்கிடந்ததே. (சா)

கிடந்திருந்துநின்றளந்துகேழலாய்க்கீழ்புக்
கிடந்திடும், தன்னுள்கரக்குமுமிழும்
தடம்பெருந்தோளாரத்தழுவும்பாரென்னும்
மடந்தையை, மால்செய்கின்றமாலார்காண்பாரே. (எ)

காண்பாராரொம்மீசன்கண்ணனையென்காணுமா
றூண்பேசிலெல்லாவுலகுமோர்துற்றாற்றா
சேண்பாலவீடோவுயிரோமற்றெப்பொருட்கும்
ஏண்பாலுஞ்சோரான்பரந்துளனுமெங்குமே. (அ)

எங்குமுளன்கண்ணனென்றமகனைக்காய்ந்
திங்கில்லையாலென்றிரணியன்றூண்புடைப்ப
அங்கப்பொழுதேயவன்வீயத்தோன்றிய, வென்
சிங்கப்பிரான்பெருமையாராயுஞ்சீர்மைத்தே. (கூ)

சீர்மைகொள்வீடுசுவர்க்கநரகீறு
ஈர்மைகொடேவர்நடுவாமற்றெப்பொருட்கும்
வேர்முதலாய்வித்தாய்ப்பரந்துதனிநின்ற
கார்முகில்போல்வண்ணனென்கண்ணனைநான்கண்டேனே.

* கண்டலங்கள்செய்யகருமேனியம்மானை
வண்டலம்புஞ்சோலைவழுதிவளநாடன்
பண்டலையிற்சொன்னதமிழாயிரத்திப்பத்தும்வல்லார்
விண்டலையில்வீற்றிருந்தாள்வரெம்மாவீடே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - கஅ - க்குப் பாசுரம் - உ00.

---

அணைந்தவர்கடம்முடனேயாயனருட்காளாம்
குணந்தனையேகொண்டுலகைக்கூட்ட—இணங்கிமிக
மாசிலுபதேசஞ்செய்மாறன்மலரடியே
வீசுபுகழெம்மாவீடு. (கஅ)

---

## கூ-ம் திருவாய்மொழி-எம்மாவீடு.

ஈஶ்வரன் ஆழ்வாருக்கும் அவருடைய ஸம்பந்த ஸம்பந்திகளுக்கும் மோக்ஷம் ப்ரஸாதித்தற்கு உத்யோகமா யிருக்கையில் என்ப்ரீதிக்காக மோக்ஷம் ப்ரஸாதிக்கவேண்டாம் உம்முடைய ப்ரீதியினாலே ப்ரஸாதித்தருளவேண்டுமென்று கைங்கர்ய நிஷ்கர்ஷைபண்ணினதை அருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம் - பண் - முதிர்ந்தகுறிஞ்சி - தாளம் - ஏழொத்து.

ஆநந்தபைரவிராகம் - ஆதிதாளம்.

* எம்மாவீட்டுத்திறமுஞ்செப்ப, நின்
செம்மாபாதபற்புத்தலைசேர்த், தொல்லைக்
கைம்மாதுன்பங்கடிந்தபிரானே
அம்மாவடியேன்வேண்டுவதீதே. (க)

ஈதேயானுன்னைக்கொள்வதெஞ்ஞான்று, மென்
மைதோய்சோதிமணிவண்ணவெந்தாய்
எய்தாநின்கழல்யானெய்த, ஞானக்
கைதாகாலக்கழிவுசெய்யேலே. (உ)

செய்யேற்றீவினையென்றருள்செய்யு, மென்
கையார்சக்கரக்கண்ணபிரானே
ஐயார்கண்டமடைக்கிலுநின்கழல்
எய்யாதேத்த, வருள்செய்யெனக்கே. (௩)

எனக்கேயாட்செய்யெக்காலத்துமென், றென்
மனக்கேவந்திடைவீடின்றிமன்னித்
தனக்கேயாகவெனைக்கொள்ளுமீதே
எனக்கேகண்ணனையான்கொள்சிறப்பே. (௪)

சிறப்பில்வீடுசுவர்க்கநரகம்
இறப்பிலெய்துகவெய்தற்க, யானும்
பிறப்பில்பல்பிறவிப்பெருமானை
மறப்பொன்றின்றியென்றுமகிழ்வேனே. (௫)

மகிழ்கொடெய்வமுலோகமலோகம்
மகிழ்கொள்சோதிமலர்ந்தவம்மானே
மகிழ்கொள்சிந்தைசொற்செய்கைகொண், டென்றும்
மகிழ்வுற்றுன்னைவணங்கவாராயே. (௬)

வாராயுன்றிருப்பாதமலர்க்கீழ்
பேராதேயான்வந்தடையும்படி
தாராதா, யுன்னையென்னுள்வைப்பிலென்றும்
ஆராதா, யெனக்கென்றுமெக்காலே. (௭)

எக்காலத்தெந்தையாயென்னுண்மன்னின், மற்
றெக்காலத்திலும்யாதொன்றும்வேண்டேன்
மிக்கார்வேதவிமலர்விழுங்கு, மென்
அக்காரக்கனியேயுன்னையானே. (௮)

யானேயென்னையறியகிலாதே
யானேயென்றனதேயென்றிருந்தேன்
யானேநீயென்னுடைமையுநீயே
வானேயேத்துமெம்வானவரேறே. (௯)

ஏறேலேழும்வென்றேர்கொளிலங்கையை
நீறேசெய்தநெடுஞ்சுடர்ச்சோதி
தேறேலென்னையுன்பொன்னடிசேர்த்தொல்லை
வேறேபோகவெஞ்ஞான்றும்விடலே. (௧0)

* விடலில்சக்கரத்தண்ணலைமேவல்
விடலில்வண்குருகூர்ச்சடகோபன்சொல்
கெடலிலாயிரத்துள்ளிவைபத்தும்
கெடலில்வீடுசெய்யுங்கிளர்வார்க்கே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - ௧௯ - க்குப் பாசுரம் - ௨௧௧.

---

எம்மாவீடும்வேண்டாவென்றனக்குன்றாளிணையே
அம்மாவமையுமெனவாய்ந்துரைத்த—நம்முடைய
வாழ்முதலாமாறன்மலர்த்தாளிணைசூடிக்
கீழ்மையற்றுநெஞ்சேகிளர். (௧௯)

---

## ௧0 - ம் திருவாய்மொழி - கிளரொளி.

---

முன்நிஷ்கர்ஷித்த கைங்கர்யஸித்திக்குத் திருமாலிருஞ்சோலைத்
திருமலையை யாஶ்ரயிக்கவேண்டுமென்று
அருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம் - பண் - நாட்டம் - தாளம் - ஏழொத்து.

கேதாரகௌளராகம் - ஆதிதாளம்.

* கிளரொளியிளமைகெடுவதன்முன்னம்
வளரொளிமாயோன்மருவியகோயில்
வளரிளம்பொழில்சூழ்மாலிருஞ்சோலை
தளர்விலராகிச்சார்வதுசதிரே. (௧)

சதிரிளமடவார்தாழ்ச்சியைமதியா
ததிர்குரல்சங்கத்தழகர்தங்கோயில்
மதிதவழ்குடுமிமாலிருஞ்சோலைப்
பதியதுவேத்தியெழுவதுபயனே. (௨)

பயனல்லசெய்துபயனில்லைநெஞ்சே
புயன்மழைவண்ணர்புரிந்துறைகோயில்
மயன்மிகுபொழில்சூழ்மாலிருஞ்சோலை
அயன்மலையடைவததுகருமமே. (௩)

கருமவன்பாசங்கழித்துழன்றுய்யவே
பெருமலையெடுத்தான்பீடுறைகோயில்
வருமழைதவழுமாலிருஞ்சோலைத்
திருமலையதுவேயடைவதுதிறமே. (௪)

திறமுடைவலத்தாற்றீவினைபெருக்கா
தறமுயலாழிப்படையவன்கோயில்
மறுவில்வண்சுனைசூழ்மாலிருஞ்சோலைப்
புறமலைசாரப்போவதுகிறியே. (ரு)

கிறியெனநினைமின்கீழ்மைசெய்யாதே
உறியமர்வெண்ணெயுண்டவன்கோயில்
மறியொடுபிணைசேர்மாலிருஞ்சோலை
நெறிபடவதுவேநினைவதுநலமே. (சு)

நலமெனநினைமினரகழுந்தாதே
நிலமுனமிடந்தானீடுறைகோயில்
மலமறுமதிசேர்மாலிருஞ்சோலை
வலமுறையெய்திமருவுதல்வலமே. (எ)

வலஞ்செய்துவைகல்வலங்கழியாதே
வலஞ்செய்யுமாயமாயவன்கோயில்
வலஞ்செய்யும்வானோர்மாலிருஞ்சோலை
வலஞ்செய்துநாளுமருவுதல்வழக்கே. (அ)

வழக்கெனநினைமின்வல்வினைமூழ்கா
தழக்கொடியட்டானமர்பெருங்கோயில்
மழக்களிற்றினஞ்சேர்மாலிருஞ்சோலை
தொழக்கருதுவதேதுணிவதுசூதே. (கூ)

சூதென்றுகளவுஞ்சூதுஞ்செய்யாதே
வேதமுன்விரித்தான்விரும்பியகோயில்
மாதுறுமயில்சேர்மாலிருஞ்சோலைப்
போதவிழ்மலையேபுகுவதுபொருளே. (க0)

* பொருளென்றிவ்வுலகம்படைத்தவன்புகழ்மேல்
மருளில்வண்குருகூர்வண்சடகோபன்
தெருள்கொள்ளச்சொன்னவோராயிரத்துளிப்பத்
தருளுடையவன்றாளணைவிக்குமுடித்தே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஸரணம் - ஜீயர்திருவடிகளேஸரணம்.

இரண்டாம்பத்துமுற்றும்.

ஆ பத்து-உ-ல்-திருவாய்மொழி-உ0-க்குப் பாசுரம்-உஉஉ.

---

கிளரொளிசேர்கீழுரைத்தபேறுகிடைக்க
வளரொளிமால்சோலைமலைக்கே—தளர்வறவே
நெஞ்சைவைத்துச்சேருமெனுநீடுபுகழ்மாறன்றாள்
முன்செலுத்துவோமெம்முடி. (உ0)

# மூன்றாம்பத்து.

## க-ம் திருவாய்மொழி - முடிச்சோதி.

திருமாலிருஞ்சோலையிலே யெழுந்தருளியிருக்கிற அழகருடைய திவ்யமங்களவிக்ரஹ திவ்யாபரண திவ்யஸௌந்தர்யங்களை அநுபவித்ததை யருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம்-பண்-இந்தளம்-தாளம்-நடையொத்து.

குண்டக்கிரியைராகம் - ரூபகதாளம்.

* முடிச்சோதியாயுனதுமுகச்சோதிமலர்ந்ததுவோ
அடிச்சோதிநீநின்றதாமரையாயலர்ந்ததுவோ
படிச்சோதியாடையொடும்பல்கலனாய், நின்பைம்பொற்
கடிச்சோதிகலந்ததுவோதிருமாலேகட்டுரையே. (௧)

கட்டுரைக்கிற்றாமரைநின்கண்பாதங்கையொவ்வா
சுட்டுரைத்தநன்பொன்னுன்திருமேனியொளியொவ்வா
தொட்டுரைத்திவ்வுலகுன்னைப்புகழ்வெல்லாம்பெரும்பாலும்
பட்டுரையாய்ப்புற்கென்றேகாட்டுமாற்பரஞ்சோதி. (௨)

பரஞ்சோதிநீபரமாய்நின்னிகழ்ந்தபின், மற்றோர்
பரஞ்சோதியின்மையிற்படியோவிநிகழ்கின்ற
பரஞ்சோதிநின்னுள்ளேபடருலகம்படைத்த, வெம்
பரஞ்சோதிகோவிந்தாபண்புரைக்கமாட்டேனே. (௩)

மாட்டாதேயாகிலுமிம்மலர்தலைமாஞாலம், நின்
மாட்டாயமலர்புரையுந்திருவுருவமனம்வைக்க
மாட்டாதபலசமயமதிகொடுத்தாய், மலர்த்துழாய்
மாட்டேநீமனம்வைத்தாய்மாஞாலம்வருந்தாதே. (௪)

வருந்தாதவருந்தவத்தமலர்கதிரின்சுடருடம்பாய்
வருந்தாதஞானமாய்வரம்பின்றிமுழுதியன்றாய்
வருங்காலநிகழ்காலங்கழிகாலமா, யுலகை
ஒருங்காகவளிப்பாய்சீரெங்குலக்கவோதுவனே. (௫)

ஓதுவாரோத்தெல்லாமெவ்வுலகத்தெவ்வெவையும்
சாதுவாய்நின்புகழின்றகையல்லாற்பிறிதில்லை
போதுவாழ்புனந்துழாய்முடியினாய், பூவின்மேல்
மாதுவாழ்மார்பினாயென்சொல்லியான்வாழ்த்துவனே. (௬)

வாழ்த்துவார்பலராகநின்னுள்ளேநான்முகனை
மூழ்த்தநீருலகெல்லாம்படையென்றுமுதற்படைத்தாய்
கேழ்த்தசீரரன்முதலாக்கிளர்தெய்வமாய்க்கிளர்ந்து
சூழ்த்தமரர்துதித்தாலுன்றொல்புகழ்மாசூணாதே. (௭)

மாசூணச்சுடருடம்பாய்மலராதுகுவியாது
மாசூணுஞானமாய்முழுதுமாய்முழுதியன்றாய்
மாசூணாவான்கோலத்தமரர்கோன்வழிப்பட்டால்
மாசூணாவுனபாதமலர்ச்சோதிமழுங்காதே. (அ)

மழுங்காதவைந்நுதியசக்கரநல்வலத்தையாய்த்
தொழுங்காதற்களிறளிப்பான்புள்ளூர்ந்துதோன்றினையே
மழுங்காதஞானமேபடையாகமலருலகில்
தொழும்பாயார்க்களித்தாலுன்சுடர்ச்சோதிமறையாதே. (சு)

மறையாயநால்வேதத்துண்ணின்றமலர்ச்சுடரே
முறையாலிவ்வுலகெல்லாம்படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்தாய்
பிறையேறுசடையானுநான்முகனுமிந்திரனும்
இறையாதலறிந்தேத்தவீற்றிருத்தலிதுவியப்பே. (க0)

* வியப்பாயவியப்பில்லாமெய்ஞ்ஞானவேதியனைச்
சயப்புகழார்பலர்வாழுந்தடங்குருகூர்ச்சடகோபன்
துயக்கின்றித்தொழுதுரைத்தவாயிரத்துளிப்பத்தும்
உயக்கொண்டுபிறப்பறுக்குமொலிமுந்நீர்ஞாலத்தே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - உக - க்குப் பாசுரம் - உருரு.

---

முடியார்திருமலையில்மூண்டுநின்றமாறன்
அடிவாரந்தன்னிலழகர்—வடிவழகைப்
பற்றிமுடியுமடியும்படிகலனும்
முற்றுமநுபவித்தான்முன். (உக)

---

## உ - ம் திருவாய்மொழி - முந்நீர்ஞாலம்.

இப்படி அழகருடைய திவ்யஸௌந்தர்யத்தைபரிஶோதித்தநுபவிக்கைக்கு அஶக்தராயவ்வஶக்திக்கு ஹேது தம்முடைய கரணஸங்கோசமென்று ஆழ்வார் வ்யாமோஹப்பட்டுநிற்க ஸர்வேஶ்வரன் (யதோவாசோநிவர்த்தந்தே) இதில் நித்யஸூரிகளுக்கும் அபரிச்சேத்யமானதென ஸ்வபாவம் இதற்குஹேது கரணஸங்கோசமென்று வ்யாமோஹப்படவேண்டாம் திருமலையிலே ஸர்வஸுலபனாய் நிற்கிறவென்னை யநுபவியுமென்று வ்யாமோஹந்தீர்த்ததனை அருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம் - பண் - சீகாமரம் - தாளம் - ஏழொத்து.

முகாரிராகம் - அடதாளம்.

முந்நீர்ஞாலம்படைத்தவெம்முகில்வண்ணனே
அந்நாணீதந்தவாக்கையின்வழியுழல்வேன்
வெந்நாணோய்வீயவினைகளைவேரறப்பாய்ந்
தெந்நாள்யானுன்னையினிவந்துகூடுவனே (க)

வன்மாவையமளந்தவெம்வாமன, நின்
பன்மாமாயப்பல்பிறவியிற்படிகின்றயான்
தொன்மாவல்வினைத்தொடர்களைமுதலரிந்து
நின்மாதாள்சேர்ந்துநிற்பதெஞ்ஞான்றுகொலோ. (உ)

கொல்லாமாக்கோற்கொலைசெய்து, பாரதப்போர்
எல்லாச்சேனையுமிருநிலத்தவித்தவெந்தாய்
பொல்லாவாக்கையின்புணர்வினையறுக்கலறு
சொல்லாயானுன்னைச்சார்வதோர்சூழ்ச்சியே. (௩)

சூழ்ச்சிஞானச்சுடரொளியாகி, யென்றும்
ஏழ்ச்சிக்கேடின்றியெங்கணுநிறைந்தவெந்தாய்
தாழ்ச்சிமற்றெங்குந்தவிர்ந்துநின்றளிணைக்கிழ்
வாழ்ச்சி, யான்சேரும்வகையருளாய்வந்தே. (௪)

வந்தாய்போலேவந்துமென்மனத்தினைநீ
சிந்தாமற்செய்யாயிதுவேயிதுவாகில்
கொந்தார்காயாவின்கொழுமலர்திருநிறத்த
வெந்தா, யானுன்னையெங்குவந்தணுகிற்பனே. (௫)

கிற்பன்கில்லேனென்றிலன்முனநாளால்
அற்பசாரங்களவைசுவைத்தகன்றொழிந்தேன்
பற்பலாயிரமுயிர்செய்தபரமா, நின்
நற்பொற்சோதித்தாணணுகுவதெஞ்ஞான்றே. (௬)

எஞ்ஞான்றுநாமிருந்திருந்திரங்கிநெஞ்சே
மெய்ஞ்ஞானமின்றிவினையியல்பிறப்பழுந்தி
எஞ்ஞான்றுமெங்குமொழிவறநிறைந்துநின்ற
மெய்ஞ்ஞானச்சோதிக்கண்ணனைமேவுதுமே. (௭)

மேவுதுன்பவினைகளைவிடுத்துமிலேன்
ஓவுதலின்றியுன்கழல்வணங்கிற்றிலேன்
பாவுதொல்சீர்க்கண்ணாவென்பரஞ்சுடரோ
கூவுகின்றேன், காண்பானெங்கெய்தக்கூவுவனே. (௮)

கூவிக்கூவிக்கொடுவினைத்தூற்றுணின்று
பாவியேன்பலகாலம்வழிதிகைத்தலமருகின்றேன்
மேவியன்றுநிரைகாத்தவ, னுலகமெல்லாம்
தாவியவம்மானை, யெங்கினித்தலைப்பெய்வனே. (௯)

தலைப்பெய்காலநமன்றமர்பாசம்விட்டால்
அலைப்பூணுண்ணுமவ்வல்லலெல்லாமகலக்
கலைப்பன்ஞானத்தென்கண்ணனைக்கண்டுகொண்டு
நிலைப்பெற்றென்னெஞ்சம்பெற்றதுநீடுயிரே. (௧௦)

* உயிர்களெல்லாவுலகமுமுடையவனைக்
குயில்கொள்சோலைத்தென்குருகூர்ச்சடகோபன்
செயிரில்சொல்லிசைமாலையாயிரத்துளிப்பத்தும்
உயிரின்மேலாக்கையூனிடையொழிவிக்குமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ திருவாய்மொழி - உஉ - க்குப் பாசுரம் - உசச.

---

முன்னமழகாரெழில்சூழ்குங்குருகையர்கோன்
இன்னவளவென்னவெனக்கரிதாய்த்—தென்னக்
கரணக்குறையின்கலக்கத்தைக்கண்ணன்
ஒருமைப்படுத்தானுழித்து. (உஉ)

---

## ந - ம் திருவாய்மொழி - ஒழிவில்காலம்.

திருவேங்கடமுடையான் திருவடிகளிலே ஸகலவிதகைங்கர்ய ப்ராத்தனையை யருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம் - பண் - பழந்தக்கராகம் - தாளம் - ஏழொத்து.

சௌராஷ்டிரராகம் - அடதாளம்.

* ஒழிவில்காலமெல்லாமுடனாய்மன்னி
வழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம்
தெழிகுரலருவித்திருவேங்கடத்
தெழில்கொள்சோதியெந்தைதந்தைதந்தைக்கே. (க)

எந்தைதந்தைதந்தைதந்தைதந்தைக்கு
முந்தை, வானவர்வானவர்கோனொடும்
சிந்துபூமகிழுந்திருவேங்கடத்
தந்தமில்புகழ்க்காரெழிலண்ணலே. (உ)

அண்ணன்மாயனணிகொள்செந்தாமரைக்
கண்ணன், செங்கனிவாய்க்கருமாணிக்கம்
தெண்ணிறச்சுனைநீர்த்திருவேங்கடத்
தெண்ணிறெல்புகழ்வானவரீசனே. (ந)

ஈசன்வானவர்க்கென்பனென்றால், அது
தேசமோதிருவேங்கடத்தானுக்கு
நீசனேனிறைவொன்றுமிலேன், என்கண்
பாசம்வைத்தபரஞ்சுடர்ச்சோதிக்கே. (ச)

சோதியாகியெல்லாவுலகுந்தொழும்
ஆதிமூர்த்தியென்றாலளவாகுமோ
வேதியர்முழுவேதத்தமுதத்தைத்
தீதில்சீர்த்திருவேங்கடத்தானையே. (ரு)

வேங்கடங்கண்மெய்ம்மேல்வினைமுற்றவும்
தாங்கடங்கட்குநல்லனவேசெய்வார்
வேங்கடத்துறைவார்க்குநமோவெனல்
ஆங்கடமை, யதுசுமந்தார்கட்கே. (சு)

சுமந்துமாமலர்நீர்சுடர்தூபங்கொண்
டமர்ந்துவானவர்வானவர்கோனொடும்
நமன்றெழுந்திருவேங்கடநங்கட்குச்
சமன்கொள்வீடுதருந்தடங்குன்றமே. (எ)

* குன்றமேந்திக்குளிர்மழைகாத்தவன்
அன்றுஞாலமளந்தபிரான், பரன்
சென்றுசேர்திருவேங்கடமாமலை
ஒன்றுமேதொழநம்வினையோயுமே. (அ)

ஓயுமூப்புப்பிறப்பிறப்புப், பிணி
வீயுமாறுசெய்வான்றிருவேங்கடத்
தாயனுண்மலராமடித்தாமரை
வாயுள்ளும்மனத்துள்ளும்வைப்பார்கட்கே. (கூ)

வைத்தநாள்வரையெல்லைகுறுகிச்சென்
றெய்த்திளைப்பதன்முன்னமடைமினோ
பைத்தபாம்பணையான்றிருவேங்கடம்
மொய்த்தசோலைமொய்பூந்தடந்தாழ்வரை. (கய)

* தாள்பரப்பிமண்டாவியவீசனை
நீள்பொழிற்குருகூர்ச்சடகோபன்சொல்
கேழிலாயிரத்திப்பத்தும்வல்லவர்
வாழ்வர்வாழ்வெய்திஞாலம்புகழவே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - உரு - க்குப் பாசுரம் - உ௫ரு.

---

ஒழிவிலாக்காலமுடனாகிமன்னி
வழுவிலாவாட்செய்யமாலுக்—கெழுசிகர
வேங்கடத்தேதப்பாரித்தமிக்காலஞ்சேர்மாறன்
பூங்கழலைநெஞ்சேபுகழ். (உரு)

## ௬-ம் திருவாய்மொழி - புகழும்.

ஸகலவிதகைங்கர்ய உத்யோகத்துக்கு அநுகுணமாக ஸர்வேஶ்வரன் ஸர்வாத்மதன்மையைக்காட்ட அங்கே ஸர்வவித கைங்கர்யத்தையும்பண்ணுகைக்கிச்சித்து அதற்கு அஶக்தராய் ஸர்வேஶ்வரன் பண்ணினமாத்ரமே போதுமென்கிற வார்த்தையாலே வாசிக கைங்கர்யம் பண்ணினதை யருளிச்செய்கிறார்.

ஆசிரியவிருத்தம் - பண் - நாட்டம் - தாளம் - ஒன்பதொத்து.

எழுணுகலியாணிராகம் - ரூபகதாளம்.

* புகழுநல்லொருவனென்கோபொருவில்சீர்ப்பூமியென்கோ
திகழுந்தண்பரவையென்கோதீயென்கோவாயுவென்கோ
நிகழுமாகாசமென்கோநீள்சுடரிரண்டுமென்கோ
இகழ்விலிவ்வனைத்துமென்கோகண்ணனைக்கூவுமாறே. (௧)

கூவுமாறறியமாட்டேன்குன்றங்களனைத்துமென்கோ
மேவுசீர்மாரியென்கோவிளங்குதாரகைகளென்கோ
நாவியல்கலைகளென்கோஞானநல்லாவியென்கோ
பாவுசீர்க்கண்ணனெம்மான்பங்கயக்கண்ணனையே. (௨)

பங்கயக்கண்ணனென்கோபவளச்செவ்வாயனென்கோ
அங்கதிரடியனென்கோவஞ்சனவண்ணனென்கோ
செங்கதிர்முடியனென்கோதிருமறுமார்பனென்கோ
சங்குசக்கரத்தனென்கோசாதிமாணிக்கத்தையே. (௩)

சாதிமாணிக்கமென்கோசவிகொள்பொன்முத்தமென்கோ
சாதிநல்வயிரமென்கோதவிவில்சீர்விளக்கமென்கோ
ஆதியஞ்சோதியென்கோவாதியம்புருடனென்கோ
ஆதுமில்காலத்தெந்தையச்சுதனமலனையே. (௪)

அச்சுதனமலனென்கோவடியவர்வினைகெடுக்கும்
நச்சுமாமருந்தமென்கோநலங்கடலமுதமென்கோ
அச்சுவைக்கட்டியென்கோவறுசுவையடிசிலென்கோ
நெய்ச்சுவைத்தேறலென்கோகனியென்கோபாலென்கேனோ. (௫)

பாலென்கோநான்குவேதப்பயனென்கோ, சமயநீதி
நூலென்கோநுடங்குகேள்விபிசையென்கோ, இவற்றுணல்ல
மேலென்கோவினையின்மிக்கபயனென்கோ, கண்ணனென்கோ
மாலென்கோமாயனென்கோவானவராதியையே. (௬)

வானவராதியென்கோவானவர்தெய்வமென்கோ
வானவர்போகமென்கோவானவர்முற்றுமென்கோ
ஊனமில்செல்வமென்கோவூனமில்சுவர்க்கமென்கோ
ஊனமில்மோக்கமென்கோவொளிமணிவண்ணனையே. (௭)

Funding: IKS/Tattva Heritage. Digitization: eGangotri.



ஒளிமணிவண்ணனென்கோவொருவனென்றேத்தநின்ற
நளிர்மதிச்சடையனென்கோநான்முகக்கடவுளென்கோ
அளிமகிழ்ந்துலகமெல்லாம்படைத்தவையேத்தநின்ற
களிமலர்த்துளவனெம்மான்கண்ணனைமாயனையே. (அ)

கண்ணனைமாயன்றன்னைக்கடல்கடைந்தமுதங்கொண்ட
அண்ணலையச்சுதனையனந்தனையனந்தன்றன்மேல்
நண்ணிநன்குறைகின்றானைஞாலமுண்டுமிழ்ந்தமாலை
என்னுமாறறியமாட்டேன்யாவையும்யவருந்தானே. (௯)

யாவையும்யவருந்தானாயவரவர்சமயந்தோறும்
தோய்விலன்புலனைந்துக்குஞ்சொலப்படானுணர்வின்மூர்த்தி
ஆவிசேருயிரினுள்ளாலாதுமோர்பற்றிலாத
பாவனையதனைக்கூடிலவனையுங்கூடலாமே. (௧0)

* கூடிவண்டறையுந்தண்டார்க்கொண்டல்போல்வண்ணன்றன்னை
மாடலர்பொழிற்குருகூர்வண்சடகோபன்சொன்ன
பாடலோராயிரத்துளிவையுமொருபத்தும்வல்லார்
விடிலபோகமெய்திவிரும்புவரமரர்மொய்த்தே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். — ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ திருவாய்மொழி - ௨௪ - க்குப் பாசுரம் - ௨௬௬.

---

புகழொன்றுமாலைப்பொருள்களுந்தானாய்
நிகழ்கின்றநேர்காட்டிநிற்க—மகிழ்மாறன்
எங்குமடிமைசெயவிச்சித்துவாசிகமாய்
அங்கடிமைசெய்தான்மொய்ம்பால். (௨௪)

---

## ரு - ம் திருவாய்மொழி - மொய்ம்மாம்.

பகவத்கைங்கர்யத்தில் ஆதரமுடைய ஆழ்வார் பகவத்கைங்கர்யம்பண்ணுகிறபேரைக் கொண்டாடினதும் அல்லாதபேரை நிந்தித்ததும் அருளிச்செய்கிறார்.

அறுசீராசிரியவிருத்தம்-பண்-சீகாமரம்-தாளம்—இடையொத்து.

நாதநாமக்கிரியைராகம் - அடதாளம்.

* மொய்ம்மாம்பூம்பொழிற்பொய்கைமுதலைச்சிறைபட்டுநின்ற
கைம்மாவுக்கருள்செய்தகார்முகில்போல்வண்ணன்கண்ணன்
எம்மானைச்சொல்லிப்பாடியெழுந்தும்பறந்துந்துள்ளாதார்
தம்மாற்கருமமென்சொல்லீர்தண்கடல்வட்டத்துள்ளீரே. (௧)

தண்கடல்வட்டத்துள்ளாரைத்தமக்கிரையாய்த்தடிந்துண்ணும்
திண்கழற்காலசுரர்க்குத்தீங்கிழைக்குந்திருமாலைப்
பண்கடலைக்கொள்ளப்பாடிப்பறந்துங்குனித்துழலாதார்
மண்கொளுலகிற்பிறப்பார்வல்வினைமோதமலைந்தே. (௨)

மலையையெடுத்துக்கன்மாரிகாத்துப்பசுநிரைதன்னைத்
தொலைவுதவிர்த்தபிரானைச்சொல்லிச்சொல்லிநின்றெப்போதும்
தலையினோடாதனந்தட்டத்தடுகுட்டமாய்ப்பறவாதார்
அலைகொணரகத்தழுந்திக்கிடந்துழைக்கின்றவம்பரே. (௩)

வம்பவிழ்கோதைபொருட்டாமால்விடையேழுமடர்த்த
செம்பவளத்திரள்வாயன்சிரீதரன்றொல்புகழ்பாடிக்
கும்பிடுநட்டமிட்டாடிக்கோகுகட்டுண்டுழலாதார்
தம்பிறப்பாற்பயனென்னேசாதுசனங்களிடையே. (௪)

சாதுசனத்தைநலியுங்கஞ்சனைச்சாதிப்பதற்
காதியஞ்சோதியுருவையங்குவைத்திங்குப்பிறந்த
வேதமுதல்வனைப்பாடிவீதிகடோறுந்துள்ளாதார்
ஓதியுணர்ந்தவர்முன்னாவென்சவிப்பார்மனிசரே. (௫)

மனிசருமற்றுமுற்றுமாய்மாயப்பிறவிபிறந்த
தனியன்பிறப்பிலிதன்னைத்தடங்கடல்சேர்ந்தபிரானைக்
கனியைக்கரும்பினின்சாற்றைக்கட்டியைத்தேனையமுதை
முனிவின்றியேத்திக்குனிப்பார்முழுதுணர்நீர்மையினாரே. (௬)

நீர்மையினூற்றுவர்வீயவைவர்க்கருள்செய்துநின்று
பார்மல்குசேனையவித்தபரஞ்சுடரைநினைந்தாடி
நீர்மல்குகண்ணினராகிநெஞ்சங்குழைந்துநையாதே
ஊன்மல்குமோடுபருப்பாருத்தமர்கட்கென்செய்வாரே. (௭)

வார்புனலந்தண்ணருவிவடதிருவேங்கடத்தெந்தை
பேர்பலசொல்லிப்பிதற்றிப்பித்தரென்றேபிறர்கூற
ஊர்பலபுக்கும்புகாதுமுலோகர்சிரிக்கநின்றாடி
ஆர்வம்பெருகிக்குனிப்பாரமரர்தொழப்படுவாரே. (௮)

அமரர்தொழப்படுவானையனைத்துலகுக்கும்பிரானை
அமரமனத்தினுள்யோகுபுணர்ந்தவன்றன்னோடொன்றாக
அமரத்துணியவல்லார்களொழியவல்லாதவரெல்லாம்
அமரநினைந்தெழுந்தாடியலற்றுவதேகருமமே. (௯)

கருமமுங்கருமபலனுமாகியகாரணன்றன்னைத்
திருமணிவண்ணனைச்செங்கண்மாலினைத்தேவபிரானை
ஒருமைமனத்தினுள்வைத்துள்ளங்குழைந்தெழுந்தாடிப்
பெருமையுநாணுந்தவிர்ந்துபிதற்றுமின்பேதைமைதீர்ந்தே. (௧0)

* தீர்ந்தவடியவர்தம்மைத்திருத்திப்பணிகொள்ளவல்ல
ஆர்ந்தபுகழச்சுதனையமரர்பிரானையெம்மானை
வாய்ந்தவளவயல்சூழ்தண்வளங்குருகூர்ச்சடகோபன்
நேர்ந்தவோராயிரத்திப்பத்தருவினை நீறுசெய்யுமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ திருவாய்மொழி - உரு - க்குப் பாசுரம் - உளஎ.

---

மொய்ம்பாருமாலுக்குமுன்னடிமைசெய்துவப்பால்
அன்பாலாட்செய்பவரையாதரித்தும்—அன்பிலா
மூடரைநிந்தித்துமொழிந்தருளுமாறன்பால்
தேடரியபத்திநெஞ்சேசெய். (உரு)

---

## சா - ம் திருவாய்மொழி - செய்ய.

கைங்கர்யத்துக்குபரவ்யூஹவிபவாந்தர்யாமிகளைக்காட்டில் அர்ச்சாவதாரமே
சுலபவிஷயத்வமென்றதை யருளிச்செய்கிறார்.

எழுசீராசிரியவிருத்தம்-பண்-தக்கராகம்-தாளம்-ஏழொத்து.

சௌராஷ்டிராராகம் - அடதாளம்.

* செய்யதாமரைக்கண்ணனுயுலகேழுமுண்டவவன்கண்டீர்
வையம்வானமனிசர்தெய்வமற்றுமற்றுமற்றுமுற்றுமாய்ச்
செய்யசூழ்சுடர்ஞானமாய்வெளிப்பட்டிவைபடைத்தான், பின்னும்
மொய்கொள்சோதியோடாயினனொருமூவராகியமூர்த்தியே. (க)

மூவராகியமூர்த்தியைமுதன்மூவர்க்குமுதல்வன்றன்னைச்
சாபமுள்ளனநீக்குவானைத்தடங்கடற்கிடந்தான்றன்னைத்
தேவதேவனைத்தென்னிலங்கையெரியெழச்செற்றவில்லியைப்
பாவநாசனைப்பங்கயத்தடங்கண்ணனைப்பரவுமினே. (உ)

பரவிவானவரேத்தநின்றபரமனைப்பரஞ்சோதியைக்
குரவைகோத்தகுழகனைமணிவண்ணனைக்குடக்கூத்தனை
அரவமேறியலைகடலமருந்துயில்கொண்டவண்ணலை
இரவுநன்பகலும்விடாதென்றுமேத்துதன்மனம்வைம்மினோ. (ந)

வைம்மினும்மனத்தென்றியானுரைக்கின்றமாயவன்சீர்மையை
எம்மனோர்களுரைப்பதென்னதுநிற்கநாடொறும், வானவர்
தம்மையாளுமவனுநான்முகனுஞ்சடைமுடியண்ணலும்
செம்மையாலவன்பாதபங்கயஞ்சிந்தித்தேத்தித்திரிவரோ, (சு)

திரியுங்காற்றோடகல்விசும்புதிணிந்தமண்கிடந்தகடல்
எரியுந்தீயோடிருசுடர்தெய்வமற்றுமற்றுமுற்றுமாய்க்
கரியமேனியன்செய்யதாமரைக்கண்ணன்கண்ணன்விண்ணோரிறை
சுரியும்பல்கருங்குஞ்சியெங்கள்சுடர்முடியண்ணறோற்றமே. (ரு)

தோற்றக்கேடவையில்லவனுடையானவனொருமூர்த்தியாய்ச்
சீற்றத்தோடருள்பெற்றவனடிக்கீழ்ப்புகநின்றசெங்கண்மால்
நாற்றத்தோற்றச்சுவையொலியுறலாகிநின்ற, வெம்வானவர்
ஏற்றையேயன்றிமற்றொருவரையானிலேனெழுமைக்குமே. (சா)

எழுமைக்குமெனதாவிக்கின்னமுதத்தினை, யெனதாருயிர்
கெழுமியகதிர்ச்சோதியைமணிவண்ணனைக்குடக்கூத்தனை
விழுமியவமரர்முனிவர்விழுங்குங்கன்னற்கனியினைத்
தொழுமின்றூயமனத்தராயிறையுநில்லாதுயரங்களே. (எ)

துயரமேதருதுன்பவின்பவினைகளாயவையல்லனாய்
உயரநின்றதோர்சோதியாயுலகேழுமுண்டுமிழ்ந்தான்றன்னை
அயரவாங்குநமன்றமர்க்கருநஞ்சினையச்சுதன்றன்னைத்
தயரதற்குமகன்றன்னையன்றிமற்றிலேன்றஞ்சமாகவே. (அ)

தஞ்சமாகியதந்தைதாயொடுதானுமாயவையல்லனாய்
எஞ்சலிலமரர்குலமுதல்மூவர்தம்முளுமாதியை
அஞ்சிநீருலகத்துள்ளீர்களவனிவனென்றுகூழேன்மின்
நெஞ்சினால்நினைப்பான்யவனவனாகுநீள்கடல்வண்ணனே. (கூ)

கடல்வண்ணன்கண்ணன்விண்ணவர்கருமாணிக்கமெனதாருயிர்
படவரவினணைக்கிடந்தபரஞ்சுடர்பண்டுநூற்றுவர்
அடவரும்படைமங்கவைவர்கட்காகிவெஞ்சமத், தன்றுதேர்
கடவியபெருமான்கனைகழல்காண்பதென்றுகொல்கண்களே. (க0)

* கண்கள்காண்டற்கரியனாய்க்கருத்துக்குநன்றுமெளியனாய்
மண்கொள்ஞாலத்துயிர்க்கெல்லாமருள்செய்யும்வானவரீசனைப்
பண்கொள்சோலைவழுதிநாடன்குருகைக்கோன்சடகோபன்சொல்
பண்கொளாயிரத்திப்பத்தாற்பத்தராகக்கூடும்பயிலுமினே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ திருவாய்மொழி - உசு - க்குப் பாசுரம் - உஅஅ.

---

செய்யபரத்துவமாய்ச்சீரார்வியூகமாய்த்
துய்யவிபவமுமாய்த்தோன்றிவற்றுள் — எய்துமவர்க்
கிந்நிலத்திலர்ச்சாவதாரமெளிதென்றான்
பன்னுதமிழ்மாறன்பயின்று. (உசு)

## ௭ - ம் திருவாய்மொழி - பயிலும்.

பகவத்கைங்கர்யம்பண்ணுகிறபேர்கள் நமக்கு ஸ்வாமிகளென்று பாகவத ஶேஷத்வ மருளிச்செய்கிறார்.

கலித்துறை - பண் - நாட்டம் - தாளம் - ஏழொத்து.

ஸஹாநாராகம் - அடதாளம்.

※ பயிலுஞ்சுடரொளிமூர்த்தியைப்பங்கயக்கண்ணனைப்
பயிலவினியநம்பாற்கடற்சேர்ந்தபரமனைப்
பயிலுந்திருவுடையார்யவரேலுமவர்கண்டீர்
பயிலும்பிறப்பிடைதோறெம்மையாளும்பரமரே. (௧)

ஆளும்பரமனைக்கண்ணனையாழிப்பிரான்றன்னைத்
தோளுமோர்நான்குடைத்தூமணிவண்ணனெம்மான்றன்னைத்
தாளுந்தடக்கையுங்கூப்பிப்பணியுமவர்கண்டீர்
நாளும்பிறப்பிடைதோறெம்மையாளுடைநாதரே. (௨)

நாதனைஞாலமும்வானமுமேத்துநறுந்துழாய்ப்
போதனைப், பொன்னெடுஞ்சக்கரத்தெந்தைபிரான்றன்னைப்
பாதம்பணியவல்லாரைப்பணியுமவர்கண்டீர்
ஓதும்பிறப்பிடைதோறெம்மையாளுடையார்களே. (௩)

உடையார்ந்தவாடையன்கண்டிகையனுடைநாணினன்
புடையார்பொன்னூலினன்பொன்முடியன்மற்றும்பல்கலன்
நடையாவுடைத்திருநாரணன்றொண்டர்தொண்டர்கண்டீர்
இடையார்பிறப்பிடைதோறெமக்கெம்பெருமக்களே. (௪)

பெருமக்களுள்ளவர்தம்பெருமானை, யமரர்கட்
கருமையொழியவன்றாரமுதூட்டியவப்பனைப்
பெருமைபிதற்றவல்லாரைப்பிதற்றுமவர்கண்டீர்
வருமையுமிம்மையுநம்மையளிக்கும்பிராக்களே. (௫)

அளிக்கும்பரமனைக்கண்ணனையாழிப்பிரான்றன்னைத்
துளிக்குநறுங்கண்ணித்தூமணிவண்ணனெம்மான்றன்னை
ஒளிக்கொண்டசோதியையுள்ளத்துக்கொள்ளுமவர்கண்டீர்
சலிப்பின்றியாண்டெம்மைச்சன்மசன்மாந்தரங்காப்பரே. (௬)

சன்மசன்மாந்தரங்காத்தடியார்களைக்கொண்டுபோய்த்
தன்மைபெறுத்தித்தன்றாளிணைக்கீழ்க்கொள்ளுமப்பனைத்
தொன்மைபிதற்றவல்லாரைப்பிதற்றுமவர்கண்டீர்
நன்மைபெறுத்தெம்மைநாளுய்யக்கொள்கின்றநம்பரே. (௭)

நம்பனை ஞாலம்படைத்தவனைத்திருமார்பனை
உம்பருலகினில்யார்க்குமுணர்வரியான்றன்னைக்
கும்பிநரகர்களேத்துவரேலுமவர்கண்டீர்
எம்பல்பிறப்பிடைதோறெந்தொழுகுலந்தாங்களே. (அ)

குலந்தாங்குசாதிகணாலிலுங்கீழிழிந், தெத்தனை
நலந்தானிலாதசண்டாளசண்டாளர்களாகிலும்
வலந்தாங்குசக்கரத்தண்ணன்மணிவண்ணற்காளென்றுள்
கலந்தா, ரடியார்தம்மடியாரெம்மடிகளே. (கூ)

அடியார்ந்தவையமுண்டாலிலையன்னவசஞ்செய்யும்
படியாதுமில்குழவிப்படியெந்தைபிரான்றனக்
கடியாரடியார்தம்மடியாரடியார்தமக்
கடியாரடியார், தம்மடியாரடியோங்களே. (க0)

* அடியோங்குநூற்றுவர்வீயவன்றைவர்க்கருள்செய்த
நெடியோனைத்தென்குருகூர்ச்சடகோபன்குற்றேவல்கள்
அடியார்ந்தவாயிரத்துள்ளிவைபத்தவன்றொண்டர்மேல்
முடி, வாரக்கற்கிற்கிற்சன்மஞ்செய்யாமைமுடியுமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - உஎ - க்குப் பாசுரம் - உகூகூ.

---

பயிலுந்திருமால்பதந்தன்னினெஞ்சம்
தயலுண்டுநிற்குந்தகியர்க்—கியலுடனே
ஆளானார்க்காளாகுமாறனடியதனில்
ஆளாகார்சன்மமுடியா. (உஎ)

## அ - ம் திருவாய்மொழி - முடியானே.

பாகவதஶேஷத்வம் ப்ரதிபாதித்த ஆழ்வார் இந்தபாகவதஶேஷத்வம் பரஸ்பர போதநத்துக்கு உபயுக்தமாகாமல் பகவத்குணஸ்மாரகமாய் அக்குணாநுபவத்தில் ஒரோரிந்த்ரியமே பஞ்சேந்திரிய க்ருத்யங்களை யாசைப்பட்டதென அருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம் – பண் - இந்தளம் - தாளம் - ஏழொத்து.

ஆநந்தபைரவிராகம் - ஆதிதாளம்,

* முடியானேயமூவுலகுந்தொழுதேத்துஞ்சீர்
அடியானேய, யாழ்கடலைக்கடைந்தாய்புள்ளூர்
கொடியானேய, கொண்டல்வண்ணாவண்டத்தும்பரில்
நெடியானேய, யென்றுகிடக்குமென்னெஞ்சமே. (க)

நெஞ்சமே, நீணகராகவிருந்தவென்
தஞ்சனை, தண்ணிலங்கைக்கிறையைச்செற்ற
நஞ்சனை, ஞாலங்கொள்வான்குறளாகிய
வஞ்சனை, யென்னுமெப்போதுமென்வாசகமே. (௨)

வாசகமேயேத்தவருள்செய்யும்வானவர்தம்
நாயகனை, நாளிளந்திங்களைக்கோள்விடுத்து
வேயகம்பால்வெண்ணெய்தொடுவுண்டவானுயர்
தாயவனை, யென்றுதடவுமென்கைகளே. (௩)

கைகளாலாரத்தொழுதுதொழுதுன்னை
வைகலுமாத்திரைப்போதுமோர்வீடின்றிப்
பைகொள்பாம்பேறியுறைபரனை, யுன்னை
மெய்கொள்ளக்காணவிரும்புமென்கண்களே. (௪)

கண்களாற்காணவருங்கொலென்றாசையால்
மண்கொண்டவாமனனேறமகிழ்ந்துசெல்
பண்கொண்டபுள்ளின்சிறகொலிபாவித்துத்
திண்கொள்ளவோர்க்குங்கிடந்தென்செவிகளே. (௫)

செவிகளாலாரநின்கீர்த்திக்கனியென்னும்
கவிகளே, காலப்பண்டேனுறைப்பத்துற்றுப்
புவியின்மேற்பொன்னெடுஞ்சக்கரத், துன்னையே
அவிவின்றியாதரிக்குமெனதாவியே. (௬)

ஆவியேயாரமுதேயென்னையாளுடைத்
தூவியம்புள்ளுடையாய்சுடர்நேமியாய்
பாவியேனெஞ்சம்புலம்பப்பலகாலும்
கூவியுங்காணப்பெறேனுனகோலமே. (௭)

கோலமேதாமரைக்கண்ணதோரஞ்சன
நீலமே, நின்றெனதாவியையீர்கின்ற
சீலமே, சென்றுசெல்லாதனமுன்னிலாம்
காலமே, யுன்னையெந்நாள்கண்டுகொள்வனே. (௮)

கொள்வனான்மாவலிமூவடிதாவென்ற
கள்வனே, கஞ்சனைவஞ்சித்துவாணனை
உள்வன்மைதீர, வோராயிரந்தோடுணித்த
புள்வல்லா, யுன்னையெஞ்ஞான்றுபொருந்துவனே. (௯)

பொருந்தியமாமருதினிடைபோயவெம்
பெருந்தகா, யுன்கழல்காணியபேதுற்று
வருந்திநான்வாசகமாலைகொண், டுன்னையே
இருந்திருந்தெத்தனைகாலம்புலம்புவனே. (௰)

* புலம்புசீர்ப்பூமியளந்தபெருமானை
நலங்கொள்சீர்நன்குருகூர்ச்சடகோபன், சொல்
வலங்கொண்டவாயிரத்துள்ளிவையுமோர்பத்
திலங்குவான், யாவருமேறுவர்சொன்னாலே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஸரணம். ஜீயர்திருவடிகளேஸரணம்.

ஆ திருவாய்மொழி - உஅ - க்குப் பாசுரம் - ஙகo.

---

முடியாதவாசைமிகமுற்றுகரணங்கள்
அடியார்தமைவிட்டவன்பால்—படியா,வொன்
றென்றின்செயல்விரும்பவுள்ளதெலாந்தாம்விரும்பத்
துன்னியதேமாறன்றன்சொல். (உஅ)

---

## கூ - ம் திருவாய்மொழி - சொன்னால்.

பகவத்குணாநுபவத்திலே ஆசையுடைய ஆழ்வார்
லௌகிகரைப்பார்த்து இதரஸ்தோத்ரம் பண்ணினால் லதுண்டாகிறது
என்னோடேகூட ஸ்ரீயஃபதியை ஸ்தோத்ரம்பண்ணினால் ஸர்வா
பீஷ்டங்களுமுண்டாமென்றதை யருளிச்செய்கிறார்.

கலித்துறை - பண் - முதிர்ந்தகுறிஞ்சி – தாளம் - ஏழொத்து.

ஸஹானாராகம் - ஆதிதாளம்.

* சொன்னால்விரோதமிதாகிலுஞ்சொல்லுவன்கேண்மினோ
என்னாவிலின்கவியானொருவர்க்குங்கொடுக்கிலேன்
தென்னாதெனாவென்றுவண்டுமுரல்திருவேங்கடத்
தென்னானையென்னப்பனெம்பெருமானுளனாகவே, (க)

உளனாகவேயெண்ணித்தன்னையொன்றாகத், தன்செல்வத்தை
வளனாமதிக்குமிம்மானிடத்தைக்கவிபாடியென்
குளனார்கழனிசூழ்கண்ணன்குறுங்குடிமெய்ம்மையே
உளனாயவெந்தையையெந்தைபெம்மானையொழியவே. (உ)

ஒழிவொன்றில்லாதபல்லூழிதோறூழிநிலாவப், போம்
வழியைத்தருநங்கள்வானவரீசனைநிற்கப், போய்க்
கழியமிகநல்லவான்கவிகொண்டுபுலவீர்காள்
இழியக்கருதியோர்மானிடம்பாடலென்னாவதே. (ங)

என்னாவதெத்தனைநாளைக்குப்போதும்புலவீர்காள்
மன்னாமனிசரைப்பாடிப்படைக்கும்பெரும்பொருள்
மின்னார்மணிமுடிவிண்ணவர்தாதையைப்பாடினால்
தன்னாகவேகொண்டுசன்மஞ்செய்யாமையுங்கொள்ளுமே. (ச)

கொள்ளும்பயனில்லைகுப்பைகிளர்த்தன்னசெல்வத்தை
வள்ளற்புகழ்ந்துநும்வாய்மையிழக்கும்புலவீர்காள்
கொள்ளக்குறைவிலன்வேண்டிற்றெல்லாந்தருங்கோதி, லென்
வள்ளன்மணிவண்ணன்றன்னைக்கவிசொல்லவம்மினோ. (ரு)

வம்மின்புலவீர்நும்மெய்வருத்திக்கைசெய்துய்மினோ
இம்மன்னுலகினிற்செல்வரிப்போதில்லைநோக்கினோம்
நும்மின்கவிகொண்டுநுந்நுமிட்டாதெய்வமேத்தினால்
செம்மின்சுடர்முடியென்றிருமாலுக்குச்சேருமே. (சு)

சேருங்கொடைபுகழெல்லையிலானை, யோராயிரம்
பேருமுடையபிரானையல்லான்மற்றியான்கிலேன்
மாரியனையகைமால்வரையொக்குந்திண்டோளென்று
பாரிலோர்பற்றையைப்பச்சைப்பசும்பொய்கள்பேசவே. (எ)

வேயின்மலிபுரைதோளிபின்னைக்குமணாளனை
ஆயபெரும்புகழெல்லையில்லாதனபாடிப்போய்க்
காயங்கழித்தவன்றாளிணைக்கீழ்ப்புகுங்காதலன்
மாயமனிசரையென்சொல்லவல்லெனென்வாய்கொண்டே. (அ)

வாய்கொண்டுமானிடம்பாடவந்தகவியேனல்லேன்
ஆய்கொண்டசீர்வள்ளலாழிப்பிரானெனக்கேயுளன்
சாய்கொண்டவிம்மையுஞ்சாதித்துவானவர்நாட்டையும்
நீகண்டுகொள்ளென்றுவீடுந்தருநின்றுநின்றே. (கூ)

நின்றுநின்றுபலநாளுய்க்குமிவ்வுடனீங்கிப்போய்ச்
சென்றுசென்றாகிலுங்கண்டுசன்மங்கழிப்பானெண்ணி
ஒன்றியொன்றியுலகம்படைத்தான்கவியாயினேற்
கென்றுமென்றுமினிமற்றொருவர்கவியேற்குமே. (கo)

* ஏற்கும்பெரும்புகழ்வானவரீசன்கண்ணன்றனக்
கேற்கும்பெரும்புகழ்வண்குருகூர்ச்சடகோபன்சொல்
ஏற்கும்பெரும்புகழாயிரத்துள்ளிவையுமோர்பத்
தேற்கும்பெரும்புகழ்சொல்லவல்லார்க்கில்லைசன்மமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ திருவாய்மொழி - உகூ - க்குப் பாசுரம் - ஈஉக.

---

சொன்னாவில்வாழ்புலவீர்சோறுகூறைக்காக
மன்னாதமானிடரைவாழ்த்துதலால்—என்னாகும்
என்னுடனேமாதவனையேத்துமெனுங்குருகூர்
மன்னருளால்மாறுஞ்சன்மம். (உகூ)

## கo - ம் திருவாய்மொழி - சன்மம்.

இதரஸ்துதிபண்ணுகிற கவிகளை பகவத்விஷயத்திலே ப்ரவர்த்திக்கும்படி உத்யோகித்து அவர்கள் புத்தி திரும்பாதபடியாலே அவர்கள்போல வன்றி ஸகலப்ரகாரத்தாலும் ஸர்வேஶ்வரன் ஆஶ்ரயிக்கையாலே தமக்கொருகுறையின்றி ஸர்வாபீஷ்டமுண்டாச்சுதென அருளிச்செய்கிறார்.

அறுசீராசிரியவிருத்தம் - பண் - நாட்டம் - தாளம் - ஏழொத்து.

அடாணாராகம் - திரிபுடைதாளம்.

* சன்மம்பலபலசெய்துவெளிப்பட்டுச்சங்கொடுசக்கரம்வில்
ஒண்மையுடையவுலக்கையொள்வாடண்டுகொண்டுபுள்ளூர்ந்துலகில்
வன்மையுடையவரக்கரசுரரைமாளப்படைபொருத
நன்மையுடையவன்சீர்பரவப்பெற்றநானோர்குறைவிலனே. (க)

குறைவிற்றடங்கடற்கோளரவேறித்தன்கோலச்செந்தாமரைக்கண்
உறைபவன்போலவோர்யோகுபுணர்ந்தவொளிமணிவண்ணன்கண்ணன்
கறைபணிமூக்குடைப்புள்ளைக்கடாவியசுரரைக்காய்ந்தவம்மான்
நிறைபுகழேத்தியும்பாடியுமாடியும்யானொருமுட்டிலனே. (உ)

முட்டில்பல்போகத்தொருதனிநாயகன்மூவுலகுக்குரிய
கட்டியைத்தேனையமுதைநன்பாலைக்கனியைக்கரும்புதன்னை
மட்டவிழ்தண்ணந்துழாய்முடியானைவணங்கியவன்திறத்துப்
பட்டபின்னை, யிறையாகிலும்யானென்மனத்துப்பரிவிலனே. (ங)

பரிவின்றிவாணனைக்காத்துமென்றன்றுபடையொடும்வந்தெதிர்ந்த
திரிபுரஞ்செற்றவனுமகனும்பின்னுமங்கியும்போர்தொலையப்
பொருசிறைப்புள்ளைக்கடாவியமாயனையாயனைப்பொற்சக்கரத்
தரியினை, யச்சுதனைப்பற்றியானிறையேனுமிடரிலனே. (ச)

இடரின்றியேயொருநாளொருபோழ்திலெல்லாவுலகுங்கழியப்
படர்புகழ்பார்த்தனும்வைதிகனுமுடனேறத்திண்டேர்கடவிச்
சுடரொளியாய்நின்றதன்னுடைச்சோதியில்வைதிகன்பிள்ளைகளை
உடலொடுங்கொண்டுகொடுத்தவனைப்பற்றியொன்றுந்துயரிலனே.

துயரில்சுடரொளிதன்னுடைச்சோதிநின்றவண்ணநிற்கவே
துயரின்மலியுமனிசர்பிறவியிற்றோன்றிக்கண்காணவந்து
துயரங்கள்செய்துதன்தெய்வநிலையுலகிற்புகவுய்க்குமம்மான்
துயரமில்சீர்க்கண்ணன்மாயன்புகழ்துற்றயானோர்துன்பமிலனே. சா

துன்பமுமின்பமுமாகியசெய்வினையாயுலகங்களுமாய்
இன்பமில்வெந்நரகாகியினியநல்வான்சுவர்க்கங்களுமாய்
மன்பல்லுயிர்களுமாகிப்பலபலமாயமயக்குகளால்
இன்புறுமிவ்விளையாட்டுடையானைப்பெற்றேதுமல்லலிலனே. (எ)

அல்லலிலின்பமளவிறந்தெங்குமழகமர்சூழொளியன்
அல்லிமலர்மகள்போகமயக்குக்களாகியுநிற்குமம்மான்
எல்லையில்ஞானத்தன்ஞானமஃதேகொண்டெல்லாக்கருமங்களுஞ்செய்
எல்லையின்மாயனைக்கண்ணனைத்தாள்பற்றியானோர்துக்கமிலனே. (அ)

துக்கமில்ஞானச்சுடரொளிமூர்த்திதுழாயலங்கற்பெருமான்
மிக்கபன்மாயங்களால்விகிர்தஞ்செய்துவேண்டுமுருவுகொண்டு
நக்கபிரானோடயன்முதலாகவெல்லாருமெவையும், தன்னுள்
ஒக்கவொடுங்கவிழுங்கவல்லானைப்பெற்றொன்றுந்தளர்விலனே. (௯)

தளர்வின்றியேயென்றுமெங்கும்பரந்ததனிமுதல்ஞானமொன்றாய்
அளவுடையைம்புலன்களறியாவகையாலருவாகிநிற்கும்
வளரொளியீசனைமூர்த்தியைப்பூதங்களைந்தையிருசுடரைக்
கிளரொளிமாயனைக்கண்ணனைத்தாள்பற்றியானென்றுங்கேடிலனே.

* கேடில்விழுப்புகழ்க்கேசவனைக்குருகூர்ச்சடகோபன்சொன்ன
பாடலோராயிரத்துளிவையுமொருபத்தும்பயிற்றவல்லார்கட்கவன்
நாடுநகரமுநன்குடன்காணநலனிடையூர்திபண்ணி
வீடும்பெறுத்தித்தன்மூவுலகுக்குந்தருமொருநாயகமே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ பத்து - ரு - ல் - திருவாய்மொழி - ௯0 - க்குப் பாசுரம் - ௯௯௨.

---

சன்மம்பலசெய்துதானிவ்வுலகளிக்கும்
நன்மையுடைமால்குணத்தைநாடோறும்—இம்மையிலே
எத்துமின்பம்பெற்றேனெனுமாறனையுலகீர்
நாத்தழும்பவேத்துமொருநாள். (௯0)

## நான்காம்பத்து.

### க - ம் திருவாய்மொழி - ஒருநாயகம்.

பகவதாஸ்ரயணத்தால்தமக்கொருகுறையில்லையென்ற ஆழ்வார் அன்யருடைய குறையுந்தீர்க்க வுத்யோகித்து இஹலோக ஐஸ்வர்யமும் ஸ்வர்க்காதிபோகமும் அஸ்திரம், கைவல்யாநுபவமல்பம், பகவதநுபவமே நிரபாயமான பரமபுருஷார்த்தமென்றுபரோபதேஸம்பண்ணினதை அருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம் - பண் - நாட்டம் - தாளம் - ஏழொத்து.

சுருட்டிராகம் - திரிபுடைதாளம்.

* ஒருநாயகமாயோடவுலகுடனாண்டவர்
கருநாய்கவர்ந்தகாலர்சிதைகியபானையர்
பெருநாடுகாணவிம்மையிலேபிச்சைதாங்கொள்வர்
திருநாரணன்றாள்காலம்பெறச்சிந்தித்துய்ம்மினோ. (க)

உய்ம்மின்திறைகொணர்ந்தென்றுலகாண்டவ, ரிம்மையே
தம்மின்சுவைமடவாரைப்பிறர்கொள்ளத்தாம்விட்டு
வெம்மினொளிவெயிற்கானகம்போய்க்குமைதின்பர்கள்
செம்மின்முடித்திருமாலைவிரைந்தடிசேர்மினோ. (உ)

அடிசேர்முடியினராகியரசர்கடாந்தொழ
இடிசேர்முரசங்கண்முற்றத்தியம்பவிருந்தவர்
பொடிசேர்துகளாய்ப்போவர்களாதலினொக்கினைக்
கடிசேர்துழாய்முடிக்கண்ணன்கழல்கணினைமினோ. (ங)

நினைப்பான்புகிற்கடலெக்கலினுண்மணலிற்பலர்
எனைத்தோருகங்களுமிவ்வுலகாண்டுகழிந்தவர்
மனைப்பான்மருங்கறமாய்தலல்லான்மற்றுக்கண்டிலம்
பனைத்தாண்மதகளிறட்டவன்பாதம்பணிமினோ. (ச)

பணிமின்திருவருளென்னுமஞ்சீதப்பைம்பூம்பள்ளி
அணிமென்குழலாரின்பக்கலவியமுதுண்டார்
துணிமுன்புநாலப்பல்லேழையர்தாமிழிப்பச்செல்வர்
மணிமின்னுமேனிநம்மாயவன்பேர்சொல்லிவாழ்மினோ. (ரு)

வாழ்ந்தார்கள்வாழ்ந்ததுமாமழைமொக்கலின்மாய்ந்துமாய்ந்
தாழ்ந்தாரென்றல்லாலன்றுமுதலின்றறுதியா
வாழ்ந்தார்கள்வாழ்ந்தேநிற்பரொன்பதில்லைநிற்குறில்
ஆழ்ந்தார்கடற்பள்ளியண்ணலடியவராமினோ. (சா)

ஆமின்சுவையவையாறோடடிசிலுண்டார்ந்தபின்
தூமென்மொழிமடவாரிரக்கப்பின்னுந்துற்றுவார்
ஈமினெமக்கொருதுற்றென்றிடறுவராதலில்
கோமின்றுழாய்முடியாதியஞ்சோதிகுணங்களே. (௭)

குணங்கொணிறைபுகழ்மன்னர்கொடைக்கடன்பூண்டிருந்
திணங்கியுலகுடனாக்கிலுமங்கவனையில்லார்
மணங்கொண்டபோகத்துமன்னியுமீள்வர்கண்மீள்வில்லைப்
பணங்கொளரவணையான்றிருநாமம்படிமினோ. (௮)

படிமன்னுபல்கலன்பற்றோடறுத்தைம்புலன்வென்று
செடிமன்னுகாயஞ்செற்றார்களுமங்கவனையில்லார்
குடிமன்னுமின்சுவர்க்கமெய்தியுமீள்வர்கண்மீள்வில்லை
கொடிமன்னுபுள்ளுடையண்ணல்கழல்கள்குறுகுமினோ. (௯)

குறுகமிகவுணர்வத்தொடுநோக்கியெல்லாம்விட்ட
இறுகலிறப்பென்னுஞானிக்குமப்பயனில்லையேல்
சிறுகநினைவதோர்பாசமுண்டாம்பின்னும்வீடில்லை
மறுகலிலீசனைப்பற்றிவிடாவிடில்வீடஃதே. (௧௦)

* அஃதேயுய்யப்புகுமாறென்றுகண்ணன்கழல்கண்மேல்
கொய்பூம்பொழில்சூழ்குருகூர்ச்சடகோபன்குற்றேவல்
செய்கோலத்தாயிரஞ்சீர்த்தொடைப்பாடலிவைபத்தும்
அஃகாமற்கற்பவராழ்துயர்போயுய்யற்பாலரோ. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேஶரணம் - ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - ௩௧ - க்குப் பாசுரம் - ௩௪௩.

ஒருநாயகமாயுலகுக்குவானோர்
இருநாட்டிலேறியுய்க்குமின்பம்—திரமாகா
மன்னுயிர்ப்போகந்தீதுமாலடிமையேயினிதாம்
பன்னியிவைமாறனுரைப்பால். (௩௧)

## ௨ - ம் திருவாய்மொழி-பாலனாய்.

முன்சொன்னபரோபதேஶம் வ்யர்த்தமாய்ப்போகையாலே தாம்பகவத்விஷயத்தில் மிகவுமபிநிவேஶத்தையடைந்து முன்புசெய்தவவதாரங்களெல்லாம் இப்பொழுது தமக்குக்காட்டவேண்டுமென்கிறதை அருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம்-பண்-நட்டபாஷை-தாளம்-ஒன்பதொத்து.

ஸ்ரீராகம் - ஆதிதாளம்,

* பாலனாயேழுலகுண்டுபரிவின்றி
ஆலிலையன்னவசஞ்செய்யுமண்ணலார்
தாளிணைமேலணிதண்ணந்துழாயென்றே
மாலுமால், வல்வினையேன்மடவல்லியே. (௧)

வல்லிசேர்நுண்ணிடையாய்ச்சியர்தம்மொடும்
கொல்லமைசெய்துகுரவைபிணைந்தவர்
நல்லடிமேலணிநாறுதுழாயென்றே
சொல்லுமாற், சூழ்வினையாட்டியேன்பாவையே. (உ)

பாவியல்வேதநன்மாலைபலகொண்டு
தேவர்கள்மாமுனிவரிறைஞ்சநின்ற
சேவடிமேலணிசெம்பொற்றுழாயென்றே
கூவுமால், கோள்வினையாட்டியேன்கோதையே. (ங)

கோதிலவண்புகழ்கொண்டுசமயிகள்
பேதங்கள்சொல்லிப்பிதற்றும்பிரான்பரன்
பாதங்கள்மேலணிபைம்பொற்றுழாயென்றே
ஓதுமா, லூழ்வினையேன்றடந்தோளியே. (ச)

தோளிசேர்பின்னைபொருட்டெருதேழ்தழீஇக்
கோளியார்கோவலனார்குடக்கூத்தனார்
தாளிணைமேலணிதண்ணந்துழாயென்றே
நாளுநா, ணைகின்றதாலென்றன்மாதரே. (ரு)

மாதர்மாமண்மடந்தைபொருட்டேனமாய்
ஆதியங்காலத்தகலிடங்கீண்டவர்
பாதங்கண்மேலணிபைம்பொற்றுழாயென்றே
ஓதுமா, லெய்தினளென்றன்மடந்தையே. (சா)

மடந்தையைவண்கமலத்திருமாதினைத்
தடங்கொடார்மார்பினில்வைத்தவர்தாளின்மேல்
வடங்கொள்பூந்தண்ணந்துழாய்மலர்க்கேயிவள்
மடங்குமால், வாணுதலீர்என்மடக்கொம்பே. (எ)

கொம்புபோற்சீதைபொருட்டிலங்கைநகர்
அம்பெரியுய்த்தவர்தாளிணைமேலணி
வம்பவிழ்தண்ணந்துழாய்மலர்க்கேயிவள்
நம்புமா, னினிதற்கென்செய்கேனங்கைமீர். (அ)

நங்கைமீர்நீருமோர்பெண்பெற்றுநல்கினீர்
எங்ஙனேசொல்லுகேன்யான்பெற்றவேழையைச்
சங்கென்னுஞ்சக்கரமென்னுந்துழாயென்னும்
இங்ஙனேசொல்லுமிராப்பகலென்செய்கேன். (கூ)

என்செய்கேனென்னுடைப்பேதையென்கோமளம்
என்சொல்லுமென்வசமுமல்லணங்கைமீர்
மின்செய்பூண்மார்பினன்கண்ணன்கழற்றுழாய்
பொன்செய்பூண்மென்முலைக்கென்றுமெலியுமே. (கo)

* மெலியுநோய்தீர்க்குநங்கண்ணன்கழல்கண்மேல்
மலிபுகழ்வண்குருகூர்ச்சடகோபன்சொல்
ஒலிபுகழாயிரத்திப்பத்தும்வல்லவர்
மலிபுகழ்வானவர்க்காவர்நற்கோவையே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - ௩௨ - க்குப் பாசுரம் - ௩௫௪.

பாலனைப்போற்சீழ்கிப்பரனளவில்வேட்கையால்
காலத்தாற்தேசத்தாற்கைகழிந்த—சால
அரிதானபோகத்திலாசையுற்றுநைந்தான்
குருகூரில்வந்துதித்தகோ. (௩௨)

## ௩ - ம் திருவாய்மொழி - கோவை.

ஆழ்வார்அர்த்தித்தபடியே ஏககாலத்தில் அவதாரங்களையெல்லாங்காட்ட ப்ரீதியடைந்ததை யருளிச்செய்கிறார்.

அறுசீராசிரியவிருத்தம் – பண் - தக்கேசி - தாளம் - ஏழொத்து.

ஆரபிராகம் - ஆதிதாளம்.

*கோவைவாயாள்பொருட்டேற்றினெருத்தமிறுத்தாய்,மதிளிலங்கைக்
கோவைவீயச்சிலைகுனித்தாய்குலநல்யானைமருப்பொசித்தாய்
பூவைவீயாநீர்தூவிப்போதால்வணங்கேனேலும், நின்
பூவைவீயாமேனிக்குப்பூசுஞ்சாந்தென்னெஞ்சமே. (க)

பூசுஞ்சாந்தென்னெஞ்சமேபுனையுங்கண்ணியெனதுடைய
வாசகஞ்செய்மாலையேவான்பட்டாடையுமஃதே
தேசமானவணிகலனுமென்கைகூப்புச்செய்கையே
ஈசன்ஞாலமுண்டுமிழ்ந்தவெந்தையேகமூர்த்திக்கே. (உ)

ஏகமூர்த்திமூர்த்திமூன்றுமூர்த்திபலமூர்த்தி
ஆகி, யைந்துபூதமாயிரண்டுசுடராயருவாகி
நாகமேறிநடுக்கடலுட்டுயின்றநாராயணனே, யுன்
ஆகமுற்றுமகத்தடக்கியாவியல்லன்மாய்த்ததே. (௩)

மாய்த்தலெண்ணிவாய்முலைதந்தமாயப்பேயுயிர்
மாய்த்த, வாயமாயனேவாமனனேமாதவா
பூத்தண்மாலைகொண்டுன்னைப்போதால்வணங்கேனேலும், நின்
பூந்தண்மாலைநெடுமுடிக்குப்புனையுங்கண்ணியெனதுயிரே. (௪)

கண்ணியெனதுயிர்காதல்கனகச்சோதிமுடிமுதலா
எண்ணில்பல்கலன்களுமேலுமாடையுமஃதே
நண்ணிமூவுலகுநவிற்றுங்கீர்த்தியுமஃதே
கண்ணனெம்பிரானெம்மான்காலசக்கரத்தானுக்கே. (௫)

காலசக்கரத்தொடுவெண்சங்கங்கையேந்தினாய்
ஞாலமுற்றுமுண்டுமிழ்ந்தநாராயணனேயென்றென்று
ஓலமிட்டுநானழைத்தாலொன்றும்வாராயாகிலும்
கோலமாமென்சென்னிக்குன்கமலமன்னகுரைகழலே. (௬)

குரைகழல்கணீட்டிமண்கொண்டகோலவாமனா
குரைகழல்கைகூப்புவார்கள்கூடநின்றமாயனே
விரைகொள்பூவுநீருங்கொண்டேத்தமாட்டேனேலுமுன்
உரைகொள்சோதித்திருவுருவமென்னதாவிமேலதே. (௭)

என்னதாவிமேலையாயேர்கொளேழுலகமும்
துன்னிமுற்றுமாகிநின்றசோதிஞானமூர்த்தியா
யுன்னதென்னதாவியுமென்னதுன்னதாவியும்
இன்னவண்ணமேநின்றாயென்றுரைக்கவல்லேனே. (௮)

உரைக்கவல்லேனல்லேனுன்னுலப்பில்கீர்த்திவெள்ளத்தின்
கரைக்கணென்றுசெல்வனுன்காதன்மையலேறினேன்
புரைப்பிலாதபரம்பரனேபொய்யிலாதபரஞ்சுடரோ
இரைத்துநல்லமேன்மக்களேத்தயானுமேத்தினேன். (௯)

யானுமேத்தியேழுலகுமுற்றுமேத்திப், பின்னையும்
தானுமேத்திலுந்தன்னையேத்தவேத்தவெங்கெய்தும்
தேனும்பாலுங்கன்னலுமமுதுமாகித்தித்திப்ப
யானுமெம்பிரானையேயேத்தினேன்யானுய்வானே. (௧0)

* உய்வுபாயமற்றின்மைதேறிக்கண்ணனொண்கழல்கண்மேல்
செய்யதாமரைப்பழனத்தென்னன்குருகூர்ச்சடகோபன்
பொய்யில்பாடலாயிரத்துளிவையும்பத்தும்வல்லார்கள்
வையமன்னிவீற்றிருந்துவிண்ணுமாள்வர்மண்ணூடே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - ௩௩ - க்குப் பாசுரம் - ௩௬௫.

---

கோவானவீசன்குறையெல்லாந்திரவே
ஓவாதகாலத்துவாதிதனை—மேவிக்
கழித்தடையக்காட்டிக்கலந்தகுணமாறன்
வழுத்துதலால்வாழ்ந்ததிந்தமண். (௩௩)

## ச-ம் திருவாய்மொழி - மண்ணை.

---

அவதாரங்களைக்காட்டி மறைந்தபடியாலே ஆழ்வார் நாயகிதன்மையை யடைந்து மோஹித்து ஸம்பந்திஸத்ருஶவஸ்துக்களைப்பார்த்துக் கதறுகிறாளென்று தாய்சொல்லுவதாக வருளிச்செய்கிறார்.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

பண் - பஞ்சமம் - தாளம் - இடையொத்து.

பிலஹரிராகம் - அடதாளம்.

* மண்ணையிருந்துதுழாவிவாமனன்மண்ணிதுவென்னும்
விண்ணைத்தொழுதவன்மேவுவைகுந்தமென்றுகைகாட்டும்
கண்ணையுண்ணீர்மல்கநின்றுகடல்வண்ணனென்னுமன்னே, யென்
பெண்ணைப்பெருமயல்செய்தார்க்கென்செய்கேன்பெய்வளையீரே. (க)

பெய்வளைக்கைகளைக்கூப்பிப்பிரான்கிடக்குங்கடலென்னும்
செய்யதோர்ஞாயிற்றைக்காட்டிச்சிரீதரன்மூர்த்தியீதென்னும்
நையுங்கண்ணீர்மல்கநின்றுநாரணனென்னுமன்னே, யென்
தெய்வவுருவிற்சிறுமான்செய்கின்றதொன்றறியேனே. (உ)

அறியுஞ்செந்தீயைத்தழுவியச்சுதனென்னுமெய்வேவாள்
எறியுந்தண்காற்றைத்தழுவியென்னுடைக்கோவிந்தனென்னும்
வெறிகொள்துழாய்மலர்நாறும்வினையுடையாட்டியேன்பெற்ற
செறிவளைமுன்கைச்சிறுமான்செய்கின்றதென்கண்ணுக்கொன்றே. ()

ஒன்றியதிங்களைக்காட்டியொளிமணிவண்ணனேயென்னும்
நின்றகுன்றத்தினைநோக்கிநெடுமாலேவாவென்றுகூவும்
நன்றுபெய்யுமழைகாணினாரணன்வந்தானென்றாலும்
என்றினமையல்கள்செய்தாரென்னுடைக்கோமளத்தையே. (ச)

கோமளவான்கன்றைப்புல்கிக்கோவிந்தன்மேய்த்தனவென்னும்
போமிளநாகத்தின்பின்போயவன்கிடக்கையீதென்னும்
ஆமளவொன்றுமறியேனருவினையாட்டியேன்பெற்ற
கோமளவல்லியைமாயோன்மால்செய்துசெய்கின்றகூத்தே. (ரு)

கூத்தர்குடமெடுத்தாடிற்கோவிந்தனாமெனாவோடும்
வாய்த்தகுழலோசைகேட்கின்மாயவனென்றுமையாக்கும்
ஆய்ச்சியர்வெண்ணெய்கள்காணிலவனுண்டவெண்ணெயீதென்னும்
பேய்ச்சிமுலைசுவைத்தார்க்கென்பெண்கொடியேறியபித்தே. (சு)

ஏறியபித்தினோடெல்லாவுலகுகண்ணன்படைப்பென்னும்
நீறுசெவ்வேயிடக்காணினெடுமாலடியாரென்றோடும்
நாறுதுழாய்மலர்காணினாரணன்கண்ணியீதென்னும்
தேறியுந்தேறாதுமாயோன்றிறத்தினளேயித்திருவே. (எ)

திருவுடைமன்னரைக்காணிற்றிருமாலைக்கண்டேனேயென்னும்
உருவுடைவண்ணங்கள்காணிலுலகளந்தானென்றுதுள்ளும்
கருவுடைத்தேவில்களெல்லாங்கடல்வண்ணன்கோயிலேயென்னும்
வெருவிலும்வீழ்விலுமோவாக்கண்ணன்கழல்கள்விரும்புமே. (அ)

விரும்பிப்பகவரைக்காணில்வியலிடமுண்டானேயென்னும்
கரும்பெருமேகங்கள்காணில்கண்ணனென்றேறப்பறக்கும்
பெரும்புலவாநிரைகாணிற்பிரானுளனென்றுபின்செல்லும்
அரும்பெறற்பெண்ணினைமாயோனலற்றியயர்ப்பிக்கின்றானே. (கூ)

அயர்க்குஞ்சுற்றும்பற்றிநோக்குமகலவேநீணோக்குக்கொள்ளும்
வியர்க்குமழைக்கண்துளும்பவெவ்வுயிர்க்கொள்ளுமெய்சோரும்
பெயர்த்துங்கண்ணாவென்றுபேசும்பெருமானேவாவென்றுகூவும்
மயற்பெருங்காதலென்பேதைக்கென்செய்கேன்வல்வினையேனே. ()

* வல்வினைதீர்க்குங்கண்ணனைவண்குருகூர்ச்சடகோபன்
சொல்வினையாற்சொன்னபாடலாயிரத்துள்ளிவைபத்தும்
நல்வினையென்றுகற்பார்கணலனிடைவைகுந்தநண்ணித்
தொல்வினைதீரவெல்லாருந்தொழுதெழவீற்றிருப்பாரே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - ௩௪ - க்குப் பாசுரம் - ௩௪௬.

---

மண்ணுலகின்முன்கலந்துமாற்பிரிகையான்மாறன்
பெண்ணிலைமையாய்க்காதற்பித்தேறி—எண்ணிடின்முன்
போலிமுதலானபொருளையவனாய்நினைந்து
மேல்விழுந்தான்மையறனில்வீறு. (௩௪)

---

## ரு - ம் திருவாய்மொழி - வீற்றிருந்து.

அந்தமோஹந்திரும்படி ஸர்வேஶ்வரன் நித்யஸூரிகளோடேகூட ஸாந்நித்யம் பண்ணுகையில் மங்களாஶாஸநம்பண்ணி ப்ரீதியடைந்ததை யருளிச்செய்கிறார்.

கலித்துறைவிருத்தம்-பண் இந்தளம்-குறிஞ்சி-தாளம் ஒன்பதொத்து

தோடிராகம் - ஆதிதாளம்.

* வீற்றிருந்தேழுலகுந்தனிக்கோல்செல்லவீவில்சீர்
ஆற்றன்மிக்காளுமம்மானைவெம்மாபிளந்தான்றன்னைப்
போற்றியென்றேகைகளாரத்தொழுதுசொன்மாலைகள்
ஏற்றநோற்றேற்கினியென்னகுறையெழுமையுமே. (க)

மையகண்ணாண்மலர்மேலுறைவாளுறைமார்பினன்
செய்யகோலத்தடங்கண்ணன்விண்ணோர்பெருமான்றன்னை
மொய்யசொல்லாலிசைமாலைகளேத்தியுள்ளப்பெற்றேன்
வெய்யநோய்கண்முழுதும்வியன்ஞாலத்துவீயவே. (௨)

வீவிலின்பமிகவெல்லைநிகழ்ந்தநம்மச்சுதன்
வீவில்சீரன்மலர்க்கண்ணன்விண்ணோர்பெருமான்றன்னை
வீவில்காலமிசைமாலைகளேத்திமேவப்பெற்றேன்
வீவிலின்பமிகவெல்லை * நிகழ்ந்தனன்மேவியே. (௩)

மேவிநின்றுதொழுவார்வினைபோகமேவும்பிரான்
தூவியம்புள்ளுடையானடலாழியம்மான்றன்னை
நாவியலாலிசைமாலைகளேத்திநண்ணப்பெற்றேன்
ஆவியென்னாவியையானறியேன்செய்தவாற்றையே. (௪)

ஆற்றநல்லவகைகாட்டுமம்மானையமரர்தம்
ஏற்றை, யெல்லாப்பொருளும்விரித்தானையெம்மான்றன்னை
மாற்றமாலைபுனைந்தேத்திநாளுமகிழ்வெய்தினேன்
காற்றின்முன்னங்கடுகிவினைநோய்கள்கரியவே. (௫)

கரியமேனிமிசைவெளியநீறுசிறிதேயிடும்
பெரியகோலத்தடங்கண்ணன்விண்ணோர்பெருமான்றன்னை
உரியசொல்லாலிசைமாலைகளேத்தியுள்ளப்பெற்றேற்
கரியதுண்டோவெனக்கின்றுதொட்டுமினியென்றுமே. (௬)

என்றுமொன்றாகியொத்தாருமிக்கார்களுந், தன்றனக்
கின்றிநின்றானையெல்லாவுலகுமுடையான்றன்னைக்
குன்றமொன்றான்மழைகாத்தபிரானைச்சொன்மாலைகள்
நன்றுசூட்டும்விதியெய்தினமென்னகுறைநமக்கே. (௭)

நமக்கும்பூவின்மிசைநங்கைக்குமின்பனை, ஞாலத்தார்
தமக்கும்வானத்தவர்க்கும்பெருமானைத், தண்டாமரை
சுமக்கும்பாதப்பெருமானைச்சொன்மாலைகள், சொல்லுமா
றமைக்கவல்லேற்கினியாவர்நிகரகல்வானத்தே. (௮)

வானத்தும்வானத்துள்ளும்பருமண்ணுள்ளுமண்ணின்கீழ்
தானத்து, மெண்டிசையுந்தவிராதுநின்றான்றன்னைக்
கூனற்சங்கத்தடக்கையவனைக்குடமாடியைவானக்
கோனைக், கவிசொல்லவல்லேற்கினிமாறுண்டே. (௯)

உண்டுமுமிழ்ந்துங்கடந்துமிடந்துங்கிடந்துநின்றும்
கொண்டகோலத்தொடுவீற்றிருந்துமணங்கூடியும்
கண்டவாற்றாற்றனதேயுலகெனநின்றான்றன்னை
வண்டமிழ்நூற்கநோற்றேனடியார்க்கின்பமாரியே. (௧0)

---

* "நிகழ்ந்தனமேவியே" எனல் பன்னீராயிரப்படியினர் கருத்தாகும்.

Funding: IKS/Tattva Heritage. Digitization: eGangotri.



* மாரிமாறாததண்ணம்மலைவேங்கடத்தண்ணலை
வாரிமாறாதபைம்பூம்பொழில்சூழ்குருகூர்நகர்க்
காரிமாறன்சடகோபன்சொல்லாயிரத்திப்பத்தால்
வேரிமாறாதபூமேலிருப்பாள்வினைதீர்க்குமே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளே ஶரணம். ஜீயர்திருவடிகளே ஶரணம்.

ஆ திருவாய்மொழி - ௩௫ - க்குப் பாசுரம் - ௩௮௭.

---

வீற்றிருக்குமால்விண்ணில்மிக்கமயல்தன்னை
ஆற்றுதற்காத்தன்பெருமையானதெல்லாம்—தோற்றவந்து
நன்றாகலக்கப்போற்றிநன்குகந்துவீறுரைத்தான்
சென்றதுயர்மாறன்தீர்ந்து. (௩௫)

---

## ௬ - ம் திருவாய்மொழி - தீர்ப்பாரை.

ஸாந்நித்யம்பண்ணின ஈஶ்வரன் அந்தர்ஹிதனானையாலே
ஆழ்வார்மோஹிக்க இதரதேவதாவேஶமென்று க்ஷுத்ர தேவத
ஆராதநம்பண்ணுவதை பரிஹரித்து பகவந்நாமஸங்கீர்த்தநமும் ஸ்ரீவைஷ்ணவ
ஸ்ரீபாததூளிகளும் இதற்கு பரிஹாரமென்று ஆப்தஸகிசொல்ல
அப்படியே பரிஹாரம்பண்ண மோஹந்தீர்ந்ததை
அருளிச்செய்கிறார்.

விருத்தம்-பண்-சீகாமரம் - பழந்தக்கராகம்-தாளம்-இடையொத்து.
பந்துவராளிராகம் - அடதாளம்.

* தீர்ப்பாரையாமினியெங்ஙனநாடுதுமன்னைமீர்
ஓர்ப்பாலிவ்வொண்ணுதலுற்றநன்னோயிதுதேறினோம்
போர்ப்பாகுதான்செய்தன்றைவரைவெல்வித்த, மாயப்போர்த்
தேர்ப்பாகனார்க்கிவள்சிந்தைதுழாய்த்திசைக்கின்றதே. (௧)

திசைக்கின்றதேயிவணோயிதுமிக்கபெருந்தெய்வம்
இசைப்பின்றிநீரணங்காடுமிளந்தெய்வமன்றிது
திசைப்பின்றியேசங்குசக்கரமென்றிவள்கேட்க, நீர்
இசைக்கிற்றிராகினன்றேயில்பெறுமிதுகாண்மினே. (௨)

இதுகாண்மினன்னைமீரிக்கட்டுவிச்சிசொற்கொண்டு, நீர்
எதுவானுஞ்செய்தங்கோர்கள்ளுமிறைச்சியுந்தூவேன்மின்
மதுவார்துழாய்முடிமாயப்பிரான்கழல்வாழ்த்தினால்
அதுவேயிவளுற்றநோய்க்குமருந்தாகுமே. (௩)

மருந்தாகுமென்றங்கோர்மாயவலவைசொற்கொண்டு, நீர்
கருஞ்சோறுமற்றைச்செஞ்சோறுங்களனிழைத்தென்பயன்
ஒருங்காகவேயுலகேழும்விழுங்கியுமிழ்ந்திட்ட
பெருந்தேவன்பேர்சொல்லகிற்கிலிவளைப்பெறுதிரே. (௪)

இவளைப்பெறும்பரிசிவ்வணங்காடுதலன்றந்தோ
குவளைத்தடங்கண்ணுங்கோவைச்செவ்வாயும்பயந்தனள்
கவளக்கடாக்களிறட்டபிரான்றிருநாமத்தால்
தவளப்பொடிக்கொண்டுநீரிட்டிடுமின்றணியுமே. (ரு)

தணியும்பொழுதில்லைநீரணங்காடுதிரன்னைமீர்
பிணியுமொழிகின்றதில்லைப்பெருகுமிதுவல்லால்
மணியிலணிநிறமாயன்றமரடிநீறுகொண்டு
அணியமுயலின்மற்றில்லைகண்டீரிவ்வணங்குக்கே. (சு)

அணங்குக்கருமருந்தென்றங்கோராடுங்கள்ளும்பராய்ச்
சுணங்கையெறிந்துநுந்தோள்குலைக்கப்படுமன்னைமீர்
உணங்கல்கெடக்கழுதையுதடாட்டங்கண்டென்பயன்
வணங்கீர்கள்மாயப்பிரான்றமர்வேதம்வல்லாரையே. (எ)

வேதம்வல்லார்களைக்கொண்டுவிண்ணோர்பெருமான்றிருப்
பாதம்பணிந், திவணோயிதுதீர்த்துக்கொள்ளாதுபோய்
ஏதம்பறைந்தல்லசெய்துகள்ளூடுகலாய்த்தூய்க்
கீதமுழவிட்டுநீரணங்காடுதல்கீழ்மையே. (அ)

கீழ்மையினாலங்கோர்கீழ்மகனிட்டமுழவின்கீழ்
நாழ்மைபலசொல்லிநீரணங்காடும்பொய்காண்கிலேன்
ஏழ்மைப்பிறப்புக்குஞ்சேமமிந்நோய்க்குமீதேமருந்
தாழ்மையிற்கண்ணபிரான்கழல்வாழ்த்துமின்னுன்னித்தே. (கூ)

உன்னித்துமற்றொருதெய்வந்தொழாளவனையல்லால்
நும்மிச்சைசொல்லிநுந்தோள்குலைக்கப்படுமன்னைமீர்
மன்னப்படுமறைவாணனைவண்டுவராபதி
மன்னனை, யேத்துமினேத்துதலுந்தொழுதாடுமே. (க0)

* தொழுதாடித்தூமணிவண்ணனுக்காட்செய்துநோய்தீர்ந்த
வழுவாததொல்புகழ்வண்குருகூர்ச்சடகோபன், சொல்
வழுவாதவாயிரத்துள்ளிவைபத்துவெறிகளும்
தொழுதாடிப்பாடவல்லார்துக்கசீலமிலர்களே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - ௩சு - க்குப் பாசுரம் - ௩கஅ.

---

தீர்ப்பாரிலாதமயல்தீரக்கலந்துமால்
ஓர்ப்பாதமின்றியுடன்பிரிய—நேர்க்க
அறிவழிந்தற்றொருமறக்கலங்கப்பேர்கேட்
டறிவுபெற்றான்மாறன்சீலம். (௩சு)

---

## எ-ம் திருவாய்மொழி-சீலமில்லா.

மோஹந்தெளிந்து திவ்யமங்களவிக்ரஹத்தைக்
காட்டவேண்டுமென்று அஹோராத்ரம் விழித்தமையை
அருளிச்செய்கிறார்.

ஆசிரியவிருத்தம்-பண்-பழந்தக்கராகம்-தாளம்-ஏழொத்து.

கண்டாராகம் - ஆதிதாளம்.

* சீலமில்லாச்சிறியனேலுஞ்செய்வினையோபெரிதால்
ஞாலமுண்டாய்ஞானமூர்த்திநாராயணாவென்றென்று
காலந்தோறும்யானிருந்துகைதலைபூசலிட்டால்
கோலமேனிகாணவாராய்கூவியுங்கொள்ளாயே. (க)

கொள்ளமாளாவின்பவெள்ளங்கோதிலதந்திடு, மென்
வள்ளலேயோவையங்கொண்டவாமனாவோவென்றென்று
நள்ளிராவுநன்பகலுநானிருந்தோலமிட்டால்
கள்ளமாயாவுன்னையென்கண்காணவந்தீயாயே. (உ)

ஈவிலாததீவினைகளெத்தனைசெய்தனன்கொல்
தாவிவையங்கொண்டவெந்தாய்தாமோதராவென்றென்று
கூவிக்கூவிநெஞ்சுருகிக்கண்பனிசோரநின்றால்
பாவிநீயென்றொன்றுசொல்லாய்பாவியேன்காணவந்தே. (௩)

காணவந்தென்கண்முகப்பேதாமரைக்கண்பிறழ
ஆணிசெம்பொன்மேனியெந்தாய்நின்றருளாயென்றென்று
நாணமில்லாச்சிறுதகையேனானிங்கலற்றுவதென்
பேணிவானோர்காணமாட்டாப்பீடுடையப்பனையே. (ச)

அப்பனேயடலாழியானேயாழ்கடலைக்கடைந்த
துப்பனே, யுன்றோள்களான்குங்கண்டிடக்கூடுங்கொலென்
றெப்பொழுதுங்கண்ணநீர்கொண்டாவிதுவர்ந்துதுவர்ந்
திப்பொழுதேவந்திடாயென்றேழையேனோக்குவனே. (ரு)

நோக்கிநோக்கியுன்னைக்காண்பான்யானெனதாவியுள்ளே
நாக்குநீள்வன்ஞானமில்லைநாடோறுமென்னுடைய
ஆக்கையுள்ளுமாவியுள்ளுமல்லபுறத்தினுள்ளும்
நீக்கமின்றியெங்குநின்றாய்நின்னையறிந்தறிந்தே. (சா)

அறிந்தறிந்துதேறித்தேறியானெனதாவியுள்ளே
நிறைந்தஞானமூர்த்தியாயைநின்மலமாகவைத்துப்
பிறந்துஞ்செத்துநின்றிடரும்பேதைமைதீர்ந்தொழிந்தேன்
நறுந்துழாயின்கண்ணியம்மாநானுன்னைக்கண்டுகொண்டே. (எ)

கண்டுகொண்டென்கைகளாரநின்திருப்பாதங்கண்மேல்
எண்டிசையுமுள்ளபூக்கொண்டேத்தியுகந்துகந்து
தொண்டரோங்கள்பாடியாடச்சூழ்கடன்ஞாலத்துள்ளே
வண்டுழாயின்கண்ணிவேந்தேவந்திடகில்லாயே. (அ)

இடகிலேனென்றட்டகில்லேனைம்புலன்வெல்லகில்லேன்
கடவனுகிக்காலந்தோறும்பூப்பறித்தேத்தகில்லேன்
மடவன்னெஞ்சங்காதல்கூரவல்வினையேனயர்ப்பாய்ந்
தடவுகின்றேனெங்குக்காண்பன்சக்கரத்தண்ணலையே. (கூ)

சக்கரத்தண்ணலேயென்றுதாழ்ந்துகண்ணீர்ததும்பப்
பக்கநோக்கிநின்றலர்ந்தேன்பாவியேன்காண்கின்றிலேன்
மிக்கஞானமூர்த்தியாயவேதவிளக்கினை, யென்
தக்கஞானக்கண்களாலேகண்டுதழுவுவனே. (க0)

* தழுவிநின்றகாதறன்னாற்றுமைாக்கண்ணன்றன்னைக்
குழுவுமாடத்தென்குருகூர்மாறன்சடகோபன்சொல்
வழுவிலாதவொண்டமிழ்களாயிரத்துளிப்பத்தும்
தழுவப்பாடியாடவல்லார்வைகுந்தமேறுவரே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். - ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - ௬௭ - க்குப் பாசுரம் - ௬0௬.

---

சிலமிகுகண்ணன்திருநாமத்தாலுணர்ந்து
மேலவன்றன்மேனிகண்டுமேவுதற்குச்—சால
வருந்தியிரவும்பகலுமாறுமற்கூப்பிட்
டிருந்தனனேதென்குருகூரேறு. (௬௭)

---

## அ - ம் திருவாய்மொழி - ஏறுளும்.

கூப்பிட்டும்வாராதபடியாலே இந்தஸர்வேஶ்வரனுக்கு உபேக்ஷாவிஷயமான
ஆத்மாத்மியங்கள் தமக்குவேண்டாமென் றருளிச்செய்கிருர்.

கலிவிருத்தம், இது - நாலடித்தாழிசையுமாம்.

பண்-நட்டம்-தாளம்-ஏழொத்து.

ஸாரங்கராகம் - அடதாளம்.

* ஏறுளுமிறையோனுந்திசைமுகனுந்திருமகளும்
கூறுளுந்தனியுடம்பன்குலங்குலமா, வசுரர்களை
நீறுகும்படியாகநிருமித்துப்படைதொட்ட
மாறுளன்கவராதமணிமாமைகுறைவிலமே. (க)

மணிமாமைகுறைவில்லாமலர்மாதருறைமார்பன்
அணிமானத்தடவரைத்தோளடலாழித்தடக்கையன்
பணிமானம்பிழையாமேயடியேனைப்பணிகொண்ட
மணிமாயன்கவராதமடநெஞ்சாற்குறைவிலமே. (௨)

மடநெஞ்சாற்குறைவில்லாமகடாய்செய்தொருபேய்ச்சி
விடநஞ்சமுலைசுவைத்தமிகுஞானச்சிறுகுழவி
படநாகத்தணைக்கிடந்தபருவரைத்தோட்பரம்புருடன்
நெடுமாயன்கவராதநிறைவினாற்குறைவிலமே. (௩)

நிறைவினாற்குறைவில்லாநெடும்பணைத்தோள்மடப்பின்னைப்
பொறையினான்முலையணைவான்பொருவிடையேழடர்த்துகந்த
கறையினார்துவருடுக்கைக்கடையாவின்கழிகோற்கைச்
சறையினார்கவராததளிர்நிறத்தாற்குறைவிலமே. (௪)

தளிர்நிறத்தாற்குறைவில்லாத்தனிச்சிறையில்விளப்புற்ற
கிளிமொழியாள்காரணமாக்கிளரரக்கனகரெரித்த
களிமலர்த்துழாயலங்கற்கமழ்முடியன்கடன்ஞாலத்
தளிமிக்கான்கவராதவறிவினாற்குறைவிலமே. (௫)

அறிவினாற்குறைவில்லாவகன்ஞாலத்தவரறிய
நெறியெல்லாமெடுத்துரைத்தநிறைஞானத்தொருமூர்த்தி
குறியமாணுருவாகிக்கொடுங்கோளானிலங்கொண்ட
கிறியம்மான்கவராதகிளரொளியாற்குறைவிலமே. (௬)

கிளரொளியாற்குறைவில்லாவரியுருவாய்க்கிளர்ந்தெழுந்து
கிளரொளியவிரணியனதகன்மார்பங்கிழித்துகந்த
வளரொளியகனலாழிவலம்புரியன்மணிநீல
வளரொளியான்கவராதவரிவளையாற்குறைவிலமே. (௭)

வரிவளையாற்குறைவில்லாப்பெருமுழக்காலடங்காரை
எரியழலம்புகவூதியிருநிலமுன்றுயர்தவிர்த்த
தெரிவரியசிவன்பிரமனமரர்கோன்பணிந்தேத்தும்
விரிபுகழான்கவராதமேகலையாற்குறைவிலமே. (௮)

மேகலையாற்குறைவில்லாமெலிவுற்றவகலல்குல்
போகமகட்புகழ்த்தந்தைவிறல்வாணன்புயந்துணித்து
நாகமிசைத்துயில்வான்போலுலகெல்லாநன்கொடுங்க
யோகணைவான்கவராதவுடம்பினாற்குறைவிலமே. (௯)

உடம்பினாற்குறைவில்லாவுயிர்பிரிந்தமலைத்துண்டம்
கிடந்தனபோற்றுணிபலவாவசுரர்குழாந்துணித்துகந்த
தடம்புனலசடைமுடியன்றனியொருகூறமர்ந்துறையும்
உடம்புடையான்கவராதவுயிரினாற்குறைவிலமே. (௧௦)

* உயிரினாற்குறையில்லாவுலகேழ்தன்னுள்ளொடுக்கித்
தயிர்வெண்ணெயுண்டானைத்தடங்குருகூர்ச்சடகோபன்
செயிரில்சொல்லிசைமாலையாயிரத்துளிப்பத்தால்
வயிரஞ்சேர்பிறப்பறுத்துவைகுந்தநண்ணுவரே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ திருவாய்மொழி - ௩௮ - க்குப் பாசுரம் - ௪௨0.

---

ஏறுதிருவுடையவீசனுகப்புக்கு
வேறுபடிலென்னுடைமைமிக்கவுயிர்—தேறுங்கால்
என்றனக்கும்வேண்டாவெனுமாறன்றாளைநெஞ்சே
நந்தமக்குப்பேறாகநண்ணு. (௩௮)

---

## ௯ - ம் திருவாய்மொழி - நண்ணாதார்.

உன் விஶ்லேஷமானாலும் ஸஹிக்கிறோமொழிய உன்னிடத்தில் விமுகரான ஜீவரைப் பார்க்கமாட்டோம் இந்த தேஹம்விடும்படி செய்யவேண்டுமென்று ஸ்வாமியை ப்ரார்த்தித்ததையருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம்-நாலடித்தாழிசைக் கலித்துறையுமாம்.

பண்-நட்டபாஷை-தாளம்-இடையொத்து.

தன்யாசிராகம் - ரூபகதாளம்.

* நண்ணாதார்முறுவலிப்பநல்லுற்றார்கரைந்தேங்க
எண்ணாராத்துயர்விளைக்குமிவையென்னவுலகியற்கை
கண்ணாளாகடல்கடைந்தாயுனகழற்கேவரும்பரிசு
தண்ணாவாதடியேனைப்பணிகண்டாய்சாமாறே. (௧)

சாமாறுங்கெடுமாறுந்தமருற்றார்தலைத்தலைப்பெய்து
ஏமாறிக்கிடந்தலற்றுமிவையென்னவுலகியற்கை
ஆமாறொன்றறியேனானரவணையாயம்மானே
கூமாறேவிரைகண்டாயடியேனைக்குறிக்கொண்டே. (௨)

கொண்டாட்டுங்குலம்புனைவுந்தமருற்றார்விழுநிதியும்
வண்டார்பூங்குழலாளுமனையொழியவுயிர்மாய்தல்
கண்டாற்றேனுலகியற்கைகடல்வண்ணா, வடியேனைப்
பண்டேபோற்கருதாதுன்னடிக்கேகூவிப்பணிகொள்ளே. (௩)

கொள்ளென்றுகிளர்ந்தெழுந்தபெருஞ்செல்வநெருப்பாகக்
கொள்ளென்றுதமமூடுமிவையென்னவுலகியற்கை
வள்ளலேமணிவண்ணாவுனகழற்கேவரும்பரிசு
வள்ளல்செய்தடியேனையுனதருளால்வாங்காயே. (௪)

வாங்குநீர்மலருலகினிற்பனவுந்திரிவனவும்
ஆங்குயிர்கள்பிறப்பிறப்புப்பிணிமூப்பாற்றகர்ப்புண்ணும்
ஈங்கிதன்மேல்வெந்நரகமிவையென்னவுலகியற்கை
வாங்கெனைநீமணிவண்ணாவடியேனைமறுக்கேலே. (௫)

மறுக்கிவல்வலைப்படுத்திக்குமைத்திட்டுக்கொன்றுண்பர்
அறப்பொருளையறிந்தோராரிவையென்னவுலகியற்கை
வெறித்துளபமுடியானேவினையேனையுனக்கடிமை
அறக்கொண்டா, யினியென்னாரமுதேகூவியருளாயே. (௬)

ஆயேயிவ்வுலகத்துநிற்பனவுந்திரிவனவும்
நீயேமற்றொருபொருளுமின்றிநீநின்றமையால்
நோயேமூப்பிறப்பிறப்புப்பிணியேயென்றிவையொழியக்
கூயேகொள்ளடியேனைக்கொடுவுலகங்காட்டேலே. (௭)

காட்டிநீகரந்துமிழுநிலநீர்தீவிசும்புகால்
ஈட்டிநீவைத்தமைத்தவிமையோர்வாழ்தனிமுட்டைக்
கோட்டையினிற்கழித்தென்னையுன்கொழுஞ்சோதியுயரத்துக்
கூட்டரியதிருவடிக்களெஞ்ஞான்றுகூட்டுதியே. (௮)

கூட்டுதிநின்குரைகழல்களிமையோருந்தொழாவகைசெய்
தாட்டுதிநீயரவணையாயடியேனுமதுவறிவன்
வேட்கையெல்லாம்விடுத்தென்னையுன்திருவடியேசுமந்துழலக்
கூட்டரியதிருவடிக்கட்கூட்டினைநான்கண்டேனே. (௯)

கண்டுகேட்டுற்றுமோந்துண்டுழலுமைங்கருவி
கண்டவின்பந், தெரிவரியவளவில்லாச்சிற்றின்பம்
ஒண்டொடியாடிருமகளுநீயுமேநிலாநிற்பக்
கண்டசதிர்கண்டொழிந்தேனடைந்தேனுன்திருவடியே. (௰)

* திருவடியைநாரணனைக்கேசவனைப்பரஞ்சுடரைத்
திருவடிசேர்வதுகருதிச்செழுங்குருகூர்ச்சடகோபன்
திருவடிமேலுரைத்ததமிழாயிரத்துளிப்பத்துந்
திருவடியேயடைவிக்குந்திருவடிசேர்ந்தொன்றுமினே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேஶரணம், ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ_ திருவாய்மொழி - ௱௧ - க்குப் பாசுரம் - ௲௱௧.

---

நண்ணாதுமாலடியைநானிலத்தேவல்வினையால்
எண்ணாத்துன்பமுறுமிவ்வுயிர்கள்—தண்ணிமையைக்
கண்டிருக்கமாட்டாமற்கண்கலங்குமாறனருள்
உண்டுநமக்குற்றதுணையொன்று (௱)

---

## ௧0 - ம் திருவாய்மொழி - ஒன்றும்.

பின்னும் தேவதாந்த்ரபரரான சேதனரிடத்தில் க்ருபையாலே ஸ்ரீமந்நாராயணனே பரத்வமாகையாலே தேவதாந்த்ரத்தை விட்டு ஜகத்காரண பூதனான ஸர்வேஸ்வரனை யாஸ்ரயுங்கோளென்று பரோபதேசம்பண்ணினதை யருளிச்செய்கிறார்.

அறுசீராசிரியவிருத்தம்-பண-நாட்டம்-தாளம்-ஏழொத்து.

சுருட்டிராகம் - ரூபகதாளம்.

* ஒன்றுந்தேவுமுலகுமுயிருமற்றும்யாதுமில்லா
அன்று, நான்முகன்றன்னொடுதேவருலகோடுயிர்படைத்தான்
குன்றம்போன்மணிமாடநீடுதிருக்குருகூரதனுள்
நின்றவாதிப்பிரானிற்கமற்றைத்தெய்வநாடுதிரே. (௧)

நாடிநீர்வணங்குந்தெய்வமுமும்மையுமுன்படைத்தான்
வீடில்சீர்ப்புகழாதிப்பிரானவன்மேவியுறைகோயில்
மாடமாளிகைசூழ்ந்தழகாயதிருக்குருகூரதனைப்
பாடியாடிப்பரவிசென்மின்கள்பல்லுலகீர்பரந்தே. (௨)

பரந்ததெய்வமும்பல்லுலகும்படைத்தன்றுடனேவிழுங்கிக்
கரந்துமிழ்ந்துகடந்திடந்ததுகண்டுந்தெளியகில்லீர்
சிரங்களாலமரர்வணங்குந்திருக்குருகூரதனுள்
பரன்திறமன்றிப்பல்லுலகீர்தெய்வமற்றில்லைப்பேசுமினே. (௩)

பேசநின்றசிவனுக்கும்பிரமன்றனக்கும்பிறர்க்கும்
நாயகனவனே, கபாலநன்மோக்கத்துக்கண்டுகொண்மின்
தேசமாமதில்சூழ்ந்தழகாயதிருக்குருகூரதனுள்
ஈசன்பாலோரவம்பறைதலென்னாவதிலிங்கியர்க்கே. (௪)

இலிங்கத்திட்டபுராணத்தீருஞ்சமணருஞ்சாக்கியரும்
வலிந்துவாதுசெய்வீர்களுமற்றுநுந்தெய்வமுமாகிநின்றான்
மலிந்துசெந்நெல்கவரிவீசுந்திருக்குருகூரதனுள்
பொலிந்துநின்றபிரான்கண்டீரொன்றும்பொய்யில்லைப்போற்றுமினே.

போற்றிமற்றோர்தெய்வம்பேணப்புறத்திட், டும்மையின்னே
தேற்றிவைத்ததெல்லீரும்வீடுபெற்றாலுலகில்லையென்றே
சேற்றிற்செந்நெல்கமலமோங்குதிருக்குருகூரதனுள்
ஆற்றவல்லவன்மாயங்கண்டீரதறிந்தறிந்தோடுமினே. (௬)

ஓடியோடிப்பலபிறப்பும்பிறந்துமற்றோர்தெய்வம்
பாடியாடிப்பணிந்து, பல்படிகால்வழியேறிக்கண்டீர்
கூடிவானவரேத்தநின்றதிருக்குருகூரதனுள்
ஆடுபுட்கொடியாதிமூர்த்திக்கடிமைபுகுவதுவே. (௭)

புக்கடிமையினற்றன்னைக்கண்டமார்க்கண்டேயனவனை
நக்கபிரானுமன்றுய்யக்கொண்டதுநாராயணனருளே
கொக்கலர்தடந்தாழைவேலித்திருக்குருகூரதனுள்
மிக்கவாதிப்பிரானிற்கமற்றைத்தெய்வம்விளம்புதிரே. (அ)

விளம்புமாறுசமயமுமவையாகியுமற்றுந்தன்பால்
அளந்துகாண்டற்கரியனுகியவாதிப்பிரானமரும்
வளங்கொடண்பணைசூழ்ந்தழகாயதிருக்குருகூரதனை
உளங்கொண்ஞானத்துவைம்மினும்மையுய்யக்கொண்டுபோகுறிலே

உறுவதாவதெத்தேவுமெவ்வுலகங்களுமற்றுந்தன்பால்
மறுவின்மூர்த்தியோடொத்தித்தனையுநின்றவண்ணநிற்கவே
செறுவிற்செந்நெற்கரும்பொடோங்குதிருக்குருகூரதனுள்
குறியமாணுருவாகியநீள்குடக்கூத்தனுக்காட்செய்வதே. (க0)

* ஆட்செய்தாழிப்பிரானைச்சேர்ந்தவன்வண்குருகூர்நகரான்
நாட்கமழ்மகிழ்மாலைமார்பின்மாறன்சடகோபன்
வேட்கையாற்சொன்னபாடலாயிரத்துள்ளிப்பத்தும்வலலார்
மீட்சியின்றிவைகுந்தமாநகர்மற்றதுகையதுவே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.
நான்காம் பத்து முற்றிற்று.

ஆ பத்து-ச-ல் திருவாய்மொழி - சு0 - க்குப் பாசுரம் - சசஉ.

ஒன்றுமிலைத்தேவிவ்வுலகம்படைத்தமால்
அன்றியெனயாருமறியவே—நன்றாக
மூதலித்துப்பேசியருள்மொய்ம்மகிழோன்தாள்தொழவே
காதலிக்குமென்னுடையகை. (ச0)

## ஐந்தாம்பத்து.

### க - ம் திருவாய்மொழி - கையார்.

பக்தியில்லாமல் பக்தன்போல் வஞ்சகோக்திகள்சொல்லி
பாஹ்யவிஷயங்களிலே ப்ரவணனுன வெனக்கு ஸ்வானுபவத்வத
யுபகரித்தாரென்று உபகாரஸ்ம்ருதிபண்ணினதை
யருளிச்செய்கிறுர்.

கலித்துறை - பண் - குறிஞ்சி - தாளம் - ஏழொத்து.
முகாரிராகம் - அடதாளம்.

* கையார்சக்கரத்தென்கருமாணிக்கமேயென்றென்று
பொய்யேகைம்மைசொல்லிப்புறமேபுறமேயாடி
மெய்யேபெற்றொழிந்தேன்விதிவாய்க்கின்றுகாப்பாரார்
ஐயோகண்ணபிரானறையோவினிப்போனுலே. (க)

போனாய்மாமருதினடுவேயென்பொல்லாமணியே
தேனேயின்னமுதேயென்றென்றேசிலகூத்துச்சொல்லத்
தானேலெம்பெருமானவனென்னாகியொழிந்தான்
வானேமாநிலமேமற்றுமுற்றுமென்னுள்ளனவே. (உ)

உள்ளனமற்றுளவாப்புறமேசிலமாயஞ்சொல்லி
வள்ளன்மணிவண்ணனேயென்றென்றேயுன்னையும்வஞ்சிக்குங்
கள்ளமனந்தவிர்ந்தேயுன்னைக்கண்டுகொண்டுய்ந்தொழிந்தேன்
வெள்ளத்தணைக்கிடந்தாயினியுன்னைவிட்டென்கொள்வனே. (ங)

என்கொள்வனுன்னைவிட்டென்னும்வாசகங்கள்சொல்லியும்
வன்கள்வனேன்மனத்தைவலித்துக்கண்ணநீர்கரந்து
நின்கணெருங்கவைத்தேயெனதாவியைநீக்ககில்லேன்
என்கண்மலினமறுத்தென்னைக்கூவியருளாய்க்கண்ணனே. (ச)

கண்ணபிரானைவிண்ணோர்கருமாணிக்கத்தையமுதை
நண்ணியுநண்ணகில்லேனடுவேயோருடம்பிலிட்டுத்
திண்ணமழுந்தக்கட்டிப்பலசெய்வினைவன்கயிற்றாற்
புண்ணைமறையவரிந்தென்னைப்போரவைத்தாய்புறமே. (ரு)

புறமறக்கட்டிக்கொண்டிருவல்வினையார்குமைக்கும்
முறைமுறையாக்கைபுகலொழியக்கண்டுகொண்டொழிந்தேன்
நிறமுடைநாற்றடந்தோள்செய்யவாய்செய்யதாமரைக்கண்
அறமுயலாழியங்கைக்கருமேனியம்மான்றன்னையே. (சா)

அம்மானாழிப்பிரானவனெவ்விடத்தான்யானார்
எம்மாபாவியர்க்கும்விதிவாய்க்கின்றுவாய்க்குங்கண்டீர்
கைம்மாதுன்பொழித்தாயென்றுகைதலைபூசலிட்டே
மெய்ம்மாலாயொழிந்தேனெம்பிரானுமென்மேலானே. (எ)

மேலாத்தேவர்களுநிலத்தேவருமேவித்தொழும்
மாலார்வந்தினநாளடியேன்மனத்தேமன்னினார்
சேலேய்கண்ணியரும்பெருஞ்செல்வமுநன்மக்களும்
மேலாத்தாய்தந்தையுமவரேயினியாவாரே. (அ)

ஆவாரார்துணையென்றலைநீர்க்கடலுளழுந்தும்
நாவாய்போற், பிறவிக்கடலுணின்றுநான்றுளங்கத்
தேவார்கோலத்தொடுந்திருச்சக்கரஞ்சங்கினொடும்
ஆவாவென்றருள்செய்தடியேனொடுமானானே. (கூ)

ஆனானாளுடையானென்றஃதேகொண்டுவந்துவந்து
தானேயின்னருள்செய்தென்னைமுற்றவுந்தானானான்
மீனாயாமையுமாய்நரசிங்கமுமாய்க்குறளாய்க்
கானாரேனமுமாய்க்கற்கியாமின்னங்கார்வண்ணனே. (க0)

* கார்வண்ணன்கண்ணபிரான்கமலத்தடங்கண்ணன்றன்னை
ஏர்வளவொண்கழனிக்குருகூர்ச்சடகோபன்சொன்ன
சீர்வண்ணவொண்டமிழ்களிவையாயிரத்துளிப்பத்தும்
ஆர்வண்ணத்தாலுரைப்பாரடிக்கீழ்புகுவார்பொலிந்தே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - சக - க்குப் பாசுரம் - சடுரு.

கையாரும்சக்கரத்தோன்காதலன்றிக்கேயிருக்கப்
பொய்யாகப்பேசும்புறனுரைக்கு—மெய்யான
பேற்றையுபகரித்தபேரருளின்றன்மைதனைப்
போற்றினனேமாறன்பொலிந்து. (ருக)

## உ - ம் திருவாய்மொழி - பொலிக.

தம்முடைய உபதேஶத்தால் ஶிக்ஷிதராய்
சேதநரையும் தம்முடைய ப்ரபாவத்தைப் பார்க்கவந்த நித்யஸூரிகளையும்
பார்த்து மங்களாஶாஸநம் பண்ணினதை யருளிச்செய்கிறார்.

அறுசீராசிரியவிருத்தம்-பண்-சீகாமரம்-தாளம்-இடையொத்து.

கலியாணிராகம் - திரிபுடைதாளம்.

* பொலிகபொலிகபொலிகபோயிற்றுவல்லுயிர்ச்சாபம்
நலியுநரகமுநைந்தநமனுக்கிங்கியாதொன்றுமில்லை
கலியுங்கெடுங்கண்டுகொண்மின்கடல்வண்ணன்பூதங்கண்மண்மேல்
மலியப்புகுந்திசைபாடியாடியுழிதரக்கண்டோம். (க)

கண்டோங்கண்டோங்கண்டோங்கண்ணுக்கினியனகண்டோந்
தொண்டீரெல்லீரும்வாரீர்தொழுதுதொழுதுநின்றார்த்தும்
* வண்டார்தண்ணந்துழாயான்மாதவன்பூதங்கண்மண்மேல்
பண்டான்பாடிநின்றாடிப்பரந்துதிரிகின்றனவே. (உ)

திரியுங்கலியுகநீங்கித்தேவர்கடாமும்புகுந்து
பெரியகிதயுகம்பற்றிப்பேரின்பவெள்ளம்பெருகக்
கரியமுகில்வண்ணனெம்மான்கடல்வண்ணன்பூதங்கண்மண்மேல்
இரியப்புகுந்திசைபாடியெங்குமிடங்கொண்டனவே. (ங)

இடங்கொள்சமயத்தையெல்லாமெடுத்துக்களைவனபோலே
தடங்கடற்பள்ளிப்பெருமான்றன்னுடைப்பூதங்களேயாய்க்
கிடந்துமிருந்துமெழுந்துங்கீதம்பலபலபாடி
நடந்தும்பறந்துங்குனித்துநாடகஞ்செய்கின்றனவே, (ச)

செய்கின்றதென்கண்ணுக்கொன்றேயொக்கின்றதிவ்வுலகத்து
வைகுந்தன்பூதங்களேயாய்மாயத்திலுலெங்குமன்னி
ஐயமொன்றில்லையரக்கரசுரர்பிறந்திருள்ளீரேல்
உய்யும்வகையில்லைதொண்டரூழிபேர்த்திடுங்கொன்றே. (ரு)

கொன்றுயிருண்ணும்விசாதிபகைபசிதீயனவெல்லாம்
நின்றிவ்வுலகிற்கடிவானேமிப்பிரான்றமர்போந்தார்
நன்றிசைபாடியுந்துள்ளியாடியுஞாலம்பரந்தார்
சென்றுதொழுதுய்ம்மின்றொண்டீர்சிந்தையைச்செந்நிறுத்தியே.

நிறுத்திநும்முள்ளத்துக்கொள்ளுந்தெய்வங்களும்மையுய்யக்கொள்
மறுத்துமவனோடேகண்டீர்மார்க்கண்டேயனுங்கரியே
கறுத்தமனமொன்றும்வேண்டாகண்ணனல்லாற்றெய்வமில்லை
இறுப்பதெல்லாமவன்மூர்த்தியாயவர்க்கேயிறுமினே. (எ)

இறுக்குமிறையிறுத்துண்ணவெவ்வுலகுக்குந்தன்மூர்த்தி
நிறுத்தினான்றெய்வங்களாகவத்தெய்வநாயகன்றானே
மறுத்திருமார்வனவன்றன்பூதங்கள்கீதங்கள்பாடி
வெறுப்பின்றிஞாலத்துமிக்கார்மேவித்தொழுதுய்மினீரே. (அ)

மேவித்தொழுதுய்மினீர்கள்வேதப்புனிதவிருக்கை
நாவிற்கொண்டச்சுதன்றன்னை ஞானவிதிபிழையாமே
பூவிற்புகையும்விளக்குஞ்சாந்தமுநீருமலிந்து
மேவித்தொழுமடியாரும்பகவருமிக்கதுலகே. (சு)

மிக்கவுலகுகடோறுமேவிக்கண்ணன்றிருமூர்த்தி
நக்கபிரானோடயனுமிந்திரனுமுதலாகத்
தொக்கவமரர்குழாங்களெங்கும்பரந்தனதொண்டீர்
ஒக்கத்தொழுகிற்றிராகிற்கலியுகமொன்றுமில்லையே. (கo)

* கலியுகமொன்றுமின்றிக்கேதன்னடியார்க்கருள்செய்யும்
மலியுஞ்சுடரொளிமூர்த்திமாயப்பிரான்கண்ணன்றன்னைக்
கலிவயற்றென்னன்குருகூர்க்காரிமாறன்சடகோபன்
ஒலிபுகழாயிரத்திப்பத்துள்ளத்தைமாசறுக்குமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - சஉ - க்குப் பாசுரம் - சகூச.

---

பொலிகபொலிகவென்றுபூமகள்கோன்றொண்டர்
மலிவுதனைக்கண்டுகந்துவாழ்த்தி—உலகில்
திருந்தாதார்தம்மைத்திருத்தியமாறன்சொல்
மருந்தாகப்போகுமனமாசு. (சஉ)

## ௩ - ம் திருவாய்மொழி- மாசறுசோதி.

எங்கும்பகவத்விஶ்லேஷத்தைஸ்மரித்துக்கொண்டுஅதனாலேநாயகிதன்மையை யடைந்து லோகத்தார் நிந்திக்கிறதும் மடலூரும்படி உத்யோகித்ததையு மருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம்-பண்-நட்டபாஷை-தாளம்-ஏழொத்து.

பியாகடைராகம் - திரிபுடைதாளம்.

* மாசறுசோதியென்செய்யவாய்மணிக்குன்றத்தை
ஆசறுசீலனையாதிமூர்த்தியைநாடியே
பாசறவெய்தியறிவிழந்தெனைநாளையம்
ஏசறுமூரவர்கவ்வைதோழியென்செய்யுமே. (க)

என்செய்யுமூரவர்கவ்வைதோழியினிநம்மை
என்செய்யதாமரைக்கண்ணனென்னைநிறைகொண்டான்
முன்செய்யமாமையிழந்துமேனிமெலிவெய்தி
என்செய்யவாயுங்கருங்கண்ணும்பயப்பூர்ந்தவே. (உ)

ஊர்ந்தசகடமுதைத்தபாதத்தன்பேய்முலை
சார்ந்து, சுவைத்தசெவ்வாயனென்னைநிறைகொண்டான்
பேர்ந்தும்பெயர்ந்துமவனோடன்றியோர்சொல்லிலேன்
தீர்ந்தவென்றோழியென்செய்யுமூரவர்கவ்வையே. (௩)

ஊரவர்கவ்வையெருவிட்டன்னைசொன்னீர்படுத்
தீரநெல்வித்திமுளைத்தநெஞ்சப்பெருஞ்செய்புட்
பேரமர்காதல்கடல்புரையவிளைவித்த
காரமர்மேனிநங்கண்ணன்றோழிகடியனே. (௪)

கடியன்கொடியனெடியமாலுலகங்கொண்ட
அடியன, னறிவருமேனிமாயத்த, னாகிலும்
கொடியவென்னெஞ்சமவனென்றேகிடக்குமெல்லே
துடிகொளிடைமடத்தோழியன்னையென்செய்யுமே. (௫)

அன்னையென்செய்யிலெனூரென்சொல்லிலென்றோழிமீர்
என்னையினியுமக்காசையில்லையகப்பட்டேன்
முன்னையமரர்முதல்வன்வண்டுவராபதி
மன்னன், மணிவண்ணன்வாசுதேவன்வலையுளே. (௬)

வலையுளகப்படுத்தியென்னைநன்னெஞ்சங்கூவிக்கொண்
டலைகடற்பள்ளியம்மானையாழிப்பிரான்றன்னைக்
கலைகொளகலல்குற்றோழிநங்கண்களாற்கண்டு
தலையில்வணங்கவுமாங்கொலோதையலார்முன்பே. (எ)

பேய்முலையுண்டுசகடம்பாய்ந்துமருதிடை
போய்முதல்சாய்த்துப், புள்வாய்பிளந்துகளிறட்ட
தூமுறுவற்றொண்டைவாய்ப்பிரானையெந்நாள்கொலோ
யாமுறுகின்றதுதோழியன்னையர்நாணவே. (அ)

நாணுநிறையுங்கவர்ந்தென்னைநன்னெஞ்சங்கூவிக்கொண்டு
சேணுயர்வானத்திருக்குந்தேவபிரான்றன்னை
யாணையென்றோழியுலகுதோறலர்தூற்றி, யாங்
கோணைகள்செய்துகுதிரியாய்மடலூர்துமே. (கூ)

யாமடலூர்ந்துமெம்மாழியங்கைப்பிரானுடைத்
தூமடற்றண்ணந்துழாய்மலர்கொண்டுசூடுவோம்
யாமடமின்றித்தெருவுதோறயற்றையலார்
நாமடங்காப்பழிதூற்றிநாடுமிரைக்கவே. (க0)

※ இரைக்குங்கருங்கடல்வண்ணன்கண்ணபிரான்றன்னை
விரைக்கொள்பொழிற்குருகூர்ச்சடகோபன்சொன்ன
நிரைக்கொளந்தாதியோராயிரத்துளிப்பத்தும்
உரைக்கவல்லார்க்குவைகுந்தமாகுந்தம்மூொல்லாம். (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - சரு - க்குப் பாசுரம் - சஎரு.

---

மாசறுசோதிகண்ணன்வந்துகலவாமையால்
ஆசைமிகுந்துபழிக்கஞ்சாம—லேசறவே
மண்ணில்மடலூரமாறனொருமிந்தா
னுண்ணடுங்கத்தான்பிறந்தவூர். (சரு)

---

## சு - ம் திருவாய்மொழி - ஊொல்லாம்.

மடலூர்தற்கு அஶக்யமாய் அந்தகாராக்ராந்தமான இரவில் ஆழ்வார்
அத்யந்தம் துக்கப்பட்டதை யருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம் - நாலடித்தாழிசையுமாம்,

பண் - புறநீர்மை - தாளம் - நடையொத்து.

கண்டாராகம் - திரிபுடைதாளம்.

※ ஊொல்லாந்துஞ்சியுலகெல்லாநள்ளிருளாய்
நீொல்லாந்தேறியோர்நீளிரவாய்நீண்டதால்
பாரொல்லாமுண்டநம்பாம்பணையான்வாரானல்
ஆரொல்லேவல்வினையேனாவிகாப்பாரினியே. (க)

ஆவிகாப்பாரினியாராழ்கடல்மண்விண்மூடி
மாவிகாரமாயோர்வல்லிரவாய்நீண்டதாற்
காவிசேர்வண்ணனென்கண்ணனும்வாரானால்
பாவியேனெஞ்சமேநீயும்பாங்கல்லையே. (௨)

நீயும்பாங்கல்லைகாணெஞ்சமேநீளிரவும்
ஓயும்பொழுதின்றியூழியாய்நீண்டதாற்
காயுங்கடுஞ்சிலையென்காகுத்தன்வாரானால்
மாயும்வகையறியேன்வல்வினையேன்பெண்பிறந்தே. (௩)

பெண்பிறந்தாரெய்தும்பெருந்துயர்காண்கிலேனென்று
ஒண்சுடரோன்வாராதொளித்தா, னிம்மண்ணளந்த
கண்பெரியசெவ்வாயெங்காரேறுவாரானால்
எண்பெரியசிந்தைநோய்தீர்ப்பாராரென்னையே. (௪)

ஆரென்னையாராய்வாரன்னையருந்தோழியரும்
நீரென்னேயென்னாதேநீளிரவுந்துஞ்சுவராற்
காரன்னமேனிநங்கண்ணனும்வாரானால்
பேரென்னைமாயாதால்வல்வினையேன்பின்னின்றே. (௫)

பின்னின்றகாதனோய்நெஞ்சம்பெரிதடுமான்
முன்னின்றிராவூழிகண்புதையமூடிற்றான்
மன்னின்றசக்கரத்தெம்மாயவனும்வாரானால்
இந்நின்றநீளாவிகாப்பாராரிவ்விடத்தே. (௬)

காப்பாராரிவ்விடத்துக்கங்கிருளினுண்டுளியாய்ச்
சேட்பாலதூழியாய்ச்செல்கின்றகங்குல்வாய்த்
தூப்பாலவெண்சங்குசக்கரத்தன்றோன்றானால்
தீப்பாலவல்வினையேன்றெய்வங்காளென்செய்கேனே. (௭)

தெய்வங்காளென்செய்கேனோரிரவேழூழியாய்
மெய்வந்துநின்றெனதாவிமெலிவிக்கும்
கைவந்தசக்கரத்தென்கண்ணனும்வாரானாற்
றைவந்ததண்டென்றல்வெஞ்சுடரிற்றானடுமே. (௮)

வெஞ்சுடரிற்றானடுமால்வீங்கிருளினுண்டுளியாய்
அஞ்சுடரவெய்யோனணிநெடுந்தேர்தோன்றாதால்
செஞ்சுடர்த்தாமரைக்கட்செல்வனும்வாரானால்
நெஞ்சிடர்தீர்ப்பாரினியார்நின்றுருகுகின்றேனே. (௯)

நின்றுருகுகின்றேனேபோலநெடுவானம்
சென்றுருகிநுண்டுளியாய்ச்செல்கின்றகங்குல்வாய்
அன்றொருகால்வையமளந்தபிரான்வாரானென்
றொன்றொருகாற்சொல்லாதுலகோவுறங்குமே. (௧௦)

* உறங்குவான்போல்யோகுசெய்தபெருமானைச்
சிறந்தபொழில்சூழ்குருகூர்ச்சடகோபன்சொல்
நிறங்கிளர்ந்தவந்தாதியாயிரத்துளிப்பத்தால்
இறந்துபோய்வைகுந்தஞ்சேராவாறெங்ஙனேயோ. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - சச - க்குப் பாசுரம் - சஅசு.

---

ஊரநினைந்தமடலூரவுமொண்ணுதபடி
கூரிருள்சேர்கங்குலுடன்கூடிநின்று—பேராமல்
தீதுசெய்யமாறன்றிருவுளத்திற்சென்றதுயர்
ஓதுவதிங்கெங்ஙனேயோ. (சச)

---

## ரு-ம் திருவாய்மொழி-எங்ஙனேயோ.

---

அதன்பின் ஸூர்யோதயமாய் திருக்குறுங்குடிநம்பி ப்ரத்யக்ஷமாகாநிற்க தத்ப்ரவணரான ஆழ்வாரைப்பார்த்து தாய்விலக்கியும் அவனிடத்தில் தன்மனது லக்நமாயிருக்கிறது நீகோபிக்கவேண்டாமென்றருளிச்செய்கிறார்.

அறுசீராசிரியவிருத்தம் - பண் - கைசிகம் - தாளம் - ஏழொத்து

செஞ்சுருட்டிராகம் - ரூபகதாளம்

* எங்ஙனேயோவன்னைமீர்காளென்னைமுனிவதுநீர்
நங்கள்கோலத்திருக்குறுங்குடிநம்பியைநான்கண்டபின்
சங்கினோடுநேமியோடுந்தாமரைக்கண்களோடும்
செங்கனிவாயொன்றினோடுஞ்செல்கின்றதென்னெஞ்சமே. (க)

என்னெஞ்சினைநோக்கிக்காணீரென்னைமுனியாதே
தென்னன்சோலைத்திருக்குறுங்குடிநம்பியைநான்கண்டபின்
மின்னுநூலுங்குண்டலமுமார்பிற்றிருமறுவும்
மன்னுபூணுநான்குதோளும்வந்தெங்குநின்றிடுமே. (உ)

நின்றிடுந்திசைக்குநையுமென்றன்னையருமுனிதிர்
குன்றமாடத்திருக்குறுங்குடிநம்பியைநான்கண்டபின்
வென்றிவில்லுந்தண்டும்வாளுஞ்சக்கரமுஞ்சங்கமும்
நின்றுதோன்றிக்கண்ணுளீங்காநெஞ்சுள்ளுநீங்காவே. (ங)

நீங்கநில்லாகண்ணநீர்களென்றன்னையருமுனிதிர்
தேன்கொள்சோலைத்திருக்குறுங்குடிநம்பியைநான்கண்டபின்
பூந்தண்மாலைத்தண்டுழாயும்பொன்முடியும்வடிவும்
பாங்குதோன்றும்பட்டுநாணும்பாவியேன்பக்கத்தவே. (ச)

பக்கநோக்கிநிற்குநையுமென்றன்னையருமுனிதிர்
தக்ககீர்த்தித்திருக்குறுங்குடிநம்பியைநான்கண்டபின்
தொக்கசோதித்தொண்டைவாயுநீண்டபுருவங்களும்
தக்கதாமரைக்கண்ணும்பாவியேனாவியின்மேலனவே. (ரு)

மேலும்வன்பழிநங்குடிக்கிவளென்றன்னைகாணக்கொடாள்
சோலைசூழ்தண்டிருக்குறுங்குடிநம்பியைநான்கண்டபின்
கோலநீள்கொடிமூக்குந்தாமரைக்கண்ணுங்கனிவாயும்
நீலமேனியுநான்குதோளுமென்னெஞ்சநிறைந்தனவே. (சு)

நிறைந்தவன்பழிநங்குடிக்கிவளென்றன்னைகாணக்கொடாள்
சிறந்தகீர்த்தித்திருக்குறுங்குடிநம்பியைநான்கண்டபின்
நிறைந்தசோதிவெள்ளஞ்சூழ்ந்தநீண்டபொன்மேனியொடும்
நிறைந்தென்னுள்ளேநின்றொழிந்தானேமியங்கையுளதே. (எ)

கையுணன்முகம்வைக்குநையுமென்றன்னையருமுனிதிர்
மைகொண்மாடத்திருக்குறுங்குடிநம்பியைநான்கண்டபின்
செய்யதாமரைக்கண்ணுமல்குலுஞ்சிற்றிடையும்வடிவும்
மொய்யநீள்குழற்றாழ்ந்ததோள்களும்பாவியேன்முன்னிற்குமே. (அ)

முன்னின்றாயென்றுதோழிமார்களுமன்னையருமுனிதிர்
மன்னுமாடத்திருக்குறுங்குடிநம்பியைநான்கண்டபின்
சென்னிநீண்முடியாதியாயவுலப்பிலணிகலத்தன்
கன்னல்பாலமுதாகிவந்தென்னெஞ்சங்கழியானே. (கூ)

கழியமிக்கதோர்காதலளிவளென்றன்னைகாணக்கொடாள்
வழுவில்கீர்த்தித்திருக்குறுங்குடிநம்பியைநான்கண்டபின்
குழுமித்தேவர்குழாங்கள்கைதொழச்சோதிவெள்ளத்தினுள்ளே
எழுவதோருருவென்னெஞ்சுள்ளெழுமார்க்குமறிவரிதே. (க0)

* அறிவரியபிரானையாழியங்கையனையேயலற்றி
நறியநன்மலர்நாடிநன்குருகூர்ச்சடகோபன்சொன்ன
குறிகொளாயிரத்துள்ளிவைபத்துந்திருக்குறுங்குடியதன்மேல்
அறியக்கற்றுவல்லார்வைட்டணவராழ்கடன்ஞாலத்துள்ளே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ திருவாய்மொழி - சரு - க்குப் பாசுரம் - சகூஎ.

---

எங்ஙனேநீர்முனிவதென்னையினிநம்பியழ
கிங்ஙனேதோன்றுகின்றதென்முன்னே—அங்ஙன்
உருவெளிப்பாடாவுரைத்ததமிழ்மாறன்
கருதுமவர்க்கின்பக்கடல். (சரு)

## சு - ம் திருவாய்மொழி - கடல்.

பாவநாப்ரத்யக்ஷம் போகையில் மிகவும் ஆர்த்தியையடைந்து கோபிகைகள் க்ருஷ்ணலீலைகளை யனுபவித்தாற்போல் பகவத்லீலைகளை யநுகரித்து தரித்ததை யருளிச்செய்கிறார்.

அறுசீராசிரியவிருத்தம் - பண் - சீகாமரம் - தாளம் - ஏழொத்து.

எதுகுலகாம்போதிராகம் - ஆதிதாளம்.

* கடன்ஞாலஞ்செய்தேனும்யானேயென்னுங்
கடன்ஞாலமாவேனும்யானேயென்னுங்
கடன்ஞாலங்கொண்டேனும்யானேயென்னுங்
கடன்ஞாலங்கீண்டேனும்யானேயென்னுங்
கடன்ஞாலமுண்டேனும்யானேயென்னுங்
கடன்ஞாலத்தீசன்வந்தேறக்கொலோ
கடன்ஞாலத்தீர்க்கிவையென்சொல்லுகேன்
கடன்ஞாலத்தென்மகள்கற்கின்றவே. (க)

கற்குங்கல்விக்கெல்லையிலனேயென்னுங்
கற்குங்கல்வியாவேனும்யானேயென்னுங்
கற்குங்கல்விசெய்வேனும்யானேயென்னுங்
கற்குங்கல்விதீர்ப்பேனும்யானேயென்னுங்
கற்குங்கல்விச்சாரமும்யானேயென்னுங்
கற்குங்கல்விநாதன்வந்தேறக்கொலோ
கற்குங்கல்வியீர்க்கிவையென்சொல்லுகேன்
கற்குங்கல்வியென்மகள்காண்கின்றவே. (உ)

காண்கின்றநிலமெல்லாம்யானேயென்னுங்
காண்கின்றவிசும்பெல்லாம்யானேயென்னுங்
காண்கின்றவெந்தீயெல்லாம்யானேயென்னும்
காண்கின்றவிக்காற்றெல்லாம்யானேயென்னுங்
காண்கின்றகடலெல்லாம்யானேயென்னுங்
காண்கின்றகடல்வண்ணனேறக்கொலோ
காண்கின்றவுலகத்தீர்க்கென்சொல்லுகேன்
காண்கின்றவென்காரிகைசெய்கின்றவே. (ந)

செய்கின்றகிதியெல்லாம்யானேயென்னுஞ்
செய்வானின்றனகளும்யானேயென்னுஞ்
செய்துமுன்னிறந்தவும்யானேயென்னுஞ்
செய்கைப்பயனுண்பேனும்யானேயென்னுஞ்

செய்வார்களைச்செய்வேனும்யானேயென்னுஞ்
செய்யகமலக்கண்ணனேறக்கொலோ
செய்யவுலகத்தீர்க்கிவையென்சொல்லுகேன்
செய்யகனிவாயிளமான்றிறத்தே. (ச)

திறம்பாமன்மண்காக்கின்றேன்யானேயென்னுந்
திறம்பாமன்மலையெடுத்தேனேயென்னுந்
திறம்பாமலசுரரைக்கொன்றேனேயென்னுந்
திறங்காட்டியன்றைவரைக்காத்தேனேயென்னுந்
திறம்பாமற்கடல்கடைந்தேனேயென்னுந்
திறம்பாதகடல்வண்ணனேறக்கொலோ
திறம்பாதவுலகத்தீர்க்கென்சொல்லுகேன்
திறம்பாதென்றிருமகளெய்தினவே. (ரு)

இனவேய்மலையேந்தினேன்யானேயென்னும்
இனவேறுகள்செற்றேனும்யானேயென்னும்
இனவான்கன்றுமேய்த்தேனும்யானேயென்னும்
இனவாநிரைகாத்தேனும்யானேயென்னும்
இனவாயர்தலைவனும்யானேயென்னும்
இனத்தேவர்தலைவன்வந்தேறக்கொலோ
இனவேற்கண்ணல்லீர்க்கிவையென்சொல்லுகேன்
இனவேற்கண்ணியென்மகளுற்றனவே. (சா)

உற்றார்களெனக்கில்லையாருமென்னும்
உற்றார்களெனக்கிங்கெல்லாருமென்னும்
உற்றார்களைச்செய்வேனும்யானேயென்னும்
உற்றார்களையழிப்பேனும்யானேயென்னும்
உற்றார்களுக்குற்றேனும்யானேயென்னும்
உற்றாரிலிமாயன்வந்தேறக்கொலோ
உற்றீர்கட்கென்சொல்லிச்சொல்லுகேன்யான்
உற்றென்னுடைப்பேதையுரைக்கின்றவே. (எ)

உரைக்கின்றமுக்கட்பிரான்யானேயென்னும்
உரைக்கின்றதிசைமுகன்யானேயென்னும்
உரைக்கின்றவமரரும்யானேயென்னும்
உரைக்கின்றவமரர்கோன்யானேயென்னும்
உரைக்கின்றமுனிவரும்யானேயென்னும்
உரைக்கின்றமுகில்வண்ணனேறக்கொலோ
உரைக்கின்றவுலகத்தீர்க்கென்சொல்லுகேன்
உரைக்கின்றவென்கோமளவொண்கொடிக்கே. (அ)

கொடியவினையாதுமிலனேயென்னுங்
கொடியவினையாவேனும்யானேயென்னுங்
கொடியவினைசெய்வேனும்யானேயென்னுங்
கொடியவினைதீர்ப்பேனும்யானேயென்னுங்

கொடியானிலங்கைசெற்றேனேயென்னுங்
கொடியபுள்ளுடையவனேறக்கொலோ
கொடியவுலகத்தீர்க்கிவையென்சொல்லுகேன்
கொடியேன்கொடியென்மகள்கோலங்களே. (௯)

கோலங்கொள்சுவர்க்கமும்யானேயென்னுங்
கோலமினரகமும்யானேயென்னுங்
கோலந்திகழ்மோக்கமும்யானேயென்னுங்
கோலங்கொளுயிர்களும்யானேயென்னுங்
கோலங்கொடனிமுதல்யானேயென்னுங்
கோலங்கொண்முகில்வண்ணனேறக்கொலோ
கோலங்கொளுலகத்தீர்க்கென்சொல்லுகேன்
கோலந்திகழ்கோதையென்கூந்தலுக்கே. (௧0)

* கூந்தன்மலர்மங்கைக்குமண்மடந்தைக்குங்
குலவாயர்கொழுந்துக்குங்கேள்வன்றன்னை
வாய்ந்தவழுதிவளநாடன்மன்னு
குருகூர்ச்சடகோபன்குற்றேவல்செய்
தாய்ந்ததமிழ்மாலையாயிரத்து
ளிவையுமொருபத்தும்வல்லார், ருலகில்
ஏந்துபெருஞ்செல்வத்தராய்த்திருமா
லடியார்களைப்பூசிக்கநோற்றார்களே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - சசு - க்குப் பாசுரம் - ருoஅ.

---

கடல்ஞாலத்தீசனைமுன்காணுமல்நொந்தே
உடலுவநுளிக்கலுற்றாந்—திடமாக
வாய்ந்தவனுய்த்தான்பேசும்மாறனுரையதனை
ஆய்ந்துரைப்பாராட்செயநோற்றார். (சசு)

---

## எ - ம் திருவாய்மொழி - நோற்றநோன்பு.

அவ்வநுகாராவஸ்தைபோய் உன்னைவிட்டிருக்கமாட்டேன்
உன்திருவடிகளே யெனக்கு உபாயமென்று வானமாமலைப் பெருமாளிடத்தில்
ப்ரபத்திபண்ணினதை யருளிச்செய்கிறார்.

ஆசிரியத்துறை-பண்-சீகாமரம்-தாளம்-ஏழொத்து.

சாவேரிராகம் - ஆதிதாளம்.

* நோற்றநோன்பிலேனுண்ணறிவிலேன், ஆகிலுமினியுன்னைவிட்டொன்றும்
ஆற்றகிற்கின்றிலேனரவினணையம்மானே
சேற்றுத்தாமரைசெந்நெலூடுமலர்சிரீவரமங்கலநகர்
வீற்றிருந்தவெந்தாயுனக்குமிகையல்லேனங்கே. (௧)

அங்குற்றேனல்லேனிங்குற்றேனல்லேனுன்னைக்காணுமவாவில்வீழ்ந்து, நான்
எங்குற்றேனுமல்லேனிலங்கைசெற்றவம்மானே
திங்கள்சேர்மணிமாடநீடுசிரீவரமங்கலநகருறை
சங்குசக்கரத்தாய்தமியேனுக்கருளாயே. (௨)

கருளப்புட்கொடிசக்கரப்படைவானநாடவெங்கார்முகில்வண்ணா
பொருளல்லாதவென்னைப்பொருளாக்கியடிமைகொண்டாய்
தெருள்கொணான்மறைவல்லவர்பலர்வாழ்சிரீவரமங்கலநகர்க்
கருள்செய்தங்கிருந்தாயறியேனொருகைம்மாறே. (௩)

மாறுசேர்படைநூற்றுவர்மங்கவோரைவர்க்காயன்றுமாயப்போர்பண்ணி
நீறுசெய்தவெந்தாய்நிலங்கீண்டவம்மானே
தேறுஞானத்தர்வேதவேள்வியறாச்சிரீவரமங்கலநகர்
ஏறிவீற்றிருந்தாயுன்னையெங்கெய்தக்கூவுவனே. (௪)

எய்தக்கூவுதலாவதேயெனக்கெவ்வதெவ்வத்துளாயுமாய்நின்று
கைதவங்கள்செய்யுங்கருமேனியம்மானே
செய்தவேள்வியர்வையத்தேவரறாச்சிரீவரமங்கலநகர்
கைதொழவிருந்தாயதுநானுங்கண்டேனே. (௫)

ஏனமாய்நிலங்கீண்டவென்னப்பனேகண்ணாவென்றுமென்னையாளுடை
வானநாயகனேமணிமாணிக்கச்சுடரே
தேனமாம்பொழிற்றண்சிரீவரமங்கலத்தவர்கைதொழவுறை
வானமாமலையேயடியேன்றொழவந்தருளே. (௬)

வந்தருளியென்னெஞ்சிடங்கொண்டவானவர்கொழுந்தே, யுலகுக்கோர்
முந்தைத்தாய்தந்தையேமுழுவேழுலகுமுண்டாய்
செந்தொழிலவர்வேதவேள்வியறாச்சிரீவரமங்கலநகர்
அந்தமில்புகழாயடியேனையகற்றேலே. (௭)

அகற்றநீவைத்தமாயவல்லைம்புலன்களாமவைநன்கறிந்தனன்
அகற்றியென்னையுநீயருஞ்சேற்றில்வீழ்த்திகண்டாய்
பகர்க்கதிர்மணிமாடநீடுசிரீவரமங்கைவாணனே, யென்றும்
புகற்கரியவெந்தாய்புள்ளின்வாய்பிளந்தானே. (௮)

புள்ளின்வாய்பிளந்தாய்மருதிடைபோயினாயெருதேழடர்த்தவென்
கள்ளமாயவனேகருமாணிக்கச்சுடரே
தெள்ளியார்திருநான்மறைகள்வல்லார்மலிதண்சிரீவரமங்கை
உள்ளிருந்தவெந்தாயருளாயுய்யுமாறெனக்கே. (௯)

ஆறெனக்குநின்பாதமேசரணாகத்தந்தொழிந்தா, யுனக்கோர்கை
மாறுநானொன்றிலேனெனதாவியுமுனதே
சேறுகொள்கரும்பும்பெருஞ்செந்நெலுமலிதண்சிரீவாமங்கை
நாறுபூந்தண்டுழாய்முடியாய்தெய்வநாயகனே. (௧0)

* தெய்வநாயகனாரணன்றிரிவிக்கிரமனடியிணைமிசைக்
கொய்கொள்பூம்பொழில்சூழ்குருகூர்ச்சடகோபன்
செய்தவாயிரத்துள்ளிவைதண்சிரீவரமங்கைமேயபத்துடன்
வைகல்பாடவல்லார்வானோர்க்காராவமுதே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ திருவாய்மொழி - சஎ - க்குப் பாசுரம் - ருககூ.

---

நோற்றநோன்பாதியிலேனுன்றனைவிட்டாற்றகில்லேன்
பேற்றுக்குபாயமுன்றன்பேரருளே—சாற்றுகின்றேன்
இங்கெனிலையென்றுமெழில்மாறன்சொல்வல்லார்
அங்கமரர்க்காராவமுது. (சஎ)

## அ - ம் திருவாய்மொழி - ஆராவமுதே.

பலஸித்தி யாகாமையால் ஆராவமுதாழ்வாரிடத்தில் ஆக்ருந்தம்பண்ணி ப்ரபத்திபண்ணினதை யருளிச்செய்கிறார்.

அறுசீராசிரியவிருத்தம்—பண்-காந்தாரம்-தாளம்-ஏழொத்து.

தன்யாசி ராகம் - ஆதிதாளம்.

* ஆராவமுதேயடியேனுடலநின்பாலன்பாயே
நீராயலைந்துகரையவுருக்குகின்றநெடுமாலே
சீரார்செந்நெற்கவரிவீசுஞ்செழுநீர்த்திருக்குடந்தை
ஏரார்கோலந்திகழக்கிடந்தாய்கண்டேனெம்மானே. (க)

எம்மானேயென்வெள்ளைமூர்த்தியென்னையாள்வானே
எம்மாவுருவும்வேண்டுமாற்றாலாவாயெழிலேறே
செம்மாகமலஞ்செழுநீர்மிசைக்கண்மலருந்திருக்குடந்தை
அம்மாமலர்க்கண்வளர்கின்றானேயென்னான்செய்கேனே. (உ)

என்னான்செய்கேன்யாரேகளைகணென்னையென்செய்கின்றாய்
உன்னாலல்லால்யாவராலுமொன்றுங்குறைவேண்டேன்
கன்னார்மதிள்சூழ்குடந்தைக்கிடந்தாயடியேனருவாணாள்
சென்னாளெந்நாளந்நாளுனதாள்பிடித்தேசெலக்காணே. (ங)

செலக்காண்கிற்பார்காணுமளவுஞ்செல்லுங்கீர்த்தியாய்
உலப்பிலானேயெல்லாவுலகுமுடையவொருமூர்த்தி
நலத்தான்மிக்கார்குடந்தைக்கிடந்தாயுன்னைக்காண்பானுன்
அலப்பா, யாகாசத்தைநோக்கியழுவன்றொழுவனே. (ச)

அழுவன்றொழுவனாடிக்காண்பன்பாடியலற்றுவன்
தழுவல்வினையாற்பக்கநோக்கிநாணிக்கவிழ்ந்திருப்பன்
செழுவொண்பழனக்குடந்தைக்கிடந்தாய்செந்தாமரைகண்ணா
தொழுவனேனையுனதாள்சேரும்வகையேசூழ்கண்டாய். (ரு)

சூழ்கண்டாயென்றொல்லைவினையையறுத்துன்னடிசேரும்
ஊழ்கண்டிருந்தே, தூராக்குழிதூர்த்தெனைநாளகன்றிருப்பன்
வாழ்தொல்புகழார்குடந்தைக்கிடந்தாய்வானோர்கோமானே
யாழினிசையேயமுதேயறிவின்பயனேயரியேறே. (சு)

அரியேறேயென்னம்பொற்சுடரேசெங்கட்கருமுகிலே
எரியேபவளக்குன்றேநாற்றோளெந்தாயுனதருளே
பிரியாவடிமையென்னைக்கொண்டாய்குடந்தைத்திருமாலே
தரியேனினியுன்சரணந்தந்தென்சன்மங்களையாயே. (எ)

களைவாய்துன்பங்களையாதொழிவாய்களைகண்மற்றிலேன்
வளைவாய்நேமிப்படையாய்குடந்தைக்கிடந்தமாமாயா
தளராவுடலமெனதாவிசரிந்துபோம்போது
இளையாதுனதாளொருங்கப்பிடித்துப்போதவிசைநீயே. (அ)

இசைவித்தென்னையுன்றாளிணைக்கீழிருத்துமம்மானே
அசைவிலமரர்தலைவர்தலைவாவாதிப்பெருமூர்த்தி
திசைவில்வீசுஞ்செழுமாமணிகள்சேருந்திருக்குடந்தை
அசைவிலுலகம்பரவக்கிடந்தாய்காணவாராயே. (கூ)

வாராவருவாய்வருமென்மாயாமாயாமூர்த்தியாய்
ஆராவமுதாயடியேனாவியகமேதித்திப்பாய்
தீராவினைகடீரவென்னையாண்டாய்திருக்குடந்தை
ஊரா, யுனக்காட்பட்டுமடியேனின்னமுழல்வேனோ. (க0)

* உழலையென்பிற்பேய்ச்சிமுலையூடவளையுயிருண்டான்
கழல்களவையேசரணாக்கொண்டகுருகூர்ச்சடகோபன்
குழலின்மலியச்சொன்னவோராயிரத்துளிப்பத்தும்
மழலைதீரவல்லார்காமர்மானேய்நோக்கியர்க்கே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - சஅ - க்குப் பாசுரம் - ருஅ0.

---

ஆராவமுதாழ்வாராதரித்தபேறுகளைத்
தாராமையாலேதளர்ந்துமிகத்—தீராத
ஆசையுடனாற்றாமைபேசியலமந்தான்
மாசறுசீர்மாறனெம்மான். (சஅ)

## கூ - ம் திருவாய்மொழி - மானேய்நோக்கு.

..................

ஆராவமுதாழ்வாரிடத்திலும் பலஸித்தியடையாமல் இத்திருப்பதிக்குப்போக வேண்டுமென்று திருநகரி பாஹ்யோத்யாநபர்யந்தமும் வந்தவிடாயால் விடாய்த்துவிழுந்து ஸகியோடே அந்ததிருவல்லவாழ்ஸ்வாமியை என்றடைவேனென் றருளிச்செய்கிறார்.

ஆழ்வாரிரண்டாந்தரம் ஆறுமாஸம் மோஹித்த திருவாய்மொழி.

கலித்துறை-பண்-பஞ்சமம்-தாளம்-ஏழொத்து.

முகாரிராகம் - அடதாளம்.

* மானேய்நோக்குநல்லீர்வைகலும்வினையேன்மெலிய
வானார்வண்கமுகுமதுமல்லிகைகமழும்
தேனார்சோலைகள்சூழ்திருவல்லவாழுறையுங்
கோனாரையடியேனடிகூடுவதென்றுகொலோ. (க)

என்றுகொல்தோழிமீர்காளெம்மைநீர்நலிந்தென்செய்தீரோ
பொன்றிகழ்புன்னைமகிழ்புதுமாதவிமீதணவித்
தென்றன்மணங்கமழுந்திருவல்லவாழ்நகருள்
நின்றபிரா, னடிநீறடியோங்கொண்டுசூடுவதே. (உ)

சூடுமலர்க்குழலீர்துயராட்டியேனைமெலியப்
பாடுநல்வேதவொலிபரவைத்திரைபோன்முழங்க
மாடுயர்ந்தோமப்புகைகமழுந்தண்டிருவல்லவாழ்
நீடுறைகின்றபிரான்கழல்காண்டுங்கொலொனிச்சலுமே. (ங)

நிச்சலுந்தோழிமீர்காளெம்மைநீர்நலிந்தென்செய்தீரோ
பச்சிலைநீள்கமுகும்பலவுந்தெங்கும்வாழைகளும்
மச்சணிமாடங்கண்மீதணவுந்தண்டிருவல்லவாழ்
நச்சரவினணைமேனம்பிரானது * நன்னலமே. (ச)

நன்னலத்தோழிமீர்காணல்லவந்தணர்வேள்விப்புகை
மைந்நலங்கொண்டுயர்விண்மறைக்குந்தண்டிருவல்லவாழ்
கன்னலங்கட்டிதன்னைக்கனியையின்னமுதந்தன்னை
என்னலங்கொள்சுடரையென்றுகொல்கண்கள்காண்பதுவே. (ரு)

காண்பதெஞ்ஞான்றுகொலோவினையேன்கனிவாய்மடவீர்
பாண்குரல்வண்டினொடுபசுந்தென்றலுமாகியெங்கும்
சேண்சினையோங்குமரச்செழுங்கானற்றிருவல்லவாழ்
மாண்குறட்கோலப்பிரான்மலர்த்தாமரைப்பாதங்களே. (சு)

---

* "நற்சீலனே" என்றுமாம்.

பாதங்கண்மேலணிபூத்தொழக்கூடுங்கொல்பாவைநல்லீர்
ஓதநெடுந்தடத்துளுயர்தாமரைசெங்கழுநீர்
மாதர்கள்வாண்முகமுங்கண்ணுமேந்துந்திருவல்லவாழ்
நாதனிஞ்ஞாலமுண்டநம்பிரான்றன்னைநாடொறுமே. (எ)

நாடொறும்வீடின்றியேதொழக்கூடுங்கொனன்னுதலீர்
ஆடுறுதீங்கரும்பும்விளைசெந்நெலுமாகியெங்கும்
மாடுறுபூந்தடஞ்சேர்வயல்சூழ்தண்டிருவல்லவாழ்
நீடுறைகின்றபிரானிலந்தாவியநீள்கழலே. (அ)

கழல்வளைபூரிப்பயாங்கண்டுகைதொழக்கூடுங்கொலோ
குழலென்னயாழுமென்னக்குளிர்சோலையுட்டேனருந்தி
மழலைவரிவண்டுகளிசைபாடுந்திருவல்லவாழ்
சுழலின்மலிசக்கரப்பெருமானதுதொல்லருளே. (கூ)

தொல்லருணல்வினையாற்சொலக்கூடுங்கொறோழிமீர்காள்
தொல்லருமண்ணும்விண்ணுந்தொழநின்றதிருநகரம்
நல்லருளாயிரவர்நலனேந்துந்திருவல்லவாழ்
நல்லருணம்பெருமானாராயணனாமங்களே. (க0)

* நாமங்களாயிரமுடையநம்பெருமானடிமேல்
சேமங்கொடென்குருகூர்ச்சடகோபன்றெரிந்துரைத்த
நாமங்களாயிரத்துளிவைபத்துந்திருவல்லவாழ்
சேமங்கொடென்னகர்மேற்செப்புவார்சிறந்தார்பிறந்தே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - சகூ - க்குப் பாசுரம் - ௩சக.

---

மாநலத்தால்மாறன்றிருவல்லவாழ்புகப்போய்த்
தானிளைத்துவீழ்ந்தவ்வூர்தன்னருகில்—மேனலங்கித்
துன்பமுற்றுச்சொன்னசொலவுகற்பார்தங்களுக்குப்
பின்பிறக்கவேண்டாபிற. (சகூ)

---

## க0 - ம் திருவாய்மொழி - பிறந்த.

அர்ச்சாவதாரத்தில் பலஸித்தியாகாமையாலே அவதாரங்களில் ப்ரவேஶித்து குணாநுபவத்தில் மநோசைதில்யம்வாராமற் செய்யவேண்டுமென்று எம்பெருமானை ப்ரார்த்தித்ததை யருளிச்செய்கிறார்.

ஆசிரியத்துறை-பண்-காந்தாரம்-தாளம்-யேழொத்து.

மோஹனராகம் - ஆதிதாளம்.

* பிறந்தவாறும்வளர்ந்தவாறும்பெரியபாரதங்கைசெய், தைவர்க்குத்
திறங்கள்காட்டியிட்டுச்செய்துபோனமாயங்களும்
நிறந்தனூடுபுக்கெனதாவியைநின்றுநின்றுருக்கியுண்கின்றவிச்
சிறந்தவான்சுடரேயுன்னையென்றுகொல்சேர்வதுவே. (க)

Funding: IKS/Tattva Heritage. Digitization: eGangotri.



வதுவைவார்த்தையுளேறுபாய்ந்ததுமாயமாவினைவாய்பிளந்ததும்
மதுவைவார்குழலார்குரவைபிணைந்தகுழகு,
மதுவிதூஉதுவென்னலாவனவல்லவென்னையுன்செய்கைநைவிக்கும்
முதுவையமுதல்வாவுன்னையென்றுதலைப்பெய்வனே. (௨)

பெய்யும்பூங்குழற்பேய்முலையுண்டபிள்ளைத்தேற்றமும்,பேர்ந்தோர்சாடிறச்
செய்யபாதமொன்றாற்செய்தநின்சிறுச்சேவகமும்
நெய்யுண்வார்த்தையுளன்னைகோல்கொள்ளநீயுன்றாமரைக்கண்கணீர்மல்கப்
பையவேநிலையும்வந்தென்னெஞ்சையுருக்குங்களே. (௩)

கள்ளவேடத்தைக்கொண்டுபோய்ப்புரம்புக்கவாறும், கலந்தசுரரை
உள்ளம்பேதஞ்செய்திட்டுயிருண்டவுபாயங்களும்
வெள்ளநீர்ச்சடையானுநின்னிடைவேறலாமைவிளங்கநின்றதும்
உள்ளமுள்குடைந்தென்னுயிரையுருக்கியுண்ணுமே. (௪)

உண்ணவானவர்கோனுக்காயரொருப்படுத்தவடிசிலுண்டதும்
வண்ணமால்வரையையெடுத்துமழைகாத்ததும்
மண்ணைமுன்படைத்துண்டுமிழ்ந்துகடந்திடந்துமணந்தமாயங்கள்
எண்ணுந்தோறுமென்னெஞ்செரிவாய்மெழுகொக்குநின்றே. (௫)

நின்றவாறுமிருந்தவாறுங்கிடந்தவாறுநினைப்பரியன
ஒன்றலாவுருவாயருவாயநின்மாயங்கள்
நின்றுநின்றுநினைக்கின்றேனுன்னையெங்ஙனநினைகிற்பன், பாவியேற்
கொன்றுநன்குறையாயுலகமுண்டவொண்சுடரே. (௬)

ஒண்சுடரோடிருளுமாய்நின்றவாறுமுண்மையோடின்மையாய்வந்,தென்
கண்கொளாவகைநீகரந்தென்னைச்செய்கின்றன
எண்கொள்சிந்தையுள்நைகின்றேனென்கரியமாணிக்கமே,யென்கண்கட்குத்
திண்கொள்ளவொருநாளருளாயுன்றிருவுருவே. (௭)

திருவுருவுகிடந்தவாறுங்கொப்பூழ்ச்செந்தாமரைமேற், றிசைமுன்
கருவுள்விற்றிருந்துபடைத்திட்டகருமங்களும்
பொருவிலுன்றனிநாயகமவைகேட்குந்தோறுமென்னெஞ்ச,நின்றுநெக்
கருவிசோருங்கண்ணீரென்செய்கேனடியேனே. (௮)

அடியைமூன்றையிரந்தவாறுமங்கேநின்றாழ்கடலுமண்ணும்விண்ணும்
முடிய, விரடியான்முடித்துக்கொண்டமுக்கியமும்
நொடியுமாறவைகேட்குந்தோறுமென்னெஞ்சநின்றனக்கேகரைந்துகும்
கொடியவல்வினையேனுன்னையென்றுகொல்கூடுவதே. (௯)

கூடிநீரைக்கடைந்தவாறுமமுதந்தேவருண்ண, வசுரரை
வீடும்வண்ணங்களேசெய்துபோனவித்தகமும்
ஊடுபுக்கெனதாவியையுருக்கியுண்டிடுகின்ற, நின்றன்னை
நாடும்வண்ணஞ்சொல்லாய்நச்சுநாகணையானே. (௧௦)

* நாகணைமிசைநம்பிரான்சரணேசரணமக்கென்று, நாடொறும்
ஏகசிந்தையனுய்க்குருகூர்ச்சடகோபன்மாறன்
ஆகநூற்றவந்தாதியாயிரத்துள்ளிவையுமோர்பத்தும்வல்லார்
மாகவைகுந்தத்துமகிழ்வெய்துவர்வைகலுமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஐந்தாம் பத்து முற்றியது.

ஆ பத்து-டு-ல் திருவாய்மொழி - டுo - க்குப் பாசுரம் - டுடுஉ.

பிறந்துலகங்காத்தளிக்கும்பேரருட்கண்ணனுவன்
சிறந்தகுணத்தாலுருகுஞ்சீலந்—சிறந்தவிர்ந்து
சேர்ந்தநுபவிக்குநிலைசெய்யென்றசீர்மாறன்
வாய்ந்தபதத்தேமனமேவைகு. (டுo)

## ஆறும்பத்து.

### க - ம் திருவாய்மொழி - வைகல்.

அவதாரங்களாலும் இஷ்டஸித்தியில்லாமல் பின்னையும்
அர்ச்சாவதாரங்களிலே யிறங்கி திருவண்டூர்ஸ்வாமிவிஷயமாக
பக்ஷிகளைத் தூதுவிட்டதை யருளிச்செய்கிறுர்.

கலித்துறை - பண் - நட்டராகம் - தாளம் - ஏழொத்து.

அசாவேரிராகம் - ஆதிதாளம்.

* வைகல்பூங்கழிவாய்வந்துமேயுங்குருகினங்காள்
செய்கொள்செந்நெலுயர்திருவண்வண்டூருறையும்
கைகொள்சக்கரத்தென்கனிவாய்ப்பெருமானைக்கண்டு
கைகள்கூப்பிச்சொல்லீர்வினையாட்டியேன்காதன்மையே. (க)

காதன்மென்பெடையோடுடன்மேயுங்கருநாராய்
வேதவேள்வியொலிமுழங்குந்தண்டிருவண்வண்டூர்
நாதன்ஞாலமெல்லாமுண்டநம்பெருமானைக்கண்டு
பாதங்கைதொழுதுபணியீரடியேன்றிறமே. (உ)

திறங்களாகியெங்குஞ்செய்களூடுழல்புள்ளினங்காள்
சிறந்தசெல்வமல்குதிருவண்வண்டூருறையும்
கறங்குசக்கரக்கைக்கனிவாய்ப்பெருமானைக்கண்
டிறங்கிநீர்தொழுதுபணியீரடியேனிடரே. (ங)

இடரில்போகமூழ்கியிணைந்தாடுமடவன்னங்காள்
விடலில்வேதவொலிமுழங்குந்தண்டிருவண்வண்டூர்
கடன்மேனிப்பிரான்கண்ணனைநெடுமாலைக்கண்
டுடலமைந்தொருத்தியுருகுமென்றுணர்த்துமினே (ச)

உணர்த்தலூடலுணர்ந்துடன்மேயுமடவன்னங்காள்
திணர்த்தவண்டல்கண்மேற்சங்குசேருந்திருவண்வண்டூர்ப்
புணர்த்தபூந்தண்டுழாய்முடிநம்பெருமானைக்கண்டு
புணர்த்தகையினராயடியேனுக்கும்போற்றுமினே. (௫)

போற்றியானிரந்தேன்புன்னைமேலுறைபூங்குயில்காள்
சேற்றில்வாளைதுள்ளுந்திருவண்வண்டூருறையும்
ஆற்றலாழியங்கையமரர்பெருமானைக்கண்டு
மாற்றங்கொண்டருளீர்மையறீர்வதொருவண்ணமே. (௬)

ஒருவண்ணஞ்சென்றுபுக்கெனக்கொன்றுரையொண்கிளியே
செருவொண்பூம்பொழில்சூழ்செக்கர்வேலைத்திருவண்வண்டூர்
கருவண்ணஞ்செய்யவாய்செய்யகண்செய்யகைசெய்யகால்
செருவொண்சக்கரஞ்சங்கடையாளந்திருந்தக்கண்டே. (௭)

திருந்தக்கண்டெனக்கொன்றுரையாயொண்சிறுபூவாய்
செருந்திநாழல்மகிழ்புன்னைசூழ்தண்டிருவண்வண்டூர்ப்
பெருந்தண்டாமரைக்கட்பெருநீண்முடிநாற்றடந்தோள்
கருந்திண்மாமுகில்போற்றிருமேனியடிகளையே. (௮)

அடிகள்கைதொழுதலர்மேலசையுமன்னங்காள்
விடிவைசங்கொலிக்குந்திருவண்வண்டூருறையும்
கடியமாயன்றன்னைக்கண்ணனைநெடுமாலைக்கண்டு
கொடியவல்வினையேன்றிறங்கூறுமின்வேறுகொண்டே. (௯)

வேறுகொண்டும்மையானிரந்தேன்வெறிவண்டினங்காள்
தேறுநீர்ப்பம்பைவடபாலைத்திருவண்வண்டூர்
மாறில்போரரக்கன்மதிணீறெழச்செற்றுகந்த
ஏறுசேவகனார்க்கென்னையுமுளளென்மின்களே. (௧௦)

* மின்கொள்சேர்புரிநூற்குறளாயகன்ஞாலங்கொண்ட
வன்கள்வனடிமேற்குருகூர்ச்சடகோபன்சொன்ன
பண்கொளாயிரத்துள்ளிவைபத்துந்திருவண்வண்டூர்க்
கின்கொள்பாடல்வல்லார்மதனர்மின்னிடையவர்க்கே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ திருவாய்மொழி - ௫௧ - க்குப் பாசுரம் - ௫௬௩.

---

வைகல்திருவண்வண்டூர்வைகுமிராமனுக்கென்
செய்கைதனைப்புள்ளினங்காள்செப்புமெனக்—கைகழிந்த
காதலுடன்தூதுவிடுங்காரிமாறன்கழலே
மேதினியீர்நீர்வணங்குமின். (௫௧)

---

## உ - ம் திருவாய்மொழி - மின்னிடை.

.........................

ஆதிகோக்தியால் ஸர்வேஸ்வரன் விளம்பித்து வருகையாலே உமக்குவேண்டின ஸ்த்ரீகளிருக்க இங்கேவரவேண்டாமென்று ப்ரணய கலஹத்தாலே திரஸ்காரம்பண்ணினதை யருளிச்செய்கிறார்.

அறுசீராசிரியத்துறை - பண் - சீகாமரம் - தாளம் - ஏழொத்து.

சோகவராளிராகம் - ஆதிதாளம்.

* மின்னிடைமடவார்கணின்னருள்சூடுவார்முன்புநானதஞ்சுவன்
மன்னுடையிலங்கையரண்காய்ந்தமாயவனே
உன்னுடையசுண்டாயநானறிவனினியதுகொண்டுசெய்வதென்
என்னுடையபந்துங்கழலுந்தந்துபோகுநம்பீ. (க)

போகுநம்பியுன்றாமரைபுரைகண்ணிணையுஞ்செவ்வாய்முறுவலும்
ஆகுலங்கள்செய்யவழிதற்கேநோற்றோமேயாம்
தோகைமாமயிலார்கணின்னருள்சூடுவார்செவியோசைவைத்தெழ
ஆகள்போகவிட்டுக்குழலூதுபோயிருந்தே. (உ)

போயிருந்துநின்புள்ளுவமறியாதவர்க்குரைநம்பி, நின்செய்ய
வாயிருங்கனியுங்கண்களும்விபரீதமிந்நாள்
வேயிருந்தடந்தோளினாரித்திருவருள்பெறுவார்யவர்கொல்
மாயிருங்கடலைக்கடைந்தபெருமானாலே. (௩)

ஆலினீளிலையேழுலகுமுண்டன்றுநீகிடந்தா, யுன்மாயங்கள்
மேலைவானவருமறியாரினியெம்பரமே
வேலினேர்தடங்கண்ணினார்விளையாடுசூழலைச்சூழவேநின்று
காலிமேய்க்கவல்லாயெம்மைநீகழறேலே. (௪)

கழறேனம்பியுன்கைதவமண்ணும்விண்ணுநன்கறியுந், திண்சக்கரம்
நிழறுதொல்படையாயுனக்கொன்றுணர்த்துவனான்
மழறுதேன்மொழியார்கணின்னருள்சூடுவார்மனம்வாடிநிற்க, வெங்
குழறுபூவையொடுங்கிளியோடுங்குழகேலே. (௫)

குழகியெங்கள்குழமணன்கொண்டுகோயின்மைசெய்துகன்மமொன்றில்லை
பழகியாமிருப்போம்பரமேயித்திருவருள்கள்
அழகியாரிவ்வுலகுமூன்றுக்குந்தேவிமைதகுவார்பலருளர்
கழகமேறேனம்பியுனக்குமிளைதேகன்மமே. (௬)

கன்மமன்றெங்கள்கையிற்பாவைபறிப்பதுகடன்ஞாலமுண்டிட்ட
நின்மலாநெடியாயுனக்கேலும்பிழைபிழையே
வன்மமேசொல்லியெம்மைநீவிளையாடுதியதுகேட்கிலென்னைமார்
தன்மபாவமென்னாரொருநான்றுதடிபிணக்கே. (௭)

பிணக்கிபாவையும்யாவரும்பிழையாமற்பேதித்தும்பேதியாததோர்
கணக்கில்கீர்த்திவெள்ளக்கதிர்ஞானமூர்த்தியினாய் [மை
இணக்கியெம்மையெந்தோழிமார்விளையாடப்போதுமினென்னப்போந்தோ
உணக்கிநீவளைத்தாலென்சொல்லாருகவாதவரே. (அ)

உகவையாலெஞ்சமுள்ளுருகியுன்றாமரைத்தடங்கண்விழிகளின்
அகவலைப்படுப்பானழித்தாயுன்திருவடியால்
தகவுசெய்திலையெங்கள்சிற்றிலும்யாமடுசிறுசோறுங்கண்டு, நின்
முகவொளிதிகழமுறுவல்செய்துநின்றிலையே. (கூ)

நின்றிலங்குமுடியினாயிருபத்தோர்காலரசுகளைகட்ட
வென்றிநீண்மழுவாவியன்ஞாலமுன்படைத்தாய்
இன்றிவ்வாயர்குலத்தைவீடுய்யத்தோன்றியகருமாணிக்கச்சுடர்
நின்றன்னாலவிவேபடுவோமென்றுமாய்ச்சியோமே. (க0)

*ஆய்ச்சியாகியவன்னையாலன்றுவெண்ணெய்வார்த்தையுள்சீற்றமுண்டழு
கூத்தவப்பன்றன்னைக்குருகூர்ச்சடகோபன்
ஏத்தியதமிழ்மாலையாயிரத்துள்ளிவையுமோர்பத்திசையோடும்
நாத்தன்னாலவிலவுரைப்பார்க்கில்லைநல்குரவே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம், ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - ருஉ - க்குப் பாசுரம் - ருஎச.

---

மின்னிடையார்சேர்கண்ணன்மெத்தெனவந்தானென று
தன்னிலைபோய்ப்பெண்ணிலையாய்த்தான்றள்ளி—உன்னுடனே
கூடேனென்றூடுங்குருகையர்கோன்முடொழவே
நாடோறுநெஞ்சமேநல்கு. (ருஉ)

---

## ந-ம் திருவாய்மொழி-நல்குரவும்.

ப்ரணயகலஹத்தில் விருத்தமாயிருக்கிற தம்மைவஶீகரிக்கிற விருத்த
விபூதிகனான ஸர்வேஶ்வரன் கைக்கொண்டதை
அருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம்-பண்-நட்டராகம்-தாளம்-நடைபொத்து.

உசேனிராகம் - ரூபகதாளம்.

*நல்குரவுஞ்செல்வுநரகுஞ்சுவர்க்கமுமாய்
வெல்பகையுநட்பும்விடமுமமுதமுமாய்ப்
பல்வகையும்பரந்தபெருமானென்னையாள்வானைச்
செல்வமல்குகுடித்திருவிண்ணகர்கண்டேனே. (க)

கண்டவின்பந்துன்பங்கலக்கங்களுந்தேற்றமுமாய்த்
தண்டமுந்தண்மையுந்தழலுநிழலுமாய்
கண்டுகொள்தற்கரியபெருமானென்னையாள்வானூர்
தெண்டிரைப்புனல்சூழ்திருவிண்ணகர்நன்னகரே. (௨)

நகரமுநாடுகளுஞானமுமூடமுமாய்
நிகரில்சூழ்சுடராயிருளாய்நிலனாய்விசும்பாய்
சிகரமாடங்கள்சூழ்திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான்
புகர்கொள்கீர்த்தியல்லாலில்லையாவர்க்கும்புண்ணியமே. (௩)

புண்ணியம்பாவம்புணர்ச்சிபிரிவென்றிவையாய்
எண்ணமாய்மறப்பாயுண்மையாயின்மையாயல்லனாய்த்
திண்ணமாடங்கள்சூழ்திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான்
கண்ணனின்னருளேகண்டுகொண்மின்கள்கைதவமே. (௪)

கைதவஞ்செம்மைகருமைவெளுமையுமாய்
மெய்பொய்யிளமைமுதுமைபுதுமைபழமையுமாய்ச்
செய்ததிண்மதிள்சூழ்திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான்
பெய்தகாவுகண்டீர்பெருந்தேவுடைமூவுலகே. (௫)

மூவுலகங்களுமாயல்லனாயுகப்பாய்முனிவாய்ப்
பூவில்வாழ்மகளாய்த்தவ்வையாய்ப்புகழாய்ப்பழியாய்
தேவர்மேவித்தொழுந்திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான்
பாவியேன்மனத்தேயுறைகின்றபரஞ்சுடரே. (௬)

பரஞ்சுடருடம்பாயழுக்குப்பதித்தவுடம்பாய்க்
கரந்துந்தோன்றியுநின்றுங்கைதவங்கள்செய்யும், விண்ணோர்
சிரங்களால்வணங்குந்திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான்
வரங்கொள்பாதமல்லாலில்லையாவர்க்கும்வன்சரணே. (௭)

வன்சரண்சுரர்க்காயசுரர்க்குவெங்கூற்றமுமாய்த்
தன்சரணிழற்கீழுலகம்வைத்தும்வையாதும்
தென்சரண்டிசைக்குத்திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான்
என்சரணென்கண்ணனென்னையாளுடையென்னப்பனே. (௮)

என்னப்பனெனக்காயிகுளாயென்னைப்பெற்றவளாய்ப்
பொன்னப்பன்மணியப்பன்முத்தப்பனென்னப்பனுமாய்
மின்னப்பொன்மதிள்சூழ்திருவிண்ணகர்ச்சேர்ந்தவப்பன்
தன்னொப்பாரில்லப்பன்றந்தனன்றனதாணிழலே. (௯)

நிழல்வெய்யிற்சிறுமைபெருமைகுறுமைநெடுமையுமாய்ச்
சுழல்வனநிற்பனமற்றுமாயவையல்லனுமாய்
மழலைவாய்வண்டுவாழ்திருவிண்ணகர்மன்னுபிரான்
கழல்களன்றிமற்றோர்களைகணிலங்காண்மின்களே. (௰)

* காண்மின்களுலகீரென்றுகண்முகப்பேநிமிர்ந்த
தாளிணையன்றன்னைக்குருகூர்ச்சடகோபன்சொன்ன
ஆணையாயிரத்துத்திருவிண்ணகர்ப்பத்தும்வல்லார்
கோணையின்றிவிண்ணோர்க்கென்றுமாவர்குரவர்களே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ திருவாய்மொழி - ௫௩ - க்குப்பாசுரம் - ௫௮௫.

---

நல்லவலத்தானம்மைச்சேர்த்தோனமுன்னண்ணாரை
வெல்லும்விருத்தவிபூதியனென்—றெல்லையறத்
தானிருந்துவாழ்ந்துந்தமிழ்மாறன்சொல்வல்லார்
வானவர்க்குவாய்த்தகுரவர். (௫௩)

---

## ௪ - ம் திருவாய்மொழி - குரவை.

அவ்வாறுகூட்டிக்கொண்ட க்ருஷ்ணனுடைய குரவைமுதலான லீலைகளும்
அநுசந்தித்து ப்ரீதியடைந்ததை யருளிச்செய்கிறார்.

அறுசீராசிரியவிருத்தம்-பண்-தக்கராகம்-தாளம்-ஏழொத்து.

யமுனாகல்யாணிராகம்-ஆதிதாளம்.

* குரவையாய்ச்சியரோடுகோத்ததுங்குன்றமொன்றேந்தியதும்
உரவுநீர்ப்பொய்கைநாகங்காய்ந்ததுமுட்படமற்றும்பல
அரவிற்பள்ளிப்பிரான்றன்மாயவினைகளையேயலற்றி
இரவுநன்பகலுந்தவிர்கிலனென்னகுறைவெனக்கே. (௧)

கேயத்தீங்குழலூதிற்றுநிரைமேய்த்ததுங்கெண்டையொண்கண்
வாசப்பூங்குழற்பின்னைதோள்கண்மணந்ததுமற்றும்பல
மாயக்கோலப்பிரான்றன்செய்கைநினைந்துமனங்குழைந்து
நேயத்தோடுகழிந்தபோதெனக்கெவ்வுலகநிகரே. (௨)

நிகரின்மல்லரைச்செற்றதுநிரைமேய்த்ததுநீணெடுங்கைச்
சிகரமாகளிறட்டதுமிவைபோல்வனவும்பிறவும்
புகர்கொள்சோதிப்பிரான்றன்செய்கைநினைந்துபுலம்பியென்றும்
நுகரவைகல்வைகப்பெற்றேனெனக்கென்னினிநோவதுவே. (௩)

நோவவாய்ச்சியுரலோடார்க்கவிரங்கிற்றும்வஞ்சப்பெண்ணைச்
சாவப்பாலுண்டதுமூர்சகடமிறச்சாடியதும்
தேவக்கோலப்பிரான்றன்செய்கைநினைந்துமனங்குழைந்து
மேவக்காலங்கள்கூடினேனெனக்கென்னினிவேண்டுவதே. (௪)

வேண்டித்தேவரிரக்கவந்துபிறந்ததும்வீங்கிருள்வாய்
பூண், டன்றன்னைப்புலம்பப்போயங்கோராய்க்குலம்புக்கதும்
காண்டலின்றிவளர்ந்துகஞ்சனைத்துஞ்சவஞ்சஞ்செய்ததும்
ஈண்டுநானலற்றப்பெற்றேனெனக்கென்னவிகலுளதே. (ரு)

இகல்கொள்புள்ளைப்பிளந்ததுமிமிலேறுகள்செற்றதுவும்
உயர்கொள்சோலைக்குருந்தொசித்ததுமுட்படமற்றும்பல
அகல்கொள்வையமளந்தமாயனென்னப்பன்றன்மாயங்களே
பகலிராப்பரவப்பெற்றேனெனக்கென்னமனப்பரிப்பே. (சு)

மனப்பரிப்போடழுக்குமானிடசாதியிற்றான்பிறந்து
தனக்குவேண்டுருக்கொண்டுதான்றனசிற்றத்தினைமுடிக்கும்
புனத்துழாய்முடிமாலைமார்பனென்னப்பன்றன்மாயங்களே
நினைக்குநெஞ்சுடையேனெனக்கினியார்நிகர்நீணிலத்தே. (எ)

நீணிலத்தொடுவான்வியப்பநிறைபெரும்போர்கள்செய்து
வாணனாயிரந்தோடுணித்ததுமுட்படமற்றும்பல
மாணியாய்நிலங்கொண்டமாயனென்னப்பன்றன்மாயங்களே
காணுநெஞ்சுடையேனெனக்கினியென்னகலக்கமுண்டே. (அ)

கலக்கவேழ்கடலேழ்மலையுலகேழுங்கழியக்கடாய்
உலக்கத்தேர்கொடுசென்றமாயமுமுட்படமற்றும்பல
வலக்கையாழியிடக்கைச்சங்கமிவையுடைமால்வண்ணனை
மலக்குநாவுடையேற்குமாறுளதோவிம்மண்ணின்மிசையே. (கூ)

மண்மிசைப்பெரும்பாரநீங்கவோர்பாரதமாபெரும்போர்
பண்ணி, மாயங்கள்செய்துசேனையைப்பாழ்படநூற்றிட்டுப்போய்
விண்மிசைத்தனதாமமேபுகமேவியசோதிதன்றாள்
நண்ணிநான்வணங்கப்பெற்றேனெனக்கார்பிறர்நாயகரே. (க0)

* நாயகன்முழுவேழுலகுக்குமாய்முழுவேழுலகுந், தன்
வாயகம்புகவைத்துமிழ்ந்தவையாயவையல்லனுமாம்
கேசவனடியிணைமிசைக்குருகூர்ச்சடகோபன்சொன்ன
தூயவாயிரத்திப்பத்தாற்பத்தராவர்துவளின்றியே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். – ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ_திருவாய்மொழி – ருச – க்குப் பாசுரம் – ருகசு.

---

குரவைமுதலாங்கண்ணன்கோலச்செயல்கள்
இரவுபகலென்னுமலென்றும்—பரவுமனம்
பெற்றேனென்றேகளித்துப்பேசும்பராங்குசன்றன்
சொற்றேனினெஞ்சேதுவள். (ருஉ)

## ௫ - ம் திருவாய்மொழி - துவளில்.

பகவதநுபவத்தாலொரு ப்ரீதிவிஶேஷம்வந்து அதினாலே நாயகீத்தன்மை யடைந்து தொலைவில்லிமங்கலஸ்வாமியிடத்தில் அதிப்ராவண்யம்பிறந்திருக்க அதைக்கண்டு தாய்மார்கோபிக்க இப்ப்ராவண்யத்தைப் போக்கப்போகாது இவளிடத்திலாசை விடுங்களென்று தோழிமார்கள் தாய்மாரோடு சொல்லுஞ்சொல்லாக வருளிச்செய்கிறார்.

எழுசீராசிரியவிருத்தம்-பண்-பஞ்சமம்-தாளம்-ஏழொத்து'

சங்கராபரணராகம் - ஆதிதாளம்.

* துவளின்மாமணிமாடமோங்குதொலைவில்லிமங்கலந்தொழும்
இவளைநீரினியன்னைமீருமக்காசையில்லைவிடுமினோ
தவளவொண்சங்குசக்கரமென்றுந்தாமரைத்தடங்கணென்றும்
குவளையொண்மலர்க்கண்கணீர்மல்கநின்றுநின்றுகுமிறுமே. (௧)

குமிறுமோசைவிழவொலித்தொலைவில்லிமங்கலங்கொண்டுபுக்
கமுதமென்மொழியாளைநீருமக்காசையின்றியகற்றினீர்
திமிர்கொண்டாலொத்துநிற்குமற்றிவடேவதேவபிரானென்றே
நிமியும்வாயொடுகண்கணீர்மல்கநெக்கொசிந்துகரையுமே. (௨)

கரைகொள்பைம்பொழிற்றண்பணைத்தொலைவில்லிமங்கலங்கொண்டுபுக்
குரைகொளின்மொழியாளைநீருமக்காசையின்றியகற்றினீர்
திரைகொள்பௌவத்துச்சேர்ந்ததுந்திசைஞாலந்தாவியளந்ததும்
நிரைகண்மேய்த்ததுமேபிதற்றிநெடுங்கண்ணீர்மல்கநிற்குமே. (௩)

நிற்குநான்மறைவாணர்வாழ்தொலைவில்லிமங்கலங்கண்டபின்
அற்கமொன்றுமறவுறாண்மலிந்தாள்கண்டீரிவளன்னைமீர்
கற்குங்கல்வியெல்லாங்கருங்கடல்வண்ணன்கண்ணபிரானென்றே
ஒற்கமொன்றுமிலளுகந்துகந்துண்மகிழ்ந்துகுழையுமே. (௪)

குழையும்வாண்முகத்தேழையைத்தொலைவில்லிமங்கலங்கொண்டுபுக்
கிழைகொள்சோதிச்செந்தாமரைக்கட்பிரானிருந்தமைகாட்டினீர்
மழைபெய்தாலொக்குங்கண்ணநீரினொடன்றுதொட்டுமையாந்திவள்
நுழையுஞ்சிந்தையுளன்னைமீர்தொழுமத்திசையுற்றுநோக்கியே. (௫)

நோக்கும்பக்கமெல்லாங்கரும்பொடுசெந்நெலோங்குசெந்தாமரை
வாய்க்குந்தண்பொருநல்வடகரைவண்டொலைவில்லிமங்கலம்
நோக்குமேலத்திசையல்லான்மறுநோக்கிலள்வைகனுடொறும்
வாய்க்கொள்வாசகமுமணிவண்ணனுமமேயிவளன்னைமீர். (௬)

அன்னைமீரணிமாமயிற்சிறுமானிவணம்மைக்கைவலிந்
தென்னவார்த்தையுங்கேட்குறுடொலைவில்லிமங்கலமென்றல்லால்
முன்னநோற்றவிதிகொலோமுகில்வண்ணன்மாயங்கொலோ, வவன்
சின்னமுந்திருநாமமுமிவள்வாயனகடிருந்தவே. (௭)

திருந்துவேதமும்வேள்வியுந்திருமாமகளிருந்தாம, லிந்
திருந்துவாழ்பொருநல்வடகரைவண்டொலைவில்லிமங்கலம்
கருந்தடங்கண்ணிகைதொழுதவந்நாடொடங்கியிந்நாடொறு, மிருந்
திருந்தரவிந்தலோசநவென்றென்றேநைந்திரங்குமே. (அ)

இரங்கிநாடொறும்வாய்வெரீஇவிவள்கண்ணநீர்களலமர
மரங்களும்மிரங்கும்வகைமணிவண்ணவோவென்றுகூவுமால்
துரங்கம்வாய்பிளந்தானுறைதொலைவில்லிமங்கலமென்றுதன்
கரங்கள்கூப்பித்தொழுமவ்வூர்த்திருநாமங்கற்றதற்பின்னையே. (௯)

பின்னைகொல்நிலமாமகள்கொல்திருமகள்கொல்பிறந்திட்டாள்
என்னமாயங்கொலோவிவளெடுமாலென்றேநின்றுகூவுமால்
முன்னிவந்தவனின்றிருந்துறையுந்தொலைவில்லிமங்கலம்
சென்னியால்வணங்கு, மவ்வூர்த்திருநாமங்கேட்பதுசிந்தையே. (௧௦)

* சிந்தையாலுஞ்சொல்லாலுஞ்செய்கையினாலுந்தேவபிரானையே
தந்தைதாயென்றடைந்தவண்குருகூரவர்சடகோபன்
முந்தையாயிரத்துள்ளிவைதொலைவில்லிமங்கலத்தைச்சொன்ன
செந்தமிழ்ப்பத்தும்வல்லாரடிமைசெய்வார்திருமாலுக்கே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - ௫௫ - க்குப் பாசுரம் - ௬௦௭.

துவளறுசீர்மால்திறத்துத்தொன்னலத்தால்நாளும்
துவளறுதன்சீலமெல்லாஞ்சொன்னான்—துவளறவே
முன்னமநுபவத்தில்மூழ்கிநின்றமாறனதில்
மன்னுமுவப்பால்வந்தமால். (௫௫)

---

# ௬ - ம் திருவாய்மொழி - மாலுக்கு.

இவ்வண்ணம் வ்யாமோஹப்பட்டாலும் அநுபவம் ஸித்தியாதபடியால் அந்த விரஹார்த்தியால் மிகவும் கருஶையாய்ப் பெண்ணுக்கு ஆபரணங்களும் காந்தியுமுதலானதுகள் நழுவிப்போயிற்றென்று தாய்சொல்லுஞ் சொல்லாக வருளிச்செய்கிறர்.

கலிவிருத்தம்-பண்-முதிர்ந்தகுறிஞ்சி-தாளம்-ஏழொத்து.

காபிராகம் - ரூபகதாளம்.

* மாலுக்குவையமளந்தமணாளற்கு
நீலக்கருநிறமேகநியாயற்குக்
கோலச்செந்தாமரைக்கண்ணற், கென்கொங்கலர்
ஏலக்குழலியிழந்ததுசங்கே. (௧)

சங்குவில்வாடண்டுசக்கரக்கையற்குச்
செங்கனிவாய்ச்செய்யதாமரைக்கண்ணற்குக்
கொங்கலர்தண்ணந்துழாய்முடியானுக், கென்
மங்கையிழந்ததுமாமைநிறமே. (௨)

நிறங்கரியானுக்குநீடுலகுண்ட
திறங்கிளர்வாய்ச்சிறுக்கள்வரவற்குக்
கறங்கியசக்கரக்கையவனுக், கென்
பிறங்கிருங்கூந்தலிழந்ததுபீடே. (௩)

பீடுடைநான்முகனைப்படைத்தானுக்கு
மாடுடைவையமளந்தமணாளற்கு
நாடுடைமன்னர்க்குத்தூதுசெல்நம்பிக், கென்
பாடுடையல்குலிழந்ததுபண்பே. (௪)

பண்புடைவேதம்பயந்தபரனுக்கு
மண்புரைவையமிடந்தவராகற்குத்
தெண்புனற்பள்ளியெந்தேவபிரானுக், கென்
கண்புனைகோதையிழந்ததுகற்பே. (௫)

கற்பகக்காவனநற்பலதோளற்கு
பொற்சுடர்க்குன்றன்னபூந்தண்முடியற்கு
நற்பலதாமரைநாண்மலர்க்கையற், கென்
விற்புருவக்கொடிதோற்றதுமெய்யே? (௬)

மெய்யமர்பல்கலனன்கணிந்தானுக்குப்
பையரவினணைப்பள்ளியினானுக்குக்
கையொடுகால்செய்யகண்ணபிரானுக், கென்
தையலிழந்ததுதன்னுடைச்சாயே. (௭)

சாயக்குருந்தமொசித்ததமியற்கு
மாயச்சகடமுதைத்தமணாளற்குப்
பேயைப்பிணம்படப்பாலுண்பிரானுக், கென்
வாசக்குழலியிழந்ததுமாண்பே. (௮)

மாண்பமைகோலத்தெம்மாயக்குறளற்குச்
சேண்சுடர்க்குன்றன்னசெஞ்சுடர்மூர்த்திக்குக்
காண்பெருந்தோற்றத்தெங்காகுத்தநம்பிக், கென்
பூண்புனைமென்முலைதோற்றதுபொற்பே. (௯)

பொற்பமைநீண்முடிபூந்தண்டுழாயற்கு
மற்பொருதோளுடைமாயப்பிரானுக்கு
நிற்பனபல்லுருவாய்நிற்குமாயற், கென்
கற்புடையாட்டியிழந்ததுகட்டே. (௧௦)

* கட்டெழிற்சோலைநல்வேங்கடவாணனைக்
கட்டெழிற்றென்குருகூர்ச்சடகோபன்சொல்
கட்டெழிலாயிரத்திப்பத்தும்வல்லவர்
கட்டெழில்வானவர்போகமுண்பாரே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - ருசு - க்குப் பாசுரம் - சூகஅ.

---

மாலுடனேதான்கலந்துவாழப்பெருமையால்
சாலநைந்துதன்னுடைமைதானடையக்—கோலியே
தானிகழவேண்டாமற்றன்னைவிடல்சொல்மாறன்
ஊனமறுசீர்நெஞ்சேயுண். (ருசு)

---

## எ - ம் திருவாய்மொழி - உண்ணுஞ்சோறு.

இவ்வண்ணஞ்சொன்ன தாயானவள் மூர்ச்சித்திருக்கையாலே பெண்ணானவள் மோஹந்தெளிந் தெழுந்திருந்து எனக்கு தாரகபோஷக போக்யமெல்லாங் கண்ணனேயென்று திருக்கோளூர்க்கே போகையில் தாய்தெளிந் தெழுந்திருந்து தன்பெண் திருக்கோளூர்க்குப்போனது நிச்சயமென்று தாய்சொல்லுஞ்சொல்லாக அருளிச்செய்கிறார்.

கலித்துறை—பண் - பழஞ்சுரம் - தாளம் - ஏழொத்து.

காம்பூஜிராகம் - ஆதிதாளம்.

* உண்ணுஞ்சோறுபருகுநீர்தின்னும்வெற்றிலையுமெல்லாம்
கண்ணனெம்பெருமானென்றென்றேகண்கணீர்கள்மல்கி
மண்ணினுளவன்சீர்வளமிக்கவனூர்வினவித்
திண்ணமென்னிளமான்புகுமூர்திருக்கோளூரே. (க)

ஊரும்நாடுமுலகமுந்தன்னைப்போ, லவனுடைய
பேருந்தார்களுமேபிதற்றக்கற்புவானிடறிச்
சேருநல்வளஞ்சேர்பழனத்திருக்கோளூர்க்கே
போருங்கொலுரையீர்கொடியேன்கொடிபூவைகளே. (உ)

பூவைபைங்கிளிகள்பந்துதூதைபூம்புட்டில்கள்
யாவையுந்திருமாலிருநாமங்களேகூவியெழு, மென்
பாவைபோயினித்தண்பழனத்திருக்கோளூர்க்கே
கோவைவாய்துடிப்பமழைக்கண்ணொடென்செய்யுங்கொலோ. (ந)

கொல்லையென்பர்கொலோகுணமிக்கனளென்பர்கொலோ
சில்லைவாய்ப்பெண்டுகளயற்சேரியுள்ளாருமெல்லே
செல்வமல்கியவன்கிடந்ததிருக்கோளூர்க்கே
மெல்லிடைநுடங்கவிளமான்செல்லமேவினளே. (ச)

மேவிநைந்துநைந்துவிளையாடலுறாளென்சிறுத்
தேவிபோ, யினித்தன்பிருமாபிருக்கோளூரில்
பூவியல்பொழிலுந்தடமுமவன்கோயிலுங்கண்டு
ஆவியுள்குளிரவெங்ஙனேயுகக்குங்கொலின்றே. (ரு)

இன்றெனக்குதவாதகன்றவிளமானினிப்போய்த்
தென்றிசைத்திலதமனையதிருக்கோளூர்க்கே
சென்று, தன்றிருமாலிருக்கண்ணுஞ்செவ்வாயுங்கண்டு
நின்றுநின்றுநையுநெடுங்கண்கள்பனிமல்கவே. (சு)

மல்குநீர்க்கண்ணொடுமையலுற்றமனத்தனளாய்
அல்லுநன்பகலுநெடுமாலென்றழைத்தினிப்போய்ச்
செல்வமல்கியவன்கிடந்ததிருக்கோளூர்க்கே
ஒல்கியொல்கிநடந்தெங்ஙனேபுகுங்கொலோசிந்தே. (எ)

ஒசிந்தநுண்ணிடைமேற்கையைவைத்துநொந்துநொந்து
கசிந்தநெஞ்சினளாய்க்கண்ணநீர்துளும்பச்செல்லுங்கொல்
ஒசிந்தவொண்மலராள்கொழுநன்றிருக்கோளூர்க்கே
கசிந்தநெஞ்சினளாயெம்மைநீத்தவெங்காரிகையே. (அ)

காரியநல்லனகளவைகாணிலென்கண்ணனுக்கென்
றீரியாயிருப்பாளிதெல்லாங்கிடக்கவினிப்போய்ச்
சேரிபல்பழிதூஉயிரைப்பத்திருக்கோளூர்க்கே
நேரிழைநடந்தாளெம்மையொன்றுநினைக்கிலளே. (கூ)

நினைக்கிலேன்றெய்வங்காணெடுங்கணிளமானினிப்போய்
அனைத்துலகுமுடையவரவிந்தலோசநனைத்
தினைத்தனையும்விடாளவன்சேர்திருக்கோளூர்க்கே
மனைக்குவான்பழியுநினையாள்செல்லவைத்தனளே. (க0)

* வைத்தமாநிதியாமதுசூதனையேயலற்றிக்
கொத்தலர்பொழில்சூழ்குருகூர்ச்சடகோபன்சொன்ன
பத்துநூற்றுளிப்பத்தவன்சேர்திருக்கோளூர்க்கே
சித்தம்வைத்துரைப்பார்திகழ்பொன்னுலகாள்வாரே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - ருஎ - க்குப் பாசுரம் - சுஉக.

---

உண்ணுஞ்சோறுதியொருமூன்றுமெம்பெருமான்
கண்ணனென்றேநீர்மல்கிக்கண்ணிணைகள்—மண்ணுலகில்
மன்னுதிருக்கோளூரில்மாயன்பாற்போமாறன்
பொன்னடியேநந்தமக்குப்பொன். (ருஎ)

## அ - ம் திருவாய்மொழி - பொன்னுலகு.

திருக்கோளூர்க்குப் போகிறேனென்று பலஹாநியாலே போகமாட்டாமல் நடுவே அருகிருந்தபக்ஷிகளைக்குறித்து உங்களுக்கு உபயவிபூதியுந் தருகிறேன் என்னவஸ்தையைப் பரமபதநாதனுக்குச் சொல்லுங்க ளென்றருளிச்செய்கிறார்.

கலித்துறை - பண் - குறிஞ்சி - தாளம் - ஏழொத்து.

நசாவந்திராகம் - ஆதிதாளம்.

* பொன்னுலகாளீரோபுவனிமுழுதாளீரோ
நன்னலப்புள்ளினங்காள்வினையாட்டியேனுனிரந்தேன்
முன்னுலகங்களெல்லாம்படைத்தமுகில்வண்ணன்கண்ணன்
என்னலங்கொண்டபிரான்றனக்கென்னிலைமையுரைத்தே. (க)

மையமர்வாணெடுங்கண்மங்கைமார்முன்பென்கையிருந்து
நெய்யமரின்னடிசினிச்சல்பாலொடுமேவீரோ
கையமர்சக்கரத்தென்கனிவாய்ப்பெருமானைக்கண்டு
மெய்யமர்காதல்சொல்லிக்கிளிகாள்விரைந்தோடிவந்தே. (உ)

ஓடிவந்தென்குழன்மேலொளிமாமலரூதீரோ
கூடியவண்டினங்காள்குருநாடுடையைவர்கட்காய்
ஆடியமாநெடுந்தேர்படைநீறெழச்செற்றபிரான்
சூடியதண்டுளபமுண்டதூமதுவாய்கள்கொண்டே. (ங)

தூமதுவாய்கள்கொண்டுவந்தென்முல்லைகண்மேற்றும்பிகாள்
பூமதுவுண்ணச்செல்லில்வினையேனைப்பொய்செய்தகன்ற
மாமதுவார்தண்டுழாய்முடிவானவர்கோனைக்கண்டு
ஆமிதுவோதக்கவாறென்னவேண்டுங்கண்டீர்நுங்கட்கே. (ச)

நுங்கட்கியானுரைக்கேன்வம்மின்யான்வளர்த்தகிளிகாள்
வெங்கட்புள்ளூர்ந்துவந்துவினையேனைநெஞ்சங்கவர்ந்த
செங்கட்கருமுகிலைச்செய்யவாய்ச்செழுங்கற்பகத்தை
எங்குச்சென்றாகிலுங்கண்டிதுவோதக்கவாறென்மினே. (ரு)

என்மின்னுநூன்மார்பனென்கரும்பெருமானென்கண்ணன்
தன்மன்னுநீள்கழன்மேற்றண்டுழாய்நமக்கன்றிநல்கான்
கன்மின்களென்றும்மையான்கற்பியாவைத்தமாற்றஞ்சொல்லி
சென்மின்கடீவினையேன்வளர்த்தசிறுபூவைகளே. (சு)

பூவைகள்போனிறத்தன்புண்டரீகங்கள்போலுங்கண்ணன்
யாவையும்யாவருமாய்நின்றமாயனென்னாழிப்பிரான்
மாவைவல்வாய்பிளந்தமதுசூதற்கென்மாற்றஞ்சொல்லிப்
பாவைகடீர்க்கிற்றிரோவினையாட்டியேன்பாசறவே. (எ)

பாசறவெய்தியின்னேவினையேனெனையூழிநைவேன்
ஆசறுதூவிவெள்ளைக்குருகேயருள்செய்தொருநாள்
மாசறுநீலச்சுடர்முடிவானவர்கோனைக்கண்டு
ஏசறுநும்மையல்லான்மறுநோக்கிலள்பேர்த்துமற்றே. (௮)

பேர்த்துமற்றோர்களைகண்வினையாட்டியேனானொன்றிலேன்
நீர்த்திரைமேலுலவியிரைதேரும்புதாவினங்காள்
கார்த்திரண்மாமுகில்போற்கண்ணன்விண்ணவர்கோனைக்கண்டு
வார்த்தைகள்கொண்டருளியுரையீர்வைகல்வந்திருந்தே. (௯)

வந்திருந்தும்முடையமணிச்சேவலுநீருமெல்லாம்
அந்தரமொன்றுமின்றியலர்மேலசையுமன்னங்காள்
என்திருமார்பற்கென்னையின்னவாறிவள்காண்மினென்று
மந்திரத்தொன்றுணர்த்தியுரையீர்மறுமாற்றங்களே. (௧௦)

* மாற்றங்களாய்ந்துகொண்டுமதுசூதபிரானடிமேல்
நாற்றங்கொள்பூம்பொழில்சூழ்குருகூர்ச்சடகோபன்சொன்ன
தோற்றங்களாயிரத்துளிவையுமொருபத்தும்வல்லார்
ஊற்றிங்கணுண்மணல்போலுருகாநிற்பர்நீராயே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ௲ திருவாய்மொழி - ௫௮ - க்குப் பாசுரம் - ௬௪௦.

---

பொன்னுலகுபூமியெல்லாம்புள்ளினங்கட்கேவழங்கி
என்னிடைமாலுக்கியம்புமென—மன்னுதிரு
நாடுமுதற்றூதநல்கிவிடுமாறனையே
நீடுலகீர்போய்வணங்குநீர். (௫௮)

---

## ௯ - ம் திருவாய்மொழி - நீராய்.

தூதுவிட்டும் வாராமையால் தன்னலழுந்தல் கேட்குமவர்களெல்லாம்
நீராயுருகும்படி ஸர்வேஶ்வரனுக்கும் பரமபதத்தில்நிற்கவும்
அஶக்யமாகும்படி ஆழ்வாரழைத்ததை
அருளிச்செய்கிறார்.

கலித்துறை-பண்-காந்தாரம்-தாளம்-ஏழொத்து.

சாவேரிராகம் - ஆதிதாளம்.

* நீராய்நிலனாய்த்தீயாய்க்காலாய்நெடுவானாய்ச்
சீரார்சுடர்களிரண்டாய்ச்சிவனாயயனாய்
கூராராழிவெண்சங்கேந்திக்கொடியேன்பால்
வாரா, யொருநாண்மண்ணும்விண்ணும்மகிழவே. (௧)

மன்னும்விண்ணுமகிழக்குறளாய்வலங்காட்டி
மண்ணும்விண்ணுங்கொண்டமாயவம்மானே
நண்ணியுனைநான்கண்டுகந்துகூத்தாட
நண்ணியொருநாண்ஞாலத்தூடேநடவாயே. (உ)

ஞாலத்தூடேநடந்துநின்றுங்கிடந்திருந்தும்
சாலப்பலநாளுகந்தோறுயிர்கள்காப்பானே
கோலத்திருமாமகளோடுன்னைக்கூடாதே
சாலப்பலநாளடியேனின்னந்தளர்வேனோ. (ங)

தளர்ந்துமுறிந்துசகடவசுரருடல்வேறாப்
பிளந்துவீயத்திருக்காலாண்டபெருமானே
கிளர்ந்துபிரமன்சிவனிந்திரன்விண்ணவர்சூழ
விளங்கவொருநாள்காணவாராய்விண்மீதே. (ச)

விண்மீதிருப்பாய்மலைமேனிற்பாய்கடற்சேர்ப்பாய்
மண்மீதுழல்வாயிவற்றுளெங்குமறைந்துறைவாய்
எண்மீதியன்றபுறவண்டத்தாயெனதாவி
யுண்மீதாடி, யுருக்காட்டாதேயொளிப்பாயோ. (ரு)

பாயோரடிவைத்ததன்கீழ்ப்பரவைநிலமெல்லாம்
தா, யோரடியாலெல்லாவுலகுந்தடவந்த
மாயோ, னுன்னைக்காண்பான்வருந்திஎனைநாளும்
தீயோடுடன்சேர்மெழுகாயுலகிற்றிரிவேனோ. (சு)

உலகிற்றிரியுங்கருமகதியாயுலகமாய்
உலகுக்கேயோருயிருமானாய்புறவண்டத்
தலகிற்பொலிந்ததிசைபத்தாயவருவேயோ
அலகிற்பொலிந்தவறிவிலேனுக்கருளாயே. (எ)

அறிவிலேனுக்கருளாயறிவாருயிரானாய்
வெறிகொள்சோதிமூர்த்தியடியேனெடுமாலே
கிறிசெய்தென்னைப்புறத்திட்டின்னங்கெடுப்பாயோ
பிறிதொன்றறியாவடியேனாவிதிகைக்கவே. (அ)

ஆவிதிகைக்கவைவர்குமைக்குஞ்சிற்றின்பம்
பாவியேனைப்பலநீகாட்டிப்படுப்பாயோ
தாவிவையங்கொண்டதடந்தாமரைகட்கே
கூவிக்கொள்ளுங்காலமின்னங்குறுகாதோ. (கூ)

குறுகாநீளாவிறுதிகூடாவெனையூழிச்
சிறுகாபெருகாவளவிலின்பஞ்சேர்ந்தாலும்
மறுகாலின்றிமாயோனுனக்கேயாளாகும்
சிறுகாலத்தையுறுமோவந்தோதெரியிலே. (கய)

* தெரிதனினைதலெண்ணலாகாத்திருமாலுக்
குரியதொண்டர்தொண்டர்தொண்டன்சடகோபன்
தெரியசொன்னவோராயிரத்துளிப்பத்தும்
உரியதொண்டராக்குமுலகமுண்டாற்கே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ_திருவாய்மொழி - ௫௯ - க்குப் பாசுரம் - ௬௫௩.

---

நீராகிக்கேட்டவர்கணெஞ்சழியமாலுக்கும்
ஏரார்விசும்பிலிருப்பரிதா—வாராத
காதலுடன்கூப்பிட்டகாரிமாறன்சொல்லை
ஓதிடவேயுய்யுமுலகு. (௫௯)

---

## ௧௦ - ம் திருவாய்மொழி-உலகமுண்ட.

---

ஆழ்வார் ஆக்ருந்தம்பண்ண உம்முடையபொருட்டே பரமபதத்தைவிட்டு
இதுவே பரமபதமாக்கிக்கொண்டு திருமலையிலே வந்திருக்கிறோமென்ன
அலர்மேல்மங்கைநாய்ச்சியாரை புருஷகார மாக்கிக்கொண்டு
திருவேங்கடமுடையானை ப்ரபத்திசெய்ததை
யருளிச்செய்கிறார்.

ஆசிரியவிருத்தம் - பண் - பழம்பஞ்சுரம் - தாளம் - ஏழொத்து.

நாதநாமக்கிரியைராகம் - ஆதிதாளம்.

* உலகமுண்டபெருவாயாவுலப்பில்கீர்த்தியம்மானே
நிலவுஞ்சுடர்சூழொளிமூர்த்திநெடியாயடியேனாருயிரே
திலதமுலகுக்காய்நின்றதிருவேங்கடத்தெம்பெருமானே
குலதொலடியேனுனபாதங்கூடுமாறுகூறாயே. (௧)

கூறாய்நீறாய்நிலனாகிக்கொடுவல்லசுரர்குலமெல்லாம்
சீறாவெறியுந்திருநேமிவலவாதெய்வக்கோமானே
சேறார்சுனைத்தாமரைசெந்தீமலருந்திருவேங்கடத்தானே
ஆறாவன்பிலடியேனுன்னடிசேர்வண்ணமருளாயே. (௨)

வண்ணமருள்கொளணிமேகவண்ணாமாயவம்மானே
எண்ணம்புகுந்துதித்திக்குமமுதேயிமையோரதிபதியே
தெண்ணலருவிமணிபொன்முத்தலைக்குந்திருவேங்கடத்தானே
அண்ணலேயுன்னடிசேரவடியேற்காவாவென்னாயே. (௩)

ஆவாவென்னாதுலகத்தையலைக்குமசுரர்வாணாண்மேல்
தீவாய்வாளிமழைபொழிந்தசிலையாதிருமாமகள்கேள்வா
தேவா, சுரர்கள்முனிக்கணங்கள்விரும்புந்திருவேங்கடத்தானே
பூவார்கழல்களருவினையேன்பொருந்துமாறுபுணராயே. (௪)

புணராநின்றமரமேழன்றெய்தவொருவில்வலவாவோ
புணரேய்நின்றமரமிரண்டினடுவேபோனமுதல்வாவோ
திணரார்மேகமெனக்களிறுசேருந்திருவேங்கடத்தானே
திணரர்சார்ங்கத்துனபாதஞ்சேர்வதடியேனென்னாளே. (ரு)

என்னாளேநாமண்ணளந்தவிணைத்தாமரைகள்காண்பதற்கென்
றெந்நாளுநின்றிமையோர்களேத்தியிறைஞ்சியினமினமாய்
மெய்ந்நாமனத்தால்வழிபாடுசெய்யுந்திருவேங்கடத்தானே
மெய்ந்நானெய்திஎந்நாளுன்னடிக்களடியேன்மேவுவதே. (சு)

அடியேன்மேவியமர்கின்றவமுதேயிமையோரதிபதியே
கொடியாவடுபுள்ளுடையானேகோலக்கனிவாய்ப்பெருமானே
செடியார்வினைகடீர்மருந்தேதிருவேங்கடத்தெம்பெருமானே
நொடியார்பொழுதுமுனபாதங்காணநோலாதாற்றேனே. (எ)

நோலாதாற்றேனுனபாதங்காணவென்றுநுண்ணுணர்வில்
நீலார்கண்டத்தம்மானுநிறைநான்முகனுமிந்திரனும்
சேலேய்கண்ணார்பலர்சூழவிரும்புந்திருவேங்கடத்தானே
மாலாய்மயக்கியடியேன்பால்வந்தாய்போலேவாராயே. (அ)

வந்தாய்போலேவாராதாய்வாராதாய்போல்வருவானே
செந்தாமரைக்கட்செங்கனிவாய்நாற்றோளமுதேயெனதுயிரே
சிந்தாமணிகள்பகரல்லைப்பகல்செய்திருவேங்கடத்தானே
அந்தோவடியேனுனபாதமகலகில்லேனிறையுமே. (கூ)

* அகலகில்லேனிறையுமென்றலர்மேல்மங்கையுறைமார்பா
நிகரில்புகழாயுலகுமூன்றுடையாயென்னையாள்வானே
நிகரிலமரர்முனிக்கணங்கள்விரும்புந்திருவேங்கடத்தானே
புகலொன்றில்லாவடியேனுன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே. (கo)

* அடிக்கீழமர்ந்துபுகுந்தடியீர்வாழ்மினென்றென்றருள்கொடுக்கும்
படிக்கேழில்லாப்பெருமானைப்பழனக்குருகூர்ச்சடகோபன்
முடிப்பான்சொன்னவாயிரத்துத்திருவேங்கடத்துக்கிவைபத்தும்
பிடித்தார்பிடித்தார்வீற்றிருந்துபெரியவானுண்ணிலாவுவரே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆறும் பத்து முற்றியது.

ஆறு பத்து-கூ-ல் திருவாய்மொழி - கூo - க்குப் பாசுரம் - கூகூஉ.

உலகுய்யமால்நின்றவுயர்வேங்கடத்தே
அலர்மகளைமுன்னிட்டவன்றன்—மலரடியே
வன்சரணாய்ச்சேர்ந்தமகிழ்மாறன்றாளிணையே
உன்சரணாய்நெஞ்சமேயுள். (கூo)

# ஏழாம்பத்து.

## க - ம் திருவாய்மொழி - உண்ணி.

ப்ரபத்தி பண்ணிணும் ப்ரபந்தபரிஸமாப்தி நிமித்தமாக ஈஶ்வரன் பலத்தைக்கொடாமல் விளம்பிக்க மிகவுமார்த்தாய் தன்திருவடிகள் சேராதபடிக்கு இன்னுமிந்த்ரியங்களாலே எத்தனைநாள் பாதிப்பிப்பனோவென்று ஆக்ருந்தநம்பண்ணினதை யருளிச்செய்கிறார்.

அறுசீராசிரியத்துறை-பண்-பழம்பஞ்சுரம்-தாளம்-ஏழொத்து.

ஸாரங்கராகம் - ஆதிதாளம்.

* உண்ணிலாவியவைவராற்குமைதீற்றியென்னையுன்பாதபங்கயம்
நண்ணிலாவகையேநலிவானின்னமெண்ணுகின்றாய்
எண்ணிலாப்பெருமாயனேயிமையோர்களேத்துமுலகமூன்றுடை-
யண்ணலேயமுதேயப்பனேயென்னையாள்வானே. (க)

என்னையாளும்வன்கோவோரைந்திவைபெய்திராப்பகல்,மோதுவித்திட்
டுன்னைநானணுகாவகைசெய்துபோதிகண்டாய்
கன்னலேயமுதேகார்முகில்வண்ணனேகடன்ஞாலங்காக்கின்ற
மின்னுநேமியினாய்வினையேனுடைவேதியனே. (உ)

வேதியாநிற்குமைவரால்வினையேனைமோதுவித், துன்திருவடி
சாதியாவகைநீதடுத்தென்பெறுதியந்தோ
ஆதியாகியவிடம்படைத்துண்டுமிழ்ந்துகடந்திடந்திட்ட
சோதிநீண்முடியாய்தொண்டனேன்மதுசூதனனே. (௩)

சூதுநானறியாவகைசுழற்றியோரைவரைக்காட்டி, யுன்னடிப்
போதுநானணுகாவகைசெய்துபோதிகண்டாய்
யாதும்யாவருமின்றிநின்னகம்பாலொடுக்கியோராலினீளிலை
மீதுசேர்குழவிவினையேன்வினைதீர்மருந்தே. (௪)

தீர்மருந்தின்றியைந்துநோயடுஞ்செக்கிலிட்டுத்திரிக்குமைவரை
நேர்மருங்குடைத்தாவடைத்துநெகிழ்ப்பானொக்கின்றாய்
ஆர்மருந்தினியாகுவாரடலாழியேந்தியசுரர்வன்குலம்
வேர்மருங்கறுத்தாய்விண்ணுளார்பெருமானேயோ. (௫)

விண்ணுளார்பெருமாற்கடிமைசெய்வாரையுஞ்செறுமைம்புலனிவை
மண்ணுளென்னைப்பெற்றாலென்செய்யாமற்றுநீயும்விட்டால்
பண்ணுளாய்கவிதன்னுளாய்பத்தியினுள்ளாய்பரமீசனே, வந்தென்
கண்ணுளாய்நெஞ்சுளாய்சொல்லுளாயொன்றுசொல்லாயே. (சு)

ஒன்றுசொல்லியொருத்தினினிற்கிலாதவோரைவர்வன்கயவரை
என்றுயான்வெல்கிற்பனுன்றிருவருளில்லையேல்
அன்றுதேவரசுரர்வாங்கவலைகடலரவமளாவி, யோர்
குன்றம்வைத்தவெந்தாய்கொடியேன்பருகின்னமுதே. (எ)

இன்னமுதெனத்தோன்றியோரைவர்யாவரையுமயக்க, நீவைத்த
முன்னமாயமெல்லாமுழுவேரரிந், தென்னையுன்
சின்னமுந்திருமூர்த்தியுஞ்சிந்தித்தேத்திக்கைதொழவேயருளெனக்
கென்னம்மாவென்கண்ணாவிமையோர்தங்குலமுதலே. (அ)

குலமுதலடுந்தீவினைக்கொடுவன்குழியினில்வீழ்க்குமைவரை
வலமுதல்கெடுக்கும்வரமேதந்தருள்கண்டாய்
நிலமுதலினியெவ்வுலகுக்குநிற்பனசெல்வனவெனப், பொருள்
பலமுதல்படைத்தாயென்கண்ணாவென்பரஞ்சுடரே. (கூ)

என்பரஞ்சுடரேயென்றுன்னையலற்றியுன்னிணைத்தாமரைகட்
கன்புருகிநிற்குமதுநிற்கச்சுமடுதந்தாய்
வன்பரங்களெடுத்தைவர்திசைதிசைவலித்தெற்றுகின்றனர்
முன்பரவைகடைந்தமுதங்கொண்டமூர்த்தியோ. (க0)

* கொண்டமூர்த்தியோர்மூவராய்க்குணங்கள்படைத்தளித்துக்கெடுக்கு
புண்டரீகக்கொப்பூழ்ப்புனற்பள்ளியப்பனுக்கேதொண்டர் [மப்
தொண்டர்தொண்டர்தொண்டன்சடகோபன்சொல்லாயிரத்துளிப்பத்தும்
கண்டுபாடவல்லார்வினைபோங்கங்குலும்பகலே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - சுக - க்குப் பாசுரம் - சுஎ௩.

---

உண்ணிலாவைவருடனிருத்தியிவ்வுலகில்
எண்ணிலாமாயனெனைநலிய—வெண்ணுகின்றான்
என்றுநினைந்தோலமிட்டவின்புகழ்சேர்மாறனெனக்
குன்றிவிடுமேபவக்கங்குல். (சுக)

## உ - ம் திருவாய்மொழி - கங்குல்.

இவ்வண்ணமழைத்த ஆழ்வார்மோஹித்திருக்கத் திருத்தாயார்
பெரியபெருமாளைக்குறித்து இந்நாயகி விஷயமாக
எதுஸங்கல்பித்திருக்கிறீரென்றுகேட்பதாக வருளிச்செய்கிறார்.

எழுசீராசிரியவிருத்தம்-பண்-தக்கராகம்-தாளம்-ஒன்பதொத்து.

நீலாம்புரிராகம் - ஆதிதாளம்.

※ கங்குலும்பகலுங்கண்டுயிலறியாள்கண்ணநீர்கைகளாலிறைக்கும்
சங்குசக்கரங்களென்றுகைகூப்புந்தாமரைக்கண்ணென்றேதளரும்
எங்ஙனேதரிக்கேனுன்னைவிட்டென்னுமிருநிலங்கைதுழாவிருக்கும்
செங்கயல்பாய்நீர்த்திருவரங்கத்தாயிவடிறத்தென்செய்கின்றாயே. (க)

என்செய்கின்றாயென்றாமரைக்கண்ணாவென்னுங்கண்ணீர்மல்கவிருக்கும்
என்செய்கேனெறிநீர்த்திருவரங்கத்தாயென்னும்வெவ்வுயிர்த்துயிர்த்துருகும்
முன்செய்தவினையேமுகப்படாயென்னுமுகில்வண்ணாதகுவதோவென்னும்
முன்செய்திவ்வுலகமுண்டுமிழ்ந்தளந்தாயென்கொலோமுடிகின்றதிவட்கே. (உ)

வட்கிலளிறையுமணிவண்ணாவென்னும்வானமேநோக்குமையாக்கும்
உட்குடையசுரருயிரெல்லாமுண்டவொருவனேயென்னுமுள்ளுருகும்
கட்கிலீயுன்னைக்காணுமாறருளாய்காகுத்தாகண்ணனேயென்னும்
திட்கொடிமதிள்சூழ்திருவரங்கத்தாயிவடிறத்தென்செய்திட்டாயே.

இட்டகாலிட்டகைகளாயிருக்குமெழுந்துலாய்மயங்குங்கைகூப்பும்
கட்டமேகாதலென்றுமூர்ச்சிக்குங்கடல்வண்ணாகடியைகாணென்னும்
வட்டவாய்நேமிவலங்கையாவென்னும்வந்திடாயென்றென்றேமயங்கும்
சிட்டனேசெழுநீர்த்திருவரங்கத்தாயிவடிறத்தென்சிந்தித்தாயே. (ச)

சிந்திக்குந்திசைக்குந்தேறுங்கைகூப்புந்திருவரங்கத்துள்ளாயென்னும்
வந்திக்கு, மாங்கேமழைக்கண்ணீர்மல்கவந்திடாயென்றென்றேமயங்கும்
அந்திப்போதவுணனுடலிடந்தானேயலைகடல்கடைந்தவாரமுதே
சந்தித்துன்சரணஞ்சார்வதேவலித்ததையலைமையல்செய்தானே. (ரு)

மையல்செய்தென்னைமனங்கவர்ந்தானேயென்னுமாமாயனேயென்னும்
செய்யவாய்மணியேயென்னுந்தண்புனல்சூழ்திருவரங்கத்துள்ளாயென்னும்
வெய்யவாடண்டுசங்குசக்கரம்வில்லேந்தும்விண்ணோர்முதலென்னும்
பைகொள்பாம்பணையாயிவடிறத்தருளாய்பாவியேன்செயற்பாலதுவே.

பாலதுன்பங்களின்பங்கள்படைத்தாய்பற்றிலார்பற்றநின்றானே
காலசக்கரத்தாய்கடலிடங்கொண்டகடல்வண்ணாகண்ணனேயென்னும்
சேல்கொள்தண்புனல்சூழ்திருவரங்கத்தாயென்னுமென்றீர்த்தனேயென்னும்
கோலமாமழைக்கண்பனிமல்கவிருக்குமென்னுடைக்கோமளக்கொழுந்தே.

கொழுந்துவானவர்கட்கென்னுங்குன்றேந்திக்கோநிரைகாத்தவனென்னும்
அழுந்தொழுமாவியனலவெவ்வுயிர்க்குமஞ்சனவண்ணனேயென்னும்
எழுந்துமேனோக்கியிமைப்பிலளிருக்குமெங்ஙனேநோக்குகேனென்னும்
செழுந்தடம்புனல்சூழ்திருவரங்கத்தாயென்செய்கேனென்திருமகட்கே. (அ)

* என்திருமகள்சேர்மார்பனேயென்னுமென்னுடையாவியேயென்னும்
நின்திருவெயிற்றாலிடந்துநீகொண்டநிலமகள்கேள்வனேயென்னும்
அன்றுருவேழுந்தழுவிநீகொண்டவாய்மகளன்பனேயென்னும்
தென்திருவரங்கங்கோயில்கொண்டானேதெளிகிலேன்முடிவிடனக்கே.

முடிவிடனக்கொன்றறிகிலேனென்னுமூவுலகாளியேயென்னும்
கடிகமழ்கொன்றைச்சடையனேயென்னுநான்முகக்கடவுளேயென்னும்
வடிவுடைவானோர்தலைவனேயென்னும்வண்டிருவரங்கனேயென்னும்
அடியடையாதாள்போலிவளணுகியடைந்தனள்முகில்வண்ணனடியே.

* முகில்வண்ணனடியையடைந்தருள்சூடியுய்ந்தவன்மொய்புனற்பொருநல்
துகில்வண்ணத்தூய்நீர்சேர்ப்பன்வண்பொழில்சூழ்வண்குருகூர்ச்சடகோபன்
முகில்வண்ணனடிமேற்சொன்னசொன்மாலையாயிரத்திப்பத்தும்வல்லார்
முகில்வண்ணவானத்திமையவர்சூழவிருப்பர்பேரின்பவெள்ளத்தே.

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - ௬உ - க்குப் பாசுரம் - ௬அ௬.

---

கங்குல்பகலரதிகைவிஞ்சிமோகமுற
அங்கதனைக்கண்டோரரங்கரைப்பார்த்—திங்கிவள்பால்
என்செயநீரெண்ணுகின்றதென்னுநிலைசேர்மாறன்
அஞ்சொலுறநெஞ்சுவெள்ளையாம். (௬உ)

---

## ௩-ம் திருவாய்மொழி - வெள்ளை.

தாய்ப்ரஸங்கவஶாத்பண்ணின நம்பெருமாள் கீர்த்தநத்தால்ஆழ்வார்
மோஹத்தை விட்டுக்கிட்டவிருக்கிறதிருப்பேரையில்
திருப்பதிக்குபோவேனென்று உத்யோகிக்குமளவில் தாய்தவிர்க்க
வீரத்தாலும் போவேனென்று சொன்னவதை
அருளிச்செய்கிறார்.

எண்சீராசிரியவிருத்தம்-பண்-நட்டபாஷை-தாளம்-ஏழொத்து.

ஆனந்தபைரவிராகம்-அடதாளம்.

* வெள்ளைச்சுரிசங்கொடாழியேந்தித்தாமரைக்கண்ணனென்னெஞ்சினூடே
புள்ளைக்கடாகின்றவாற்றைக்காணீரென்சொல்லிச்சொல்லுகேனன்னைமீர்காள்
வெள்ளச்சுகமவன்வீற்றிருந்தவேதவொலியும்விழாவொலியும்
பிள்ளைக்குழாவிளையாட்டொலியுமறாத்திருப்பேரையிற்சேர்வனுனே.

நானக்கருங்குழற்றோழிமீர்காளன்னையர்காளயற்சேரியீர்காள்
நானித்தனிநெஞ்சங்காக்கமாட்டேனென்வசமன்றிராப்பகற்போய்த்
தேன்மொய்த்தபூம்பொழிற்றண்பணைசூழ்தென்றிருப்பேரையில்வீற்றிருந்த
வானப்பிரான்மணிவண்ணன்கண்ணன்செங்கனிவாயின்றிறத்ததுவே.

செங்கனிவாயின்றிறத்ததாயுஞ்செஞ்சுடர்நீண்முடித்தாழ்ந்ததாயும்
சங்கொடுசக்கரங்கண்டுகந்துந்தாமரைக்கண்களுக்கற்றுத்தீர்ந்தும்
திங்களுநாளும்விழாவறாதென்றிருப்பேரையில்வீற்றிருந்த
நங்கள்பிரானுக்கென்னெஞ்சந்தோழீநாணுநிறையுமிழந்ததுவே (௩)

இழந்தவெம்மாமைத்திறத்துப்போனவென்னெஞ்சினாருமங்கேயொழிந்தார்
உழந்தினியாரைக்கொண்டென்னுசாகோவோதக்கடலொலிபோலவெங்கும்
எழுந்தநல்வேதத்தொலிநின்றோங்குதென்றிருப்பேரையில்வீற்றிருந்த
முழங்குசங்கக்கையன்மாயத்தாழ்ந்தேனன்னையர்காளென்னையென்முனிந்தே.

முனிந்துசகடமுதைத்துமாயப்பேய்முலையுண்டுமருதிடைபோய்
கனிந்தவிளவுக்குக்கன்றெறிந்தகண்ணபிரானுக்கென்பெண்மைதோற்றேன்
முனிந்தினியென்செய்தீரன்னைமீர்காள்முன்னியவன்வந்துவீற்றிருந்த
கனிந்தபொழிற்றிருப்பேரையிற்கேகாலம்பெறவென்னைக்காட்டுமினே.

காலம்பெறவென்னைக்காட்டுமின்கள்காதல்கடலின்மிகப்பெரிதா
நீலமுகில்வண்ணத்தெம்பெருமானிற்குமுன்னேவந்தென்கைக்குமெய்தான்
ஞாலத்தவன்வந்துவீற்றிருந்தநான்மறையாளரும்வேள்வியோவா
கோலச்செந்நெற்கள்கவரிவீசுங்கூடுபுனற்றிருப்பேரையிற்கே. (௬)

பேரையிற்சூழ்கடற்றென்னிலங்கைசெற்றபிரான்வந்துவீற்றிருந்த
பேரையிற்கேபுக்கென்னெஞ்சநாடிப்பேர்த்துவரவெங்குங்காணமாட்டேன்
ஆரையினியிங்குடையந்தோழீயென்னெஞ்சங்கூவவல்லாருமில்லை
ஆரையினிக்கொண்டென்சாதிக்கின்றதென்னெஞ்சங்கண்டதுவேகண்டேனே.

கண்டதுவேகொண்டெல்லாருங்கூடிக்கார்க்கடல்வண்ணனோடென்றிறத்துக்
கொண்டலர்தூற்றிற்றதுமுதலாக்கொண்டவென்காதலுரைக்கிற்றோழீ
மண்டிணிஞாலமுமேழ்கடலுநீள்விசும்புங்கழியப்பெரிதால்
தெண்டிரைசூழ்ந்தவன்வீற்றிருந்ததென்றிருப்பேரையிற்சேர்வன்சென்றே. (அ)

சேர்வன்சென்றென்னுடையதோழிமீர்காளன்னையர்காளென்னைத் தேற்றவே
நீர்களுரைக்கின்றதென்னிதற்குநெஞ்சுநிறைவுமெனக்கிங்கில்லை [ண்டா
கார்வண்ணன்கார்க்கடன்ஞாலமுண்டகண்ணபிரான்வந்துவீற்றிருந்த
ஏர்வளவொண்கழனிப்பழனத்தென்றிருப்பேரையின்மாநகரே. (௯)

நகரமுநாடும்பிறவுந்தேர்வேனெனக்கில்லையென்றோழிமீர்காள்
சிகரமணிநெடுமாடநீடுதென்றிருப்பேரையில்வீற்றிருந்த
மகரநெடுங்குழைக்காதன்மாயனூற்றுவரையன்றுமங்கநூற்ற
நிகரின்முகில்வண்ணனேமியானென்னெஞ்சங்கவர்ந்தெனையூழியானே.

* ஊழிதோறூழியுருவும்பெருஞ்செய்கையும்வேறவன்வையங்காக்கும்
ஆழிநீர்வண்ணனையச்சுதனையணிகுருகூர்ச்சடகோபன்சொன்ன
கேழிலந்தாதியோராயிரத்துள்ளிவைதிருப்பேரையின்மேயபத்தும்
ஆழியங்கையனையேத்தவல்லாரவரடிமைத்திறத்தாழியாரே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - ௯௩ - க்குப் பாசுரம் - ௯௯௫.

---

வெள்ளியகாமங்கேட்டுவிட்டகன்றபின்மோகம்
தெள்ளியமால்தென்திருப்பேர்சென்றுபுக—உள்ளமங்கே
பற்றிநின்றதன்மைபகருஞ்சடகோபர்க்
கற்றவர்கடாமாழியார். (௯௩)

---

## ௪ - ம் திருவாய்மொழி - ஆழி.

விஶ்லேஷவ்யஸநத்திலிருக்க ஈஶ்வரன் தன்னவதாரவிஜயங்க
ளெல்லாவற்றையுங்காட்டத்தரித்தவையெல்லாம்
அநுஸந்தித்ததையருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம்-பண்-காந்தாளம்-தாளம்-ஏழொத்து.

மோஹனராகம் - அடதாளம்.

* ஆழியெழச்சங்கும்வில்லுமெழத், திசை
வாழியெழத்தண்டும்வாளுமெழ, வண்டம்
மோழையெழமுடிபாதமெழ, வப்பன்
ஊழியெழவுலகங்கொண்டவாறே. (௧)

ஆறுமலைக்கெதிர்ந்தோடுமொலி, யர
வூறுசுலாய்மலைதேய்க்குமொலி, கடல்
மாறுசுழன்றழைக்கின்றவொலி, யப்பன்
சாறுபடவமுதங்கொண்டஞான்றே. (௨)

நான்றிலவேழ்மண்ணுந்தானத்தவே, பின்னும்
நான்றிலவேழ்மலைதானத்தவே, பின்னும்
நான்றிலவேழ்கடறானத்தவே, யப்பன்
ஊன்றியிடந்தெயிற்றிற்கொண்டநாளே. (௩)

நாளுமெழநிலநீருமெழ, விண்ணும்
கோளுமெழவெரிகாலுமெழ, மலை
தாளுமெழச்சுடர்தானுமெழ, வப்பன்
ஊளியெழவுலகமுண்டவூணே. (௪)

ஊனுடைமல்லர்ததர்ந்தவொலி, மன்னர்
ஆனுடைச்சேனைநடுங்குமொலி, விண்ணுள்
ஏனுடைத்தேவர்வெளிப்பட்டவொலி, யப்பன்
கானுடைப்பாரதங்கையறைபோழ்தே. (ரு)

போழ்துமெலிந்தபுஞ்செக்கரில், வான்றிசை
சூழுமெழுந்துதிரப்புனலா, மலை
கீழ்துபிளந்தசிங்கமொத்ததா, லப்பன்
ஆழ்துயர்செய்தசுரரைக்கொல்லுமாறே (சு)

மாறுநிரைத்திரைக்குஞ்சரங்க, ளினம்
நூறுபிணமலைபோல்புரளக், கடல்
ஆறுமடுத்துதிரப்புனலா, வப்பன்
நீறுபடவிலங்கைசெற்றநேரே. (எ)

நேர்சரிந்தான்கொடிக்கோழிகொண்டான், பின்னும்
நேர்சரிந்தானெரியுமனலோன், பின்னும்
நேர்சரிந்தான்முக்கண்மூர்த்திகண்டீ, ரப்பன்
நேர்சரிவாணன்றிண்டோள்கொண்டவன்றே. (அ)

அன்றுமண்ணீரெரிகால்விண்மலைமுதல்
அன்றுசுடரிரண்டுபிறவும், பின்னும்
அன்றுமழையுயிர்தேவுமற்று, மப்பன்
அன்றுமுதலுலகஞ்செய்ததுமே. (சு)

மேய்நிரைகீழ்புகமாபுரளச், சுனை
வாய்நிறைநீர்பிளிறிச்சொரிய, வின
ஆநிரைபாடியங்கேயொடுங்க, வப்பன்
தீமழைகாத்துக்குன்றமெடுத்தானே. (கഠ)

* குன்றமெடுத்தபிரானடியாரொடும்
ஒன்றிநின்றசடகோபனுரைசெயல்
நன்றிபுனைந்தவோராயிரத்துள்ளிவை
வென்றிதரும்பத்துமேவிக்கற்பார்க்கே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ திருவாய்மொழி - சுச - க்குப் பாசுரம் - எ௦சு.

---

ஆழிவண்ணன்றன்விசயமானவைமுற்றுங்காட்டி
வாழிதனுலென்றுமகிழ்ந்துநிற்க—ஊழிலவை
தன்னையின்றுபோற்கண்டுதானுரைத்தமாறன்சொல்
பன்னுவரோநல்லதுகற்பார். (சுச)

## ரு - ம் திருவாய்மொழி - கற்பார்.

விஜயோபாதாநங்களுக்கு மூலமான ராமக்ருஷ்ணாத்யவதாரங்களைவிட்டு
சேதநர்இதரதேவதைகளை யாஶ்ரயித்துக் கெட்டுப்போகிறார்களென்று
ஆச்சர்யப்பட்டுத் தாம் பகவத்குணாநுபவத்தால்
ப்ரீதரானதை யருளிச்செய்கிறார்.

கலித்துறை - பண் - நட்டராகம் - தாளம் - ஏழொத்து.

ஸஹானாராகம் - அடதாளம்.

* கற்பாரிராமபிரானையல்லான்மற்றுங்கற்பரோ
புற்பாமுதலாப்புல்லெறும்பாதியொன்றின்றியே
நற்பாலயோத்தியில்வாழுஞ்சராசரமுற்றவும்
நற்பாலுக்குய்த்தனனான்முகனார்பெற்றநாட்டுளே. (க)

நாட்டிற்பிறந்தவர்நாரணற்காளன்றியாவரோ
நாட்டிற்பிறந்துபடாதனபட்டுமனிசர்க்கா
நாட்டைநலியுமரக்கரைநாடித்தடிந்திட்டு
நாட்டையளித்துய்யச்செய்துநடந்தமைகேட்டுமே. (உ)

கேட்பார்கள்கேசவன்கீர்த்தியல்லான்மற்றுங்கேட்பரோ
கேட்பார்செவிசுடுகீழ்மைவசவுகளேவையும்
சேட்பாற்பழம்பகைவன்சிசுபாலன், திருவடி
தாட்பாலடைந்ததன்மையறிவாரையறிந்துமே. (ங)

தன்மையறிபவர்தாமவற்காளன்றியாவரோ
பன்மைப்படர்பொருளாதுமில்பாழ்நெடுங்காலத்து
நன்மைப்புனற்பண்ணிநான்முகனைப்பண்ணித்தன்னுள்ளே
தொன்மைமயக்கியதோற்றியசூழல்கள்சிந்தித்தே. (ச)

சூழல்கள்சிந்திக்கின்மாயன்கழலன்றிச்சூழ்வரோ
ஆழப்பெரும்புனறன்னுளழுந்தியஞாலத்தைத்
தாழப்படாமற்றன்பாலொருகோட்டிடைத்தான்கொண்ட
கேழற்றிருவுருவாயிற்றுக்கேட்டுமுணர்ந்துமே. (ரு)

கேட்டுமுணர்ந்தவர்கேசவற்காளன்றியாவரோ
வாட்டமிலாவண்கைமாவலிவாதிக்கவாதிப்புண்
டீட்டங்கொடேவர்கள்சென்றிரந்தார்க்கிடர்நீக்கிய
கோட்டங்கைவாமனனாய்ச்செய்தகூத்துக்கள்கண்டுமே. (சா)

கண்டுந்தெளிந்துங்கற்றார்கண்ணற்காளன்றியாவரோ
வண்டுண்மலர்த்தொங்கன்மார்க்கண்டேயனுக்குவாழுநாள்
இண்டைச்சடைமுடியீசனுடன்கொண்டுசாச்செல்லக்
கொண்டங்குத்தன்னொடுங்கொண்டுடன்சென்றதுணர்ந்துமே. (எ)

செல்லவுணர்ந்தவர்செல்வன்றன்சீரன்றிக்கற்பரோ
எல்லையிலாதபெருந்தவத்தாற்பலசெய்மிறை
அல்லலமரரைச்செய்யுமிரணியனாகத்தை
மல்லலரியுருவாய்ச்செய்தமாயமறிந்துமே. (அ)

மாயமறிபவர்மாயவற்காளன்றியாவரோ
தாயஞ்செறுமொருநூற்றுவர்மங்கவோரைவர்க்காய்த்
தேசமறியவோர்சாரதியாய்ச்சென்றுசேனையை
நாசஞ்செய்திட்டு, நடந்தநல்வார்த்தையறிந்துமே. (௯)

வார்த்தையறிபவர்மாயவற்காளன்றியாவரோ
போர்த்தபிறப்பொடுநோயொடுமூப்பொடிறப்பிவை
பேர்த்துப், பெருந்துன்பம்வேரறநீக்கித்தன்றாளின்கீழ்ச்
சேர்த்து அவன்செய்யுஞ்சேமத்தையெண்ணித்தெளிவுற்றே. (௧0)

* தெளிவுற்றுவீவின்றிநின்றவர்க்கின்பக்கதிசெய்யும்
தெளிவுற்றகண்ணனைத்தென்குருகூர்ச்சடகோபன்சொல்
தெளிவுற்றவாயிரத்துள்ளிவைபத்தும்வல்லா, ரவர்
தெளிவுற்றசிந்தையர்பாமருமூவுலகத்துள்ளே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - ௬௫ - க்குப் பாசுரம் - எ௧௧.

---

கற்றோர்கருதும்விசயங்களுக்கெல்லாம்
பற்றாம்விபவகுணப்பண்புகளை—உற்றுணர்ந்து
மண்ணிலுள்ளோர்தம்மிழவைவாய்ந்துரைத்தமாறன்சொல்
பண்ணிலினிதானதமிழ்ப்பா. (௬௫)

---

## ௬ - ம் திருவாய்மொழி - பாமரு.

---

குறாநுபவம்பண்ணி அப்படிப்பட்ட ஈஶ்வரனை ப்ரத்யக்ஷீகரிக்கவேண்டுமென்றாசைப்பட்டுலபியாமையால் எப்போழ்து உம்மையடைவேனென்று ஆக்ருந்தநம்பண்ணினதை யருளிச்செய்கிறார்.

கலித்துறை-பண்-பாலையாழ்-தாளம்-ஏழொத்து.

தோடிராகம் - ரூபகதாளம்.

* பாமருமூவுலகும்படைத்தபற்பநாபாவோ
பாமருமூவுலகுமளந்தபற்பபாதாவோ
தாமரைக்கண்ணாவோதனியேன்றனியாளாவோ
தாமரைக்கையாவோவுன்னையென்றுகொல்சேர்வதுவே. (௧)

என்றுகொல்சேர்வதந்தோவரனான்முகனேத்துஞ், செய்ய
நின்திருப்பாதத்தையானிலநீரெரிகால், விண்ணுயிர்
என்றிவைதான்முதலாமுற்றுமாய்நின்றவெந்தாயோ
குன்றெடுத்தாநிரைமேய்த்தவைகாத்தவெங்கூத்தாவோ. (உ)

காத்தவெங்கூத்தாவோமலையேந்திக்கன்மாரிதன்னைப்
பூத்தண்டுழாய்முடியாய்புனைகொன்றையஞ்செஞ்சடையாய்
வாய்த்தவென்னான்முகனேவந்தென்னாருயிர்நீயானால்
ஏத்தருங்கீர்த்தியினாயுன்னையெங்குத்தலைப்பெய்வனே. (ங)

எங்குத்தலைப்பெய்வனானெழின்மூவுலகுநீயே
அங்குயர்முக்கட்பிரான்பிரமபெருமானவனீ
வெங்கதிர்வச்சிரக்கையிந்திரன்முதலாத்தெய்வநீ
கொங்கலர்தண்ணந்துழாய்முடியென்னுடைக்கோவலனே. (ச)

என்னுடைக்கோவலனேயென்பொல்லாக்கருமாணிக்கமே
உன்னுடையுந்திமலருலகமவைமூன்றும்பரந்
துன்னுடைச்சோதிவெள்ளத்தகம்பாலுன்னைக்கண்டுகொண்டிட்
டென்னுடையாருயிராரெங்ஙனேகொல்வந்தெய்துவரே. (ரு)

வந்தெய்துமாறறியேன்மல்குநீலச்சுடர்தழைப்பச்
செஞ்சுடர்ச்சோதிகள்பூத்தொருமாணிக்கஞ்சேர்வதுபோல்
அந்தரமேற்செம்பட்டோடடியுந்திகைமார்புகண்வாய்
செஞ்சுடர்ச்சோதிவிடவுறையென்திருமார்பனையே. (சு)

என்திருமார்பன்றன்னையென்மலைமகள்கூறன்றன்னை
என்றுமென்னாமகளையகம்பாற்கொண்டநான்முகனை
நின்றசசிபதியைநிலங்கீண்டெயின்மூன்றெரித்து
வென்றுபுலன்றுரந்தவிசும்பாளியைக்காணேனே. (எ)

ஆளியைக்காண்பரியாயரிகாணரியா, யரக்கர்
ஊளைவிட்டன்றிலங்கைகடந்துபிலம்புக்கொளிப்ப
மீளியம்புள்ளைக்கடாய்விறன்மாலியைக்கொன்று, பின்னும்
ஆளுயர்குன்றங்கள்செய்தடர்த்தானையுங்காண்டுங்கொலோ. (அ)

காண்டுங்கொலோநெஞ்சமேகடியவினையேமுயலும்
ஆண்டிறன்மீளிமொய்ம்பிலரக்கன்குலத்தைத்தடிந்து
மீண்டுமவன்றம்பிக்கேவிரிநீரிலங்கையருளி
ஆண்டுதன்சோதிபுக்கவமரரரியேற்றினையே. (கூ)

ஏற்றரும்வைகுந்தத்தையருளுநமக், காயர்குலத்
தீற்றிளம்பிள்ளையொன்றாய்ப்புக்குமாயங்களேயியற்றிக்
கூற்றியல்கஞ்சனைக்கொன்றைவர்க்காய்க்கொடுஞ்சேனைதடிந்
தாற்றன்மிக்கான்பெரியபரஞ்சோதிபுக்கவரியே. (க0)

* புக்கவரியுருவாயவுணனுடல்கீண்டுகந்த
சக்கரச்செல்வன்றன்னைக்குருகூர்ச்சடகோபன்சொன்ன
மிக்கவோராயிரத்துளிவைபத்தும்வல்லாரவரைத்
தொக்குப்பல்லாண்டிசைத்துக்கவரிசெய்வரோழையரே.　　(கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - சுசு - க்குப்பாசுரம் - எஉஅ.

பாமருவுவேதம்பகர்மால்குணங்களுடன்
நாமழகுவேண்டப்பாடாமவற்றைத்—தூமனத்தால்
நண்ணியவனைக்காணநன்குருகிக்கூப்பிட்ட
அண்ணலைநண்ணுரேழையர்.　　(சுசு)

## எ - ம் திருவாய்மொழி - ஏழையர்.

இவ்வண்ணம் ஆக்ருந்தநம்பண்ணிநிற்க ஈஶ்வரன் பாவநாப்ரத்யக்ஷம்பண்ணு கையில் அந்ததிவ்யாவயவஸௌந்தர்யங் தமக்குபாஹ்யஸம்ஶ்லேஷார்ஹ மில்லாமையால் வருத்தமாயிருக்கிறதென்று தாய்மாரோடுந் தோழி மார்களோடுஞ் சொன்னதாக அருளிச்செய்கிருர்.

கலித்துறை-பண்-பாலையாழ்-தாளம்-ஏழொத்து.

முகாரிராகம் - அடதாளம்.

* ஏழையராவியுண்ணுமிணைக்கூற்றங்கொலோவறியேன்
ஆழியங்கண்ணபிரான்றிருக்கண்கள்கொலோவறியேன்
சூழவுந்தாமரைநாண்மலர்போல்வந்துதோன்றுங்கண்டீர்
தோழியர்காளன்னைமீரென்செய்கேன்றுயராட்டியேனே.　　(க)

ஆட்டியுந்தூற்றியுநின்றன்னைமீரென்னைநீர்நலிந்தென்
மாட்டுயர்கற்பகத்தின்வல்லியோகொழுந்தோவறியேன்
ஈட்டியவெண்ணெயுண்டான்றிருமூக்கெனதாவியுள்ளே
மாட்டியவல்விளக்கின்சுடராய்நிற்கும்வாலியதே.　　(உ)

வாலியதோர்கனிகொல்வினையாட்டியேன்வல்வினைகொல்
கோலந்திரள்பவளக்கொழுந்துண்டங்கொலோவறியேன்
நீலநெடுமுகில்போற்றிருமேனியம்மான்றொண்டைவாய்
ஏலுந்திசையுளெல்லாம்வந்துதோன்றுமெனின்னுயிர்க்கே.　　(ங)

இன்னுயிர்க்கேழையர்மேல்வளையுமிணைநீலவிற்கொல்
மன்னியசீர்மதனன்கருப்புச்சிலைகொல், மதனன்
தன்னுயிர்த்தாதைக்கண்ணபெருமான்புருவமவையே
என்னுயிர்மேலனவாயடுகின்றனவென்றுநின்றே.　　(ச)

என்றுநின்றேதிகழுஞ்செய்யவீன்சுடர்வெண்மின்னுக்கொல்
அன்றியென்னுவியடுமணிமுத்தங்கொலோவறியேன்
குன்றமெடுத்தபிரான்முறுவலெனதாவியடும்
ஒன்றுமறிகின்றிலேனன்னைமீரொனக்குய்விடமே. (ரு)

உய்விடமேழையர்க்குமசுரர்க்குமரக்கர்கட்கும்
எவ்விடமென்றிலங்கிமகரந்தழைக்குந்தளிர்கொல்
பைவிடப்பாம்பணையான்றிருக்குண்டலக்காதுகளே
கைவிடலொன்றுமின்றியடுகின்றனகாண்மின்களே. (சு)

காண்மின்களன்னையர்காளென்றுகாட்டும்வகையறியேன்
நாண்மன்னுவெண்டிங்கள்கொனயந்தார்கட்குநச்சிலைகொல்
சேண்மன்னுநாற்றடந்தோட்பெருமான்றன்றிருநுதலே
கோண்மன்னியாவியடுங்கொடியேனுயிர்கோளிழைத்தே. (எ)

கோளிழைத்தாமரையுங்கொடியும்பவளமும்வில்லும்
கோளிழைத்தண்முத்தமுந்தளிருங்குளிர்வான்பிறையும்
கோளிழையாவுடையகொழுஞ்சோதிவட்டங்கொல்கண்ணன்
கோளிழைவாண்முகமாய்கொடியேனுயிர்கொள்கின்றதே. (அ)

கொள்கின்றகோளிருளைச்சுகிர்ந்திட்டகொழுஞ்சுருளின்
உள்கொண்டநீலநன்னூற்றழைகொலன்றுமாயன்குழல்
விள்கின்றபூந்தண்டுழாய்விரைநாறவந்தென்னுயிரைக்
கள்கின்றவாறறியீரன்னைமீர்கழறுகிற்றிரோ. (கூ)

நிற்றிமுற்றத்துளென்றுநெரித்தகையரா, யென்னைநீர்
சுற்றியுஞ்சூழ்ந்துமைவைதிர்சுடர்ச்சோதிமணிநிறமாய்
முற்றவிம்மூவுலகும்விரிகின்றசுடர்முடிக்கே
ஒற்றிமைக்கொண்டதுள்ளமன்னைமீர்நசையென்னுங்கட்கே. (க0)

* கட்கரியபிரமன்சிவனிந்திரனென்றிவர்க்கும்
கட்கரியகண்ணனைக்குருகூர்ச்சடகோபன்சொன்ன
உட்குடையாயிரத்துளிவையுமொருபத்தும்வல்லார்
உட்குடைவானவரோடுடனாயென்றுமாயாரோ. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - சுஎ - க்குப் பாசுரம் - எஙக.

---

ஏழையர்கணெஞ்சையிளகுவிக்குமாலழகு
சூழவந்துதோன்றித்துயர்விளைக்க—ஆழுமனம்
தன்னுடனேயவ்வழகைத்தானுரைத்தமாறன்பால்
மன்னுமவர்தீவினைபோமாய்ந்து. (சுஎ)

## அ - ம் திருவாய்மொழி - மாயா.

அவ்வாறு உபத்ரவப்படுகிற வென்னை இந்த லீலாவிபூதியிலே
நிறுத்தினது எப்படிப்பட்ட ஆச்சர்யமோவென்ன ஒன்றுகேட்க வொன்று
வேறேசொல்லி பரிஹரிப்பாரைப்போலே என்ப்ரகார மிவ்வளவோவென்று
தன்னுடைய விசித்ர விபூதியெல்லாங்காட்ட வதைக்கண்
டாச்சர்யப்பட்டதை யருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம்-பண்-பாலையாழ்-தாளம்-ஏழொத்து.

பந்துவராளிராகம் - ரூபகதாளம்.

* மாயாவாமனனேமதுசூதாநீயருளாய்
தீயாய்நீராய்நிலனாய்விசும்பாய்க்காலாய்த்
தாயாய்த்தந்தையாய்மக்களாய்மற்றுமாய்முற்றுமாய்
நீயாய்நீநின்றவாறிவையென்னநியாயங்களே. (க)

அங்கண்மலர்த்தண்டுழாய்முடியச்சுதனேயருளாய்
திங்களுஞாயிறுமாய்ச்செழும்பல்சுடராயிருளாய்ப்
பொங்குபொழிமழையாய்ப்புகழாய்ப்பழியாய்ப்பின்னுநீ
வெங்கண்வெங்கூற்றமுமாயிவையென்னவிசித்திரமே. (உ)

சித்திரத்தேர்வலவாதிருச்சக்கரத்தாயருளாய்
எத்தனையோருகமுமவையாயவற்றுள்ளியலும்
ஒத்தவொண்பல்பொருள்களுலப்பிலனவாய்வியவாய்
வித்தகத்தாய்நிற்றிநீயிவையென்னவிடமங்களே. (௩)

கள்ளவிழ்தாமரைக்கட்கண்ணனேயெனக்கொன்றருளாய்
உள்ளதுமில்லதுமாயுலப்பில்லனவாய்வியவாய்
வெள்ளத்தடங்கடலுள்விடநாகணைமேன்மருவி
உள்ளப்பல்யோகுசெய்தியிவையென்னவுபாயங்களே. (௪)

பாசங்கணீக்கியென்னையுனக்கேயறக்கொண்டிட்டுநீ
வாசமலர்த்தண்டுழாய்முடிமாயவனேயருளாய்
காயமுஞ்சீவனுமாய்க்கழிவாய்ப்பிறப்பாய்ப்பின்னுநீ
மாயங்கள்செய்துவைத்தியிவையென்னமயக்குக்களே. (ரு)

மயக்காவாமனனேமதியாம்வண்ணமொன்றருளாய்
அயர்ப்பாய்த்தேற்றமுமாயழலாய்க்குளிராய்வியவாய்
வியப்பாய்வென்றிகளாய்வினையாய்ப்பயனாய்ப்பின்னுநீ
துயக்காநீநின்றவாறிவையென்னதுயரங்களே. (சு)

துயரங்கள்செய்யுங்கண்ணாசுடர்நீண்முடியாயருளாய்
துயரஞ்செய்மானங்களாய்மதனாகியுகவைகளாய்த்
துயரஞ்செய்காமங்களாய்த்துலையாய்நிலையாய்நடையாய்த்
துயரங்கள்செய்துவைத்தியிவையென்னசுண்டாயங்களே. (எ)

என்னசுண்டாயங்களானின்றிட்டாயென்னையாளுங்கண்ணு
இன்னதோர்தன்மையென்றுன்னையாவர்க்குந்தேற்றரியை
முன்னியமூவுலகுமவையாயவற்றைப்படைத்துப்
பின்னுமுள்ளாய்ப்புறத்தாயிவையென்னவியற்கைகளே. (அ)

என்னவியற்கைகளாலெங்ஙனேநின்றிட்டாயென்கண்ணு
துன்னுகரசரணமுதலாகவெல்லாவுறுப்பும்
உன்னுசுவையொளியூறொலிநாற்றமுற்றுநீயே
உன்னையுணரவுறிலுலப்பில்லைநுணுக்கங்களே. (௯)

இல்லைநுணுக்கங்களேயிதனிற்பிறிதென்னும்வண்ணம்
தொல்லைநன்னூலிற்சொன்னவுருவுமருவுநீயே
அல்லித்துழாயலங்கலணிமார்பவென்னச்சுதனே
வல்லதோர்வண்ணஞ்சொன்னாலதுவேயுனக்காம்வண்ணமே. (க0)

* ஆம்வண்ணமின்னதென்றென்றறிவதரியவரியை
ஆம்வண்ணத்தாற்குருகூர்ச்சடகோபனறிந்துரைத்த
வாம்வண்ணவொண்டமிழ்களிவையாயிரத்துளிப்பத்தும்
ஆம்வண்ணத்தாலுரைப்பாரமைந்தார்தமக்கென்றைக்குமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ_ திருவாய்மொழி - ௯அ - க்குப் பாசுரம் - எ௫0.

---

மாயாமறன்னைவைத்தவைசித்திரியாலே
தீயாவிசித்திரமரிச்சேர்பொருளோ—டாயால்
வாய்ந்துநிற்குமாயன்வளமுறைத்தமாறனைநாம்
ஏய்ந்துரைத்துவாழுநாளென்று. (௯அ)

---

## ௬-ம் திருவாய்மொழி-என்றைக்கும்.

அஸஹ்யமானலீலாவிபூதியிலென்னை யேன்வைத்தாயென்று கேட்க ஈஶ்வரன் எனக்குமென்னடியார்க்கும் ஶ்ராவ்யமான ப்ரபந்தம்பண்ணிவைக்க வேண்டுமென வைத்தோமென்றுசொல்ல அந்தவுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமேது சொல்லப்போகிறேனென்று தமோறினதை யருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம் - பண்-நட்டபாஷை-தாளம்-ஒன்பதொத்து.

அராபிராகம் - ஆதிதாளம்.

* என்றைக்குமென்னையுய்யக்கொண்டுபோகிய
அன்றைக்கன்றென்னைத்தன்னாக்கியென்னாற்றன்னை
இன்றமிழ்பாடியவீசனையாதியாய்
நின்றவென்சோதியை யென்சொல்லிநிற்பனோ (க)

என்சொல்லிநிற்பனென்னின்னுயிரின்றென்றாய்
என்சொல்லால்யான்சொன்னவின்கவியென்பித்து
தன்சொல்லாற்றான்றன்னைக்கீர்த்தித்தமாய, னென்
முன்சொல்லுமூவுருவாமுதல்வனே. (உ)

ஆமுதல்வனிவனென்றுதற்றேற்றி, யென்
நாமுதல்வந்துபுகுந்துநல்லின்கவி
தூமுதற்பத்தர்க்குத்தான்றன்னைச்சொன்ன, வென்
வாய்முதலப்பனையென்றுமறப்பனே. (ங)

அப்பனையென்றுமறப்பனென்னாகியே
தப்புதலின்றித்தனைக்கவிதான்சொல்லி
ஒப்பிலாத்தீவினையேனையுய்யக்கொண்டு
செப்பமேசெய்துதிரிகின்றசீர்கண்டே. (ச)

சீர்கண்டுகொண்டுதிருந்துநல்லின்கவி
நேர்படயான்சொல்லுநீர்மையிலாமையில்
ஏர்விலாவென்னைத்தன்னாக்கியென்னாற்றன்னைப்
பார்பரவின்கவிபாடும்பரமரே. (ரு)

இன்கவிபாடும்பரமகவிகளால்
தன்கவிதான்றன்னைப்பாடுவியாதின்று
நன்குவந்தென்னுடனாக்கியென்னாற்றன்னை
வன்கவிபாடுமென்வைகுந்தநாதனே. (சா)

வைகுந்தநாதனென்வல்வினைமாய்ந்தறச்
செய்குந்தன்றன்னையென்னாக்கியென்னாற்றன்னை
வைகுந்தனாகப்புகழவண்டீங்கவி
செய்குந்தன்றன்னையெந்நாள்சிந்தித்தார்வனே. (எ)

ஆர்வனோவாழியங்கையெம்பிரான்புகழ்
பார்விண்ணீர்முற்றுங்கலந்துபருகிலும்
ஏர்விலாவென்னைத்தன்னாக்கியென்னாற்றன்னைச்
சீர்பெறவின்கவிசொன்னதிறத்துக்கே. (அ)

திறத்துக்கேதுப்புரவாந்திருமாலின்சீர்
இறப்பெதிர்காலம்பருகிலுமார்வனோ
மறப்பிலாவென்னைத்தன்னாக்கியென்னாற்றன்னை
உறப்பலவின்கவிசொன்னவுதவிக்கே. (கூ)

உதவிக்கைம்மாறென்னுயிரென்னவுற்றெண்ணில்
அதுவுமற்றாங்கவன்றன்னதென்னாற்றன்னைப்
பதவியவின்கவிபாடியவப்பனுக்
கெதுவுமொன்றுமில்லைசெய்வதிங்குமங்கே. (க0)

* இங்குமங்குந்திருமாலன்றியின்மைகண்டு
அங்ஙனேவண்குருகூர்ச்சடகோபன்
இங்ஙனேசொன்னவோராயிரத்திப்பத்தும்
எங்ஙனேசொல்லிலுமின்பம்பயக்குமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - சுகூ - க்குப் பாசுரம் - எசுக.

---

என்றனைநீயிங்குவைத்ததேதுக்கெனமாலும்
என்றனக்குமென்றமர்க்குமின்பமதாம்—நன்றாகவி
பாடவெனக்கைம்மாறிலாமைபகர்மாறன்
பாடணைவார்க்குண்டாமின்பம். (சுகூ)

---

## க0 - ம் திருவாய்மொழி - இன்பம்.

இவ்வண்ணம் என்னால்ப்ரபந்தஞ்செய்வித்த ஸர்வேஶ்வரனெழுந்தருளியிருக்கிற திருவாறன்விளையாகிற திருப்பதிக்குப்போய் ப்ரபந்தம்விண்ணப்பஞ்செய்யவேண்டுமென்று அபேக்ஷித்ததை அருளிச்செய்கிறார்.

ஆசிரியவிருத்தம்-பண்-பழம்பஞ்சுரம்-தாளம்-ஏழொத்து.
கலியாணிராகம் - அடதாளம்.

*இன்பம்பயக்கவெழின்மலர்மாதருந்தானு, மிவ்வேழுலகை
இன்பம்பயக்கவினிதுடன்வீற்றிருந்தாள்கின்றவெங்கள்பிரான்
அன்புற்றமர்ந்துறைகின்றவணிபொழில்சூழ்திருவாறன்விளை
அன்புற்றமர்ந்துவலஞ்செய்துகைதொழுநாள்களுமாகுங்கொலோ.

ஆகுங்கொலையமொன்றின்றியகலிடமுற்றவுமீரடியே
ஆகும்பரிசுநிமிர்ந்ததிருக்குறளப்பனமர்ந்துறையும்
மாகந்திகழ்கொடிமாடங்கணீடுமதிட்டிருவாறன்விளை
மாகந்தநீர்கொண்டுதூவிவலஞ்செய்துகைதொழக்கூடுங்கொலோ. உ

கூடுங்கொல்வைகலுங்கோவிந்தனைமதுசூதனைக்கோளரியை
ஆடுபறவைமிசைக்கண்டுகைதொழுதன்றியவனுறையும்
பாடும்பெரும்புகழ்நான்மறைவேள்வியைந்தாறங்கம்பன்னினர்வாழ்
நீடும்பொழிற்றிருவாறன்விளைதொழவாய்க்குங்கொனிச்சலுமே. (ந)

வாய்க்குங்கொனிச்சலுமெப்பொழுதுமனத்தீங்குநினைக்கப்பெற
வாய்க்குங்கரும்புமபெருஞ்செந்நெலும்வயல்சூழ்திருவாறன்விளை
வாய்க்கும்பெரும்புகழ்மூவுலகீசன்வடமதுரைப்பிறந்த
வாய்க்குமணி[illegible] (ச)

மலரடிப்போதுகளென்னெஞ்சத்தெப்பொழுதுமிருத்திவணங்கப்
பலரடியார்முன்பருளியபாம்பணையப்பனமர்ந்துறையும்
மலரின்மணிநெடுமாடங்கணீடுமதிட்டிருவாறன்விளை, யுலகம்
மலிபுகழ்பாடநம்மேல்வினையொன்றுமில்லாகெடுமே. (ரு)

ஒன்றுமில்லாகெடுமுற்றவுந்தீவினையுள்ளித்தொழுமின்றொண்டீர்
அன்றங்கமர்வென்றுருப்பிணிநங்கையணிநெடுந்தோள்புணர்ந்தான்
என்றுமெப்போதுமென்னெஞ்சந்துதிப்பவுள்ளேயிருக்கின்றபிரான்
நின்றவணிதிருவாறன்விளையென்னுநீணகரமதுவே. (சு)

நீணகரமதுவேமலர்ச்சோலைகள்சூழ்திருவாறன்விளை
நீணகரத்துறைகின்றபிரானெடுமால்கண்ணன்விண்ணவர்கோன்
வாணபுரம்புக்குமுக்கட்பிரானைத்தொலையவெம்போர்கள்செய்து
வாணனையாயிரந்தோடுணித்தான்சரணன்றிமற்றொன்றிலமே. (எ)

அன்றிமற்றொன்றிலநின்சரணேயென்றகலிரும்பொய்கையின்வாய்
நின்றுதன்னீள்கழலேத்தியவானையின்னெஞ்சிடர்தீர்த்தபிரான்
சென்றங்கினிதுறைகின்றசெழும்பொழில்சூழ்திருவாறன்விளை
ஒன்றிவலஞ்செய்யவொன்றுமோதீவினையுள்ளத்தின்சார்வல்லவே.(அ)

தீவினையுள்ளத்தின்சார்வல்லவாகித்தெளிவிசும்பேறலுற்றால்
நாவினுள்ளுமுள்ளத்துள்ளுமமைந்ததொழிலினுள்ளுநவின்று
யாவரும்வந்துவணங்கும்பொழிற்றிருவாறன்விளையதனை
மேவிவலஞ்செய்துகைதொழக்கூடுங்கொலென்னுமென்சிந்தனையே. (௯)

சிந்தைமற்றொன்றின்றிறத்ததல்லாத்தன்மைதேவபிரானறியும்
சிந்தையினாற்செய்வதானறியாதனமாயங்களொன்றுமில்லைச்
சிந்தையினாற்சொல்லினாற்செய்கையாலிலத்தேவர்குழுவணங்கும்
சிந்தைமகிழ்திருவாறன்விளையுறைதீர்த்தனுக்கற்றபின்னே. (க0)

* தீர்த்தனுக்கற்றபின்மற்றோர்சரணில்லையென்றெண்ணித்தீர்த்தனுக்கே
தீர்த்தமனத்தனனாகிச்செழுங்குருகூர்ச்சடகோபன்சொன்ன
தீர்த்தங்களாயிரத்துள்ளிவைபத்தும்வல்லார்களைத், தேவர்வைகல்
தீர்த்தங்களேயென்றுபூசித்துநல்கியுரைப்பர்தந்தேவியர்க்கே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஏழாம்பத்து முற்றிற்று.

ஆ பத்து-எ-ல் - திருவாய்மொழி - எ0 - க்குப் பாசுரம் - எஎஉ.

---

இன்பக்கவிபாடுவித்தோனையிந்திரையோ
டன்புற்றுவாழ்திருவாறன்விளையில்—தன்பமறக்
கண்டிமைசெய்யக்கருதியமாறன்கழலே
திண்டிறலார்யாவர்க்குந்தேவு. (எ0)

## எட்டாம்பத்து.

### க - ம் திருவாய்மொழி - தேவிமார்.

.........................

ஶக்திஹாநியாலே அந்தத் திருப்பதிக்குப் போகமாட்டாமல் நடுவே நின்று புருஷகார பூதையான பிராட்டி கிட்டவிருக்கவும் ஆஶ்ரிதபாரதந்த்ர்யாதிகுணங்க ளிருக்கையாலுந் தமக்குப் பலஸித்தியான தில்லையென்று குணங்கள்மேலே அதிசங்கைபண்ணுகையில் ஸர்வேஶ்வரன் விஶ்வாஸஹேதுவான கல்யாணகுணங்களைக் காட்டுதலால் அந்த அதிசங்கைதீர்ந்து ப்ரீதரானதை யருளிச்செய்கிறார்.

எழுசீராசிரியவிருத்தம் - பண் - புறநீர்மை - தாளம்-ஒன்பதொத்து.

பைரவிராகம் - ஆதிதாளம்.

* தேவிமாராவார்திருமகள்பூமியேவமற்றமரராட்செய்வார்
மேவியவுலகமூன்றவையாட்சிவேண்டுவேண்டுருவநின் னுருவம்
பாவியேன்றன்னையடுகின்றகமலக்கண்ணதோர்பவளவாய்மணியே
ஆவியேயமுதேயலைகடல்கடைந்தவப்பனேகாணுமாறருளாய். (க)

காணுமாறருளாயென்றென்றேகலங்கிக்கண்ணநீரலமரவினையேன்
பேணுமாறெல்லாம்பேணிநின்பெயரேபிதற்றுமாறருளெனக்கந்தோ
காணுமாறருளாய்காகுத்தாகண்ணனேதொண்டனேன்கற்பகக்கனியே
பேணுவாரமுதேபெரியதண்புனல்சூழ்பெருநிலமெடுத்தபேராளா. (உ)

எடுத்தபேராளனந்தகோபன்றனின்னுயிர்ச்சிறுவனே, யசோதைக்
கடுத்தபேரின்பக்குலவிளங்களிறேயடியனேன்பெரியவம்மானே
கடுத்தபோரவுணனுடலிருபிளவாக்கையுகிராண்டவெங்கடலே
அடுத்ததோருருவாயின்றுநீவாராயெங்ஙனந்தேறுவருமரோ. (ந)

உமருகந்துகந்தவுருவநின்னுருவமாகியுன்றனக்கன்பரானார்
அவருகந்தமர்ந்தசெய்கையுன்மாயையறிவொன்றுஞ்சங்கிப்பன்வினையேன்
அமரதுபண்ணியகலிடம்புடைசூழடுபடையவித்தவம்மானே
அமரர்தமமுதேயசுரர்கணஞ்சேயென்னுடையாருயிரேயோ. (ச)

ஆருயிரேயோவகலிடமுழுதும்படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்த
பேருயிரேயோபெரியநீர்படைத்தங்குறைந்ததுகடைந்தடைத்துடைத்த
சீருயிரேயோமனிசர்க்குத்தேவர்போலத்தேவர்க்குந்தேவாவோ
ஒருயிரேயோவுலகங்கட்கெல்லாமுன்னைநானெங்குவந்துறுகோ. (ரு)

எங்குவந்துறுகோவென்னையாள்வானேயேழுலகங்களுநீயே
அங்கவர்க்கமைத்ததெய்வமுநீயேயவற்றவைகருமமுநீயே
பொங்கியபுறம்பாற்பொருளுளவேலுமவையுமோநீயின்னேயானால்
மங்கியவருவாநேர்ப்பமுநீயேவான்புலனிறந்ததுநீயே. (சா)

இறந்ததுநீயேயெதிர்ந்ததுநீயேநிகழ்வதோநீயின்னேயானால்
சிறந்தநின்றன்மையதுவிதுவுதுவென்றறிவொன்றுஞ்சங்கிப்பன்வினையேன்
கறந்தபானெய்யேநெய்யினின்சுவையேகடலினுளமுதமே, யமுதில்
பிறந்தவின்சுவையேசுவையதுபயனேபின்னைதோண்மணந்தபேராயா.

மணந்தபேராயாமாயத்தான்முழுதும்வல்வினையேனையீர்கின்ற
குணங்களையுடையாயசுரர்வன்கையர்கூற்றமேகொடியபுள்ளுயர்த்தாய்
பணங்களாயிரமுடையபைந்நாகப்பள்ளியாய்பாற்கடற்சேர்ப்பா
வணங்குமாறறியேன்மனமும்வாசகமுஞ்செய்கையும்யானுநீதானே.

யானுநீதானேயாவதோமெய்யேயருநரகவையுநீயானால்
வானுயரின்பமெய்திலென்மற்றைநரகமேயெய்திலென்னெனிலும்
யானுநீதானாய்த்தெளிதொறுநன்றுமஞ்சுவனரகநானடைதல்
வானுயரின்பமன்னிவீற்றிருந்தாயருளுநின்றாள்களையெனக்கே. (கூ)

தாள்களையெனக்கேதலைத்தலைச்சிறப்பத்தந்தபேருதவிக்கைம்மாறாத்
தோள்களையாரத்தழுவியென்னுயிரையறவிலைசெய்தனன்சோதீ
தோள்களாயிரத்தாய்முடிகளாயிரத்தாய்துணைமலர்க்கண்களாயிரத்தாய்
தாள்களாயிரத்தாய்பேர்களாயிரத்தாய்தமியனேன்பெரியவப்பனே.

* பெரியவப்பனைப்பிரமனப்பனையுருத்திரனப்பனை, முனிவர்க்
குரியவப்பனையமரரப்பனையுலகுக்கோர்தனியப்பன்றன்னைப்
பெரியவண்குருகூர்வண்சடகோபன்பேணினவாயிரத்துள்ளும்
உரியசொன்மாலையிவையும்பத்திவற்றாலுய்யலாந்தொண்டீர்நங்கட்கே.

ஆழ்வார்திருவடிகளேஶரணம். - ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - எக - க்குப் பாசுரம் - எஅரு.

---

தேவனுறைபதியிற்சேரப்பெருமையால்
மேவுமடியார்வசனுமெய்ந்நிலையும்—யாவையுந்தான்
ஆநிலையுஞ்சங்கித்தவைதெளிந்தமாறன்பால்
மாநிலத்தீர்நங்கண்மனம். (எக)

---

## உ-ம் திருவாய்மொழி - நங்கள்.

உபாயபூதனான ஈஸ்வரன்வந்து முகங்காட்டாமலிருக்கைக்கு ஹேது ஈஸ்வர
னறியும்படி ஸம்ஸாரஸம்பந்த முண்டாயிருக்குமென்று சங்கித்துத் தமக்கு
ஸம்ஸாரம் நைராச்யமென்று நாயகி ஸகி தாய்களைக்குறித்து உங்களோடு
ஸம்பந்தமில்லையென்று சொன்னதாக வருளிச்செய்கிறார்.

எண்சீராசிரியவிருத்தம் - பண் - கொல்லி - தாளம் - ஏழொத்து.

செஞ்சுருட்டிராகம் - அடதாளம்.

* நங்கள்வரிவளையாயங்காளோநம்முடையேதிலர்முன்புநாணி
நுங்கட்கியானொன்றுரைக்குமாற்றநோக்குகின்றேனெங்குங்காணமாட்டேன்
சங்கஞ்சரிந்தனசாயிழந்தேன்றடமுலைபொன்னிறமாய்த்தளர்ந்தேன்
வெங்கட்பறவையின்பாகனெங்கோன்வேங்கடவாணனைவேண்டிச்சென்றே.

வேண்டிச்சென்றொன்றுபெறுகிற்பாரிலென்னுடைத்தோழியர்நுங்கட்கேலும்
ஈண்டிதுரைக்கும்படியையந்தோகாண்கின்றிலேனிடராட்டியேனான்
காண்டகுதாமரைக்கண்ணன்கள்வன்விண்ணவர்கோனங்கள்கோனைக்கண்டால்
ஈண்டியசங்குநிறைவுங்கொள்வானெத்தனைகாலமிளைக்கின்றேனே.()

காலமிளைக்கிலல்லால்வினையேனானிளைக்கின்றிலன்கண்டுகொண்மின்
ஞாலமறியப்பழிசுமந்தேனன்னுதலீரினிநாணித்தானென்
நீலமர்நெடுஞ்சோதிசூழ்ந்தநீண்டமுகில்வண்ணன்கண்ணன்கொண்ட
கோலவளையொடுமாமைகொள்வானெத்தனைகாலமுங்கூடச்சென்றே.

கூடச்சென்றேனினியென்கொடுக்கேன்கோல்வளைநெஞ்சத்தொடக்கமெல்லாம்
பாடற்றொழியவிழந்துவைகல்பல்வளையார்முன்பரிசழிந்தேன்
மாடக்கொடிமதிட்டென்குளந்தைவண்குடபானின்றமாயக்கூத்தன்
ஆடற்பறவையுயர்ந்தவெல்போராழிவலவனையாதரித்தே. (ச)

ஆழிவலவனையாதரிப்புமாங்கவனம்மில்வரவுமெல்லாம்
தோழியர்காணம்முடையமேதான்சொல்லுவதோவிங்கரியதுதான்
ஊழிதோறூழியொருவனாகநன்குணர்வார்க்குமுணரலாகாச்
சூழலுடையசுடர்கொளாதித்தொல்லையஞ்சோதிநினைக்குங்காலே.()

தொல்லையஞ்சோதிநினைக்குங்காலென்சொல்லளவன்றிமையோர்தமக்கும்
எல்லையிலாதனகூழ்ப்புச்செய்யுமத்திறநிற்கவெம்மாமைகொண்டான்
அல்லிமலர்த்தண்டுழாயுந்தாரானார்க்கிடுகோவினிப்பூசல்சொல்லீர்
வல்லிவளவயல்சூழ்குடந்தைமாமலர்க்கண்வளர்கின்றமாலே. (சு)

மாலரிகேசவனாரணன்சீமாதவன்கோவிந்தன்வைகுந்தனென்றென்
றோலமிட்டென்னைப்பண்ணிவிட்டிட்டொன்றுமுருவுஞ்சுவடுங்காட்டான்
ஏலமலர்க்குழலன்னைமீர்காளென்னுடைத்தோழியர்காளென்செய்கேன்
காலம்பலசென்றுங்காண்பதாணையுங்களோடெங்களிடையில்லையே.

இடையில்லையான்வளர்த்தகிளிகாள்பூவைகள்காள்குயில்காண்மயில்காள்
உடையநம்மாமையுஞ்சங்குநெஞ்சுமொன்றுமொழியவொட்டாதுகொண்டான்
அடையும்வைகுந்தமும்பாற்கடலுமஞ்சனவெற்புமவைநணிய
கடையறப்பாசங்கள்விட்டபின்னையன்றியவனவைகாண்கொடானே.

காண்கொடுப்பானல்லனார்க்குந்தன்னைக்கைசெயற்பாலதோர்மாயந்தன்னால்
மாண்குறட்கோலவடிவுகாட்டிமண்ணும்விண்ணுநிறையமலர்ந்த
சேண்சுடர்த்தோள்கள்பலதழைத்ததேவபிராற்கென்னிறைவனோடு
நாண்கொடுத்தேனினியென்கொடுக்கேனென்னுடைநன்னுதனங்கைமீர்காள்!

என்னுடைநன்னுதனங்கைமீர்காள்யானினிச்செய்வதெனென்னெஞ்சென்னை
நின்னிடையேனல்லேனென்றுநீங்கிநேமியுஞ்சங்குமிருகைக்கொண்டு
பன்னெடுஞ்சூழ்சுடர்நாயிற்றோடுபான்மதியேந்தியோர்கோலநீல
நன்னெடுங்குன்றம்வருவதொப்பானாண்மலர்ப்பாதமடைந்ததுவே.

* பாதமடைவதன்பாசத்தாலேமற்றவன்பாசங்கண் முற்றவிட்டுக்
கோதில்புகழ்கண்ணன்றன்னடிமேல்வண்குருகூர்ச்சடகோபன்சொன்ன
தீதிலந்தாதியோராயிரத்துள்ளிவையுமோர்பத்திசையோடும்வல்லார்
யாதுமோர்தீதிலராகியங்குமங்குமெல்லாமமைவார்கடாமே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - ௭௨ - க்குப் பாசுரம் - ௭௬௪.

நங்கருத்தைநன்குகநாடிநிற்குமாலறிய
இங்கிவற்றிலாசையெமக்குளதென்—சங்கையினால்
தன்னுயிரின்மற்றினாசைதாநொழிந்தமாறன்றன்
அன்நிலையையாய்ந்துரைத்தானங்கு. (௭௨)

## ௩ - ம் திருவாய்மொழி- அங்கும்.

ஸம்ஸாரஸம்பந்த மில்லையென்றுசொல்ல ஈஶ்வரன் மாநஸ ஸாக்ஷாத்காரம்
பண்ண அவன்ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதிகளைப் பார்த்துத் தாம்பட்ட
துக்கமும்மறந்து இப்படிப்பட்ட திவ்யமங்கள விக்ரஹத்தோடே
யவதரித்த ஸர்வேஶ்வரனுக்கு மங்களாஶாஸநபர ரொருவரு
மில்லையென்றுந் தாமொருவருமே மங்களாஶாஸநம்
பண்ணுகைக்கு இருந்தோமென்றும் இப்படிபயப்படு
கையில் ஈஶ்வரன்தமக்குமங்களாஶாஸநபரராய்
நித்யமுக்தரிருக்க முமுக்ஷுக்களிருக்கநீரென்
பயப்படுகிறீரென்றுசொல்ல பயந்தீர்ந்
தமை யருளிச்செய்கிறார்.

கலித்துறை-பண்-நட்டபாஷை-தாளம்-ஏழொத்து.

வராளிராகம் - ரூபகதாளம்.

* அங்குமிங்கும்வானவர்தானவர், யாவரும்
எங்குமினையையென் றுணையறியகிலாதலற்றி
அங்கஞ்சேரும்பூமகண்மண்மகளாய்மகள்
சங்குசக்கரக்கையவனென்பர்சரணமே. (௧)

சரணமாகியநான்மறைநூல்களுஞ்சாராதே
மரணந்தோற்றம்வான்பிணிமூப்பென்றிவைமாய்த்தோம்
கரணப்பல்படைபற்றறவோடுங்கனலாழி
அரணத்திண்படையேந்தியவீசற்காளாயே. (௨)

ஆளுமாளாராழியுஞ்சங்குஞ்சுமப்பார்தாம்
வாளும்வில்லுங்கொண்டுபின்செல்வார்மற்றில்லை
தாளுந்தோளுங்கைகளையாரத்தொழக்காணேன்
நாளுநாளுநாடுவனடியேன்ஞாலத்தே. (௩)

ஞாலம்போனகம்பற்றியோர்முற்றுருவாகி
ஆலம்பேரிலையன்னவசஞ்செய்யுமம்மானே
காலம்பேர்வதோர்காரிருளூழியொத்துளதா, லுன்
கோலங்காரொழில்காணலுற்றழுங்கொடியேற்கே. (௪)

கொடியார்மாடக்கோளூரகத்தும்புளிங்குடியும்
மடியாதின்னேநீதுயின்மேவிமகிழ்ந்ததுதான்
அடியாரல்லறவிர்த்தவசைவோவன்றேலிப்
படிதானீண்டுதாவியவசைவோபணியாயே. (௫)

பணியாவமரர்பணிவும்பண்புந்தாமேயாம்
அணியாராழியுஞ்சங்கமுமேந்துமவர்காண்மின்
தணியாவெங்நோயுலகிற்றவிர்ப்பான், றிருநீல
மணியார்மேனியோடென்மனஞ்சூழவருவாரே. (௬)

வருவார்செல்வார்வண்பரிசாரத்திருந்த, வென்
திருவாழ்மார்பற்கென்றிறஞ்சொல்லார்செய்வதென்
உருவார்சக்கரஞ்சங்குஞ்சுமந்திங்கும்மோ
டொருபாடுழல்வானோரடியானுமுளனென்றே. (௭)

என்றேயென்னையுன்னேரார்கோலத்திருந்தடிக்கீழ்
நின்றேயாட்செய்யநீகொண்டருளநினைப்பதுதான்
குன்றேழ்பாரேழ்சூழ்கடன்ஞாலமுழுவேழும்
நின்றேதாவியநீள்கழலாழித்திருமாலே. (௮)

திருமாலான்முகன்செஞ்சடையானென்றிவர்களெம்
பெருமானன்மையையாரறிகிற்பார்பேசியென்
ஒருமாமுதல்வாவூழிப்பிரானென்னையாளுடைக்
கருமாமேனியனென்பனென்காதல்கலக்கவே. (௯)

கலக்கமில்லாநற்றவமுனிவர்கரைகண்டோர்
துளக்கமில்லாவானவரெல்லாந்தொழுவார்கள்
மலக்கமெய்தமாகடறன்னைக்கடைந்தானை
உலக்கநாம்புகழ்கிற்பதென்செய்வதுரையீரோ. (௧௦)

* உரையாவெங்நோய்தவிரவருணீண்முடியானை
வரையார்மாடமன்னுகுருகூர்ச்சடகோபன்
உரையேய்சொற்றொடையோராயிரத்துளிப்பத்தும்
நிரையேவல்லார்நீடுலகத்திற்பிறவாரே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ திருவாய்மொழி - எ௩ - க்குப் பாசுரம் - அ0௫.

---

அங்கமரர்பேணவவர்நடுவேவாழ்திருமாற்
கிங்கோர்பரிவரிலையென்றஞ்ச—எங்கும்
பரிவருளரென்னப்பயந்தீர்ந்தமாறன்
[illegible] (எ௩)

## ச-ம் திருவாய்மொழி - வார்கடா.

ஆஸ்தாந பயசங்கைபண்ணுகிற ப்ரேமஸ்வபாவமுடைய ஆழ்வார்க்கு இன்னம்
பயமெங்கே வருமோவென்று விசாரித்து ஈஶ்வரன் தன்வீர்யஶக்த்யாதி
குணங்களையும் மங்களாஶாஸநபரஸம்ருத்தியையுங் காட்டித்
திருச்செங்குன்றூரில் ஸ்வாமிபயம்போக்கினதை
அருளிச்செய்கிறார்.

எழுசீராசிரியவிருத்தம்-பண்-புறநீர்மை-தாளம்-ஒன்பதொத்து.

அடாணாராகம் - ஆதிதாளம்.

* வார்கடாவருவியானைமாமலையின்மருப்பிணைக்குவடிறுத்துருட்டி-
ஊர்கொடிண்பாகனுயிர்செகுத்தரங்கின்மல்லரைக்கொன்றுசூழ்பரண்மேல்
போர்கடாவரசர்புறக்கிடமாடமீமிசைக்கஞ்சனைத்தகர்த்த
சீர்கொள்சிற்றாயன்றிருச்செங்குன்றூரிற்றிருச்சிற்றாறெங்கள்செல்சார்வே.

எங்கள்செல்சார்வுயாமுடையமுதமிமையவரப்பனென்னப்பன்
பொங்குமூவுலகும்படைத்தளித்தழிக்கும்பொருந்துமூவுருவனெம்மருவன்
செங்கயலுகளுந்தேம்பணைபுடைசூழ்திருச்செங்குன்றூர்த்திருச்சிற்றாற்
றங்கமர்கின்றவாதியானல்லால்யாவர்மற்றென்னமர்துணையே. (உ)

என்னமர்பெருமானிமையவர்பெருமானிருநிலமிடந்தவெம்பெருமான்
முன்னவல்வினைகண்முழுதுடன்மாளவென்னையாள்கின்றவெம்பெருமான்
தென்றிசைக்கணிகொடிருச்செங்குன்றூரிற்றிருச்சிற்றாற்றங்கரைமீபால்
நின்றவெம்பெருமா,னடியல்லாற்சரணநினைப்பிலும்பிறிதில்லையெனக்கே.

பிறிதில்லையெனக்குப்பெரியமூவுலகுநிறையப்பேருருவமாய்நிமிர்ந்த
குறியமாணெம்மான்குரைகடல்கடைந்தகோலமாணிக்கமென்னம்மான்
செறிகுலைவாழைகமுகுதெங்கணிசூழ்திருச்செங்குன்றூர்த்திருச்சிற்றா
றறிய,மெய்ம்மையேநின்றவெம்பெருமானடியிணையல்லதோரரணே.

அல்லதோரரணுமவனில்வேறில்லையதுபொருளாகிலுமவனை
அல்ல, தென்னாவியமர்ந்தணைகில்லாதாதலாலவனுறைகின்ற
நல்லநான்மறையோர்வேள்வியுண்மடுத்தநறும்புகைவிசும்பொளிமறைக்கும்
நல்லநீண்மாடத்திருச்செங்குன்றூரிற்றிருச்சிற்றாறெனக்குநல்லரணே

எனக்குநல்லரணையென்னதாருயிரையிமையவர்தந்தைதாய்தன்னைத்
தனக்குந்தன்றன்மையறிவரியானைத்தடங்கடற்பள்ளியம்மானை
மனக்கொள்சீர்மூவாயிரவர்வண்சிவனுமயனுந்தானுமொப்பார்வாழ்
கனக்கொடிண்மாடத்திருச்செங்குன்றூரிற்றிருச்சிற்றாறதனுட்கண்டேனே.

திருச்செங்குன்றூரிற்றிருச்சிற்றாறதனுட்கண்டவத்திருவடியென்றும்
திருச்செய்யகமலக்கண்ணுஞ்செவ்வாயுஞ்செவ்வடியுஞ்செய்யகையும்
திருச்செய்யகமலவுந்தியுஞ்செய்யகமலமார்புஞ்செய்யவுடையும்
திருச்செய்யமுடியுமாரமும்படையுந்திகழவென்சிந்தையுளானே.

திகழவெண் சிந்தையுள்ளிருந்தானைச் செழுநிலத்தேவர்நான்மறையோர்
திசைகைகூப்பியேத்துந்திருச்செங்குன்றூரிற்றிருச்சிற்றாற்றங்கரையானைப்
புகர்கொள்வானவர்கள்புகலிடந்தன்னையசுரர்வன்கையர்வெங்கூற்றைப்
புகழுமாறறியேன்பொருந்துமூவுலகும்படைப்பொடுகெடுப்புக்காப்பவனே. ()

படைப்பொடுகெடுப்புக்காப்பவன்பிரமபரம்பரன்சிவப்பிரானவனே
இடைப்புக்கோருருவுமொழிவில்லையவனேபுகழ்வில்லையாவையுந்தானே
கொடைப்பெரும்புகழாரினையர்தன்னானர்கூறியவிச்சையோடொழுக்கம்
நடைப்பலியியற்கைத்திருச்செங்குன்றூரிற்றிருச்சிற்றாறமர்ந்தநாதனே.

அமர்ந்தநாதனையவரவராகியவர்க்கருளருளுமம்மானை
அமர்ந்ததண்பழனத்திருச்செங்குன்றூரிற்றிருச்சிற்றாற்றங்கரையானை
அமர்ந்தசீர்மூவாயிரவர்வேதியர்கடம்பதியவளிதேவர்வாழ்
வமர்ந்தமாயோனைமுக்கணம்மானைநான்முகனையமர்ந்தேனே. (க0)

* தேனைநன்பாலைக்கன்னலையமுதைத்திருந்துலகுண்டவம்மானை
வானநான்முகனைமலர்ந்ததண்கொப்பூழ்மலர்மிசைப்படைத்தமாயோனைக்
கோனைவண்குருகூர்வண்சடகோபன்சொன்னவாயிரத்துளிப்பத்தும்
வானின்மீதேற்றியருள்செய்துமுடிக்கும்பிறவிமாமாயக்கூத்தினையே.

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - எச - க்குப் பாசுரம் - அகசு.

---

வாராமலச்சமினிமால்தன்வலியினையும்
சீரார்பரிவருடன்சேர்த்தியையும்—பாருமெனத்
தானுகந்தமாறன்றாள்சார்நெஞ்சேசாராயேல்
மானிடவரைச்சார்ந்துமாய். (எச)

## ரு - ம் திருவாய்மொழி - மாயக்கூத்தா.

இவ்வாறு பயம்போக்கினதெல்லாம் மானஸாநுபவ மாத்ரமாகையால் பாஹ்ய ஸம்ஶ்லேஷா பேக்ஷையாலே முன்புண்டான ப்ரீதியெல்லாம்போ யப்படிப்பட்ட ஸர்வேஶ்வரனைக் குறித்து ப்ரத்யக்ஷமாகவேண்டுமென்று தாமும் தம்முடைய இந்த்ரியமும் கூப்பிட்டதாக வருளிச்செய்கிறார்.

அறுசீராசிரியவிருத்தம்-பண்-பழம்பஞ்சுரம்-தாளம்-ஏழொத்து.

ஸாவேரிராகம் - ஆதிதாளம்.

* மாயக்கூத்தாவாமனாவினையேன்கண்ணாகண்கைகால்
தூயசெய்யமலர்களாய்ச்சோதிச்செவ்வாய்முகிழதா
சாயற்சாமத்திருமேனித்தண்பாசடையாத்தாமரைநீள்
வாசத்தடம்போல்வருவானேயொருநாள்காணவாராயே. (க)

காணவாராயென்றென்றுகண்ணும்வாயுந்துவர்ந், தடியேன்
நாணிநன்னாட்டலமர்ந்தாலிரங்கியொருநாணீயந்தோ
காணவாராய்கருநாயிறுதிக்குங்கருமாமாணிக்க
நாணன்மலைபோல்சுடர்ச்சோதிமுடிசேர்சென்னியம்மானே. (உ)

முடிசேர்சென்னியம்மானின்மொய்பூந்தாமத்தண்டுழாய்க்
கடிசேர்கண்ணிப்பெருமானேயென்றென்றேங்கியழுதக்கால்
படிசேர்மகரக்குழைகளும்பவளவாயுநாற்றோளும்
துடிசேரிடையுமமைந்ததோர்தூநீர்முகில்போற்றோன்றாயே. (ங)

தூநீர்முகில்போற்றோன்றாய்நின்சுடர்கொள்வடிவுங்கனிவாயும்
தேனீர்கமலக்கண்களும்வந்தென்சிந்தைநிறைந்தவா
மாநீர்வெள்ளிமலைதன்மேல்வண்கார்நீலமுகில்போலத்
தூநீர்கடலுட்டுயில்வானேயெந்தாய்சொல்லமாட்டேனே. (ச)

சொல்லமாட்டேனடியேனுன்றுளங்குசோதித்திருப்பாதம்
எல்லையில்சீரிளநாயிறிரண்டுபோலென்னுள்ளவா
அல்லலென்னுமிருள்சேர்தற்குபாயமென்னேயாழிசூழ்
மல்லைஞாலமுழுதுண்டமாநீர்க்கொண்டல்வண்ணனே. (ரு)

கொண்டல்வண்ணாகுடக்கூத்தாவினையேன்கண்ணாகண்ணா, வென்
அண்டவாணாவென்றென்னையாளக்கூப்பிட்டழைத்தக்கால
விண்டன்மேற்றான்மண்மேற்றான்விரிநீர்க்கடற்றான்மற்றுத்தான்
தொண்டனேனுன்கழல்காணவொருநாள்வந்துதோன்றாயே. (சா)

வந்துதோன்றாயன்றேலுன்வையந்தாயமலரடிக்கீழ்
முந்திவந்தியானிற்பமுகப்பேகூவிப்பணிகொள்ளாய்
செந்தண்கமலக்கண்கைகால்சிவந்தவாயோர்கருநாயி
றந்தமில்லாக்கதிர்பரப்பியலர்ந்ததொக்குமம்மானே. (எ)

ஒக்குமம்மானுருவமென்றுள்ளங்குழைந்துநாணாளும்
தொக்கமேகப்பல்குழாங்கள்காணுந்தோறுந்தொலைவன்னான்
தக்கவைவர்தமக்காயன்றீரைம்பதின்மர்தாள்சாயப்
புக்கநற்றேர்த்தனிப்பாகாவாராயிதுவோபொருத்தமே. (அ)

இதுவோபொருத்தமின்னாழிப்படையாயேறுமிருஞ்சிறைப்புள்
அதுவேகொடியாவுயர்த்தானேயென்றென்றேங்கியழுதக்கால்
எதுவேயாகக்கருதுங்கொலிம்மாஞாலம்பொறைதீர்ப்பான்
மதுவார்சோலையுத்தரமதுரைப்பிறந்தமாயனே. (கூ)

பிறந்தமாயாபாரதம்பொருதமாயாநீயின்னே
சிறந்தகால்தீநீர்வான்மண்பிறவுமாயபெருமானே
கறந்தபாலுணெய்யேபோலிவற்றுளெங்குங்கண்டுகொள்
இறந்துநின்றபெருமாயாவுன்னையெங்கேகாண்கேனே. (க0)

* எங்கேகாண்கேனீன்றுழாயம்மான்றன்னையானென்றென்
றங்கேதாழ்ந்தசொற்களாலந்தண்குருகூர்ச்சடகோபன்
செங்கேழ்சொன்னவாயிரத்துளிவையும்பத்தும்வல்லார்கள்
இங்கேகாணவிப்பிறப்பேமகிழ்வரெல்லியுங்காலையே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - எறு - க்குப் பாசுரம் - அஉஎ.

மாயன்வடிவழகைக்காணுதவல்விடாய்
ஆயதறவிஞ்சியமுதலற்றும்—தூயபுகழ்
உற்றசடகோபனைநாமொன்றிநிற்கும்போதுபகல்
அற்றபொழுதானதெல்லியாம். (எறு)

## கூ - ம் திருவாய்மொழி - எல்லியும்.

ஆழ்வாரவ்வாறு கூப்பிடுகையில் ஆழ்வாரைக்காட்டில் ஈஶ்வரனுக்கு ஆழ்வாரிடத்தில் த்ருஷ்ணை அதிகமாய் ஆக்ரோஶம் பண்ணுகைக்கு முன்னேவந்தோமில்லையென்று லஜ்ஜித்து ஆழ்வாரார்த்தி தீரும்படிஸகலஸந்நாஹத்தோடே அதற்குஹிதமாகப்போனால்மோஹிப்பரென்று திருக்கடித்தானத் திருப்பதியி லெழுந்தருளின தறிவித்து ப்ரீதி ஸாத்மித்தவாறே முகங்காட்டுவோமென் றிருந்ததைக்கண்டு ஆழ்வார் ப்ரீதியடைந்ததை யருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம் - பண் - வியந்தம் - தாளம் - ஏழொத்து.

மோஹனராகம் - ஆதிதாளம்.

* எல்லியுங்காலையுந்தன்னைநினைந்தெழ
நல்லவருள்கணமக்கேதந்தருள்செய்வான்
அல்லியந்தண்ணந்துழாய்முடியப்பனூர்
செல்வர்கள்வாழுந்திருக்கடித்தானமே. (க)

திருக்கடித்தானமுமென்னுடைச்சிந்தையும்
ஒருக்கடுத்துள்ளேயுறையும்பிரான்கண்டீர்
செருக்கடுத்தன்றுதிகைத்த, வரக்கரை
உருக்கெடவாளிபொழிந்தவொருவனே. (உ)

ஒருவரிருவரோர்மூவரெனநின்
றுருவுகரந்துள்ளுந்தோறுந்தித்திப்பான்
திருவமர்மார்பன்றிருக்கடித்தானத்தை
மருவியுறைகின்றமாயப்பிரானே. (ங)

மாயப்பிரானெனவல்வினைமாய்ந்தற
நேசத்தினானென்சநாடுகுடிகொண்டான்
தேசத்தமரர்திருக்கடித்தானத்தை
வாசப்பொழின்மன்னுகோயில்கொண்டானே. (ச)

கோயில்கொண்டான்றன்றிருக்கடித்தானத்தைக்
கோயில்கொண்டானதனோடுமென்னெஞ்சகம்
கோயில்கொடெய்வமெல்லாந்தொழ, வைகுந்தம்
கோயில்கொண்டகுடக்கூத்தவம்மானே. (ரு)

கூத்தவம்மான்கொடியேனிடர்முற்றவும்
மாய்த்தவம்மான்மதுசூதவம்மானுறை
பூத்தபொழிற்றண்டிருக்கடித்தானத்தை
ஏத்தநில்லாகுறிக்கொண்மினிடரே. (சு)

கொண்மினிடர்கெடவுள்ளத்துக்கோவிந்தன்
மண்விண்முழுதுமளந்தவொண்டாமரை
மண்ணவர்தாந்தொழவானவர்தாம்வந்து
நண்ணுதிருக்கடித்தானநகரே. (எ)

தானநகர்கடலைச்சிறந்தெங்கெங்கும்
வானிந்நிலங்கடன்முற்றுமெம்மாயற்கே
ஆனவிடத்துமென்னெஞ்சுந்திருக்கடித்
தானநகரும், தனதாயப்பதியே. (அ)

தாயப்பதிகடலைச்சிறந்தெங்கெங்கும்
மாயத்தினன்மன்னிவீற்றிருந்தானுறை
தேசத்தமரர்திருக்கடித்தானத்துள்
ஆயர்க்கதிபதியற்புதன்றானே. (கூ)

அற்புதனாராயணனரிவாமனன்
நிற்பதுமேவியிருப்பதென்னெஞ்சகம்
நற்புகழ்வேதியர்நான்மறைநின்றதிர்
கற்பகச்சோலைத்திருக்கடித்தானமே. (க0)

* சோலைத்திருக்கடித்தானத்துறைதிரு
மாலை, மதிட்குருகூர்ச்சடகோபன்சொல்
பாலோடமுதன்னவாயிரத்திப்பத்தும்
மேலைவைகுந்தத்திருத்தும்வியந்தே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ திருவாய்மொழி - எசு - க்குப் பாசுரம் - அகூஅ.

---

எல்லிபகனடந்தவிந்தவிடாய்திருமைக்கு
மெல்லவந்துதான்கலக்கவேணுமென—நல்லவர்கள்
மன்னுகடித்தானத்தேமாலிருக்கமாறன்கண்
டின்னிலையைச்சொன்னானிருந்து. (எசு)

## எ - ம் திருவாய்மொழி - இருந்தும்.

திருக்கடித்தானத்தில் ஈஸ்வரன் ஆழ்வார்மநோரதமெல்லாம் தீரும்படி ஸம்ஶ்லேஷிக்க இது ஸ்வப்நமோ மோஹமோவென்று சங்கித்து இது ஸ்வப்நமன்று யதார்த்தமென்றுதெரிந்து அதிப்ரீதி யடைந்ததை யருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம் - பண் - இந்தளம் — தாளம் - ஏழொத்து.

கல்யாணிராகம் - ஆதிதாளம்.

* இருந்தும்வியந்தென்னைத்தன்பொன்னடிக்கீழென்
றருத்தித்தெனைத்தோர்பலநாளழைத்தேற்குப்
பொருத்தமுடைவாமனன்றான்புகுந், தென்றன்
கருத்தையுறவீற்றிருந்தான்கண்டுகொண்டே. (க)

இருந்தான்கண்டுகொண்டெனதேழைநெஞ்சாளும்
திருந்தாதவோரைவரைத்தேய்ந்தறமன்னிப்
பெருந்தாட்களிற்றுக்கருள்செய்தபெருமான்
தருந்தானருடானினியானறியேனே. (உ)

அருடானினியானறியேனவனென்னுள்
இருடானறவீற்றிருந்தானிதுவல்லால்
பொருடானெனின்மூவுலகும்பொருளல்ல
மருடானீதோமாயமயக்குமயக்கே. (ங)

மாயமயக்குமயக்கானென்னைவஞ்சித்
தாயனமரர்க்கரியேறெனதம்மான்
தூயசுடர்ச்சோதிதனதென்னுள்வைத்தான்
தேசந்திகழுந்தன்றிருவருள்செய்தே. (ச)

திகழுந்தன்றிருவருள்செய்துலகத்தார்
புகழும்புகழ், தானதுகாட்டித்தந்தென்னுள்
திகழுமணிக்குன்றமொன்றேயொத்துநின்றான்
புகழும்புகழ்மற்றெனக்குமோர்பொருளே. (ரு)

பொருண்மற்றெனக்குமோர்பொருடன்னிற்சீர்க்கத்
தருமேற், பின்னையார்க்கவன்றன்னைக்கொடுக்கும்
கருமாணிக்கக்குன்றத்துத்தாமரைபோல்
திருமார்வுகால்கண்கைசெவ்வாயுந்தியானே. (சா)

செவ்வாயுந்திவெண்பற்சுடர்க்குழைதன்னொ
டெவ்வாய்ச்சுடருந்தம்மின்முன்வளாய்க்கொள்ளச்
செவ்வாய்முறுவலோடெனதுள்ளத்திருந்த
அவ்வாயனறியாவறியேன்பற்றுமே. (எ)

அறியேன்மற்றருளென்னையாளும்பிரானார்
வெறிதேயருள்செய்வர்செய்வார்கட்குகந்து
சிறியேனுடைச்சிந்தையுண்மூவுலகுந், தன்
நெறியாவயிற்றிற்கொண்டுநின்றொழிந்தாரே. (அ)

வயிற்றிற்கொண்டுநின்றொழிந்தாருமவரும்
வயிற்றிற்கொண்டுநின்றொருமூவுலகுந், தம்
வயிற்றிற்கொண்டுநின்றவண்ணநின்றமாலை
வயிற்றிற்கொண்டுமன்னவைத்தேன்மதியாலே. (கூ)

வைத்தேன்மதியாலெனதுள்ளத்தகத்தே
எய்த்தேயொழிவேனல்லேனென்றுமெப்போதும்
மொய்த்தேய்திரைமோதுதண்பாற்கடலுளாற்
பைத்தேய்சுடர்ப்பாம்பணைநம்பரனையே. (க0)

* சுடர்ப்பாம்பணைநம்பரனைத்திருமாலை
அடிச்சேர்வகைவண்குருகூர்ச்சடகோபன்
முடிப்பான்சொன்னவாயிரத்திப்பத்துஞ், சன்மம்
விடத்தேய்ந்தறநோக்குந்தன்கண்கள்சிவந்தே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ திருவாய்மொழி - எஎ - க்குப் பாசுரம் - அசகூ.

இருந்தவன்முன்வந்திங்கிவரொண்ணமெல்லாம்
திருந்தவிவர்தந்திறத்தேசெய்து—பொருந்தக்
கலந்தினியனாய்நிற்கக்கண்டசடகோபர்
கலந்தநெறிகட்டுரைத்தார்கண்டு (எஎ)

## அ - ம் திருவாய்மொழி - கண்கள்.

ஆழ்வார் மூன்றுந்தரம் மோஹித்த திருவாய்மொழி.

ஸ்ரீயஃபதியினுடையஸர்வஸ்வாமித்வத்தையருளிச்செய்கிறார்.

அறுசீராசிரியவிருத்தம்--பண்-தக்கேசி-தாளம்--ஏழொத்து.

பைரவிராகம் - ஆதிதாளம்.

* கண்கள்சிவந்துபெரியவாய்வாயுஞ்சிவந்துகனிந், துள்ளே
வெண்பலிலகுசுடரிலகுவிலகுமகரகுண்டலத்தன்
கொண்டல்வண்ணன்சுடர்முடியனான்குதோளன்குனிசார்ங்கன்
ஒண்சங்கதைவாளாழியானொருவனடியேனுள்ளானே. (க)

அடியேனுள்ளானுடலுள்ளானண்டத்தகத்தான்புறத்துள்ளான்
படியேயிதுவென்றுரைக்கலாம்படியனல்லன்பரம்பரன்
கடிசேர்நாற்றத்துள்ளாலையின்பத்துன்பக்கழிநேர்மை
ஒடியாவின்பப்பெருமையோனுணர்விலும்பரொருவனே. (உ)

உணர்விலும்பரொருவனையவனதருளாலுறற்பொருட், டென்
உணர்வினுள்ளேயிருத்தினேனதுவுமவனதின்னருளே
உணர்வுமுயிருமுடம்புமற்றுலப்பிலனவும்பழுதேயாம்
உணர்வைப்பெறவூர்ந்திறவேறியானுந்தானாயொழிந்தானே. (ந)

யானுந்தானாயொழிந்தானையாதும்யவர்க்குமுன்னோனைத்
தானுஞ்சிவனும்பிரமனுமாகிப்பணைத்ததனிமுதலைத்
தேனும்பாலுங்கன்னலுமமுதுமாகித்தித்தித், தென்
ஊனிலுயிரிலுணர்வினினின்றவொன்றையுணர்ந்தேனே. (ச)

நின்றவொன்றையுணர்ந்தேனுக்கதனுணேர்மை, யதுவிதுவென்
றென்றுமொருவர்க்குணரலாகாதுணர்ந்துமேலுங்காண்பரிது
சென்றுசென்றுபரம்பரமாயாதுமின்றித்தேய்ந்தற்று
நன்றுதீதென்றறிவரிதாய்நன்றாய்ஞானங்கடந்ததே. (ரு)

நன்றாய்ஞானங்கடந்துபோய்நல்லிந்திரியமெல்லாமீர்த்
தொன்றாய்க்கிடந்தவரும்பெரும்பாழுலப்பிலதனையுணர்ந்துணர்ந்து
சென்றாங்கின்பத்துன்பங்கள்செற்றுக்களைந்துபசையற்றால்
அன்றேயப்போதேவீடதுவேவீடுவீடாமே. (சா)

அதுவேவீடுவீடுபெற்றின்பந்தானுமதுதேறி
எதுவேதானும்பற்றின்றியாதுமிலிகளாகிற்கில்
அதுவேவீடுவீடுபேற்றின்பந்தானுமதுதேறா
தெதுவேவீடேதின்பமென்றெய்த்தாரெய்த்தாரெய்த்தாரே. (எ)

எய்த்தாரெய்த்தாரெய்த்தாரொன்றில்லத்தாரும்புறத்தாரும்
மொய்த், தாங்கலறிமுயங்கத்தாம்போகும்போ, துன்மத்தர்போல்
பித்தேயேறியனுராகம்பொழியும்போ, தெம்பெம்மானோ
டொத்தேசென்றங்குள்ளங்கூடக்கூடிற்றாகினல்லுறைப்பே. (அ)

கூடிற்றாகினல்லுறைப்புக்கூடாமையைக்கூடினல்
ஆடற்பறவையுயர்கொடியெம்மாயனாவததுவதுவே
வீடைப்பண்ணியொருபரிசேயெதிர்வுநிகழ்வுங்கழிவுமாய்
ஓடித்திரியுமியோகிகளுமுளருமில்லையல்லரே. (கூ)

உளருமில்லையல்லராயுளராயில்லையாகியே
உளரெம்மொருவரவர்வந்தென்னுள்ளத்துள்ளேயுறைகின்றார்
வளரும்பிறையுந்தேய்பிறையும்போலவசைவுமாக்கமும்
வளருஞ்சுடருமிருளும்போற்றெருளுமருளுமாய்த்தேனே. (க0)

* தெருளுமருளுமாய்த்துத்தன் றிருந்துசெம்பொற்கழலடிக்கீழ்
அருளிபிருத்துமம்மானுமயனுஞ்சிவனுந், திருமாலால்
அருளப்பட்டசடகோபனோராயிரத்துளிப்பத்தால்
அருளியடிக்கீழிருத்து * மெம்மண்ணல்கருமாணிக்கமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஸரணம். ஜீயர்திருவடிகளேஸரணம்.

ஆ திருவாய்மொழி - எஅ - க்குப் பாசுரம் - அகூ௦.

---

கண்ணிறையவர்துகலந்தமாலிக்கலவி
திண்ணிலையாவேணுமெனச்சிந்தித்துத்—தண்ணிதெனும்
ஆருயிரினேற்றமதுகாட்டவாய்ந்துரைத்தான்
காரிமாறன்றன்கருத்து. (எஅ)

---

## கூ - ம் திருவாய்மொழி - கருமாணிக்கம்.

இதுவுமது.

அறுசீராசிரியவிருத்தம்-பண்-தக்கேசி-தாளம்-எழொத்து.

ஸ்ரீராகம் - ஆதிதாளம்.

* கருமாணிக்கமலைமேன்மணித்தடந்தாமரைக்காடுகள்போல்
திருமார்வுவாய்கண்கைபுந்திகாலுடையாடைகள்செய்யபிரான்
திருமாலெம்மான்செழுநீர்வயற்குட்டநாட்டுத்திருப்புலியூர்
அருமாயன்பேரன்றிப்பேச்சிலளின்னைமீரிதற்கென்செய்கேனே. (க)

அன்னைமீரிதற்கென்செய்கேனணிமேருவின்மீதுலவும்
துன்னுசூழ்சுடர்நாயிறுமன்றியும்பல்சுடர்களும்போல்
மின்னுநீண்முடியாரம்பல்கலன்றானுடையெம்பெருமான்
புன்னையம்பொழில்சூழ்திருப்புலியூர்புகழுமிவளே. (உ)

புகழுமிவணின்றிராப்பகற்பொருநீர்க்கடற்றீப்பட், டெங்கும்
திகழுமெரியொடுசெல்வதொப்பச்செழுங்கதிராழிமுதல்
புகழும்பொருபடையேந்திப்போர்புக்கசுரரைப்பொன்றுவித்தான்
திகழுமணிநெடுமாடநீடுதிருப்புலியூர்வளமே. (ங)

ஊர்வளங்கிளர்சோலையுங்கரும்பும்பெருஞ்செந்நெலுஞ்சூழ்ந்
தேர்வளங்கிளர்தண்பணைக்குட்டநாட்டுத்திருப்புலியூர்
சீர்வளங்கிளர்மூவுலகுண்டுமிழ்தேவபிரான்
பேர்வளங்கிளர்ந்தன்றிப்பேச்சிலளின்றிப்புனையிழையே. (ச)

---

* "நம்மண்ணல்" என்று சிலகோசங்களில் காண்கிறது.

புனையிழைகளணிவுமாடையுடையும்புதுக்கணிப்பும்
நினையுநீர்மையதன்றிவட்கிதுநின்றுநினைக்கப்புக்கால்
சுனையினுட்டடந்தாமரைமலருந்தண்டிருப்புலியூர்
முனைவன்மூவுலகாளியப்பன்றிருவருண்மூழ்கினளே. (௫)

திருவருண்மூழ்கிவைகலுஞ்செழுநீர்நிறக்கண்ணபிரான்
திருவருள்களுஞ்சேர்ந்தமைக்கடையாளந்திருந்தவுள
திருவருளருளாலவன்சென்றுசேர்தண்டிருப்புலியூர்
திருவருட்கமுகொண்பழத்ததுமெல்லியல்செவ்விதழே. (௬)

மெல்லிலைச்செல்வவண்கொடிப்புல்கவீங்கிளந்தாட்கமுகின்
மல்லிலைமடல்வாழையீன்கனிசூழ்ந்துமணங்கமழ்ந்து
புல்லிலைத்தெங்கினூடுகாலுலவுந்தண்டிருப்புலியூர்
மல்லலஞ்செல்வக்கண்ணன்றாளடைந்தாளிம்மடவரலே. (௭)

மடவரலன்னைமீர்கட்கென்சொல்லிச்சொல்லுகேன்மல்லற்செல்வ
வடமொழிமறைவாணர்வேள்வியுணெய்யழல்வான்புகைபோய்த்
திடவிசும்பிலமரர்நாட்டைமறைக்குந்தண்டிருப்புலியூர்ப்
படவரவணையான்றன்னாமமல்லால்பரவாளிவளே. (௮)

பரவாளிவணின்றிராப்பகற்பனிநீர்நிறக்கண்ணபிரான்
விரவாரிசைமறைவேதியரொலிவேலையினின்றொலிப்பக்
கரவார்தடந்தொறுந்தாமரைக்கயந்தீவிகைநின்றலரும்
புரவார்கழனிகள்சூழ்திருப்புலியூர்ப்புகழன்றிமற்றே. (௯)

அன்றிமற்றோருபாயமென்னிவளந்தண்டுழாய்க்கமழ்தல்
குன்றமாமணிமாடமாளிகைக்கோலக்குழாங்கண்மல்கித்
தென்றிசைத்திலதம்புரைக்குட்டநாட்டுத்திருப்புலியூர்
நின்றமாயப்பிரான்றிருவருளாமிவணேர்பட்டதே. (௧௦)

* நேர்பட்டநிறைமூவுலகுக்குநாயகன்றன்னடிமை
நேர்பட்டதொண்டர்தொண்டர்தொண்டர்தொண்டன்சடகோபன்சொல்
நேர்பட்டதமிழ்மாலையாயிரத்து * ளிவைபத்தும்
நேர்பட்டா, ரவர்நேர்பட்டார்நெடுமாற்கடிமைசெய்யவே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - ௭௯ - க்குப் பாசுரம் - அ௬௧.

---

கருமால்திறத்திலொருகன்னிகையாமாறன்
ஒருமாகலவியுரைப்பால்—திரமாக
அன்னியருக்காகாதவன்றனக்கேயாகுமுயிர்
இந்நிலையையோருநெடிதா. (௭௧)

---

* "இவையும்பத்தும்" எனவுசிதம்.

## ௧௦ - ம் திருவாய்மொழி - நெடுமாற்கு.

இதுவுமது.

அறுசீராசிரியவிருத்தம் - பண் - தக்கேசி - தாளம் - ஏழொத்து.

ஸஹானுராகம் - அடதாளம்.

* நெடுமாற்கடிமைசெய்வேன்போலவனைக்கருதவஞ்சித்துத்
தடுமாற்றற்றதீக்கதிகண்முற்றுந்தவிர்ந்தசதிர்நினைந்தால்
கொடுமாவினையேனவனடியாரடியேகூடுமிதுவல்லால்
விடுமாறென்பதென்னந்தோவியன்மூவுலகுபெறினுமே. (௧)

வியன்மூவுலகுபெறினும்போய்த்தானேதானேயானாலும்
புயன்மேகம்போற்றிருமேனியம்மான்புனைபூங்கழலடிக்கீழ்ச்
சயமேயடிமைதலைநின்றார்திருத்தாள்வணங்கி, யிம்மையே
பயனேயின்பம்யான்பெற்றதுறுமோபாவியேனுக்கே. (௨)

உறுமோபாவியேனுக்கிவ்வுலகமூன்றுமுடனிறையச்
சிறுமாமேனிநிமிர்த்தவென்செந்தாமரைக்கட்டிருக்குறளன்
நறுமாவிரைநாண்மலரடிக்கீழ்ப்புகுதலன்றியவனடியார்
சிறுமாமனிசராயென்னையாண்டாரிங்கேதிரியவே. (௩)

இங்கேதிரிந்தேற்கிழுக்குற்றென்னிருமாநிலமுன்னுண்டுமிழ்ந்த
செங்கோலத்தபவளவாய்ச்செந்தாமரைக்கணென்னம்மான்
பொங்கேழ்புகழ்கள்வாயவாய்ப்புலன்கொள்வடிவென்மனத்ததாய்
அங்கேமலர்கள்கையவாய்வழிபட்டோடவருளிலே. (௪)

வழிபட்டோடவருள்பெற்றுமாயன்கோலமலரடிக்கீழ்ச்
சுழிபட்டோடுஞ்சுடர்ச்சோதிவெள்ளத்தின்புற்றிருந்தாலும்
இழிபட்டோடுமுடலினிற்பிறந்துதன்சீரியான்கற்று
மொழிபட்டோடுங்கவியமுதநுகர்ச்சியுறுமோமுழுதுமே. (௫)

நுகர்ச்சியுறுமோமூவுலகின்வீடுபேறுதன்கேழில்
புகர்ச்செம்முகத்தகளிறட்டபொன்னாழிக்கையென்னம்மான்
நிகர்ச்செம்பங்கியெரிவிழிகணீண்டவசுரருயிரெல்லாம்
தகர்த்துண்டுழலும்புட்பாகன்பெரியதனிமாப்புகழே. (௬)

தனிமாப்புகழேயெஞ்ஞான்றுநிற்கும்படியாத்தான்றோன்றி
முனிமாப்பிரமமுதல்வித்தாயுலகமூன்றுமுளைப்பித்த
தனிமாத்தெய்வத்தளிரடிக்கீழ்ப்புகுதலன்றி, யவனடியார்
நனிமாக்கலவியின்பமேநாளும்வாய்க்கநங்கட்கே. (௭)

நாளும்வாய்க்கநங்கட்குநளிநீர்க்கடலைப்படைத்துத்தன்
தாளுந்தோளுமுடிகளுஞ்சமனிலாதபலபரப்பி
நீளும்படர்பூங்கற்பகக்காவுநிறைபன்னுயிற்றின்
கோளுமுடையமணிமலைபோற்கிடந்தான்றமர்கள்கூட்டமே. (அ)

தமர்கள்கூட்டவல்வினையைநாசஞ்செய்யுஞ்சதுமூர்த்தி
அமர்கொளாழிசங்குவாள்விற்றண்டாதிபல்படையன்
குமரன்கோலவைங்கணைவேடாதைகோதிலடியார்தம்
தமர்கடமர்கடமர்களாஞ்சதிரோவாய்க்கதமியேற்கே. (கூ)

வாய்க்கதமியேற்கூழிதோறூழியூழி, மாகாயாம்
பூக்கொண்மேனிநான்குதோட்பொன்னாழிக்கையென்னம்மான்
நீக்கமில்லாவடியார்தம்மடியாரடியாரடியாரெம்
கோக்க, ளவர்க்கேகுடிகளாய்ச்செல்லுநல்லகோட்பாடே. (க0)

* நல்லகோட்பாட்டுலகங்கண்மூன்றினுள்ளுந்தானிறைந்த
அல்லிக்கமலக்கண்ணனையந்தண்குருகூர்ச்சடகோபன்
சொல்லப்பட்டவாயிரத்துளிவையும்பத்தும்வல்லார்கள்
நல்லபதத்தான்மனைவாழ்வர்கொண்டபெண்டிர்மக்களே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

எட்டாம்பத்து முற்றியது.

ஆ பத்து-அ-ல்-திருவாய்மொழி-அ0-க்குப்பாசுரம்-அஅஉ.

---

நெடுமாலழகுதன்னில்நீள்குணத்திலீடு
படுமாணிலையுடையபத்தர்க்—கடிமைதனில்
எல்லைநிலந்தானகவெண்ணினான்மாறனது
சொல்லைநிலமானநிலைகொண்டு. (அ0).

---

## ஒன்பதாம்பத்து.

### க - ம் திருவாய்மொழி - கொண்டபெண்டிர்.

ஈஶ்வரனுக்கு சேதநன்செய்யும் நித்யகைங்கர்யத்தை
அருளிச்செய்கிறார்.

கலித்துறை-பண்-பழந்தக்கராகம்-தாளம்-ஏழொத்து.

செஞ்சுருட்டிராகம்-ரூபகதாளம்.

* கொண்டபெண்டிர்மக்களுற்றார்சுற்றத்தவர்பிறரும்
கண்டதோடுபட்டதல்லாற்காதன்மற்றியாதுமில்லை
எண்டிசையுங்கீழும்மேலுமுற்றவுமுண்டபிரான்
[illegible] (க)

துணையுஞ்சார்வுமாகுவார்போற்றசுற்றத்தவர்பிறரும்
அணையவந்தவாக்கமுண்டேலட்டைகள்போல்சுவைப்பர்
கணையொன்றாலேயேழ்மராமெய்தவெங்கார்முகிலைப்
புணையென்றுய்யப்போகிலல்லாலில்லைகண்டீர்பொருளே. (உ)

பொருள்கையுண்டாய்ச்செல்லக்காணிற்போற்றியென்றேற்றெழுவர்
இருள்கொடுன்பத்தின்மைகாணிலென்னேயென்பாருமில்லை
மருள்கொள்செய்கையசுரர்மங்கவடமதுரைப்பிறந்தாற்
கருள்கொளாளாயுய்யிலல்லாலில்லைகண்டீரரணே. (ஙூ)

அரணமாவரற்றகாலைக்கென்றென்றமைக்கப்பட்டார்
இரணங்கொண்டதேப்பராவரின்றியிட்டாலுமஃதெ
வருணித்தென்னேவடமதுரைப்பிறந்தவன்வண்புகழே
சரணென்றுய்யப்போகிலல்லாலில்லைகண்டீர்சதிரே. (சு)

சதிர * மென்றுதம்மைத்தாமேசம்மதித்தின்மொழியார்
மதுரபோகந்துற்றவரேவைகிமற்றொன்றுறுவர்
அதிர்கொள்செய்கையசுரர்மங்கவடமதுரைப்பிறந்தாற்
கெதிர்கொளாளாயுய்யலல்லாலில்லைகண்டீரின்பமே. (ரு)

இல்லைகண்டீரின்பமந்தோவுள்ளதுநினையாதே
தொல்லையார்களெத்தனைவர்தோன்றிக்கழிந்தொழிந்தார்
மல்லைமூதூர்வடமதுரைப்பிறந்தவன்வண்புகழே
சொல்லியுய்யப்போகிலல்லான்மற்றொன்றில்லைசுருக்கே. (சா)

மற்றொன்றில்லைசுருங்கச்சொன்னோம்மாநிலத்தெவ்வுயிர்க்கும்
சிற்றவேண்டாசிந்திப்பேயமையுங்கண்டீர்களந்தோ
குற்றமன்றெங்கள்பெற்றதாயன்வடமதுரைப்பிறந்தான்
குற்றமில்சீர்கற்றுவைகல்வாழ்தல்கண்டீர்குணமே. (எ)

வாழ்தல்கண்டீர்குணமிதந்தோமாயவனடிபரவிப்
போழ்துபோகவுள்ளகிற்கும்புன்மையிலாதவர்க்கு
வாழ்துணையாவடமதுரைப்பிறந்தவன்வண்புகழே
வீழ்துணையாப்போமிதனில்யாதுமில்லைமிக்கதே. (அ)

யாதுமில்லைமிக்கதனிலென்றென்றதுகருதிக்
காதுசெய்வான்கூதைசெய்துகடைமுறைவாழ்க்கையும்போம்
மாதுகிலின்கொடிக்கொண்மாடவடமதுரைப்பிறந்த
தாதுசேர்தோட்கண்ணனல்லாலில்லைகண்டீர்சரணே. (கூ)

கண்ணனல்லாலில்லைகண்டீர்சரணதுநிற்கவந்து
மண்ணின்பாரநீக்குதற்கேவடமதுரைப்பிறந்தான்
திண்ணமாநும்முடைமையுண்டேலவனடிசேர்த்துய்மினோ
எண்ணவேண்டாநும்மதாதுமவனன்றிமற்றில்லையே. (க0)

* "சதுரம்" என்றும் பாடாந்தரம்.

Funding: IKS/Tattva Heritage. Digitization: eGangotri.



* ஆதுமில்லைமற்றவனிலென்றதுவேதுணிந்து
தாதுசேர்தோட்கண்ணனைக்குருகூர்ச்சடகோபன்சொன்ன
தீதிலாதவொண்டமிழ்களிவையாயிரத்துளிப்பத்தும்
ஓதவல்லபிராக்கணம்மையாளுடையார்கள்பண்டே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ_திருவாய்மொழி - அக - க்குப் பாசுரம் - அகூஙு.

---

கொண்டபெண்டிர்தான்முதலாக்கூறுமுற்றார்களன்மத்தால்
அண்டினவரொன்றேயவரைவிட்டுத்—தொண்டருடன்
சேர்க்குந்திருமாலைச்சேருமென்றானார்க்குமிதம்
பார்க்கும்புகழ்மாறன்பண்டு. (அக)

---

## உ - ம் திருவாய்மொழி - பண்டைநாள்.

.........................

இ த வு ம து.

எழுசீராசிரியவிருத்தம்-பண்-புறநீர்மை-தாளம்-இடையொத்து.

துசாவந்திராகம் - ஆதிதாளம்.

* பண்டைநாளாலேநின்திருவருளும்பங்கயத்தாட்டிருவருளும்
கொண்டுநின்கோயில்சீய்த்துப்பல்படிகாற்குடிகுடிவழிவந்தாட்செய்யும்
தொண்டரோர்க்கருளிச்சோதிவாய்திறந்துன்றாமரைக்கண்களானோக்காய்
தெண்டிரைப்பொருநற்றண்பணைசூழ்ந்ததிருப்புளிங்குடிக்கிடந்தானே.

குடிக்கிடந்தாக்கஞ்செய்துநின்றீர்த்தவடிமைக்குற்றேவல்செய்துன்பொன்
அடிக்கடவாதேவழிவருகின்றவடியரோர்க்கருளிநீயொருநாள்
படிக்களவாகநிமிர்த்தநின்பாதபங்கயமேதலைக்கணியாய்
கொடிக்கொள்பொன் மதிள்சூழ்குளிர்வயற்சோலைத் திருப்புளிங்குடிக்கிடந்தானே.

கிடந்தநாள்கிடந்தாயெத்தனைகாலங்கிடத்தியுன்றிருவுடம்பசையத்
தொடர்ந்துகுற்றேவல்செய்துதொல்லடிமைவழிவருந்தொண்டரோர்க்கருளித்
தடங்கொள்தாமரைக்கண்விழித்துநீயெழுந்துன்றாமரைமங்கையுநீயும்
இடங்கொண்மூவுலகுந்தொழவிருந்தருளாய்திருப்புளிங்குடிக்கிடந்தானே.

புளிங்குடிக்கிடந்துவரகுணமங்கையிருந்துவைகுந்தத்துணின்று
தெளிந்தவென்சிந்தையகங்கழியாதேயென்னையாள்வாயெனக்கருளி
நளிர்ந்தசீருலகமூன்றுடன்வியப்பநாங்கள்கூத்தாடிநின்றார்ப்பப்
பளிங்குநீர்முகிலின்பவளம்போற்கனிவாய்சிவப்பநீகாணவாராயே. ()

பவளம்போற்கனிவாய்சிவப்பநீகாணவந்துநின்பன்னிலாமுத்தம்
தவழ்கதிர்முறுவல்செய்துநின்றிருக்கண்டாமரைதயங்கநின்றருளாய்
பவளநன்படர்க்கீழ்ச்சங்குறைபொருநற்றண்டிருப்புளிங்குடிக்கிடந்தாய்
கவளமாகளிற்றினிடர்கெடத்தடத்துக்காய்சினப்பறவையூர்ந்தானே.

காய்சினப்பறவையூர்ந்துபொன்மலையின்மீமிசைக்கார்முகில்போல
மாசினமாலிமாலிமானென்றங்கவர்படக்கனன்றுமுன்னின்ற
காய்சினவேந்தேகதிர்முடியானேகலிவயற்றிருப்புளிங்குடியாய்
காய்சினவாழிசங்குவாள்விற்றண்டேந்தியெம்மிடர்கடிவானே. (சு)

எம்மிடர்கடிந்திங்கென்னையாள்வானேயிமையவர்தமக்குமாங்கனையாய்
செம்மடன்மலருந்தாமரைப்பழனத்தண்டிருப்புளிங்குடிக்கிடந்தாய்
நம்முடையடியர்கவ்வைகண்டுகந்துநாங்களித்துளநலங்கூர
இம்மடவுலகர்காணநீயொருநாளிருந்திடாயெங்கள்கண்முகப்பே. எ

எங்கள்கண்முகப்பேயுலகர்களெல்லாமிணையடிதொழுதெழுதிறைஞ்சித்
தங்களன்பாரத்தமதுசொல்வலத்தாற்றலைத்தலைச்சிறந்துபூசிப்பத்
திங்கள்சேர்மாடத்திருப்புளிங்குடியாய்திருவைகுந்தத்துள்ளாய்தேவா
இங்கண்மாஞாலத்திதனுளுமொருநாளிருந்திடாய்வீற்றிடங்கொண்டே.

வீற்றிடங்கொண்டுவியன்கொண்மாஞாலத்திதனுளுமிருந்திடா,யடியோம்
போற்றியோவாதேகண்ணிணைகுளிரப்புதுமலராகத்தைப்பருகச்
சேற்றிளவாளைசெந்நெலூடுகளுஞ்செழும்பணைத்திருப்புளிங்குடியாய்
கூற்றமாயசுரர்குலமுதலரிந்தகொடுவினைப்படைகள்வல்லானே. (கூ)

கொடுவினைப்படைகள்வல்லையாயமரர்க்கிடர்கெடவசுரர்கட்கிடர்செய்
கடுவினைநஞ்சேயென்னுடையமுதேகலிவயற்றிருப்புளிங்குடியாய்
வடிவிணையில்லாமலர்மகண்மற்றைநிலமகள்பிடிக்குமெல்லடியைக்
கொடுவினையேனும்பிடிக்கநீயொருநாள்கூவுதல்வருதல்செய்யாயே.

* கூவுதல்வருதல்செய்திடாயென்றுகுரைகடல்கடைந்தவன்றன்னை
மேவிநன்கமர்ந்தவியன்புனற்பொருநல்வழுதிநாடன்சடகோபன்
நாவியல்பாடலாயிரத்துள்ளிவையுமோர்பத்தும்வல்லார்கள்
ஓவுதலின்றியுலகமூன்றளந்தானடியிணையுள்ளத்தோர்வாரே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - அஉ - க்குப் பாசுரம் - க0ச.

---

பண்டையுறவானபரனைப்புளிங்குடிக்கே
கண்டெனக்கெல்லாவுறவின்காரியமும்—தண்டறநீ
செய்தருளென்றேயிரந்தசீர்மாறன்றாளிணையே
உய்துணையென்றுள்ளமேயோர். (அஉ)

## ௩-ம் திருவாய்மொழி - ஓராயிரம்.

இ த வு ம த.

கலிவிருத்தம்-பண்-காந்தாரம்-தாளம்-ஏழொத்து.

கேதாரராகம் - ஆதிதாளம்.

* ஓராயிரமாயுலகேழளிக்கும்
பேராயிரங்கொண்டதோர்பீடுடையன்
காராயினகாளநன்மேனியினன்
நாராயணனங்கள்பிரானவனே. (௧)

அவனேயகன்ஞாலம்படைத்திடந்தான்
அவனேயஃதுண்டுமிழ்ந்தானளந்தான்
அவனேயவனுமவனுமவனும்
அவனேமற்றெல்லாமுமறிந்தனமே. (௨)

அறிந்தனவேதவரும்பொருணூல்கள்
அறிந்தனகொள்கவரும்பொருளாதல்
அறிந்தனரெல்லாமரியைவணங்கி
அறிந்தனர்நோய்களறுக்குமருந்தே. (௩)

மருந்தேநங்கள்போகமகிழ்ச்சிக்கென்று
பெருந்தேவர்குழாங்கள்பிதற்றும்பிரான்
கருந்தேவனெம்மான்கண்ணன்விண்ணுலகம்
தருந்தேவனைச்சோரேற்கண்டாய்மனமே. (௪)

மனமேயுன்னைவல்வினையேனிரந்து
கனமேசொல்லினேனிதுசோரேற்கண்டாய்
புனமேவியபூந்தண்டுழாயலங்கல்
இனமேதுமிலானையடைவதுமே. (௫)

அடைவதுமணியார்மலர்மங்கைதோள்
மிடைவதுமசுரர்க்குவெம்போர்களே
கடைவதுங்கடலுளமுத, மென்மனம்
உடைவதுமவற்கேயொருங்காகவே. (௬)

ஆகஞ்சேர்நரசிங்கமதாகி, யோர்
ஆகம்வள்ளுகிருற்பிளந்தானுறை
மாகவைகுந்தங்காண்பதற், கென்மனம்
ஏகமெண்ணுமிராப்பகலின்றியே. (௭)

இன்றிப்போகவிருவினையுங்கெடுத்
தொன்றியாக்கைபுகாமையுய்யக்கொள்வான்
நின்றவேங்கடநீணிலத்துள்ளது
சென்றுதேவர்கள்கைதொழுவார்களே. (அ)

தொழுதுமாமலர்நீர்சுடர்தூபங்கொண்
டெழுதுமென்னுமிதுமிகையாதலில்
பழுதிறேல்புகழ்ப்பாம்பணைப்பள்ளியாய்
தழுவுமாறறியேனுனதாள்களே. (கூ)

தாளதாமரையானுனதுந்தியான்
வாள்கொணீள்மழுவாளியுன்னாகத்தான்
ஆளராய்த்தொழுவாருமமரர்கள்
நாளுமென்புகழ்கோனுனசீலமே. (க0)

* சீலமெல்லையிலானடிமே, லணி
கோலநீள்குருகூர்ச்சடகோபன், சொல்
மாலையாயிரத்துள்ளிவைபத்தினின்
பாலர், வைகுந்தமேறுதல்பான்மையே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ திருவாய்மொழி - அங - க்குப் பாசுரம் - கடு.

---

ஓராநீர்வேண்டினவையுள்ளதெல்லாஞ்செய்கின்றேன்
நாராயணனன்றோநானென்று—பேருறவைக்
காட்டவவன்சீலத்திற்கால்தாழ்ந்தமாறனருள்
மாட்டிவிடுநம்மனத்துமை. (அங)

---

## ச - ம் திருவாய்மொழி - மைபார்.

இதுவுமது.

கலிவிருத்தம்—பண்—கொல்லி-தாளம்-ஏழொத்து.

தன்யாசிராகம் - ஆதிதாளம்.

* மையார்கருங்கண்ணிகமலமலர்மேல்
செய்யா, டிருமார்பினிற்சேர்திருமாலே
வெய்யார்சுடராழிசுரிசங்கமேந்தும்
கையா, வுன்னைக்காணக்கருதுமென்கண்ணே. (க)

கண்ணேயுன்னைக்காணக்கருதி, யென்னெஞ்சம்
எண்ணேகொண்டசிந்தையதாகின்றியம்பும்
விண்ணோர்முனிவர்க்கென்றுங்காண்பரியாயை
நண்ணுதொழியேயனென்றுநானழைப்பனே. (உ)

அழைக்கின்றவடிநாயேனுய்கூழைவாலால்
குழைக்கின்றதுபோலவென்னுள்ளங்குழையும்
மழைக்கன்றுகுன்றமெடுத்தாநிரைகாத்தாய்
பிழைக்கின்றதருளென்றுபேதுறுவனே. (ங)

உறுவதிதுவென்றுனக்காட்பட்டு, நின்கட்
பெறுவதெதுகொலென்றுபேதையேனெஞ்சம்
மறுகல்செய்யும்வானவர்தானவர்க்கென்றும்
அறிவதரியவரியாயவம்மானே. (ச)

அரியாயவம்மானையமரர்பிரானைப்
பெரியானைப்பிரமனைமுன்படைத்தானை
வரிவாளரவினணைப்பள்ளிகொள்கின்ற
கரியான்கழல்காணக்கருதுங்கருத்தே. (ரு)

கருத்தேயுன்னைக்காணக்கருதி, யென்னெஞ்சத்
திருத்தாகவிருத்தினேன்றேவர்கட்கெல்லாம்
விருத்தாவிளங்குஞ்சுடர்சோதியுயரத்
தொருத்தா, வுன்னையுள்ளுமென்னுள்ளமுகந்தே. (சு)

உகந்தேயுன்னையுள்ளுமென்னுள்ளத், தகம்பால்
அகந்தானமர்ந்தேயிடங்கொண்டவமலா
மிகுந்தானவன்மார்பகலமிருகூறு
நகந்தாய்நரசிங்கமதாயவுருவே. (எ)

உருவாகியவாறுசமயங்கட்கெல்லாம்
பொருவாகிநின்றானவனெல்லாப்பொருட்கும்
அருவாகியவாதியைத்தேவர்கட்கெல்லாம்
கருவாகியகண்ணனைக்கண்டுகொண்டேனே. (அ)

கண்டுகொண்டென்கண்ணிணையாரக்களித்துப்
பண்டைவினையாயினபற்றோடறுத்துத்
தொண்டர்க்கமுதுண்ணச்சொன்மாலைகள்சொன்னேன்
அண்டத்தமரர்பெருமானடியேனே. (கூ)

அடியானிவனென்றெனக்காரருள்செய்யும்
நெடியானை, நிறைபுகழுஞ்சிறைப்புள்ளின்
கொடியானைக், குன்றுமலுலகமளந்த
அடியானை, யடைந்தடியேனுய்ந்தவாறே. (க0)

* ஆருமதயானையடர்த்தவன்றன்னைச்
சேரூர்வயற்றென்குருகூர்ச்சடகோபன்
நூறேசொன்னவோராயிரத்துளிப்பத்தும்
ஏறேதரும்வானவர்தமின்னுயிர்க்கே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ. திருவாய்மொழி - ௮௪ - க்குப்பாசுரம் - ௯௨௯.

மையார்கண்மாமார்பின்மன்னுந்திருமாலைக்
கையாழிசங்குடனேகாணவெண்ணி—மெய்யான
காதலுடன்கூப்பிட்டுக்கண்டுகந்தமாறன்பேர்
ஓதவுய்யுமேயின்னுயிர். (௮௪)

## ௫ - ம் திருவாய்மொழி - இன்னுயிர்.

### இதுவுமது.

கலித்துறை-பண்-கொல்லி-தாளம்-ஏழொத்து.

அசாவேரிராகம் - ஆதிதாளம்.

* இன்னுயிர்ச்சேவலுநீருங்கூவிக்கொண்டிங்கெத்தனை
என்னுயிர்நோவமிழற்றேன்மின்குயிற்பேடைகாள்
என்னுயிர்க்கண்ணபிரானைநீர்வரக்கூவுகிலீர்
என்னுயிர்கூவிக்கொடுப்பார்க்குமித்தனைவேண்டுமோ. (௧)

இத்தனைவேண்டுவதன்றந்தோவன்றிற்பேடைகாள்
எத்தனைநீருநுஞ்சேவலுங்கரைந்தேங்குதிர்
வித்தகன்கோவிந்தன்மெய்யனல்லனொருவர்க்கும்
அத்தனையாமினியென்னுயிரவன்கையதே. (௨)

அவன்கையதேயெனதாருயிரன்றிற்பேடைகாள்
எவஞ்சொல்லிநீர்குடைந்தாடுதிர்புடைசூழவே
தவஞ்செய்திலாவினையாட்டியேனுயிரிங்குண்டோ
எவஞ்சொல்லிநிற்றிருநும்மேங்குகூக்குரல்கேட்டுமே. (௩)

கூக்குரல்கேட்டுநங்கண்ணன்மாயன்வெளிப்படான்
மேற்கிளைக்கொள்ளேன்மினீருஞ்சேவலுங்கோழிகாள்
வாக்குமனமுங்கருமமுநமக்காங்கதே
ஆக்கையுமாவியுமந்தரநின்றுழலுமே. (௪)

அந்தரநின்றுழல்கின்றயானுடைப்பூவைகாள்
நுந்திறத்தேதுமிடையில்லைகுழறேன்மினோ
இந்திரஞாலங்கள்காட்டியிவ்வேழுலகுங்கொண்ட
நந்திருமார்பனம்மாவியுண்ணநன்கெண்ணினான். (௫)

நன்கெண்ணிநான்வளர்த்தசிறுகிளிப்பைதலே
இன்குரனீமிழற்றேலென்னாருயிர்க்காகுத்தன்
நின்செய்யவாயொக்கும்வாயன்கண்ணன்கைகாலினன்
நின்பசுஞ்சாமநிறத்தன்கூட்டுண்டுநீங்கினான். (௬)

கூட்டுண்டுநீங்கியகோலத்தாமரைக்கட்செவ்வாய்
வாட்டமிலென்கருமாணிக்கங்கண்ணன்மாயன்போல்
கோட்டியவில்லொடுமின்னுமேகக்குழாங்கள்காள்
காட்டேன்மின்னும்முருவென்னுயிர்க்கதுகாலனே. (௭)

உயிர்க்கதுகாலனென்றும்மைநானிரந்தேற்கு, நீர்
குயிற்பைதல்காள்கண்ணனாமமேகுழறிக்கொன்றீர்
தயிர்ப்பழஞ்சோற்றொடுபாலடிசிலுந்தந்து, சொல்
பயிற்றியநல்வளமூட்டினீர்பண்புடையீரே. (௮)

பண்புடைவண்டொடுதும்பிகாள்பண்மிழற்றேன்மின்
புண்புரைவேல்கொடுகுத்தாலொக்குநும்மின்குரல்
தண்பெருநீர்த்தடந்தாமரைமலர்த்தாலொக்கும்
கண்பெருங்கண்ண, னெம்மாவியுண்டெழநண்ணினான். (௯)

எழநண்ணிநாமுநம்வானநாடனோடொன்றினோம்
பழனநன்னாரைக்குழாங்கள்காள்பயின்றென்னினி
இழைநல்லவாக்கையும்பையவேபுயக்கற்றது
தழைநல்லவின்பந்தலைப்பெய்தெங்குந்தழைக்கவே. (௧௦)

இன்பந்தலைப்பெய்தெங்குந்தழைத்தபல்லூழிக்குத்
தன்புகழேத்தத்தனக்கருள்செய்தமாயனைத்
தென்குருகூர்ச்சடகோபன்சொல்லாயிரத்துளிவை
ஒன்பதோடொன்றுக்குமூவுலகுமுருகுமே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ திருவாய்மொழி - ௮௫ - க்குப் பாசுரம் - ௯௩௭.

---

இன்னுயிர்மால்தோற்றினதிங்கென்னெஞ்சிலென்றுகண்ணால்
அன்றவனைக்காணவெண்ணியாண்பெண்ணாய்ப்—பின்னையவன்
தன்னைநினைவிப்பவற்றால்தான்தளர்ந்தமாறனருள்
உன்னுமவர்க்குள்ளமுருகும் (௮௫)

## சு - ம் திருவாய்மொழி - உருகுமால்.

இ து வு ம அ.

கலிவிருத்தம்-பண்-நட்டராகம்-தாளம்-ஏழொத்து.

அபரூபராகம்- ஆதிதாளம்.

* உருகுமானெஞ்சமுயிரின்பரமன்றிப்
பெருகுமால்வேட்கையுமென்செய்கேன்றொண்டனேன்
தெருவெல்லாங்காவிகமழ்திருக்காட்கரை
மருவியமாயன்றன்மாயம்நினைதொறே. (க)

நினைதொறுஞ்சொல்லுந்தொறுநெஞ்சிடிந்துகும்
வினைகொள்சீர்பாடிலும்வேமெனதாருயிர்
சுனைகொள்பூஞ்சோலைத்தென்காட்கரையென்னப்பா
நினைகிலேனுனக்காட்செய்யுநீர்மையே. (உ)

நீர்மையாலெனஞ்சம்வஞ்சித்துப்புகுந்தென்னை
ஈர்மைசெய்தென்னுயிராயென்னுயிருண்டான்
சீர்மல்குசோலைத்தென்காட்கரையென்னப்பன்
கார்முகில்வண்ணன்றன்கள்வமறிகிலேன். (ங)

அறிகிலேன்றன்னுளனைத்துலகுநிற்க
நெறிமையாற்றானுமவற்றுணிற்கும்பிரான்
வெறிகமழ்சோலைத்தென்காட்கரையென்னப்பன்
சிறியவென்னாருயிருண்ட திருவருளே. (ச)

திருவருள்செய்பவன்போலவென்னுள்புகுந்
துருவமுமாருயிருமுடனேயுண்டான்
திருவளர்சோலைத்தென்காட்கரையென்னப்பன்
கருவளர்மேனியென்கண்ணன்கள்வங்களே. (ரு)

என்கண்ணன்கள்வமெனக்குச்செம்மாய்நிற்கும்
அங்கண்ணனுண்டவென்னாருயிர்க்கோதிது
புன்கண்மையெய்திப்புலம்பியிராப்பகல்
என்கண்ணனென்றவன்காட்கரையேத்துமே. (சு)

காட்கரையேத்துமதனுட்கண்ணாவென்னும்
வேட்கைநோய்கூர நினைந்துகரைந்துகும்
ஆட்கொள்வானொத்தென்னுயிருண்டமாயனால்
கோட்குறைபட்டதென்னாருயிர்கோளுண்டே. (எ)

கோளுண்டானன்றிவந்தென்னுயிர்தானுண்டான்
நாளுநாள்வந்தென்னைமுற்றவுந்தானுண்டான்
காளநீர்மேகத்தென்காட்கரையென்னப்பற்
காளன்றேபட்டதென்னாருயிர்பட்டதே. (அ)

ஆருயிர்பட்டதெனதுயிர்பட்டது
பேரிதழ்த்தாமரைக்கட்கனிவாயதோர்
காரெழின்மேகத்தென்காட்கரைக்கோயில்கொள்
சீரெழினாற்றடந்தோட்டெய்வவாரிக்கே. (கூ)

வாரிக்கொண்டுன்னைவிழுங்குவன்காணிலென்
றார்வுற்றவென்னையொழியவென்னின்முன்னம்
பாரித்துத், தானென்னைமுற்றப்பருகினான்
காரொக்குங்காட்கரையப்பன்கடியனே. (௧0)

* கடியனாய்க்கஞ்சனைக்கொன்றபிரான்றன்னைக்
கொடிமதிட்டென்குருகூர்ச்சடகோபன்சொல்
வடிவமையாயிரத்திப்பத்தினாற்சன்மம்
முடிவெய்தி, நாசங்கண்டீர்களெங்கானலே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ. திருவாய்மொழி - அகூ - க்குப் பாசுரம் கூசஅ- .

உருகுமாலென்னெஞ்சமுன்செயல்களெண்ணிப்
பெருகுமால்வேட்கையெனப்பேசி—மருவுகின்ற
இன்னாப்புடனவன்சேர்ந்துறைத்தமாறன்சொல்
என்னாச்சொல்லாதிருப்பதெங்கு. (கூச)

## எ - ம் திருவாய்மொழி- எங்கானல்.

இதுவுமது.

* நாலடித்தாழிசை-பண்-நட்டராகம்-தாளம்-ஏழொத்து.

கண்டாராகம் - ஆதிதாளம்.

* எங்கானலகங்கழிவாயிரைதேர்ந்திங்கினிதமரும்
செங்காலமடநாராய்திருமூழிக்களத்துறையும்
கொங்கார்பூந்துழாய்முடியெங்குடக்கூத்தற்கென்றூதாய்
நுங்கால்களென்றலைமேற்கெழுமீரோநுமரோடே. (க)

* "கலிவிருத்தம்" என்பாருமுளர்.

நுமரோடும்பிரியாதேநீருநுஞ்சேவலுமாய்
அமர்காதற்குருகினங்காளணிமூழிக்களத்துறையும்
எமராலும்பழிப்புண்டிங்கென்றம்மாலிழிப்புண்டு
தமரோடங்குறைவார்க்குத்தக்கிலமேகேளீரே. (௨)

தக்கிலமேகேளீர்கடடம்புனல்வாயிரைதேரும்
கொக்கினங்காள்குருகினங்காள்குளிர்மூழிக்களத்துறையும்
செக்கமலத்தலர்போலுங்கண்கைகால்செங்கனிவாய்
அக்கமலத்திலைபோலுந்திருமேனியடிகளுக்கே. (௩)

திருமேனியடிகளுக்குத்தீவினையேன்விடுதூதாய்
திருமூழிக்களமென்னுஞ்செழுநகர்வாயணிமுகில்காள்
திருமேனியவட்கருளீரென்றக்காலும்மைத்தன்
திருமேனியொளியகற்றித்தெளிவிசும்புகடியுமே. (௪)

தெளிவிசும்புகடிதோடித்தீவளைத்துமின்னிலகும்
ஒளிமுகில்காடிருமூழிக்களத்துறையுமொண்சுடர்க்குத்
தெளிவிசும்புதிருநாடாத்தீவினையேன்மனத்துறையும்
துளிவார்கட்குழலாற்கென்றூதுரைத்தல்செப்புமினே. (௫)

தூதுரைத்தல்செப்புமின்கடுமொழிவாய்வண்டினங்காள்
போதிரைத்துநுகரும்பொழின்மூழிக்களத்துறையும்
மாதரைத்தம்மார்பகத்தேவைத்தார்க்கென்வாய்மாற்றம்
தூதுரைத்தல்செப்புதிரேற்சுடர்வளையுங்கலையுமே. (௬)

சுடர்வளையுங்கலையுங்கொண்டருவினையேன்றோடுறந்த
படர்புகழான்றிருமூழிக்களத்துறையும்பங்கயக்கட்
சுடர்பவளவாயனைக்கண்டொருநாளோர்தாய்மாற்றம்
படர்பொழில்வாய்க்குருகினங்காளெனக்கொன்றுபணியீரே. (௭)

எனக்கொன்றுபணியீர்களிரும்பொழில்வாயிரைதேர்ந்து
மனக்கின்பம்படமேவும்வண்டினங்காடும்பிகாள்
கனக்கொடிண்மதிள்புடைசூழ்திருமூழிக்களத்துறையும்
புனக்கொள்காயாமேனிப்பூந்துழாய்முடியார்க்கே. (௮)

பூந்துழாய்முடியார்க்குப்பொன்னாழிக்கையார்க்கு
ஏந்துநீரிளங்குருகேதிருமூழிக்களத்தாருக்
கேந்துபூண்முலைபயந்தென்னிணைமலர்க்கண்ணீர்ததும்பத்
தாந்தம்மைக்கொண்டகறறகவன்றென்றுரையீரே. (௯)

தகவன்றென்றுரையீர்கடடம்புனல்வாயிரைதேர்ந்து
மிகவின்பம்படமேவுமென்னடையவன்னங்காள்
மிகமேனிமெலிவெய்திமேகலையுமீடழிந், தென்
அகமேனியொழியாமேதிருமூழிக்களத்தார்க்கே. (௧௦)

* ஒழிவின்றித்திருமூழிக்களத்துறையுமொண்சுடரை
ஒழிவில்லாவணிமழலைக்கிளிமொழியாளலற்றியசொல்
வழுவில்லாவண்குருகூர்ச்சடகோபன்வாய்ந்துரைத்த
அழிவில்லாவாயிரத்திப்பத்துநோயறுக்குமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ திருவாய்மொழி - அஎ - க்குப் பாசுரம் - கூுகூ.

---

எங்காதலுக்கடிமாலேய்ந்தவடிவழகென்
றங்காதுபற்றுசாவாங்கவன்பால்—எங்குமுள்ள
புள்ளினத்தைத்தூதாகப்போகவிடுமாறன்றாள்
உள்ளினர்க்குத்தீங்கையறுக்கும். (அ)

---

## அ-ம் திருவாய்மொழி-அறுக்கும்வினை.

இதுவுமது.

கலிவிருத்தம்-பண் - கொல்லி-தாளம் - இடையொத்து.

சாவேரிராகம் - ஆதிதாளம்.

* அறுக்கும்வினையாயினவாகத்தவனை
நிறுத்துய்மனத்தொன்றியசிந்தையினர்க்கு
வெறித்தண்மலர்ச்சோலைகள்சூழ்திருநாவாய்
குறுக்கும்வகையுண்டுகொலோகொடியேற்கே. (க)

கொடியேரிடைக்கோகனகத்தவள்கேள்வன்
வடிவேற்றடங்கண்மடப்பின்னைமணாளன்
நெடியானுறைசோலைகள்சூழ்திருநாவாய்
அடியேனணுகப்பெறுநாளெவைகொலோ. (உ)

எவைகொலணுகப்பெறுநாளென்றெப்போதும்
கவையின்மனமின்றிக்கண்ணீர்கள்கலுழ்வன்
நவையிற்றிருநாரணன்சேர்திருநாவாய்
அவையுட்புகலாவதோர்நாளறியேனே. (ங)

நாளேலறியேனெனக்குள்ளனநாளும்
மீளாவடிமைப்பணிசெய்யப்புகுந்தேன்
நீளார்மலர்ச்சோலைகள்சூழ்திருநாவாய்
வாளேதடங்கண்மடப்பின்னைமணாளா. (ச)

மணாளன்மலர்மங்கைக்குமண்மடந்தைக்கும்
கணாள, னுலகத்துயிர்தேவர்கட்கெல்லாம்
விணாளன்விரும்பியுறையுந்திருநாவாய்
கணாறக்களிக்கின்றதிங்கென்றுகொல்கண்டே. (ரு)

கண்டேகளிக்கின்றதிங்கென்றுகொல்கண்கள்
தொண்டேயுனக்காயொழிந்தேன்றுரிசின்றி
வண்டார்மலர்ச்சோலைகள்சூழ்திருநாவாய்
கொண்டேயுறைகின்றவெங்கோவலர்கோவே. (சு)

கோவாகியமாவலியைநிலங்கொண்டாய்
தேவாசுரஞ்செற்றவனேதிருமாலே
நாவாயுறைகின்றவென்னாரணநம்பீ
ஆவாவடியானிவனென்றருளாயே. (எ)

அருளாதொழிவாயருள்செய், தடியேனைப்
பொருளாக்கியுன்பொன்னடிக்கீழ்புகவைப்பாய்
மருளேயின்றியுன்னையென்னெஞ்சத்திருத்தும்
தெருளேதருதென்றிருநாவாயென்றேவே. (அ)

தேவர்முனிவர்க்கென்றுங்காண்டற்கரியன்
மூவர்முதல்வனொருமூவுலகாளி
தேவன்விரும்பியுறையுந்திருநாவாய்
யாவருணுகப்பெறுவாரினியந்தோ. (அ)

அந்தோவணுகப்பெறுநாளென்றெப்போதும்
சிந்தைகலங்கித்திருமாலென்றழைப்பன்
கொந்தார்மலர்ச்சோலைகள்சூழ்திருநாவாய்
வந்தேயுறைகின்றவெம்மாமணிவண்ணா. (கூ)

※ வண்ணம்மணிமாடநன்னாவாயுள்ளானைத்
திண்ணம்மதிட்டென்குருகூர்ச்சடகோபன்
பண்ணார்தமிழாயிரத்திப்பத்தும்வல்லார்
மண்ணாண்டுமணங்கமழ்வர்மல்லிகையே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - அஅ - க்குப் பாசுரம் - கூO.

---

அறுக்குமிடரென்றவன்பாலாங்குவிட்டதூதர்
மறித்துவரப்பற்றுமனத்தால்—அறப்பதறிச்
செய்யதிருநாவாயிற்செல்லநினைந்தான்மாறன்
மையலினாற்செய்வதறியாமல். (அஅ)

## கூ-ம் திருவாய்மொழி - மல்லிகை.

### இதுவுமது.

எண்சீராசிரியவிருத்தம்-பண்-பஞ்சமம்-தாளம்-ஏழொத்து.

சங்கராபரணராகம்-ஆதிதாளம்.

* மல்லிகைகமழ்தென்றலீருமாலோவண்குறிஞ்சியிசைதவழுமாலோ
செல்கதிர்மாலையுமயக்குமாலோசெக்கர்நன்மேகங்கள்சிதைக்குமாலோ
வல்லியந்தாமரைக்கண்ணனெம்மானாயர்களேறரியேறெம்மாயோன்
புல்லியமுலைகளுந்தோளுங்கொண்டுபுகலிடமறிகிலந்தமியமாலோ.

புகலிடமறிகிலந்தமியமாலோபுலம்புறுமணிதென்றலாம்பலாலோ
பகலடுமாலைவண்சாந்தமாலோபஞ்சமமுல்லைதண்வாடையாலோ
அகலிடம்படைத்திடந்துண்டுமிழ்ந்தெங்குமளிக்கின்றவாயன்மாயோன்
இகலிடத்தசுரர்கள்கூற்றம்வாரானினியிருந்தென்னுயிர்காக்குமாறென். (உ)

இனியிருந்தென்னுயிர்காக்குமாறெனிணைமுலைமுகநுண்ணிடைநுடங்கத் [ன்
துனியிருங்கலவிசெய்தாகந்தோய்ந்து துறந்தெம்மையிட்டகல்கண்ணன்கள்வ
தனியிளஞ்சிங்கமெம்மாயன்வாரான்றாமரைக்கண்ணுஞ்செவ்வாயு, நீலப்
பனியிருங்குழல்களுநான்குதோளும்பாவியேன்மனத்தேநின்றீருமாலோ. (ங)

பாவியேன்மனத்தேநின்றீருமாலோவாடைதண்வாடைவெவ்வாடையாலோ
மேவுதண்மதியம்வெம்மதியமாலோமென்மலர்ப்பள்ளிவெம்பள்ளியாலோ
தூவியம்புள்ளுடைத்தெய்வவண்டுதுதைந்தவெம்பெண்மையம்பூவிதாலோ
ஆவியின்பரமல்லவகைகளாலோயாமுடைநெஞ்சமுந்துணையன்றாலோ. (ச)

யாமுடைநெஞ்சமுந்துணையன்றாலோவாபுகுமாலையுமாகின்றாலோ
யாமுடையாயன்றன்மனங்கல்லாலோவவனுடைத்தீங்குழலீருமாலோ
யாமுடைத்துணையென்னுந்தோழிமாருமெம்மின்முன்னவனுக்குமாய்வராலோ
யாமுடையாருயிர்காக்குமாறெனவனுடையருள்பெறும்போதரிதே.

அவனுடையருள்பெறும்போதரிதாலவ்வருளல்லனவருளுமல்ல
அவனருள்பெறுமளவாவியில்லாதடுபகல்மாலையுநெஞ்சுங்காணேன்
சிவனொடுபிரமன்வண்டிருமடந்தைசேர்திருவாகமெம்மாவியீரும்
எவமினிப்புகுமிடமெவன்செய்கேனோவாருக்கென்சொல்லுகேனன்னைமீர்காள்

ஆருக்கென்சொல்லுகேனன்னைமீர்காளாருயிரளவன்றிக்கூர்தண்வாடை
காரொக்கும்மேனிநங்கண்ணன்கள்வங்கவர்ந்தவத்தனிநெஞ்சமவன்கணஃதே
சீருற்றவகிற்புகையாழ்நரம்புபஞ்சமந்தண்பசுஞ்சாந்தணைந்து
போருற்றவாடைதண்மல்லிகைப்பூப்புதுமணமுகந்துகொண்டெறியுமாலோ. எ

புதுமணமுகந்துகொண்டெறியுமாலோபொங்கிளவாடைபுன்செக்கராலோ
அதுமணந்தகன்றநங்கண்ணன்கள்வன்கண்ணனிற்கொடிதினியதனிலும்பர்
மதுமணமல்லிகைமந்தக்கோவைவண்பசுஞ்சாந்தினிற்பஞ்சமும்வைத்
ததுமணந்தின்னருளாய்ச்சியர்க்கேயூதுமத்தீங்குழற்கேயுய்யேனன்.

ஊதுமத்தீங்குழற்கேயுய்யேனனதுமொழிந்திடையிடைதன்செய்கோலத்
தூதுசெய்கண்கள்கொண்டொன்றுபேசித்தூமொழியிசைகள்கொண்
[டொன்றுநோக்கிப்
பேதுறுமுகஞ்செய்துநொந்துநொந்துப்பேதைநெஞ்சறவறப்பாடும்பாட்டை
யாதுமொன்றறிகிலமம்மவம்மமாலையும்வந்ததுமாயன்வாரான். (கூ)

மாலையும்வந்ததுமாயன்வாரான்மாமணிபுலம்பவல்லேறணைந்த
கோலநன்னாகுகளுகளுமாலோகொடியனகுழல்களுந்குழறுமாலோ
வாலொளிவளர்முல்லைக்கருமுகைகண்மல்லிகையலம்பிவண்டாலுமாலோ
வேலையும்விசும்பில்விண்டலறுமாலோவென்சொல்லியுய்வனிங்கவனைவிட்டே.

*அவனைவிட்டகன்றுயிராற்றகில்லாவணியிழையாய்ச்சியர்மாலைப்பூசல்
அவனைவிட்டகல்வதற்கேயிரங்கியணிகுருகூர்ச்சடகோபன்மாறன்
அவனியுண்டுமிழ்ந்தவன்மேலுரைத்தவாயிரத்துளிவைபத்துங்கொண்
டவனியுளலற்றிநின்றுய்மின்றொண்டீர்ச்சொன்னமாலைகண்ணிந்தொழுதே.

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - அகூ - க்குப் பாசுரம் - கூஅக.

---

மல்லடிமைசெய்யுநாள்மால்தன்னைக்கேட்கவவன்
செல்லுமளவும்பற்றுத்தொன்னலத்தால்—செல்கின்ற
ஆற்றாமைபேசியலமர்ந்தமாறனருள்
மாற்றாகப்போகுமென்றன்மால். (அகூ)

## ௧0-ம் திருவாய்மொழி - மாலைநண்ணி.

இதுவுமது.

கலிவிருத்தம் - பண் - நட்டபாஷை - தாளம் - ஒன்பதொத்து.

கேதாரகௌளராகம் - ஆதிதாளம்.

* மாலைநண்ணித்தொழுதெழுமினோவினைகெடக்
காலைமாலைகமலமலரிட்டுநீர்
வேலைமோதுமதிள்சூழ்திருக்கண்ணபுரத்
தாலின்மேலாலமர்ந்தானடியிணைகளே. (௧)

கள்ளவிழுமலரிட்டுநீரிறைஞ்சுமின்
நள்ளிசேரும்வயல்சூழ்கிடங்கின்புடை
வெள்ளியேய்ந்தமதிள்சூழ்திருக்கண்ணபுரம்
உள்ளி, நாளுந்தொழுதெழுமினோதொண்டரே. (௨)

தொண்டர்நுந்தந்துயர்போகநீரேகமாய்
விண்டுவாடாமலரிட்டுநீரிறைஞ்சுமின்
வண்டுபாடும்பொழில்சூழ்திருக்கண்ணபுரத்
தண்டவாண, னமரர்பெருமானையே. (௩)

மானைநோக்கிமடப்பின்னைதன்கேள்வனைத்
தேனைவாடாமலரிட்டுநீரிறைஞ்சுமின்
வானையுந்துமதிள்சூழ்திருக்கண்ணபுரம்
தானயந்தபெருமான்சரணாகுமே. (௪)

சரணமாகுந்தனதாளடைந்தார்க்கெல்லாம்
மரணமானால்வைகுந்தங்கொடுக்கும்பிரான்
அரணமைந்தமதிள்சூழ்திருக்கண்ணபுரத்
தரணியாளன்றனதன்பர்க்கன்பாகுமே. (௫)

அன்பனாகுந்தனதாளடைந்தார்க்கெல்லாம்
செம்பொனாகத்தவுணனுடல்கீண்டவன்
நன்பொன்னேய்ந்தமதிள்சூழ்திருக்கண்ணபுரத்
தன்ப, னாளுந்தனமெய்யர்க்குமெய்யனே. (௬)

மெய்யனாகும்விரும்பித்தொழுவார்க்கெல்லாம்
பொய்யனாகும்புறமேதொழுவார்க்கெல்லாம்
செய்யில்வாளையுகளுந்திருக்கண்ணபுரத்
தைய, னாகத்தணைப்பார்கட்கணியனே. (௭)

அணியனாகுந்தனதாளடைந்தார்க்கெலாம்
பிணியுஞ்சாராப்பிறவிகெடுத்தாளும்
மணிபொன்னேய்ந்தமதிள்சூழ்திருக்கண்ணபுரம்
பணிமி, னாளும்பரமேட்டிதன்பாதமே. (௮)

பாதநாளும்பணியத்தணியும்பிணி
ஏதஞ்சாராவெனக்கேலினியென்குறை
வேதநாவர்விரும்புந்திருக்கண்ணபுரத்
தாதியானை, யடைந்தார்க்கல்லலில்லையே. (௯)

இல்லையல்லலெனக்கேலினியென்குறை
அல்லிமாதரமருந்திருமார்பினன்
கல்லிலேய்ந்தமதிள்சூழ்திருக்கண்ணபுரம்
சொல்ல, நாளுந்துயர்பாடுசாராவே. (௧0)

* பாடுசாராவினைபற்றறவேண்டுவீர்
மாடநீடுகுருகூர்ச்சடகோபன்சொல்
பாடலானதமிழாயிரத்துளிப்பத்தும்
பாடியாடிப்பணிமினவன் * ருள்களே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஒன்பதாம்பத்து முற்றும்.

ஆ_பத்து-கூ-ல் - திருவாய்மொழி - கூ0 - க்குப் பாசுரம் - கூகூஉ.

மாலுமதுவாஞ்சைமுற்றும்மன்னுமுடம்பின்முடிவில்
சாலநண்ணிச்செய்வனெனத்தானுகந்து—மேலவனை ச்
சீரார்கணபுரத்தேசேருமெனுஞ்சீர்மாறன்
தாராளேவென்றனக்குத்தாள். (கூ0)

## பத்தாம்பத்து.

### க-ம் திருவாய்மொழி - தாளதாமரை.

கைங்கர்ய ப்ரதிபந்தக நிஸ்லேஷ நிபர்ஹணத்தை
அருளிச்செய்கிருர்.

கலித்துறை - பண் - இந்தளம் - தாளம் - ஏழொத்து.

பைரவிராகம் - ரூபகதாளம்.

* தாளதாமரைதடமணிவயற்றிருமோகூர்
நாளுமேவிநன்கமர்ந்துநின்றசுரரைத்தகர்க்கும்
தோளுநான்குடைச்சுரிகுழற்கமலக்கட்கனிவாய்க்
காளமேகத்தையன்றிமற்றொன்றிலங்கதியே. (க)

இலங்கதிமற்றொன்றெம்மைக்குமீன்றண்டுழாய்
அலங்கலங்கண்ணியாயிரம்பேருடையம்மான்
நலங்கொணுன்மறைவாணர்கள்வாழ்திருமோகூர்
நலங்கழலவனடிநிழற்றடமன்றியாமே. (உ)

அன்றியாமொருபுகலிடமிலமென்றென்றலற்றி
நின்றுநான்முகனரனொடுதேவர்களுட
வென்றிமூவுலகளித்துழல்வான்றிருமோகூர்
நன்றுநாமினிநணுகுதுநமதிடர்கெடவே. (௩)

இடர்கெடவெம்மைப்போந்தளியாயென்றென்றேத்திச்
சுடர்கொள்சோதியைத்தேவருமுனிவருந்தொடரப்
படர்கொள்பாம்பணைப்பள்ளிகொள்வான்றிருமோகூர்
இடர்கெடவடிபரவுந்தொண்டீர்வம்மினே. (ச)

* "தாள்களையே" என்றுஞ் சில ஸ்ரீகோஶங்களிற்காணலாம்.

தொண்டீர்வம்மினஞ்சுடரொளியொருதனிமுதல்வன்
அண்டமூவுலகளந்தவனணிதிருமோகூர்
எண்டிசையுமீன்கரும்பொடுபெருஞ்செந்நெல்விளையக்
கொண்டகோயிலைவலஞ்செய்திங்காடுதுங்கூத்தே. (௫)

கூத்தன்கோவலன்குதற்றுவல்லசுரர்கள்கூற்றம்
ஏத்துநங்கட்குமமரர்க்குமுனிவர்க்குமின்பன்
வாய்த்ததண்பணைவளவயல்சூழ்திருமோகூர்
ஆத்தன்றாமரையடியன்றிமற்றிலமரணே. (௬)

மற்றிலமரண்வான்பெரும்பாழ்தனிமுதலாச்
சிற்றுநீர்படைத்ததன்வழித்தொன்முனிமுதலாம்
முற்றுந்தேவரோடுலகுசெய்வான்றிருமோகூர்
சுற்றிநாம்வலஞ்செய்யநந்துயர்கெடுங்கடிதே. (௭)

துயர்கெடுங்கடிதடைந்துவந்தடியவர்தொழுமின்
உயர்கொள்சோலையொண்டடமணியொளிதிருமோகூர்
பெயர்களாயிரமுடையவல்லரக்கர்புக்கழுந்தத்
தயரதன்பெற்றமரதகமணித்தடத்தினையே. (௮)

மணித்தடத்தடிமலர்க்கண்கள்பவளச்செவ்வாய்
அணிக்கொணாற்றடந்தோட்டெய்வமசுரரையென்றும்
துணிக்கும்வல்லரட்டனுறைபொழிற்றிருமோகூர்
நணித்துநம்முடைநல்லரணமடைந்தனமே. (௯)

நாமடைந்தநல்லரணமக்கென்றுநல்லமரர்
தீமைசெய்யும்வல்லசுரரையஞ்சிச்சென்றடைந்தால்
காமரூபங்கொண்டெழுந்தளிப்பான்றிருமோகூர்
நாமமேநவின்றெண்ணுமினேத்துமினமர்காள். (௧0)

* ஏத்துமினமர்காளென்றுதான்குடமாடு
கூத்தனைக், குருகூர்ச்சடகோபன்குற்றேவல்கள்
வாய்த்தவாயிரத்துளிவைவண்டிருமோகூர்க்
கீந்தபத்திவையேத்தவல்லார்க்கிடர்கெடுமே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆக திருவாய்மொழி - ௯௧ - க்குப் பாசுரம் - ௧00௧.

---

தாளடைந்தோர்தங்களுக்குத்தானேவழித்துணையாம்
காளமேகத்தைக்கதியாக்கி—மீளுதலாம்
ஏதமிலாவிண்ணுலகிலேகவெண்ணுமாறனெனக்
ஏதமுளதெல்லாங்கெடும். (௯௧)

## உ - ம் திருவாய்மொழி - கெடுமிடர்.

இ த வு ம த.

கலிவிருத்தம் - பண் - இந்தளம் - தாளம் - ஏழொத்து.

கமாசுராகம் - ரூபகதாளம்.

கெடுமிடராயவெல்லாங்கேசவாவென்ன, நாளும்
கொடுவினைசெய்யுங்கூற்றின்றமர்களுங்குறுககில்லார்
விடமுடையரவிற்பள்ளிவிரும்பினான்சுரும்பலற்றும்
தடமுடைவயலனந்தபுரநகர்ப்புகுதுமின்றே. (க)

இன்றுபோய்ப்புகுதிராகிலெழுமையுமேதஞ்சாராக்
குன்றுநேர்மாடமாடேகுருந்துசேர்செருந்திபுன்னை
மன்றலர்பொழிலனந்தபுரநகர்மாயனாமம்
ஒன்றுமோராயிரமாமுள்ளுவார்க்கும்பரூரே. (உ)

ஊரும்புட்கொடியுமஃதேயுலகெலாமுண்டுமிழ்ந்தான்
சேருந்தண்ணனந்தபுரஞ்சிக்கெனப்புகுதிராகில்
தீருநோய்வினைகளெல்லாந்திண்ணநாமறியச்சொன்னோம்
பேருமோராயிரத்துளொன்றுநீர்பேசுமினே. (ங)

பேசுமின்கூசமின்றிப்பெரியநீர்வேலைசூழ்ந்து
வாசமேகமழுஞ்சோலைவயலணியனந்தபுரம்
நேசஞ்செய்துறைகின்றானைநெறிமையான்மலர்கடூவிப்
பூசனைசெய்கின்றார்கள்புண்ணியஞ்செய்தவாறே. (ச)

புண்ணியஞ்செய்துநல்லபுனலொடுமலர்கடூவி
எண்ணுமினெந்தைநாமமிப்பிறப்பறுக்குமப்பால்
திண்ணநாமறியச்சொன்னோஞ்செறிபொழிலனந்தபுரத்
தண்ணலார்கமலபாதமணுகுவாரமரராவார். (ரு)

அமரராய்த்திரிகின்றார்கட்காதிசேரனந்தபுரத்
தமரர்கோனர்ச்சிக்கின்றங்ககப்பணிசெய்வர்விண்ணோர்
நமர்களோசொல்லக்கேண்மினாமும்போய்நணுகவேண்டும்
குமரனார்தாதைதுன்பந்துடைத்தகோவிந்தனாரே. (சா)

துடைத்தகோவிந்தனாரேயுலகுயிர்தேவுமற்றும்
படைத்தவெம்பரமமூர்த்திபாம்பணைப்பள்ளிகொண்டான்
மடைத்தலைவாளைபாயும்வயலணியனந்தபுரம்
கடைத்தலைசீய்க்கப்பெற்றாற்கடுவினைகளையலாமே. (எ)

கடுவினைகளையலாகுங்காமனைப்பயந்தகாளை
இடவகைகொண்டதென்பரொழிலணியனந்தபுரம்
படமுடையரவிற்பள்ளிபயின்றவன்பாதங்காண
நடமினோநமர்களுள்ளீர்நாமுமக்கறியச்சொன்னோம். (அ)

நாமுமக்கறியச்சொன்னநாள்களுநணியவான்
சேமனன்குடைத்துக்கண்டீர்செறிபொழிலனந்தபுரம்
தூபநல்விரைமலர்கடுவளறவாய்ந்துகொண்டு
வாமனனடிக்கென்றேத்தமாய்ந்தறும்வினைகடானே. (௯)

மாய்ந்தறும்வினைகடானேமாதவாவென்ன, நாளும்
ஏய்ந்தபொன்மதிளனந்தபுரநகரெந்தைக்கென்று
சாந்தொடுவிளக்கந்தூபந்தாமரைமலர்கணல்ல
வாய்ந்துகொண்டேத்தவல்லாரந்தமில்புகழினாரே. (க0)

* அந்தமில்புகழனந்தபுரநகராதிதன்னைக்
கொந்தலர்பொழிற்குருகூர்மாறன்சொல்லாயிரத்துள்
ஐந்தினோடைந்தும்வல்லாரணைவர்போயமருலகில்
பைந்தொடிமடந்தையர்தம்வேய்மருதோளிணையே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.
ஆ_திருவாய்மொழி - கஉ - க்குப் பாசுரம் - க0கச.

---

கெடுமிடர்வைகுந்தத்தைக்கிட்டினாப்போல்
தடமுடையனந்தபுரந்தன்னில்—படவரவில்
கண்டுயில்மாற்காட்செய்யக்காதலித்தான்மாறனுயர்
விண்டனிலுள்ளோர்வியப்பவே. (கஉ)

---

## ௩ - ம் திருவாய்மொழி - வேய்மருதோள்.

இதுவுமது.

எண்சீராசிரியவிருத்தம்-பண்-பஞ்சமம்-தாளம்-ஏழொத்து.

காம்போஜிராகம் - ஆதிதாளம்.

* வேய்மருதோளிணைமெலியுமாலோமெலிவுமென்றனிமையும்யாதுநோக்காக்
காமருகுயில்களுங்கூவுமாலோகணமயிலவைகலந்தாலுமாலோ
ஆமருவினநிரைமேய்க்கநீபோக்கொருபகலாயிரமூழியாலோ
தாமரைக்கண்கள்கொண்டீர்தியாலோதகவிலைதகவிலையேநீகண்ணா. க

தகவிலைதகவிலையேநீகண்ணாதடமுலைபுணர்தொறும்புணர்ச்சிக்காராச்
சுகவெள்ளம்விசும்பிறந்தறிவைமூழ்கச்சூழ்ந்ததுகனவெனநீங்கியாங்கே
அகவுயிரகமகந்தோறுமுள்புக்காவியின்பரமல்லவேட்கையந்தோ
மிகமிகவினியுன்னைப்பிரிவையாமல்வீவநின்பசுநிரைமேய்க்கப்போக்கே.(உ)

வீவநின்பசுநிரைமேய்க்கப்போக்குவெவ்வுயிர்கொண்டெனதாவியேமால்
யாவருந்துணையில்லையானிருந்துன்னஞ்சனமேனியையாட்டங்காணேன்
போவதென்றொருபகனீயகன்றாற்பொருகயற்கண்ணிணைநீருநில்லாச் [தானே.
சாவதிவ்வாய்க்குலத்தாய்ச்சியோமாய்ப்பிறந்தவித்தொழுத்தையோந்தனிமை

தொழுத்தையோந்தனிமையுந்துணைபிரிந்தார்துயரமுநினைகிலைகோவிந்தா, நின்
தொழுத்தனிற்பசுக்களையேவிரும்பித்துறந்தெம்மைவிட்டவைமேய்க்கப்போதி
பழுத்தநல்லமுதினின்சாற்றுவெள்ளம்பாவியேன்மனமகந்தோறுமுள்புக்
கழுந்த, நின்செங்கனிவாயின்கள்வப்பணிமொழிநினைதொறுமாவிவேமால்.

பணிமொழிநினைதொறுமாவிவேமாற்பகனிரைமேய்க்கியபோயகண்ணா
பிணியவிழ்மல்லிகைவாடைதூவப்பெருமதுமாலையும்வந்தின்றாலோ
மணிமிகுமார்பினின்முல்லைப்போதென்வனமுலைகமழ்வித்துன்வாயமுதந்தந்
தணிமிகுதாமரைக்கையையந்தோவடிச்சியோந்தலைமிசைநீயணியாய்.

அடிச்சியோந்தலைமிசைநீயணியாயாழியங்கண்ணாவுன்கோலப்பாதம்
பிடித்ததுநடுவுனக்கரிவையரும்பலரதுநிற்கவெம்பெண்மையாற்றோம்
வடித்தடங்கண்ணிணைநீருநில்லாமனமுநில்லாவெமக்கதுதன்னாலே
வெடிப்புநின்பசுநிரைமேய்க்கப்போக்குவேமெமதுயிரழன்மெழுகிலுக்கே.

வேமெமதுயிரழன்மெழுகிலுக்குவெள்வளைமேகலைகழன்றுவீழத்
தூமலர்க்கண்ணிணைமுத்தஞ்சோரத்துணைமுலைபயந்தென்றோள்கள்வாட
மாமணிவண்ணாவுன்செங்கமலவண்ணமென்மலரடிநோவநீபோய்[கே.
ஆமகிழ்ந்துகந்தவைமேய்க்கின்றுன்னோடசுரர்கடலைப்பெய்யிலெவங்கொலாங்

அசுரர்கடலைப்பெய்யிலெவங்கொலாங்கென்றழுமென்னாருயிரான்பின்போகே
கசிகையும்வேட்கையுமுட்கலந்துகலவியுநலியுமென்கைகழியேல் [ல்
வசிசெயுன்றாமரைக்கண்ணும்வாயுங்கைகளும்பீதகவுடையுங்காட்டி
ஒசிசெய்நுண்ணிடையிளவாய்ச்சியர்நீயுகக்குநல்லவரொடுமுழிதராயே.

உகக்குநல்லவரொடுமுழிதந்துன்றன்திருவுள்ளமிடர்கெடுந்தோறு, நாங்கள் [ல்
வியக்கவின்புறுதுமெம்பெண்மையாற்றோமெம்பெருமான்பசுமேய்க்கப்போகே
மிகப்பலவசுரர்கள்வேண்டுருவங்கொண்டுநின்றுழிதருவர்கஞ்சனேவ [தோ.
அகப்படிலவரொடுநின்னொடாங்கேயவத்தங்கள்விளையுமென்சொற்கொளந்

அவத்தங்கள்விளையுமென்சொற்கொளந்தோவசுரர்கள்வன்கையர்கஞ்சனேவ
தவத்தவர்மறுகநின்றுழிதருவர்தனிமையும்பெரிதுனக்கிராமனையும்
உவத்தலையுடன்றிரிகிலையுமென்றென்றூடுறவென்னுடையாவிவேமால்
திவத்திலும்பசுநிரைமேய்ப்புகத்திச்செங்கனிவாயெங்களாயர்தேவே.

* செங்கனிவாயெங்களாயர்தேவத்திருவடிதிருவடிமேற், பொருனற்
சங்கணிதுறைவன்வண்டென்குருகூர்வண்சடகோபன்சொல்லாயிரத்துள்
மங்கையராய்ச்சியராய்ந்தமாலையவனொடும்பிரிவதற்கிரங்கித், தையல்
அங்கவன்பசுநிரைமேய்ப்பொழிப்பானுரைத்தனவிவையும்பத்தவற்றின்சார்வே

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

அ திருவாய்மொழி - ௧௩ - க்குப் பாசுரம் - ௧௦௨௫.

---

வேய்மருதோளிந்திராகோன்மேவுகின்றதேசத்தைத்
தான்மருவாத்தன்மையினாற்றன்னையின்னம்—பூமியிலே
வைக்குமெனச்சங்கித்துமால்தெளிவிக்கத்தெளிந்த
தக்கபுகழ்மாறனெங்கள்சார்வு. (௧௩)

---

## ௪ - ம் திருவாய்மொழி - சார்வே.

### இதவுமது.

கலிவிருத்தம்-பண்-கொல்லி-தாளம்-நடையொத்து.

அபரூபராகம் - ஆதிதாளம்.

* சார்வேதவநெறிக்குத்தாமோதரன்றாள்கள்
கார்மேகவண்ணன்கமலநயனத்தன்
நீர்வானமண்ணெரிகாலாய்நின்றநேமியான்
பேர்வானவர்கள்பிதற்றும்பெருமையனே. (௧)

பெருமையனேவானத்திமையோர்க்குங்காண்டற்
கருமையனே, யாகத்தணையாதாற், கென்றும்
திருமெய்யுறைகின்றசெங்கண்மா, லாலும்
இருமைவினைகடிந்திங்கென்னையாள்கின்றானே. (௨)

ஆள்கின்றானாழியானாராற்குறைவுடையம்
மீள்கின்றதில்லைப்பிறவித்துயர்கடிந்தோம்
வாள்கெண்டையொண்கண்மடப்பின்னைதன்கேள்வன்
தாள்கண்டுகொண்டென்றலைமேற்புனைந்தேனே. (௩)

தலைமேற்புனைந்தேன்சரணங்க, ளாலின்
இலைமேற்றுயின்றானிமையோர்வணங்க
மலைமேற்றானின்றென்மனத்துளிருந்தானை
நிலைபேர்க்கலாகாமைநிச்சித்திருந்தேனே. (௪)

நிச்சித்திருந்தேனென்னெஞ்சங்கழியாமை
கைச்சக்கரத்தண்ணல்கள்வம்பெரிதுடையன்
மெய்ச்சப்படான்பிறர்க்குமெய்போலும்பொய்வல்லன்
நச்சப்படுநமக்குநாகத்தணையானே. (௫)

நாகத்தணையானைநாடோறுஞானத்தால்
ஆகத்தணைப்பார்க்கருள்செய்யுமம்மானை
மாகத்திளமதியஞ்சேருஞ்சடையானைப்
பாகத்துவைத்தான்றன்பாதம்பணிந்தேனே. (௬)

பணிநெஞ்சேநாளும்பரமபரம்பரனைப்
பிணி * யொன்றுஞ்சாராப்பிறவிகெடுத்தாளும்
மணிநின்றசோதிமதுசூதனென்னம்மான்
அணிநின்றசெம்பொனடலாழியானே. (௭)

ஆழியானாழியமரர்க்குமப்பாலான்
ஊழியானூழிபடைத்தானிரைமேய்த்தான்
பாழியந்தோளால்வரையெடுத்தான்பாதங்கள்
வாழியென்னெஞ்சேமறவாதுவாழ்கண்டாய். (௮)

கண்டேன்கமலமலர்ப்பாதங்காண்டலுமே
விண்டேயொழிந்தவினையாயினவெல்லாம்
தொண்டேசெய்தென்றுந்தொழுதுவழியொழுகப்
பண்டேபரமன்பணித்தபணிவகையே. (௯)

வகையான்மனமொன்றிமாதவனைநாளும்
புகையால்விளக்காற்புதுமலரானீரால்
திசைதோறமரர்கள்சென்றிறைஞ்சநின்ற
தகையான்சரணந்தமர்கட்கோர்பற்றே. (௧௦)

* பற்றென்றுபற்றிப்பரமபரம்பரனை
மற்றிண்டோண்மாலைவழுதிவளநாடன்
சொற்றொடையந்தாதியோராயிரத்துளிப்பத்தும்
கற்றார்க்கோர்பற்றாகுங்கண்ணன்கழலிணையே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - ௯௪ - க்குப் பாசுரம் - ௧௦௩௬.

---

சார்வாகவேயடியிற்றானுரைத்தபத்திதான்
சேரார்பலத்துடனேசேர்ந்ததனைச்—சோராமல்
கண்டுரைத்தமாறன்கழலிணையேநாடோறும்
கண்டுகக்குமென்னுடையகண். (௯௪)

---

* “ என்றுஞ்சாரா ” என்றும்பாடம்.

* செங்கனிவாயெங்களாயர்தேவத்திருவடிதிருவடிமேற்,பொருனற்
சங்கணிதுறைவன்வண்டென்குருகூர்வண்சடகோபன்சொல்லாயிரத்துள்
மங்கையராய்ச்சியராய்ந்தமாலையவனோடும்பிரிவதற்கிரங்கித், தையல்
அங்கவன்பசுநிரைமேய்ப்பொழிப்பானுரைத்தனவிவையும்பத்தவற்றின்சார்வே

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆக திருவாய்மொழி - கங - க்குப் பாசுரம் - க௦உரு.

---

வேய்மருதோளிந்திரைகோன்மேவுகின்றதேசத்தைத்
தான்மருவாத்தன்மையினாற்றன்னையின்னம்—பூமியிலே
வைக்குமெனச்சங்கித்துமால்தெளிவிக்கத்தெளிந்த
தக்கபுகழ்மாறனெங்கள்சார்வு (கங)

---

## ச - ம் திருவாய்மொழி - சார்வே.

இதுவுமது.

கலிவிருத்தம்-பண்-கொல்லி-தாளம்-நடையொத்து.

அபரூபராகம் - ஆதிதாளம்.

* சார்வேதவநெறிக்குத்தாமோதரன்றாள்கள்
கார்மேகவண்ணன்கமலநயனத்தன்
நீர்வானமண்ணெரிகாலாய்நின்றநேமியான்
பேர்வானவர்கள்பிதற்றும்பெருமையனே. (க)

பெருமையனேவானத்திமையோர்க்குங்காண்டற்
கருமையனே, யாகத்தனையாதாற், கென்றும்
திருமெய்யுறைகின்றசெங்கண்மா, னாளும்
இருமைவினைகடிந்திங்கென்னையாள்கின்றானே. (உ)

ஆள்கின்றானாழியானாராற்குறைவுடையம்
மீள்கின்றதில்லைப்பிறவித்துயர்கடிந்தோம்
வாள்கெண்டையொண்கண்மடப்பின்னைதன்கேள்வன்
தாள்கண்டுகொண்டென்றலைமேற்புனைந்தேனே. (ங)

தலைமேற்புனைந்தேன்சரணங்க, ளாலின்
இலைமேற்றுயின்றானிமையோர்வணங்க
மலைமேற்றானின்றென்மனத்துளிருந்தானை
நிலைபேர்க்கலாகாமைநிச்சித்திருந்தேனே. (ச)

Funding: IKS/Tattva Heritage. Digitization: eGangotri.



மிச்சித்திருந்தேனென்னெஞ்சங்கழியாமை
கைச்சக்கரத்தண்ணல்கள்வம்பெரிதுடையன்
மெய்ச்சப்படான்பிறர்க்குமெய்போலும்பொய்வல்லன்
நச்சப்படுநமக்குநாகத்தணையானே. (ரு)

நாகத்தணையானைநாடோறுஞானத்தால்
ஆகத்தணைப்பார்க்கருள்செய்யுமம்மானை
மாகத்திளமதியஞ்சேருஞ்சடையானைப்
பாகத்துவைத்தான்றன்பாதம்பணிந்தேனே. (சூ)

பணிநெஞ்சேநாளும்பரமபரம்பரனைப்
பிணி * யொன்றுஞ்சாராப்பிறவிகெடுத்தாளும்
மணிநின்றசோதிமதுசூதனென்னம்மான்
அணிநின்றசெம்பொனடலாழியானே. (எ)

ஆழியானாழியமரர்க்குமப்பாலான்
ஊழியானூழிபடைத்தானிரைமேய்த்தான்
பாழியந்தோளால்வரையெடுத்தான்பாதங்கள்
வாழியென்னெஞ்சேமறவாதுவாழ்கண்டாய். (அ)

கண்டேன்கமலமலர்ப்பாதங்காண்டலுமே
விண்டேயொழிந்தவினையாயினவெல்லாம்
தொண்டேசெய்தென்றுந்தொழுதுவழியொழுகப்
பண்டேபரமன்பணித்தபணிவகையே. (கூ)

வகையான்மனமொன்றிமாதவனைநாளும்
புகையால்விளக்காற்புதுமலரானீரால்
திசைதோறமரர்கள்சென்றிறைஞ்சநின்ற
தகையான்சரணந்தமர்கட்கோர்பற்றே. (கO)

* பற்றென்றுபற்றிப்பரமபரம்பரனை
மற்றிண்டோண்மாலைவழுதிவளநாடன்
சொற்றொடையந்தாதியோராயிரத்துளிப்பத்தும்
கற்றார்க்கோர்பற்றுகுங்கண்ணன்கழலிணையே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - கூச - க்குப் பாசுரம் - கOகூரு.

---

சார்வாகவேயடியிற்றுனைத்தபத்திதான்
சேரர்பலத்துடனேசேர்ந்ததனைச்—சோராமல்
கண்டுரைத்தமாறன்கழலிணையேநாடோறும்
கண்டுகக்குமென்னுடையகண். (கூச)

---

* "என்றுஞ்சாரா" என்றும்பாடம்.

## ரு-ம் திருவாய்மொழி-கண்ணன்.

இதுவுமது.

வஞ்சித்துறை-பண்-நாட்டம்-தாளம்-இடையொத்து.

வசந்தராகம் - ஆதிதாளம்.

* கண்ணன்கழலிணை
நண்ணுமனமுடையீர்
எண்ணுந்திருநாமம்
திண்ணநாரணமே. (க)

நாரணனெம்மான்
பாரணங்காளன்
வாரணந்தொலைத்த
காரணன்றானே. (உ)

தானேயுலகெல்லாம்
தானேபடைத்திடந்து
தானேயுண்டுமிழ்ந்து
தானேயாள்வானே. (௩)

ஆள்வானாழிநீர்க்
கோள்வாயரவணையான்
தாள்வாய்மலரிட்டு
நாள்வாய்நாடீரே. (ச)

நாடீர்நாடோறும்
வாடாமலர்கொண்டு
பாடீரவனாமம்
வீடேபெறலாமே. (ரு)

மேயான்வேங்கடம்
காயாமலர்வண்ணன்
பேயார்முலையுண்ட
வாயான்மாதவனே. (சா)

மாதவனென்றென்
றோதவல்லீரேல்
தீதொன்றுமடையா
ஏதஞ்சாராவே. (எ)

சாராவேதங்கள்
நீரார்முகில்வண்ணன்
பேராரோதுவார்
ஆராரமரரே. (அ)

அமரர்க்கரியானைத்
தமர்கட்கெளியானை
அமரத்தொழுவார்கட்
கமராவினைகளே. (கூ)

வினைவல்லிருளென்னும்
முனைகள்வெருவிப்போம்
சுனைநன்மலரிட்டு
நினைமின்னெடியானே. (க0)

* நெடியானருள்சூடும்
படியான்சடகோபன்
நொடியாயிரத்திப்பத்
தடியார்க்கருள்பேறே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ திருவாய்மொழி - கரு - க்குப் பாசுரம் - க0சஎ.

---

கண்ணனடியிணையிற்காதலுறுவார்செயலைத்
திண்ணமுறவேசுருங்கச்செப்பியே—மண்ணவர்க்குத்
தானுபதேசிக்கைதலைக்கட்டினான்மாறன்
ஆனபுகழ்ச்சேர்தன்னருள். (கரு)

## ரு - ம் திருவாய்மொழி - அருள்பெறுவார்.

இ து வு ம து.

கலிவிருத்தம்-பண்-இந்தளம்-தாளம்-நடையொத்து.

நாதநாமக்கிரியைராகம் - ரூபகதாளம்.

* அருள்பெறுவாரடியார்தம்மடியனேற், காழியான்
அருடருவானமைகின்றனதுநமதுவிதிவகையே
இருடருமாஞாலத்துளினிப்பிறவியான்வேண்டேன்
மருளொழிநீமடநெஞ்சேவாட்டாற்றானடிவணங்கே. (க)

வாட்டாற்றானடிவணங்கிமாஞாலப்பிறப்பறுப்பான்
கேட்டாயேமடநெஞ்சேகேசவனெம்பெருமானைப்
பாட்டாயபலபாடிப்பழவினைகள்பற்றறுத்து
நாட்டாரோடியல்வொழிந்துநாரணனைநண்ணினமே. (உ)

நண்ணினநாராயணனைநாமங்கள்பலசொல்லி
மண்ணுலகில்வளமிக்கவாட்டாற்றான்வந்தின்று
விண்ணுலகந்தருவானாய்விரைகின்றான்விதிவகையே
எண்ணினவாறாகாவிக்கருமங்களென்னெஞ்சே. (௩)

என்னெஞ்சத்துள்ளிருந்திங்கிருந்தமிழ்நூலிவைமொழிந்து
வன்னெஞ்சத்திரணியனைமார்பிளந்தவாட்டாற்றான்
மன்னஞ்சபாரதத்துப்பாண்டவர்க்காய்ப்படைதொட்டான்
நன்னெஞ்சேநம்பெருமானமக்கருடான்செய்வானே. (ச)

வானேறவழிதந்தவாட்டாற்றான்பணிவகையே
நானேறப்பெறுகின்றேனரகத்தைநகுநெஞ்சே
தேனேறுமலர்த்துளவந்திகழ்பாதஞ்செழும்பறவை
தானேறித்திரிவான்றனதாளிணையென்றலைமேலே. (ரு)

தலைமேலதாளிணைகடாமரைக்கண்ணென்னம்மான்
நிலைபேரானென்னெஞ்சத்தெப்பொழுதுமெம்பெருமான்
மலைமாடத்தரவணைமேல்வாட்டாற்றான்மதமிக்க
கொலையானைமருப்பொசித்தான்குரைகழல்கள்குறுகினமே. (சா)

குரைகழல்கள்குறுகினநங்கோவிந்தன்குடிகொண்டான்
திரைகுழுவுகடல்புடைசூழ்தென்னாட்டுத்திலதமன்ன
வரைகுழுவுமணிமாடவாட்டாற்றான்மலரடிமேல்
விரைகுழுவுநறுந்துளபமெய்ந்நின்றுகமழுமே. (எ)

மெய்ம்னின்றுகமழ்துளவவிரையேறுதிருமுடியன்
கைநின்றசக்கரத்தன்கருதுமிடம்பொருதுபுனல்
மைநின்றவரைபோலுந்திருவுருவவாட்டாற்கற்
கென்னன்றிசெய்தேனாவென்னெஞ்சிற்றிகழ்வதுவே. (அ)

திகழ்கின்றதிருமார்பிற்றிருமங்கைதன்னோடும்
திகழ்கின்றதிருமாலார்சேர்விடந்தண்வாட்டாறு
புகழ்கின்றபுள்ளூர்திப்போரரக்கர்குலங்கெடுத்தான்
இகழ்வின்றியென்னெஞ்சத்தெப்பொழுதும்பிரியானே. (கூ)

பிரியாதாட்செய்யென்றுபிறப்பறுத்தாளறக்கொண்டான்
அரியாகியிரணியனையாகங்கீண்டானன்று
பெரியார்க்காட்பட்டக்காற்பெறுதபயன்பெறுமாறு
வரிவாள்வாயரவணைமேல்வாட்டாற்றான்காட்டினனே. (கO)

* காட்டித்தன்கனைகழல்கள்கடுநரகம்புகலொழித்த
வாட்டாற்றெம்பெருமானைவளங்குருகூர்ச்சடகோபன்
பாட்டாயதமிழ்மாலையாயிரத்துளிப்பத்தும்
கேட்டாரார்வானவர்கள்செவிக்கினியசெஞ்சொல்லே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

ஆ திருவாய்மொழி - கூசு - க்குப் பாசுரம் - கOநஅ.

---

அருளாலடியிலெடுத்தமாலன்பால்
இருளார்ந்ததம்முடம்பையிச்சித்—திருவிசும்பில்
இத்துடன்கொண்டேகவிசைவுபார்த்தேயிருந்த
சுத்திசொல்லுமாறன்செஞ்சொல். (கூசு)

---

## எ - ம் திருவாய்மொழி - செஞ்சொல்.

அறுசீராசிரியவிருத்தம்—பண்—தக்கேசி—தாளம்—எமொத்து.

தன்யாசிராகம் - ஆதிதாளம்.

* செஞ்சொற்கவிகாளுயிர்காத்தாட்செய்மின்திருமாலிருஞ்சோலை
வஞ்சக்கள்வன்மாமாயன்மாயக்கவியாய்வந், தென்
னெஞ்சுமுயிருமுள்கலந்துநின்றாரறியாவண்ண, மென்
னெஞ்சுமுயிருமவையுண்டுதானேயாகிநிறைந்தானே. (க)

தானேயாகிநிறைந்தெல்லாவுலகுமுயிருந்தானேயாய்த்
தானேயானென்பானாகித்தன்னைத்தானே துதித், தெனக்குத்
தேனேபாலேகன்னலேயமுதேதிருமாலிருஞ்சோலைக்
கோனேயாகிநின்றொழிந்தானென்னைமுற்றுமுயிருண்டே. (உ)

என்னைமுற்றுமுயிருண்டென்மாயவாக்கையிதனுட்புக்
கென்னைமுற்றுந்தானேயாய்நின்றமாயவம்மான்சேர்
தென்னன்றிருமாலிருஞ்சோலைத்திசைகைகூப்பிச்சேர்ந்தயான்
இன்னம்போவேனேகொலோவென்கொலம்மான்றிருவருளே. (ங)

என்கொலம்மான்றிருவருள்களுலகுமுயிருந்தானேயாய்
நன்கென்னுடலங்கைவிடான்ஞாலத்தூடேநடந்துழக்கித்
தென்கொடிசைக்குத்திலதமாய்நின்றதிருமாலிருஞ்சோலை
நங்கள்குன்றங்கைவிடானண்ணாவசுரர்நலியவே. (ச)

நண்ணாவசுரர்நலிவெய்தநல்லவமரர்பொலிவெய்த
எண்ணாதனகளெண்ணுநன்முனிவரின்பந்தலைச்சிறப்பப்
பண்ணார்பாடலின்கவிகள்யானாய்த்தன்னைத்தான்பாடித்
தென்னாவென்னுமென்னம்மான்றிருமாலிருஞ்சோலையானே. (ரு)

திருமாலிருஞ்சோலையானேயாகிச்செழுமூவுலகுந், தன்
ஒருமாவயிற்றினுள்ளேவைத்தூழியூழிதலையளிக்கும்
திருமாலென்னையாளுமால்சிவனும்பிரமனுங்காணா
தருமாலெய்தியடிபரவவருளையீந்தவம்மானே. (சு)

அருளையீயென்னம்மானேயென்னுமுக்கணம்மானும்
தெருள்கொள்பிரமனம்மானுந்தேவர்கோனுந்தேவரும்
இருள்கள்கடியுமுனிவருமேத்துமம்மான்றிருமலை
மருள்கள்கடியுமணிமலைதிருமாலிருஞ்சோலைமலையே. (எ)

திருமாலிருஞ்சோலைமலையேதிருப்பாற்கடலேயென்றலையே
திருமால்வைகுந்தமேதண்டிருவேங்கடமேயெனதுடலே
அருமாமாயத்தெனதுயிரேமனமேவாக்கேகருமமே
ஒருமாநொடியும்பிரியானென்னூழிமுதல்வனொருவனே. (அ)

ஊழிமுதல்வனொருவனேயென்னுமொருவனுலகெல்லாம்
ஊழிதோறுந்தன்னுள்ளேபடைத்துக்காத்துக்கெடுத்துழலும்
ஆழிவண்ணனென்னம்மானந்தண்டிருமாலிருஞ்சோலை
வாழிமனமேகைவிடேலுடலுமுயிருமங்கவொட்டே. (கூ)

மங்கவொட்டுன்மாமாயைதிருமாலிருஞ்சோலைமேய
நங்கள்கோனேயானேநீயாகியென்னையளித்தானே
பொங்கைம்புலனும்பொறியைந்துங்கருமேந்திரியமைம்பூதம்
இங்கிவ்வுயிரேய்பிரகிருதிமானாங்காரமனங்களே. (க0)

* மானுங்காரமனங்கெடவைவர்வன்கையர்மங்கத்
தானுங்காரமரய்ப்புக்குத்தானேதானேயானுனைத்
தேனுங்காரப்பொழிற்குருகூர்ச்சடகோபன்சொல்லாயிரத்துள்
மானுங்காரத்திவைபத்துந்திருமாலிருஞ்சோலைமலைக்கே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ_திருவாய்மொழி - கூள - க்குப் பாசுரம் -க0சுசு.

---

செஞ்சொற்பரன்றனதுசீராருமேனிதனில்
வஞ்சித்துச்செய்கின்றவாஞ்சைதனின்—விஞ்சுதலைக்
கண்டவனைக்காற்கட்டிக்கைவிடுவித்துக்கொண்ட
திண்டிறல்மாறன்வந்திரு. (கூள)

---

## அ-ம் திருவாய்மொழி - திருமாலிருஞ்சோலை.

இதுவுமது.

கலிவிருத்தம்-பண்-இந்தளம்-தாளம்-ஏழொத்து.

மோஹனராகம் - ஆதிதாளம்.

* திருமாலிருஞ்சோலைமலையென்றேனென்னத்
திருமால்வந்தென்னெஞ்சநிறையப்புகுந்தான்
குருமாமணியுந்துபுனற்பொன்னித்தென்பால்
திருமால்சென்றுசேர்விடந்தென்திருப்பேரே. (க)

பேரேயுறைகின்றபிரானின்றுவந்து
பேரேனென்றென்னெஞ்சநிறையப்புகுந்தான்
காரேழ்கடலேழ்மலையேழுலகுண்டும்
ஆராவயிற்றானையடங்கப்பிடித்தேனே. (௨)

பிடித்தேன்பிறவிகெடுத்தேன்பிணிசாரேன்
மடித்தேன்மனைவாழ்க்கையுணிற்பதோர்மாயையைக்
கொடிக்கோபுரமாடங்கள்சூழ்திருப்பேரான்
அடிச்சேர்வதெனக்கெளிதாயினவாறே. (௩)

எளிதாயினவாறென்றென்கண்கள்களிப்பக்
களிதாகியசிந்தையனாய்க்களிக்கின்றேன்
கிளிதாவியசோலைகள்சூழ்திருப்பேரான்
தெளிதாகியசேண்விசும்புதருவானே. (௪)

வானேதருவானெனக்காயென்னோடொட்டி
ஊனேகுரம்பையிதனுட்புகுந், தின்று
தானேதடுமாற்றவினைகடவிர்த்தான்
தேனேய்பொழிற்றெல் திருப்பேர்நகரானே. (௫)

திருப்பேர்நகரான்திருமாலிருஞ்சோலைப்
பொருப்பேயுறைகின்றபிரானின்றுவந்
திருப்பேனென்றென்னெஞ்சுநிறையப்புகுந்தான்
விருப்பேபெற்றமுதமுண்டுகளித்தேனே. (௬)

உண்டுகளித்தேற்கும்பரென்குறை, மேலைத்
தொண்டுகளித்தந்திதொழுஞ்சொல்லுப்பெற்றேன்
வண்டுகளிக்கும்பொழில்சூழ்திருப்பேரான்
கண்டுகளிப்பக்கண்ணுணின்றகலானே. (எ)

கண்ணுணின்றகலான்கருத்தின்கட்பெரியன்
எண்ணினுண்பொருளேழிசையின்சுவைதானே
வண்ணநன்மணிமாடங்கள்சூழ்திருப்பேரான்
திண்ணமென்மனத்துப்புகுந்தான்செறிந்தின்றே. (௮)

இன்றென்னைப்பொருளாக்கித்தன்னையென்னுள்வைத்தான்
அன்றென்னைப்புறம்போகப்புணர்த்ததென்செய்வான்
குன்றென்னத்திகழ்மாடங்கள்சூழ்திருப்பேரான்
ஒன்றெனக்கருள்செய்யவுணர்த்தலுற்றேனே. (௯)

உற்றேனுகந்துபணிசெய்துனபாதம்
பெற்றேன், னீதேயினியம்வேண்டுவதெந்தாய்
கற்றார்மறைவாணர்கள்வாழ்திருப்பேராற்
கற்றாரடியார்தமக்கல்லலினில்லாவே. (௰)

* இல்லாவல்லலனீள்வயல்சூழ்திருப்பேர்மேல்
நல்லார்பலர்வாழ்குருகூர்ச்சடகோபன்
சொல்லார்தமிழாயிரத்துள்ளிப்பத்தும்
வல்லார், தொண்டராள்வதுசூழ்பொன்விசும்பே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - ௯௮ - க்குப் பாசுரம் - ௯௮௰.

---

திருமால்தம்பால்விருப்பஞ்செய்கின்றநோர்கண்
டருமாயத்தன்றகல்விப்பானென்—பெருமானீ
இன்றென்பாற்செய்வானென்னவிடருற்றுநின்றான்
ஒன்னுபுகழ்மாறனைத்தான்சூழ்ந்து. (௯௮)

## ௰-ம் திருவாய்மொழி-சூழ்விசும்பு.

அர்ச்சிராதிமார்க்கம்.

கலிவிருத்தம்-பண்-கொல்லி-தாளம்-ஏழொத்து.

கல்யாணிராகம் - அடதாளம்.

* சூழ்விசும்பணிமுகிற்றூரியமுழக்கின
வாழ்கடலலைதிரைகையெடுத்தாடின
ஏழ்பொழிலும்வளமேந்தியவென்னப்பன்
வாழ்புகழ்நாரணன்றமரைக்கண்டுகந்தே. (க)

நாரணன்றமரைக்கண்டுகந்துநன்னீர்முகில்
பூரணபொற்குடம்பூரித்ததுயர்விண்ணில்
நீரணிகடல்கணின்றார்த்தன, நெடுவரைத்
தோரணநிரைத்தெங்குந்தொழுதனருலகே. (உ)

தொழுதனருலகர்கடூபநன்மலர்மழைப்
பொழிவனர், பூமியன்றளந்தவன்றமர்முன்னே
எழுமினென்றிருமருங்கிசைத்தனர்முனிவர்கள்
வழியிதுவைகுந்தர்க்கென்றுவந்தெதிரே. (௩)

எதிரெதிரிமையவரிருப்பிடம்வகுத்தனர்
கதிரவரவரவர்கைநிரைகாட்டினர்
அதிர்குரன்முரசங்களலைகடன்முழக்கொத்த
மதுவிரிதுழாய்முடிமாதவன்றமர்க்கே. (௪)

மாதவன்றமரொன்றுவாசலில்வானவர்
போதுமினெமதிடம்புகுதகவென்றலும்
கீதங்கள்பாடினர்கின்னரர்கெருடர்கள்
வேதநல்வாயவர்வேள்வியுண்மடுத்தே. (௫)

வேள்வியுண்மடுத்தலும்விரைகமழ்நறும்புகை
காளங்கள்வலம்புரிகலந்தெங்குமிசைத்தனர்
ஆண்மின்கள்வானகமாழியான்றமரென்று
வாளொண்கண்மடந்தையர்வாழ்த்தினர்மகிழ்ந்தே. (௬)

மடந்தையர்வாழ்த்தலுமருதருவசுக்களும்
தொடர்ந்தெங்குந்தோத்திரஞ்சொல்லினர், தொடுகடல்
கிடந்தவெங்கேசவன்கிளரொளிமணிமுடிக்
குடந்தையெங்கோவலன்குடியடியார்க்கே. (௭)

குடியடியாரிவர்கோவிந்தன்றனக்கென்று
முடியுடைவானவர்முறைமுறையெதிர்கொள்ளக்
கொடியணிநெடுமதிட்கோபுரங்குறுகினர்
வடிவுடைமாதவன்வைகுந்தம்புகவே. (அ)

வைகுந்தம்புகுதலும்வாசலில்வானவர்
வைகுந்தன்றமரெமரெமதிடம்புகுதென்று
வைகுந்தத்தமரருமுனிவரும்வியந்தனர்
வைகுந்தம்புகுவதுமண்ணவர்விதியே. (கூ)

விதிவகைபுகுந்தனரென்றுநல்வேதியர்
பதியினிற்பாங்கினிற்பாதங்கள்கழுவினர்
நிதியுநற்சுண்ணமுநிறைகுடவிளக்கமும்
மதிமுகமடந்தையரேந்தினர்வந்தே. (கO)

* வந்தவரெதிர்கொள்ளமாமணிமண்டபத்
தந்தமில்பேரின்பத்தடியரோடிருந்தமை
கொந்தலர்பொழிற்குருகூர்ச்சடகோபன், சொல்
சந்தங்களாயிரத்திவைவல்லார்முனிவரே. (கக)

ஆழ்வார்திருவடிகளேஶரணம். ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஆ திருவாய்மொழி - கூக - க்குப்பாசுரம் - கOகக.

---

சூழ்ந்துநின்றமால்விசும்பில்தொல்லைவழிகாட்ட
ஆழ்ந்ததனைமுற்றுமனுபவித்து—வாழ்ந்தங்
கடியருடனேயிருந்தவாற்றையுரைசெய்தான்
முடிமகிழ்சேர்ஞானமுனி. (கூக)

---

## கO - ம் திருவாய்மொழி - முனியே.

கலிவிருத்தம் - பண் - பஞ்சமம் - தாளம் - ஏழொத்து.

அபரூபராகம் - அடதாளம்.

* முனியேநான்முகனேமுக்கண்ணப்பா, வென்பொல்லாக்
கனிவாய்த்தாமரைக்கட்கருமாணிக்கமேயென்கள்வா
தனியேனாருயிரேயென்றலைமிசையாய்வந்திட்
டினிநான்போகலொட்டேனென்றுமாயஞ்செய்யேலென்னையே. (க)

மாயஞ்செய்யேலென்னையுன்றிருமார்வத்துமாலைநங்கை
வாசஞ்செய்பூங்குழலாடிருவாணைநின்னாணைகண்டாய்
நேசஞ்செய்துன்னோடென்னையுயிர்வேறின்றியொன்றாகவே
கூசஞ்செய்யாதுகொண்டாயென்னைக்கூவிக்கொள்ளாய்வந்தந்தோ.

கூவிக்கொள்ளாய்வந்தந்தோவென்பொல்லாக்கருமாணிக்கமே
ஆவிக்கோர்பற்றுக்கொம்புநின்னலாலறிகின்றிலேனான்
மேவித்தொழும்பிரமன்சிவனிந்திரனாதிக்கெல்லாம்
நாவிக்கமலமுதற்கிழங்கேயும்பரந்ததுவே. (௩)

உம்பரந்தண்பாழேயோவதனுண்மிசைநீயேயோ
அம்பரநற்சோதியதனுட்பிரமனரனீ
உம்பரும்யாதவரும்படைத்தமுனிவனவனீ
எம்பரஞ்சாதிக்கலுற்றென்னைப்போரவிட்டிட்டாயே. (௪)

போரவிட்டிட்டென்னைநீபுறம்போக்கலுற்றாற், பின்னையான்
ஆரைக்கொண்டெத்தையந்தோவெனதென்பதென்யானென்பதென்
தீரவிரும்புண்டநீரதுபோலவென்னாருயிரை
ஆரப்பருக, வெனக்காராவமுதானாயே. (௫)

எனக்காராவமுதாயென்றாவியையின்னுயிரை
மனக்காராமைமன்னியுண்டிட்டாயினியுண்டொழியாய்
புனக்காயாநிறத்தபுண்டரீகக்கட்செங்கனிவாய்
உனக்கேற்குங்கோலமலர்ப்பாவைக்கன்பாவென்னன்பேயோ. (௬)

கோலமலர்ப்பாவைக்கன்பாகியவென்னன்பேயோ
நீலவரையிரண்டுபிறைகவ்விநிமிர்ந்ததொப்பக்
கோலவராகமொன்றாய்நிலங்கோட்டிடைக்கொண்டவெந்தாய்
நீலக்கடல்கடைந்தாயுன்னைப்பெற்றினிப்போக்குவனோ. (௭)

பெற்றினிப்போக்குவனோவுன்னையென்றனிப்பேருயிரை
உற்றவிருவினையாயுயிராய்ப்பயனாயவையாய்
முற்றவிம்மூவுலகும்பெருந்தூறாய்த்தூற்றிற்புக்கு
முற்றக்கரந்தொளித்தாயென்முதற்றனிவித்தேயோ. (௮)

முதற்றனிவித்தேயோமுழுமூவுலகாதிக்கெல்லாம்
முதற்றனியுன்னையுன்னையெனைநாள்வந்துகூடுவனான்
முதற்றனியங்குமிங்குமுழுமுற்றுறுவாழ்பாழாய்
முதற்றனிசூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்தமுடிவிலீயோ. (௯)

* சூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்தமுடிவில்பெரும்பாழேயோ
சூழ்ந்ததனிற்பெரியபரநன்மலர்ச்சோதீயோ
சூழ்ந்ததனிற்பெரியசுடர்ஞானவின்பமேயோ
சூழ்ந்ததனிற்பெரியவென்னவாவறச்சூழ்ந்தாயே. (௧0)

* அவாவறச்சூழரியையயனையரனையலற்றி
அவாவற்றுவீடுபெற்றகுருகூர்ச்சடகோபன்சொன்ன
அவாவிலந்தாதிகளாலிவையாயிரமு, முடிந்த
அவாவிலந்தாதியிப்பத்தறிந்தார்பிறந்தாருயர்ந்தே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே ஶரணம்.

பத்தாம்பத்து முற்றியது.

ஆ பத்து - ௧0 - ல் - திருவாய்மொழி - ௧00 - க்குப் பாசுரம் - ௧௧0௨.

---

முனிமாறன்முன்புரைசெய்முற்றின் பசீங்கித்
தனியாகின்றுதளர்ந்து—நனியாம்
பரமபத்தியால்நைந்துபங்கயத்தாள்கோனை
ஒருமையுற்றுச்சேர்ந்தானுயர்ந்து. (௧00)

ஸ்ரீ மணவாளமாமுநிகள்
திருவாய்மலர்ந்தருளிய
திருவாய்மொழிநூற்றந்தாதி
முற்றியது.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

# திருவாய்மொழி முற்றிற்று.

---

முதலாயிரம்.................பாசுரம்... ௬௪௭.
பெரியதிருமொழி..........பாசுரம் ௧௧௩௪.
இயற்பா....................பாசுரம்... ௮௧௭.
திருவாய்மொழி............பாசுரம்...௧௧0௨.

---

ஆ பாசுரம் - ௪000.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

ஸ்ரீமத் - ஜகதாசார்யஸ்வாமி

எம்பெருமானார் விஷயமாக

திருவரங்கத்தமுதனார் திருவாய்மலர்ந்தருளிய

# இராமாநுச நூற்றந்தாதி.

இஃது,

ஸ்ரீமத் உ. வே. தத்வப்ரவர்த்தகராயெழுந்தருளியிருக்கும்

ஸ்ரீமாந்-கபிஸ்தலம்-திருமலை-அநந்தாண்பிள்ளை

அநந்தாசார்யஸ்வாமிகளாலும்,

ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீபாதரேணுவாகிய

ஸங்ககிரி - புரமு

குருஸ்வாமிநாயுடு அவர்களாலும்,

பாடபாடாந்தரங்களுக்குசிதமாக

பரிசோதிக்கப்பட்டு,

ஸ்ரீ. உ. வேதாந்தேத்யாதி-திருமலை-நல்லான்சக்ரவர்த்தி

க்ருஷ்ணமாசார்யரவர்கள் திருவடிஸம்பந்தியும்,

பரசமயக்கோளரி

ஸ்ரீமாந்-முடிச்சூர்-அப்பாவுமுதலியாரவர்களால்

ஏற்படுத்தப்பட்டுள்ள

ஸ்ரீமத்வரவரமுநீந்த்ரரைவாழ்த்தும்

ஸபையைச்சேர்ந்தவருமாகிய

ஸ்ரீ. ரா. ராமக்ருஷ்ணபிள்ளையவர்களால்

சென்னை:

ஆதிகலாநிதி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

ஸ்ரீவகுளபூஷணபாஸ்கரோதயம் - சக அ௫-வதான

ஸ்வபாநுநாமஸம்வத்ஸரம்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# விண்ணப்பம்.

மயர்வறமதிநல மருளப்பெற்ற ஆழ்வார்கள் பரமகாருணிகர்களாய் ப்ரவசநம் செய்தருளிய த்ரவிடவேதமாகும் திவ்யப்ரபந்தங்கள் இதுகாறும் ப்ரசுரிக்கப்பட்டுள்ளவை பாடபாடாந்தரங்களுக்கு பேதமாயும், வ்யாக்யாந பங்திகளுக் கொவ்வாதனவாயு முள்ளமைகொண்டு அவை சுத்தப்ரதியாக்கி யச்சிட்டுத்தர அநேகபாகவதோத்தமர்கள் விரும்பினமையால், அத்தோஷங் களொன்றுமின்றி,அத்யாபகர்கள் நிறுத்துமிடங்களுங்குறிப்பிட்டுப்ரசுரஞ்செய்யலாயின இதனைஸேவிக்கும் காலக்ஷேபஸ்வாமிகளும், மற்றுள்ளாரும், கீழிற்கண்டுள்ள ப்ராமாதிகதோஷங்களி லேதேனுங் காணுவ துண்டாயின் க்ருபைகூர்ந்து அடியேனுக்குத்தெரிவித்தால் அத்தனையுமில்லாமல் மறுபதிப்பில் காணலாம்,

( , ) இக்குறியிட்டுள்ள விடங்களே அத்யாபகாள் நிறுத்துமிடமென்றுணர்வது.

( * ) இக்குறியிட்டுள்ள பாசுரங்கள் இரட்டித்துச்சேவிக்குமவை.

இக் க்ரந்தம் வேண்டுமவர்கள் சென்னை: திருவல்லிக்கேணி ஆலங்காத்தா பிள்ளைவீதி - கக - வது நெம்பருள்ள மாளிகையில் ஸ்ரீ. ரா. ராமக்ருஷ்ண பிள்ளையிடத்திற் பெற்றுக்கொள்ளலாம்.

இங்ஙனம்,



ஸ்ரீ



ஸ்ரீமதே ராமாநுஜாய நமஃ.

திருவரங்கத்தமுதனாரருளிச்செய்த

# இராமாநுசநூற்றந்தாதி.

## தனியன்கள்.

* 𑌶𑍍𑌰𑍀𑌰𑌙𑍍𑌗𑍇 𑌮𑍀𑌨𑌹𑌸𑍍𑌤𑍇 𑌚 𑌜𑌾𑌤𑌂 𑌰𑌙𑍍𑌗𑌾𑌰𑍍𑌯𑌨𑌨𑍍𑌦𑌨𑌂।
𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌪𑌦𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯𑌂 𑌰𑌙𑍍𑌗𑌨𑌾𑌥𑌗𑍁𑌰𑍁𑌂 𑌭𑌜𑍇॥

ஸ்ரீரங்கேமீநஹஸ்தேச ஜாதம்ரங்கார்யநந்தநே।
ராமாநுஜபதாஶ்ரித்யம் ரங்கநாதகுரும்பஜே.

வேதப்பிரான்பட்டரருளிச்செய்த

நேரிசைவெண்பா.

முன்னைவினையகலமூங்கிற்குடியமுதன்
பொன்னங்கழற்கமலப்போதிரண்டும்,—என்னுடைய
சென்னிக்கணியாகச்சேர்த்தினேன், றென்புலத்தார்க்
கென்னுக்கடவுடையேன் யான்.

கலித்துறை.

நயந்தருபேரின்பமெல்லாம்பழுதின்றிநண்ணினர்பால்
சயந்தருகீர்த்தியிராமாநுசமுனிதாளிணைமேல்
உயர்ந்தகுணத்துத்திருவரங்கத்தமுதோங்கு, மன்பால்
இயம்புங்கலித்துறையந்தாதியோதவிசைநெஞ்சமே.

* இனியென்குறைநமக்கெம்பெருமானார்திருநாமத்தால்
முனிதந்தநூற்றெட்டுச்சாவித்திரியென்னுநுண்பொருளைக்
கவிதந்தசெஞ்சொற்கலித்துறையந்தாதிபாடித்தந்தான்
புனிதன்றிருவரங்கத்தமுதாகியபுண்ணியனே.

* இந்தத்தனியன்கள் சிலப்ரதேசங்களில் வழங்குதலுண்டு.

திருவரங்கத்தமுதனார் காப்பாகவருளிச்செய்த

கலித்துறை.

சொல்லின்றொகைகொண்டுனதடிப்போதுக்குத்தொண்டுசெய்யும்
நல்லன்பரேத்துமுன்னாமமெல்லாமென்றனாவினுள்ளே
அல்லும்பகலுமமரும்படிநல்கறுசமயம்
வெல்லும்பரம, விராமாநுசவிதென்விண்ணப்பமே.

---

பைரவிராகம் - ரூபகதாளம்.

* பூமன்னுமாதுபொருந்தியமார்பன், புகழ்மலிந்த
பாமன்னுமாறனடிபணிந்துய்ந்தவன், பல்கலையோர்
தாமன்னவந்தவிராமாநுசன்சரணாரவிந்தம்
நாமன்னிவாழ, நெஞ்சேசொல்லுவோமவனாமங்களே. (க)

தோடிராகம் - ரூபகதாளம்.

* கள்ளார்பொழிற்றென்னரங்கன், கமலப்பதங்கணெஞ்சில்
கொள்ளாமனிசரைநீங்கிக், குறையற்பிரானடிக்கீழ்
விள்ளாதவன்பனிராமாநுசன்மிக்கசீலமல்லால்
உள்ளாதென்னெஞ், சொன்றறியேனெனக்குற்றபேரியல்வே. (உ)

பேரியனெஞ்சேயடிபணிந்தேனுன்னைப், பேய்ப்பிறவிப்
பூரியரோடுள்ளசுற்றம்புலர்த்திப், பொருவருஞ்சீர்
ஆரியன்செம்மையிராமாநுசமுனிக்கன்புசெய்யும்
சீரியபேறுடையா, ரடிக்கீழென்னைச்சேர்த்ததற்கே. (ங)

மின்னைப்புவியிலொருபொருளாக்கி, மருள்சுரந்த
முன்னைப்பழவினைவேரறுத், தூழிமுதல்வனையே
பன்னப்பணித்தவிராமாநுசன்பரன்பாதமுமென்
சென்னித்தரிக்கவைத்தா, னெனக்கேதுஞ்சிதைவில்லையே. (ச)

எனக்குற்றசெல்வமிராமாநுசனென், றிசையகில்லா
மனக்குற்றமாந்தர்பழிக்கிற்புக, ழவன்மன்னியசீர்
தனக்குற்றவன்பாவன்றிருநாமங்கள்சாற்றுமென்பா
வினக்குற்றங்காணகில்லார், பத்தியேய்ந்தவியல்விதென்றே. (ரு)

இயலும்பொருளுமிசையத்தொடுத், தீன்கவிகளன்பால்
மயல்கொண்டுவாழ்த்துமிராமாநுசனை, மதியின்மையால்
பயிலுங்கவிகளில்பத்தியில்லாதவென்பாவிநெஞ்சால்
முயல்கின்றன, னவன்றன்பெருங்கீர்த்திமொழிந்திடவே. (சா)

பியாகடைராகம் - ரூபகதாளம்.

* மொழியைக்கடக்கும்பெரும்புகழான், வஞ்சமுக்குறும்பாம்
குழியைக்கடக்குநங்கூரத்தாழ்வான்சரண்கூடியபின்
பழியைக்கடத்துமிராமாநுசன்புகழ்பாடியல்லா
வழியைக்கடத்த, லெனக்கினியாதும்வருத்தமன்றே. (எ)

வருத்தும்புறவிருண்மாற்ற, வெம்பொய்கைப்பிரான்மறையின்
குருத்தின்பொருளையுஞ்செந்தமிழ்தன்னையுங்கூட்டி, யொன்றத்
திரித்தன்றெரித்ததிருவிளக்கைத்தன்றிருவுள்ளத்தே
இருத்தும்பரம, னிராமாநுசனெம்மிறையவனே. (அ)

இறைவனைக்காணுமிதயத்திருள்கெட, ஞானமென்னும்
நிறைவிளக்கேற்றியபூதத்திருவடிந்தாள்க, ணெஞ்சத்
துறையவைத்தாளுமிராமாநுசன்புகழோதுநல்லோர்
மறையினைக்காத், திந்தமண்ணகத்தேமன்னவைப்பவரே. (கூ)

மன்னியபேரிருண்மாண்டபின், கோவலுண்மாமலராள்
தன்னொடுமாயனைக்கண்டமைகாட்டுந், தமிழ்த்தலைவன்
பொன்னடிபோற்றுமிராமாநுசற்கன்புபூண்டவர்தாள்
சென்னியிற்சூடுந், திருவுடையாரென்றுஞ்சீரியரே. (க0)

கல்யாணிராகம் - ரூபகதாளம்.

சீரியநான்மறைச்செம்பொருள், செந்தமிழாலளித்த
பாரியலும்புகழ்ப்பாண்பெருமாள், சரணாம்பதுமத்
தாரியல்சென்னிபிராமாநுசன்றன்னைச்சார்ந்தவர்தம்
காரியவண்மை, யென்னாற்சொல்லொணாதிக்கடலிடத்தே. (கக)

இடங்கொண்டகீர்த்திமழிசைக்கிறைவ, னிணையடிப்போ
தடங்குமிதயத்திராமாநுச, னம்பொற்பாதமென்றும்
கடங்கொண்டிறைஞ்சுந்திருமுனிவர்க்கன்றிக்காதல்செய்யாத்
திடங்கொண்டஞானியர்க்கே, யடியேனன்புசெய்வதுவே. (கஉ)

செய்யும்பசுந்துளபத்தொழின்மாலையுஞ், செந்தமிழில்
பெய்யுமறைத்தமிழ்மாலையும், பேராதசீரரங்கத்
தையன்கழற்கணியும்பரன்றாளன்றியாதரியா
மெய்ய, னிராமாநுசன்சரணேகதிவேறெனக்கே. (கந)

கதிக்குப்பதறி, வெங்கானமுங்கல்லுங்கடலுமெல்லாம்
கொதிக்கத்தவஞ்செயுங்கொள்கையற்றேன்,கொல்லிகாவலன்சொல்
பதிக்குங்கலைக்கவிபாடும்பெரியவர்பாதங்களே
துதிக்கும்பரம, னிராமாநுசனென்னைச்சோர்விலனே. (கச)

சோராதகாதற்பெருஞ்சுழிப்பாற், றொல்லைமாலையொன்றும்
பாராதவனைப்பல்லாண்டென்றுகாப்பிடும், பான்மையன்றாள்
பேராதவுள்ளத்திராமாநுசன்றன்பிறங்கியசீர்
சாரா மனிசரைச்சேரே, னெனக்கென்னதாழ்வினியே. (கரு)

நாதநாமக்ரியைராகம் - ரூபகதாளம்.

* தாழ்வொன்றில்லாமறைதாழ்ந்து, தலமுழுதுங்கலியே
ஆள்கின்றநாள்வந்தளித்தவன்காண்மி, னரங்கர்மௌலி
சூழ்கின்றமாலையைச்சூடிக்கொடுத்தவள்தொல்லருளால்
வாழ்கின்றவள்ள, லிராமாநுசனென்னுமாமுனியே. (கசு)

முனியார்துயரங்கண்முந்திலு, மின்பங்கண்மொய்த்திடினும்
கனியார்மனங்கண்ணமங்கைநின்றானைக், கலைபரவும்
தனியானையைத்தண்டமிழ்செய்தநீலன்றனக்குலகில்
இனியானை, யெங்களிராமாநுசனைவந்தெய்தினரே. (௧௭)

எய்தற்கரியமறைகளை, யாயிரமின்றமிழால்
செய்தற்குலகில்வருஞ்சடகோபனைச், சிந்தையுள்ளே
பெய்தற்கிசையும்பெரியவர்சீரையுயிர்களெல்லாம்
உய்தற்குதவு, மிராமாநுசனெம்முறுதுணையே. (௧௮)

உறுபெருஞ்செல்வமுந்தந்தையுந்தாயு, முயர்குருவும்
வெறிதருபூமகணாதனு, மாறன்விளங்கியசீர்
நெறிதருஞ்செந்தமிழாரணமேயென்றிந்நீணிலத்தோர்
அறிதரநின்ற, விராமாநுசனெனக்காரமுதே. (௧௯)

ஆரப்பொழிற்றென்குருகைப்பிரா, னமுதத்திருவா
யீரத்தமிழினிசையுணர்ந்தோர்கட், கினியவர்தம்
சீரைப்பயின்றுய்யுஞ்சீலங்கொள்நாதமுனியைநெஞ்சால்
வாரிப்பருகு, மிராமாநுசனென்றன்மாநிதியே. (௨௦)

சங்கராபரணராகம் - ரூபகதாளம்,

நிதியைப்பொழியுமுகிலென்றுநீசர்தம்வாசற்பற்றித்
துதிகற்றுலகிற்றுவள்கின்றிலே, னினித்தூய்நெறிசேர்
எதிகட்கிறைவன்யமுனைத்துறைவனிணையடியாம்
கதிபெற்றுடைய, விராமாநுசனென்னைக்காத்தனனே. (௨௧)

கார்த்திகையானுங்கரிமுகத்தானுங்கனலுமுக்கண்
மூர்த்தியுமோடியும்வெப்புமுதுகிட்டு, மூவுலகும்
பூத்தவனேயென்றுபோற்றிடவாணன்பிழைபொறுத்த
தீர்த்தனையேத்து, மிராமாநுசனென்றன்சேமவைப்பே. (௨௨)

வைப்பாயவான்பொருளென்று, நல்லன்பர்மனத்தகத்தே
எப்போதும்வைக்குமிராமாநுசனை, யிருநிலத்தில்
ஒப்பாரிலாதவுறுவினையேன்வஞ்சநெஞ்சில்வைத்து
முப்போதும்வாழ்த்துவ, னென்னாமிதுவவன்மொய்புகழ்க்கே. (௨௩)

மொய்த்தவெந்தீவினையாற்பல்லுடல்தொறுமூத், ததனால்
எய்த்தொழிந்தேன்முனநாட்களெல்லா, மின்றுகண்டுயர்ந்தேன்
பொய்த்தவம்போற்றும்புலச்சமயங்கணிலத்தவியக்
கைத்தமெய்ஞ்ஞானத், திராமாநுசனென்னுங்கார்தன்னையே. (௨௪)

காரேய்கருணையிராமாநுச, விக்கடலிடத்தில்
ஆரேயறிபவருன்னருளின்றன்மை, யல்லலுக்கு
நேரேயுறைவிடநான்வந்துநீயென்னையுய்த்தபினுன்
சீரேயுயிர்க்குயிரா, யடியேற்கின்றுதித்திக்குமே. (௨௫)

திக்குற்றகீர்த்தியிராமாநுசனை, யென்செய்வினையாம்
மெய்க்குற்றநீக்கிவிளங்கியமேகத்தை, மேவுநல்லோர்
எக்குற்றவாளரெதுபிறப்பேதியல்வாகநின்றோர்
அக்குற்றமப்பிறப்பவ்வியல்வே, நம்மையாட்கொள்ளுமே. (௨௬)

கொள்ளக்குறைவற்றிலங்கிக், கொழுந்துவிட்டோங்கியவுன்
வள்ளற்றனத்தினால்வல்வினையேன்மனநீபுகுந்தாய்
வெள்ளைச்சுடர்விடுமுன்பெருமேன்மைக்கிழுக்கிதென்று
தள்ளுற்றிரங்கு, மிராமாநுசவென்றனிநெஞ்சமே. (௨௭)

நெஞ்சிற்கறைகொண்டகஞ்சனைக்காய்ந்தநிமல, னங்கள்
பஞ்சித்திருவடிப்பின்னைதன்காதலன், பாதநண்ணா
வஞ்சர்க்கரியவிராமாநுசன்புகழன்றியென்வாய்
கொஞ்சிப்பரவகில்லா, தென்னவாழ்வின்றுகூடியதே. (௨௮)

கூட்டும்விதியென்றுகூடுங்கொலோ, தென்குருகைப்பிரான்
பாட்டென்னும்வேதப்பசுந்தமிழ்தன்னைத், தன்பத்தியென்னும்
வீட்டின்கண்வைத்தவிராமாநுசன்புகழ்மெய்யுணர்ந்தோர்
ஈட்டங்கடன்னை, யென்னாட்டங்கள்கண்டின்பமெய்திடவே. (௨௯)

இன்பந்தருபெருவீடுவந்தெய்திலெ, னெண்ணிறந்த
துன்பந்தருநிரயம்பலசூழிலென், றொல்லுலகில்
மன்பல்லுயிர்கட்கிறையவன்மாயனெனமொழிந்த
அன்பனனக, னிராமாநுசனென்னையாண்டனனே. (௩௰)

பந்துவராளிராகம் - ரூபகதாளம்.

* ஆண்டுகணாட்டிங்களாய், நிகழ்காலமெல்லாமனமே
ஈண்டுபல்யோனிகடோறுழல்வோ, மின்றோரெண்ணின்றியே
காண்டகுதோளண்ணறென்னத்தியூரர்கழலிணைக்கீழ்
பூண்டவன்பாள னிராமாநுசனைப்பொருந்தினமே. (௩௧)

பொருந்தியதேசும்பொறையுந்திறலும்புகழு, நல்ல
திருந்தியஞானமுஞ்செல்வமுஞ்சேருஞ், செறுகலியால்
வருந்தியஞாலத்தைவண்மையினால்வந்தெடுத்தளித்த
அருந்தவ, னெங்களிராமாநுசனையடைபவர்க்கே. (௩௨)

அடையார்கமலத்தலர்மகள்கேள்வன், கையாழியென்னும்
படையோடுநாந்தகமும்படர்தண்டு, மொண்சார்ங்கவில்லும்
புடையார்புரிசங்கமுமிந்தப்பூதலங்காப்பதற்கென்
றிடையேயிராமாநுசமுனியாயினவிந்நிலத்தே. (௩௩)

நிலத்தைச்செறுத்துண்ணுநீசக்கலியை, நினைப்பரிய
பலத்தைச்செறித்தும்பிறங்கியதில்லை, யென்பெய்வினைதென்
புலத்திற்பொறித்தவப்புத்தகச்சும்மைபொறுக்கியபின்
நலத்தைப்பொறுத்த, திராமாநுசன்றன்னயப்புகழே. (௩௪)

நயவேனொருதெய்வநானிலத்தே, சிலமானிடத்தைப்
புயலேயெனக்கவிபோற்றிசெய்யேன், பொன்னரங்கமென்னில்
மயலேபெருகுமிராமாநுசன்மன்னுமாமலர்த்தாள்
அயரே, னருவினையென்னையெவ்வாறின்றடர்ப்பதுவே. (௩௫)

அடல்கொண்டநேமியனாருயிர்நாத, னன்றாரணச்சொல்
கடல்கொண்டவொண்பொருள்கண்டளிப்பப், பின்னுங்காசினியோர்
இடரின்கண்வீழ்ந்திடத்தானுமவ்வொண்பொருள்கொண்டவர்பின்
படருங்குண, னெம்மிராமாநுசன்றன்படியிதுவே. (௩௬)

படிகொண்டகீர்த்திபிராமாயணமென்னும்பத்திவெள்ளம்
குடிகொண்டகோயிலிராமாநுசன்குணங்கூறு, மன்பர்
கடிகொண்டமாமலர்த்தாட்கலந்துள்ளங்கனியுநல்லோர்
அடிகண்டுகொண்டுகந், தென்னையுமாளவர்க்காக்கினரே. (௩௭)

ஆக்கியடிமைநிலைப்பித்தனையென்னையின், றவமே
போக்கிப்புறத்திட்டதென்பொருளாமுன்பு, புண்ணியர்தம்
வாக்கிற்பிரியாவிராமாநுசநின்னருளின்வண்ணம்
நோக்கிற்றெரிவரிதா, லுரையாயிந்தநுண்பொருளே. (௩௮)

பொருளும்புதல்வரும்பூமியும், பூங்குழலாருமென்றே
மருள்கொண்டிளைக்குநமக்குநெஞ்சே, மற்றுளார்தரமோ
இருள்கொண்டவெந்துயர்மாற்றித்தன்னீறில்பெரும்புகழே
தெருளுந்தெருள்தந், திராமாநுசன்செய்யுஞ்சேமங்களே. (௩௯)

சேமநல்வீடும்பொருளுந்தருமமுஞ், சீரியநற்
காமமுமென்றிவைநான்கென்பர், நான்கினுங்கண்ணனுக்கே
ஆமதுகாமமறம்பொருள்வீடிதற்கென்றுரைத்தான்
வாமனன்சீல, னிராமாநுசனிந்தமண்மிசையே. (௪0)

ஆரபிராகம் - ரூபகதாளம்.

மண்மிசையோனிகடோறும்பிறந், தெங்கண்மாதவனே
கண்ணுறநிற்கினுங்காணகில்லா, வுலகோர்களெல்லாம்
அண்ணலிராமாநுசன்வந்துதோன்றியவப்பொழுதே
நண்ணருஞானந்தலைக்கொண்டு, நாரணற்காயினரே. (௪௧)

ஆயிழையார்கொங்கைதங்கு, மக்காதலளற்றழுந்தி
மாயுமென்னாவியைவந்தெடுத்தானின்று, மாமலராள்
நாயகனெல்லாவுயிர்கட்குநாதனரங்கனென்னும்
தூயவன், றீதிலிராமாநுசன்றொல்லருள்சுரந்தே. (௪௨)

சுரக்குந்திருவுமுணர்வுஞ், சொலப்புகில்வாயமுதம்
பரக்கும்மிருவினைபற்றறவோடும், படியிலுள்ளீர்
உரைக்கின்றனனுமக்கியானறஞ்சீறுமுறுகலியைத்
துரக்கும்பெருமை, யிராமாநுசனென்றுசொல்லுமினே. (௪௩)

சொல்லார்தமிழொருமூன்றுஞ், சுருதிகணான்குமெல்லை
இல்லாவறநெறியாவுந்தெரிந்தவ, னென்னருஞ்சீர்
நல்லார்பரவுமிராமநுசன்றிருநாமநம்பிக்
கல்லாரகலிடத்தோ, ரெதுபேறென்றுகாமிப்பரே. (சச)

பேறொன்றுமற்றில்லைநின்சரணன்றி, யப்பேறளித்தற்
காறொன்றுமில்லைமற்றச்சரணன்றி, யென்றிப்பொருளைத்
தேறுமவர்க்குமெனக்குமுனைத்தந்தசெம்மைசொல்லால்
கூறும்பரமன், றிராமாநுசமெய்ம்மைகூறிடினே. (சரு)

கூறுஞ்சமயங்களாறுங்குலையக், குவலயத்தே
மாறன்பணித்தமறையுணர்ந்தோனை, மதியிலியேன்
தேறும்படியென்மனம்புகுந்தானைத்திசையனைத்தும்
ஏறுங்குணனை, யிராமாநுசனையிறைஞ்சினமே. (சசா)

இறைஞ்சப்படும்பரனீசனரங்கனென், றிவ்வுலகத்
தறஞ்செப்புமண்ணலிராமாநுச, னென்னருவினையின்
திறஞ்செற்றிரவும்பகலும்விடாதென்றன்சிந்தையுள்ளே
நிறைந்தொப்பறவிருந்தா, னெனக்காருநிகரில்லையே. (சஎ)

நிகரின்றிநின்றவென்னீசதைக், குன்னருளின்கணன்றிப்
புகலொன்றுமில்லையருட்குமஃதேபுகல், புன்மையிலோர்
பகரும்பெருமையிராமாநுசவினிநாம்பழுதே
அகலும்பொருளென், பயனிருவோமுக்குமானபின்னே. (சஅ)

ஆனதுசெம்மையறநெறிபொய்ம்மை, யறுசமயம்
போனதுபொன்றியிறந்ததுவெங்கலி, பூங்கமலத்
தேனதிபாய்வயற்றென்னரங்கன்கழற்சென்னிவைத்துத்
தானதின்மன்னு, மிராமாநுசனித்தலத்துதித்தே. (சகூ)

உதிப்பனவுத்தமர்சிந்தையு, ளொன்னலர்நெஞ்சமஞ்சிக்
கொதித்திடமாறிநடப்பன, கொள்ளைவன்குற்றமெல்லாம்
பதித்தவென்புன்கவிபாவினம்பூண்டனபாவுதொல்சீர்
எதித்தலைநாத, னிராமாநுசன்றன்னிணையடியே. (ருo)

அடாணாராகம் - ரூபகதாளம்.

அடியைத்தொடர்ந்தெழுமைவர்கட்கா, யன்றுபாரதப்போர்
முடியப்பரிநெடுந்தேர்விடுங்கோனை, முழுதுணர்ந்த
அடியர்க்கமுதமிராமாநுசனென்னையாளவந்திப்
படியிற்பிறந்தது, மற்றில்லைகாரணம்பார்த்திடினே. (ருக)

பார்த்தானறுசமயங்கள்பதைப்ப, விப்பார்முழுதும்
போர்த்தான்புகழ்கொண்டுபுன்மையினேனிடைத்தான்புகுந்து
தீர்த்தானிருவினைதீர்த்தரங்கன்செய்யதாளிணையோ
டார்த்தா, னிவையெம்மிராமாநுசன்செய்யுமற்புதமே. (ருஉ)

அற்புதன்செம்மையிராமாநுச, னென்னையாளவந்த
கற்பகங்கற்றவர்காமுறுசீலன், கருதரிய
பற்பல்லுயிர்களும்பல்லுலகியாவும்பரனதென்னும்
நற்பொருடன்னை, யிந்நானிலத்தேவந்துநாட்டினனே. (௫௩)

நாட்டியநீசச்சமயங்கண்மாண்டன, நாரணனைக்
காட்டியவேதங்களிப்புற்றது, தென்குருகைவள்ளல்
வாட்டமிலாவண்டமிழ்மறைவாழ்ந்ததுமண்ணுலகில்
ஈட்டியசீலத், திராமாநுசன்றன்னியல்புகண்டே. (௫௪)

கண்டவர்சிந்தைகவருங், கடிபொழிற்றென்னரங்கன்
தொண்டர்குலாவுமிராமாநுசனைத், தொகையிறந்த
பண்டருவேதங்கள்பார்மேனிலவிடப்பார்த்தருளும்
கொண்டலைமேவித்தொழுங், குடியாமெங்கள்கோக்குலமே. (௫௫)

கோக்குலமன்னரைமூவெழுகா, லொருகூர்மழுவால்
போக்கியதேவனைப்போற்றும்புனிதன், புவனமெங்கும்
ஆக்கியகீர்த்தியிராமாநுசனையடைந்தபின்என்
வாக்குரையா, தென்மனநினையாதினிமற்றொன்றையே. (௫௬)

மற்றொருபேறுமதியா, தரங்கன்மலரடிக்காள்
உற்றவரேதனக்குற்றவராய்க்கொள்ளுமுத்தமனை
நற்றவர்போற்றுமிராமாநுசனையிந்நானிலத்தே
பெற்றனன், பெற்றபின்மற்றறியேனொருபேதைமையே. (௫௭)

பேதையர்வேதப்பொருளிதென்றுன்னிப், பிரமனன்றென்
றோதிமற்றெல்லாவுயிருமஃதென், றுயிர்கண்மெய்விட்
டாதிப்பரனொடொன்றாமென்றுசொல்லுமவ்வல்லலெல்லாம்
வாதில்வென்ற, னெம்மிராமாநுசன்மெய்ம்மதிக்கடலே. (௫௮)

கடலளவாயதிசையெட்டினுள்ளுங், கலியிருளே
மிடைதருகாலத்திராமாநுசன், மிக்கநான்மறையின்
சுடரொளியாலவ்விருளைத்துரந்திலனேலுயிரை
உடையவ, னாரணனென்றறிவாரில்லையுற்றுணர்ந்தே. (௫௯)

உணர்ந்தமெய்ஞ்ஞானியர்யோகந்தொறுந், திருவாய்மொழியின்
மணந்தருமின்னிசைமன்னுமிடந்தொறு, மாமலராள்
புணர்ந்தபொன்மார்பன்பொருந்தும்பதிதொறும்புக்குநிற்கும்
குணந்திகழ்கொண்ட, லிராமாநுசனெங்குலக்கொழுந்தே. (௬0)

ஸஹாணாராகம் — ரூபகதாளம்.

கொழுந்துவிட்டோடிப்படரும்வெங்கோள்வினையா, னிரயத்
தழுந்தியிட்டேனைவந்தாட்கொண்டபின்னு, மருமுனிவர்
தொழுந்தவத்தோனெம்மிராமாநுசன்றொல்புகழ்சுடர்மிக்
கெழுந்த, தத்தா னல்லதிசயங்கண்டதிருநிலமே. (௬௧)

இருந்தேனிருவினைப்பாசங்கழற்றி, யின்றியானிறையும்
வருந்தேனினிநம்மிராமாநுசன், மன்னுமாமலர்த்தாள்
பொருந்தாநிலையுடைப்புன்மையினோர்க்கொன்றுநன்மைசெய்யாப்
பெருந்தேவனைப்பரவும், பெரியோர்தங்கழல்பிடித்தே. (சுஉ)

பிடியைத்தொடருங்களிறென்ன, யானுன்பிறங்கியசீர்
அடியைத்தொடரும்படிநல்கவேண்டு, மறுசமயச்
செடியைத்தொடருமருள்செறிந்தோர்சிதைந்தோடவந்திப்
படியைத்தொடரு, மிராமாநுசன்மிக்கபண்டிதனே. (சுந)

பண்டருமாறன்பசுந்தமி, ழானந்தம்பாய்மதமாய்
விண்டிடவெங்களிராமாநுசமுனிவேழ, மெய்ம்மை
கொண்டநல்வேதக்கொழுந்தண்டமேந்திக்குவலயத்தே
மண்டிவந்தேன்றது, வாதியர்காளுங்கள்வாழ்வற்றதே. (சுச)

வாழ்வற்றதுதொல்லைவாதியர்க், கென்றுமறையவர்தம்
தாழ்வற்றதுதவந்தாரணிபெற்றது, தத்துவநூல்
கூழற்றதுகுற்றமெல்லாம்பதித்தகுணத்தினர்க்கந்
நாழற்றது, நம்மிராமாநுசன்றந்தஞானத்திலே. (சுரு)

ஞானங்கனிந்தநலங்கொண்டு, நாடொறுநைபவர்க்கு
வானங்கொடுப்பதுமாதவன், வல்வினையேன்மனத்தில்
ஈனங்கடிந்தவிராமாநுசன்றன்னையெய்தினர்க்கத்
தானங்கொடுப்பது, தன்றகவென்னுஞ்சரண்கொடுத்தே. (சுசு)

சரணமடைந்ததருமனுக்காப், பண்டுநூற்றுவரை
மரணமடைவித்தமாயவன், றன்னைவணங்கவைத்த
கரணமிவையுமக்கன்றென்றிராமாநுசனுயிர்கட்
கரணங்கமைத்திலனே, லரணார்மற்றிவ்வாருயிர்க்கே. (சுஎ)

ஆரெனக்கின்றுநிகர்சொல்லின், மாயனன்றைவர்தெய்வத்
தேரினிற்செப்பியகீதையின்செம்மைப், பொருடெரியப்
பாரினிற்சொன்னவிராமாநுசனைப்பணியுநல்லோர்
சீரினிற்சென்றுபணிந்த, தென்னாவியுஞ்சிந்தையுமே. (சுஅ)

சிந்தையினோடுகரணங்கள்யாவுஞ்சிதைந்து, முன்னாள்
அந்தமுற்றாழ்ந்ததுகண், டவையென்றனுக்கன்றருளால்
தந்தவரங்கனுந்தன்சரண்தந்திலன்றானதுதந்
தெந்தையிராமாநுசன்வந்தெடுத்தனனின்றென்னையே. (சுகூ)

என்னையும்பார்த்தென்னியல்வையும்பார்த், தெண்ணில்பல்குணத்த
உன்னையும்பார்க்கிலருள்செய்வதேநல, மன்றியென்பால்
பின்னையும்பார்க்கினலமுளதேயுன்பெருங்கருணை
தன்னையென்பார்ப்ப, ரிராமாநுசவுன்னைச்சார்ந்தவரே. (எ0)

தன்யாசிராகம் - ரூபகதாளம்

சார்ந்ததென்சிந்தையுன்றாளிணைக்கீ, ழன்புதான்மிகவும்
கூர்ந்ததத்தாமரைத்தாட்களுக், குன்றன்குணங்களுக்கே
தீர்ந்ததென்செய்கைமுன்செய்வினைநீசெய்வினையதனால்
பேர்ந்தது, வண்மையிராமாநுசவெம்பெருந்தகையே. (எக)

கைத்தனன்றீயச்சமயக்கலகரைக், காசினிக்கே
உய்த்தனன்றூயமறைநெறிதன்னை, யென்றுன்னியுள்ளம்
நெய்த்தவன்போடிருந்தேத்துநிறைபுகழோருடனே
வைத்தனனென்னை, யிராமாநுசன்மிக்கவண்மைசெய்தே. (எஉ)

வண்மையினாலுந்தன்மாதகவாலு, மதிபுரையும்
தண்மையினாலுமித்தாரணியோர்கட்குத், தான்சரணாய்
உண்மைநன்ஞானமுரைத்தவிராமாநுசனையுன்னும்
திண்மையல்லாலெனக்கில்லை, மற்றோர்நிலைதேர்ந்திடினே. (எங)

தேரார்மறையின்றிறமென்று, மாயவன்றீயவரைக்
கூராழிகொண்டுகுறைப்பது, கொண்டலனையவண்மை
ஏரார்குணத்தெம்மிராமாநுசனவ்வெழின்மறையில்
சேராதவரைச்சிதைப்ப, தப்போதொருசிந்தைசெய்தே. (எச)

செய்த்தலைச்சங்கஞ்செழுமுத்தமீனுந், திருவரங்கர்
கைத்தலத்தாழியுஞ்சங்கமுமேந்தி, நங்கண்முகப்பே
மொய்த்தலைத்துன்னைவிடேனென்றிருக்கினுநின்புகழே
மொய்த்தலைக்கும்வந், திராமாநுசாவென்னைமுற்றுநின்றே. (எரு)

செஞ்சுருட்டிராகம்-ரூபகதாளம்.

* நின்றவண்கீர்த்தியுநீள்புனலும், நிறைவேங்கடப்பொற்
குன்றமும்வைகுந்தநாடுங்குலவியபாற்கடலும்
உன்றனக்கெத்தனையின்பந்தருமுன்னிணைமலர்த்தாள்
என்றனக்கும, திராமாநுசவிவையீந்தருளே. (எசு)

ஈந்தனனீயாதவின்னரு, ளெண்ணின்மறைக்குறும்பைப்
பாய்ந்தனனம்மறைப்பல்பொருளா, லிப்படியனைத்தும்
ஏய்ந்தனன்கீர்த்தியினாலென்வினைகளைவேர்பறியக்
காய்ந்தனன், வண்மையிராமாநுசற்கென்கருத்தினியே. (எஎ)

கருத்திற்புகுந்துள்ளிற்கள்ளங்கழற்றிக், கருதரிய
வருத்தத்தினான்மிகவஞ்சித்து, நீயிந்தமண்ணகத்தே
திருத்தித்திருமகள்கேள்வனுக்காக்கியபின்னென்னெஞ்சிற்
பொருத்தப்படா, தெம்மிராமாநுசமற்றோர்பொய்ப்பொருளே. எஅ

பொய்யைச்சுரக்கும்பொருளைத்துரந், திந்தப்பூதலத்தே
மெய்யைப்புரக்குமிராமாநுசனிற்க, வேறுநம்மை
உய்யக்கொளவல்லதெய்வமிங்கியாதென்றுலர்ந்தவமே
ஐயப்படாநிற்பர், வையத்துளோர்நல்லறிவழிந்தே. (எசூ)

நல்லார்பரவுமிராமாநுசன், திருநாமநம்ப
வல்லார்திறத்தை * மறவாதவர்கள்யவ, ரவர்க்கே
எல்லாவிடத்திலுமென்றுமெப்போதிலுமெத்தொழும்பும்
சொல்லான்மனத்தாற்கருமத்தினுற்செய்வன்சோர்வின்றியே. (அ0)

அபரூபராகம் - ரூபகதாளம்.

சோர்வின்றியுன்றன் றுணையடிக்கீழ்த்தொண்டுபட்டவர்பால்
சார்வின்றிநின்றவெனக், கரங்கன்செய்யதாளிணைகள்
பேர்வின்றியின்றுபெறுத்துமிராமாநுசவினியுன்
சீரொன்றியகருணைக், கில்லைமாறுதெரிவுறிலே. (அக)

தெரிவுற்றஞானஞ்செறியப்பெறுது, வெந்தீவினையால்
உருவற்றஞானத்துழல்கின்றவென்னை, யொருபொழுதில்
பொருவற்றகேள்வியனுக்கிநின்றானென்னபுண்ணியனே
தெரிவுற்றகீர்த்தி, யிராமாநுசனென்னுஞ்சீர்முகிலே. (அஉ)

சீர்கொண்டுபேரறஞ்செய்து, நல்வீடு 0 செறிதுமென்னும்
பார்கொண்டமேன்மையர்கூட்டனல்லே, னுன்பதயுகமாம்
ஏர்கொண்டவீட்டையெளிதினிலெய்துவனுன்னுடைய
கார்கொண்டவண்மை, யிராமாநுசாவிதுகண்டுகொள்ளே. (அங)

கண்டுகொண்டேனெம்மிராமாநுசன்றன்னைக், காண்டலுமே
தொண்டுகொண்டேனவன்றொண்டர்பொற்றாளி, லென்றொல்லைவெந் [நோய்
விண்டுகொண்டேனவன்சீர்வெள்ளவாரியைவாய்மடுத்தின்
றுண்டுகொண்டே, னின்னமுற்றனவோதிலுலப்பில்லையே. (அச)

ஓதியவேதத்தினுட்பொருளா, யதனுச்சிமிக்க
சோதியைநாதனெனவறியாதுழல்கின்றதொண்டர்
பேதைமைதீர்த்தவிராமாநுசனைத்தொழும்பெரியோர்
பாதமல்லாலென்றனாருயிர்க், கியாதொன்றும்பற்றில்லையே. (அரு)

பற்றாமனிசரைப்பற்றி, யப்பற்றுவிடாதவரே
உற்றாரெனவுழன்றோடினையேனினி, யொள்ளியநூல்
கற்றார்பரவுமிராமாநுசனைக்கருதுமுள்ளம்
பெற்றார்யவ, ரவரெம்மைநின்றாளும்பெரியவரே. (அசு)

பெரியவர்பேசிலும்பேதையர்பேசிலுந், தன்குணங்கட்
குரியசொல்லென்றுமுடையவனென்றென், றுணர்வின்மிக்கோர்
தெரியும்வண்கீர்த்தியிராமாநுசன்மறைதேர்ந்துலகில்
புரியுநன்ஞானம், பொருந்தாதவரைப்பொருங்கலியே. (அஎ)

கலிமிக்கசெந்நெற்கழனிக்குறையற், கலைப்பெருமான்
ஒலிமிக்கபாடலையுண்டுதன்னுள்ளந்தடித், ததனுல்
வலிமிக்கசியமிராமாநுசன்மறைவாதியராம்
புலிமிக்கதென், றிப்புவனத்தில்வந்தமைபோற்றுவனே. (அஅ)

* "மதியாதவர்கள்" என்றும்பாடம். 0 "பெறுதும்" எனவுமுண்டு.

போற்றருஞ்சீலத்திராமாநுச, நின்புகழ்தெரிந்து
சாற்றுவனேலதுதாழ்வதுதிரி, லுன்சீர்தனக்கோர்
ஏற்றமென்றேகொண்டிருக்கிலுமென்மனமேத்தியன்றி
ஆற்றகில்லா, திதற்கென்னினைவாயென்றிட்டஞ்சுவனே. (௮௰௯)

நினையார்பிறவியைநீக்கும்பிரானை, யிந்நீணிலத்தே
எனையாளவந்தவிராமாநுசனை, யிருங்கவிகள்
புனையார்புனையும்பெரியவர்தாட்களிற்பூந்தொடையல்
வனையார், பிறப்பில்வருந்துவர்மாந்தர்மருள்சுரந்தே. (௯௰)

காம்பூஜிராகம் – ரூபகதாளம்.

மருள்சுரந்தாகமவாதியர்கூறு, மவப்பொருளாம்
இருள்சுரந்தெய்த்தவுலகிருணீங்க, தன்னீண்டியசீர்
அருள்சுரந்தெல்லாவுயிர்கட்குநாதனரங்கனென்னும்
பொருள்சுரந்தா, னெம்மிராமாநுசன்மிக்கபுண்ணியனே, (௯௰௧)

புண்ணியநோன்புபுரிந்துமிலே, னடிபோற்றிசெய்யும்
நுண்ணருங்கேள்விநுவன்றுமிலேன்செம்மைநூற்புலவர்க்
கெண்ணருங்கீர்த்தியிராமாநுசவின்றுநீபுகுந்தென்
கண்ணுள்ளுநெஞ்சுள்ளு, நின்றவிக்காரணங்கட்டுரையே. (௯௰௨)

கட்டப்பொருளைமறைப்பொருளென்று, கயவர்சொல்லும்
பெட்டைக்கெடுக்கும்பிரானல்லனே, யென்பெருவினையைக்
கிட்டிக்கிழங்கொடுதன்னருளென்னுமொள்வாளுருவி
வெட்டிக்களைந்த, விராமாநுசனென்னுமெய்த்தவனே. (௯௰௩)

தவந்தருஞ்செல்வந்தகவுந்தருஞ், சலியாப்பிறவிப்
பவந்தருந்தீவினைப்பாற்றித்தரும், பரந்தாமமென்னும்
திவந்தருந்தீதிலிராமாநுசன்றன்னைச்சேர்ந்தவர்கட்
குவந்தருந்தே, னவன்சீரன்றியானொன்றுமுண்மகிழ்ந்தே. (௯௰௪)

உண்ணின்றுயிர்களுக்குற்றனவேசெய், தவர்க்குயவே
பண்ணும்பரனும்பரிவிலனாம்படி, பல்லுயிர்க்கும்
விண்ணின்றலைநின்றுவீடளிப்பானெம்மிராமாநுசன்
மண்ணின்றலத்துதித்து, மறைநாலும்வளர்த்தனனே. (௯௰௫)

வளரும்பிணிகொண்டவல்வினையான், மிக்கநல்வினையில்
கிளருந்துணிவுகிடைத்தறியாது, முடைத்தலையூன்
தளருமளவுந்தரித்தும்விழுந்துந்தனிதிரிவேற்
குளனெம்மிறைவ, னிராமாநுசன்றன்னையுற்றவனே. (௯௰௬)

தன்னையுற்றாட்செய்யுந்தன்மையினோர், மன்னுதாமரைத்தாள்
தன்னையுற்றாட்செய்யவென்னையுற்றானின்றுதன்றகவால்
தன்னையுற்றாரன்றித்தன்மையுற்றாரில்லையென்றறிந்து
தன்னையுற்றாரை, யிராமாநுசன்குணஞ்சாற்றிடுமே. (௯௰௭)

எழுமுகல்யாணிராகம் - ரூபகதாளம்.

* இடுமேயினியசுவர்க்கத்தி, லின்னம்நரகிலிட்டுச்
சுடுமேயவற்றைத்தொடர்தருதொல்லைச், சுழற்பிறப்பில்
நடுமேயினிநம்மிராமாநுசனம்மைநம்வசத்தே
விடுமேசரணமென்றால், மனமேநையல்மேவுதற்கே. (கூஅ)

தற்கச்சமணருஞ்சாக்கியப்பேய்களுந், தாழ்சடையோன்
சொற்கற்றசோம்பருஞ்சூனியவாதரு, நான்மறையும்
நிற்கக்குறும்புசெய்நீசருமாண்டனர்நீணிலத்தே
பொற்கற்பக, மெம்மிராமாநுசமுனிபோந்தபின்னே. (கூகூ)

போந்ததென்னெஞ்சென்னும்பொன்வண், டுனதடிப்போதிலொண்சீர்
ஆந்தெளிதேனுண்டமர்ந்திடவேண்டி, நின்பாலதுவே
ஈந்திடவேண்டுமிராமாநுசவிதுவன்றியொன்றும்
மாந்தகில்லா, தினிமற்றொன்றுகாட்டிமயக்கிடிலே. (க00)

கேதாரகௌளராகம் - ரூபகதாளம்.

மயக்குமிருவினைவல்லியிற்பூண்டு, மதிமயங்கித்
துயக்கும்பிறவியிற்றோன்றியவென்னைத், துயரகற்றி
உயக்கொண்டுநல்குமிராமாநுசவென்றதுன்னையுன்னி
நயக்குமவர்க்கிதிழுக்கென்பர், நல்லவரென்றுநைந்தே. (க0க)

நையும்மனமுன்குணங்களையுன்னி, யென்னாவிருந்தெம்
ஐயனிராமாநுசனென்றழைக்கு, மருவினையேன்
கையுந்தொழுங்கண்கருதிடுங்காணக்கடல்புடைசூழ்
வையமிதனி, லுன்வண்மையென்பாலென்வளர்ந்ததுவே. (க0உ)

வளர்ந்தவெங்கோபமடங்கலொன்றா, யன்றுவாளவுணன்
கிளர்ந்தபொன்னாகங்கிழித்தவன், கீர்த்திப்பயிரெழுந்து
விளைந்திடுஞ்சிந்தையிராமாநுசனென்றன்மெய்வினைநோய்
களைந்துநன்ஞானமளித்தனன், கையிற்கனியென்னவே. (க0ங)

கையிற்கனியென்னகண்ணனைக்காட்டித்தரிலு, முன்றன்
மெய்யிற்பிறங்கியசீரன்றிவேண்டிலன்யா, னிரயத்
தொய்யிற்கிடக்கிலுஞ்சோதிவிண்சேரிலுமிவ்வருணீ
செய்யிற்றரிப்ப, னிராமாநுசவென்செழுங்கொண்டலே. (க0ச)

கமாசுராகம் - ரூபகதாளம்.

* செழுந்திரைப்பாற்கடற்கண்டுயில்மாயன், றிருவடிக்கீழ்
விழுந்திருப்பார்நெஞ்சின்மேவுநன்ஞானி, நல்வேதியர்கள்
தொழுந்திருப்பாதனிராமாநுசனைத்தொழும்பெரியோர்
எழுந்திரைத்தாடுமிட, மடியேனுக்கிருப்பிடமே. (க0ரு)

மோஹனராகம் - ரூபகதாளம்.

* இருப்பிடம்வைகுந்தம்வேங்கட, மாலிருஞ்சோலையென்னும்
பொருப்பிடமாயனுக்கென்பர்நல்லோ, ரவைதம்மொடும்வந்
திருப்பிடமாயனிராமாநுசன்மனத்தின்றவன்வந்
திருப்பிட, மென்றனிதயத்துள்ளேதனக்கின்புறவே. (க0௬)

சௌராஷ்டிரராகம் - ரூபகதாளம்.

* இன்புற்றசீலத்திராமாநுச, வென்றுமெவ்விடத்தும்
என்புற்றநோயிடல்தோறும்பிறந்திறந், தெண்ணரிய
துன்புற்றுவீயினுஞ்சொல்லுவதொன்றுண்டுன்றொண்டர்கட்கே
அன்புற்றிருக்கும்படி, யென்னையாக்கியங்காட்படுத்தே. (க0எ)

சுருட்டிராகம் - ரூபகதாளம்.

* அங்கயல்பாய்வயற்றென்னரங்க, னணியாகமன்னும்
பங்கயமாமலர்ப்பாவையைப்போற்றுதும், பத்தியெல்லாம்
தங்கியதென்னத்தழைத்துநெஞ்சேநந்தலைமிசையே
பொங்கியகீர்த்தி, யிராமாநுசனடிப்பூமன்னவே. (க0அ)

பூச்சீர்நிதியாண்டுமெண்ணடிக்கொழுந்துசார்ந்ததுசோர்வுமருண்மயக்கு.

திருவரங்கத்தமுதனார் திருவடிகளேஶரணம்.

ப்ரபந்நகாயத்ரியென்னும்

## இராமாநுசநூற்றந்தாதி முற்றும்.

ஆழ்வார்திருவடிகளேஶரணம்,
எம்பெருமானார்திருவடிகளேஶரணம்,
ஜீயர்திருவடிகளேஶரணம்.





ஸ்ரீ

    

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமணவாளமாமுநிகள் நியமித்தருளிய

# இயல்சாற்று.

பிள்ளையுறங்காவில்லிதாஸரருளிச்செய்தது.

நன்றுந்திருவுடையோம்நானிலத்திலெவ்வுயிர்க்கும்
ஒன்றுங்குறையில்லையோதினோம்—குன்றம்
எடுத்தானடிசேரிராமாநுசன்றாள்
பிடித்தார்பிடித்தாரைப்பற்றி.

வகுளாபரணபட்டரருளிச்செய்தது.

வாழிதிருக்குருகூர்வாழிதிருமழிசை
வாழிதிருமல்லிவளநாடு—வாழி
சுழிபொறித்தநீர்ப்பொன்னித்தென்னரங்கன்றன்னை
வழிபறித்தவாளன்வலி.

ஸ்ரீபராங்குசதாஸரருளிச்செய்தது.

திருநாடுவாழிதிருப்பொருநல்வாழி
திருநாட்டுத்தென்குருகூர்வாழி,—திருநாட்டுச்
சிட்டத்தமர்வாழி, வாழிசடகோபன்
இட்டத்தமிழ்ப்பாவிசை.

பரகாலதாஸரருளிச்செய்தது.

மங்கைநகர்வாழிவண்குறையலூர்வாழி
செங்கையருண்மாரிசீர்வாழி—பொங்குபுனல்
மண்ணித்துறைவாழி, வாழிபரகாலன்
எண்ணிற்றமிழ்ப்பாவிசை.

பிள்ளைஇராமாநுசதாஸரருளிச்செய்தது.

வாழியரோதென்குருகைவாழியரோதென்புதுவை
வாழியரோதென்குறையன்மாநகரம்—வாழியரோ
தக்கோர்பரவுந்தடஞ்சூழ்பெரும்பூதூர்
முக்கோல்பிடித்தமுநி.

திருவரங்கத்தமுதனாரருளிச்செய்தது.

மொழியைக்கடக்கும்பெரும்புகழான், வஞ்சமுக்குறும்பாம்
குழியைக்கடக்குநங்கூரத்தாழ்வான்சரண்கூடியபின்
பழியைக்கடத்துமிராமாநுசன்புகழ்பாடியல்லால்
வழியைக்கடத்த, லெனக்கினியாதும்வருத்தமன்றே.

பிள்ளையழகியமணவாளதாஸரருளிச்செய்தது.

நெஞ்சத்திருந்துநிரந்தரமாகநிரயத்துய்க்கும்
வஞ்சக்குறும்பின்வகையறுத்தேன், மாயவாதியர்தாம்
அஞ்சப்பிறந்தவன்சீர்மாதவனடிக்கன்புசெய்யும்
தஞ்சத்தொருவன்சரணாம்புயமென்றலைக்கணிந்தே.

பின்பழகராம்பெருமாள்ஜீயரருளிச்செய்தது.

ஊழிதொறுமூழிதொறுமுலகமுய்ய
வும்பர்களுங்கேட்டுய்ய, வன்பினாலே
வாழியெனும்பூதம்பேய்பொய்கைமாறன்
மழிசையர்கோன்பட்டர்பிரான்மங்கைவேந்தன்
கோழியர்கோன்றொண்டர்துகள்பாணன்கோதை
குலமுனிவன்கூறியநூலோதி, வீதி
வாழியெனவருந்திரளைவாழ்த்துவார்தம்
மலரடியென்சென்னிக்குமலர்ந்தபூவே.

ஆழ்வாரெம்பெருமானார்ஜீயர்திருவடிகளேஶரணம்.

இயல்சாற்று ஸம்பூர்ணம்.



ஸ்ரீ

    

ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ.

# சாற்றுமுறை.

பல்லாண்டுபல்லாண்டுபல்லாயிரத்தாண்டு
பல்கோடிநூறாயிரம்
மல்லாண்டதிண்டோள்மணிவண்ணா, வுன்
சேவடிசெவ்வித்திருக்காப்பு.

அடியோமோடும்நின்னோடும்பிரிவின்றியாயிரம்பல்லாண்டு
வடிவாய்நின்வலமார்பினில்வாழ்கின்றமங்கையும்பல்லாண்டு
வடிவார்சோதிவலத்துறையுஞ்சுடராழியும்பல்லாண்டு
படைபோர்புக்குமுழங்குமப்பாஞ்சசன்னியமும்பல்லாண்டே.

பெரியஜீயரருளிச்செய்தது.

𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌶𑌦𑌶𑌾𑌕𑌾𑌲𑍇 𑌷𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌹𑌤𑌪𑌰𑌾𑌕𑍍𑌰𑌮𑌾।
𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌰𑍍𑌯𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌜𑍍𑌞𑌾 𑌵𑌰𑍍𑌧𑌤𑌾𑌮𑌭𑌿𑌵𑌰𑍍𑌧𑌤𑌾𑌮𑍍॥

ஸர்வதேஶதஶாகாலே ஷ்வவ்யாஹதபராக்ரம।
ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞா வர்த்ததாமபிவர்த்ததாம்.

கந்தாடையண்ணனருளிச்செய்தது.

𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌰𑍍𑌯𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌜𑍍𑌞𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌾𑌸𑌰𑌮𑍁𑌜𑍍𑌜𑍍𑌵𑌲𑌾।
𑌦𑌿𑌗𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌾𑌪𑌿𑌨𑍀𑌭𑍂𑌯𑌾𑌤𑍍 𑌸𑌾𑌹𑌿𑌲𑍋𑌕𑌹𑌿𑌤𑍈𑌷𑌿𑌣𑍀॥

ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞா ப்ரதிவாஸரமுஜ்வலா
திகந்தவ்யாபிநீபூயாத் ஸாஹிலோகஹிதேஷிணீ.

உடையவரருளிச்செய்தது.

𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍 𑌶𑍍𑌰𑍀𑌰𑌙𑍍𑌗 𑌶𑍍𑌰𑌿𑌯𑌮𑌨𑍁𑌪𑌦𑍍𑌰𑌵𑌾𑌮𑌨𑍁𑌦𑌿𑌨𑌂𑌸𑌂𑌵𑌰𑍍𑌧𑌯।
𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍 𑌶𑍍𑌰𑍀𑌰𑌙𑍍𑌗 𑌶𑍍𑌰𑌿𑌯𑌮𑌨𑍁𑌪𑌦𑍍𑌰𑌵𑌾𑌮𑌨𑍁𑌦𑌿𑌨𑌂𑌸𑌂𑌵𑌰𑍍𑌧𑌯॥

ஸ்ரீமந் ஸ்ரீரங்க ஸ்ரியமநுபத்ரவாமநுதிநம்ஸம்வர்த்தயா
ஸ்ரீமந் ஸ்ரீரங்க ஸ்ரியமநுபத்ரவாமநுதிநம்ஸம்வர்த்தயா.

பெரியஜீயரருளிச்செய்தது.

𑌨𑌮𑌃𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑌨𑌾𑌥𑌾𑌯 𑌕𑍁𑌨𑍍𑌤𑍀𑌨𑌗𑌰𑌜𑌨𑍍𑌮𑌨𑍇।
𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌲𑌬𑍍𑌧𑌪𑌰𑌮𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌕𑍈𑌙𑍍𑌕𑌰𑍍𑌯𑌶𑌾𑌲𑌿𑌨𑍇॥

நமஸ்ஸ்ரீசைலநாதாய குந்தீநகரஜந்மநே
ப்ரஸாதலப்தபரமப்ராப்யகைங்கர்யஸாலிநே.

நம்பெருமாளருளிச்செய்தது.

𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑍇𑌶𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌧𑍀𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌾𑌰𑍍𑌣𑌵𑌮𑍍।
𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑍍𑌰𑌵𑌣𑌂𑌵𑌨𑍍𑌦𑍇 𑌰𑌮𑍍𑌯𑌜𑌾𑌮𑌾𑌤𑌰𑌂𑌮𑍁𑌨𑌿𑌮𑍍॥

ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம்
யதீந்த்ரப்ரவணம்வந்தே ரம்யஜாமாதரம்முநிம்.

மடத்துப்பிள்ளையருளிச்செய்தது.

வாழிதிருவாய்மொழிப்பிள்ளைமாதகவால்
வாழு, மணவாளமாமுநிவன்—வாழியவன்
மாறன்றிருவாய்மொழிப்பொருளைமாநிலத்தோர்
தேறும்படியுரைக்குஞ் சீர்.

ப்ரதிவாதிபயங்கரமண்ணனருளிச்செய்தது.

செய்யதாமரைத்தாளிணைவாழியே
சேலைவாழிதிருநாபிவாழியே
துய்யமார்பும்புரிநூலும்வாழியே
சுந்தரத்திருத்தோளிணைவாழியே
கையுமேந்தியமுக்கோலும்வாழியே
கருணைபொங்கியகண்ணிணைவாழியே
பொய்யிலாதமணவாளமாமுநி
புந்திவாழிபுகழ்வாழிவாழியே.

அடியார்கள்வாழ வரங்கநகர்வாழ
சடகோபன்றண்டமிழ்நூல்வாழ,—கடல்சூழ்ந்த
மன்னுலகம்வாழ, மணவாளமாமுநியே
இன்னமொருநூற்றாண்டிரும்.

சாற்றுமுறை ஸம்பூர்ணம்.

---

ஜீயர்திருவடிகளேசரணம்.

ஸ்ரீ







ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ.

# ஆழ்வார்கள்பதின்மரொடு
# ஆண்டாள் மதுரகவிகளுடைய
# அவதாரஸங்க்ரஹம்
# வாழித்திருநாமமுதலியன.

## பெரியபெருமாள்

இவர்திருநக்ஷத்ரம் – திருவோணம்.

இவர்தனியன்.

ஸ்ரீஸ்தநாபரணம் தேஜஃ ஸ்ரீரங்கேஶயமாஶ்ரயே।
சிந்தாமணிமிவோத்வாந்தம் உத்ஸங்கே அநந்தபோகிநஃ॥

திருமகளுமண்மகளுஞ்சிறக்கவந்தோன்வாழியே
செய்யவிடைத்தாய்மகளார்சேவிப்போன்வாழியே
இருவிசும்பில்வீற்றிருக்குமிமையவர்கோன்வாழியே
இடர்கடியப்பாற்கடலையெய்தினான்வாழியே
அரியதசரதன்மகனாயவதரித்தான்வாழியே
அந்தரியாமித்துவமுமாயினான்வாழியே
பெருகிவரும்பொன்னிநடுப்பின்றுயின்றான்வாழியே
பெரியபெருமாளெங்கள்பிரானடிகள்வாழியே.

இவர்திருவடி ஸ்ரீஶடகோபன்.

ஸ்ரீமந் ஸ்ரீரங்க ஸ்ரியமநுபத்ரவாமநுதிநம்ஸம்வர்த்தயா
ஸ்ரீமந் ஸ்ரீரங்க ஸ்ரியமநுபத்ரவாமநுதிநம்ஸம்வர்த்தயா.

பெரியஜீயரருளிச்செய்தது.

𑌨𑌮𑌃 𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑌨𑌾𑌥𑌾𑌯 𑌕𑍁𑌨𑍍𑌤𑍀𑌨𑌗𑌰𑌜𑌨𑍍𑌮𑌨𑍇 ।
𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌲𑌬𑍍𑌧𑌪𑌰𑌮𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌕𑍈𑌙𑍍𑌕𑌰𑍍𑌯𑌶𑌾𑌲𑌿𑌨𑍇 ॥

நமஸ்ஸ்ரீசைலநாதாய குந்தீநகரஜந்மநே
ப்ரஸாதலப்தபரமப்ராப்யகைங்கர்யஸாலிநே.

நம்பெருமாளருளிச்செய்தது.

𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑍇𑌶𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌧𑍀𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌾𑌰𑍍𑌣𑌵𑌮𑍍 ।
𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑍍𑌰𑌵𑌣𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌰𑌮𑍍𑌯𑌜𑌾𑌮𑌾𑌤𑌰𑌂 𑌮𑍁𑌨𑌿𑌮𑍍 ॥

ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம்
யதீந்த்ரப்ரவணம்வந்தே ரம்யஜாமாதரம்முநிம்.

மடத்துப்பிள்ளையருளிச்செய்தது.

வாழிதிருவாய்மொழிப்பிள்ளைமாதகவால்
வாழு, மணவாளமாமுநிவன்—வாழியவன்
மாறன்றிருவாய்மொழிப்பொருளைமாநிலத்தோர்
தேறும்படியுரைக்குஞ் சீர்.

ப்ரதிவாதிபயங்கரமண்ணனருளிச்செய்தது.

செய்யதாமரைத்தாளிணைவாழியே
சேலைவாழிதிருநாபிவாழியே
துய்யமார்பும்புரிநூலும்வாழியே
சுந்தரத்திருத்தோளிணைவாழியே
கையுமேந்தியமுக்கோலும்வாழியே
கருணைபொங்கியகண்ணிணைவாழியே
பொய்யிலாதமணவாளமாமுநி
புந்திவாழிபுகழ்வாழிவாழியே.

அடியார்கள்வாழ வரங்கநகர்வாழ
சடகோபன்றண்டமிழ்நூல்வாழ,—கடல்சூழ்ந்த
மன்னுலகம்வாழ, மணவாளமாமுநியே
இன்னமொருநூற்றாண்டிரும்.

சாற்றுமுறை ஸம்பூர்ணம்.

---

ஜீயர்திருவடிகளேசரணம்.



ஸ்ரீ







ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

ஆழ்வார்கள்பதின்மரொடு
ஆண்டாள் மதுரகவிகளுடைய

# அவதாரஸங்க்ரஹம்

## வாழித்திருநாமமுதலியன.

### பெரியபெருமாள்

இவர்திருநக்ஷத்ரம் – திருவோணம்.

இவர்தனியன்.

𑌶𑍍𑌰𑍀𑌸𑍍𑌤𑌨𑌾𑌭𑌰𑌣𑌂 𑌤𑍇𑌜𑌃 𑌶𑍍𑌰𑍀𑌰𑌙𑍍𑌗𑍇𑌶𑌯𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇 ।
𑌚𑌿𑌨𑍍𑌤𑌾𑌮𑌣𑌿𑌮𑌿𑌵𑍋𑌦𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑌮𑍍 𑌉𑌤𑍍𑌸𑌙𑍍𑌗𑍇𑌽𑌨𑌨𑍍𑌤𑌭𑍋𑌗𑌿𑌨𑌃 ॥

திருமகளுமண்மகளுஞ்சிறக்கவந்தோன்வாழியே
செய்யவிடைத்தாய்மகளார்சேவிப்போன்வாழியே
இருவிசும்பில்வீற்றிருக்குமிமையவர்கோன்வாழியே
இடர்கடியப்பாற்கடலையெய்தினான்வாழியே
அரியதசரதன்மகனாயவதரித்தான்வாழியே
அந்தரியாமித்துவமுமாயினான்வாழியே
பெருகிவரும்பொன்னிநடுப்பின்றுயின்றான்வாழியே
பெரியபெருமாளெங்கள்பிரானடிகள்வாழியே.

இவர்திருவடி ஸ்ரீசடகோபன்.

## பெரியபிராட்டியார்

இவர் திருநக்ஷத்ரம் - பங்குனி உத்திரம்.

நம: ஸ்ரீரங்கநாயக்யை யத்ப்ரூவிப்ரமபேதத:।
ஈஸேஸிதவ்யவைஷம்ய நிம்நோந்நதமிதம் ஜகத்॥

பங்கயப்பூவிற்பிறந்தபாவைநல்லாள்வாழியே
பங்குனியிலுத்திரத்திற்பாருதித்தாள்வாழியே
மங்கையர்கள் திலகமென வந்தசெல்விவாழியே
மாலரங்கர்மணிமார்பைமன்னுமவள்வாழியே
எங்களெழிற்சேனைமன்னர்க்கிதமுரைத்தாள்வாழியே
இருபத்தஞ்சுட்பொருள்மாலியம்புமவள்வாழியே
செங்கமலச்சீரரங்கஞ்செழிக்கவந்தாள்வாழியே
சீரங்கநாயகியார்திருவடிகள்வாழியே.

இவர் திருவடி ஸ்ரீஸேனைமுதலியார்.

---

## பெரியாழ்வார்.

குருமுகமநதீத்ய ப்ராஹ வேதாநஸேஷாந்
நரபதிபரிக்லுப்தம் ஸுல்கமாதாதுகாம:।
ஶ்வஸுரமமரவந்த்யம் ரங்கநாதஸ்ய ஸாக்ஷாத்
த்விஜகுலதிலகம் தம் விஷ்ணுசித்தம் நமாமி॥

இவர் ஸ்ரீகருடாம்ஸராய் * மின்னார்தடமதிள்சூழ் * வேதவாய்த்தொழிலார்கள்வாழ் ஸ்ரீவில்லிபுத்தூரிலே, கலியுகம் (சஎ) வர்ஷமான க்ரோதநவர்ஷம் ஆனிமாஸம் ஒன்பதாந்தேதி ஸுக்லபக்ஷம் ஏகாதசிகூடின ஞாயிற்றுக்கிழமையன்று ஸ்வாதீநக்ஷத்ரத்திலே திருவவதாரம்பண்ணி, * உருவுகரிய வொளிமணிவண்ணனை க்ருஷ்ணன் ஸ்ரீமாலாகாரரண்டை பூவிரந்ததைத் திருவுள்ளம்பற்றித் தாம் திருநந்தவநஞ்செய்து திருமாலைகட்டிச்சாத்தி, பாண்டியனது வித்வத்கோஷ்டி யேறச்சென்று பரத்வநிர்ணயம்பண்ணி, மங்களாஸாஸநபரராய், திருப்பல்லாண்டு, திருமொழியருளிச்செய்து லோகத்தை வாழ்வித்தருளினார்.

நல்லதிருப்பல்லாண்டுநான்மூன்றோன்வாழியே
நானூற்றறுபத்தொன்றுநமக்குரைத்தான்வாழியே
சொல்லரியவானிதனிற்சோதிவந்தான்வாழியே
தொடைசூடிக்கொடுத்தாளைத்தொழுந்தந்தைவாழியே
செல்வநம்பிதனைப்போலச்சிறப்புற்றான்வாழியே
சென்றுகிழியறுத்துமால்தெய்வமென்றான்வாழியே
வில்லிபுத்தூர்நகரத்தைவிளங்கவைத்தான்வாழியே
வேதியர்கோன்பட்டர்பிரான்மேதினியில்வாழியே.

## ஆண்டாள்.

நீளாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தமுத்போத்ய க்ருஷ்ணம்
பாரார்த்யம் ஸ்வம் ஶ்ருதிஶதஶிரஸ்ஸித்தமத்யாபயந்தீ।
ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகளிதம் யா பலாத்க்ருத்ய புங்க்தே
கோதா தஸ்யை நம இதமிதம் பூய ஏவாஸ்து பூய:॥

இவர் ஸ்ரீபூமிபிராட்டியாரம்ஸமாய், * வேதவாய்த்தொழிலார்கள் வாழ் ஸ்ரீவில்லிபுத்தூரிலே, பெரியாழ்வார் திருநந்தவநத்திலோர் திருத்துழாய் வேரிலே அயோநிஜையாய், கலியுகம் தொண்ணூற்றேழாவதான நளவர்ஷம் ஆடிமாஸம் ஆருந்தேதி ஸுக்லபக்ஷம் சதுர்த்தசிகூடின மங்களவாரம் பூரநக்ஷத்ரத்தில் அவதாரஞ்செய்து ஸ்ரீவில்லிபுத்தூருறைவார்க்குச் சூடிக்கொடுத்த பூமாலைசார்த்தி வடபெருங்கோயிலுடையானைத்தழுவிமுழுகிப் பரிமாரத் திருவுள்ளங்கொண்டு பாமாலைசார்த்தி ததநுஷ்ட்டாநார்த்தமாகப் பேதைகளும் பெண்களும் மறுபவித்துஞ்ஜீவிக்கத் திருப்பாவைமுப்பதும், திருமொழியும் திருவாய்மொழிந்தருளி லோகத்தை வாழ்வித்தருளினர்.

திருவாடிப்பூரத்திற்செகத்துதித்தாள்வாழியே
திருப்பாவைமுப்பதுஞ்செப்பினாள்வாழியே
பெரியாழ்வார்பெற்றெடுத்தபெண்பிள்ளைவாழியே
பெரும்பூதூர்மாமுநிக்குப்பின்னானாள்வாழியே
ஒருநூற்றுநாற்பத்துமூன்றுரைத்தாள்வாழியே
உயரரங்கற்கேகண்ணியுகந்தளித்தாள்வாழியே
மருவாருந்திருவல்லிவளநாடுவாழியே
வண்புதுவைநகர்கோதைமலர்ப்பதங்கள்வாழியே.

## குலசேகராழ்வார்.

குஷ்யதே யஸ்ய நகரே ரங்கயாத்ரா தினே தினே ।
தமஹம் ஶிரஸா வந்தே ராஜாநம் குலஶேகரம் ॥

இவர் ஸ்ரீகௌஸ்துபாம்ஸராய், கொல்லிநகரென்கிற திருப்படைவீட்டிலே க்ஷத்ரியவர்ணத்திலே த்ருடவ்ரதனைத் தந்தையாகக்கொண்டு சேரன் குலசேகரராய், கலியுகம் இருபத்தேழாவதான பராபவவர்ஷம் மாசிமாஸம் ஸுக்லபக்ஷம் த்வாதசிகூடின வியாழக்கிழமையன்று புநர்வஸுநக்ஷத்ரத்தில் அவதாரஞ்செய்து, ஸ்ரீபகவத்பாகவதாசார்ய குணைகநிஷ்டராய், ஸ்ரீமத்ராமாயண காலக்ஷேபாதி ப்ரவணராய், தத்ஸாரமான பெருமாள் திருமொழியென்னும் ப்ரபந்தத்தை யருளிச்செய்து லோகத்தைவாழ்வித்தருளினர்.

அஞ்சனமாமலைப்பிறவியாதரித்தான்வாழியே
அணியரங்கர்மணத்தூணையமர்ந்தசெல்வன்வாழியே
வஞ்சிநகரந்தன்னைவாழ்வித்தான்வாழியே
மாசிதனிற்புனர்பூசம்வந்துதித்தான்வாழியே
அஞ்சலெனக்குடப்பாம்பிற்கையிட்டான்வாழியே
அனவரதம்ராமகதையகமகிழ்வோன்வாழியே
செஞ்சொன்மொழிநூற்றஞ்சுஞ்செப்பினான்வாழியே
சேரலர்கோன்செங்கமலத்திருவடிகள்வாழியே.

## திருமழிசையாழ்வார்.

ஶக்தி பஞ்சமய விக்ரஹாத்மநே ஶுக்திகாரஜத சித்த ஹாரிணே ।
முக்திதாயக முராரி பாதயோ: பக்திஸார முநயே நமோ நம: ॥

இவர் ஸ்ரீஸுதர்ஸநாம்ஸராய், பஞ்சாஸத்கோடி விஸ்தீர்ணையான விப்பூமியிலும் மழிசையைவைத்து நிறுத்த தொருதுலாத்தட்டு கனத்திருக்கக்கண்டு, மஹீஸாரக்ஷேத்ரமென்னும் பெயரால் நிரூபிதமான * மாநீர்மழிசையிலே ஸ்ரீபார்க்கவரைப் பிதாவாகக்கொண்டு, த்வாபரயுகம் (அசுஉகூ00) வதான ஸித்தார்த்திவர்ஷம் தைமீ க்ருஷ்ணபக்ஷம்ப்ரதமைகூடின ஞாயிற்றுக்கிழமை

யன்று மகாநக்ஷத்ரத்தில் திருவவதாரம்பண்ணி, பிணங்குஞ்சமயம் பலபல வான ஸாக்யோலூக்யாக்ஷபாத க்ஷபண கபில பதஞ்சலிகளாகிற பாஹ்யங்களேயும், சைவ மாயாவாதந்யாய வைஶேஷிக பாட்ட ப்ரபாகராதிகளாகிற குத்ருஷ்டி ஸமயங்களையுமாராயத் திருவுள்ளங்கொண்டு எழுநூறு ஸம்வத்ஸரங் கழிந்த வநந்தரம், "இறைநிலையுணர்வரிது" என்கிறபடியே அவற்றிலே யொரு பசையில்லாமைகண்டு, "அறியார்சமணர் அயர்த்தார்பவுத்தர் சிறியார்சிவப்பட்டார்" என்று எல்லாவற்றையு மெடுத்துக்களைந்து, "கலையறக்கற்றமாந்தர் காண்பரோ கேட்பரோதான்" என்று இதரஸித்தாந்தங்களை நஸ்வரமென்று கைவிட்டுத் தாம் *ஸ்ரீவைஷ்ணவபரமவைதிகஸித்தாந்தநிஷ்டராய், *வேதாந்தவிழுப்பொருளின் மேலிருந்தவிளக்கை யறிந்து தத்ப்ரவணராக; அம்முகத்தாலே ஸர்வேஶ்வரனு மிவர்க்கு * மயர்வறமதிநலமருளி தன் ஸ்வரூபரூபகுண சேஷ்டிதங்களைக் காட்டக்கண்டநுபவித்த தடங்காமைகொண்டு "நான்முகன் திருவந்தாதி, திருச்சந்தவிருத்தம்" என்கிற திவ்யப்ரபந்தங்களாற் ப்ரகாஶிப்பித்து, இப்படி நாலாயிரதிருநக்ஷத்ர மெழுந்தருளியிருந்து லோகத்தை வாழ்வித்தருளினார்.

அன்புடனந்தாதிதொண்ணூற்ருறுரைத்தான்வாழியே
அழகாருந்திருமழிசையமர்ந்தபிரான்வாழியே
இன்பமிகுதையின்மகத்திங்குதித்தான்வாழியே
எழிற்சந்தவிருத்தநூற்றிருபதுளான்வாழியே
முன்புகத்தில்வந்துதித்தமுநிவர்கோன்வாழியே
முழுப்பொன்னிப்பெருக்கெதிர்செல்முதிர்கவியோன்வாழியே
நன்புவினுலாயிரத்தேழ்நூறிருந்தான்வாழியே
நங்கள்பத்திசாரனிருநற்பதங்கள்வாழியே.

## தொண்டரடிப்பொடியாழ்வார்.

𑌤𑌮𑍇𑌵 𑌮𑌤𑍍𑌵𑌾 𑌪𑌰𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌂
𑌰𑌙𑍍𑌗𑍇𑌶𑌯𑌂 𑌰𑌾𑌜𑌵𑌦𑌰𑍍𑌹𑌣𑍀𑌯𑌮𑍍 ।
𑌪𑍍𑌰𑌾𑌬𑍋𑌧𑌿𑌕𑍀𑌂 𑌯𑍋𑌽𑌕𑍃𑌤 𑌸𑍂𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌲𑌾𑌂
𑌭𑌕𑍍𑌤𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌰𑍇𑌣𑍁𑌂 𑌭𑌗𑌵𑌨𑍍𑌤𑌮𑍀𑌡𑍇 ॥

இவர் ஸ்ரீவைஜயந்தி வநமாலிகாம்ஶபூதராய், சோளதேசத்தில் திருமண்டங்குடி யென்னும் திவ்யதேசத்திலே, கலியுகம் இருநூற்றெண்பத்தெட்டாவதான ப்ரபவவர்ஷம், மார்கழிமாஸம், க்ருஷ்ணபக்ஷம், சதுர்த்தசிகூடின செவ்வாய்க்கிழமையன்று கேட்டைநக்ஷத்ரத்தில்திருவவதரித்து, திருவரங்கச் செல்வனார்க்குத் திருநந்தவநஞ்செய்து திருமாலைசாத்தி, பெரியபெருமாளைத் திருப்பள்ளியுணர்த்தித் தம்ப்ரார்த்தனையை விண்ணப்பஞ்செய்யும்பொருட்டுத் திருப்பள்ளியெழுச்சி, திருமாலை யருளிச்செய்து லோகத்தை வாழ்வித்தருளினார்.

மண்டங்குடிப்பதியில்வாழவந்தோன்வாழியே
மார்கழியிற்கேட்டைநாள்வந்துதித்தோன்வாழியே
தெண்டிரைசூழரங்கரையேதெய்வமென்றான்வாழியே
திருமாலையையொன்பான்செப்பினான்வாழியே
பண்டுதிருப்பளியெழுச்சிப்பத்துரைத்தான்வாழியே
பாவையர்கள்கலவிதன்னைப்பழித்தசெல்வன்வாழியே
தொண்டுசெய்துதுளவத்தாற்றுலங்கினான்வாழியே
தொண்டரடிப்பொடிப்பெருமாள்துணைப்பதங்கள்வாழியே.

## திருப்பாணாழ்வார்.

𑌆𑌪𑌾𑌦𑌚𑍂𑌡𑌮𑌨𑍁𑌭𑍂𑌯 𑌹𑌰𑌿𑌂 𑌶𑌯𑌾𑌨𑌂
𑌮𑌧𑍍𑌯𑍇 𑌕𑌵𑍇𑌰𑌦𑍁𑌹𑌿𑌤𑍁𑌰𑍍𑌮𑍁𑌦𑌿𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾।
𑌅𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍃𑌤𑌾𑌂 𑌨𑌯𑌨𑌯𑍋𑌰𑍍𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌣𑌾𑌂
𑌯𑍋 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌕𑌾𑌯 𑌮𑌨𑌵𑍈 𑌮𑍁𑌨𑌿𑌵𑌾𑌹𑌨𑌂 𑌤𑌂॥

இவர் ஶ்ரீவத்ஸாம்ஶஸம்பூதராய், சோளதேசத்திலே உறையூரிலே, கலியுகம் முன்னூற்றுநாற்பத்திரண்டாவதான துர்மதிவர்ஷம் கார்த்திகைமாஸம் ஐந்தாந்தேதி க்ருஷ்ணபக்ஷம் த்விதீயைகூடின புதன்கிழமையன்று, ரோஹிணிநக்ஷத்ரத்தில் அயோநிஜராயவதரித்து, ஸாமகாநம்பண்ணும் நித்யஸூரிகளிலொருவரொன்று நிரூபிக்கலாம்படி வீணையுங்கையுமாய் திருமுகத்துறைக் கெதிரேநின்று திருப்புகழ்கள்பலவும் பாடியிராநின்றுள்ளவிவரைத் திருவரங்கச்செல்வனார்திருவுள்ளம்பற்ற ஶ்ரீலோகஸாரங்கமஹாமுநீந்த்ரரை புருஷகாரமாகச்செல்லவிட அவரும் இவரைத்தந்திருத்தோள்களின்மேலேறியருளப்பண்ணிக்கொண்டு அழகியமணவாளன்திருமண்டபத்தருகேவிட, ஆழ்வாரும் பெரியபெருமாளுடைய திவ்யமங்களவிக்ரஹத்தைப் பாதாதிகேசாந்தமாகவநுபவித்து அவ்வநுபவஜநிதப்ரீத்யதிசயத்தாலே "அமலனாதிபிரான்" என்கிற திவ்யப்ரபந்தத்தையருளிச்செய்து லோகத்தை வாழ்வித்தருளினார்.

உம்பர்தொழுமெஞ்ஞானத் துறையூரான்வாழியே
உரோகணிநாள்கார்த்திகையி லுதித்தவள்ளல்வாழியே
வம்பவிழ்தார்முனிதோளில்வந்தபிரான்வாழியே
மலர்க்கண்ணைமற்றையொன்றில்வையாதான்வாழியே
அம்புவியில்மதிளரங்கரகம்புகுந்தான்வாழியே
அமலனாதிபத்துமன்றளித்தான்வாழியே
செம்பொனடிமுடியளவுஞ்சேவிப்போன்வாழியே
திருப்பாணன்பொற்பதங்கள்செகதலத்தில்வாழியே.

## மதுரகவியாழ்வார்.

𑌅𑌵𑌿𑌦𑌿𑌤𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌃 𑌶𑌠𑌾𑌰𑍇𑌃 𑌉𑌪𑌨𑌿𑌷𑌦𑌾𑌮𑍁𑌪𑌗𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌰𑌭𑍋𑌗𑌃।
𑌅𑌪𑌿 𑌚 𑌗𑍁𑌣𑌵𑌶𑌾𑌤𑍍𑌤𑌦𑍇𑌕𑌶𑍇𑌷𑍀 𑌮𑌧𑍁𑌰𑌕𑌵𑌿𑌰𑍍𑌹𑍃𑌦𑌯𑍇 𑌮𑌮𑌾𑌵𑌿𑌰𑌸𑍍𑌤𑍁॥

இவர் பெரியதிருவடி, கணுதிபர்களம்ஶபூதராய் * செல்வமல்கியவண்கிடந்த திருக்கோளூரிலே த்வாபரயுகம் (௮௮௩௮௭௮) வதான ஈஶ்வரவர்ஷத்தில் "[illegible]" என்று ஶ்ரீமத்தாகச்சொல்லப்படுகிற சித்திரைமாஸம் பதினேழ்நாந்தேதி ஸுக்லபக்ஷம் சதுர்த்தசி வெள்ளிக்கிழமைகூடின சித்ராநக்ஷத்ரத்தில் ஶ்ரீவகுளபூஷண பாஸ்கரோதயத்திற்கு அருணோதயம்போலே அவதரித்து, திருக்குருகூர் திருப்புளியாழ்வாரடியிலே திருவவதாரமேதொடங்கி பதினாறுதிருநக்ஷத்ரமளவாக அங்கபாராதிகளொன்றுமின்றி, "அவன்முகத்தன்றிவிழியேன்" என்று முகுளிதநயநரா யெழுந்தருளியிருந்த ஆழ்வாருடைய ப்ரபாவாதிஶயங்களை ப்ரகாஶிப்பித்து, தம்முகேந * மயர்வறமதிநலமருளப்பெற்று, ததாநந்தாஹ்லாகரமுள்ளடங்காமல் அவர்விஷயமாக ஆசார்யநிஷ்டையென்னும் "கண்ணிநுண்சிறுத்தாம்பு" திருவாய்மலர்ந்தருளி லோகத்தைவாழ்வித்தருளினார்.

சித்திரையிற்சித்திரைநாள்செகத்தில்வந்தான்வாழியே
திருக்கோளூரவதரித்தசெல்வன்மிகவாழியே
உத்தரகங்காதீரத்துயர்தவத்தோன்வாழியே
ஒளிகதிரோன்றெற்குதிக்கிலுகந்துவந்தான்வாழியே

பந்தியொடுபதினொன்றுபாடினான்வாழியே
பராங்குசனேபரமென்றுபற்றினான்வாழியே
மத்திமமாம்பதப்பொருளைவாழ்வித்தான்வாழியே
மதுரகவிதிருவடித்தாமரைமலர்கள்வாழியே.

## திருமங்கையாழ்வார்.

கலயாமி கலித்வம்ஸம் கவிம் லோகதிவாகரம் ।
யஸ்ய கோபி: ப்ரகாசாபிராவித்யம் நிஹதம் தம: ॥

இவர் ஸ்ரீஸார்ங்காம்ஸராய், திருவாலிதிருநகரியிலே திருக்குறையலூரிலே மிலேச்சவம்ஸத்தில் நீலனென்பவரைத் தந்தையாகக்கொண்டு, கலியுகம் முன்னூற்றுத் தொண்ணூற்றேழாவதான நளவர்ஷம் கார்த்திகைமாஸம் சுக்லபக்ஷம் பௌர்ணமிகூடின வியாழக்கிழமையன்று க்ருத்திகாநக்ஷத்ரத்தில் அவதாரம்பண்ணி, ஸ்ரீகுமுதவல்லியார்நிமித்தம் ஸ்ரீவைஷ்ணவராய், ஸ்ரீவைஷ்ணவததீயாராதநகைங்கர்யபரராய், தம்முடைய ஸ்ரீமந்நாராயணனை ஸாக்ஷாத்கரித்து மந்த்ரோபதேசமும் கலியனென்னும் திருநாமமும்பெற்று, மதவாதியர்களை வாய்மாளப்பண்ணி, நூற்றெட்டுதிவ்யதேசத் தெம்பெருமான்களையுஞ்சென்று மங்களாஸாஸநஞ்செய்து தமதுபரிஜநங்களுடன்நாகைப்பட்டினஞ்சென்று ஸ்வர்ணபுத்தப்ரதிமையைக்கொடுவந்து சுட்டுருக்கித் திருவரங்க விமாநகோபுர ப்ராஸாத ப்ராகாராதி கைங்கர்யங்களை நிறைவேற்றிவைத்து, மாறன்பணித்த தமிழ்மறை நான்குக்கும் ஆறங்கமாகப் பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறியதிருமடல், பெரியதிருமடல் என்னும் ப்ரபந்தங்களை யருளிச்செய்து லோகத்தைவாழ்வித்தருளினார்.

கலந்ததிருக்கார்த்திகைக்கார்த்திகைவந்தோன்வாழியே
காசினியிற்குறையலூர்க்காவலோன்வாழியே
நலந்திகழாயிரத்தெண்பதொடுநாலான்வாழியே
நாலைந்துமாறைந்துமெக்குரைத்தான்வாழியே
இலங்கெழுகூற்றிருக்கையிருமடலீந்தான்வாழியே
இம்மூன்றிலிருநூற்றுமூவொன்பான்வாழியே
வலந்திகழுங்குமுதவல்லிமணவாளன்வாழியே
வாட்கலியன்பரகாலன்மங்கையர்கோன்வாழியே.

## பொய்கையாழ்வார்.

காஞ்ச்யாம் ஸரஸி ஹேமாப்ஜே ஜாதம் காஸாரயோகினம் ।
கலயே ய: ஸ்ரிய: பதிம் ரவிம் தீபமகல்பயத் ॥

இவர் ஸ்ரீபாஞ்சஜந்யாம்ஸராய், ப்ரஹ்மாவினாலே ஸர்வேஸ்வரன் அஸ்வமேதத்தா லாராதிதமான ஸ்தலமாகையாலே காஞ்சீபுரமென்று ப்ரக்யாதமாய், புண்யவிவர்த்தகமுமான * கல்லுயர்ந்தநெடுமதிள்சூழ்கச்சியிலே * காணிலந்தோய்ந்து * விண்ணோர் தொழுங் கண்ணன்வெஃகாவில் பொற்றாமரைப் பொய்கையிலே, த்வாபரயுகம் (அசுஉகூ00) வதான சித்தார்த்திவர்ஷம், ஐப்பசிமாஸம் ஸுக்லபக்ஷம், அஷ்டமிதிதிகூடிய மங்களவாரத்தில், திருவோணநக்ஷத்ரத்தில், அயோநிஜராயவதரித்து "வையந்தகளி" என்னும் அந்தாதி நூறுபாசுரங்களால் லோகத்தை வாழ்வித்தருளினார்.

செய்யதுலாவோணத்திற்செகத்துதித்தான்வாழியே
திருக்கச்சிமாநகரஞ்செழிக்கவந்தான்வாழியே
வையந்தகளிநூறும்வகுத்துரைத்தான்வாழியே
வனசமலர்க்கருவதனில்வந்தமைந்தன்வாழியே.

வெய்யகதிரோன்றன்னைவிளக்கிட்டான்வாழியே
வேங்கடவர்திருமலையைவிரும்புமவன்வாழியே
பொய்கைமுனிவடிவழகும்பொற்பதமும்வாழியே
பொன்முடியுந்திருமுகமும்பூதலத்தில்வாழியே.

## பூதத்தாழ்வார்.

ஊஹாவஹிவாராயீஸஂஊயவீகூஹவாஹரொ ஜூவஷு ।
ஹஹுதஹொஊஊியொவிஷொ ஜஹுா நீவஊகூயகூ॥

இவர் ஸ்ரீகௌமோதகியென்னுங் கதாம்ஸராய், "கச்சி கிடந்தவனூர் கடன்மல்லைத்தலசயனம்" என்னும்படியான திருக்கடன்மல்லையிலே, பரிமள ப்ரசுரமாய் நன்றாயிருப்பதொரு மாதவிப்பூவிலே, பொய்கையாழ்வார் திருவவதாரமான மறுநாள் புதவாரத்தில், அவிட்டதிருநக்ஷத்ரத்தில் அயோநிஜராயவதரித்து, "அன்பேதகளி" என்னும் அந்தாதி நூறுபாசுரங்களால் லோகத்தை வாழ்வித்தருளினர்.

அன்பேதகளிநூறுமருளினன்வாழியே
ஐப்பசியிலவிட்டத்திலவதரித்தான்வாழியே
நன்புகழ்சேர்குருக்கத்திநாண்மலரோன்வாழியே
நல்லதிருக்கடன்மல்லைநாதனவன்வாழியே
இன்புருகுசிந்தைதிரியிட்டபிரான்வாழியே
எழின்ஞானச்சுடர்விளக்கையேற்றினன்வாழியே
பொன்புரையுந்திருவரங்கர்புகழுரைத்தான்வாழியே
பூதமுனிதாளிணைகள்பூதலத்தில்வாழியே.

## பேயாழ்வார்.

ஜுஷாவிஷஹஜஊஹூஷஂஊயாஊயிவாயிவஷு ।
கூஹுவொஊகொூதுவெஜாதுஂஊஹஊஹயஊரூயெ॥

இவர் ஸ்ரீநந்தகாம்ஸராய், * தேனமர்சோலைமாடமாமயிலையிலே ஆதி கேசவப்பெருமாள் கோயில் திருக்கிணற்றிலுண்டானதொரு செவ்வல்லிப்பூவிலே, பூதத்தாழ்வார் திருவவதாரஞ்செய்தருளின மறுதினமாகும் குருவாரத்தன்று சதயநக்ஷத்ரத்தில் அயோநிஜராயவதரித்து, "திருக்கண்டேன்" என்னு மந்தாதி நூறுபாசுரங்களால் லோகததை வாழ்வித்தருளினர்.

திருக்கண்டேனெனநூறுஞ்செப்பினன்வாழியே
சிறந்ததுலாச்சதயநாள்செனித்தவள்ளல்வாழியே
மருக்கமழுமயிலைநகர்வாழவந்தோன்வாழியே
மலர்க்குளுயர்நெய்தன்மலர்வந்துதித்தோன்வாழியே
நெருக்கிடவேயிடைகழியினின்றசெல்வன்வாழியே
நேமிசங்கின்வடிவழகைநெஞ்சில்வைப்போன்வாழியே
பெருக்கமுடன்திருமழிசைப்பிரான்றொழுவோன்வாழியே
பேயாழ்வார்தாளிணைகள்பெருநிலத்தில்வாழியே.

## நம்மாழ்வார்.

வகூஹஊஹஊணஂவநெ ஜஃஊஹஊணஂஊஹநிஷு ।
யஸூஹெதாஹதுஂஹாவஂ வகொஜூவிஊஹஷியா॥

| இலக்கம். | திவ்யதேசம். | மாறன் பாசுரம். | கலியன் பாசுரம். | பொய்கையாழ்வார் பாசுரம். | பூதத்தாழ்வார் பாசுரம். |
|---|---|---|---|---|---|
| | ௧௧ - வர் பாடல். | | | | |
| ௧. | கோயில்.<br>என்றால்:—<br>ஸ்ரீரங்கம். | தண்ணந்துழாய்-<br>திருவிருத்தம்-உ௮<br>கங்குலும்பகலும்<br>திருவாய்மொழி-<br>௬உ. | பள்.தி.மொ. ௮-உ<br>உந்தி ,, ௪௪<br>வெரு ,, ௪௫<br>கைம்மா ,, ௪௬<br>பண்டை ,, ௪௭<br>ஏழை ,, ௪௮<br>உரங்க ,, ௬௩-௪<br>தரங்க ,, ௭உ-௭<br>புனைவள ,, ௯௯-உ<br>கண்ண ,, ௧௦௩-௭<br>அணியா ,, ௧௦௮-௮<br>இம்மை தி.கு.தா.௭<br>ஆவியை ,, ௧உ<br>பிண்டியார் ,, ௧௯<br>பட்டுடு-தி. நெ.௧௧<br>முளைக்கதி ,, ௧௪<br>கார்வண் ,, ௧௮<br>பேரா-சி-தி-மடல்<br>மன்னு-பெ-தி ,, | ஒன்று மறந்தறியே -<br>௧. அந். ௬ | மனத்துள்ளான்வேங்கடத்<br>உ. அந். உ௮<br>பயின்ற தரங்கம் - உ.அந்.<br>௪௬<br>தமருள்ளம்<br>தஞ்சை - உ.<br>அந். ௭௦ |
| | ௧௦ - மர் - பாடல். | | | | |
| உ. | திருமலை. | காண்கி - தி - வி-௮<br>மாயோன் ,, ௧௦<br>கயலோறு ,, ௧௫<br>இசைமின் ,, ௩௧<br>ஒண்ணுதல் ,, ௫௦<br>முலையோ ,, ௬௦<br>காவியும் ,, ௬௭<br>உறுகின்ற ,, ௮௧<br>கண். தி. வா. ௮.௩<br>எந்தாய் ,, ௧௬-௯<br>பற்ப ,, ௧௭-௧௧<br>ஒழிவில் ,, உ௩<br>வார்பு ,, உ௫-௮ | கொங்-தி-மொ-௮<br>தாயேத ,, ௯<br>கண்ணார் ,, ௧௦<br>வானவர் ,, ௧௧<br>அன்றிய ,,௩௩-௮<br>வேடார் ,,௩௭-௫<br>வாம்பரி ,, ௪௩-௪<br>வெருவா ,, ௪௫-௧<br>சிந்தனை ,, ௪௬-௭<br>மான்கொ ,, ௫௮-௧<br>ஆங்குவெ ,, ௯௩-௫<br>எங்களு ,, ௭௦-௩<br>அருவிசே ,, ௭உ-௩ | எழுவார்<br>௧-அந்.உ௬<br>வகையறு<br>௧.அந். ௩௭<br>உணர்வார்<br>௧-அந்.௬௮<br>வழிநின்று<br>௧.அந். ௭௬<br>படையாரும்-௧.அந்<br>௮உ<br>உளன்கண்<br>௧-அந்.௯௯ | சென்றதிலங்கமேல் - உ.<br>அந். உ௫<br>மனத்துள்-<br>உ-அந்-உ௮.<br>துணிந்தது -<br>உ. அந். ௩௩<br>உள்ளதென்<br>உ. அந். ௪௫<br>நெறியார்குழல்.உ.அந்.௫௩<br>போதரிந்து -<br>உ. அந். ௭உ |

ளால் ஏற்படுத்தப்பட்ட (கO அ) திவ்யதேஸத்தெம்பெருமான்களுடைய அட்டவணை. (ப்ருதப்ரகாஸிகை)

| பேயாழ்வார் பாசுரம். | திருமழிசைப்பிரான் பாசுரம். | குலசேகரப் பெருமாள் பாசுரம். | பெரியாழ்வார் பாசுரம். | தொண்டரடிப்பொடி | திருப்பாணாழ்வார் பாசுரம். | ஆண்டாள் பாசுரம். |
|---|---|---|---|---|---|---|
| பண்டெல்லாம்-ங.அந்.ருக விண்ணகரம் உ-அந். ருஉ | கொண்டை-தி. ச. சக வண்டிரா-தி. ச. ருO சரங்களை-தி. ச. ருக பொத்தயுத்த தி. ச. ருஉ மோடியோடி-தி. ச. ருங இலைத் தலைச்சி தி. ச. ருச மன்னுமா-தி. ச. ருரு பாலில் கிடந்ததுவும்-ச அந். ங அவனென்னையாளி-ச. அந். ஙO நாகத்தணை ச அந். ஙரு ஆள்பார்த்து-ச. அந். ருO | இருளிரிய-பெருமாள் திருமொழி-க. தேட்டரும்-பெருமாள் திருமொழி-உ. மெய்யில்வாழ்க்கை-பெருமாள் திரு-ங. | கருவுடை-தி. மொ. கஎ-உ வண்டுகளித்திரைக்கும்-தி. மொ. ரு. கக கன்னினன்மா-தி. மொ. உங-உ. மாதவத். தி. மொ-ஙஅ. மரவடியை-தி. மொ. ஙரு. துப்புடை-தி. மொ-சO | காவலில்-திருமாலை கதிரவன்-திருப்பள்ளியெழுச்சி. | அமலநாதிபிரான். | தாமுகக்கும் நாய்ச்சியார் திருமொழி-கக. |
| மாற்பால்-ங அந். கச சிறந்தவென் சிந்தை-ங. அந். உரு சேர்ந்த திருங. அந். ஙO பாற்கடலும் ங. அந். ஙஉ இறையாய் ங-அந். ஙரு பொரிந்துமதங-அந். சரு | செழும் கொழும் தி-ச. ருO கடைந்த-தி-ச. அக குறிப்பெனக்கு-ச. அந். ஙச அழைப்பன்-ச. அந். ஙக நன்மணி-ச. அந். சஎ விற்றிருந்து-ச. அந். கூO | ஊனேருசெல்வத்து-பெருமாள் திரு-ச. | கடியார்-தி. மொ. உங-ச சென்னியோங்கு-தி. மொ. சச-க. | | அமலநாதிபிரான்-கமந்திபாய்-ங | தையொரு-நாய்ச்சியார் திருமொழி-க-க. மந்தனன். நாய்ச்சியார்திருமொ-க-ங. காட்டில்வேங்கடம்-நாய்ச்சியார் திருமொழி-ச-உ. வெள்ளை-நா. தி. ரு-உ. |

| இலக்கம். | திவ்யதேஸம். | மாறன் பாசுரம். | கலியன்பாசுரம். | பொய்கையாழ்வார் பாசுரம். | பூதத்தாழ்வார் பாசுரம். |
|---|---|---|---|---|---|
| உ. | திருமலே.<br><br>எ - வர் - பாடல். | சொன்-திவா-உகூ-[க<br>மாரிமா ,,ஙடு-கக<br>கட்டெ ,, ருசு-கக<br>விண்மீ ,, ருகூ-ரு<br>உலகமு ,, சு0<br>ஆழியெ ,, சுச<br>நங்கள் ,, எஉ-க<br>இன்றிப் ,, கூரு-சு<br>திருமாலி,,க0எ-அ | பண்-தி-மொ-அஎ-[ச<br>வலம்புரி ,,அகூ-க<br>பொன்னே,, கூக-உ<br>சொல்லா ,, க00-ரு<br>கண்ணன் ,,க0ங-எ<br>கள்ளத் ,,க0ரு-க0<br>இம்மைதி.கு.தா-எ<br>ஙரக. தி.நெ.தா-அ<br>கன்றுமே ,, கசு<br>சீரார் சி.தி.மடல்.<br>மழை.பெ.தி.மடல்<br>மின். பெ.தி.மடல் | ஊரும் வரியரவம்-க.<br>அங்.ஙஅ.<br>வேங்கட<br>மு-க-அங்.<br>எஎ | பெருகுமத-<br>உ. அங். எரு |
| ங. | திருக்குடந்தை. | ஆராவ ,, சஅ | ஆவி.தி.மொ. க-உ<br>இற்பிறப் ,, க-எ<br>அன்றாய ,, கச-க<br>வாளாய ,,உசு-ரு<br>குயிலாலு,,உசு-அ<br>வாராளு ,, சரு-எ<br>பொங்கே ,,ருஅ-கூ<br>வந்தநாள் ,,சுங-ங<br>பேரானே,, சுசு-க<br>வந்தாய் ,, எகூ-ரு<br>தோடவி ,,அஉ-உ<br>வானேயா,, கூக-சு<br>இங்கே ,, க00-அ<br>அண்டத் ,, ௦சு-க<br>மூவரி தி.கு.தா.சு<br>காவியை ,, கச<br>பொங்கார். தி.நெ.தா. கஎ<br>முற்றரா ,, ககூ<br>அன்றாயர் ,, உகூ<br>ஒருபேரு- திருவெழுகூற்றிருக்கை<br>காரார்.சி.தி.மடல்<br>பொன்.பெ.தி ,, | | தமருள்ளம் -<br>உ. அங். எ0<br>எங்கள் - உ<br>அங். கூஎ |

| பேயாழ்வார் பாசுரம். | திருமழிசைப் பிரான் பாசுரம். | குலசேகரப் பெருமாள் பாசுரம். | பெரியாழ்வார் பாசுரம். | தொண்டரடிப்பொடி | திருப்பாணாழ்வார் பாசுரம். | ஆண்டாள் பாசுரம். |
|---|---|---|---|---|---|---|
| [illegible]ரிந்தசிலர்-ந. அந். ருஅ. பிண்டெல்லாம்-ந. அந். சுக. பார்த்த கடவன் - ந. உந் சுஅ. சார்ந்த - ந. அந். எரு. முடிந்த - ந. அந். அகூ. | | | | | | விண்ணீல-நாய்ச்சியார் திருமொழி-அ. பாடும்குயில்காள் - நாய்ச்சியார் திருமொழி - கo-ரு. மழையே-நாய்ச்சியார் திருமொழி-கo அ. |
| சேர்ந்த திருமால்-ந. அந். நo. விண்ணகரம் வெஃகா - ந. அந். சுஉ. | நாகத் தணைக் குடந்தை-ச-அந். நசு. இலங்கைமதி-சந். ருசு. சங்குதங்குதி-சந். ருள. மரங்கெட-தி சந். ருஅ. சாலி வேலி தி. சந். ருகூ. செழும் கொழு-தி. சந். சுo கடந்த கால்கள். தி. சந். சுக. | | கொங்கும் குடந்தை- திருமொ-கசு-உ. குடங்கள் - தி-மொ. கஎ-எ. | | | பாலாலிலையில் - நாய்ச்சியார்திருமொழி-கரு-உ. |

| [illegible] | திவ்யதேஶம். | மாறன் பாசுரம். | கலியன்பாசுரம். | பொய்கையாழ்வார் பாசுரம். | பூதத்தாழ்வார் பாசுரம். |
|---|---|---|---|---|---|
| | ௫ - வர் - பாடல். | | | | |
| ௪. | திருக்கண்ணபுரம் | மாலைநண்ணி - தி.வா. ௯0 | சிலையிலங்குதொட<br>அ-பத். முழுதும்.<br>கன்று மேய்த்தினி<br>து-தி. நெ.தா. ௧௯<br>செங்கால ,, ௨௭<br>சீரார். சி.தி.மடல்<br>மன்னு. பெ.தி. ,,<br>ர்ன்வ.பெ.தி. ,, | | |
| | ௫ - வர் - பாடல். | | | | |
| ௫. | திருமாலிருஞ்சோ[லை. | கிளரொ.தி.வா.௨0<br>முடிச்சோ,, ௨௧<br>முந்நீர் ,, ௨௨<br>செஞ்சொ,, ௯௭<br>திருமால் ,, ௯அ-௧<br>திருப்பே ,,௧அ-௯ | முந்த.தி.மொ. ௯௯<br>உளங்கனி,, ௨௭-௭<br>எட்டனை ,, ௯௩-௯<br>சேயோ ,, ௯௯-௭<br>மஞ்சுயர் ,, அ௨-அ<br>புனைவள ,, அ௯-௨<br>மூவரில் ,, அ௯<br>பாயி. தி. கு. தா.௩<br>சீராரு.சி.தி.மடல்.<br>மன்ன.பெ.தி. ,, | | உணர்ந் தாய்<br>மறை நாங்கு<br>ம்.௨.அந்.௪அ<br>வெற்பென்று<br>௨. அந். ௫௪ |
| | ௫ - வர் - பாடல். | | | | |
| ௬. | திருக்கோட்டியூர். | | எங்க. தி. மொ.௯0<br>ஈரோன்பி,,௯௧-௩<br>கம்பமா ,, ௯௧-௯<br>கோ. பெ.தி.மடல் | | பயின்ற தரங்<br>௨-அந். ௪௯ |
| | ௫ - வர் - பாடல். | | | | |
| ௭ | திருவெஃகா. | நானிலம்தி.வி.௨௯ | கூந்.தி.மொ.௯௧.௭<br>நீரக. தி.நெ.தா-அ<br>கல்லெடுத் ,, ௧௩<br>முளைக்கதி ,, ௧௪<br>பேரா. சி.தி. மடல்<br>வெக்.பெ.தி. ,, | வேங்கடமும் விண்ண கரும்<br>௧-அந்.௭௭ | |
| | ௪ - வர் - பாடல். | | | | |
| அ. | திருப்பேர். | திருமா.தி.வா.௯அ | கையி.தி.மொ.௪௯<br>பிண்டி. தி. கு. ௧௯<br>நீரக. தி.நெ.தா. அ | | |

| பேயாழ்வார் பாசுரம். | திருமழிசைப்பிரான் பாசுரம். | குலசேகரப் பெருமாள் பாசுரம். | பெரியாழ்வார் பாசுரம். | தொண்டரடிப்பொடி | திருப்பாணாழ்வார் பாசுரம். | ஆண்டாள் பாசுரம். |
|---|---|---|---|---|---|---|
| | | மன்னு புகழ் பெரு. தி. அ | உன்னையுமொக்கலையில். பெ தி. சூ. அ | | | காட்டில் வேங்கடம் கண்ணா. தி. ச. உ |
| | | | அலம்பாவெருட்டா. பெ. தி. ஙஉ<br>உன்னையும் பெ. தி. சூ. அ<br>சுற்றிநின்று பெ. தி. உச. ரு<br>உருப்பிணி பெ. தி. ஙங<br>துக்கச் சுழலை பெ. தி. சங | | | சிந்துரச் சம்படி. நா. தி. கூ |
| விண்ணகரம் ங. அ. சூஉ | குறுப்பெனக் கு. ச. அந். ஙச | | வண்ணமாட பெ. தி. க<br>கொங்கும் கு பெ. தி. கசூ. உ<br>நாவகாரியம் பெ. தி. ஙச | | | |
| விண்ணகரம் வெஃகா - ங. அந். சூஉ<br>இசைந்த ங - அந். சூச<br>பொருப்பி ங. அந். எசூ | நாகத்தணைக் ச. அந். ஙசூ<br>நன்றிருந்து தி. சந். சூங<br>நின்றதெந் தி. சந். சூச | | | | | |
| | நாகத்தணைக் சு - அந். ஙசூ. | | கொண்டல்வ பெ. கசூ. ச | | | |

| இலக்கம். | திவ்யதேஶம். | மாறன் பாசுரம். | கலியன் பாசுரம். | பொய்கை யாழ்வார் பாசுரம். | பூதத்தாழ்வார் பாசுரம். |
|---|---|---|---|---|---|
| | ச - வர் - பாடல். | | | | |
| க. | திருக்குறுங்குடி. | நம்பி-தி-வா.கO-க<br>ஊனுக ,, உக-உ<br>எங்ங. ,, சடு | எவி. தி.மொ.சு-அ<br>பேராளை ,, சசு-உ<br>மானே ,, ருங-ங<br>தவள-தி.மொ.அடு<br>அக்கும் ,, அசு<br>முனிதி நெ.தா.கச<br>தென்-பெ-தி-மட | | |
| | ச - வர் - பாடல். | | | | |
| கO. | திருக்கோவலூர். | | அன்றுதி.மொ.கச<br>மஞ்சாடு ,, உO<br>தாயைநி ,, சுங-உ<br>சாரார் சி.தி.மடல்<br>சீரார்ந்த ,, ,,<br>கோவ-பெ.தி. ,,<br>அலம்-தி.நெ.தா.சு<br>பொங்கா ,, கஎ | நீயுந்திரும களும்- க-அந்.அசு. | தமருள்ளந் தஞ்சை உ-அந்-எ |
| | ச - வர் - பாடல். | | | | |
| கக. | திருப்பாடகம். | | தல்-தி.மொ.சுO-ச<br>மன்-பெ. தி.மடல் | | உற்றுவ உ.அந்.க |
| | ச - வர் - பாடல். | | | | |
| கஉ. | வடமதுரை. | இதுவோ பொருத்தம்-தி.வா.எடு-கூ<br>கொண்ட ,, அக | நேசமிலாதவர்க்கு தி.மொ.அக.சு<br>பாரோ.சி.தி.மடல் | | |
| | ச - வர் - பாடல். | | | | |
| கங. | அயோத்தி. | கற்பாரி ,, சுடு | கவ.தி.மொகங.அ | | |

